

காப்ரியேல் கார்சியா மார்க்வேஸ்

50

1967 - 2017

காலச்சுவடு
நவீன உலக
கிளாசிக்
நாவல் வரிசை

# தனிமையின் நூறு ஆண்டுகள்

# தனிமையின் நூறு ஆண்டுகள்

## காப்ரியேல் கார்சியா மார்க்கேஸ் (1928 - 2014)

காப்ரியேல் கார்சியா மார்க்கேஸ் கொலம்பியாவிலுள்ள அரக்காடாக்காவில் பிறந்தார். பொகோட்டா பல்கலைக்கழகத்தில் பயின்றார். பின்னர் கொலம்பியச் செய்தித்தாள் *எல் எஸ்பெக்டடோ*ரில் பணியாற்றினார். ரோம், பாரிஸ், பார்சிலோனா, காரகாஸ், நியூயார்க் நகரங்களில் வெளி நாட்டுச் செய்தியாளராக இருந்தார். இடதுசாரி ஆதரவாளரான மார்க்கேஸ் கியூபா உள்ளிட்ட லத்தீன் அமெரிக்க நாடுகளில் நடந்த புரட்சிகளின் சக பயணியாக இருந்தார். அதற்காகத் தலைமறைவு வாழ்க்கையையும் மேற்கொண்டார்.

பத்திரிகைப் பணிக்காலத்திலேயே இலக்கியப் படைப்பாக்கத்திலும் ஈடுபட்டார். 'லீஃப் ஸ்ட் ரோம்' (*Leaf Strom* - 1955) என்ற முதல் குறுநாவல் மூலம் தென்னமெரிக்க இலக்கியத்தில் கவனத்துக்குரியவரானார். 1967 இல் வெளியான 'தனிமையின் நூறு ஆண்டுகள்' (*One Hundred Years of Solitude*) ஆங்கில மொழிபெயர்ப்பு மூலம் உலகப் புகழ் பெற்றார். இந்த நாவலை முன்னிருத்தியே 1982ஆம் ஆண்டு அவருக்கு நோபெல் இலக்கியப் பரிசு வழங்கப்பட்டது. அதன் மூலம் மகத்தான படைப்பாளி களில் ஒருவராக எல்லா மொழிகளிலும் பேசப்பட்டார். அவரது எல்லா நூல்களும் பல்வேறு மொழிகளில் பெயர்க்கப்பட்டன.

மனைவி மெர்சிடெஸ் பார்ச்சா, மகன்கள் ரோட் ரிகோ கார்சியா, கோன்சாலஸ் கார்சியா ஆகியோருடன் மெக்ஸிகோ நகரத்தில் வசித்தார். 2014 ஏப்ரல் 17 அன்று மறைந்தார்.

காப்ரியேல் கார்சியா மார்க்கேஸ்

# தனிமையின் நூறு ஆண்டுகள்

தமிழில்:

ஞாலன் சுப்பிரமணியன்

சுகுமாரன்

மின்னூலாக்கம்

முரளிதரன்

காலச்சுவடு பதிப்பகம்

"This work has been published with a subsidy from the Directorate General of Books, Archives and Libraries of the Spanish Ministry of Culture"

Cien años de soledad by Gabriel Garcìa Mārquez

© GABRIEL GARCÌA MĀRQUEZ, 1967

Translated by: Gnalan Subramanian, Sukumaran

**தனிமையின் நூறு ஆண்டுகள்** ❖ நாவல் ❖ ஆசிரியர்: காப்ரியேல் கார்சியா மார்க்கேஸ் ❖ தமிழில்: ஞாலன் சுப்பிரமணியன், சுகுமாரன் ❖ முதல் பதிப்பு: ஜூன் 2013, திருத்தப்பட்ட மூன்றாம் பதிப்பு: டிசம்பர் 2014. நான்காம் பதிப்பு: மே 2016 ❖ வெளியீடு: காலச்சுவடு பப்ளிகேஷன்ஸ் (பி) லிட்., 669, கே. பி. சாலை, நாகர்கோவில் 629001

**tanimaiyin nuuRu aaNTukaL** ❖ Novel ❖ Author: Gabriel Garcia Marquez ❖ Language: Tamil ❖ First Edition: June 2013, Revised Third Edition: December 2014, Fourth Edition: May 2016 ❖ Size: Royal ❖ Paper: 18.6 kg maplitho ❖ Pages: 408

Published by Kalachuvadu Publications Pvt.Ltd., 669, K.P. Road, Nagercoil 629001, India ❖ Phone: 91-4652-278525 ❖ e-mail: publications@kalachuvadu.com ❖ Wrapper printed at Print Specialities, Chennai 600014 ❖ Printed at Mani Offset, Chennai 600077

ISBN: 978-93-81969-70-0

05/2016/S.No. 515, kcp 1516, 18.6 (4) ILL

ஜோமி கார்சியா அஸ்கோட்
மரியா லூய்சா எலியோ ஆகியோருக்கு

# மூன்றாம் பதிப்பின் முன்னுரை

'தனிமையின் நூறு ஆண்டுகள்' நாவலின் மூன்றாம் பதிப்பு இது. வெளிவந்து ஓராண்டுக்குள்ளேயே அடுத்தடுத்து இரண்டு பதிப்புகள் வெளியாயின. தமிழ் இலக்கிய வாசகர்களிடையே காப்ரியேல் கார்சியா மார்க்கேஸுக்கு இருக்கும் வரவேற்பையும் செல்வாக்கையும் இது எடுத்துக் காட்டுகிறது. ஏறத்தாழ மூன்று பதிற்றாண்டுகளாக தீவிர இலக்கிய சூழலில் தொடர்ந்து வாசிக்கப்பட்ட, அவ்வப் போது விவாதிக்கப்பட்ட படைப்பும் எழுத்தாளரும் இந்த வரவேற்பைப் பெறுவது இயல்பான ஒன்றுதானே.

முதற்பதிப்பில் நேர்ந்த பிழைகளையும் மொழியாக்கத் தில் ஏற்பட்ட குறைகளையும் வாசகர்கள் சுட்டிக்காட்டி யிருந்தனர். அவர்களுக்கு நன்றி. இந்தப் பதிப்பில் அவை சரிசெய்யப்பட்டுள்ளன. முக்கியமான சில திருத்தங்களும் மேற்கொள்ளப்பட்டுள்ளன. எந்த மொழியாக்கத்திலும் மேலும் செம்மையாக்கப் படவேண்டிய நுண் இடங்கள் எப்போதும் திறந்தே கிடக்கின்றன. இந்த மொழியாக்கமும் அவ்வா றானதே.

'தனிமையின் நூறு ஆண்டுகள்' நூலின் முதலிரண்டு பதிப்புகளை வரிக்கு வரி கூர்ந்து வாசித்து திருத்தங்களை முன்வைத்தவர் நண்பர் ஆர். சிவகுமார். குழப்பமாக உணர்ந்த சில பகுதிகளைத் தனது விளக்கத்தால் தெளிவு படுத்தியவர் நண்பர் பி. கிருஷ்ணன் உண்ணி. இவர்களுக்கு மனமார்ந்த நன்றி.

திருவனந்தபுரம்
*20.12.2014*

**சுகுமாரன்**


ஹோசே அர்க்காதியோ புயேந்தியா
(மனைவி) உர்சுலா இகுவரான்
கர்னல் அவுரேலியானோ புயேந்தியா
(மனைவி) ரெமேதியோஸ் மாஸ்கோட்
அவுரேலியானோ ஹோசே
(பிலர் தெர்னேரா மூலமாக)
17
அவுரேலியானோக்கள்
ஹோசே அர்க்காதியோ
(மனைவி) ரெபேக்கா
அமரந்தா
அர்க்காதியோ
(பிலர் தெர்னேரா மூலமாக)
(மனைவி) சாந்தா சோபியா தெ லா பியாதாத்
அழகி ரெமேதியோஸ்
அவுரேலியானோ செகுந்தோ
(மனைவி) பெர்னாண்டா தெல் கார்பியோ
ஹோசே அர்க்காதியோ செகுந்தோ
ரெனேட்டா ரெமேதியோஸ் (மேமே)
ஹோசே அர்க்காதியோ
அமரந்தா உர்சுலா
(கணவன்) காஸ்ட்டன்
அவுரேலியானோ
மவுரிசியோ பாபிலோனியா (மூலமாக)
அவுரேலியானோ
(அவுரேலியானோ மூலமாக)

அநேக ஆண்டுகளுக்குப் பிறகு குற்றவாளிகளைச் சுட்டுக் கொல்லப் பணிக்கப்பட்ட படைவீரர் குழுவை எதிர்கொண்ட போது கர்னல் அவுரேலியானோ புயேந்தியா பனிக்கட்டியைப் பார்ப்பதற்காக அப்பா அழைத்துச் சென்ற வெகுகாலத்துக்கு முந்தைய பிற்பகலை நினைத்துக்கொண்டார். அந்தக் காலத்தில் மகோந்தா, வெயிலில் உலர்த்திய செங்கற்களால் கட்டப்பட்ட இருபது வீடுகள் கொண்ட ஒரு கிராமமாக இருந்தது. வரலாற்றுக்கு முற்பட்ட காலத்து முட்டைகள் போன்று பெரிதாகவும் பளபளப்பாகவுமிருந்த கற்கள் நிறைந்த படுகை நெடுக ஓடிய தெளிந்த நீருள்ள ஆற்றங்கரையில் நிர்மாணிக்கப் பட்டிருந்தது. உலகம் அப்போதுதான் தோன்றியிருந்தது என்பதனால் நிறையப் பொருட்களுக்குப் பெயர்களே இல்லை. சுட்டிக்காட்டி அவற்றைக் குறிப்பிட வேண்டியிருந்தது. ஒவ்வொரு ஆண்டும் மார்ச் மாதத்தில் கந்தை உடையணிந்த நாடோடிக் குடும்பம் கிராமத்துக்கு அருகில் கூடாரம் அமைத்துக் குழல்களின் எக்காளத்துடனும் குடவாத்தியங் களின் முழக்கத்துடனும் தங்களுடைய புதிய கண்டுபிடிப்புகளைக் காட்சிக்கு வைப்பார்கள். முதலில் காந்தத்தைக் கொண்டுவந்தார் கள். ஒதுக்கப்படாத தாடியும் குருவிக்கைகளும் கொண்ட மெல்குயாதெஸ் என்று தன்னை அறிமுகப்படுத்திக்கொண்ட பருத்த நாடோடி, மாசிடோனியாவின் ரசவாத விற்பன்னர்களின் எட்டாவது அதிசயம் தன்னிடமிருப்பதாக அறிவித்துப் பகிரங்க மான செய்முறை விளக்கக் காட்சியை நடத்தினான். இரண்டு பெரிய உலோகப்பாளங்களை வீடு வீடாக இழுத்துக்கொண்டு போனான். பானைகள், வாணலிகள், இடுக்கிகள், கனல் அகப்பைகள் போன்றவை வைக்கப்பட்டிருந்த இடங்களிலிருந்து உருண்டு விழுந்ததையும் ஆணிகளிலிருந்து விடுபட உத்தரங்கள் கிரீச்சிட்டதையும் திருகாணிகள் துருத்தி எழ முயன்றுகொண் டிருந்ததையும் வெகுகாலமாகக் காணாமற்போயிருந்த பொருட்கள் தேடப்பட்ட இடங்களிலேயே தென்பட்டதையும் அவையெல் லாம் ஆரவாரக் குழப்பத்துடன் மெல்குயாதெஸின் மாய உலோகத்தின் பின்னால் இழுபட்டுச் செல்வதையும் பார்த்து எல்லாரும் வியப்படைந்தார்கள். 'பொருட்களுக்கும் அவற்றுக் குரிய உயிர் இருக்கிறது' என்று அந்த நாடோடி அழுத்தமான உச்சரிப்புடன் அறிவித்தான். 'அவற்றின் ஆன்மாக்களை எழுப்பு வதே விஷயம்.' இயற்கையின் ஞானத்துக்கு அப்பாலும் அற்புதங்களுக்கும் மாய வித்தைக்கும் அப்பாலும் தாண்டிச் செல்லும் கட்டற்ற கற்பனை கொண்டவரான ஹோசே

அர்க்காதியோ புயேந்தியா, அந்தப் பயனற்ற கண்டுபிடிப்பை உபயோகித்துப் பூமியின் குடல்களிலிருந்து தங்கத்தை எடுக்க முடியும் என்று எண்ணினார். நேர்மையாளனான மெல்குயாதெஸ் அவரை எச்சரித்தான். "அந்த வேலைக்கெல்லாம் இது பயன்படாது." ஆனால் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா அந்தக் காலத்தில், நாடோடிகளின் நேர்மையில் நம்பிக்கையில்லாதவராக இருந்தார். எனவே தன்னுடைய கோவேறுக் கழுதையையும் ஒரு ஜதை வெள்ளாடுகளையும் கொடுத்து அந்தக் காந்த உருளைகளை வாங்கினார். வீட்டிலிருந்த எளிய வசதிகளை அதிகரித்துக்கொள்வதற்கு அந்தப் பிராணிகளை நம்பியிருந்த மனைவி உர்சுலாவால் அவரைப் பின்வாங்கச் செய்ய முடியாமல் போனது. "சீக்கிரமே நமக்குப் போதுமான தங்கம் கிடைக்கும். வீட்டுத் தரையில் பாவும் அளவுக்கு அதிகமாகவே கிடைக்கும்" என்று பதில் சொன்னார் கணவர். தன்னுடைய கருத்தை மெய்ப்பிப்பதற்காக மாதக்கணக்காகக் கடினமாகப் பாடுபட்டார். அந்தப் பகுதியின் ஒவ்வொரு அங்குலத்தையும் ஆற்றுப் படுகையையும் கூடத் தோண்டினார். மெல்குயாதெஸின் மந்திரத்தை உரக்க உச்சாடனம் செய்தபடியே அந்த இரண்டு உலோக உருளைகளை இழுத்துக்கொண்டு திரிந்தார். ஆக, துருப்பிடித்த, துண்டுகள் ஒன்றோடு ஒன்று ஒட்டியிருந்த பதினைந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஓர் உலோகக் கவசத்தைத்தான் அவரால் வெளியே கொண்டுவர முடிந்தது. ஏராளமான கற்களைப் போட்டுவைத்த சுரைக்காயின் வெற்று முழக்கம் அதற்குள்ளே எதிரொலித்தது. ஹோசே அர்க்காதியோவும் அவருடன் பயணித்திருந்த நான்குபேரும் அந்தக் கவசத்தைப் பிரித்தெடுத்தார்கள். அதற்குள்ளே சுண்ணாம்பாகும் நிலையில் ஓர் எலும்புக்கூடு இருந்தது. அதன் கழுத்தில் பெண்ணின் முடி பத்திரப் படுத்தப்பட்ட ஒரு பதக்கம் இருந்தது.

மார்ச் மாதத்தில் நாடோடிகள் திரும்பி வந்தார்கள். இந்த முறை அவர்கள் ஒரு தொலைநோக்கியையும் முரசின் அளவுள்ள ஓர் உருப் பெருக்கிக் கண்ணாடியையும் கொண்டு வந்தார்கள். ஆம்ஸ்டர்டாம் யூதர்களின் புதிய கண்டுபிடிப்பு என்று அவற்றைக் காட்சிக்கு வைத்தார்கள். ஒரு நாடோடிப் பெண்ணைக் கிராமத்தின் மூலை ஒன்றில் நிற்கவைத்தார்கள். தொலைநோக்கியைக் கூடாரத்தின் நுழை வாயிலில் வைத்தார்கள். ஐந்து நாணயங்கள் கொடுத்தால் மக்களால் அந்த நாடோடிப் பெண்ணைத் தொலைநோக்கி வழியே கையெட்டும் தூரத்தில் பார்க்கலாம். "அறிவியல், தூரத்தை இல்லாமல் செய்து விட்டது" என்று மெல்குயாதெஸ் அறிவித்தான். "இன்னும் கொஞ்ச காலத்தில் தன்னுடைய வீட்டைவிட்டுப் போகாமலேயே உலகத்தில் எந்த இடத்தில் என்ன நடக்கிறது என்பதை மனிதனால் பார்க்க முடியும்." தகிக்கும் நண்பகல் சூரியன் அந்தப் பிரம்மாண்டமான உருப்பெருக்கிக் கண்ணாடியின் அற்புதச் செயல்பாட்டைக் காட்சிப் படுத்தியது. தெரு மத்தியில் கட்டுக்கட்டாக வைக்கோலை அடுக்கிச் சூரியனின் கதிர்களைக் குவித்து அதை எரியச் செய்தார்கள். பெரும் காந்தங்களின் தோல்வியிலிருந்து இன்னும் தேறாமலிருந்த ஹோசே அர்க்காதியோ புயேந்தியா அந்தக் கண்டுபிடிப்பை ஒரு போர்க் கருவியாக

மாற்றலாம் என்று கருதினார். மீண்டும் மெல்குயாதெஸ் அவரைப் பின்வாங்கச்செய்ய முயன்றான். ஆனால் கடைசியில் இரண்டு காந்த உருளைகளுக்கும் மூன்று காலனிய நாணயங்களுக்கும் அந்த உருப் பெருக்கிக் கண்ணாடியைப் பண்டமாற்றுச் செய்தான். உர்சுலா கிலி பிடித்து அழுதாள். அந்தப் பணம் அவளுடைய தந்தை தன்னுடைய வறிய வாழ்க்கை மொத்தத்தையும் கொடுத்துச் சேர்த்துவைத்த தங்க நாணயப் பேழையிலிருந்து எடுத்தது. அதைத் தேவைப்படும் தருணத்தில் பயன்படுத்திக்கொள்ளலாம் என்ற நம்பிக்கையில் தன்னுடைய படுக்கைக்குக் கீழே புதைத்துவைத்திருந்தாள். ஹோசே அர்க்காதியோ புயேந்தியா அவளை ஆறுதல்படுத்த எந்த முயற்சியும் செய்யவில்லை. ஒரு விஞ்ஞானியின் விட்டொழிக்க முடியாத தன்மையுடன், உயிருக்கே ஆபத்தான தன்னுடைய தந்திரோபாயப் பரிசோதனைகளில் மூழ்கி யிருந்தார். எதிரித் துருப்புகளின் மீது அந்தக் கண்ணாடியின் விளைவு என்னவாக இருக்கும் என்பதைக் காட்டச் செய்த முயற்சிகளில் சூரியக் கதிர்கள் தன்மீதே குவிய நின்றார். அதனால் பட்ட பொசுங்கல்கள் தீக்காயங்களாக மாறி ஆறவே நீண்ட காலம் பிடித்தது. இதுபோன்ற ஆபத்தான கண்டுபிடிப்பைப் பற்றி அங்கலாய்ப்புடன் இருந்த தன்னுடைய மனைவியின் எதிர்ப்புகளை மீறி ஒரு சந்தர்ப்பத் தில் வீட்டையே எரித்துவிட இருந்தார். புதிய கருவியின் செயல்தந்திரச் சாத்தியங்கள் பற்றிக் கணக்குப் போட்டுக்கொண்டு தன்னுடைய அறையில் நெடுநேரங்களைக் கழித்தார். வியப்பூட்டும் செய்திறன் துல்லியமும் மறுக்கவியலாத திட நம்பிக்கையின் ஆற்றலும் கொண்ட ஒரு கையேட்டை உருவாக்குவதில் வெற்றியும் பெற்றார். தனது பரிசோதனைகள் தொடர்பான ஏராளமான விவரங்களையும் பல பக்கங்கள் கொண்ட விளக்கப்படங்களையும் சேர்த்து அதை அரசாங்கத்துக்கு ஒரு தூதன் மூலம் அனுப்பிவைத்தார். அந்தத் தூதன் மலைகளைத் தாண்டி எண்ணற்ற சதுப்பு நிலங்களில் அமிழ்ந்து மீண்டு சீறிப் பாயும் ஆறுகளைக் கடந்து நிராசையிலும் கொள்ளை நோயிலும் வன விலங்குகள் ஆக்கிரமிப்பிலும் அழியும் முன்பே தபால் பைகளைச் சுமந்த கோவேறுக் கழுதைகள் போகும் தடத்துக்குச் செல்லும் வழியைக் கண்டடைந்தான். தலைநகரத்துக்குச் செல்லும் பயணம் அந்தக் காலத்தில் அசாத்தியமாக இருந்தது என்ற உண்மையை மீறி அரசாங்கம் ஆணை பிறப்பித்ததும் பயணம் மேற்கொள்ளவும் தன் னுடைய கண்டுபிடிப்பைப் பற்றி ராணுவ அதிகாரிகளுக்குச் செய்முறை விளக்கங்கள் கொடுத்துச் சிக்கலான சூரியப் போர்க்கலையில் அவர்களுக்குப் பயிற்சியளிக்கவும் தன்னால் முடியுமென்றும் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா உறுதிகொண்டிருந்தார். பதிலுக்காகப் பல வருடங்கள் காத்திருந்தார். கடைசியில் காத்திருந்து அலுத்துப்போய் தன்னுடைய திட்டத்தின் தோல்வி பற்றி மெல்குயா தெஸிடம் சொல்லி வருந்தினார். அந்த நாடோடி தன்னுடைய நேர்மையை மெய்ப்பிக்கும் நிரூபணத்தை அப்போது அளித்தான். உருப்பெருக்கிக் கண்ணாடியைத் திரும்பப் பெற்றுக்கொண்டு தங்க நாணயங்களைத் திருப்பிக் கொடுத்தான். அவற்றுடன் சில போர்த்துக்கீசிய நிலப்படங் களையும் திசை காட்டும் கருவிகள் பலவற்றையும் கொடுத்தான். அந்த உயர்வுமானி, திசைமானி, கோணமானிக் கருவிகளைப் பயன்

படுத்த உதவியாகத் துறவி ஹெர்மன் நடத்திய ஆய்வுகளின் சுருக்கக் குறிப்பையும் தன்னுடைய கையெழுத்திலேயே எழுதி ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவிடம் கொடுத்தான். ஹோசே அர்க்காதியோ புயேந்தியா தனது பரிசோதனைகளுக்கு யாரும் இடையூறு செய்யாமலிருக்க வீட்டுக்குப் பின்பக்கம் கட்டியிருந்த சிறிய அறைக்குள் அடைந்து மழைக்காலத்தின் நீண்ட மாதங்களைச் செலவிட்டார். வீட்டுப் பொறுப்புகளை முழுவதுமாகக் கைவிட்டுவிட்டு இரவு முழுவதும் முற்றத்தில் நின்று விண்மீன்களின் இயக்கத்தை அவதானித்தார். நண்பகலை நிர்ணயிப்பதில் துல்லியமான வழி முறையை நிறுவ முயன்றுகொண்டிருந்ததில் அவர் வெயில் தாக்குதலுக்கு உள்ளாகும் நிலையை எட்டியிருந்தார். தன்னுடைய கருவிகளைப் பயன்படுத்துவதிலும் கையாளுவதிலும் தேர்ச்சி பெற்ற பிறகு, அறியப்படாத சமுத்திரங்களில் கடலோடவும் யாரும் வசிக்காத பிரதேசங்களுக்குச் செல்லவும் தன்னுடைய படிப்பறையை விட்டு வெளியேறாமலேயே அற்புத உயிரினங்களுடன் தொடர்புகொள்ளவுமான எண்ணச் சூழலைக் கற்பனை செய்தார். அந்தக் கட்டத்தில்தான் தனக்குத்தானே பேசிக்கொள்ளும் பழக்கமும் உர்சுலாவும் பிள்ளைகளும் தோட்டத்தில் முதுகை ஒடித்துக்கொண்டு வாழையையும் காட்டுச் சேம்பையும் கூவக்கிழங்கையும் சேனையையும் அஹுயா வேர்த் தண்டையும் கத்திரியையும் விளைவித்துக்கொண்டிருந்தபோது யாரையும் கவனிக்காமல் வீட்டுக்குள்ளே நடமாடும் பழக்கமும் அவரிடம் உருவாகியிருந்தன. திடீரென்று எந்த முன்னறிவிப்பும் இல்லாமல் அவருடைய ஜுரவேகச் செயல் தடங்கலுக்கு உள்ளானதுடன் வேறொரு வகை ஈர்ப்பால் இடப்பெயர்ச்சியும் செய்யப்பட்டது. அவருக்கே விளங்காத சில பயமுறுத்தும் ஊகங்களை வசியத்துக்கு ஆட்பட்டவர் போலத் தனக்குத்தானே மெதுவாகத் திரும்பச் சொல்லிக்கொண்டிருந்தார். கடைசியாக, டிசம்பர் மாதச் செவ்வாய்க்கிழமை ஒன்றில், பகலுணவு வேளையில் அவர் தன்னுடைய வேதனையின் மொத்தப் பாரத்தையும் ஒரேயடியாக வெளிப்படுத்தினார். பிள்ளைகள் தங்களுடைய மிச்சமுள்ள வாழ்நாள் எல்லாம் நினைவில்கொள்ளும் விதமாகக் கம்பீரத் தோற்றத்துடன் அந்தத் தகப்பன் தன்னுடைய நீண்ட காத்திருப்பாலும் கற்பனையின் கொந்தளிப்பாலும் பாழான அவருடைய கண்டுபிடிப்பை அவர்களிடம் வெளிப்படுத்தினார். "இந்த பூமி ஓர் ஆரஞ்சுப் பழம் போல உருண்டையானது."

உர்சுலா பொறுமை இழந்தாள். "நீங்கள் பைத்தியம் பிடித்து அலைய வேண்டுமென்றால் தயவுசெய்து அதை உங்களுடன் மட்டுமே வைத்துக்கொள்ளுங்கள்" என்று கத்தினாள். "உங்களுடைய நாடோடித்தனமான யோசனைகளைப் பிள்ளைகளின் மண்டைக்குள் திணிக்காதீர்கள்." உணர்ச்சியற்ற அமைதியுடையவரான ஹோசே அர்க்காதியோ புயேந்தியா, ஆத்திரத்தைக் கட்டுப்படுத்த முடியாமல் உயர்வுமானியைத் தரையில் எறிந்து நொறுக்கிய மனைவியின் ஏமாற்றத்தைக் கண்டு அஞ்சவில்லை. இன்னொன்றை உருவாக்கிக்கொண்டார். கிராமத்து ஆண்களைத் தன்னுடைய சிறிய அறைக்குள் கூட்டி வைத்துக்கொண்டு அவர்களில் எவருக்கும் விளங்காத கோட்பாடுகளைச் சொல்லி,

ஒருவன் கிழக்குத்திசையில் தொடர்ச்சியாகக் கடல்வழிப் பயணம் செய்தால் புறப்பட்ட இடத்துக்கே திரும்பி வரும் சாத்தியங்களைப் பற்றிச் செயல்முறை விளக்கமும் அளித்தார். ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவுக்குப் புத்தி பேதலித்துவிட்டது என்று மொத்தக் கிராமமும் எண்ணியிருந்தபோது நிலைமையைச் சீராக்க மெல்குயாதிஸ் திரும்ப வந்தான். வெறும் வானியல் அனுமானங்களை வைத்துக்கொண்டு ஏற்கனவே நடைமுறையில் நிரூபணம் செய்யப்பட்டதும் அதுவரை மகோந்தாவில் அறியப்படாததுமான ஒரு கோட்பாட்டை உருவாக்கி யிருக்கும் மனிதனின் நுண்ணறிவை வெளிப்படையாகப் பாராட்டி னான். பாராட்டுக்குச் சான்றாக எதிர்காலத்தில் அந்தக் கிராமத்தையே வலுவாகப் பாதிக்கப்போகும் ஒரு பரிசையும் அளித்தான். ஒரு ரசவாதியின் ஆய்வுக்கூடத்தை.

இதற்கிடையில் வியப்பளிக்கும் வேகத்தில் மெல்குயாதெஸ் முதுமையடைந்திருந்தான். முதல் முறை வந்தபோது ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவின் சம வயதினனாகவே தோற்ற மளித்தான். ஆனால் பின்னவர் ஒரு குதிரையைக் காதைப் பிடித்து இழுத்துவரும் அளவுக்கான தன்னுடைய அசாதாரண வலிமையைப் பாதுகாத்திருந்தபோது ஏதோ கடுமையான நோய் அந்த நாடோடியைப் பலவீனமாக்கியதாகத் தோன்றியது. உண்மையில் அது உலகத்தைச் சுற்றி நடத்திய கணக்கில்லாத பயணங்களில் அவனைப் பீடித்த பல நோய்களும் அபூர்வ வியாதிகளும் ஏற்படுத்திய விளைவு. ஆய்வுக் கூடம் அமைப்பதில் ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவுக்கு உதவிக்கொண் டிருந்தபோது அவனாகவே சொன்னதை வைத்துப் பார்த்தால் மரணம் அவனை எல்லா இடத்திலும் பின்தொடர்ந் திருக்கிறது. அவனுடைய கால்சராயின் கீழ் மடிப்பை முகர்ந்திருக்கிறது. ஆனால் தனது நகங்களின் கடைசிப் பிடியை இறுக்க ஒருபோதும் தீர்மானித் திருக்கவில்லை. மனித குலத்தை அலைக்கழித்த எல்லா விதமான கொள்ளை நோய்களிலிருந்தும் பேரழிவுகளிலிருந்தும் தப்பிப் பிழைத் தவன் அவன். பாரசீகத்தில் தோல்வெடிப்பு நோயிலிருந்தும் மலேயாத் தீவுக் கூட்டங்களில் ஈறு வீக்க நோயிலிருந்தும் அலெக்சாண்டிரியாவில் தொழுநோயிலிருந்தும் ஜப்பானில் ஊட்டச் சத்துக் குறைவிலிருந்தும் மடகாஸ்கரில் அக்குள் வீக்கத்திலிருந்தும் சிசிலியில் பூகம்பத்திலிருந்தும் மாகெல்லன் நீரிணைவில் துன்பகரமான கப்பல் மோதலிலிருந்தும் தப்பியிருந்தான். நாஸ்டர்டாமின் சாவிகளை வைத்திருப்பதாகச் சொல்லப்படும் அந்த அதிசயப் பிறவி, ஒரு சோக வளையத்தால் சூழப்பட்டது போல வாட்டமான முகமுள்ளவனாக இருந்தான். ஆசியாக்காரனைப் போலிருந்த அவன் விஷயங்களின் மறுபக்கத்தையும் தெரிந்திருப்பவனாகத் தோன்றினான். சிறகு விரித்துக் கொண்ட அண்டங்காக்கையைப் போலத் தோற்றமளிக்கும் நீண்ட கறுத்த தொப்பியை அணிந்திருந்தான். அவன் அணிந்திருந்த வெல்வெட் மேலுடுப்பில் நூற்றாண்டுகளின் களிம்பு வழுக்கிச் சென்றிருப்பது போலத் தோன்றியது. ஆனால் தன்னுடைய அபாரமான ஞானத்தை யும் அற்புதச் செயல்பாட்டையும் மீறி அன்றாட வாழ்வின் சிறு பிரச்சினைகளில் ஈடுபட வேண்டிய உலகியல் கட்டாயத்தில் ஆழ்ந்து

விடும் மானிடப் பொறுப்பும் அவனுக்கு இருந்தது. முதுமை நோய்கள் பற்றிக் குறைப்படுவான். மிக அற்பமான பொருளாதாரச் சிக்கல்களால் வருந்திக்கொண்டிருந்தான். ஈறு வீக்க நோயால் அவனுடைய பற்கள் பெயர்ந்து விழுந்திருந்ததால் வெகு காலத்துக்கு முன்பே சிரிப்பதை நிறுத்தியிருந்தான். அந்த நாடோடி தன்னுடைய ரகசியங்களை வெளிப்படுத்திய அந்த மூச்சுத் திணறவைக்கும் நண்பகல் பொழுதில் அது ஒரு மகத்தான நட்பின் ஆரம்பம் என்பதை ஹோஸே அர்க்காதியோ புயேந்தியா திடமாக உணர்ந்தார். பிள்ளைகள் அவனுடைய விந்தைக் கதைகளால் வியப்படைந்திருந்தார்கள். அந்தச் சமயத்தில் ஐந்து வயதுக்கு அதிகம் ஆகியிராத அவுரேலியானோ, அந்தப் பிற்பகலில், வெயில் உருக்கிய வியர்வைப் பிசுக்கு நெற்றிப் பொட்டிலிருந்து வழிந்த கன்னங்களுடன் கற்பனையின் இருண்ட இடங்களைக்கூடத் தன்னுடைய கனத்த குரலால் ஒளிமயமாக்கிக் கொண்டு ஜன்னலிலிருந்து வந்த பளபளப்பும் துடிப்பும் மிளிர்ந்த வெளிச்சத்தில் உட்கார்ந்திருந்த அவனைப் பார்த்ததை தன்னுடைய வாழ்நாள் முழுவதும் நினைத்துக்கொண்டிருப்பான். அவருடைய அண்ணன் ஹோஸே அர்க்காதியோ அந்த அதிசயக் காட்சியைத் தனது பிந்தைய தலைமுறைகளுக்கு ஓர் இனத்தின் ஞாபகமாகக் கைமாற்றுவார். மற்றொரு பக்கம் உர்சுலா அந்த வருகையின் மோசமான ஞாபகத்தையே வைத்திருந்தாள். ஏனெனில் அவள் அந்த அறைக்குள் நுழைந்தபோது மெல்குயாதெஸ் பாதரச டை குளோரைடு வைத்திருந்த குடுவையைக் கவனக்குறைவாகப் போட்டு உடைத்திருந்தான்.

“இது சாத்தானின் வாடை” என்றாள்.

“இல்லவே இல்லை” என்று மெல்குயாதெஸ் அவளைத் திருத்தினான். “சாத்தானுக்கு கந்தகத்தின் குணங்கள்தாம் இருக்கின்றன என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இதுவோ கொஞ்சம் அரிப்புத் திறனுள்ள பாதரசப் படிவு.”

எப்போதும் போதனை செய்பவனான அவன் ரசாயனக் கூட்டுப் பொருளின் தன்மைகளைப் பற்றி நிபுணத்துவத்துடன் சொல்லிக் கொண்டிருந்தான். ஆனால் பிள்ளைகளைப் பிரார்த்தனைக்காக அழைத்துச் செல்லவிருந்த உர்சுலா அதைப் பொருட்படுத்தவில்லை. அந்தச் சகிக்க முடியாத நெடி மெல்குயாதெஸுடன் தொடர்புள்ள நினைவாக அவள் மனத்தில் தங்கியது.

கொள்கலன்கள், வடிகுழாய்கள், வடிகலன்கள், வடிப்பான்கள், சல்லடைகள் ஆகியவற்றைத் தவிரப் புராதன தண்ணீர்க் குழாய், நீண்ட மெல்லிய கழுத்துள்ள கண்ணாடியாலான மூக்குக் குழாய்க் குடுவை, ரசவாதக் கல்லின் மாதிரி, யூத மேரியின் கையிலிருக்கும் மூன்று கையுள்ள வடிகலன் போல நவீன விளக்கங்களுக்கு ஏற்ப நாடோடிகளே உருவாக்கிய மூன்று கை வடிகலன் ஆகியவற்றுடன் அந்த அடிப்படை ஆய்வுக்கூடம் அமைக்கப்பட்டிருந்தது. இந்த உருப்படிகளுடன் மெல்குயாதெஸ் ஏழு உலோகங்களின் மாதிரிகளை, ஏழு கோள்களுக்காக ஏழு உலோகங்கள், தங்கத்தின் அளவை

இரட்டிப்பது தொடர்பாக மோசேயும் ஜோஸிமஸும் வைத்திருந்த சூத்திரங்களையும் ரசவாதக் கல்லை உருவாக்குவதில் ஈடுபடுபவர்கள் அந்தச் செய்முறையின் மகத்தான பாடத்தை விளங்கிக்கொள்வதற்கான விவரப் படங்களையும் குறிப்புகளையும் விட்டுச்சென்றிருந்தான். தங்கத்தின் அளவை இரட்டிப்பாக்கும் சூத்திரங்களின் எளிமையால் வசீகரிக்கப்பட்ட ஹோசே அர்க்காதியோ புயேந்தியா, பல வாரங்கள் உர்சுலாவிடம் பேசினார். தங்கத்தை இரட்டிப்பாக்குவதற்காகச் சில பொன் நாணயங்களைத் தோண்டியெடுக்கத் தன்னை அனுமதிக்கும் படியும் பாதரசம் பிரிவதற்கு ஏற்ப எத்தனை முறை முடியுமோ அத்தனை முறை இரட்டிப்பாக்கலாம் என்றும் சொன்னார். வழக்கம் போலவே உர்சுலா தன்னுடைய கணவனின் விடாப் பிடிவாதத்துக்கு இணங்கினாள். ஹோசே அர்க்காதியோ புயேந்தியா மூன்று தங்க நாணயங்களை ஒரு வாணலியில் போட்டுச் செப்புத் துகள்களையும் கந்தகத்தையும் காரீயத்தையும் கலந்து உருக்கினார். அதை மொத்தமாக விளக்கெண்ணெய் ஊற்றிய பாத்திரத்தில் கொதிக்க வைத்தார். கெட்டியானதும் ஊறு விளைவிக்கக்கூடியதுமான ஒரு குழம்பு கிடைத்தது. அது மதிப்பு மிகுந்த தங்கத்துக்குப் பதிலாகச் சாதாரணப் பாகுபோல இருந்தது. ஆபத்தான, பொறுமையற்ற வடிமுறைகளில் இறுத்து ஏழு கோள் உலோகங்களையும் சேர்த்து உருக்கி வடித்தெடுத்தார். பாதரசத்தையும் சைப்ரஸ் கந்தகத்தையும் சேர்த்து முள்ளங்கி எண்ணெய் கிடைக்காததால் பன்றிக் கொழுப்பைக் கலந்து மீண்டும் கொதிக்கவைத்தார். உர்சுலாவின் பரம்பரைச் சொத்து பன்றிக் கொழுப்புடன் தீய்ந்து ஒரு பெரிய கட்டியாகக் கலத்தின் அடிப் பாகத்தில் வலுவாக ஒட்டிக் கிடந்தது.

நாடோடிகள் திரும்பி வந்தபோது உர்சுலா மொத்தக் கிராமவாசிகளையும் அவர்களுக்கு எதிராகத் திருப்பினாள். ஆனால் ஆர்வம் அச்சத்தைவிடப் பெரியது. அந்த முறை நாடோடிகள் எல்லாவிதமான இசைக் கருவிகளையும் இசைத்துக் காதடைப்பது போலச் சத்தத்தை ஏற்படுத்தி நகரத்துக்குள் திரிந்தார்கள். அவர்களில் கூவி விற்பனை செய்யும் ஒருவன் நாஸியென்செனிஸின் பிரசித்தி பெற்ற கண்டுபிடிப்பைக் காட்சிக்கு வைத்திருப்பதை அறிவித்தான். எனவே எல்லாரும் ஒரு சென்ட் கட்டணம் செலுத்திக் கூடாரத்துக்குச் சென்று இளமை நிறைந்த, சுருக்கங்கள் இல்லாத, பளபளக்கும் புதிய பல்வரிசை கொண்ட மெல்குயாதெஸைப் பார்த்தார்கள். ஸ்கர்வி நோயால் பாதிக்கப்பட்டிருந்த அவனுடைய ஈறுகளையும் ஒடுங்கிய கன்னங்களையும் நடுங்கும் உதடுகளையும் ஞாபகம் வைத்திருந்தவர்கள் அந்த நாடோடியின் இயற்கைக்கு அதீதமான ஆற்றலின் கடைசி நிரூபணத்தைப் பார்த்து அச்சத்தில் நடுங்கினார்கள். மெல்குயாதெஸ் தன்னுடைய பல் செட்டை ஈறுகளிலிருந்து அசங்காமல் கழற்றிப் பார்வையாளர்களுக்கு ஒரு கணம் காட்டினான். அந்த ஒரு நொடியில் அவன் கடந்த வருடங்களின் அதே முதுமைக்குத் திரும்பிப் போனான். அதை மீண்டும் பொருத்திப் புன்னகைத்ததும் இளமையை மீட்டுக்கொண்டான். அப்போது அச்சம் பீதியாக மாறியது. ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவும் மெல்குயாதெஸின் அறிவு தாங்க முடியாத தீவிரத்தை

எட்டியிருப்பதாக எண்ணினார். ஆனால் தன்னுடைய பொய்ப் பற்கள் செயல்படுவதை அந்த நாடோடி விளக்கியபோது அவர் ஆரோக்கியமான பரவசத்தை உணர்ந்தார். அந்த ஒரே இரவில் ரசவாத ஆய்வுகளில் இருந்த ஆர்வத்தை இழந்தார் என்பது எளிமையானதாகவும் மேதைமை கொண்டதாகவும் தோன்றியது. அவர் ஓர் மோசமான நகைச்சுவைச் சிக்கலுக்கு உள்ளானார். ஒழுங்காகச் சாப்பிடவில்லை; வீட்டுக்குள்ளேயே நடப்பதில் நாள் முழுவதையும் கழித்தார். "உலகத்தில் நம்ப முடியாத காரியங்கள் நடந்துகொண்டிருக்கின்றன" என்று உர்சுலாவிடம் சொன்னார். "அங்கே ஆற்றுக்கு அப்பால் எல்லாவிதமான மந்திரக் கருவிகளும் இருக்கும்போது நாம் இங்கே கழுதைகளைப் போல வாழ்ந்து கொண்டிருக்கிறோம்." மகோந்தா உருவானது முதல் அவரை அறிந்திருந்தவர்கள் மெல்குயாதெஸின் பாதிப்பால் அவர் எவ்வளவு மாறிப்போனார் என்று அதிர்ச்சி அடைந்தார்கள்.

ஆரம்பத்தில், ஹோசே அர்க்காதியோ புயேந்தியா விவசாய நடைமுறைகளுக்கும் குழந்தைகள், கால்நடைப் பராமரிப்புக்கு ஆலோசனை வழங்குவதிலும் சமூகத்தின் மேம்பாட்டுக்காக உடல் சார்ந்த வேலைகளில்கூட எல்லாரோடும் ஒத்துழைப்பதிலும் ஆர்வமுள்ள இளமைத் துடிப்பான இனத் தலைவராகவும் இருந்தார். முதலிலிருந்தே அவருடைய வீடுதான் கிராமத்தில் சிறப்பானதாக இருந்து வந்தது. மற்றவர்கள் அதைப் பார்த்து அதன் சாயலில்தான் தங்கள் வீடுகளைக் கட்டினார்கள். அந்த வீட்டில் சிறியதாக இருந்தாலும் வெளிச்சமுள்ள வரவேற்பறையும் உற்சாக வண்ணமுள்ள மலர்கள் கொண்ட தள இருக்கையுள்ள சாப்பாட்டு அறையும் இரண்டு படுக்கையறைகளும் பிரம்மாண்டமான செந்தவிட்டு மரம் நிற்கும் முற்றமும் சீராகப் பராமரிக்கப்பட்ட தோட்டமும் இருந்தன. ஆடுகள், பன்றிகள், கோழிகள் எல்லாம் அமைதியாக ஒருமித்து வாழும் பட்டியும் இருந்தது. அங்கே வீட்டுக்குள்ளே மட்டுமல்ல முழுக் குடியிருப்பிலுமே ஓர் உயிரினம் மட்டுமே தடைசெய்யப்பட்டிருந்தது. அவை சண்டைச் சேவல்கள்.

உர்சுலாவின் உழைப்பாற்றலும் அவளுடைய கணவருடையது போன்றதுதான். சுறுசுறுப்பும் சிறிய தோற்றமும் தீவிரமும் கொண்ட அந்தப் பெண் மன உறுதி குலையாதவளாக இருந்தாள். வாழ்நாளில் ஒரு கணம்கூட அவள் பாடிக் கேட்டதில்லை. ஆனால் எல்லா இடத்திலும் அவள் இருப்பதாகத் தோன்றியது. விடியற்காலையிலிருந்து இரவின் பின்நேரம்வரை கஞ்சி போடப்பட்ட பாவாடையின் மென்மையான முனகல் எப்போதும் அவளைப் பின்தொடர்ந்து கொண்டிருக்கும். மெழுகி விடப்பட்ட தரைகள், சுண்ணாம்பு பூசப் படாத மண் சுவர்கள், அவர்களே செய்த உறுதியான மர அறைக் கலன்கள் எல்லாம் எப்போதும் சுத்தமாகவே இருந்தன. அவர்கள் துணிகளை வைத்திருந்த பெட்டிகள் இதமான துளசி மணத்தை வெளிக்கசியவிட்டிருந்தன.

அந்தக் கிராமத்தில் பார்க்க முடிந்தவர்களில் மிகவும் செயலாற்றல் கொண்டவரான ஹோசே அர்க்காதியோ புயேந்தியா அவர்கள் அனைவரும் சம முயற்சியுடனேயே ஆற்றுக்குப் போய் தண்ணீரைக் கொண்டு வரும் விதமாகவே வீடுகளை அமைத்திருந்தார். பகலில் வெப்பம் நிறைந்த பொழுதுகளில் ஒரு வீட்டைவிட இன்னொரு வீட்டுக்கு அதிக வெயில் அடிக்காத வகையில் பொருத்தமான அறிவுடன் தெருக்களை வரிசைப்படுத்தியிருந்தார். மிகச் சில வருடங்களுக்குள்ளேயே மகோந்தா ஒழுங்காக அமைக்கப்பட்ட கிராமமாகவும் அதுவரை அறியப்பட்டிருந்த எவரையும்விட அந்த முந்நூறு குடிமக்களே கடும் உழைப்பாளிகள் என்றும் ஆயிற்று. உண்மையிலேயே அது மகிழ்ச்சி நிறைந்த கிராமமாக இருந்தது. அங்கே யாருக்கும் முப்பது வயதுக்கு அதிகமில்லை. அங்கே யாரும் சாகவும் இல்லை.

கிராமம் உருவான சமயத்திலேயே ஹோசே அர்க்காதியோ புயேந்தியா கூண்டுகளையும் பொறிகளையும் உண்டாக்கியிருந்தார். குறுகிய காலத்துக்குள்ளேயே தன்னுடைய வீட்டில் மட்டுமல்ல, கிராமத்திலிருந்த எல்லா வீட்டுக் கூண்டுகளிலும் ட்ரூப்பியல்களும் கானரிகளும் தேன் உண்ணிகளும் ரெட் பிரெஸ்டுகளும் நிறைக்க அவரால் முடிந்தது. இந்த வெவ்வேறு வகையான பறவைகளின் கச்சேரி தொந்தரவாக மாறியதால் உர்சுலா தன்னுடைய காதுகளில் தேன் மெழுகை வைத்து அடைத்துக்கொண்டாள். அதனால் எதார்த்த உணர்வை இழக்காமல் இருந்தாள். தலை நோவுகளுக்குக் கண்ணாடி மணிகளை விற்பதற்காக முதல் முறையாக மெல்குயாதெஸ் குழு வந்து சேர்ந்தபோது சதுப்பு நிலத்தின் மய்க்கத்தில் கிராமமே ஆழ்ந் திருப்பதைக் கண்டார்கள். 'பறவைகளின் பாட்டைக் கேட்டுத்தான் வழியைக் கண்டுபிடித்ததாக அந்த நாடோடிகள் ஒப்புக்கொண்டார்கள்.

காந்தங்களின் காய்ச்சலாலும் வானியல் கணக்குகளாலும் இழுத்துச் செல்லப்பட்டதிலும் பொருள்நிலை மாற்றக் கனவுகளாலும் உலக அதிசயங்களைக் கண்டறியும் வேட்கையாலும் அவரது சமூக எத்தனத்துக் கான உற்சாகம் மறைந்துபோனது. வெகுளியான சுறுசுறுப்பான மனிதன் என்பதிலிருந்து ஹோசே அர்க்காதியோ புயேந்தியா தோற்றத் தில் சோம்பேறியாகவும் உடைகளில் அக்கறை இல்லாதவராகவும் முரட்டுத் தாடியுள்ளவராகவும் மாறியிருந்தார். உர்சுலா அவருடைய தாடியைச் சமையலறைக் கத்தியால் பெரும்பாடுபட்டுச் சீர் செய்ய வேண்டியிருந்தது. அவர் ஏதோ விசித்திரப் போக்குக்கு உள்ளாகியிருப்ப தாக எண்ணிய நிறைய ஆட்கள் அங்கே இருந்தார்கள். ஆனால் அவருக்குப் பைத்தியம் என்று நிச்சயம் செய்திருந்தவர்கள்கூட நிலத்தைப் பண்படுத்த மகத்தான கருவிகளை அவர் கிராமத்துக்குக் கொண்டு வந்தபோது வேலையையும் குடும்பத்தையும் விட்டுவிட்டு அவரையே பின்தொடர்ந்தார்கள். அங்கே கூடியிருந்தவர்களிடம் மகோந்தா மகத்தான கண்டுபிடிப்புகளுடன் இணைவதற்கான வழியைத் திறந்து விடுமாறு கேட்டுக்கொண்டார்.

ஹோசே அர்க்காதியோ புயேந்தியா, அந்தப் பிரதேசத்தின் புவியியலைப் பற்றிச் சுத்தமாக அறியாதவராகவே இருந்தார். கிழக்கே

ஊடுருவ முடியாத ஒரு மலைத்தொடர் கிடக்கிறது என்றும் மலைகளுக்கு மறுபக்கம் புராதனமான ரியோஹச்சா நகரம் இருக்கிறது என்றும் அவருக்குத் தெரியும். அங்கேதான் கடந்த காலத்தில் சர் பிரான்சிஸ் டிரேக் பீரங்கிகளுடன் முதலை வேட்டைக்குச் சென்றதையும் வேட்டையாடிய முதலைகளைச் சீர்ப்படுத்தியும் வைக்கோல் திணித்துப் பதப்படுத்தியும் எலிசபெத் அரசிக்குக் கொண்டு சென்றார் என்றும் அவருடைய பாட்டனார் முதலாம் அவுரேலியானோ புயேந்தியா சொல்லிக் கேட்டிருக்கிறார். அவருடைய இளம் பருவத்தில் ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவும் அவரது ஆட்களும் மனைவி மக்களுடனும் வளர்ப்பு மிருகங்களுடனும் தட்டுமுட்டுச் சாமான் களுடனும் கடலைப் பார்ப்பதற்கான வழியைத் தேடி மலைகளைக் கடந்தார்கள். இருபத்தைந்து மாதங்களுக்குப் பிறகு அவர்கள் பயணத்தைக் கைவிட்டு, இனி, புறப்பட்ட இடத்துக்குச் செல்லத் தேவையில்லை என்பதால் மகோந்தாவை உருவாக்கினார்கள். கடந்த காலத்துக்கு மட்டுமே இட்டுச் செல்லும் என்பதால் அந்த வழி அவருக்கு ஆர்வமூட்டவில்லை. தெற்கில் சதுப்பு நிலங்கள் கிடந்தன. வாடாத தாவரக் கசடுகளால் மூடப்பட்ட அந்தப் பரந்தவெளி முழுவதும் பிரம்மாண்டமான சதுப்பாக இருந்தது. நாடோடிகளைப் பொறுத்த வரை அதற்கு எல்லைகளே இல்லை. மேற்குப் பக்கத்திலிருந்த பெரும் சதுப்பு நிலம் வரம்பில்லாத நீர் நிலையுடன் கலந்திருந்தது. அங்கே மென்சருமம் உடைய பெண்ணின் தலையும் தொடைகளும் கொண்ட அசாதாரண அழகுள்ள முலைகளால் கடலோடிகளை நாசம் பண்ணுகிற கடற்கன்னிகள் இருந்தார்கள். தபால் சுமைகளுடன் கோவேறுக் கழுதைகள் செல்லும் தடத்தை அடைய நாடோடிகள் அந்த நீர் மார்க்கத்தில் ஆறு மாதங்கள் பயணம் செய்தார்கள். ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவின் கணக்குப்படி நாகரிகத்துடன் தொடர்புகொள்வதற்கான சாத்தியம் வடக்குத் திசை வழியில் மட்டுமே இருந்தது. எனவே, அவர் பணிக்கருவிகளையும் வேட்டைக்கான ஆயுதங்களையும் மகோந்தாவைக் கண்டுபிடித்தபோது தன்னுடன் இருந்த அதே மனிதர்களிடம் ஒப்படைத்தார். தன்னுடைய திசைகாட்டிக் கருவிகளையும் நிலப்படங்களையும் தோள் பையில் போட்டுக்கொண்டு துணிச்சலான சாகசத்தை மேற்கொண்டார்.

ஆரம்ப நாட்களில் அவர்கள் குறிப்பிடும்படியான எந்த இடையூறையும் எதிர்கொள்ளவில்லை. கற்கள் நிறைந்த ஆற்றங்கரையை ஒட்டியே சென்று பல ஆண்டுகளுக்கு முன்பு போர்வீரனின் கவசத்தைக் கண்டுபிடித்த இடத்தை அடைந்தார்கள். அங்கிருந்து காட்டு ஆரஞ்சு மரங்களுக்கிடையிலான வழியில் நடந்து வனத்துக்குள் புகுந்தார்கள். முதல் வாரக் கடைசியில் ஒரு மானைக் கொன்று அதை வறுத்தார்கள்; பாதியை மட்டுமே உண்ணவும் மிச்சத்தை வரவிருக்கும் நாட்களுக்காக உப்புக் கண்டம் போட்டு வைக்கவும் இசைந்தார்கள். அந்த முன்னெச்சரிக்கையால் நீல நிற மாமிசமும் கடும் புனுகு ருசியுமுள்ள மக்காவ் கிளிகளைத் தின்னும் அவசியம் இல்லாமல் போனது. அதன் பின்பு பத்து நாட்களுக்கு மேலாக அவர்கள் மறுபடியும் சூரியனையே பார்க்கவில்லை. தரை எரிமலைச் சாம்பல் போல

மிருதுவாகவும் ஈரமாகவும் இருந்தது. தாவரங்கள் அடர்த்தி அடர்த்தியாக இருந்தன. பறவைகளின் கூச்சலும் குரங்குகளின் இரைச்சலும் மேலும் மேலும் தூரமாகக் கேட்டன. உலகம் நிரந்தரச் சோகமானதாக ஆகியிருந்தது. ஈரமும் மௌனமும் நிரம்பிய அந்தச் சொர்க்கத்துக் குள்ளே பயணம் செய்து கொண்டிருந்த மனிதர்கள் தங்களது மிகப் புராதனமான நினைவுகளால் திணறிக்கொண்டிருந்தார்கள். அவர் களுடைய காலணிகள் ஊற்றெடுக்கும் எண்ணெய்க் குளத்தில் மூழ்கிக் கொண்டும் வெட்டுக் கத்திகள் செவ்வல்லிப் பூக்களையும் பொன்னிற சலமாண்டர்களையும் துவம்சம் செய்துகொண்டுமிருக்க அவர்கள் ஆதி காலத்துக்கு முந்தைய காலத்துக்குப் போய்க்கொண்டிருந்தார்கள். ஒரு வார காலம் ஏறத்தாழ எதுவுமே பேசாமல், துயரார்ந்த பிரபஞ்சத்தினூடே தூக்கத்தில் நடப்பவர்களைப் போல, மின்மினிப் பூச்சிகளின் நுண்ணிய பிரதிபலிப்பில் முன்னேறிக்கொண்டிருந்தார்கள். அவர்களுடைய சுவாசப்பைகள் குமட்டும் ரத்த வாடையால் திணறிக் கொண்டிருந்தன. அவர்களால் வந்த வழியே திரும்ப முடியாது. ஏனெனில் அவர்கள் நடந்து வந்தபோது திறந்துவிட்ட தடம் புதிய தாவரங்களால் மூடப்பட்டிருக்கும். கிட்டத்தட்ட அவை அவர்கள் கண் முன்னாலேயே வளர்வதாகத் தோன்றின. “எல்லாம் சரிதான். நம்முடைய மனவுறுதியை இழந்துவிடக்கூடாது என்பதுதான் முக்கியம்” என்றார் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா. எப்போதும் திசைகாட்டி யைப் பின்தொடர்ந்து கண்ணுக்குப் புலனாகாத வடக்குத் திசையை நோக்கியே அவர்களை வழிநடத்திச் சென்றுகொண்டிருந்தார். அதன் மூலம் அவர்கள் அந்த வசியப் பிரதேசத்திலிருந்து வெளியேற முடியும்.

அது ஓர் அடர்ந்த இரவு. நட்சத்திரங்கள் இல்லாத இரவு. ஆனால் புதியதும் தூய்மையானதுமான காற்றால் அந்த இருட்டு நிறைந் திருந்தது. நீண்ட பயணத்தால் சோர்ந்துபோன அவர்கள் தங்களுடைய கித்தான் தொட்டில்களைத் தொங்கவிட்டு அந்த இரண்டு வாரங்களில் முதல் முறையாக ஆழ்ந்து உறங்கினார்கள். அவர்கள் விழித்தெழுந்த போது சூரியன் ஏற்கனவே உச்சிக்கு வந்திருந்தது. அவர்கள் வியப்பால் பேச்சிழந்தார்கள். அவர்களுக்கு முன்னால் பெரணிச் செடிகளும் பனைமரங்களும் சூழ்ந்திருக்க வெண்மையும் துகள் அலைவதுமான அமைதியான காலை ஒளியில் ஒரு பிரம்மாண்டமான ஸ்பானியக் கப்பல் இருந்தது. அது சற்றே வலதுபுறமாகச் சாய்ந்திருந்தது. கொடிமரம் சேதமில்லாமலிருந்தது. பாய்க் கயிறுகளின் தொகுதிக்கு மத்தியில் பூக்களால் அலங்கரிக்கப்பட்ட அதில் பயணங்களில் அழுக்கேறிக் கிழிந்த பாய்கள் இருந்தன. கப்பலின் உடற்பகுதி சிப்பிகள், மென் பாசி ஆகியவற்றின் கவசத்தால் மூடப்பட்டிருந்தது. கற்கள் நிறைந்த பரப்பின்மேல் ஊன்றியிருந்தது. அதன் மொத்தக் கட்டுமானமும் தனிமையானதும் புறக்கணிக்கப்பட்டதுமான இடத்தை, காலத்தின் சூழ்ச்சியிலிருந்தும் பறவைகளின் புழக்கங்களிலிருந்தும் பாதுகாக்கப்பட்ட இடத்தை ஆக்கிரமித்துக்கொண்டது போலத் தோன்றியது. சாகசப் பயணிகள் அதற்குள்ளே ஏறி எச்சரிக்கையுணர்வுடன் பார்த்தபோது காடு போல அடர்ந்த பூக்களைத் தவிர எதுவுமில்லை.

கப்பல் கண்டுபிடிக்கப்பட்டது, கடல் அருகில் இருக்கிறது என்பதற்கான அறிகுறி என்பது ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவின் உற்சாகத்தை முறித்தது. எண்ணற்ற தியாகங்கள் செய்து துன்பங்களைப் பொறுத்துத் தேடியபோது காண முடியாமலிருந்த கடல் திடீரென்று தேடாதபோது முன்னால் தெரிவது, அதுவும் தன்னுடைய வழியில் தாண்ட முடியாத தடையாக இருப்பது தன்னுடைய மனத்தைத் திருப்பும் விதியின் தந்திரம் என்றே எண்ணினார். நீண்ட வருடங்களுக்குப் பின்னர் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா மீண்டும் அந்தப் பிரதேசத்தைக் கடந்தபோது, அது அதற்குள்ளாகவே வாடிக்கையான தபால் மார்க்கமாகியிருந்தது. கஞ்சா வயல்களுக்கு மத்தியில் கப்பலின் எரிந்துபோன சட்டத்தை மட்டுமே பார்க்க முடிந்தது. அப்போதுதான் அந்தக் கதை அப்பாவின் கற்பனைச் சரக்கு அல்ல என்று நம்பினார். கப்பல் எப்படி அந்த இடத்தில் உள் நுழைய முடிந்தது என்று வியந்தார். கப்பலைப் பார்த்த நான்கு நாட்கள் பயணத்துக்குப் பிறகு கடலைக் கண்டார். வெளிறி, நுரை பொங்கி, அசுத்தமாக இருந்த இந்தக் கடலுக்கு அந்த சாகசப் பயணத்தின் ஆபத்தும் தியாகங்களும் தகுதியானவையல்ல என்று அவருடைய கனவுகள் முடிந்தன.

"நாசமாய்ப் போக. மகோந்தா எல்லாப் பக்கங்களிலும் தண்ணீரால் சூழப்பட்டிருக்கிறது" என்று உரக்க அலறினார்.

பயணம் முடித்து வந்ததும் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா வரைந்த தாறுமாறான வரைபடத்தால் தூண்டப்பட்டு மகோந்தா ஒரு தீபகற்பம் என்ற எண்ணமே நீண்ட காலமாக இருந்து வந்தது. அந்த இடத்தை முழு அறிவீனத்துடன் தேர்வு செய்ததற்குத் தனக்கே விதித்துக்கொள்ளும் தண்டனையாக அவர் அந்த வரைபடத்தை ஆத்திரத்துடனும் பேய்த்தனமாகவும் தொடர்புகொள்வதிலுள்ள சிக்கல்களை மிகைப்படுத்திக் காட்டியும் வரைந்திருந்தார். "நாம் ஒருபோதும் வேறு எங்கேயும் போய்ச் சேரப்போவதில்லை" என்று உர்சுலாவிடம் புலம்பினார். "அறிவியலின் பயன்களைப் பெறாமல் நாம் இங்கேயே கிடந்து வாழ்க்கையை நாசமாக்கப்போகிறோம்." இந்த யோசனையுடனேயே ஆய்வுக்கூடமாகப் பயன்படுத்திக் கொண்டிருந்த சின்ன அறையில் செலவழித்த பல மாதங்களில் மகோந்தாவை வேறொரு நல்ல இடத்துக்கு மாற்றும் திட்டம் அவருக்கு வந்தது. ஆனால் அந்தச் சமயத்தில் அவருடைய பைத்தியக்கார யோசனைகளை முன்கூட்டியே உர்சுலா உணர்ந்திருந்தாள். ஓர் எறும்பின் ரகசியத்துடனும் மசியவைக்க முடியாத உழைப்புடனும் கிராமத்துப் பெண்களை, ஏற்கனவே வெளியேற ஆயத்தமாக இருந்த அவர்களது கணவர்களின் அறிவுத் தடுமாற்றத்துக்கு எதிராகத் திரட்டினாள். எந்தக் கணத்தில் அல்லது எந்த எதிர்ச் சக்திகளால் தன்னுடைய திட்டம், ஏமாற்றங்களாலும் நழுவல்களாலுமான வலையால் மூடப்பட்டு மாயையாக மாறியது என்று ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவுக்குத் தெரியவில்லை. வெகுளித்தனமான அக்கறையுடன் உர்சுலா அவரைக் கண்காணித்தாள். பின்கட்டு அறையில் தன்னுடைய இட

மாற்றத் திட்டங்கள் பற்றி முணுமுணுத்துக் கொண்டே ஆய்வுக்கூடத் தளவாடங்களை அவற்றின் அசல் பெட்டிகளில் வைத்துக்கொண்டிருந்ததைப் பார்த்த அந்தக் காலையில் அவர் மீது சற்றே இரக்கப் படவும் செய்தாள். அவர் அதை முடிக்கட்டும் என்று விட்டாள். பெட்டிகள் மேல் ஆணியடித்து மை தோய்த்த தூரிகையால் தன்னுடைய முதல் எழுத்துகளை எழுத விட்டாள். கிராமத்து ஆண்கள் தன்னுடைய திட்டத்துக்கு ஒத்துழைக்கமாட்டார்கள் என்று அவர் தெரிந்துகொண்டார் (ஏனெனில், மெல்லிய குரலில் அவர் தனக்குத் தானே அப்படிச் சொல்லிக் கொள்வதை அவள் கேட்டிருந்தாள்) என்பதைத் தெரிந்து கொண்டிருந்ததனால் அவரைக் கடிந்துகொள்ளாமலிருந்தாள். அறையின் கதவைப் பெயர்த்து எடுக்கத் தொடங்கியபோது மட்டுமே அவர் என்ன செய்கிறார் என்று கேட்க உர்சுலாவுக்குத் துணிச்சல் வந்தது. ஒருவகையான கசப்புணர்வுடன் "யாரும் போக விரும்பவில்லையென்றால் நாமாவது போவோம்" என்று பதில் சொன்னார்.

"நாமும் போவதில்லை" என்றாள் அவள். "நாம் இங்கேயேதான் இருப்போம். ஏனென்றால் நாம் ஒரு பிள்ளையைப் பெற்றது இங்கேதான்."

"நாம் இதுவரை ஒரு சாவைப் பார்த்ததில்லை" என்றார். "யாராவது செத்து மண்ணுக்குள் போகாமல் ஒருவன் அந்த இடத்தைச் சேர்ந்தவன் ஆவதில்லை."

உர்சுலா மென்மையான உறுதியுடன் பதில் சொன்னாள் "நீங்கள் எல்லாம் இங்கேயே இருப்பதற்காக நான் சாக வேண்டுமென்றால் சாகத் தயார்."

மனைவியின் மனவுறுதி அத்தனை திடமாக இருக்குமென்று ஹோசே அர்க்காதியோ புயேந்தியா எண்ணியிருக்கவில்லை. தன்னுடைய விநோதக் கற்பனைகளாலும் ஏதோ மந்திர நீரை மட்டும் மண்ணில் தெளித்தவுடனே செடிகள் கனி கொடுக்கும் விந்தையான உலகத்தைப் பற்றியும் அங்கே வலிகளை நீக்கும் எல்லா விதமான கருவிகளும் ஆதாயமான விலையில் விற்கப்படுவதைப் பற்றியுமான வாக்குறுதியளித்தும் அவளை வசீகரிக்க முயன்றார். ஆனால் அவருடைய தந்திரத்துக்கு உர்சுலா மசியவில்லை.

"உங்களுடைய கிறுக்குத்தனமான கண்டுபிடிப்புகளைப் பற்றி யோசித்துக்கொண்டேயிருப்பதைவிட உங்கள் பிள்ளைகளைப் பற்றிக் கவலைப்படுங்கள்" என்று பதில் சொன்னாள். "அவர்கள் எப்படி இருக்கிறார்கள் என்பதைப் பாருங்கள், கழுதைகளைப் போலத் திரிந்து கொண்டிருக்கிறார்கள்."

ஹோசே அர்க்காதியோ புயேந்தியா மனைவியின் வார்த்தைகளை அப்படியே ஒப்புக்கொண்டார். ஜன்னல் வழியாக வெளியே எட்டிப் பார்த்தார். வெயில் காயும் தோட்டத்தில் பிள்ளைகள் வெறுங்காலுடன் இருப்பதைப் பார்த்தார். உர்சுலாவின் உச்சாடனத்தில் கருத்தரித்து அந்தக் கணத்தில்தான் அவர்கள் பிறந்ததுபோல அவருக்குத் தோன்றியது. அப்போது அவருக்குள்ளே என்னவோ நிகழ்ந்தது. புதிரானதும்

திட்டவட்டமானதுமான ஏதோ ஒன்று அவரை அவருடைய காலத்திலிருந்து பறித்து அவருடைய அறியப்படாத ஞாபகப் பிரதேசத்தினூடே மிதக்கவிட்டது. அவளுடைய எஞ்சிய வாழ்நாளில் கைவிடப்படாமலிருக்கப் போகும் இப்போது பத்திரமாக இருக்கும் வீட்டைப் பெருக்குவதை உர்சுலா தொடர்ந்தபோது ஆழ்ந்த பார்வையுடன் கண்கள் ஈரமாகும் வரை பிள்ளைகளைப் பற்றி யோசித்து நின்றார். ஆசுவாசமான ஆழ்ந்த பெருமூச்சை விட்டுக்கொண்டே புறங்கையால் கண்களைத் துடைத்தார்.

"நல்லது, அவர்களை வந்து பெட்டிகளிலிருந்து சாமான்களை வெளியே எடுத்து வைக்க எனக்கு உதவி செய்யும்படி சொல்லு" என்றார்.

பிள்ளைகளில் மூத்தவனான ஹோராசே அர்க்காதியோவுக்குப் பதினான்கு வயது ஆகியிருந்தது. சதுரத் தலையும் அடர்த்தியான முடியும் தகப்பனின் குணங்களும் கொண்டிருந்தான். வயதுக்கு ஏற்ற வளர்ச்சியும் உடல் வலுவும் இருந்தாலும் கற்பனை ஆற்றலில் பின்தங்கியிருந்தான் என்பது ஆரம்பத்திலேயே தெரிந்திருந்தது. மகோந்தாவைக் கண்டுபிடிப்பதற்கு முன்பு சிரமத்துடன் மலைகளைக் கடந்து வந்துகொண்டிருந்த சமயத்தில் கருத்தரித்துப் பிறந்தவன். பிறந்ததும் அவனுக்கு விலங்குகளின் அம்சங்கள் எதுவுமில்லை என்று கண்ட அவர்கள் கடவுளுக்கு நன்றி சொன்னார்கள். மகோந்தாவில் பிறந்த முதலாவது மனித உயிரான அவுரேலியானோவுக்கு மார்ச் மாதத்தில் ஆறு வயது ஆகும். அவன் அமைதியானவன். ஒதுங்கியிருப்பவன். தாயின் கருப்பையிலிருக்கும்போதே அழுததால் கண்களைத் திறந்துகொண்டே பிறந்தான். தொப்புள்கொடியை அறுத்தபோது தலையை இங்கும் அங்குமாக அசைத்துப் பயமில்லாமல் குறுகுறுப்புடன் அறைக்குள்ளிருந்த பொருட்களைக் கவனித்துக்கொண்டும் மனிதர்களின் முகங்களை ஆராய்ந்துகொண்டுமிருந்தான். பின்னர் அவனைப் பார்க்க வந்தவர்கள் அருகில் வந்தபோது அவர்களைப் பார்க்காமல், பெரும் மழையின் பாரத்தால் பனை ஓலைக் கூரை சரிந்துவிடுமென்பது போல அதன்மீதே கவனத்தைக் குவித்திருந்தான். மூன்று வயதாக இருக்கும்போது ஒருநாள் குட்டி அவுரேலியானோ சமையலறைக்குள் புகுந்தான். உர்சுலா அடுப்பிலிருந்து இறக்கிய கொதிக்கும் சூப் பாத்திரத்தை மேஜைமேல் வைக்கும்வரை அவனுடைய அந்த நோட்டத்தின் தீவிரம் அவளுக்கு நினைவுக்கு வரவில்லை. பதறிப்போன சிறுவன் வாசலிலிருந்து சொன்னான். "அது கொட்டப் போகிறது." பாத்திரம் மேஜையின் மையத்தில் திடமாக வைக்கப்பட்டிருந்தது. ஆனால் குழந்தை அவனுடைய அறிவிப்பைச் சொன்னதும் அது பிசகில்லாமல் மேஜையின் விளிம்பை நோக்கி நகர ஆரம்பித்தது. ஏதோ உள் இயக்கத்தால் உந்தப்பட்டது போல அது தரையில் விழுந்து நொறுங்கியது. உர்சுலா அதிர்ந்துபோய் இந்தக் கதையைக் கணவரிடம் சொன்னாள். ஆனால் அவர் அதை ஒரு இயற்கையான சம்பவம் என்றுதான் வியாக்கியானம் செய்தார். அவர் எப்போதும் அப்படித்தான். பிள்ளைகளின் வாழ்க்கைக்கு அந்நியமானவராகவே இருந்தார். குழந்தைப்

பருவம் மனரீதியாகப் பற்றாக்குறை கொண்ட பருவம் என்று அவர் எண்ணியது ஒரு பகுதி என்றால் எப்போதும் தன்னுடைய விசித்திர ஊகங்களிலேயே மிக அதிகமாக ஆழ்ந்திருந்தது இன்னொரு பகுதி.

ஆனால் ஆய்வுக்கூடச் சாமான்களைப் பிரித்து எடுப்பதில் உதவப் பிள்ளைகளை அழைத்த அந்தப் பிற்பகல் முதல் தன்னுடைய மிகச் சிறந்த பொழுதுகளை அவர்களுக்குக் கொடுத்தார். விசித்திரமான நிலப்படங்களும் கதைச் சித்திரங்களும் படிப்படியாக ஒட்டி நிரப்பப் பட்ட சுவர்களைக் கொண்ட சிறிய தனி அறையில் அவர்களுக்குப் படிக்கவும் எழுதவும் கணக்குப் போடவும் கற்றுக்கொடுத்தார். உலகின் அதிசயங்களைப் பற்றிப் பேசினார். அவருடைய விரிந்த அறிவின் எல்லைவரை மட்டுமல்லாமல் கற்பனையின் அதீத விளிம்புவரை அந்தப் படிப்பு நீண்டது. ஆப்பிரிக்காவின் தென்கோடியில் இருந்த மனிதர்கள் மிகவும் அறிவாளிகள்; அமைதியானவர்கள் என்றும் அவர்களுடைய ஒரே பொழுதுபோக்கு உட்கார்ந்து சிந்திப்பது என்றும் ஒரு தீவிலிருந்து இன்னொரு தீவுக்குத் தாவியே ஏஜியன் கடலைக் கடந்து சலோனிகா துறைமுகத்தை அடைய முடியும் என்றும் பையன்கள் புரிந்துகொண்டது இப்படித்தான். மாயக் காட்சிகளை உருவாக்கிய அந்தப் பாடவேளைகள் பையன்களின் நினைவுகளில் அச்சாகப் பதிந்தன. பல ஆண்டுகளுக்குப் பின்பு துப்பாக்கிப் படையிடம் சுடுமாறு ராணுவ அதிகாரி ஆணையிடுவதற்கு ஒரு நொடி முன்பு கர்னல் அவுரேலியானோ புயேந்தியா தன்னுடைய தந்தை அந்த மார்ச் மாதப் பிற்பகலில் பௌதிகப் பாடத்தை விளக்கிச் சொன்னதில் கவரப்பட்டுக் கைகள் அந்தரத்திலும் கண்கள் நிலைகுத்தியும் தான் நின்றதை நினைத்துக்கொண்டார். மெம்பிஸ் துறவிகளின் சமீபத்தியதும் மிகவும் வியப்பதிர்ச்சி தருவதுமான கண்டுபிடிப்புகள் பற்றி அறிவித்துக்கொண்டு மீண்டும் ஒருமுறை கிராமத்துக்கு வந்துகொண் டிருந்த நாடோடிகளின் தூரத்தில் ஒலித்த குழல்களையும் மத்தளங் களையும் மணியோசையையும் கேட்டதையும் நினைத்துக்கொண்டார்.

அந்த நாடோடிகள் புதியவர்கள். அந்த நாடோடி இளைஞர் களுக்கும் இளம் பெண்களுக்கும் சொந்த மொழி மட்டுமே தெரிந் திருந்தது. எண்ணெய்ப் பசையுள்ள சருமமும் துறுதுறுப்பான கைகளும் கொண்டவர்கள். அவர்களுடைய ஆட்டமும் பாட்டும் தெருக்களில் ஆரவார மகிழ்ச்சியின் கலவரத்தை விதைத்தன. எல்லா நிறங்களையும் சிறகுகளில் கொண்ட இத்தாலியப் பாடல்களைப் பாடும் கிளிகள், ஆப்பிரிக்கக் கஞ்சிராவின் லயத்துக்கு நூறு பொன் முட்டையிடும் கோழி, மனங்களை வாசிக்கப் பயிற்றுவிக்கப்பட்ட குரங்கு, பொத்தானைத் தைக்கும் அதே சமயம் ஜுரத்தைக் குறைக்கவும் செய்யும் பலநோக்கு இயந்திரம், ஒருவருக்கு அவருடைய மோசமான ஞாபகங்களை மறக்கச் செய்யும் உபகரணம், காலத்தை மறைந்துபோகச் செய்யும் பத்துக் கட்டு முதலான சாதுரியமும் அசாதாரணமுமான ஆயிரக்கணக்கான கண்டுபிடிப்புகள். இந்தக் கண்டுபிடிப்புகள் எல்லாவற்றையும் நினைவில் வைத்துக்கொள்ள உதவும் ஞாபக இயந்திரத்தைக் கண்டுபிடித்திருக்க லாம் என்று அவர் ஆசைப்பட்டிருக்க வேண்டும். நொடியிடையில்

அவர்கள் கிராமத்தையே உருமாற்றினார்கள். மகோந்தாவாசிகள் அந்தக் கோலாகலத் திரளில் குழம்பித் தங்கள் தெருக்களிலேயே காணாமல் போனார்கள்.

சந்தடியில் தொலைந்து போய்விடாமலிருக்க ஒவ்வொரு கையிலும் ஒரு குழந்தையைப் பிடித்துக்கொண்டு, தங்க முலாம் பூசிய பற்களும் ஆறு கைகளும் கொண்ட கழைக் கூத்தாடிகளை இடித்தபடியும் கூட்டம் வெளியே விட்ட கழிவு நெடியும் மிதியடிகளின் நாற்றமும் கலந்த காற்றால் மூச்சுத் திணறியும் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா பைத்தியக்காரனைப் போல ஒவ்வோர் இடமாக மெல்குயாதெஸைத் தேடினார். அந்தப் புகழ்பெற்ற கொடுங்கனவின் முடிவில்லாத ரகசியங்களை அவனிடம் வெளிப்படுத்த முடியும். நாடோடிகள் பலரிடமும் விசாரித்தார். அவர்களுக்கு அவருடைய மொழி புரியவில்லை. கடைசியாக மெல்குயாதெஸ் வழக்கமாகக் கூடாரம் அமைக்கும் இடத்துக்கு வந்து சேர்ந்தார். அங்கே அதிகம் பேசாத ஓர் ஆர்மீனியன், ஆட்களைக் கண்ணுக்குத் தெரியாதவர்களாக மாற்றும் சாற்றை விற்றுக்கொண்டிருந்தான். ஒரு கண்ணாடிக் குவளை செந்நிறப் பாகையும் ஒரே மிடறில் குடித்துவிட்டு அவன் நிகழ்த்தவிருக்கும் அற்புதத்தைப் பார்ப்பதில் ஈர்க்கப்பட்டிருந்த கூட்டத்தை விலக்கிச் சென்று ஹோசே அர்க்காதியோ புயேந்தியா அவனிடம் தன்னுடைய கேள்வியைக் கேட்க முடிந்தது. கொள்ளைநோய்ச் சேறாகவோ புகைக் களமாகவோ மாறும் தன்னுடைய தோற்றத்தின் பீதியூட்டும் சூழ்நிலையை அவரைச் சுற்றியும் படரவிடும் முன்பு அந்த நாடோடி சொன்ன பதிலின் எதிரொலி இன்னும் மிதந்துகொண்டிருந்தது. “மெல்குயாதெஸ் செத்துப் போனான்.” செய்தியால் நிலைகுலைந்து அசைவற்று நின்றார். சிக்கனப் பேச்சின் சேற்றுக்குள் நாடோடி முழுவதுமாகக் கரைந்து போனதால் பிற கண்டுபிடிப்புச் சாதனங்களால் கவரப்பட்டுக் கூட்டம் கலைந்து செல்லும் வரையும் தன்னுடைய வேதனையிலிருந்து எழ முயன்று கொண்டிருந்தார். உண்மையில் மெல்குயாதெஸ் சிங்கப்பூர் கடற்கரையில் நோய்க்குள்ளாகி இறந்ததையும் அவனுடைய உடல் ஜாவாக் கடலின் ஆழப் பகுதியில் எறியப்பட்டதையும் மற்ற நாடோடிகள் பிறகு உறுதிசெய்தார்கள். பிள்ளைகளுக்கு அந்தச் செய்தியில் ஆர்வமிருக்கவில்லை. கூடாரத்தின் வாசலில் வைக்கப்பட்டிருந்த விளம்பரத்தில் சாலமனுக்குச் சொந்தமானது என்று கூறப்பட்ட மெம்பிஸ் துறவிகளின் புதுமைகளைப் பார்க்கக் கூட்டிச்செல்லும்படி தங்கள் தகப்பனை வற்புறுத்திக்கொண்டிருந்தார்கள். அவர்கள் அவ்வளவு வற்புறுத்தியதால் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா முப்பது நாணயங்கள் கொடுத்து, உடல் முழுவதும் ரோமமும் மழிக்கப்பட்ட தலையும் கொண்ட ராட்சத உருவம் இருந்த கூடாரத்தின் மையத்துக்கு அழைத்துச் சென்றார். அந்த உருவம் மூக்கில் ஒரு செப்பு வளையம் அணிந்திருந்தது; கணுக்காலைச் சுற்றிக் கனத்த இரும்புச் சங்கிலி மாட்டியிருந்தது; ஒரு பெட்டியைக் காவல் காத்துக்கொண்டிருந்தது. ராட்சத உருவத்தால் திறக்கப்பட்டபோது பெட்டி பனிப் புகையை வெளியேற்றியது. உள்ளே ஒரு பெரிய, ஒளி ஊடுருவும் பாளம் மட்டுமே இருந்தது. அஸ்தமனச் சூரிய வெளிச்சத்தின் எண்ணற்ற ஊசிகள் அதில்

புகுந்து பல வண்ண நட்சத்திரங்களாகச் சிதறின. அதைப் பற்றி உடனடியான விளக்கத்துக்குப் பிள்ளைகள் காத்துக்கொண்டிருக்கிறார்கள் என்று தெரிந்துகொண்டதில் குழம்பிய ஹோசே அர்க்காதியோ புயேந்தியா முணுமுணுத்தார்.

"இதுதான் இந்த உலகத்திலேயே மிகப் பெரிய வைரம்."

"இல்லை" என்று அந்த நாடோடி மறுத்தான். "இது பனிக்கட்டி."

ஹோசே அர்க்காதியோ புயேந்தியா புரியாமலேயே தன்னுடைய கையை அந்தப் பாளத்தை நோக்கி நீட்டினார். ஆனால் அந்த ராட்சதன் கையைத் தட்டிவிட்டான். "அதைத் தொட இன்னும் ஐந்து நாணயங்கள் தர வேண்டும்" என்றான். ஹோசே அர்க்காதியோ புயேந்தியா அவர்களிடம் பணத்தைக் கொடுத்துவிட்டுப் பனிக்கட்டியின் மேல் கையை வைத்தார். அந்த மர்மத்திடம் தொடர்பு ஏற்பட்ட குதூகலத்துடனும் பயத்துடனும் பல நிமிடங்கள் கையை அங்கேயே அப்படியே வைத்திருந்தார். என்ன சொல்வது என்று விளங்காமல் அந்த அதி அற்புதமான அனுபவத்தைப் பிள்ளைகளும் பெறட்டும் என்று மேலும் பத்து நாணயங்களைக் கொடுத்தார். சின்னவன் ஹோசே அர்க்காதியோ அதைத் தொட மறுத்தான். மாறாக, அவுரேலியானோ ஒரு எட்டு முன்னால் வந்து அதன் மேல் கையை வைத்துச் சட்டென்று இழுத்துக்கொண்டான். "அது கொதித்துக்கொண்டிருக்கிறது" என்று வியந்தான்; திடுக்குற்றான். ஆனால் தகப்பன் அதையெல்லாம் கவனிக்கவில்லை. அந்த அற்புதத்தின் வெளிப்பாட்டால் வசியத்துக்குள்ளான அவர் அந்த நொடியில் தன்னுடைய தோல்வியடைந்த திட்டங்களையும் சிப்பி மீன்களின் பசிக்கு இரையாக வீசப்பட்ட மெல்குயாதெஸின் உடலையும் மறந்தார். இன்னும் ஐந்து நாணயங்களைக் கொடுத்து அதன் மேல் கையை வைத்துப் புனித நூலைத் தொட்டுச் சாட்சியம் சொல்வதுபோலப் பெருவியப்புடன் சொன்னார்:

"இதுதான் நம்முடைய காலத்தின் மகத்தான கண்டுபிடிப்பு."

கடற்கொள்ளையனான சர் பிரான்சிஸ் டிரேக், பதினாறாம் நூற்றாண்டில் ரியோஹாச்சாவைத் தாக்கியபோது உர்சுலா இகுவரானின் முப்பாட்டி, எச்சரிக்கை மணிகளின் அலறலையும் பீரங்கிகளின் வெடிமுழக்கங்களையும் கேட்டு மிகவும் பீதியடைந்து சமநிலை இழந்து எரிந்துகொண்டிருந்த அடுப்பின் மேல் உட்கார்ந்துவிட்டாள். அந்தக் காயங்கள் வாழ்நாள் முழுவதும் அவளைப் பயனில்லாத மனைவியாக மாற்றின. அவளால் தலையணைகளை அண்டக் கொடுத்து ஒருக்களித்து மட்டுமே உட்கார முடிந்தது. அவளுடைய நடையிலும் மாற்றம் ஏற்பட்டதால் ஒருபோதும் பொது இடங்களில் நடக்கவுமில்லை. தன்னுடைய உடம்பிலிருந்து தீய்ந்த வாடை வெளிவருகிறது என்ற எண்ணம் அவளை அலைக்கழித்தது. எனவே எல்லாவிதமான சமூக நடவடிக்கைகளையும் விட்டாள். ஆங்கிலேயர்களும் வெறிபிடித்துத் தாக்கும் அவர்களுடைய நாய்களும் தன்னுடைய படுக்கையறை ஜன்னல் வழியாக உள்ளே நுழைந்து அவர்களுடைய விறைத்துச் சிவந்த குறிகளால் தன்னை மானபங்கப்படுத்திச் சித்திரவதை செய்வார்கள் என்று கனவு காண்பதால் உறங்கவும் பயந்தாள். அதனால் விடியற்காலை வரையும் அவளை வீட்டு முற்றத்தில் பார்க்கலாம். அவளுடைய கணவன் அரகானிய இனத்தைச் சேர்ந்த வியாபாரி. அவர் மூலம் அவள் இரண்டு குழந்தைகளைப் பெற்றாள். தன்னுடைய கடையின் வருமானத்தில் பாதியை மருந்துகளுக்காகவும் அவளுடைய அச்சத்தைத் தணிக்கும் கேளிக்கைகளுக்காகவும் செலவழித்தார். முடிவாக தன்னுடைய கடையையே விற்றார். கடலுக்கு வெகுதூரத்தில் மலையடிவாரத்தில் அமைதியான இந்தியர்கள் குடியிருக்கும் இடத்தில் வசிக்கத் தன்னுடைய குடும்பத்தைக் கொண்டுபோனார். அங்கே மனைவிக்காக, ஜன்னல்களே இல்லாத ஒரு படுக்கையறையை – அதனால் அவளுடைய கனவுகளில் வரும் கடற்கொள்ளைக்காரர்கள் நுழைய முடியாது – கட்டினார்.

அந்த மறைவான கிராமத்தில் கொஞ்ச காலமாக வாழ்ந்து வந்த பூர்வ குடியைச் சேர்ந்த புகையிலை விவசாயியான டான்* ஹோரசே அர்க்காதியோ புயேந்தியாவுடன் உர்சுலாவின் முதுமுப்பாட்டன் பங்காளியானார். அது ஆதாயகரமானதாக

* டான் – ஸ்பானிய மொழியில் பெருமகன்; திருவாளா

இருந்ததில் சில ஆண்டுகளுக்குள்ளாகவே பெரும் செல்வத்தை ஈட்டினார்கள். பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு அந்தப் பூர்வகுடி விவசாயியின் கொள்ளுப் பேரனும் அரகானியரின் கொள்ளுப் பேத்தியும் திருமணம் செய்துகொண்டார்கள். ஆகவே, தன்னுடைய கணவரின் பைத்தியக்கார யோசனைகளால் எரிச்சலடையும் ஒவ்வொரு முறையும் உர்சுலா முந்நூறு ஆண்டுகளுக்குப் பின்னால் போய், சர் பிரான்சிஸ், டிரேக் ரியோஹாச்சாவை ஆக்கிரமித்த அந்த நாளைச் சபிப்பாள். அது தனக்குத்தானே ஆறுதல் அளித்துக்கொள்ளும் அவளுடைய சுலபமான வழி. ஏனெனில் காதலை விடவும் திடமான ஒரு பொது மன உறுத்தலால்தான் அவர்கள் மரணம் வரைக்கும் பிணைக்கப்பட்டிருந்தார்கள். இருவரும் உறவினர்கள். இருவரின் மூதாதையர்களும் தமது உழைப்பாலும் நற்குணங்களாலும் அந்தப் பிரதேசத்திலேயே அருமையான நகரங்களில் ஒன்றாக மாற்றிய அந்தக் கிராமத்தில் ஒன்றாக வளர்ந்தவர்கள். அவர்களுடைய திருமணம் அவர்கள் பிறந்தபோதே முன்தீர்மானிக்கப்பட்டிருந்தாலும் அவர்களாகத் திருமணம் செய்துகொள்ளும் தங்களது ஆசையை வெளிப்படுத்தியபோது அவர்களுடைய உறவினர்களே அதை நிறுத்த முயன்றார்கள். நூற்றாண்டுகளாக மண உறவால் இனக் கலப்பு நிகழ்ந்திருக்கும் இரண்டு இனங்களைச் சேர்ந்த ஆரோக்கியமான வாரிசுகள் உடும்புகளைப் பெற்றெடுக்கும் வெட்கக்கேட்டுக்கு ஆளாகி விடலாம் என்று பயந்தார்கள். ஏற்கனவே அதற்குக் கோரமான முன்னுதாரணம் இருந்தது. உர்சுலாவின் அத்தை ஒருத்தி ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவின் மாமா ஒருவருக்குத் திருமணம் செய்யப் பட்டிருந்தாள். அவர்களுக்குப் பிறந்த பிள்ளை நாற்பத்திரண்டு வயது வரை தளர்ந்த தொய்வான கால்சட்டை அணிந்து கன்னித் தன்மையைக் காப்பாற்றிக்கொண்டிருந்து ரத்தம் சிந்தி இறந்தான். அவன் பிறக்கும்போதே தக்கைத்திருகி வடிவமும் முனையில் ரோமங்களுமுள்ள குருத்தெலும்பு வாலுடன் பிறந்திருந்தான். அந்தப் பன்றி வாலைப் பார்க்க எந்தப் பெண்ணையும் அனுமதிக்கவில்லை. கசாப்புக்கார நண்பன் ஒருவன் இறைச்சி வெட்டும் கத்தியால் அதை நறுக்கி எறிந்ததுதான் அவனுடைய உயிரையே போக்கியது. ஹோசே அர்க்காதியோ புயேந்தியா தன்னுடைய பத்தொன்பது வயதுச் சபலத்தால் ஒற்றை வாக்கியத்தில் அந்தப் பிரச்சினையைத் தீர்த்தார்: "பேச முடியுமென்றால் பன்றிக் குட்டிகள் பிறந்தாலும் எனக்குக் கவலை இல்லை." எனவே மூன்று நாட்கள் நீண்ட வாணவேடிக்கைத் திருவிழாவுக்கும் வாத்திய இசைக்கும் மத்தியில் அவர்கள் திருமணம் செய்துகொண்டார்கள். அவர்களுக்குப் பிறக்கப்போகும் வாரிசுகளைப் பற்றி உர்சுலாவின் தாய், துர்ப்புத்தியான நிமித்தங்களைச் சொல்லியும் மணவுறவு கொள்ள மறுக்கும்படி மகளுக்கு அறிவுரை சொல்லுமளவுக்குச் சென்று பயமுறுத்தாமலும் இருந்திருந்தால் அவர்கள் மகிழ்ச்சியாக இருந்திருப்பார்கள். கட்டுடல் கொண்டவனும் பிடிவாதக்காரனுமான கணவன், உறங்கும்போது தன்னை வன்கலவி செய்துவிடுவான் என்று அஞ்சிய உர்சுலா படுக்கைக்குப் போகும் முன்பு அம்மா தைத்துக் கொடுத்த பாய்மரத் துணியில் குறுக்கும் நெடுக்குமாகத்

தோல்பட்டைகள் வைத்து முன்பக்கம் கனத்த இரும்புப் பக்கிள் பொருத்திய கச்சாவான உள்ளாடையை அணிவாள். பல மாதங்கள் அவர்கள் அப்படித்தான் வாழ்ந்தார்கள். பகலில் அவர் தன்னுடைய சண்டைச் சேவல்களைப் பராமரிப்பார். அம்மாவுடன் சேர்ந்து அவள் எம்பிராய்டரி போட்டுக்கொண்டிருப்பாள். இரவில் பல மணி நேரங்களுக்கு உடல் நோகச் செய்யும் வன்முறையுடன் அவர்கள் சண்டையிடுவார்கள். அது கலவிக்கு மாற்றாகத் தோன்றும். இதில் ஏதோ கோளாறு இருப்பதாகப் பொதுமக்களின் உள்ளுணர்வு முகர்ந்தது; திருமணமாகி ஒரு வருடத்துக்குப் பிறகும் உர்சுலா கன்னியாகவே இருப்பது ஏனென்றால் அவளுடைய கணவனுக்கு ஆண்மையில்லை என்று வதந்தி பரவியது. அந்த வதந்தியைக் கேள்விப்பட்ட கடைசி ஆசாமியாக இருந்தார் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா.

"உர்சுலா, ஆட்கள் என்ன சொல்லிக்கொண்டு திரிகிறார்கள் என்று பார்" என்று மனைவியிடம் மிக அமைதியாகச் சொன்னார். "அவர்கள் பேசிவிட்டுப் போகட்டும்" என்றாள் அவள். "அது உண்மையல்ல என்று நமக்குத் தெரியுமே."

ஆக அந்தச் சூழ்நிலை அதே வழியில் அடுத்த ஆறு மாதங்களும் தொடர்ந்தது, ஹோசே அர்க்காதியோ புயேந்தியா சேவல் சண்டையில் புருடென்சியோ அகுய்லரை வென்ற அந்தத் துயரமான ஞாயிற்றுக் கிழமைவரை. தன்னுடைய சேவலின் ரத்தத்தைப் பார்த்து வெகுண்ட தோல்வியாளன் ஆடுகளத்தில் இருந்த எல்லாரும் தான் சொல்லப் போவதைக் கேட்க வேண்டும் என்பதற்காக ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவிடமிருந்து விலகி நின்றான்.

"வாழ்த்துகள்" என்று கத்தினான். "உன்னுடைய சேவல் உன் மனைவிக்கு ஒத்தாசை செய்யலாம்."

ஹோசே அர்க்காதியோ புயேந்தியா அமைதியாகத் தன்னுடைய சேவலைத் தூக்கிக்கொண்டார். "நான் திரும்பி வருவேன்" என்று எல்லாரிடமும் சொன்னார். பின்பு புருடென்சியோ அகுய்லரிடம் சொன்னார்.

"நீ வீட்டுக்குப் போய் ஆயுதத்தை எடுத்து வா. ஏனெனில் நான் உன்னைக் கொல்லப் போகிறேன்." பத்து நிமிடங்களுக்குப் பிறகு தாத்தாவுக்குச் சொந்தமாக இருந்த வெட்டு விழுந்த குத்தீட்டியுடன் திரும்பி வந்தார். பாதி நகரமே ஆடுகளத்தின் வாசலில் கூடியிருந்தது. புருடென்சியோ அகுய்லரும் அவனுக்காகக் காத்துக்கொண்டிருந்தான். தன்னைக் காப்பாற்றிக்கொள்ள அவனுக்குச் சமயம் இருக்கவில்லை. ஒரு எருதின் பலத்துடனும் முதலாம் அவுரேலியானோ புயெந்தியா அந்தப் பிரதேசத்திலிருந்த ஜாகுவார்களைக் கொல்லப் பார்த்தது போன்று குறி பார்த்தும் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா வீசிய ஈட்டி அவனுடைய குரல்வளையைத் துளைத்தது. அந்த இரவில் மற்றவர்கள் சடலத்தைக் காவல் காத்துக்கொண்டிருந்தபோது ஹோசே அர்க்காதியோ புயேந்தியா படுக்கையறைக்குள் புகுந்தார். அப்போது அவர் மனைவி கற்பு உடுப்பை அணிந்துகொண்டிருந்தாள்.

அவளுக்கு நேராக ஈட்டியை நீட்டிக்கொண்டு கட்டளையிட்டார். "அதைக் கழற்றி எறி." உர்சுலாவுக்குத் தன்னுடைய கணவனின் தீர்மானத்தைப் பற்றிச் சந்தேகமில்லை. "என்ன நடந்தாலும் நீங்கள்தான் அதற்குப் பொறுப்பு" என்று முணுமுணுத்தாள். ஹோசே அர்க்காதியோ புயேந்தியா குத்தீட்டியைப் புழுதித் தரையில் ஊன்றினார்.

"நீ உடும்புகளைத்தான் பெற்றுக்கொடுப்பாயென்றால் நாம் அவற்றை உடும்புகளாகவே வளர்ப்போம்" என்றார். "ஆனால் இந்த நகரத்தில் உன்னால் இனிமேலும் கொலைகள் நடக்கக் கூடாது."

அது குளிரும் நிலா வெளிச்சமுமிருந்த ஜூன் மாதத்து அருமையான இரவு. அவர்கள் விழித்திருந்தார்கள். விடியும் வரைக்கும் படுக்கையில் களியாட்டம் போட்டுக்கொண்டிருந்தார்கள். புருடென்சியோ அகுய்லரின் பிள்ளைகளின் அழுகுரலைச் சுமந்துகொண்டு படுக்கையறையைக் கடந்து போன தென்றலை அவர்கள் கவனிக்கவில்லை.

கௌரவத்துக்காக இருவரும் போட்டுக்கொண்ட சண்டை என்று சம்பவத்துக்கு முடிவு கட்டப்பட்டது. ஆனால் அவர்கள் இருவருடைய மனசாட்சியிலும் அது வலியைப் பறித்தது. ஒருநாள் இரவு, தூக்கம் பிடிக்காமலிருந்த உர்சுலா கொஞ்சம் தண்ணீர் எடுத்துவர முற்றத்துக்குப் போனாள். தண்ணீர்க் குவளைக்குப் பக்கத்தில் புருடென்சியோ அகுய்லர் நிற்பதைப் பார்த்தாள். வெளிறிப் போயிருந்தான். அவனுடைய முகத்தில் துக்க உணர்வு இருந்தது. தொண்டையிலிருந்த துளையை கோரைப் புற்களால் செய்த அடைப்பால் மூட முயன்றிருந்தான். அது அவளிடம் பயத்தை ஏற்படுத்தவில்லை; இரக்கத்தை ஏற்படுத்தியது. அவள் அறைக்குத் திரும்பிப் போய்த் தான் கண்டதைக் கணவனிடம் சொன்னாள். ஆனால் அவர் அதைப் பற்றி அதிகம் யோசிக்கவில்லை. "நம்முடைய மனசாட்சியின் சுமையை நம்மால் தாங்க முடியவில்லை என்றுதான் அர்த்தம்." இரண்டு இரவுகளுக்குப் பிறகு குளியலறையில் புருடென்சியோ அகுய்லர் தொண்டையிலிருந்து வழிந்து உறைந்த ரத்தத்தைக் கழுவ கோரைப்புல் அடைப்பானை உபயோகித்துக்கொண்டிருந்ததை உர்சுலா மறுபடியும் பார்த்தாள். இன்னொரு நாள் இரவு அவன் மழையில் உலாவிக்கொண்டிருந்ததைப் பார்த்தாள். மனைவியின் உருவெளித் தோற்றங்களால் எரிச்சலடைந்த ஹோசே அர்க்காதியோ புயேந்தியா குத்தீட்டியை எடுத்துக்கொண்டு முற்றத்துக்குப் போனார். அந்த இறந்த மனிதன் சோகத் தோற்றத்துடன் அங்கே நின்றிருந்தான்.

"போய்த் தொலை" ஹோசே அர்க்காதியோ புயேந்தியா அவனைப் பார்த்துக் கத்தினார். "நீ எத்தனை முறை திரும்பி வந்தாலும் அத்தனை முறையும் மறுபடியும் உன்னைக் கொல்லுவேன்." புருடென்சியோ அகுய்லர் போகவும் இல்லை. ஹோசே அர்க்காதியோ புயேந்தியா குத்தீட்டியை வீசத் துணியவுமில்லை. அதற்குப் பிறகு அவரால் சரியாக உறங்க முடியவில்லை. மழையினூடே தன்னையே பார்த்த அந்த இறந்த மனிதனின் ஆழ்ந்த தனிமையாலும் உயிரோடிருக்கும் மக்கள்மீதான அவனுடைய ஏக்கத்தாலும் தன்னுடைய கோரைப்புல்

அடைப்பை நனைப்பதற்காக வீடு முழுவதும் தண்ணீரைத் தேடிய அவனுடைய பதற்றத்தாலும் ஹோாசே அர்க்காதியோ புயேந்தியா வதைபட்டார். "அவன் மிகவும் துயரப்பட்டுக் கொண்டிருக்க வேண்டும்" என்று உர்சுலாவிடம் சொன்னார். "அவன் மிகவும் தனிமைப்பட்டிருக்கிறான் என்பதை நீயே பார்க்கலாம்." உர்சுலா மிகவும் நெகிழ்ந்து போனாள். அடுத்த முறை அந்த இறந்தவன் அடுப்பின் மேலிருந்த பானைகளைத் திறந்து பார்த்துக்கொண்டிருப்பதைக் கவனித்தவள் அவன் என்ன தேடுகிறான் என்று புரிந்துகொண்டிருந்தாள். அன்றிலிருந்து வீட்டைச் சுற்றி நீர்க் குவளைகளை வைத்தாள். ஓர் இரவு தன்னுடைய அறையில் அவன் காயங்களைக் கழுவிக்கொண்டிருப்பதைப் பார்த்த ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவால் அதற்கு மேலும் அடக்கிக்கொள்ள முடியவில்லை.

"நல்லது புருடென்சியோ" என்று அவனிடம் சொன்னார். "நாங்கள் இந்த நகரத்தை விட்டுப் போகிறோம். எங்களால் எவ்வளவு தூரம் போக முடியுமோ அவ்வளவு தூரம். ஒருபோதும் திரும்பி வரமாட்டோம்."

அப்படியாகத்தான் அவர்கள் மலைகளைக் கடக்க ஆரம்பித்தார்கள். ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவைப் போன்ற இளைஞர்களான நண்பர்கள் பலரும் இந்தச் சாகசத்தால் கிளர்ச்சியடைந்தார்கள். வீடுகளைப் பிரிந்து சாமான்களை மூட்டைக் கட்டிக்கொண்டு மனைவி மக்களுடன் யாரும் அவர்களுக்கு வாக்குறுதி அளித்திராத நிலத்தை நோக்கி முன்னேறினார்கள். புறப்படுவதற்கு முன்னால் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா அந்தக் குத்தீட்டியைக் குழிதோண்டிப் புதைத்தார். தன்னுடைய அருமையான சண்டைச் சேவல்களை ஒவ்வொன்றாகப் பிடித்துக் கழுத்தை அறுத்தார். அந்த வகையிலாவது புருடென்சியோ அகுய்லருக்குக் கொஞ்சமாவது அமைதியை அளிக்க முடியும் என்று நம்பினார். தன்னுடைய திருமண ஆடைகள் வைத்த டிரங்குப் பெட்டி, கொஞ்சம் வீட்டு உபயோகப் பாத்திரங்கள், அப்புறம் அவளுடைய தந்தையிடமிருந்து கிடைத்த பொன் நாணயங்கள் கொண்ட பேழை ஆகியவற்றை மட்டுமே உர்சுலா தன்னுடன் எடுத்திருந்தாள். தெளிவான பயணத் திட்டம் எதையும் அவர்கள் உருவாக்கியிருக்கவில்லை. எந்தத் தடயத்தையும் விட்டுவைக்காமலும் தெரிந்த எவரையும் சந்தித்துவிடாமலும் இருப்பதற்காக ரியோஹாச்சா செல்லும் பாதைக்கு எதிர்த்திசையில் போகவே முயன்றார்கள். அது அபத்தமான பயணமாக இருந்தது. பதினான்கு மாதங்களுக்குப் பிறகு, குரங்கு மாமிசத்தையும் பாம்புக் கறியையும் உண்டதால் வயிற்றுக் கோளாறு ஏற்பட்ட நிலையில் உர்சுலா, எல்லா மனித அம்சங்களுமுள்ள ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அவளுடைய கால்கள் வீங்கியிருந்ததாலும் நாளங்கள் குமிழிகள் போலப் புடைத்திருந்ததாலும் பயணத்தில் பாதியை இரண்டு பேர் சுமக்கும் சிவிகையிலேயே கடந்தாள். ஒட்டிய வயிற்றையும் சோர்ந்த கண்களையும் பார்க்க வருத்தமாக இருந்தாலும் அந்தக் குழந்தைகள் பெற்றோர்களை விடச் சாமர்த்தியமாகப் பயணத்தைச் சமாளித்தார்கள். பெரும்பாலான சமயங்களில் அது அவர்களுக்கு வேடிக்கையாகவும் இருந்தது. பயணத்தின் இரண்டு வருடங்களைக் கடந்த பிறகு ஒரு நாள் அந்த மலைத்

தொடரின் மேற்குச் சரிவுகளைக் காணும் முதல் மனிதர்களாக இருந்தார்கள். மேகம் மூடிய மலையுச்சியிலிருந்து உலகத்தின் மறுபக்கம்வரையும் பரந்து கிடப்பது போன்ற விசாலமான நீர்ச் சதுப்பை அவர்கள் பார்த்தார்கள். ஆனால் ஒருபோதும் அவர்கள் கடலைப் பார்க்கவில்லை. சதுப்புகளின் ஊடே பல மாதங்கள் நடந்த பின்பும் வழியில் கடைசியாகச் சந்தித்த இந்தியர்களைக் கடந்து இப்போது வெகுதூரம் வந்த பின்பும் கற்கள் நிறைந்த ஆற்றின் கரையில் ஓர் இரவு அவர்கள் முகாமிட்டார்கள். ஆற்றின் நீரோட்டம் உறைந்த கண்ணாடி போல இருந்தது. பல ஆண்டுகளுக்குப் பிறகு இரண்டாம் உள்நாட்டுப் போரின்போது கர்னல் அவுரேலியானோ புயேந்தியா ரியோஹாச்சாவை திடீர் முற்றுகையிடுவதற்காக அதே வழியில் செல்ல முயன்றார். ஆறு நாட்கள் பயணம் செய்த பின்னர் அது பைத்தியக்காரத்தனமானது என்று அவருக்குப் புரிந்தது. அது எப்படியானாலும் ஆற்றங்கரையில் முகாமிட்ட அந்த இரவு தகப்பனை வரவேற்றவர் விபத்தில் சிக்கிய கப்பலில் தப்பிக்க முடியாமல் அகப் பட்டுக்கொண்டவர்களைப் போல அவர்கள் தோற்றமளிப்பதைக் கண்டார். ஆனால், பயணத்தின்போது அவர்களுடைய எண்ணிக்கை அதிகரித்துக்கொண்டே வந்தது. அவர்கள் எல்லாரும் முதுமையடைந்து சாகத் தயாராகத்தான் (அதில் அவர்கள் வெற்றியும் பெற்றிருந்தார்கள்) இருந்தார்கள். அந்த இரவு ஹோசே அர்க்காதியோ புயேந்தியா அங்கே கண்ணாடிச் சுவர்கள்கொண்ட வீடுகள் நிறைந்த சந்தடியான நகர மொன்று எழும்புவதைக் கனவு கண்டார். அது என்ன நகரம் என்று கேட்டார். அவர் இதுவரை கேள்விப்பட்டிராத, அர்த்தமேயில்லாத, ஒரு பெயரைச் சொன்னார்கள். ஆனால் அவருடைய கனவில் அது இயற்கைக்கு அதீதமான எதிரொலியைக் கொண்டிருந்தது. மகோந்தா. மறுநாள் அவர் தன்னுடைய சக மனிதர்களிடம் தாங்கள் ஒருபோதும் கடலைக் காணப் போவதில்லை என்பதை உணர்த்தினார். ஆற்றின் அருகில் மிகவும் குளிர்ச்சியான இடத்தில் மரங்களை வெட்டி நிலத்தைப் பண்படுத்தும்படி அவர்களுக்குக் கட்டளையிட்டார். அங்கே அவர்கள் கிராமத்தை அமைத்தார்கள்.

கண்ணாடிச் சுவர்கள்கொண்ட வீடுகள் பற்றிய கனவின் பலனைப் புரிந்துகொள்வதில் பனிக்கட்டியைப் பார்க்கும் நாள் வரையிலும் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா வெற்றியடையவில்லை. இப்போது அதன் ஆழ்ந்த அர்த்தத்தைப் புரிந்துகொண்டுவிட்டதாக எண்ணினார். மிக விரைவிலேயே சாதாரணப் பொருளான தண்ணீரிலிருந்து பெருமளவுக்குப் பனிப்பாளங்களை உற்பத்தி செய்யத் தங்களால் முடியுமென்று எண்ணினார். அதை வைத்துக் கிராமத்தின் புதிய வீடுகளைக் கட்டலாம் என்றும் எண்ணினார். மகோந்தா இனிமேலும் கதவின் கீல்களும் கொண்டிகளும் வெப்பத்தில் வளைந்துவிடும் தகிக்கிற இடமாக இருக்காது. மாறாகக் குளிர்ச்சியான நகரமாக மாறிவிடும். தன்னுடைய பிள்ளைகளின் படிப்பில் குறிப்பாக, ரசவாதத் தில் ஆரம்பத்திலிருந்தே விசித்திரமான உள்ளுணர்வை வெளிப்படுத்திய அரிலியானாவின் விஷயத்தில், உற்சாகமாக ஈடுபட்டிருந்ததனால்தான் அவர் பனிக்கட்டித் தொழிற்சாலை கட்டும் தனது முயற்சிகளைத்

தொடராமலிருந்தார். ஆய்வுக்கூடம் துப்புரவாக்கப்பட்டது. புதுமையின் மிகை உற்சாகமில்லாமல், இப்போது நிதானமாக அவர்கள் மெல்குயாதெஸின் குறிப்புகளை நீண்ட, அமைதியான கட்டங்களில் மறுபரிசீலனை செய்தார்கள். பானையின் அடியில் ஒட்டிக் கிடந்த உர்சுலாவின் தங்கத்தை அந்த எச்சங்களிலிருந்து பிரித்தெடுக்க முயன்றார்கள். இளைஞன் யோசே அர்க்காதியோ இந்த நடைமுறையில் பங்கேற்கவில்லை. தந்தை தன்னுடைய உடலும் மனமுமாக அவருடைய நீர்க் குழாய்களுடன் மூழ்கியிருந்தபோது எப்போதும் தன்னுடைய வயதைவிடவும் பெரிய உடம்புகொண்ட அந்த பிடிவாதக்கார மூத்த பிள்ளை, விடலைப் பருவத்தை எட்டியிருந்தான். அவன் குரல் மாறியிருந்தது. அவனுடைய மேல் உதட்டில் ஆரம்ப மங்கல் அரும்பியிருந்தது. ஓர் இரவு, உர்சுலா அவனுடைய அறைக்குப் போனபோது அவன் படுக்கைக்குச் செல்வதற்காக உடைகளைக் களைந்துகொண்டிருந்தான். அவளுக்கு வெட்கமும் இரக்கமும் கலந்த கலவையான ஓர் உணர்வு ஏற்பட்டது. கணவரைத் தவிர அவள் நிர்வாணமாகப் பார்த்த முதல் ஆண் அவனாகவே இருந்தான். அவன் வாழ்க்கையை எதிர்கொள்ள ஆயத்தமானவனாக இருந்தான். அசாதாரணமானவனாகத் தென்பட்டான். மூன்றாவது தடவையாகக் கர்ப்பமடைந்திருந்த உர்சுலா, புதுமணப் பெண்ணாகத் தான் உணர்ந்த ஆரம்பகால அச்சத்தை மறுபடியும் அனுபவித்தாள்.

ஏறத்தாழ அந்தச் சமயத்தில்தான் உற்சாகவதியும் வாயாடியும் ஆட்களை உசுப்பிவிடுபவளுமான ஒரு பெண் வீட்டு வேலைகளில் உதவுவதற்காக அங்கே வந்தாள். சீட்டுகளைப் படித்து எதிர்காலத்தை வாசிப்பது எப்படி என்று அவளுக்குத் தெரிந்திருந்தது. உர்சுலா அவளிடம் தன் மகனைப் பற்றிப் பேசினாள். அவனுடைய வயதுக்கு மிஞ்சிய வளர்ச்சி தன்னுடைய மைத்துனனின் பன்றி வாலைப் போல இயற்கைக்கு மாறானது என்று அவள் எண்ணியிருந்தாள்.

அந்தப் பெண்ணின் ஆர்ப்பாட்டமான சிரிப்பு கண்ணாடி உடைந்தது போல வீடு முழுவதும் எதிரொலித்தது. "நேர் எதிரானது" என்றாள். "அவன் மிகுந்த அதிருஷ்டக்காரனாக இருப்பான்" என்றாள். சில நாட்களுக்குப் பிறகு தன்னுடைய ஆருடத்தை நிரூபிப்பதற்காக தன்னுடைய சீட்டுகளைக் கொண்டுவந்தாள்; ஹோசே அர்க்காதியோவைக் கூட்டிக்கொண்டு சமையல் அறைக்கு அப்பாலிருந்த களஞ்சியத்துக்குள் நுழைந்து கதவை அடைத்துக்கொண்டாள். பழைய மரப் பெஞ்சின் மேல் சீட்டுகளைப் போட்டாள்; வாய்க்கு வந்ததைச் சொல்லிக் கொண்டிருந்தாள். அவளுக்குப் பக்கத்தில் காத்திருந்த பையனுக்கு ஆர்வத்தை விட அலுப்புத்தான் அதிகமாக இருந்தது. சட்டென்று அவள் தனது கையை நீட்டி அவனைத் தொட்டாள். உண்மையாகவே திடுக்கிட்டவளாக "கடவுளே" என்றாள். அவளால் சொல்ல முடிந்தது அவ்வளவுதான். தன்னுடைய எலும்புகளுக்குள் நுரை நிரம்புவதையும் எழுச்சியற்ற பயத்தையும் அழுவதற்கான தீவிரமான ஆசையையும் ஹோசே அர்க்காதியோ உணர்ந்தான். அவள் எந்தப் பசப்பலும் செய்யவில்லை. ஆனால் ஹோசே அர்க்காதியோ இரவு முழுவதும்

அவளுக்காகக் காத்திருந்தான். அவனுடைய சருமத்துக்குள்ளே ஊடுருவியிருந்த அவளுடைய அக்குளின் புகை வாசனைக்காகக் காத்திருந்தான். எல்லா நேரமும் அவளுடனேயே இருக்கவும், அவள் தன்னுடைய அம்மாவாக இருக்க வேண்டுமென்றும் ஒருபோதும் அவர்கள் களஞ்சியத்தை விட்டு வெளியே போகக்கூடாதென்றும் அவள் 'கடவுளே' என்று சொல்லிக்கொண்டிருக்க வேண்டுமென்றும் விரும்பினான். இனிமேலும் பொறுக்க முடியாது என்று ஒருநாள் அவளைத் தேடி அவள் வீட்டுக்குப் போனான். உபசார நிமித்தமாகப் போய் வரவேற்பறையில் குழப்பத்துடன் ஒரு வார்த்தைகூடப் பேசாமல் உட்கார்ந்திருந்தான். அந்த நொடியில் அவனுக்கு அவள்மேல் எந்த வேட்கையும் இல்லாமலிருந்தது. அவளுடைய வாசனை ஏற்படுத்திய தோற்றத்துக்கு முற்றிலும் அந்நியமானவளாக, வேறு யாரோ ஒருத்தியாக அவனுக்குத் தென்பட்டாள். காப்பியைக் குடித்துவிட்டு ஏமாற்றத் துடன் அந்த வீட்டைவிட்டு வெளியேறினான். அன்று இரவு விழித்துக் கிடந்த அச்சமூட்டும் நேரத்தில் காட்டுத்தனமான பதற்றத்துடன் மீண்டும் அவளை விரும்பினான். ஆனால், களஞ்சிய அறையில் பார்த்தது போல அல்ல; அன்று பிற்பகல் பார்த்தது போலத்தான் அவள் அவனுக்குத் தேவைப்பட்டாள்.

சில நாட்களுக்குப் பிறகு அவள் தன் தாயுடன் தனியாக வசிக்கும் தன்னுடைய வீட்டுக்கு அவனைத் திடீரென்று வரச் சொன்னாள். ஒரு கட்டு ஆரூடச் சீட்டுகளைக் காண்பிப்பதற்காக என்ற முகாந்திரத் தில் அவனைப் படுக்கையறைக்குள் வரவழைத்தாள். பிறகு அவனை சுதந்திரமாகத் தொட்டாள். ஆரம்ப நடுக்கத்துக்குப் பின்பு அவனுக்குக் கிறக்கமாக இருந்தது. இன்பத்தைவிட அச்சத்தையே உணர்ந்தான். அன்று இரவே வந்து பார்க்கும்படி அவனிடம் கேட்டுக்கொண்டாள். தன்னால் வர முடியாது என்று தெரிந்தாலும் வெளியேறுவதற்காக அவன் ஒப்புக்கொண்டான். ஆனால் அந்த இரவு தகிக்கும் படுக்கையில் கிடந்து தன்னால் முடியாது என்றாலும் அவளைப் பார்க்கப் போகத்தான் வேண்டும் என்பதைப் புரிந்துகொண்டான். இருட்டில் சகோதரன் விடும் அமைதியான சுவாசத்தையும் அடுத்த அறையில் அப்பாவின் வறட்டு இருமலையும் முற்றத்தில் திரியும் கோழிகளின் ஆஸ்துமா இரைப்பையும் கொசுக்களின் ரீங்காரத்தையும் தன்னுடைய இதயத் துடிப்பையும் அதுவரைக்கும் அவன் கவனித்திராத ஒழுங்கற்ற உலகத்தின் இரைச்சலையும் கேட்டுக்கொண்டு உத்தேசமாகத் தேடி உடையணிந்துகொண்டான். உறங்கிக் கிடக்கும் தெருவில் இறங்கினான். அவள் வாக்குக் கொடுத்திருந்தது போலக் கதவு திறந்து வைக்கப்படாமல் மூடி இருக்கவேண்டும் என்று முழுமனதாக விரும்பினான். ஆனால் அது திறந்து வைக்கப்பட்டிருந்தது. விரல் நுனிகளால் அவன் தள்ளினான்; கீல்கள் துயரமும் உருக்குலைந்துமான முனகலுடன் பணிந்தன; அந்த முனகல் அவனுக்குள்ளே ஓர் உறைந்த எதிரொலியை விட்டுப் போனது. ஓரமாகவும் சத்தம் ஏற்படாமலிருக்க முயன்றும் உள்ளே நுழைந்த அந்த நொடியிலிருந்து அவன் அந்த வாசனையை உணர்ந்தான். அந்தப் பெண்ணின் மூன்று சகோதரர்களின் கித்தான் தொட்டில்கள் வரிசையாக இருந்த நடைவழியிலேயே அவன் அப்போதும்

நின்றிருந்தான். அந்த இருட்டில் எப்படி நகர்ந்து படுக்கையறையை அடைந்து சரியான படுக்கை எங்கே இருக்கிறது என்று திட்டப்படுத்திக் கொள்ள முடியாததனால் அவன் அவற்றைப் பார்க்கவில்லை. அவன் கண்டுபிடித்தான். மஞ்சங்களின் கயிறுகளில் முட்டிக்கொண்டான், அவை அவன் சந்தேகப்பட்டதைவிடவும் தாழ்வாக இருந்தன. அதுவரையிலும் குறட்டை விட்டுக்கொண்டிருந்த ஒருவன் தூக்கத்தில் புரண்டு மயக்கத்தில் "அன்று புதன்கிழமை" என்றான். அவன் படுக்கையறைக் கதவைத் தள்ளித் திறந்தபோது அது சொரசொரப்பான தரையில் உராய்வதைத் தடுக்க முடியவில்லை. திடீரென்று அந்த முழு இருளில் தான் முற்றிலும் குலைந்து போயிருப்பதை நினைவேக்கத்துடன் புரிந்துகொண்டான். அந்த இடுங்கிய அறையில் அந்தத் தாயுடன் இன்னொரு மகள், அவள் கணவன், இரண்டு குழந்தைகளும் தூங்கிக் கொண்டிருந்தார்கள். அந்தப் பெண் ஒருவேளை அங்கே இல்லாமலிருக்கலாம். வாசனையை வைத்துக் கண்டுபிடிக்கலாம். ஆனால் அந்த வீடு முழுவதும் வாசனை நிரம்பியிருந்தது. அவனுடைய சருமத்துக்குள் அப்போதும் ஊடுருவியிருப்பது போலவே அந்த வாசனை மிகவும் மறைமுகமாக அதே சமயம் மிகவும் வெளிப்படையாகவும் அங்கே நிரம்பியிருந்தது. நீண்ட நேரம் அசைவற்று நின்றிருந்தான். இந்த முட்டாள்தனத்தின் ஆழத்தில் தான் எப்படி மூழ்கினேன் என்று வியந்துகொண்டிருந்தபோது இருளில் அவனுக்கு நேராக எல்லா விரல்களும் நீட்டப்பட்ட ஒரு கை நீண்டு அவன் முகத்தை வருடியது. அவன் தன்னையறியாமலேயே அதை எதிர்பார்த்துக்கொண்டிருந்ததால் வியப்படையவில்லை. அந்தக் கைகளில் தன்னை ஒப்படைத்தான். பீதி நிரம்பிய செயலற்ற நிலையில் ஒரு உருவமற்ற இடத்துக்குத் தன்னை இட்டுச் செல்ல அனுமதித்தான். அங்கே அவனுடைய உடைகள் களையப்பட்டு உருளைக் கிழங்கு மூட்டைபோலப் புரட்டப்பட்டான். அங்கும் இங்குமாக வீசியெறியப்பட்ட அந்த அடியாழமற்ற இருளில் அவனுடைய கைகளால் பயனிருக்கவில்லை. அங்கே முகர்ந்த வாசனை பெண்ணினுடையதல்ல அமோனியாவுடையது. அங்கே அவளுடைய முகத்தை நினைவுகூர முயன்றான். ஆனால் தனக்கு முன்னால் உர்சுலாவின் முகத்தையே பார்த்தான். வெகு காலமாகச் செய்ய விரும்பியதும் ஆனால் ஒருபோதும் செய்ய முடியாது என்று அவன் கற்பனை செய்து வைத்திருந்ததுமான ஒன்றைச் செய்துகொண்டிருப்பதைக் குழப்பமாக உணர்ந்தான். தன்னுடைய கால் எங்கே அல்லது தலையெங்கே என்று தெரியாமல் அல்லது யாருடைய கால், யாருடைய தலை என்று தெரியாமல் என்ன செய்கிறோம் என்று தெரியாமலே செய்துகொண்டிருந்தான். தன்னுடைய சிறுநீரகங்களின் உராய்வு ஒலி, குடலிலிருந்து எழும் வாயு, பயம், ஓடித் தப்புவதற்கானப் பதற்றங்களை உணரும் அதே சமயம் அந்த நோவு ஏற்படுத்தும் மௌனத்திலும் அச்சமூட்டும் தனிமையிலும் என்றென்றைக்குமாக இருந்து விடும் விருப்பத்தையும் அவனால் அதற்கு மேல் தடைசெய்ய முடியவில்லை.

அவள் பெயர் பிலர் தெர்னேரா. மகோந்தாவின் நிர்மாணம் முற்றுப்பெற்ற வெளியேற்றத் திரளில் அவளும் ஒரு பகுதியாக இருந்தாள்.

பதினான்காம் வயதில் அவளை வன்புணர்ச்சிக்கு ஆளாக்கிவிட்டு இருபத்திரண்டாம் வயது வரை அவளை விடாமல் காதலித்துக் கொண்டிருந்தான் ஒருவன். இந்த உலகத்திலிருந்து வேறுபட்டவன் என்று சொல்லி ஒருபோதும் அதை வெளிப்படையாகத் தெரிவிக்க மனம் வராத அவனிடமிருந்து அவளுடைய குடும்பம் அவளைப் பிரித்து இழுத்து வந்திருந்தது. இந்த உலகத்தின் கோடிவரைக்கும் அவளைப் பின்தொடர்ந்து வருவதாக அவன் வாக்களித்திருந்தான். பின்னர் அவன் தன்னுடைய காரியங்களை முன்வரிசையில் வைத்துக் கொண்டபோது அவள் அவனுக்காகக் காத்திருந்து அலுத்துப் போனாள். மூன்று நாட்களில், மூன்று மாதங்களில் அல்லது மூன்று வருடங்களில் கரை மார்க்கமாகவோ கடல் மார்க்கமாகவோ தன்னை மணந்துகொள்ள வந்து சேருவான் என்று அவளுடைய சீட்டுகள் உறுதியாகச் சொல்லியிருந்த உயரமானவர்களுடனும் குட்டையானவர்களுடனும் பொன்னிறச் சிகையுள்ளவருடனும் பழுப்பு முடியுள்ளவருடனும் அவனை ஒப்பிட்டுக் காத்திருந்து சோர்ந்து போனாள். அந்தக் காத்திருப்பால் அவளுடைய தொடைகள் வலுவிழந்தன. அவளுடைய முலைகள் தொய்ந்தன. அவளுடைய இதமான வழக்கங்கள் குலைந்தன. எனினும் மனத்தின் கிறுக்குத்தனத்தை மட்டும் அப்படியே வைத்திருந்தாள். மேதைமை மிகுந்த அந்த விளையாட்டுப் பொம்மையால் பைத்தியமாக்கப்பட்ட ஹோசே அர்க்காதியோ வழி கண்டுபிடிக்கக் கடினமான அந்த அறைக்குள் ஒவ்வொரு இரவும் அவளைப் பின்தொடர்ந்தான். ஒரு சந்தர்ப்பத்தில் கதவு தாளிட்டிருப்பதைப் பார்த்தான். முதல் முறை தட்டுவதற்கான துணிச்சல் இருந்தால் இறுதிவரையும் தட்ட வேண்டும் என்பதைத் தெரிந்து கொண்டிருந்ததனால் பல முறை கதவைத் தட்டினான். முடிவில்லாதது என்று தோன்றிய காத்திருப்புக்குப் பின்பு அவள் அவனுக்காகக் கதவைத் திறந்தாள். பகல் வேளையில் கனவு காண்பதற்காகப் படுத்துக்கிடக்கும்போது அவன் முந்தைய இரவின் ஞாபகங்களை ரகசியமாக ரசிப்பான். உற்சாகமும் பாராமுகமும் அரட்டையுமாக அவள் வீட்டுக்குள் வந்தபோது தன்னுடைய பதற்றத்தை மறைக்க அவன் முயலவில்லை. ஏனென்றால் தன்னுடைய வெடிச் சிரிப்பால் புறாக்களை வெருட்டும் அவளுக்குத் தன்னுடைய உள் மூச்சை எப்படி விடுவது என்றும் இதயத் துடிப்புகளை எப்படிக் கட்டுப்படுத்துவது என்றும் அவனுக்குக் கற்பித்திருந்த புலப்படாத ஆற்றலுடன் எந்தத் தொடர்பும் இருக்கவில்லை. அந்த ஆற்றல்தான் மனிதர்கள் ஏன் சாவுக்கு அஞ்சுகிறார்கள் என்று விளங்கிக்கொள்ள அவனை அனுமதித்திருந்தது. அவன் தனக்குள்ளாகவே மூழ்கியிருந்தான். அதனால் தன்னுடைய அப்பாவும் சகோதரனும் உலோகக் கலவையை ஊடுருவி உர்சுலாவின் தங்கத்தைப் பிரித்தெடுப்பதில் வெற்றி கண்டிருக்கிறார்கள் என்ற மகிழ்ச்சியான செய்தியால் வீட்டையே எழுச்சியடையச் செய்தபோது அந்த மகிழ்ச்சியின் பொருள் அவனுக்கு மட்டும் புரியவே இல்லை. உண்மையில், சிக்கலானவையும் விடாமுயற்சி கொண்டவையுமான பல நாட்களைச் செலவழித்துத்தான் அவர்கள் வெற்றியடைந்தார்கள். உர்சுலா மிகவும் மகிழ்ச்சியாக இருந்தாள். ரசவாதத்தைக்

கண்டுபிடித்ததற்காக அவள் கடவுளுக்கு நன்றியும் தெரிவித்தாள். கிராமவாசிகள் ஆய்வுக்கூடத்துக்கு முண்டியடித்தார்கள். அவர்களுக்கெல்லாம் கொய்யாப்பழக் கூழைக் கொடுத்தார்கள். அந்த அற்புதத்தைக் கொண்டாடுவதற்காகப் பட்டாசுகளையும் கொடுத்தார்கள். அப்போதுதான் கண்டுபிடித்தது என்பதுபோல ஹோசே அர்க்காதியோ புயேந்தியா மீட்டெடுக்கப்பட்ட தங்கம் இருந்த மூசையை வந்தவர்கள் பார்க்க அனுமதித்தார். எல்லாருக்கும் காண்பித்துக் கொடுத்துக்கொண்டிருந்ததன் இடையில், கடந்த பல நாட்களாக ஆய்வுக்கூடத்துக்குள்ளேயே நுழையாமலிருந்த மூத்த மகனை நெருங்கினார். அந்த மஞ்சள் நிறக் கட்டியை அவன் கண் முன்னால் வைத்துவிட்டுக் கேட்டார்: "உனக்கு இது எதைப் போலத் தெரிகிறது?" ஹோசே அர்க்காதியோ உண்மையாகச் சொன்னான்: "நாய் விட்டை போல இருக்கிறது".

அப்பா தன்னுடைய புறங்கையால் அவனை அறைந்தார். அந்த அறை அவனை ரத்தமும் கண்ணீரும் வழியச் செய்தது. அன்றிரவு பிலர் தெர்னேரா இருட்டில் துளாவி சீசாவையும் பஞ்சையும் எடுத்துக் கன்றிப் போன காயத்துக்கு மருந்து போட்டாள். அவனுக்குத் தொந்தரவு தராதவகையில் அவனிடமிருந்து தனக்கு என்ன வேண்டுமோ அதையெல்லாம் செய்துகொண்டாள். அவனை நோகடிக்காமல் காதல் பண்ணினாள். நெருக்கமான கட்டத்தை இருவரும் எட்டிய பின்னர் தங்களை அறியாமலேயே அவர்கள் ஒருவருக்கு ஒருவர் கிசுகிசுத்துக்கொண்டார்கள். "எனக்கு உன்னுடன் தனியாக இருக்க வேண்டும்" என்றான் அவன். "சீக்கிரமாகவே எல்லாரிடமும் சொல்லிவிடப் போகிறேன். இந்தப் பதுங்கலை நாம் நிறுத்திவிடலாம்." அவள் அவனைச் சமாதானப்படுத்த முற்படவில்லை. "அது நல்லதுதான்" என்றாள். "நாம் மட்டுமே தனியாக இருந்தால் விளக்கை எரிய விடலாம். நாம் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ளலாம். யாருடைய குறுக்கீடும் இல்லாமல் எனக்கு எந்த அளவு வேண்டுமோ அந்த அளவுக்குக் கத்திப் பேசி மகிழ்ச்சியடையலாம். நீயும் என்ன கிறுக்குத்தனத்தை நினைக்கிறாயோ அதை என் காதில் கிசுகிசுக்கலாம்."

அந்த உரையாடலும் அப்பாவின் மேல் அவனுக்கு இருந்த கடுங்கோபமும் ஒரு கட்டற்ற காதலுக்கு உடனடியாகக் கிடைக்கவிருக்கும் வாய்ப்பும் அவனுக்குள் அமைதியான துணிச்சலைத் தூண்டிவிட்டன. தன்னியல்பாக எந்த முன்தயாரிப்பும் இல்லாமல் அவன் எல்லாவற்றையும் சகோதரனிடம் சொன்னான். சகோதரனின் சாகசங்களில் உள்ளடங்கியிருக்கும் அபாயத்தின் சாத்தியத்தை, ஆபத்தைத்தான் இளம் அவுரேலியானோ முதலில் புரிந்துகொண்டான். விஷயத்தின் வசீகரத்தை அவனால் புரிந்துகொள்ள முடியவில்லை. மெல்ல மெல்லப் பதற்றம் அவனைத் தொற்றிக்கொண்டது. அபாயத்தின் விவரங்களைப் பற்றி வியப்படைந்தான். தன் சகோதரனின் இடர்களுடனும் மகிழ்ச்சியுடனும் தன்னையே அடையாளப்படுத்திக்கொண்டான். அவனுக்கு அச்சமாகவும் ஆனந்தமாகவும் இருந்தது. கீழே நிலக்கரி கனன்றுகொண்டிருப்பதாகத் தோன்றும் தனிப் படுக்கையில் சகோதரனுக்காகப்

பொழுதுவிடியும்வரை தூங்காமல் காத்திருப்பான். பிறகு துயிலெழும் நேரம்வரை அவர்கள் பேசிக்கொண்டிருப்பார்கள். அதனால் இருவருமே சீக்கிரத்தில் ஒரே வகையான அயர்ச்சியால் அவதிப் பட்டார்கள். அப்பாவின் ஞானத்திலோ ரசவாதத்திலோ இருவரும் ஒரே வகையான ஆர்வமில்லாமல் இருந்தார்கள். தனிமைக்குள் அடைக்கலமானார்கள். "பிள்ளைகளுக்கு மண்டை குழம்பியிருக்கிறது" என்றாள் உர்சுலா. "வயிற்றில் புழுக்கள் இருக்க வேண்டும்." ஆமணக்கு விதைகளை இடித்துக் குமட்டலான மருந்துச் சாற்றைத் தயாரித்தாள். என்ன வேண்டுமானாலும் ஆகட்டும் என்ற சுயக்கட்டுப்பாட்டுடன் அவ்ர்கள் அதைக் குடித்தார்கள். ஒரே நாளில், ஒரே சமயத்தில் இருவரும் கழிப்பறையில் உட்கார்ந்தார்கள். வெளியேற்றிய வெளிர் சிவப்பு நிறமுள்ள ஒட்டுண்ணிகளை பெரும் குதூகலத்துடன் எல்லாருக்கும் காண்பித்தார்கள். தங்களுடைய அசிரத்தைக்கும் தூக்கக் கலக்கத்துக்கும் அதுதான் காரணம் என்று உர்சுலாவை அவர்களால் ஏமாற்ற முடிந்தது. அதற்குள் அவுரேலியானோ சகோதரனின் அனுபவங்களைப் புரிந்துகொள்வதுடன் அவற்றைத் தனக்கே நேர்ந் தவையாக ஆக்கிக்கொண்டு வாழவும் செய்தான். ஒரு சமயம் கலவியின் நுட்பங்களை விலாவாரியாக அண்ணன் விளக்கிக்கொண்டிருந்தபோது அவன் குறுக்கிட்டுக் கேட்டான்: "அது எப்படி இருக்கும்?" ஹோசே அர்க்காதியோ உடனடியாகப் பதில் சொன்னான்:

"நிலநடுக்கம்போல இருக்கும்."

ஒரு ஜனவரி மாத வியாழக்கிழமை அதிகாலை இரண்டு மணிக்கு அமரந்தா பிறந்தாள். அறைக்குள் வேறு யாரும் வருவதற்கு முன்பே உர்சுலா குழந்தையைக் கவனமாகப் பரிசோதனை செய்தாள். குழந்தை பாரமில்லாமல் ஈரக் கசிவுடன் ஒரு பல்லி போல இருந்தது. அதன் மற்ற அங்கங்கள் மனிதர்கள் போலத்தான் இருந்தன. வீட்டுக்குள் ஆட்கள் நிரம்பும் வரையிலும் அந்தப் புது வரவை அவுரேலியானோ கவனிக்கவே இல்லை. பதினோரு மணிக்குப் பின்பு படுக்கையில் இல்லாமலிருந்த தனது சகோதரனைத் தேடிச் சந்தடிக்கிடையே வெளி யேறினான். பிலர் தெர்னேராவின் படுக்கையறையிலிருந்து அவனை எப்படி வெளியே அழைத்து வருவது என்று யோசிக்கக்கூட அவகாச மிருக்கவில்லை. அவனுக்குப் புரியக்கூடிய சீழ்க்கை அழைப்புகளைச் செய்துகொண்டே மணிக்கணக்காக வீட்டை வட்டமடித்திருந்துவிட்டு விடியற்காலை நெருங்கியதும் திரும்பினான். அம்மாவின் அறையில் புதிதாகப் பிறந்த குட்டித் தங்கையுடன் விளையாடிக்கொண்டு அப்பாவி முகத்துடன் குனிந்து உட்கார்ந்திருந்த ஹோசே அர்க்காதியோவைப் பார்த்தான்.

நாடோடிகள் திரும்ப வந்தபோது உர்சுலாவின் நாற்பது நாள் ஓய்வு முடிந்திருக்கவில்லை. பனிக்கட்டியைக் கொண்டு வந்த அதே கழைக் கூத்தாடிகள்; அதே வித்தைக்காரர்கள். தாங்கள் மெல்குயாதெஸின் குழுவைப் போன்றவர்களல்ல; முன்னேற்றத்தின் தூதர்களல்ல; வெறும் வேடிக்கை காட்டுபவர்கள்தாம் என்பதை வெகுவிரைவிலேயே அவர்கள் காண்பித்தார்கள். பனிக்கட்டியை அவர்களும் கொண்டு

வந்திருந்தார்கள். மனிதனின் வாழ்க்கையில் அதன் பயன்கள் பற்றி அவர்கள் விளம்பரம் செய்யவில்லை. ஆனால் அதை ஓர் எளிய வித்தைப் பொருளாகத்தான் விளம்பரப்படுத்தினார்கள். இந்த முறை மற்ற வித்தைக் கருவிகளுடன் ஒரு பறக்கும் கம்பளத்தையும் அவர்கள் கொண்டு வந்திருந்தார்கள்.

ஆனால் அதைப் போக்குவரத்து வளர்ச்சிக்குரிய பங்களிப்பாக முன்வைக்கவில்லை; பொழுதுபோக்குச் சாதனமாகவே காட்டினார்கள். ஆட்கள் கிராமத்திலுள்ள வீடுகளுக்கு மேலாக விரிந்து பறக்கும் வாய்ப்புக்காகத் தங்களுடைய கடைசித் தங்க நாணயத்தையும் தோண்டியெடுத்தார்கள். இந்தக் கூட்டுச் சந்தடியின் களிப்பூட்டும் மறைவில் ஹோசே அர்க்காதியோவும் பிலர் தெர்னேராவும் ஆறுதலான பல மணி நேரங்களைக் கழித்தார்கள். அந்தக் கூட்டத்திலேயே அவர்கள் இருவரும்தான் மகிழ்ச்சியான காதலர்களாக இருந்தார்கள். தங்களது ரகசிய இரவுகளில் மூர்க்கமான ஆனால் கண நேர உணர்வாக இருந்த காதல், மகிழ்ச்சியானது என்பதைவிடவும் ஆசுவாசமானதோ என்றும் ஆழமானதோ என்றும்கூட அவர்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டது. எதுவானாலும் பிலர் அந்த வசியத்தை உடைத்தாள். அவளுடன் இருப்பதில் ஹோசே அர்க்காதியோ காட்டிய உற்சாகத்தால் அவள் தூண்டப்பட்டிருந்தாள். அதன் உருவத்தையும் தருணத்தையும் அவள் குழப்பிக் கொண்டாள். திடீரென்று மொத்த உலகத்தையும் அவன் தலைமீது எறிந்தாள். “இப்போதுதான் நீ சரியான ஆண் பிள்ளையாகி இருக்கிறாய்” என்றாள். அவள் சொன்னதன் அர்த்தம் அவனுக்குப் புரியவில்லை. அதை நிதானமாகச் சொன்னாள்: “நீ ஒரு தகப்பனாகப் போகிறாய்.”

ஹோசே அர்க்காதியோ பல நாட்களாக வீட்டைவிட்டு இறங்கத் துணிவில்லாமலிருந்தான். சமையல் அறையில் பிலர் குலுங்கிச் சிரிக்கும் ஒலியைக் கேட்டதும் ஆய்வுக்கூடத்தில் தஞ்சம் அடைவான். அங்கே உர்சுலாவின் ஆசியுடன் ரசவாதக் கருவிகள் மீண்டும் உயிர் பெற்றிருந்தன. ஹோசே அர்க்காதியோ புயேந்தியா தன்னுடைய தறுதலைப் பிள்ளையை மகிழ்ச்சியுடன் வரவேற்றார். தான் கடைசியாக ஈடுபட்டிருந்த ரசவாதக் கல் கண்டுபிடிப்பில் அவனையும் ஊக்குவித்தார். ஒரு நாள் பிற்பகலில் பையன்களுக்கு, பறக்கும் கம்பளத்தில் போகும் ஆசை தோன்றியது. ஒரு நாடோடி கிராமத்துச் சிறுவர்கள் பலரை ஏற்றிக்கொண்டு அதை ஆய்வுக்கூடத்தின் ஜன்னல் மட்டத்தில் செலுத்தினான். அதில் உட்கார்ந்திருந்த சிறுவர்கள் குதூகலமாகக் கை வீசினார்கள். ஆனால் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா அவர்களைப் பார்க்கக்கூட இல்லை. “அவர்கள் கனவு காணட்டும்” என்றார். “அவர்கள் செய்வதைவிட உயர்வான பறக்கும் கம்பளத்தின் மூலமாக இல்லாமல் விஞ்ஞானக் கருவிகள் மூலம் பறந்து காட்டுவோம்.” தன்னுடைய பாசாங்கான உற்சாகத்தை மீறி ரசவாதக் கல்லின் சக்தி என்னவென்று ஹோசே அர்க்காதியோவுக்குப் புரியவில்லை. அவனுக்கு அது மோசமாக ஊதி உருவாக்கப்பட்ட குப்பியாகத்தான் தெரிந்தது. அவனால் தன்னுடைய கவலைகளிலிருந்து

தப்ப முடியவில்லை. பசி இழந்தான். தூக்கம் இழந்தான். தன்னுடைய திட்டங்கள் வெற்றியடையாது என்று தோன்றியபோது ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவுக்கு ஏற்பட்ட அதே உணர்வில் அவனும் விழுந்தான். அவன் ரசவாதத்தைப் பற்றி அதிகமாக யோசித்ததனால்தான் சோர்ந்து போயிருப்பதாக நினைத்த ஹோசே அர்க்காதியோ புயேந்தியா அவனை ஆய்வுக்கூட வேலைகளிலிருந்து விடுவித்தார். ரசவாதக் கல்லுக்கான தேடலல்ல சகோதரனின் எரிச்சலுக்குக் காரணம் என்பது அவுரேலியானோவுக்குப் புரிந்தாலும் அவனுடைய அந்தரங்கத்தைத் தெரிந்துகொள்ள முடியவில்லை. அவனுடைய பழைய உற்சாகத்தை இழந்தான். கலகலப்பானவனும் எதையும் பரிமாறிக்கொள்பவனுமாக இருந்தவன் தனக்குள்ளேயே ஒடுங்கிப் போனவனும் எரிச்சலானவனுமாக மாறினான். தனிமையிலிருக்கவே விரும்பினான். உலகத்துக்கு எதிரான வெறுப்பால் தீண்டப்பட்டான். ஒரு நாள் இரவு வழக்கம் போலப் படுக்கையை விட்டு எழுந்தான். ஆனால் பிலர் தெர்னேராவின் வீட்டுக்குப் போகவில்லை. வித்தைக் காட்சியில் கலந்துகொள்ளப் போனான். எல்லா வகையான வித்தைக் கருவிகளையும் எந்த ஆர்வமும் இல்லாமல் பார்த்தான். அவற்றின் பகுதியாக இல்லாத ஒன்றைக் கண்டுபிடித்தான். கழுத்து மணிமாலைகள் அணிந்த மிக இளமையான ஒரு நாடோடிப் பெண். கிட்டத்தட்ட குழந்தை. ஹோசே அர்க்காதியோ அவனுடைய வாழ்நாளில் ஒருபோதும் பார்த்திராத மிக அழகான பெண்ணாக இருந்தாள். பெற்றோருக்குக் கீழ்ப்படியாததனால் பாம்பாக மாற்றப்பட்ட ஒரு மனிதனின் வேதனையைப் பார்த்துக்கொண்டிருந்த கூட்டத்தின் நடுவில் அவள் இருந்தாள்.

ஹோசே அர்க்காதியோ அதைக் கவனிக்கவில்லை. பாம்பு மனிதனுடனான துயர விசாரணை நடந்துகொண்டிருக்கும்போதே கூட்டத்தை விலக்கிக்கொண்டு நாடோடிப் பெண் நின்றிருந்த முதல் வரிசைக்குப் போய் அவளுக்குப் பின்னால் நின்றான். அவளை இறுக்கமாக அழுத்திக்கொண்டு நின்றான். அவள் தன்னை விடுவித்துக் கொள்ள முயன்றாள். ஆனால் ஹோசே அர்க்காதியோ இன்னும் வலுவாக அவள் முதுகை அழுத்தினான். அவள் அவனுடைய நெருக்கத்தை உணர்ந்தாள். ஆச்சரியத்திலும் பயத்திலும் நடுங்கிக் கொண்டு அவனை ஒட்டி நின்றாள். நடப்பதை அவளால் நம்ப முடியவில்லை. கடைசியில் தலையைத் திருப்பி அவனைப் பார்த்து நடுக்கமாகச் சிரித்தாள். அந்தச் சமயத்தில் இரண்டு நாடோடிகள் பாம்பு மனிதனைக் கூண்டில் அடைத்துக் கூடாரத்துக்குள் கொண்டு போனார்கள். காட்சியை நடத்திக்கொண்டிருந்த நாடோடி அறிவித்தான்:

"சீமான்களே, சீமாட்டிகளே, இப்போது ஒரு பெண்ணுக்கு நேர்ந்த பயங்கர சோதனையைக் காண்பிக்கப் போகிறோம். பார்க்கக் கூடாததைப் பார்த்ததற்கான தண்டனையாக அவளுடைய தலை ஒவ்வொரு இரவும் இதே நேரத்தில் வெட்டப்படும். இந்தத் தண்டனை நூற்றைம்பது வருடங்கள் நடக்கும்." ஹோசே அர்க்காதியோவும் அந்த நாடோடிப் பெண்ணும் அந்த சிரச்சேதக் காட்சியைப் பார்க்கவில்லை. அவர்கள் அவளுடைய கூடாரத்துக்குப் போனார்கள். அங்கே உடைகளை

அவிழ்ப்பதற்குள்ளே மூர்க்கத்தனமான ஏக்கத்துடன் முத்தமிட்டுக் கொண்டார்கள். அந்த நாடோடிப் பெண் தான் அணிந்திருந்த மொடமொடப்பான லேஸ் வைத்த மார்க்கச்சையைக் கழற்றிவிட்டு எதுவுமில்லாமல் நின்றாள். அரும்பத் தொடங்கியிருந்த முலைகளுடன் மெலிந்த தவளையைப் போல இருந்தாள். அவள் கால்கள் மெல்லியவையாக இருந்தன. ஹோசே அர்க்காதியோவின் கைகளின் அளவுக்குப் பொருத்தமானவையாக அவை இல்லை. ஆனால் அவளுடைய ஒடிசலான உடம்பை ஈடு செய்வதுபோன்ற திடமும் இதமும் அவளிடம் இருந்தன. எனினும் ஹோசே அர்க்காதியோ அவளுக்கு இணங்கவில்லை. ஏனெனில் நாடோடிகள் தங்களுடைய வித்தை காட்டும் கருவிகளை எடுக்க வருவதும் வைத்துச் செல்வதுமான வேலைகளிலும் சூதாட்டம் நடத்தப்படும் கட்டிலுக்கு மசைபோடுவதிலும் மும்முரமாக இருந்த பொதுக்கூடாரத்தில் அவர்கள் இருந்தார்கள். கூடாரத்தின் நடுவிலிருந்த தூணில் தொங்கிக்கொண்டிருந்த விளக்கின் வெளிச்சம் அந்த இடம் முழுவதும் வீசியிருந்தது. அணைப்புகளுக்கிடையே இடைவேளையில் அந்தப் பெண் அருகில் உட்கார்ந்து அவனை எழுச்சியடையச் செய்ய முயன்று கொண்டிருந்த போது என்ன செய்வது என்று தெரியாமல் ஹோசே அர்க்காதியோ படுக்கையில் நிர்வாணமாக உடம்பை நீட்டிக்கொண்டான். கொஞ்ச நேரத்தில் சதைத் திரட்சியுள்ள ஒரு நாடோடிப் பெண் ஓர் ஆணை அழைத்துக்கொண்டு உள்ளே வந்தாள். அவன் அவர்களுடைய கூட்டத்தைச் சேர்ந்தவனல்ல; அந்தக் கிராமத்தைச் சேர்ந்தவனும் அல்ல. அவர்கள் இருவரும் படுக்கையருகில் உடைகளை அவிழ்க்கத் தொடங்கினார்கள். எந்த நோக்கமும் இல்லாமல் அந்தப் பெண் ஹோசே அர்க்காதியோவைப் பார்த்தாள். அவனுடைய ஓய்ந்து கிடந்த பெரிய உறுப்பை ஒருவிதமான இரக்கமான வெறியுடன் பரிசோதனை செய்தாள்.

"பையா, இப்போது இருப்பதைப் போலவே கடவுள் உன்னை எப்போதும் வைத்திருப்பாராக" என்று ஆச்சரியத்துடன் சொன்னாள்.

ஹோசே அர்க்காதியோவின் தோழி அவர்களிடம் தங்களைத் தனியாக விட்டுப் போகும்படி சொன்னாள். ஆனால் அந்த ஜோடி படுக்கைக்கு அருகில் தரையில் படுத்துக்கொண்டது. அவர்களின் கிளர்ச்சி ஹோசே அர்க்காதியோவின் ஓய்ந்து கிடந்த உறுப்பை எழுப்பிவிட்டது. முதலாவது இறுக்கத்திலேயே சதுரங்கப் பலகை மேல் காய்கள் உருட்டப்பட்டது போன்ற ஒழுங்கற்ற ஓசையுடன் அந்தப் பெண்ணின் எலும்புகள் முறிவதுபோலத் தோன்றியது. அவளுடைய சருமம் வெளிறிய வியர்வையாக விம்மியது. அவள் கண்களில் நீர் நிரம்பியது. அவளுடைய மொத்த உடல் துயரமான புலம்பலையும் மண்ணின் தெளிவற்ற வாசனையையும் வெளியேற்றியது. ஆனால் அவள் அந்தத் தாக்குதலைப் பாராட்டப்பட வேண்டிய இயல்பான திடத்துடனும் துணிவுடனும் தாங்கிக்கொண்டாள். ஹோசே அர்க்காதியோ, தான் ஒரு தெய்வீக எழுச்சிநிலையை நோக்கிக் காற்றினூடே உயர்த்திச் செல்லப்படுவதாக உணர்ந்தான். அங்கே

அவனுடைய இதயம் திறந்து மென்மையான கொஞ்சல்கள் வெளிவந்து அந்தப் பெண்ணின் காதுகளுக்குள் நுழைவதையும் அவை அவளுடைய வாய்க்குள் அவளுடைய மொழியாக மாற்றமடைவதையும் உணர்ந்தான். அது ஒரு வியாழக்கிழமை. சனிக்கிழமை இரவு ஹோஸே அர்க்காதியோ ஒரு சிவப்புத் துணியைத் தலையில் கட்டிக்கொண்டு நாடோடி களுடன் ஊரை விட்டுப் போனான்.

அவன் இல்லையென்பதைக் கண்டுபிடித்ததும் உர்சுலா கிராமம் முழுவதும் தேடினாள். நாடோடிகளின் முகாமில் அவிந்து போயும் இன்னும் புகைந்துகொண்டிருந்த திறந்தவெளிக் கணப்புகளுக்கு இடையில் குப்பைக் குழிகளைத் தவிர வேறு எதுவுமில்லை. அந்தக் குப்பைக்குள் பாசி மணிகள் ஏதாவது கிடைக்குமா என்று தேடிக் கொண்டிருந்த ஒருவன் முந்தைய நாள் இரவு அவளுடைய மகன் பாம்பு மனிதனின் கூண்டை வண்டியில் வைத்துத் தள்ளிக்கொண்டு அந்தக் களேபரக் கூட்டத்தில் இருந்ததைப் பார்த்ததாகச் சொன்னான். "அவன் நாடோடியாகிவிட்டான்" என்று கணவனிடம் அலறினாள். அந்த மறைவு பற்றிச் சின்ன அதிர்ச்சியைக்கூட அவர் காண்பிக்க வில்லை.

"அது உண்மை என்றே நினைக்கிறேன்" என்றார் ஹோஸே அர்க்காதியோ புயேந்தியா. ஆயிரம் முறை சூடுபண்ணி அரைத்த கலவையைத் தனது கலுவத்தில் போட்டு மீண்டும் அரைத்துக் கொண் டிருந்தார். "அப்படியாக அவன் மனிதனாகக் கற்றுக்கொண்டான்." "நாடோடிகள் எங்கே போனார்கள்?" என்று கேட்டாள் உர்சுலா. அப்படிக் கேட்டுக்கொண்டு சுட்டிக்காட்டப்பட்ட சாலையைப் பின்தொடர்ந்தாள். அவர்களைப் பிடித்துவிட இன்னும் சமயம் இருக்கிறது என்று நினைத்துக்கொண்டிருந்தாள். அவள் கிராமத்தை விட்டு நீண்ட தூரம் போனாள். நீண்ட தூரம் வந்துவிட்டதாக உணர்ந்தபோதும் அவள் திரும்பிச் செல்வதைப் பற்றி யோசிக்கவில்லை. இரவு எட்டு மணிவரையிலும் குட்டி அமரந்தாவுக்கு அழுதழுது தொண்டை கட்டிப் போனதைத் தெரிந்து, அரைத்துக்கொண்டிருந்த கலுவத்தை வெதுவெதுப்பான எருப் பாத்தியில் வைத்துவிட்டு அவளுக்கு என்னவாயிற்று என்று பார்க்கப் போவது வரை தன் மனைவி காணாமல் போயிருக்கிறாள் என்பதை ஹோஸே அர்க்காதியோ புயேந்தியா கண்டுபிடிக்கவில்லை. குழந்தையைப் பார்த்துக்கொள்வ தாகச் சொன்ன பெண்ணின் கையில் அமரந்தாவை ஒப்படைத்துவிட்டு அடுத்த சில மணி நேரங்களில் முழு ஆயத்தமாக இருந்தவர்களின் கூட்டத்தைத் திரட்டினார். உர்சுலாவைத் தேடித் தெரியாத வழிகளில் போனார். அவுரேலியானாவும் கூடப் போனான். தங்களால் புரிந்துகொள்ள முடியாத மொழி பேசும் இந்திய மீனவர்கள் சிலர் தங்களைக் கடந்து யாரும் போகவில்லை என்பதை சைகையால் தெரிவித்தார்கள். மூன்று நாட்கள் பயனில்லாத தேடலுக்குப் பிறகு அவர்கள் கிராமத்துக்குத் திரும்பினார்கள்.

பல வாரங்கள் ஹோஸே அர்க்காதியோ புயேந்தியா அங்கலாய்ப்பில் மூழ்கியிருந்தார். ஒரு தாயைப் போலக் குட்டி அமரந்தாவைப்

பராமரித்தார். அவளைக் குளிப்பாட்டி உடை அணிவித்தார். ஒரு நாளைக்கு நான்கு முறை பாலூட்டினார். இரவில் எப்படிப் பாட வேண்டும் என்று உர்சுலாவுக்குக்கூட ஒருபோதும் தெரிந்திராத பாடல்களைப் பாடவும் செய்தார். ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில் உர்சுலா திரும்பி வரும்வரைக்கும் வீட்டு வேலைகளைச் செய்வதாக பிலர் தெர்னேரா தானாகவே முன் வந்தாள். இந்தத் துரதிருஷ்டத்தால் உள்ளுணர்வு கூர்மையடைந்திருந்த அவுரேலியானோ அவளுடைய வருகையில் கண்ணுக்குப் புலனாகாத பிரகாசத்தை உணர்ந்தான். தன்னுடைய சகோதரனின் ஓட்டத்துக்கும் அதன் விளைவாகத் தன்னுடைய அம்மா காணாமற்போனதற்கும் அவள்தான் குற்றம் சாட்டப்பட வேண்டியவள் என்று சில விளக்க முடியாத வழிகளில் தெரிந்து வைத்திருந்தான். அதனால் மௌனமாகவும் கடுமையான வன்மத்துடனும் அவளை வதைத்தான். அப்படியாக அந்தப் பெண் அந்த வீட்டுக்குத் திரும்ப வரவில்லை.

காலம் செயல்களை அதனதன் இடத்தில் வைக்கிறது. ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவுக்கும் அவருடைய மகனுக்கும் எப்போது ஆய்வுக்கூடத்துக்குத் திரும்பி வந்தோம், தூசு தட்டினோம், நீர்க் குழாயைச் சூடாக்கினோம், எருப் பாத்தியில் மாதக் கணக்காகத் தூங்கிக்கொண்டிருந்த கலவையை எடுத்து மீண்டும் அதைச் சாவதான மாகக் கையாளுவதில் ஈடுபட்டோம் என்று சரியாகத் தெரியவில்லை. பிரம்புத் தொட்டிலில் படுத்துக்கொண்டிருந்த அமரந்தாகூட, பாதரச ஆவியால் அடர்ந்திருந்த அந்தச் சின்ன அறையில் அப்பாவும் அண்ணனும் வேலையில் மூழ்கியிருப்பதைக் குறுகுறுப்புடன் கவனித்துக்கொண்டிருந்தாள். உர்சுலா போய்ச் சில மாதங்கள் கழிந்த பின்பு ஒரு குறிப்பிட்ட தருணத்தில் விநோதங்கள் நிகழத் தொடங்கின. அலமாரியில் வைத்து நீண்ட காலமாக மறந்து போயிருந்த ஒரு காலிக் குடுவை அசைக்க முடியாத அளவுக்குக் கனமானதாக மாறியிருந்தது. ஆய்வு மேஜையில் வைத்திருந்த கலத்திலிருந்த தண்ணீர் அடியில் நெருப்பு மூட்டாமலேயே கொதித்து அரைமணி நேரத்தில் முழுவதும் ஆவியானது. ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவும் மகனும் இந்த நிகழ்வுகளைத் திடுக்கிடச் செய்யும் பரவசத்துடன் கவனித்தார்கள். விளக்கிச் சொல்ல முடியாத அந்த நிகழ்வுகளை உலோகக் கலவையின் முன்னறிவுப்புகள் என்று வியாக்கியானம் செய்தார்கள். ஒருநாள் அமரந்தாவின் தொட்டில் தானாகவே நகர்ந்து அந்த அறைக்குள் முழு வட்டமடித்தது. கதி கலங்கிய அவுரேலியானோ அதைத் தடுத்து நிறுத்தப் பாய்ந்தான். ஆனால் அவன் அப்பா அசரவில்லை. தொட்டிலை அதன் இடத்தில் வைத்து அதை ஒரு மேஜைக்காலுடன் சேர்த்துக் கட்டினார். நீண்ட காலமாகக் காத்திருந்த சம்பவம் நடக்கப் போவதாக உறுதியாக நம்பினார். அந்தச் சந்தர்ப்பத்தில்தான் அவர் சொல்வதை அவுரேலியானோ கேட்டான்: "நீ கடவுளுக்குப் பயப்படவில்லையென்றால் உலோகங்களின் மூலம் அவருக்குப் பயப்படு."

காணாமற்போய் ஏறத்தாழ ஐந்து மாதங்களுக்குப் பிறகு திடீரென்று உர்சுலா திரும்பி வந்தாள். மேம்பட்டும் இளமைப்

பொலிவுடனும் கிராமத்தில் அதுவரை பார்த்திராத பாணி ஆடைகள் அணிந்தும் வந்திருந்தாள். அதன் தாக்கத்தை ஹோசே அர்க்காதியோ புயேந்தியா வால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. “அதுவேதான்” என்று கத்தினார். “இது நடக்கப் போகிறது என்று எனக்குத் தெரியும்.” அவர் அதை உண்மையிலேயே நம்பினார். உலோகத்தைக் கையாளுவது என்ற தனது நீண்ட காலச் சிறையில் கழிந்தபோதும் அற்புதங்கள் ரசவாதத்தின் கண்டுபிடிப்பாகவோ உலோகங்களை உயிர்ப்புடன் வைத்திருக்கும் காற்றை விடுவிப்பதாகவோ வீட்டுத் தாழ்ப்பாள்களை யும் கீல்களையும் பொன்னாக மாற்றும் திறமையாகவோ இருக்கக் கூடாது என்று மனத்தின் அடியாழத்தில் பிரார்த்தித்திருந்தார். ஆனால் இப்போது நிகழ்ந்ததைத்தான் – உர்சுலாவின் திரும்புதலைத் தான் – விரும்பினார். ஆனால் அவள் அவருடைய பரவசத்தைப் பகிர்ந்துகொள்ளவில்லை. ஒரு மணி நேரம் மட்டுமே வெளியே போயிருந்தவளைப் போல அவரைச் சம்பிரதாயமாக முத்தமிட்டுவிட்டுச் சொன்னாள்;

“வாசலில் வந்து பாருங்கள்.”

தெருவில் இறங்கியதும் கூட்டத்தைப் பார்த்தார். அந்தத் திகைப்பி லிருந்து மீள அவருக்கு நீண்ட நேரம் பிடித்தது. கூட்டத்தினர் நாடோடிகள் அல்ல. அவர்களைப் போன்ற ஆண்களும் பெண்களும். நீண்ட முடியும் கறுத்த சருமமும் கொண்டவர்கள். அவர்கள் பேசும் அதே மொழியி லேயே பேசுபவர்கள். அதே வலிகளைப் பற்றிப் புகார் சொல்லுபவர்கள். அவர்களிடம் கோவேறுக் கழுதைகளின் முதுகில் சுமத்தப்பட்ட தின் பண்டங்கள் இருந்தன. மாட்டு வண்டியில் அறைக்கலன்களும் அன்றாடச் சாதனங்களும் இருந்தன. தினசரிச் சந்தைக்காரர்களின் சந்தடியில்லாமல் சுத்தமான எளிய உபகரணங்களை விற்பனைக்கு வைத்திருந்தார்கள். அவர்கள் ஒன்றோ இரண்டோ நாட்களின் தொலைவிலிருக்கும் சதுப்பு நிலத்தின் மறுபக்கத்திலிருந்து வந்திருந்தார்கள். அங்கே வருடத்தில் எல்லா மாதமும் தபால் கிடைக்கும் நகரங்கள் இருந்தன. நேர்த்தியான வாழ்க்கைக்கான உபகரணங்களுடன் அவர்களுக்குப் பழக்கமிருந்தது. உர்சுலா நாடோடிகளுடன் போய்ச் சேரவில்லை; ஆனால் மகத்தான கண்டுபிடிப்புகளுக்காக நடத்திய மனச்சோர்வு தரும் தேடலில் தன் கணவனால் கண்டுபிடிக்க முடியாத வழியை அவள் கண்டுபிடித்திருந்தாள்.

பிறந்து இரண்டு வாரங்களுக்குப் பிறகு பிலர் தெர்னேரா வின் மகன் தாத்தா – பாட்டி வீட்டுக்குக் கொண்டுவரப்பட்டான்.

தன்னுடைய ரத்த வழிச் சந்ததி அலைக்கழிவதைப் பொறுத்துக் கொள்ள முடியாத கணவரின் பிடிவாதத்துக்கு மீண்டும் ஒரு முறை உர்சுலா பணிந்தாள். கறுவிக்கொண்டுதான் அவனை ஏற்றுக்கொண்டாள். ஆனால் குழந்தை தன்னுடைய சரியான அடையாளத்தை ஒருபோதும் தெரிந்துகொள்ளக்கூடாது என்று கணவர் நிபந்தனை விதித்திருந்தார். அவனுக்கு ஹோசே அர்க்காதியோ என்று பெயர் வைத்திருந்தாலும் குழப்பத்தைத் தவிர்க்கும் பொருட்டு வெறுமனே அர்க்காதியோ என்றே அழைக்கப்பட்டான். அந்தச் சமயத்தில் நகரத்தில் ஏராளமான நடவடிக்கைகள் நடந்தன. வீட்டிலும் ஏராளமான அமளி இருந்தது. அதனால் குழந்தைகளைப் பராமரிப்பது இரண்டாம்பட்ச மானது. அவர்கள் விசிட்டேசியன் என்ற குவாஜிரோ இந்தியப் பெண்ணின் பொறுப்பில் விடப்பட்டார்கள். அவள் தனது சகோதரனுடன் நகரத்துக்கு வந்து சேர்ந்திருந்தாள். அவர்களுடைய இனத்தைப் பல ஆண்டுகளாக உறக்கமின்மைக் கொள்ளை நோய் பீடித்திருந்ததால் இடம்பெயர்ந்து வந்திருந்தார்கள். இருவரும் வெகுளிகளாக இருந்ததால் உர்சுலா வீட்டு வேலைகளில் தனக்கு உதவுவதற்காக அவர்களை அமர்த்திக்கொண்டாள். அப்படியாகத் தான் அர்க்காதியோவும் அமரந்தாவும் ஸ்பானிய மொழிக்கு முன்பே குவாஜிரோ மொழியில் பேச ஆரம்பித்தார்கள். உர்சுலா வுக்குத் தெரியாமல் பல்லி சூப் குடிக்கவும் சிலந்தி முட்டைகளைத் தின்னவும் கற்றுக்கொண்டார்கள். விலங்கு வடிவ மிட்டாய்த் தயாரிப்பு என்ற ஆதாயகரமான வியாபாரத்தில் மிக மும்முரமாக இருந்தாள் உர்சுலா. மகோந்தா மாறியிருந்தது. உர்சுலாவுடன் வந்தவர்கள் அந்த மண்ணின் வளத்தைப் பற்றியும் சதுப்பு நிலத்தோடு ஒப்பிட்டால் அதற்கு இருக்கும் அனுகூலமான நிலையைப் பற்றியும் செய்திகளைப் பரப்பினார்கள். அதனால், கடந்த காலத்தில் இடுங்கிய கிராமமாக இருந்த நிலையிலிருந்து கடைகளும் தொழிற்கூடங்களும் நிறைந்த சுறுசுறுப்பான நகரமாக மாறியிருந்தது. நிரந்தரமான வியாபார வழித்தடமாக மாறி யிருந்தது. தொளதொளப்பான காற்சட்டை அணிந்து காதுகளில் வளையம் மாட்டிய அராபியர்கள்தாம் அந்தத் தடத்தில் முதலில் வந்தார்கள். மக்காவ் பறவைகளுக்காகப் பளிங்கு மணிகளைப் பண்டமாற்றுச் செய்தார்கள். ஹோசே அர்க்காதியோவுக்குக்

கணநேரம்கூட ஓய்வு இல்லை. தன்னுடைய கற்பனைப் பிரபஞ்சத்தை விடவும் வியப்பளிக்கும்படி கண் முன்னே தெரிந்த எதார்த்தத்தால் வசீகரிக்கப்பட்டு ஆய்வுக்கூடத்தின் மேலிருந்த ஆர்வத்தை இழந்தார். மாதக் கணக்காகக் கையாண்டு பலவிதமாக மாறியிருந்த உலோகக் கலவையை அதன் வீரியமும் மதிப்பும் குறைய அப்படியே போட்டார். பழைய நாட்களின் தொழில் முனைப்புள்ள நபராக மாறினார். கிராமத்தை உருவாக்கிய காலத்தில் எல்லாருக்கும் வாய்க்காத சலுகை ஒருவருக்கு மட்டும் கிடைக்கக் கூடாது என்ற தீர்மானத்துக்கு ஏற்பத் தெருக்களையும் புதிய மனையிடங்களையும் வடிவமைத்திருந் தார். புதிதாக வருபவர்களிடையிலும் அவரைக் கலந்து ஆலோசிக்காமல் அடிக்கல் நாட்டவோ மதில்களை எழுப்பவோ முடியாது என்ற அதிகாரத்தைப் பெற்றிருந்தார். நில விநியோகத்துக்கு ஒரே ஒரு பொறுப்பாளர் அவர் மட்டுமே என்றும் முடிவுசெய்யப்பட்டிருந்தது. கழைக்கூத்து நாடோடிகள் தங்கள் கூட்டத்துடன் திரும்ப வந்தார்கள். ஹோசே அர்க்காதியோவும் அவர்களுக்கிடையில் இருப்பான் என்ற எண்ணத்தில் பெரும் மகிழ்ச்சியுடன் அவர்கள் வரவேற்கப்பட்டார்கள். அவர்களுடைய நடமாடும் கண்காட்சி அதிர்ஷ்ட விளையாட்டுகளும் சூதாட்டங்களும் கொண்ட பிரம்மாண்டமான அமைப்பாக உருமாறி யிருந்தது. ஆனால் ஹோசே அர்க்காதியோ அவர்களுடன் திரும்பிவர வில்லை. உர்சுலாவைப் பொறுத்தவரை தங்களுடைய மகனைப் பற்றிச் சொல்லக்கூடிய பாம்பு மனிதனையும் அவர்கள் கொண்டு வந்திருக்கவில்லை. எனவே சிற்றின்பத்துக்கும் வக்கிரத்துக்கும் தூதுவர்கள் என்று அந்த நாடோடிகள் கருதப்பட்டு நகரத்தில் முகாமிடவோ எதிர்காலத்தில் அங்கே கால் வைக்கவோ அனுமதிக்கப்படவில்லை. ஆனால் வியப்பூட்டும் கண்டுபிடிப்புகள் மூலமாகவும் காலங்காலமாக அடைந்த ஞானத்தின் மூலமாகவும் அந்தக் கிராமத்தின் வளர்ச்சிக்கு ஏராளமான பங்களிப்புச் செய்திருக்கும் மெல்குயாதெஸின் பழம் கூட்டத்துக்கு எப்போதும் கதவுகள் திறந்திருக்கும் என்று ஹோசே அர்க்காதியோ புயேந்தியா புலப்படுத்தினார். அந்த நாடோடிகள் சொன்னபடி பார்த்தால் மெல்குயாதெஸ் குழு பூமியிலிருந்தே காணாமல் போயிருந்தது. ஏனெனில் அவர்கள் மனித அறிவின் எல்லைகளைத் தாண்டிச் சென்றிருந்தார்கள்.

விநோதக் கற்பனைகளின் வதையிலிருந்து அப்போதைக்கு மீண்டிருந்த ஹோசே அர்க்காதியோ புயேந்தியா குறுகிய காலத்தில் கட்டுப்பாடுகளையும் பணிமுறைகளையும் ஏற்படுத்தினார். அதில் ஒரு நடவடிக்கைக்கு மட்டும் கொஞ்சம் சுதந்திரம் அளிக்கப்பட்டது. நகரம் உருவாக்கப்பட்ட காலத்திலிருந்து இசையால் பொழுதை இனிமையாக்கிக்கொண்டிருந்த பறவைகளைச் சுதந்திரமாக விடவும் அவற்றுக்குப் பதிலாக எல்லா வீடுகளிலும் இசைக் கடிகாரங்களை மாட்டிக்கொள்ளவும் அனுமதி அளிக்கப்பட்டது. மக்காவ் பறவை களுக்கு ஈடாக அராபியர்கள் விற்ற செதுக்கு மரத்தில் செய்த அற்புத மான கடிகாரங்கள் இருந்தன. ஒவ்வொரு அரைமணி நேரம் ஆகும் போதும் அனைத்தும் ஒரே சமயத்தில் ஒலித்து நகரத்தைக் குதூகலப் படுத்தும்படியாக அவற்றை அமைத்திருந்தார் ஹோசே அர்க்காதியோ

புயேந்தியா. ஒரே கோர்வையில் முன்னேறி நண்பகலின் உச்ச கட்டத்தில் எல்லாம் சேர்ந்து ஒரே கதியிலான முழுமையான வால்ட்ஸ் இசையாக ஒலித்தன. தெருக்களில் வேல மரங்களுக்குப் பதிலாக வாதுமை மரங்களை நட வேண்டுமென்று அந்த நாட்களில் முடிவுசெய்ததும் ஹோசே அர்க்காதியோ புயேந்தியாதான். அவை பட்டுப் போகாமல் பாதுகாக்கும் வழிகளைக் கண்டுபிடித்ததும் அவர்தான். இதை அவர் வெளிப்படுத்தவில்லை. பல ஆண்டுகளுக்குப் பிறகு துத்தநாகக் கூரைகள் கொண்ட மர வீடுகளின் பரப்பாக மகோந்தா மாறியபோது அந்த வாதுமை மரங்கள் பழைய தெருக்களில் முறிந்தும் புழுதி படிந்தும் நின்றிருந்தன. அவற்றை நட்டது யார் என்றே யாருக்கும் தெரியாமற்போனது.

அப்பா நகரத்தைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தும், அம்மா கோழி, மீன் வடிவிலான மிட்டாய்களின் அபார விற்பனை மூலம் – தக்கையான மரக்குச்சிகளில் கோர்க்கப்பட்ட அந்த மிட்டாய்கள் அன்றாடம் இரண்டு வேளையும் வீட்டிலிருந்து போயின – குடும்பச் செல்வத்தைப் பெருக்கிக்கொண்டும் இருந்தபோது அவுரேலியானோ கைவிடப்பட்ட ஆய்வுக்கூடத்தில் முடிவில்லாத மணி நேரங்களைச் செலவழித்துச் சுயமான பரிசோதனைகள் செய்து வெள்ளிக் கைவினை களைக் கற்றுக்கொண்டிருந்தான். அவன் வேகமாக வளர்ந்தான். வெகு குறுகிய காலத்திலேயே சகோதரன் விட்டுவிட்டுப் போயிருந்த உடைகள் அவனுக்குப் பொருந்தாமல் போயின. அப்பாவுடைய உடைகளை அணிந்துகொள்ளத் தொடங்கினான். ஆனால் மற்றவர்களைப் போலப் பருமனாக இல்லாமலிருந்தான். ஆகவே, விசிட்டேசியன் அந்தச் சட்டைகளில் இன்னும் சில மடிப்புகளைத் தைக்கவும் கால் சராய்களை மூட்டவும் வேண்டியிருந்தது. விடலைப் பருவம் அவனுடைய குரலின் மென்மையைக் கொண்டுபோயிருந்தது. ஆனால் இன்னொரு பக்கத்தில் பிறந்தபோது அவன் கண்களில் இருந்த தீவிரத் தோற்றத்தை மீண்டும் கொடுத்திருந்தது. வெள்ளிக் கைவினைப் பரிசோதனைகளில் மிகவும் கவனமாக இருந்த அவன் ஆய்வுக்கூடத்தை விட்டுச் சாப்பிடக்கூட வெகு அரிதாகவே போனான். அவனுடைய ஒதுக்கமான இயல்பைப் பற்றி வருத்தப்பட்ட ஹோசே அர்க்காதியோ புயேந்தியா ஒருவேளை அவனுக்குப் பெண் தேவை இருக்கலாம் என்ற எண்ணத்தில் வீட்டின் சாவிகளையும் கொஞ்சம் பணத்தையும் கொடுத்தார். ஆனால் அவுரேலியானோ அந்தப் பணத்தை ஒருவகைக் கரைப்பானைத் தயாரிப்பதற்காக மியூரியாட்டிக் அமிலம் வாங்கப் பயன்படுத்திக் கொண்டான். சாவிகளைப் பொன்முலாம் பூசி மெருகேற்றினான். அவனுடைய அத்துமீறல்களை அர்க்காதியோ அமரந்தா ஆகியவர் களுடையதுடன் ஒப்பிடவே முடியாது. அவர்களுக்கு ஏற்கனவே இரண்டாவது பல் முளைக்கத் தொடங்கியிருந்தது. இருந்தும் நாள் முழுக்க அந்த இந்தியர்களின் அங்கியைப் பிடித்துக்கொண்டே திரிந்தார்கள். ஸ்பானிய மொழி பேசுவதில்லை; குவாஜிரோ மொழியைத்தான் பேசுவோம் என்பதில் பிடிவாதமாக இருந்தார்கள். "நீங்கள் குறை சொல்லக்கூடாது" என்று கணவனிடம் சொன்னாள் உர்சுலா. "பெற்றோர்களின் கிறுக்குத்தனத்தைக் குழந்தைகள்

பரம்பரையாகவே பெறுகிறார்கள்" என்று தனது துரதிருஷ்டத்தைப் பற்றிப் புலம்பும்போதே குழந்தைகளின் மூர்க்கத்தனம் பன்றிவாலைப் போல அச்சமூட்டக் கூடியது என்றும் நம்பினாள். அவுரேலியானோ பார்த்த பார்வை நிச்சயமில்லாத சூழலுக்குள் அவளைப் பொதிந்தது. "யாரோ வந்துகொண்டிருக்கிறார்கள்" என்று அவளிடம் சொன்னான்.

அவன் இதுபோன்று ஆரூடம் சொல்லும்போதெல்லாம் உர்சுலா, தன்னுடைய இல்லத்தரசித்தனமான தர்க்கத்தால் அதை முறிக்க முயல்வாள். யாராவது வருவது வழக்கமானதுதான். ஒவ்வொரு நாளும் டஜன் கணக்கான வெளியாட்கள் எந்த விதமான சந்தேகத்தையோ ரகசிய எண்ணங்களையோ எழுப்பாமல் மகோந்தா வழியாகப் போகிறார்கள். இருந்தும் எல்லா தர்க்கங்களுக்கும் அப்பாற்பட்டு அவுரேலியானோ தன்னுடைய ஆரூடத்தில் உறுதியாக இருந்தான். "யாராக இருக்கும் என்று எனக்குத் தெரியாது. ஆனால் யாரானாலும் அவர்கள் ஏற்கனவே வந்துகொண்டிருக்கிறார்கள்" என்று வலியுறுத்திச் சொன்னான்.

உண்மையில் அந்த ஞாயிற்றுக்கிழமைதான் ரெபேக்கா வந்தாள். அவளுக்குப் பதினோரு வயதுதான் ஆகியிருந்தது. அவள் மனௌளரிலிருந்து சில தோல் வியாபாரிகளுடன் கடும் பயணம் செய்து வந்திருந்தாள். ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவுக்கு எழுதப்பட்ட கடிதத்துடன் அவளையும் ஒப்படைக்கும் பொறுப்பை அந்த வியாபாரிகள் ஏற்றுக்கொண்டிருந்தார்கள். ஆனால் அந்த உதவியைச் செய்யும்படி தங்களைக் கேட்டுக்கொண்ட நபர் யார் என்பதை அவர்களால் சரியாகச் சொல்ல முடியவில்லை. அவளுடைய மொத்தப் பயணத் தளவாடம் ஒரு சின்ன டிரங்குப் பெட்டி, கையால் பூக்கள் வரைந்த ஓர் ஆடும் நாற்காலி, க்ளக் – க்ளக் – க்ளக் என்று ஒலியெழுப்பும் ஒரு கித்தான் பை ஆகியவற்றைக் கொண்டிருந்தது. அந்தப் பையில்தான் அவள் தன்னுடைய பெற்றோரின் எலும்புகளைப் போட்டுச் சுமந்துகொண்டிருந்தாள். ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவின் முகவரிக்கு எழுதப்பட்ட அந்தக் கடிதம், காலத்தையும் தூரத்தையும் தாண்டி இப்போதும் அவரை நேசிக்கும் யாராலோ மிக இதமான சொற்களில் எழுதப்பட்டிருந்தது. அப்பாவியும் ஆதரவில்லாதவளுமான அந்த அநாதையை அவரிடம் சேர்ப்பது என்ற அடிப்படை மனிதாபிமான உணர்வுள்ள கடமையையே தான் செய்திருப்பதாக எழுதப்பட்டிருந்தது. கடிதத்தின்படி அந்தச் சிறுமி உர்சுலாவின் ஒன்றுவிட்ட சகோதரி; அதன் காரணமாக ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவுக்கும் தூரத்துச் சொந்தம். தன்னுடைய மறக்க முடியாத நண்பரான நிக்கனார் உயோவா, அவருடைய அருமை மனைவி ரெபேக்கா மொந்தியேல் – கடவுள் தமது புனித ராஜ்ஜியத்தில் அவர்களைக் காப்பாற்றுவாராக – இருவருக்கும் கிறித்தவ நல்லடக்கம் கிடைப்பதற்காக அவர்களின் மகள் பெற்றோருடைய எச்சங்களைச் சுமந்துகொண்டிருந்தாள். கடிதத்தில் குறிப்பிட்டிருந்த பெயர்களும் கையெழுத்தும் மிகத் தெளிவாக இருந்தன. ஆனால் ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவுக்கோ உர்சுலாவுக்கோ அந்தப் பெயரில் உறவினர்கள்

யாரும் இருந்ததாகவோ கடிதம் அனுப்பியவரின் பெயரில் யாரையும் தெரிந்திருந்ததாகவோ குறைந்தபட்சம் மனெளர் என்ற தொலைதூரக் கிராமம்கூட நினைவுக்கு வரவில்லை. அந்தச் சிறுமியிடமிருந்து மேற்கொண்டு தகவல்களைத் தெரிந்துகொள்வதும் சாத்தியமல்ல. வந்து சேர்ந்த விநாடியிலிருந்து அவள் விரலைச் சூப்பிக்கொண்டு ஆடும் நாற்காலியிலேயே உட்கார்ந்திருந்தாள். தன்னிடம் என்ன கேட்கிறார்கள் என்பதைப் புரிந்துகொண்ட அறிகுறியில்லாமல் தனது அகண்ட, அதிர்ச்சியுற்ற கண்களால் ஒவ்வொருவரையும் கவனித்துக் கொண்டிருந்தாள். கறுப்பு நிறத்தில் சாய்கோடுகள் போட்ட உடுத்து நைந்துபோன உடையை அணிந்திருந்தாள். பதப்படுத்தாத தோல் பூட்ஸுகளை அணிந்திருந்தாள். அவளுடைய தலைமுடி காதோடு சேர்த்துப் பின்பக்கமாக வாரி, கறுப்பு ரிப்பனால் கட்டப்பட்டிருந்தது. வியர்வை பட்டுப் படங்கள் அழிந்துபோன தோள் துவாலையை அணிந்திருந்தாள். வலது மணிக்கட்டில் திருஷ்டி விழாமலிருக்கப் போடும் புலிப்பல் பதித்த செப்பு வளையம் இருந்தது. அவளுடைய பச்சை நிறச் சருமமும், வட்டமானதும் முரசுபோல இறுக்கமானதுமான வயிறும் ஊட்டமின்மையையும் அவளுடைய வயதைவிட வயதான பசியையும் வெளிப்படுத்தின. ஆனால் சாப்பிடுவதற்குக் கொடுத்தபோது அதில் எதையும் சாப்பிட்டுப் பார்க்காமல் தட்டை முட்டி மேல் வைத்துக்கொண்டாள். செவிட்டூமையாக இருப்பாளோ என்றுகூட அவர்கள் சொல்லத் தொடங்கினார்கள். ஆனால் இந்தியர்கள் தமது மொழியில் தண்ணீர் வேண்டுமா என்று கேட்டதும், அவர்கள் சொன்னதைப் புரிந்துகொண்ட பாவனையில் அவள் கண்களைத் திருப்பினாள். தலையசைப்பால் ஆமாம் என்றாள்.

தங்களால் வேறு எதுவும் செய்ய முடியாது என்பதால் அவளைக் கூடவே வைத்துக்கொண்டார்கள். அவளை ரெபேக்கா என்று – அந்தக் கடிதத்தின்படி அது அவளுடைய தாயின் பெயர் – கூப்பிட முடிவு செய்தார்கள். ஏனெனில் அவுரேலியானோ எல்லாப் புனிதர்களின் பெயர்களையும் அவளிடம் வாசித்துக் காட்டியும் எந்தப் பெயருக்கும் அவளிடமிருந்து எந்த எதிர்வினையையும் பெறமுடியவில்லை. அந்தக் காலத்தில் மகோந்தாவில் கல்லறை இல்லை. அதுவரை யாரும் சாகவில்லை. நல்லடக்கத்துக்குப் பொருத்தமான இடம் கிடைக்கும்வரை அந்த எலும்புப் பையைக் காத்திருக்கச் செய்தார்கள். நீண்ட காலம் அது எல்லா இடத்திலும் கிடந்தது. எதிர்பாராத இடத்தில் கண்டு பிடிக்கப்பட்டது. அடைகாக்கும் கோழி போல எப்போதும் கொக்கரித்துக் கொண்டிருந்தது. ரெபேக்கா அந்தக் குடும்பத்தின் வாழ்க்கையுடன் கலந்துகொள்வதற்குள் நீண்ட காலம் கடந்து போனது. வீட்டின் தூரத்து மூலையில் விரலைச் சூப்பிக்கொண்டு தன்னுடைய சிறிய ஆடும் நாற்காலியில் உட்கார்ந்திருப்பாள். கடிகாரங்களின் இசையைத் தவிர வேறு எதுவும் அவள் கவனத்தைக் கவரவில்லை. ஆகாயத்தில் அந்த இசை இருக்கும் இடத்தை பார்த்துவிட முடியும் என்ற நம்பிக்கையுடன் அரைமணிக்கு ஒருமுறை தனது மருண்ட கண்களால் அண்ணாந்து பார்த்துத் தேடுவாள். பல நாள் முயன்று அவர்களால் அவளைச் சாப்பிட வைக்க முடியவில்லை. அவள் ஏன் பட்டினியால்

மின்னூலாக்கம்
முரளிதரன்
செத்துப் போகாமலிருக்கிறாள் என்று எல்லாம் தெரிந்த இந்தியர்கள் கண்டுபிடிக்கும்வரை யாருக்கும் புரியவில்லை. அவர்கள் சத்தமெழுப்பாமல் வீட்டுக்குள் பதுங்கி நடந்து, முற்றத்து ஈர மண்ணையும் தன்னுடைய விரல்களால் சுவரில் சுரண்டியெடுத்த சுண்ணாம்புத் துண்டுகளையும்தான் ரெபேக்கா தின்ன விரும்புகிறாள் என்பதைக் கண்டுபிடித்தார்கள். அவளுடைய பெற்றோரோ அவளை வளர்த்தவர்களோ இந்தப் பழக்கத்துக்காக அவளைத் திட்டியிருக்க வேண்டும் என்பது வெளிப்படை. ஏனென்றால் ரகசியமாகவும் குற்ற உணர்ச்சியுடனும் இந்தப் பொருட்களைச் சேர்த்து வைத்து யாரும் பார்க்காதபோது தின்று வந்திருக்கிறாள். அதிலிருந்து அவர்கள் அவளை மாறாத கண்காணிப்பில் வைத்தார்கள். முற்றத்தில் பசு மூத்திரத்தைத் தெளித்தார்கள். சுவர்களில் மிளகாயைப் பூசினார்கள். இந்த முறைகளால் அவளுடைய அபாயகரமான பழக்கத்திலிருந்து தோல்வியடையச் செய்துவிட முடியும் என்று நினைத்தார்கள். ஆனால் எப்படியாவது கொஞ்சம் மண்ணைக் கண்டுபிடிக்க அவள் காட்டிய மதிநுட்பத்தையும் தந்திர புத்தியையும் பார்த்த உர்சுலா இன்னும் கடுமையான நடவடிக்கை மேற்கொள்ளக் கட்டாயப்படுத்தப்பட்டாள். ஒரு பாத்திரத்தில் ஆரஞ்சுச் சாற்றையும் பேதி மருந்தையும் கலந்து இரவு முழுவதும் பனியில் வைத்தாள். மறுநாள் அதை எடுத்து அவளுக்கு வெறும் வயிற்றில் குடிக்கக் கொடுத்தாள். மண்ணைத் தின்னும் கெட்ட பழக்கத்துக்கு இதுதான் கைகண்ட மருந்து என்று யாரும் அவளிடம் சொல்லியிருக்கவில்லை. ஆனாலும் கசப்பான எதுவும் காலி வயிற்றுக்குள் போனால் கல்லீரல் சரியாகிவிடும் என்று நினைத்தாள். தனது பூஞ்சைத்தனத்தையும் மீறி ரெபேக்கா வலுவாக எதிர்த்தாள். அந்த மருந்தை விழுங்கச் செய்ய ஒரு கன்றுக் குட்டியைப் போல அவர்கள் அவளைக் கட்டிப்போட வேண்டியிருந்தது. அவளுடைய உதைகளையும் விநோத ஓசையுடன் அவள் சொன்ன வார்த்தைகளையும் – அவர்களுடைய மொழியில் ஒருவர் ஒருபோதும் கற்பனைகூடச் செய்யமுடியாத மிகவும் ஆபாசமான வார்த்தைகளை அவள் சொல்லுகிறாள் என்பதை அவமதிக்கப்பட்ட அந்த இந்தியர்கள் சொன்னார்கள் – அவளுடைய கடிகளையும் எச்சிலையும் அவர்களால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. இது புரிந்ததும் உர்சுலா சிகிச்சையுடன் சாட்டையடியையும் சேர்த்துக்கொண்டாள். பேதி மருந்தா விழுந்த அடிகளா எதன் விளைவு என்று நிரூபிக்க முடியவில்லை. ஆனால் சில வாரங்களில் ரெபேக்கா தேறி வரும் அறிகுறிகளைக் காட்டத் தொடங்கினாள் என்பது மட்டும் உண்மை. அர்க்காதியோவுடனும் அமரந்தாவுடனும் விளையாட்டுகளில் கலந்துகொண்டாள். அவர்கள் அவளை அக்காளாக நடத்தினார்கள். அவள் தட்டுகளை முறையாகப் பயன்படுத்தி மனமாரச் சாப்பிட்டாள்.

இந்திய மொழியைப் போல ஸ்பானிய மொழியையும் அவள் அத்தனை சரளமாகப் பேசுகிறாள். உடலுழைப்பில் அவளுக்கு அபாரமான திறமை இருக்கிறது. தானாகக் கண்டுபிடித்த வேடிக்கையான வார்த்தைகளைப் போட்டுக் கடிகாரங்களின் வால்ட்ஸ் இசையை அவளால் பாட முடியும் என்பதெல்லாம் சீக்கிரமே தெரியவந்தன.

அவளைக் குடும்பத்தில் ஒருத்தியாக நினைக்க அதிக காலம் தேவைப் படவில்லை. சொந்தக் குழந்தைகள் காட்டியதைவிட அதிகமான அன்பை அவள் உர்சுலாவிடம் காட்டினாள். அர்க்காதியோவையும் அமரந்தாவையும் தம்பி தங்கை என்று அழைத்தாள். அவுரேலியானோவை மாமா என்றும் ஹோராசே அர்க்காதியோ புயேந்தியாவைத் தாத்தா என்றும் கூப்பிட்டாள். ஆகக் கடைசியில் மற்றவர்களைப் போல அவளுக்கும் தகுதி வந்து அவள் ரெபேக்கா புயேந்தியாவாக ஆனாள். அவளுக்கு இருந்தது அந்த ஒரு பெயர் மட்டுமே. மரணம் வரை அந்தப் பெயரின் கண்ணியத்தைத் தாங்கியிருந்தாள்.

மண்ணைத் தின்னும் கெட்ட பழக்கத்திலிருந்து சிகிச்சை பெற்று மற்ற பிள்ளைகளின் அறையில் ரெபேக்காவும் தூங்கவிடப்பட்ட சமயம், ஓர் இரவில் அவர்களுடன் படுத்திருந்த இந்தியப் பெண் தற்செயலாக விழித்துப் பார்த்தபோது விசித்திரமான, தொடர்பற்ற சத்தம் மூலையிலிருந்து எழுவதைக் கேட்டாள். ஏதாவது மிருகம் அறைக்குள் நுழைந்திருக்கலாம் என்று நினைத்து திடுக்கிட்டு எழுந்தாள். அப்போது ரெபேக்கா விரலைச் சூப்பியபடி ஆடும் நாற்காலியில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தாள். இருட்டில் அவள் கண்கள் பூனையின் கண்களைப் போல மின்னின. தன்னுடைய விதியால் அச்சமுற்றுச் சோர்ந்துபோன விசிடேசியா, ஒரு பழைய ராஜ்ஜியத்தில் இளவரசனையும் இளவரசியையும் போல இருந்த தன்னையும் சகோதரனையும் என்றென்றைக்குமாக நாட்டை விட்டு வெளியேறச் செய்த நோயின் அறிகுறிகளை அந்தக் கண்களில் பார்த்தாள். அது உறக்கமின்மைக் கொள்ளை நோய்.

இந்தியன் கதௌர், வீட்டைவிட்டுக் காலையில் வெளியேறினான். பூமியின் கோடிக்குப் போனாலும் அந்தக் கொடிய வியாதி தன்னைப் பின் தொடரும் என்று அவளுடைய விதிவசத்தை நம்பும் இதயம் சொன்னதால் அவனுடைய சகோதரி அங்கேயே தங்கினாள். விசிடேசியாவின் எச்சரிக்கை யாருக்கும் புரியவில்லை. "நாம் இனிமேல் ஒருபோதும் தூங்க முடியாது என்றால் அவ்வளவும் நல்லதுதான்" ஹோராசே அர்க்காதியோ புயேந்தியா வேடிக்கையாகச் சொன்னார். "அதனால் வாழ்க்கையிலிருந்து நிறையக் கிடைக்கும்." ஆனால் அந்த இந்தியப் பெண் உறக்கமின்மைக் கொள்ளை நோயின் மிகவும் பயமுறுத்தும் அம்சங்களைப் பற்றி விளக்கினாள். உறக்கமின்மை வியாதி என்பது தூக்கம் வராமலிருப்பது மட்டுமல்ல. அதனால் உடம்புக்குக் களைப்பு எதுவும் நேர்ந்துவிடாது. மாறாக அதன் கட்டுக்கடங்காத வளர்ச்சி மேலும் சிக்கலான தன்மைக்குக் கொண்டு சென்றுவிடும். ஞாபக மறதியில் கொண்டுபோய் விடும். ஒரு நோயாளி அவருடைய விழிப்பு நிலைக்குப் பழக்கப்பட்டுவிட்டால் அவருடைய ஞாபகத்திலிருந்து இளம்பருவமே அழிக்கப்பட்டுவிடும்.

பிறகு பொருட்களின் பெயரும் அவை பற்றிய எண்ணங்களும் மறைந்துவிடும். கடைசியாக மனிதர்கள் அடையாளம் அழிந்து தமது சொந்த இருப்பு பற்றிய உணர்வுகளும் அழிந்து இறந்த காலமே இல்லாத மூடத்தனத்துக்குள் சரிந்துவிடுவார்கள் என்று குறிப்பாகச்

சொன்னாள். ஹோராசே அர்க்காதியோ புயேந்தியா உயிர்போய்விடுவது போலச் சிரித்தார். இந்தியர்களின் மூட நம்பிக்கைகளால் கண்டு பிடிக்கப்பட்ட வியாதிகளில் இதுவும் ஒன்று என்று எண்ணினார். ஆனால், உர்சுலா பாதுகாப்பை முன்னிட்டு முன்னெச்சரிக்கையாக ரெபேக்காவை மற்ற குழந்தைகளிடமிருந்து பிரித்து வைத்தாள்.

விசிடேசியாவின் அச்சுறுத்தல் அடங்கிய பல வாரங்களுக்குப் பிறகு ஹோராசே அர்க்காதியோ தூக்கம் வராமல் தனது படுக்கையில் புரண்டுகொண்டிருப்பதை உணர்ந்தார். விழித்துப் பார்த்த உர்சுலா என்ன ஆயிற்று என்று விசாரித்தாள்: “நான் மறுபடியும் புருடென்சியோ அகுய்லரைப் பற்றி யோசித்துக்கொண்டிருந்தேன்” என்றார். அவர்கள் ஒரு நிமிடம்கூடத் தூங்கவில்லை. ஆனால் அடுத்த நாள் அவர்கள் அந்த மோசமான இரவை மறந்து ஆசுவாசமாகவே உணர்ந்தார்கள். உர்சுலாவுக்குப் பிறந்தநாள் பரிசாகக் கொடுக்கவிருந்த புரூச்சுக்குத் தங்கமுலாம் பூசுவதற்காக ஆய்வுக்கூடத்திலேயே முந்தைய இரவைக் கழித்ததாகப் பகலுணவு வேளையில் அவுரேலியானோ சொன்னான். இருந்தும் தூக்கக் கலக்கமில்லாமல் புத்துணர்ச்சியுடனே இருப்பதாகவும் ஆச்சரியப்பட்டான். மூன்றாவது நாள் தூங்கும் நேரம் ஆகியும் யாருக்கும் தூக்கம் வரவில்லை என்பதில் அவர்கள் கலவரப்படவில்லை. ஐம்பது மணி நேரத்துக்கும் மேலாகத் தாங்கள் தூங்கவே இல்லை என்பதும் அவர்களுக்குப் புரிந்தது.

“குழந்தைகள்கூட விழித்திருக்கிறார்கள்” என்று அந்த இந்தியப் பெண் அழுத்தமான தீர்மானத்துடன் சொன்னாள். “இந்தக் கொள்ளை நோய் ஒரு வீட்டுக்குள் புகுந்துவிட்டால் யாரும் அதனிடமிருந்து தப்ப முடியாது.”

உண்மையில் அவர்கள் எல்லாரும் உறக்கமின்மை நோயால் பீடிக்கப்பட்டிருந்தார்கள். தன்னுடைய தாயிடமிருந்து மூலிகைகளின் மருத்துவக் குணங்களைப் பற்றித் தெரிந்துவைத்திருந்த உர்சுலா எருக்கஞ் சாற்றை வடித்து எல்லாரையும் குடிக்கச் செய்தாள். இருந்தும் அவர் களுக்குத் தூக்கம் வரவில்லை. நின்ற நிலையிலேயே கனவு கண்டபடி முழுநாளையும் கழித்தார்கள். அந்தத் தெளிந்த பொய்த் தோற்ற நிலையில் அவர்கள் கண்டது தங்களுடைய பிம்பங்களை மட்டுமல்ல; மற்றவர்கள் கனவில் கண்ட பிம்பங்களையும் சிலர் பார்த்தார்கள். வீடு முழுக்க விருந்தாளிகள் நிரம்பியிருப்பது போலிருந்தது அது. சமையலறை மூலையில் ஆடும் நாற்காலியில் உட்கார்ந்து தன்னைப் போலவே இருந்த ஒருவனைக் கனவில் கண்டாள் ரெபேக்கா. அவன் வெள்ளை உடையணிந்திருந்தான். அவனுடைய சட்டையின் கழுத்துப் பட்டி தங்கப் பொத்தானால் மூடப்பட்டிருந்தது. அவளுக்காக ரோஜாப் பூக்கள் அடுக்கிய மலர்க்கொத்தைக் கொண்டுவந்திருந்தான். அழகான கைகள் கொண்ட ஒரு பெண்ணும் அவனுடன் இருந்தாள். அவள் மலர்க்கொத்திலிருந்து ஒரு ரோஜாப் பூவை எடுத்து அந்தக் குழந்தையின் முடியில் சூட்டினாள். அவர்கள்தாம் ரெபேக்காவின் பெற்றோர் என்பது உர்சுலாவுக்குப் புரிந்தது. ஆனால் அவர்களை அடையாளம் கண்டுகொள்ள எவ்வளவு சிரமப்பட்டும் அவர்களை முன்பின் பார்த்த

தில்லை என்று நிச்சயப்படுத்திக் கொண்டாள். இதற்கிடையில் ஹோரசே அர்க்காதியோ புயேந்தியாவால் தனக்குத் தானே ஒருபோதும் மன்னிப்புக் கொடுத்துக்கொள்ள முடியாத கவனக் குறைவு காரணமாக அந்த வீட்டில் தயாரிக்கப்பட்ட மிட்டாய் விலங்குகள் அப்போதும் நகரத்தில் விற்பனையாகிக்கொண்டிருந்தன. குழந்தைகளும் பெரியவர்களும் – உறக்கமில்லாத பச்சைச் சேவல்களையும் உறக்கமில்லாத வசீகர வெண் சிவப்பு மீன்களையும் உறக்கமில்லாத இளம் மஞ்சள் குதிரைகளையும் ஆனந்தமாகச் சப்பிக்கொண்டிருந்தார்கள். அதனால் திங்கட்கிழமை விடியற்காலை முழு நகரமும் விழித்துக்கொண்டேயிருந்தது தெரிந்தது. முதலில் யாரும் பயப்படவில்லை. மாறாக, அந்த நாட்களில் மகோந்தாவில் செய்து தீர்க்க வேண்டிய வேலைகள் ஏராளமாகவும் நேரம் குறைவாகவும் இருந்ததால் தூங்காமலிருந்ததில் அவர்கள் மகிழ்ச்சியே அடைந்தார்கள். அவர்கள் கடுமையாக வேலை செய்தார்கள். அதனால் விரைவிலேயே அவர்களுக்குச் செய்ய எதுவும் இல்லாமல் போனது. அதிகாலை மூன்று மணிக்குக்கூடக் கைகளைக் கட்டிக்கொண்டு கடிகாரத்தின் நடன இசையில் ஒலிக்கும் ஸ்வரங்களை எண்ணிக்கொண்டிருப்பதைப் பார்க்க முடிந்தது. களைப்பால் அல்லாமல் கனவு காணும் ஏக்கத்துக்காகத் தூங்க விரும்பியவர்கள் தங்களைச் சோர்வடையச் செய்துகொள்ள எல்லா வகையிலும் முயன்றார்கள்.

அவர்கள் கூட்டமாகச் சேர்ந்து ஓயாமல் பேசிக்கொண்டிருந்தார்கள். ஒரே வேடிக்கைத் துணுக்கையே மணிக்கணக்காகத் திரும்பத் திரும்பச் சொன்னார்கள். கதைசொல்லி ஒருவன், காயடிக்கப்பட்ட சேவலின் கதையைச் சொல்லத் தொடங்கியது இதைச் சலிப்பின் எல்லைகளை மீறிச் சிக்கலாக்கியது. முடிவே இல்லாத விளையாட்டாக ஆனது. காயடிக்கப்பட்ட சேவலின் கதையைத் தான் சொன்னால் கேட்க விருப்பமா என்று அவன் கேட்டதும் அவர்கள் ஆமாம் என்றார்கள்.

ஆமாம் என்று அவர்கள் பதில் சொன்னதும் கதைசொல்லி தான் அவர்களை ஆமாம் என்று சொல்லும்படி கேட்கவில்லை என்றும் காயடிக்கப்பட்ட சேவலின் கதையைத் தான் சொன்னால் கேட்க விருப்பமா என்று கேட்டதாகச் சொன்னதும் அவர்கள் இல்லை என்று பதில் சொன்னதும் கதைசொல்லி தான் அவர்களை இல்லை என்று சொல்லும்படி கேட்கவில்லை என்றும் காயடிக்கப்பட்ட சேவலின் கதையைத் தான் சொன்னால் கேட்க விருப்பமா என்று கேட்டதாகச் சொன்னதும் அவர்கள் மௌனமாக இருந்துவிட, கதைசொல்லி தான் அவர்களை மௌனமாக இருக்கும்படி சொல்லவில்லை என்றும் காயடிக்கப்பட்ட சேவலின் கதையைத் தான் சொன்னால் கேட்க விருப்பமா என்று கேட்டதாகச் சொல்லியும் அவர்களில் ஒருவர்கூட இடத்தைவிட்டுப் போகாமலிருந்தது ஏனென்றால் கதை சொல்லி அவர்களைப் போகச் சொல்லவில்லை என்றும் காயடிக்கப்பட்ட சேவலின் கதையைத் தான் சொன்னால் கேட்க விருப்பமா என்று கேட்டதாகவும் சொல்லுவான் என்பதால் தான். அந்த விபரீத வட்டம் பல இரவுகள் தொடர்ந்தது.

கொள்ளை நோய் நகரத்துக்குள் ஊடுருவியிருப்பது தெரிந்ததும் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா தூக்கமின்மை வியாதி பற்றித் தனக்குத் தெரிந்தவற்றைச் சொல்லக் குடும்பத் தலைவர்களை ஒன்று திரட்டினார். சதுப்பு நிலத்திலிருக்கும் மற்ற நகரங்களுக்கும் நோய் பரவி விடாமல் தடுப்பதற்கான வழிமுறைகளை அவர்களும் ஏற்றுக் கொண்டார்கள். அதனால்தான் மக்காவ் பறவைகளுக்குப் பதிலாக அராபியர்கள் கொடுத்திருந்த மணிகளை ஆடுகளின் கழுத்திலிருந்து அவிழ்க்க நேர்ந்தது. அவற்றை நகரத்தின் நுழைவாயிலில் வாயில் காப்பவர்களின் அறிவுரையைக் கேட்காமல் நகரத்துக்குள்ளே வருபவர் களின் பார்வைக்கு வைத்தார்கள். மகோந்தாவின் தெருக்களைக் கடந்து செல்லும் எல்லா வெளியாட்களும் அந்த மணிகளை ஒலிக்கச் செய்து நடக்கவேண்டும். அதன் மூலம் நோயாளிகள் அவர்கள் ஆரோக்கியவான்கள் என்று தெரிந்துகொள்வார்கள். அங்கே தங்கி யிருக்கும்போது வெளியாட்கள் எதையும் சாப்பிடவோ குடிக்கவோ அனுமதிக்கப்படவில்லை. வாய் வழியாகத்தான் நோய் பரவுகிறது என்பதில் சந்தேகமில்லை. தவிர எல்லா உணவுப் பதார்த்தங்களிலும் பானங்களிலும் உறக்கமின்மை நோய் தொற்றியிருந்தது. அப்படியாக அவர்கள் அந்தக் கொள்ளை நோயை நகரத்தின் சுற்று வட்டாரத்துக் குள்ளாகவே கட்டுப்படுத்தினார்கள். வலுவான இந்தத் தடுப்பு நடவடிக்கையால் நெருக்கடியான சூழலை இயற்கையான ஒன்றாகவே ஏற்றுக்கொள்ளும் நாளும் வந்தது. வேலைகள் மறுபடியும் அவற்றின் தாள கதியில் தொடரும் வகையில் வாழ்க்கை ஒழுங்குபடுத்தப்பட்டது. அதன் பிறகு யாரும் தூக்கம் என்ற பயனில்லாத வழக்கத்தைப் பற்றிக் கவலைப்படவில்லை.

அவுரேலியானோதான் பல மாதங்களின் நினைவு இழப்பு நோயிலிருந்து அவர்களைப் பாதுகாத்த சூத்திரத்தைக் கண்டுபிடித்தான். அதைத் தற்செயலாகக் கண்டுபிடித்தான். உறக்கமின்மை நோயால் ஆரம்பத்திலேயே பாதிக்கப்பட்டவர்களில் அவன் ஒருவன். அவன் வெள்ளிக் கைவேலைப்பாடுகளில் தேறியிருந்தான். ஒருநாள் உலோகங் களைத் தட்டித் தகடாக்கும் பட்டடைக் கல்லைத் தேடிக்கொண் டிருந்தான். அதன் பெயர் அவன் ஞாபகத்துக்கு வரவில்லை. அவன் அப்பா "பட்டடைக் கல்" என்றார். அவுரேலியானோ அந்தப் பெயரை ஒரு துண்டுக் காகிதத்தில் எழுதி அந்தச் சிறிய பட்டடைக் கல்லின் அடிப்பாகத்தில் ஒட்டி வைத்தான். எதிர்காலத்தில் அந்தப் பெயர் மறந்துவிடாமலிருக்க அதுதான் சரியான வழி என்று அவனுக்கு நிச்சயம் இருந்தது. அந்தச் சாமானின் பெயர் ஞாபகம் வைத்துக் கொள்ளக் கடினமான பெயரில் இருந்ததால்தான் நினைவு இழப்பின் முதல் அடையாளமானது என்பது அவனுக்குப் புரியவில்லை. ஆனால் சில நாட்களுக்குப் பிறகு ஆய்வுக்கூடத்திலிருக்கும் ஒவ்வொரு பொருளின் பெயரையும் தன்னால் நினைவில் வைத்துக்கொள்ள முடியாமல் போகும் சிக்கலைக் கண்டுபிடித்தான். அதைத் தொடர்ந்து அந்தந்தப் பொருளின் மீது அதனதன் பெயரைக் குறித்து வைத்தான். அவற்றை அடையாளம் காண அவன் செய்ய வேண்டியதெல்லாம் அந்த எழுத்துப் பதிவை வாசிப்பதுதான்.

இளம் பருவத்தின் மிக ஈர்ப்புள்ள சம்பவங்கள்கூட மறந்துபோகும் தன்னுடைய அதிர்ச்சியை அப்பா அவனிடம் தெரிவித்தபோது அவுரேலியானோ தன்னுடைய வழிமுறையை அவருக்கு விளக்கினான். ஹோசே அர்க்காதியோ புயேந்தியா அதை வீட்டிலும் பின்னர் மொத்தக் கிராமத்திலும் நடைமுறைப்படுத்தினார். மையில் தோய்த்த தூரிகையால் ஒவ்வொரு பொருளின் மேலும் அதனதன் பெயரைக் குறியிட்டார். மேஜை, நாற்காலி, கடிகாரம், கதவு, சுவர், படுக்கை, வாணலி. தொழுவத்துக்குப் போய் விலங்குகள் மேலும் தாவரங்கள் மேலும் குறியிட்டார். பசு, ஆடு, பன்றி, கோழி, மரச்சீனி, சேம்பு, வாழை. ஞாபக மறதியின் முடிவற்ற சாத்தியங்களைப் பற்றி ஆராய்ந்த போது, பொருட்கள் அவற்றின் அடையாளக் குறிப்பால் இனங்காணப் படும் நாள் வரும் என்றும் யாரும் அவற்றின் பயன்களை நினைக்க மாட்டார்கள் என்றும் மெல்ல மெல்ல உணர்ந்தார். அதன் பிறகு அவர் மும்முரமாகச் செயல்பட்டார். நினைவு இழப்புக்கு எதிராக மகோந்தாவாசிகள் எப்படிப் போராடினார்கள் என்பதற்குச் சரியான சான்று பசுவின் கழுத்தில் அவர் கட்டிவிட்ட குறிப்பு. இது பசு. ஒவ்வொரு நாளும் காலை பசுவைக் கறக்க வேண்டும். அப்போது அது பால் தரும். பாலூற்றிய காப்பி தயாரிக்க வேண்டுமானால் பாலைக் காய்ச்ச வேண்டும். நழுவிக்காணாமற் போகும் எதார்த்த நிலையைத் தற்காலிகமாகச் சொற்களால் தக்கவைக்க முயன்றும் எழுதப்பட்ட எழுத்துகளின் மதிப்பை அவர்கள் மறந்துவிடும்போது மீட்கமுடியாதபடி எதார்த்தம் தப்பிக்கொண்டிருப்பதைப் பார்த்தும் வாழ்ந்துகொண்டிருந்தார்கள்.

சதுப்பு நிலத்துக்குச் செல்லும் சாலையின் தொடக்கத்தில் **'மகோந்தா'** என்று எழுதிய பலகையையும் முக்கியத் தெருவில் **'கடவுள் இருக்கிறார்'** என்ற இன்னொரு பெரிய பலகையையும் வைத்தார்கள். பொருட் களையும் உணர்ச்சிகளையும் நினைவில் வைத்துக்கொள்ள உதவும் குறிப்புகள் எல்லா வீடுகளிலும் எழுதப்பட்டன. ஆனால் அந்தத் திட்டம் மிகுந்த கவனத்தையும் தார்மீக வலுவையும் வலியுறுத்தியது. பலரும் தாங்களாகவே உருவாக்கிக்கொண்ட கற்பனை எதார்த்தத் திடம் சரணடைந்திருந்தார்கள். அது குறைந்த நடைமுறைச் சாத்தியம் கொண்டதாக இருந்தது. ஆனால் மிகுந்த ஆறுதல் அளிப்பதாக இருந்தது. முன்பு சீட்டுகளைப் பயன்படுத்தி எதிர்காலத்தைச் சொன்னது போலக் கடந்த காலத்தை வாசித்துத் தெரிந்துகொள்ளும் தந்திரத்தை பிலர் தெர்னேரா கண்டுபிடித்துப் பரப்பினாள். இந்த வழியைப் பின்பற்றி உறக்கமின்மை நோயால் பீடிக்கப்பட்டவர்கள் அந்தச் சீட்டுகள் கொடுத்த நிச்சயமின்மை மேல் ஒரு உலகத்தைப் படைத்து வாழத் தொடங்கி னார்கள். அந்த உலகில் அப்பா என்பவர் ஏப்ரல் மாதத் தொடக்கத்தில் வந்த கறுப்பு ஆசாமி என்று குழப்பமாக நினைவுகொள்ளப்பட்டார். இடது கையில் தங்க மோதிரம் போட்டிருக்கும் கறுத்த பெண்மணி என்று அம்மா ஞாபகம் வைத்துக்கொள்ளப்பட்டாள். ஒருவருடைய பிறந்த தினம் லாரெல் மரத்தில் வானம்பாடி பாடிய கடைசிச் செவ்வாய்க் கிழமை என்று குறுக்கப்பட்டது. இந்த நடைமுறைகளால் ஏமாற்றமடைந்த ஹோசே அர்க்காதியோ புயேந்தியா, முன்பு

நாடோடிகளின் அற்புதக் கண்டுபிடிப்புகளை நினைவில் வைத்துக் கொள்வதற்காக உருவாக்க நினைத்திருந்த ஞாபகப் பொறியை நிர்மாணிக்க முடிவுசெய்தார். ஒருவர் தன் வாழ்நாள் முழுவதும் அடைந்த அறிவு மொத்தத்தையும், ஆரம்பம் முதல் முடிவுவரை எல்லா நாட்களிலும் காலையில் சோதித்துப் பார்க்கும் வாய்ப்பை ஆதார மாகக் கொண்டது அந்தப் பொறியின் அமைப்பு. ஓர் சுழலும் அகராதியாக அதை யோசித்திருந்தார். நெம்புகோல் மூலம் இயக்க முடியும் என்பதால் சில மணி நேரங்களிலேயே ஒருவருக்கு அவருடைய வாழ்க்கைக்குத் தேவையான கருத்துகள் கண்முன்னால் கடந்து செல்லும். ஏறத்தாழப் பதினான்காயிரம் தகவல்களை எழுதி முடித்திருந்தபோது, சதுப்பு நிலத்திலிருந்து வரும் சாலையில் கயிற்றால் இறுக்கிக் கட்டிய பின்பும் பிதுங்கியிருந்த பெட்டியைத் தூக்கிக்கொண்டும் கறுப்பு நிறத் துணியால் மூடியிருந்த வண்டியை இழுத்துக்கொண்டும் விநோதத் தோற்றத்தில் ஒருவன் தென்பட்டான். அவன் நேராக ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவின் வீட்டிற்குப் போனான்.

கதவைத் திறந்துவிட்ட விசிட்டேசியாவுக்கு அவனை அடையாளம் தெரியவில்லை; மீட்க முடியாதபடி மறதியின் புதை மணலில் ஆழ்ந்து கொண்டிருக்கும் அந்த நகரத்தில் எதையும் விற்க முடியாது என்று உணராமல் எதையாவது விற்க வந்தவனாக இருக்கலாம் என்று எண்ணினாள். அவன் முதிர்ந்து தளர்ந்தவனாக இருந்தான். அவனுடைய குரல் நிச்சயமின்மைகளால் உடைந்திருந்தாலும் அவனுடைய கைகள் தட்டுத் தடுமாறிப் பொருட்களின் இருப்பைத் துளாவின. எனினும் இப்போதும் மனிதர்கள் உறங்க முடிவதும் நினைவில் வைத்துக்கொள்ளவும் முடிவதுமான உலகத்திலிருந்து அவன் வந் திருக்கிறான் என்பது வெளிப்படை. அவன் வரவேற்பறையில் உட்கார்ந்து ஒட்டுப்போட்ட கறுப்பு நிறத் தொப்பியால் தனக்குத்தான் விசிறியபடி சுவர்களில் ஒட்டியிருந்த அடையாளச் சீட்டுகளைப் பச்சாதாபத்துடன் வாசித்துக்கொண்டிருந்ததை ஹோசே அர்க்காதியோ புயேந்தியா பார்த்தார். முன்காலத்தில் நன்கு தெரிந்த இப்போது நினைவுக்கு வராத ஒருவன் என்ற எண்ணத்துடனேயே பேரன்புடன் அவனுக்கு முகமன் கூறினார். ஆனால் விருந்தாளிக்கு அவருடைய தடுமாற்றம் புரிந்தது. தான் மறக்கப்பட்டிருக்கிறோம் என்று உணர்ந்தான். அது மனத்தின் மீளா மறதி அல்லவென்றும் அதைவிட வேறுபட்ட குரூரமான மாற்ற முடியாத மறதியென்றும் உணர்ந்தான். அது மரணத்தின் மறதி என்று அவன் நன்றாகவே தெரிந்துவைத்திருந்தான். எனவே புரிந்துகொண்டான். வகைப்படுத்த முடியாத பல சாமான்களைத் திணித்து வைத்திருந்த பெட்டியைத் திறந்து நிறையக் குடுவைகள் வைத்திருந்த சிறிய பேழையை எடுத்தான். மென்னிறப் பானத்தை ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவுக்குக் குடிக்கக் கொடுத்தான். அதன் வெளிச்சம் அவரது நினைவில் படர்ந்தது. சீட்டு ஒட்டிய பொருட்கள் நிரம்பிய அலங்கோலமான வரவேற்பறையில் இருப்பதைப் பார்ப்பதற்கும் சுவர்களில் மடத்தனமாக எழுதப்பட்டிருந்தவற்றைப் பார்த்து வெட்கப்படுவதற்கும் புதிதாக வந்தவனைக் கண்கள் மின்ன வரவேற்பதற்கும் முன்பே அவர் விழிகள் ஈரமாயின. அது மெல்குயாதெஸ்.

மகோந்தா, தனது நினைவு திரும்புதலைக் கொண்டாடிக் கொண்டிருந்தபோது ஹோரசே அர்க்காதியோ புயேந்தியாவும் மெல்குயாதெஸும் தமது பழைய நட்பைத் தூசி தட்டிக் கொண்டிருந்தார்கள். நாடோடி அந்த நகரத்திலேயே தங்க விரும்பினான் அவன் சரியாகச் சாவினூடே கடந்து வந்திருந்தான். ஆனால் அந்தத் தனிமையைப் பொறுக்க முடியாமல்தான் திரும்பி வந்திருந்தான். வாழ்க்கைமீது வைத்த நம்பிக்கையால் தனது இயற்கைக்கு அதீதமான ஆற்றல்களை இழந்திருந்த அவன் தன்னுடைய இனக்குழுவினரால் வெளியேற்றப்பட்டிருந்தான். மரணத்தால் இன்னும் கண்டுபிடிக்கப் படாத அந்த உலகின் மூலையில் தஞ்சமடையத் தீர்மானித்தான். பாதரச ஆவி மூலம் படமெடுக்கும் ஆய்வுக்கூடத்தை நடத்தவும் முடிவெடுத்தான். அந்தக் கண்டுபிடிப்பைப் பற்றி ஹோரசே அர்க்காதியோ புயேந்தியா ஒருபோதும் கேள்விப்பட்டிருக்கவில்லை. ஆனால் தானும் தன்னுடைய குடும்பமும் மின்னும் உலோகத்தாளில் நிரந்தரமாகப் பதியப்பட்டிருப்பதைப் பார்த்ததும் திகைப்பில் ஊமையானார். அதுதான் பாதரச ஆவி ஆக்ஸிஜனேற்ற தினம். அந்தப் பதிவில் ஹோரசே அர்க்காதியோ புயேந்தியா ஒட்ட வெட்டிய நரை முடியுடன் இருந்தார். அவரது சட்டையின் அட்டையாலான கழுத்துப் பட்டி தாமிரப் பித்தானால் இணைக்கப்பட்டிருந்தது. திகைப்புடன் பார்ப்பது போன்ற கம்பீர பாவனையுடன் இருந்தார். உர்சுலா அடக்கமாட்டாத சிரிப்புடன் "பயந்தாங்குளி ஜெனரல்" என்று வர்ணித்தாள். பாதரச ஆவி மூலம் படமெடுத்த அந்த அருமையான டிசம்பர் மாதக் காலைப் பொழுதில் ஹோரசே அர்க்காதியோ புயேந்தியா உண்மையிலேயே பயந்திருந்தார். தன்னுடைய பிம்பம் உலோகத் தகட்டில் நிலைத்து இருக்கும்போது மற்றவர்கள் மெல்ல மெல்லத் தேய்ந்து மறைந்துவிடுவார்கள் என்று யோசித்துப் பயந்தார். வழக்கத்துக்கு மாறாக உர்சுலாதான் அவருடைய தலையிலிருந்து அந்த யோசனையை வெளியேற்றினாள். அவளேதான் தனது பழைய கசப்பை மறந்து மெல்குயாதெஸ் அந்த வீட்டிலேயே தங்கட்டும் என்றும் முடிவெடுத்தாள். இருந்தும் தன்னைப் படமெடுக்க அவள் அனுமதிக்கவில்லை. அவளுடைய வார்த்தைகளின்படி சொல்வ தென்றால் பேரக் குழந்தைளுக்கு ஒரு கேலிப் பொருளாக இருக்க விரும்பவில்லை. அன்று காலை குழந்தைகளுக்கு இருப்பதிலேயே நல்ல உடைகளை அணிவித்தாள். முகத்துக்குப் பவுடர் பூசினாள். மெல்குயாதெஸின் அற்புதக் காமிராவுக்கு முன்னால் இரண்டு நிமிடங்கள் அசையாமல் நிற்பதற்காக ஒவ்வொருவருக்கும் ஒரு கரண்டி நிறைய மஜ்ஜை ரசத்தைக் குடிக்கக் கொடுத்தாள். அந்தக் குடும்பப் படத்தில் ஒன்றே ஒன்று மட்டுமே என்றென்றைக்குமாக மிஞ்சியது. அதில் அவுரேலியானோ கறுப்பு வெல்வெட் உடையில் அமரந்தாவுக்கும் ரெபேக்காவுக்கும் நடுவில் தோற்றமளித்தான். அநேக ஆண்டுகளுக்குப் பிறகு துப்பாக்கிப் படையை எதிர்கொண்டபோது அவனிடம் இருந்த அதே உள்நோக்குப் பார்வைதான் அப்போதும் இருந்தது. ஆனால் அப்போது தன்னுடைய விதியின் முன்னறிவிப்பை அவன் உணர்ந்திருக்கவில்லை. அவன் தேர்ந்த வெள்ளி வேலை நிபுணனாக இருந்தான். அவனுடைய வேலையின் நுட்பத்துக்காகச் சதுப்பு நிலம் முழுக்கப்

பாராட்டப்பட்டான். மெல்குயாதெஸின் கிறுக்கு ஆய்வுக் கூடத்தைத்தான் அவன் பகிர்ந்துகொண்டிருந்தான். அதற்குள் அவன் மூச்சுவிடும் ஓசைகூடக் கேட்டதில்லை. குடுவைகளும் தட்டுகளும் மோதிக்கொள்ளும் சத்தத்துக்கு இடையிலும் முட்டினாலும் மோதினாலும் அமிலங்களும் வெள்ளிப் புரோமைடும் சிதறும் அபாயத்துக்கு இடையிலும் அப்பாவும் நாடோடியும் உரக்கக் கத்தி நாஸ்டர் டாமின் ஆரூடங்களை வியாக்கியானம் செய்துகொண்டிருந்தபோது அவன் வேறு ஏதோ காலத்துக்குள் தஞ்சம் புகுந்தவனைப் போல இருந்தான். தொழிலில் காட்டிய அர்ப்பணம், தன்னுடைய கவனத்தை இயக்கிய சரியான முடிவு எல்லாம் குறுகிய காலத்திலேயே அவனை இனிப்பான ஜீவராசிகள் மூலம் உர்சுலா சம்பாதித்ததைவிட அதிகப் பணத்தை ஈட்டச் செய்தன. ஆனால் அவன் இப்போது முழு வளர்ச்சியடைந்த ஆண்பிள்ளையாக இருந்தும் பெண் தொடர்பை அறிந்திருக்கவில்லை என்று ஒவ்வொருவரும் ஆச்சரியப்பட்டார்கள். உண்மைதான், அவனுக்கு ஒருபோதும் அப்படி வாய்க்கவில்லை.

பல மாதங்களுக்குப் பிறகு, ஏறத்தாழ இருநூறு வயதுள்ள புராதன நாடோடியான பிரான்சிஸ்கோ என்ற 'நாயகன்' திரும்பி வந்ததைப் பார்த்தார்கள். அவன் அவ்வப்போது தானே இயற்றிய பாடல்களை விநியோகித்துக்கொண்டு மகோந்தா வழியாகக் கடந்து போவான். அந்தப் பாடல்களில் பிரான்சிஸ்கோ என்ற நாயகன் தன்னுடைய வழியில் மனௌர் முதல் சதுப்பு நிலத்தின் விளிம்புவரையுள்ள நகரங்களில் நடந்த சம்பவங்களை விளக்கிச் சொல்லுவான். யாருக்காவது தெரிவிக்க வேண்டிய செய்தி எதுவும் இருந்தாலும் அல்லது ஒரு நிகழ்ச்சியை எல்லாருக்கும் விளம்பரப்படுத்த வேண்டியிருந்தாலும் இரண்டு சென்ட் கட்டணத்துக்கு அவற்றைப் பாட்டில் சேர்த்துக் கொள்வான். தங்கள் பிள்ளை ஹோசே அர்க்காதியோவைப் பற்றி அந்தப் பாடல்கள் ஏதாவது சொல்லுமா என்ற நம்பிக்கையில் உர்சுலா அவற்றைக் கேட்டுக்கொண்டிருந்தாள். அப்படித்தான் தன்னுடைய தாயின் மரணத்தைப் பற்றித் தெரிந்துகொண்டாள்.

பிரான்சிஸ்கோ என்ற நாயகனின் உண்மையான பெயர் யாருக்கும் தெரியாது. ஒருமுறை சண்டைப் போட்டியில் பிசாசைத் தோற்கடித்ததனால் அப்படி அழைக்கப்பட்டான். உறக்கமின்மைக் கொள்ளை நோய் மகோந்தாவைப் பீடித்த சமயம் அவன் காணாமற்போனான். திடீரென்று ஓர் இரவு கதாரினோவின் கடையில் தென்பட்டான். உலகத்தில் என்ன நடந்தது என்பதைத் தெரிந்துகொள்வதற்காக மொத்த நகரமுமே அவன் பாட்டைக் கேட்கப் போனது. அந்தச் சந்தர்ப்பத்தில் அவனுடன் ஒரு பெண்ணும் வந்திருந்தாள். அவள் குண்டாக இருந்தாள். நான்கு இந்தியர்கள் ஒரு சாய்வு நாற்காலியில் வைத்து அவளைச் சுமந்துவர வேண்டியிருந்தது. ஆதரவற்றவளான பழுப்பு நிற வளரிளம் பெண் ஒருத்தி அவள் மேல் வெயில் விழாமலிருக்கக் குடை பிடித்திருந்தாள். அவுரேலியானோ அன்று இரவு கதாரினோவின் கடைக்குப் போனான். பார்வையாளர்கள் நடுவில் ஒற்றைக் கல் ஓணான் போல பிரான்சிஸ்கோ என்ற நாயகன் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தான்.

வெடிப்பேறிய தனது பெருநடைக் கால்களால் தாளமிட்டுக்கொண்டு, கயானாவில் வைத்து சர் வால்டர் ஸ்காட் அவனுக்குக் கொடுத்த பழைய அக்கார்டியனின் துணையுடன் சுருதி பிசகிய முதுமைக் குரலில் உலகத்துச் சேதிகளைப் பாடிக்கொண்டிருந்தான். அவனுக்குப் பின்னால் ஆட்கள் வந்து போய்க்கொண்டிருந்த ஒரு கதவுக்கு முன்னால் அந்தச் சாய்வு நாற்காலிச் செவிலி மௌனமாக உட்கார்ந்து விசிறிக் கொண்டிருந்தாள். காதுக்குப் பின்னால் ஒரு கம்பளி ரோஜாவைச் செருகி வைத்திருந்த கதாரினோ புளிக்கவைத்த கரும்புச் சாற்றைக் கூட்டத்தினரிடம் விற்றுக்கொண்டிருந்தான். அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு ஆண்களை நெருங்கி அவர்களைத் தொடக் கூடாத இடத்தில் தொட்டான். நள்ளிரவுப் பொழுதில் வெப்பம் பொறுக்க முடியாததாக ஆனது. அவனுடைய குடும்பத்தினருக்கு ஆர்வமூட்டும் எதுவும் இல்லாத அந்தத் தகவலைக் கடைசிவரை கேட்டான். வீட்டுக்குப் போகத் தயாராகிக் கொண்டிருந்தபோது அந்தச் செவிலி கையால் அவனுக்குச் சைகை காட்டினாள். "நீயும் உள்ளே போகலாம். வெறும் இருபது சென்ட்டுதான்" என்றாள்.

அவுரேலியானோ அந்தச் செவிலி மடியில் வைத்திருந்த தானியப் பெட்டிக்குள் ஒரு நாணயத்தை வீசிவிட்டு ஏனென்று தெரியாமலே அந்த அறைக்குள் நுழைந்தான். சிறிய முலைக் காம்புகள் கொண்ட அந்தப் பழுப்பு நிற வளரிளம் பெண் படுக்கையில் நிர்வாணமாகக் கிடந்தாள். அவுரேலியானோவுக்கு முன்பே அந்த இரவில் அறுபத்து மூன்று பேர் அந்த அறைக்குள் கடந்து போயிருந்தார்கள். அதிகமாக உபயோகித்ததன் மூலம் அந்த அறையிலிருந்த காற்றே வியர்வையாலும் பெருமூச்சுகளாலும் பிசையப்பட்டு சேறாக மாறத் தொடங்கியிருந்தது. அந்தப் பெண் நனைந்து ஊறிப் போயிருந்த படுக்கை விரிப்பை உருவியெடுத்து அவுரேலியானோவிடம் அதன் ஒரு முனையைப் பிடிக்கச் சொன்னாள். கித்தானைப் போலக் கனமாக இருந்தது அது. அதன் சாதாரணமான எடை வரும்வரை அவர்கள் அதை முறுக்கிப் பிழிந்தார்கள். பாயை எடுத்துப் புரட்டிப் போட்டதில் வியர்வை மறுபக்கத்துக்குப் போயிற்று. அவுரேலியானோ அந்த வேலை முடிந்து விடக்கூடாது என்று கவலையாக இருந்தான். காமத்தின் செயல் முறைகள் அவனுக்குத் தெரியும். அவனுடைய தகிக்கும் சருமம் சிலிர்ப்பில் குட்டிக் கொப்புளங்களாகப் பொரிந்திருந்தபோதும் அவசரமாக வெளிக்கிருக்க வேண்டியிருந்ததை அவனால் அடக்க முடியவில்லை. அந்தப் பெண் படுக்கையைத் தயார் செய்து விட்டு அவனிடம் உடைகளைக் கழற்றச் சொன்னபோது அவன் குழப்பமாகப் பதில் சொன்னான் "அவர்கள்தான் என்னை உள்ளே வரச் சொன்னார்கள். பெட்டியில் இருபது சென்ட்டைப் போடச் சொன்னார்கள். சீக்கிரம் முடி என்றார்கள்." அந்தப் பெண் அவனுடைய குழப்பத்தைப் புரிந்துகொண்டாள். "நீ இங்கேயே அதிக நேரம் இருக்கலாம். வெளியே போகும்போது மட்டும் இன்னொரு இருபது சென்ட்டைப் போட்டு விடு" என்று இதமாகச் சொன்னாள். தன்னுடைய அண்ணனின் நிர்வாணக் கோலத்துக்கு முன்னால் தன்னுடைய நிர்வாணக் கோலம் ஒப்பிடவே முடியாதது என்ற வெட்கத்தால் துன்புற்றபடியே

அவுரேலியானோ உடைகளைக் களைந்தான். அந்தப் பெண்ணின் ஒத்தாசை இருந்தும்கூட அவன் மேலும் மேலும் எழுச்சியில்லாமலும் கொடும் தனிமையாகவும் உணர்ந்தான். "இன்னொரு இருபது சென்ட்டையும் போட்டுவிடுகிறேன்" என்று வறண்ட குரலில் சொன்னான். அந்தப் பெண் மௌனமாக அவனுக்கு நன்றி தெரிவித்தாள். அவளுடைய முதுகு கன்றியிருந்தது. தோல் விலா எலும்போடு ஒட்டியிருந்தது. அளக்க முடியாத சோர்வால் மூச்சு விடுவதே அவளுக்குச் சிரமமாக இருந்தது. இரண்டு வருடங்களுக்கு முன்னால், அங்கிருந்து மிகத் தொலைவான ஓர் இடத்தில், மெழுகுவர்த்தியை அணைக்காமல் தூங்கிப் போனாள். தீச்சுவாலைகளுக்கு மத்தியில் விழித்து எழுந்தாள். அவளை எடுத்து வளர்த்த பாட்டியுடன் வசித்த வீடு எரிந்து சாம்பலானது. அன்று முதல் அவளுடைய பாட்டி அவளை நகரம் நகரமாக இழுத்துப் போனாள். எரிந்துபோன வீட்டின் மதிப்பை ஈடு செய்ய இருபது சென்ட்டுக்கு அவளைப் படுக்க வைத்தாள். அந்தப் பெண்ணைப் பொறுத்தவரை ஓர் இரவுக்கு எழுபது ஆண்கள் என்றே வைத்தாலும் இன்னும் பத்து வருடங்கள் கணக்கில் இருந்தன. ஏனென்றால் பயணச் செலவு, அவர்கள் இரண்டு பேருக்குமான சாப்பாட்டுச் செலவு, அதேபோல ஆடும் நாற்காலியைச் சுமந்து வரும் இந்தியர்களுக்கான கூலி. இரண்டாவது முறையாகச் செவிலி கதவைத் தட்டியதும் அவுரேலியானோ ஒன்றும் செய்யாமலேயே அந்த அறையை விட்டுப் போனான். அழ வேண்டும் போலிருந்தது அவனுக்கு. அன்றிரவு அவனால் தூங்க முடியவில்லை. வேட்கையும் பரிதாபமும் கலந்து அவளைப் பற்றி யோசித்துக்கொண்டிருந்தான். அவளைக் காதலிக்கவும் காப்பாற்றவும் வேண்டுமென்ற அடக்கமுடியாத தேவையை உணர்ந்தான். விடியற்காலையில் உறக்கமின்மையாலும் காய்ச்சலாலும் சோர்ந்து போயிருந்தான். அவளுடைய பாட்டியின் கொடுங்கோன்மையிலிருந்து அவளை விடுவிக்க வேண்டும் என்றும் எல்லா இரவுகளிலும் எழுபது பேருக்கு அவள் கொடுக்கவிருக்கும் நிறைவை முழுக்க அனுபவிக்க வேண்டும் என்றும் அமைதியான முடிவை எடுத்தான். ஆனால் காலை பத்து மணிக்கு அவன் கதாரினோவின் கடைக்குப் போய்ச் சேர்ந்தபோது அந்தப் பெண் நகரத்தைவிட்டே போயிருந்தாள்.

அவனுடைய பைத்தியக்கார யோசனையைக் காலம் மட்டுப்படுத்தியது. ஆனால் விரக்தியுணர்வைத் தூண்டிவிட்டது. அவன் வேலையில் தஞ்சமடைந்தான். தன்னுடைய கையாலாகாத்தனத்தின் வெட்கக்கேட்டை மறைப்பதற்காக வாழ்நாள் முழுவதையும் பெண்ணே இல்லாமல் கழிப்பது என்று தனக்குள்ளேயே அமைதியானான். அதற்கிடையில் மகோந்தாவில் பதிவுசெய்யக்கூடியதாக இருந்த எல்லாவற்றையும் தகட்டில் பதித்தான். தனது புகைப்படக் கூடத்தை ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவின் கற்பனை விநோதங்களுக்கு விட்டுக் கொடுத்தான். கடவுள் இருப்பதற்கான விஞ்ஞானப்பூர்வ நிரூபணத்தைப் பெற அதைப் பயன்படுத்த முடியும் என்று அவரும் உறுதிசெய்து கொண்டார். வீட்டின் வெவ்வேறு பாகங்களிலிருந்து நுட்பமான செய்முறை மூலம் ஒன்றின்மேல் ஒன்றாகப் பதியும்படி எடுத்த பிம்பங்களிலிருந்து இன்று அல்லது நாளை கடவுளின்,

அப்படி ஒருவர் இருப்பாரானால், புகைப்படத்தைப் பெற்று விடலாம் என்பதில் உறுதியாக இருந்தார். இனி இல்லாமலிருந்தால் அவருடைய இருப்பைப் பற்றிய மூட நம்பிக்கைக்கு என்றென்றைக்குமாக முடிவு கட்டிவிடலாம். நாஸ்ட்ரடாமஸின் விளக்க உரைகளில் மெல்குயாதெஸ் ஆழ மூழ்கியிருந்தான். இரவு நீண்ட நேரம் விழித்திருந்தான். சாயம் போன வெல்வெட் உடுப்புக்குள் மூச்சுத் திணறியபடி பழையகாலப் பளபளப்பை இழந்த மோதிரங்களை அணிந்த குருவிக்கைகளால் கிறுக்கிக்கொண்டிருந்தான். மகோந்தாவின் எதிர்காலம் பற்றிய தீர்க்க தரிசனம் கிடைத்ததாக ஓர் இரவு அவன் எண்ணினான். மாபெரும் கண்ணாடி வீடுகள் நிறைந்த ஒளிமயமான நகரமாக அது மாறியிருந்தது. அங்கே புயேந்தியா வம்சத்தின் சுவடே மிஞ்சவில்லை. ஹொசே அர்க்காதியோ புயேந்தியா “அது தவறு” என்று இடிமுழக்கமிட்டார். “அவை கண்ணாடி வீடுகளாக இருக்காது. நான் கனவுகண்ட பனி வீடுகளாக இருக்கும். அங்கே எப்போதும் ஒரு புயேந்தியா இருப்பான். என்றைக்கும் என்றென்றைக்கும்.”

ஆடம்பரமான அந்த வீட்டில் தனது சுயபுத்தியைப் பாதுகாத்துக் கொள்ள உர்சுலா போராடினாள். சின்ன விலங்கு மிட்டாய்கள் வியாபாரத்தை விரிவுபடுத்தியிருந்தாள். ஒரு அடுப்பு இரவு முழுவதும் எரிந்து கூடைகூடையான பிஸ்கோத்துகளாகவும் கூடைகூடையான ரொட்டிகளாகவும் அதிசய ரக அப்பங்களாகவும் முட்டைப் பணியாரங்களாகவும் உருமாறியது.

சதுப்பு நிலத்தைச் சுற்றியுள்ள சாலைகளுக்கு வந்த சில மணி நேரங்களில் அவை விற்றுத் தீர்ந்தன. ஓய்வெடுக்க வேண்டிய வயதை அவள் எட்டியிருந்தாள். ஆனால் அதற்கு மாறாக மேலும் மேலும் சுறுசுறுப்பானவளாகி இருந்தாள். தன்னுடைய செழிப்பான வியாபாரத்தில் மும்முரமாக இருந்தவள் ஒருநாள் பிற்பகல் முற்றத்துப் பக்கம் அசிரத்தையாகப் பார்த்தாள்.

இந்தியப் பெண் ரொட்டி மாவில் இனிப்புச் சேர்க்க அவளுக்கு உதவி செய்துகொண்டிருந்தாள். முன்பின் தெரியாதவர்களும் அழகானவர்களுமான இரண்டு வளரிளம் பெண்கள் அஸ்தமனச் சூரியனின் ஒளியில் எம்பிராய்டரி போட்டுக்கொண்டிருந்தார்கள். அவர்கள் ரெபேக்காவும் அமரந்தாவும். பாட்டியின் மரணத்தையொட்டி மூன்று வருடங்களாக விடாப் பிடிவாதத்துடன் அணிந்திருந்த துக்க ஆடைகளை விட்டுவிட்டுப் பளிச்சென்ற உடைகளை அணிந்திருந்தார்கள். அவை உலகத்தில் அவர்களுக்கு ஒரு புது இடத்தையே கொடுத்திருந்தது போலத் தோன்றியது. எதிர்பார்த்ததற்கு நேர்மாறாக ரெபேக்கா மிக அழகானவளாக இருந்தாள். இளம் நிறம். அகண்ட அமைதியான கண்கள். மந்திரக் கைகள். அவை கண்ணுக்குப் புலனாகாத நூல்களால் எம்பிராய்டரி செய்கிறாள் என்று தோன்றச் செய்தன. இளையவள் அமரந்தா. சற்று வசீகரம் குறைந்தவள். ஆனால் அவளுடைய இறந்து போன பாட்டியின் இயல்பான தனித்துவமும் மனத்திடமும் அவளிடம் இருந்தன. அர்க்காதியோவிடம் ஏற்கனவே அப்பாவின் உடலுறுதி தென்பட்டபோதும் அவர்கள் பக்கத்தில் அவன் குழந்தையாகவே

தோன்றினான். தனக்குப் படிக்கவும் எழுதவும் கற்றுக்கொடுத்த அவுரேலியானோவிடமே அவன் வெள்ளிவேலை கற்றுக்கொள்ள அமர்ந்தான். வீடு ஆட்களால் நிறைந்துவிட்டதையும் பிள்ளைகள் திருமணம் செய்து பிள்ளை பெறும் கட்டத்திலிருக்கிறார்கள் என்பதையும் இடப் பற்றாக்குறை காரணமாக அவர்கள் சிதறிப் போய்விடக் கூடுமென்பதையும் திடீரென்றுதான் உர்சுலா புரிந்துகொண்டாள். நீண்ட வருடங்களாகப் பாடுபட்டுச் சேர்த்து வைத்திருந்த பணத்தை வெளியே எடுத்துத் தந்து வாடிக்கையாளர்களுடன் பேசி ஏற்பாடுகள் செய்து வீட்டை விரிவுபடுத்தும் வேலையை மேற்கொண்டாள். விருந்தினர்களுக்காக ஒரு விசாலமான வரவேற்பறை; அன்றாட உபயோகத்துக்காக அதைவிட இன்னும் வசதியும் காற்றோட்டமுமான இன்னொரு வரவேற்பறை; குடும்ப நபர்கள் தங்கள் விருந்தாளிகளுடன் உட்காருவதற்குத் தோதான பன்னிரண்டு நாற்காலிகளுடன் உணவு மேஜை; முற்றத்தைப் பார்த்தவாக்கில் ஜன்னல்களுடன் ஒன்பது படுக்கையறைகள்; பகல் வெப்பத்திலிருந்து பாதுகாப்புத் தரும் விதமாக ரோஜாத் தோட்டமும் பெரணித் தொட்டிகளையும் பிகோனியாத் தொட்டிகளையும் வைக்க வசதியான கைப்பிடிச் சுவர்களும் உள்ள நீண்ட முகப்புத் தாழ்வாரம். எல்லாவற்றையும் கட்டினாள். இரண்டு அடுப்புகள் போடக்கூடியதாகச் சமையல் அறையை விரிவுபடுத்தினாள். ஹோசே அர்க்காதியோவின் எதிர்காலத்தைப் பற்றி பிலர் தெர்னேரா சீட்டு வாசித்த களஞ்சியம் இடித்துத் தள்ளப்பட்டது. வீட்டில் ஒருபோதும் உணவு இல்லாமல் இருக்கக்கூடாது என்பதற்காக முந்தையதைவிட இரு மடங்கு பெரிய களஞ்சியம் கட்டப்பட்டது. சுற்றுக்கட்டில் செந்தவிட்டு மர நிழலில் பெண்களுக்கு ஒன்றும் ஆண்களுக்கு ஒன்றுமாக இரண்டு குளியல் அறைகளும் அவற்றுக்குப் பின்னால் பெரிய லாயமும் வேலியடைத்த கோழிப் பண்ணையும் மாட்டுத் தொழுவமும் பறந்து செல்லும் பட்சிகள் மகிழ்ச்சியாக வந்து கண் அயர்வதற்காக நான்கு பக்கமும் திறந்த பறவைக் கூண்டும் அமைக்கப்பட்டன. கணவரின் பிரமைக் காய்ச்சல் அவளுக்கும் தொற்றிக்கொண்டதோ என்று நினைக்கும் வகையில் கொஞ்சம்கூடத் தடையில்லாமல் வெளிச்சமும் வெப்பமும் வருவதற்கான இடங்களை டஜன் கணக்கான கொத்தர்களையும் ஆசாரிகளையும் வைத்து உர்சுலா நிர்ணயித்தாள். நகரத்தைக் கண்டுபிடித்தவர்களின் புராதனக் கட்டடம் பணிக் கருவிகளாலும் கட்டுமானப் பொருள்களாலும் நிரப்பப்பட்டது. வியர்வை சிந்திக் களைத்துப்போன தொழிலாளிகள், போகுமிடமெல்லாம் தங்களைப் பின்தொடர்ந்த எலும்புப் பையின் மந்தமான கிலுகிலுப்பு ஓசையால் எரிச்சலடைந்தார்கள். தங்களைத் துன்புறுத்த வேண்டாம் என்று ஒவ்வொருவரிடமும் கேட்டுக்கொண்டார்கள்.

சுண்ணாம்பும் தாரும் நாற்றமடிக்கும் அந்த அசௌகரியத்தின் இடையில் நகரத்திலேயே பெரியது மட்டுமல்ல; அந்தச் சதுப்புப் பிரதேசத்திலேயே அதுவரை இருந்திராத, வசிப்பதற்கு மிகப் பாந்தமும் குளுமையுமான வீடு எப்படி பூமியின் வயிற்றிலிருந்து எழும்பியது. என்று யாராலும் சரியாகக் கண்டுபிடிக்க முடியவில்லை.

கொந்தளிப்புக்கு இடையே தெய்வீக அற்புதங்கள் மூலம் எல்லாரையும் வியப்படையச் செய்ய முயன்றுகொண்டிருந்த ஹோராசே அர்க்காதியோ புயேந்தியா அதைப் புரிந்துகொள்ளாதவர்களில் ஒருவராக இருந்தார்.

புது வீடு ஏறத்தாழக் கட்டி முடிய இருந்தபோது உர்சுலா அவருடைய வேதி உலகத்திலிருந்து அவரை இழுத்து வந்து வீட்டுக்கு அவர்கள் விரும்பியதுபோல வெள்ளை நிறம் அடிக்கக்கூடாது; நீல நிறச் சாயமே அடிக்கவேண்டும் என்றும் ஆணையிடப்பட்டிருப்பதைத் தெரிவித்தாள். அரசாங்க அறிவிப்பையும் காண்பித்தாள்.

ஹோராசே அர்க்காதியோ புயேந்தியா மனைவி எதைப் பற்றிச் சொல்லிக்கொண்டிருக்கிறாள் என்று புரியாமலேயே அந்தக் கையெழுத்தை அடையாளம் காண முயன்றுகொண்டிருந்தார்.

"யார் இந்த ஆசாமி?" என்று கேட்டார்.

"மாஜிஸ்டிரேட்டாம். அரசாங்கம் அனுப்பி வைத்த அதிகாரி என்று சொல்கிறார்கள்" உர்சுலா அதிருப்தியான குரலில் சொன்னாள்.

மாஜிஸ்டிரேட் டான் அப்போலினர் மாஸ்கோட் எந்த ஆர்ப்பாட்டமும் இல்லாமல் மகோந்தாவுக்கு வந்து சேர்ந்திருந்தார். மக்காவ் பறவைகளுடன் தட்டுமுட்டுச் சாமான்களைப் பண்டமாற்று செய்ய முதலில் வந்த அராபியர்களில் ஒருவன் கட்டிய ஹோட்டல் ஜேக்கப்பில் வந்திறங்கினார். அடுத்த நாள் புயேந்தியா இல்லத்துக்கு இரண்டு கட்டடங்கள் தள்ளித் தெருவைப் பார்த்த வாசலுள்ள ஒரு சிறு அறையை வாடகைக்குப் பிடித்தார். ஜேக்கப்பிலிருந்து ஒரு மேஜையும் நாற்காலியும் வாங்கிப் போட்டார். தன்னுடன் கொண்டுவந்திருந்த குடியரசின் தேசியச் சின்னத்தைச் சுவரில் ஆணியடித்து மாட்டினார். கதவின் மேல் 'மாஜிஸ்டிரேட்' என்று எழுதி வைத்தார். தேசியச் சுதந்திர தினக் கொண்டாட்டத்தின் பகுதியாக எல்லா வீடுகளுக்கும் நீல நிறச் சாயமடிக்க வேண்டும் என்பதுதான் அவர் பிறப்பித்த ஆணையாக இருந்தது. அந்த ஆணையின் நகலைக் கையிலெடுத்துக்கொண்டு ஹோராசே அர்க்காதியோ புயேந்தியா தேடிப் போனபோது அந்தக் குறுகலான அலுவலக அறையில் தூங்கு தொட்டிலில் குட்டித் தூக்கத்திலிருந்ததைப் பார்த்தார். "இந்தக் காகிதத்தை எழுதியது நீங்கள்தானா?" என்று கேட்டார். முதிர்ச்சியுள்ள மனிதனும் சாதுவும் சிவந்த நிறமுள்ளவருமான டான் அப்போலினர் மாஸ்கோட், ஆமாம் என்றார். "எந்த உரிமையில் எழுதினீர்கள்?" ஹோராசே அர்க்காதியோ புயேந்தியா மீண்டும் கேட்டார். டான் அப்போலினர் மாஸ்கோட் மேஜையின் இழுப்பறையிலிருந்து ஒரு தாளை எடுத்து அவரிடம் காட்டினார். "நான் இந்த நகரத்தின் மாஜிஸ்டிரேட்டாக நியமிக்கப்பட்டிருக்கிறேன்." ஹோராசே அர்க்காதியோ புயேந்தியா அந்த நியமனக் கடிதத்தைப் பார்க்கக்கூட இல்லை.

நிதானம் இழக்காமல் "இந்த நகரத்தில் நாங்கள் காகிதத்தில் உத்தரவு போடுவதில்லை" என்றார். "என்றென்றைக்கும் நீங்கள் தெரிந்து வைத்திருக்க வேண்டும் என்பதற்காகச் சொல்கிறேன். எங்களுக்கு இங்கே எந்த நீதிபதியும் தேவையில்லை. ஏனென்றால் தீர்ப்புச் சொல்ல

வேண்டிய எதுவும் இங்கே இல்லை." டான் அப்போலினர் மாஸ்கோட்டை நேராகப் பார்த்துக்கொண்டு குரலை உயர்த்தாமல் அவர்கள் அந்தக் கிராமத்தை எப்படி உருவாக்கினார்கள், நிலத்தை எப்படி விநியோகித் தார்கள், சாலைகளை அமைத்தார்கள், அரசாங்கத்தைச் சிரமப்படுத்தாம லேயே தேவையான வளர்ச்சித் திட்டங்களை அறிமுகப்படுத்தினார்கள் என்று விரிவாக எடுத்துச் சொன்னார்.

"எங்களில் யாரும் இயற்கையாகக்கூட மரணமடையாத அளவுக்கு அமைதியாக இருக்கிறோம்" என்றார். "எங்களுக்குக் கல்லறைகூட இல்லை என்பதை நீங்கள் பார்க்கலாம்." அரசாங்கம் தங்களுக்கு, உதவவில்லை என்று அவர்களில் யாரும் வருத்தப்படவில்லை. நேர் மாறாக அமைதியாக வாழ அவர்களை அனுமதித்திருப்பதற்காக மகிழ்ச்சியடைகிறார்கள். தொடர்ந்து அவர்களை அப்படியே வாழவிடு மென்று நம்புகிறார். வழியோடு போகிற புதுப்பகட்டுக்காரர்கள் முதலில் வந்து தாங்கள் என்ன செய்ய வேண்டும் என்று சொல்வதற்காக அவர்கள் அந்த நகரத்தை உருவாக்கவில்லை. கால்சராயைப் போலவே வெள்ளை நிறமுள்ள டெனிம் மேல்கோட்டு அணிந்திருந்த டான் அப்போலினர் அவரது உடற்சைகைகளின் கௌரவத்தை ஒரு கணம்கூட இழக்கவில்லை.

"ஆக, மற்ற சாதாரணக் குடிமக்களைப் போல இங்கே வசிக்க விரும்பினால் நீங்கள் வரவேற்கப்படுகிறீர்கள். ஆனால் வீடுகளுக்கு நீலச் சாயம் அடிக்க வேண்டும் என்று ஆட்களிடம் சொல்லி ஒழுங்கைக் குலைக்க வந்திருக்கிறீர்கள் என்றால் உங்கள் மூட்டையைக் கட்டிக் கொண்டு எங்கிருந்து வந்தீர்களோ அங்கேயே திரும்பப் போய்விடுங்கள். ஏனென்றால் என் வீடு வெள்ளையாகத்தான் இருக்கப் போகிறது. புறாவைப் போல வெள்ளையாக" என்று முடித்தார் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா.

டான் அப்போலினர் மாஸ்கோட் வெளிறிப் போனார். ஒரு எட்டுப் பின்னால் போய் முகம் இறுக ஒருவிதமான வேதனையுடன் "என்னிடம் ஆயுதம் இருக்கிறது என்று உங்களை எச்சரிக்கிறேன்" என்றார்.

வழக்கமாகக் குதிரைகளை இழுத்து நிறுத்தும் வலுவைத் தன்னுடைய கைகள் எப்போது திரும்பப் பெற்றன என்று ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவுக்குச் சரியாகத் தெரியவில்லை. டான் அப்போலினர் மாஸ்கோட்டின் மார்புப் பக்கத்துக் கோட்டை இறுக்கிப் பிடித்துத் தனது கண் மட்டத்துக்கு உயர்த்தினார். "செத்துத் தொலைத்த உங்களை என் ஆயுசு முழுக்கச் சுமந்துகொண்டு திரிவதைவிட உயிரோடு இருக்கும் போதே சுமந்து திரியலாம். அதற்காகவே இதைச் செய்கிறேன்" என்றார்.

அப்படியே அவரைத் தூக்கிக்கொண்டு தெரு நடுவே நடந்தார். அந்தச் சதுப்பான சாலையில் அவர் கால்களை ஊன்றிய பின்பே மார்புத் துணியை விட்டார். ஒரு வாரத்துக்குப் பிறகு வேட்டைத் துப்பாக்கி ஏந்திய காலணி போடாத முரட்டுச் சிப்பாய்கள் ஆறு பேருடனும் மனைவியுடனும் ஏழு மகள்களுடனும் மாட்டு வண்டியில்

டான் அப்போலினர் மாஸ்கோட் திரும்பி வந்தார். வேறு இரண்டு வண்டிகள் அறைக்கலன்களுடனும் சாமான்களுடனும் வீட்டு உபயோகப் பண்டங்களுடனும் பின்னர் வந்து சேர்ந்தன. ஒரு வீட்டைத் தேடும் வரை குடும்பத்தை ஹோட்டல் ஜேக்கப்பில் தங்க வைத்தார். சிப்பாய் களின் பாதுகாப்பில் அலுவலகத்தைத் திறக்கப் போனார். ஆக்கிரமிப் பாளர்களை வெளியேற்றுவதற்காக மகோந்தா நிறுவனர்கள் தங்கள் முதிர்ந்த பிள்ளைகளை அழைத்துக்கொண்டு ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவுக்கு ஆதரவளிப்பதற்காக அவர் வீட்டுக்குப் போனார்கள். அவர் அதற்கு எதிராக இருந்தார். டான் அப்போலினர் மாஸ்கோட் தனது மனைவி மகள்களுடன் திரும்பி வந்திருக்கிறார். ஒருவரை அவரது குடும்பத்தினர் முன்னால் தொந்தரவு செய்வது ஆண்பிள்ளைத் தனமல்ல என்று விளக்கினார். எனவே சுமுகமான முறையில் சூழ்நிலையைச் சமாளிக்கத் தீர்மானித்தார்.

அவுரேலியானோவும் அவருடன் போனான். அந்தக் காலத்தில் அவன் முனைகளில் மெழுகு பூசிக் கறுப்பு மீசையை வளர்க்கத் தொடங்கியிருந்தான். போர்க்களத்தில்கூட இனங்காண முடிவது போன்ற முழக்கமுள்ள குரலும் வாய்த்திருந்தது. நிராயுதபாணிகளாக, காவல்காரர்களைப் பொருட்படுத்தாமல் மாஜிஸ்டிரேட்டின் அலுவலகத் துக்குள் போனார்கள். டான் அப்போலினர் மாஸ்கோட் தனது பொறுமையை இழக்கவில்லை. அங்கே இருந்த தனது இரு மகள்க ளிடமும் அவர்களை அறிமுகப்படுத்தினார். அம்பரோ, வயது பதினாறு. அவளுடைய அம்மாவைப் போலக் கறுப்பு. ரெமேதியோஸ், ஒன்பதே வயது. லில்லி மலரின் நிறமும் பச்சைக் கண்களுமுள்ள அழகான சிறுமி. அவர்கள் கனிவானவர்களாகவும் நாசூக்கானவர்களாகவும் இருந்தார்கள். ஆட்கள் உள்ளே வந்த உடனேயே, அறிமுகப்படுத்தப் படுவதற்கு முன்பே வந்தவர்கள் உட்கார நாற்காலிகளைக் கொடுத்தார் கள். ஆனால் அவர்கள் இருவரும் நின்றுகொண்டேதான் இருந்தார்கள்.

“மிக நல்லது நண்பரே, நீங்கள் இங்கே குடியிருக்கலாம். வாசலில் வேட்டைத் துப்பாக்கியுடன் நிற்கும் கொள்ளைக்காரர்களுக்காக அல்ல; உங்கள் மனைவி, மகள்கள் மீது இருக்கும் கரிசனத்தால்” என்றார் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா.

டான் அப்போலினர் மாஸ்கோட் திகைத்து நின்றார். ஆனால் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா அவருக்குப் பதில் சொல்ல அவகாசம் கொடுக்கவில்லை. “நாங்கள் இரண்டு நிபந்தனைகள் விதிக்கிறோம்” என்று தொடர்ந்தார். முதலாவது: ஒவ்வொருவரும் அவர்களுக்குப் பிடித்தமான வண்ணத்தை அவர்கள் வீட்டுக்கு அடித்துக் கொள்வார்கள். இரண்டாவது: இந்தச் சிப்பாய்கள் உடனடியாக வெளியேற வேண்டும். கட்டுப்பாட்டுக்கு நாங்கள் உத்தரவாதம்.” மாஜிஸ்டிரேட் எல்லா விரல்களையும் விரித்துத் தனது வலது கையை உயர்த்தினார். “உங்களுடைய வாக்குறுதி?”

“உங்கள் எதிரியின் வாக்குறுதி” என்றார் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா. கசப்பான தொனியில் மேலும் சொன்னார், “ஏனென்றால்

உங்களிடம் ஒன்றைச் சொல்ல வேண்டும். நீங்களும் நானும் இன்னும் எதிரிகள்தாம்."

அன்று பிற்பகலிலேயே சிப்பாய்கள் வெளியேறினார்கள். சில நாட்களுக்குப் பிறகு ஹோரசே அர்க்காதியோ புயேந்தியா மாஜிஸ்டிரேட் குடும்பத்துக்கு ஒரு வீட்டைத் தேடிக்கொடுத்தார். அவுரேலியானோவைத் தவிர எல்லாரும் சமாதானமாக இருந்தார்கள். வயதை வைத்துப் பார்த்தால் அவனுடைய மகளாக இருக்கக்கூடிய மாஜிஸ்டிரேட்டின் இளைய மகள் ரெமேதியோஸின் உருவம் அவனுடைய உடலின் ஏதோ அங்கத்தை வலிக்கச் செய்துகொண்டேயிருந்தது. உட ல்ரீதியான அந்த உணர்வு காலணிக்குள் சிக்கிய கூழாங்கல் போல நடக்கும் போதெல்லாம் அவனைத் துன்புறுத்திக்கொண்டிருந்தது.

புறாவைப் போன்ற வெண்மையான அந்தப் புதிய வீடு நாட்டிய நிகழ்ச்சியுடன் தொடங்கி வைக்கப்பட்டது. ரெபேக்காவும் அமரந்தாவும் வளரிளம் பெண்களாக மாறியிருப்பதைப் பார்த்த அந்தப் பிற்பகலில்தான் உர்சுலாவுக்கு அந்த எண்ணம் வந்தது. இந்தப் பெண்பிள்ளைகளுக்கு விருந்தாளிகளை வரவேற்கப் பொருத்தமான இடம் தேவை என்ற ஆசைதான் ஏறத்தாழ அந்தக் கட்டட வேலைக்குப் பின்னாலிருந்த சரியான காரணம் என்றும் சொல்லலாம். செப்பனிடும் வேலை நடந்து கொண்டிருந்தபோது வசீகரத்தில் எந்தக் குறையும் ஏற்படக் கூடாது என்று அவள் ஒரு கப்பல் அடிமையைப் போலப் பாடுபட்டாள். எனவே பூச்சுவேலைகள் முடிவதற்கு முன்பே வீட்டை அலங்கரிப்பதற்கான விலையுயர்ந்த பொருட்களையும் மேஜை உபசரிப்புக்கான சாதனங்களையும் தருவித்தாள். நகரமே வியந்து பார்க்கும் இளைஞர்கள் குதூகலமாகக் கொண்டாடும் அற்புதக் கண்டுபிடிப்பை – பியானோவைத் தருவித்தாள். அதைப் பிரித்து வெவ்வேறு பெட்டிகளிலாக, வியன்னா அறைக்கலன்கள், பொஹீமியக் கண்ணாடிப் பொருட்கள், இண்டீஸ் கம்பெனியிலிருந்து மேஜைப் பரிமாற்ற உபகரணங்கள், ஹாலந்திலிருந்து மேஜை விரிப்புகள், அபரிமிதமான வகையில் விளக்கு ரகங்கள், மெழுகுவர்த்தித் தண்டுகள், சுவரோவியங்கள், திரைச் சீலைகள் ஆகியவற்றுடன் கொண்டு வந்து சேர்ப்பித்தார்கள். அந்த இறக்குமதி நிறுவனம், சொந்தச் செலவில் பியானோவைப் பொருத்தவும் சுருதி சேர்க்கவும் வாங்கியவர்களுக்கு அதன் செயல்முறையைப் பற்றித் தெரிவிக்கவும் அதன் ஆறு காகிதச் சுருள்களில் பதியப்பட்டிருக்கும் புதிய இசைக்கு ஏற்ப நடனமாடக் கற்பிக்கவும் பியத்ரோ கிரெஸ்பி என்ற இத்தாலிய நிபுணனை அனுப்பி வைத்திருந்தது.

பியத்ரோ கிரெஸ்பி இளைஞன். பொன்னிறக் கேசமுள்ளவன். மகோந்தாவில் அதுவரை பார்த்தவர்களில் பேரழகன். குணவான். உடை அணிவதில் மிகவும் சிரத்தை கொண்டிருந்தான். அதனால் மூச்சைத் திணறவைக்கும் வெப்பத்திலும் ஜரிகை வேலைப்பாடுகள் செய்த கறுப்புத் துணியில் தைத்த கோட்டை அணிந்தே வேலை செய்தான். வீட்டு உரிமையாளர்களிடமிருந்து மரியாதைக்குரிய தூரத்தைக் கடைப்பிடித்தான். அவுரேலியானோவுக்கு அவனுடைய வெள்ளி வேலையில் இருந்த அதே ஈடுபாட்டுடன் பியத்ரோ கிரெஸ்பி வியர்வையில் ஊறி வரவேற்பறையிலேயே

பல வாரங்களைக் கழித்தான். ஒருநாள் காலை கதவைத் திறக்காமல், அந்த அற்புதத்தைப் பார்க்க யாரையும் அழைக்காமல் பியானோவில் முதல் சுருளை வைத்தான். இசையின் ஒழுங்கிலும் நேர்த்தியிலும் ஸ்தம்பித்துப்போன துன்புறுத்தும் சம்மட்டி அடியும் மரக் கடைசலின் ஓயாத இரைச்சலும் அமைதியில் மூழ்கின. எல்லாரும் வரவேற்பறைக்கு ஓடி வந்தார்கள். ஹோசே அர்க்காதியோ புயேந்தியா மின்னலால் தாக்கப்பட்டவர் போல நின்றார். அந்த மெட்டின் அழகால் அல்ல; பியானோவின் கட்டைகள் தன்னிச்சையாக இயங்குவதைப் பார்த்தே அப்படி நின்றார். கண்ணுக்குப் புலப்படாத அந்த இசைஞனைப் படமெடுக்கும் நம்பிக்கையில் மெல்குயாதெஸின் காமிராவைத் தயார் செய்து வைத்தார். அன்று அந்த இத்தாலியன் அவர்களுடன் உட்கார்ந்து பகலுணவு அருந்தினான். அந்த தேவதூதன் வெளுத்த, மோதிரம் அணியாத கைகளால் பாத்திரங்களைக் கையாளுவதை மேஜையில் உணவு பரிமாறிக்கொண்டே பார்த்த ரெபேக்காவும் அமரந்தாவும் மிரண்டு போனார்கள். வரவேற்பறையை ஒட்டியிருந்த கூடத்தில் பியத்ரோ கிரெஸ்பி அவர்களுக்கு நடனம் கற்பித்தான். மகள்கள் பாடம் கற்றுக் கொண்டிருந்தபோது அறையை விட்டு ஒரு நொடிகூட விலகாமல் தோழமையான பார்வையுடன் உர்சுலா கண்காணித்துக் கொண்டிருந் தாள். அவர்களைத் தொடாமலேயே தாளப் பொறியின் பிரமாணத் துக்கு இசையப் பாதங்களை வைக்கக் கற்றுக்கொடுத்தான். பியத்ரோ கிரெஸ்பி அந்த நாட்களிலெல்லாம் இழுபடக் கூடியதும் ஆனால் இறுக்கமானதுமான பிரத்தியேகக் கால்சராயை அணிந்தான். நடனத்துக்குரிய காலணிகளை அணிந்தான். "நீ அவ்வளவு கவலைப்படத் தேவையில்லை. அவன் ஒரு தேவதூதன்" என்று அவளிடம் சொன்னார் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா. ஆனாலும் பயிற்சி முடிந்து அந்த இத்தாலியன் மகோந்தாவை விட்டுப் போகும்வரை அவள் கண்காணிப்பை விட்டுவிடவில்லை. அவர்கள் ஒரு விருந்துக்கு ஏற்பாடு செய்தார்கள். உர்சுலா கறாரான விருந்தினர் பட்டியலைத் தயாரித்தாள். பெயர் தெரியாத தகப்பன்களின் இரண்டு பிள்ளைகளைப் பெற்றிருந்த பிலர் தெர்னேராவைத் தவிர மகோந்தா நிறுவனர்களின் வம்சாவளி யினர் மட்டுமே அழைக்கப்பட்டிருந்தார்கள். நட்புணர்வால் நிர்ணயம் செய்யப்பட்டதாக இருந்தாலும் அந்தப் பட்டியல் உண்மையிலேயே ஓர் உயர்தரமான பட்டியலாக இருந்தது. இடப்பெயர்ச்சியின்போதும் கிராம நிர்மாணத்தின்போதும் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா குடும்பத்துடன் நெருக்கமாக இருந்த பழைய நண்பர்கள் மட்டுமல்ல, குழந்தைப் பருவம் முதல் அவுரேலியானோவுக்கும் அர்க்காதியோவுக் கும் நிரந்தரத் தோழர்களாக இருக்கும் அவர்களின் பிள்ளைகளும் பேரப் பிள்ளைகளும் ரெபேக்காவுடனும் அமரந்தாவுடனும் எம்பிராய்டரி போட வீட்டுக்கு வரும் பெண்பிள்ளைகளும் பட்டியலில் இருந்தார்கள். பரந்த மனம் கொண்ட ஆட்சியாளரான டான் அப்போலினர் மாஸ்கோட்டின் செயல்பாடு லத்தியை ஆயுதமாக வைத்துக்கொண்டிருக்கும் இரண்டு காவலர்களைப் பராமரிக்கும் பெயரளவு அதிகாரமாகக் குறைக்கப்பட்டிருந்தது. வீட்டுச் செலவு களுக்கு உதவுவதற்காக அவருடைய மகள்கள் ஒரு தையற்கடையைத்

திருந்தார்கள். அங்கே கம்பளி நூலால் பூக்களையும் கொய்யாப்பழப் பதார்த்தங்களையும் தயாரித்து விற்றார்கள். தேவைப்படுபவர்களுக்குக் காதல் கடிதங்கள் எழுதிக் கொடுத்தார்கள். அடக்கமானவர்களாகவும் கடின உழைப்பாளிகளாகவும் அயோவாவிலேயே பேரழகிகளாகவும் புதிய வகை நடனங்களில் மிகவும் தேர்ச்சி பெற்றவர்களாகவும் இருந்தும் அந்த விருந்துக்கு அவர்கள் அழைக்கப்படவில்லை.

உர்சுலாவும் மகள்களும் மேஜை நாற்காலி அறைக்கலன்களைப் பிரித்தார்கள். வெள்ளிப் பாத்திரங்களுக்கு மெருகேற்றினார்கள். ரோஜா மலர்கள் நிரம்பியப் படகில் பெண்கள் அமர்ந்திருக்கும் ஓவியங்களை மாட்டினார்கள். கொத்தர்கள் கட்டிய வீட்டிலிருந்த வெற்று வெளிகளுக்கு அந்த ஓவியங்கள் புதிய உயிரைக் கொடுத்தன. அவர்கள் இதைச் செய்துகொண்டிருக்கும்போது ஹோசே அர்க்காதியோ புயேந்தியா கடவுள் இல்லை என்ற உறுதியான எண்ணத்துக்கு வந்து சேர்ந் திருந்ததனால் கடவுள் உருவத்தைத் தேடுவதை நிறுத்திக்கொண்டார். பியானோவின் மாந்திரிக ரகசியத்தை விளங்கிக்கொள்வதற்காக அதைப் பிரித்துப் போட்டார். விருந்துக்கு இரண்டு நாட்கள் முன்பு ஓரிடத்தில் சுருண்டும் இன்னொரு இடத்தில் நீண்டும் கிடந்த தந்திகளுக்கு மத்தியில் உபரி விசைக்கட்டைகளாகவும் சுத்தியல்களாகவும் சிதறிக் கிடந்த பியானோவை ஆசையுடன் மீண்டும் பொருத்தி வெற்றிபெற்றார். அந்த நாட்களில் முண்டியடித்து வந்த அதுபோன்ற அத்தனை ஆச்சரியங்கள் அதற்கு முன்பு ஒருபோதும் இருந்ததில்லை. குறித்த நாளில் குறித்த நேரத்தில் புதிதாகத் தருவித்த விளக்குகள் ஏற்றப்பட்டன. பசையும் ஈரமான சுண்ணாம்பும் கலந்த நெடி இன்னும் வீசிக்கொண் டிருக்க வீடு திறந்து வைக்கப்பட்டது. நிறுவனர்களின் பிள்ளைகளும் பேரப் பிள்ளைகளும் பெரணிகளும் பிகோனியாக்களும் நிறைந்திருந்த தாழ்வாரத்தையும் அமைதியான அறைகளையும் ரோஜாக்களின் நறுமணம் நிரம்பியிருந்த தோட்டத்தையும் பார்த்துவிட்டு வரவேற் பறையில் கூடினார்கள். வெள்ளைத் துணியால் போர்த்தி வைத்திருந்த அறியப்படாத கண்டுபிடிப்பின் முன்னால் நின்றார்கள். அந்தச் சதுப்புப் பிரதேசத்தின் வேறு சில நகரங்களில் பிரபலமாக இருந்த பியானோவை முன்பே பார்த்திருந்த சிலருக்கு ஆர்வம் குறைந்து போனது. அமரந்தாவும் ரெபேக்காவும் ஆடுவதற்காக முதல் சுருளை உர்சுலா அதில் பொருத்திய போது அதன் தொழில்நுட்பம் செயல்படாமற்போனது அதைவிடக் கசப்பானது. அந்த நாட்களில் முதுமையால் தளர்ந்து நொறுங்கி, ஏறக்குறைய குருடாகிப் போயிருந்த மெல்குயாதெஸ் தனது காலாதீத மான அறிவின் கலை நுட்பத்தின் உதவியால் அதைப் பொருத்த முயன்றான். கடைசியில் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா சிக்கிக் கொண்டிருந்த ஒரு உபகரணத்தைத் தவறுதலாக நகர்த்தியதும் இசை ஒலிக்க ஆரம்பித்தது. முதலில் ஒரு பீச்சலாகவும் பின்னர் கலவையான ஸ்வரக் கோர்வையாகவும் பெருகியது. தந்திகள் நிரலாகவோ திட்ட மிட்டதாகவோ அல்லாமல் சுத்தியல்கள் தன்னிச்சையாக இயங்கும்படி முரட்டுத்தனமாக முறுக்கப்பட்டிருந்தன. கடலைத் தேடி மலைகளின் ஊடே பயணம் செய்த மூதாதையர்களின் பிடிவாதக்கார சந்ததிகளான

அந்த இருபத்தியொரு பேரும் கலவை இசையைத் தவிர்த்தார்கள். ஆனால் நடனம் விடியும்வரை நீண்டது.

பியத்ரோ கிரெஸ்பி பியானோவைப் பழுது பார்ப்பதற்காகத் திரும்ப வந்தான். ரெபேக்காவும் அமரந்தாவும் தந்திகளைச் சீர்படுத்த அவனுக்கு உதவினார்கள். மெட்டுகள் ஒன்றோடு ஒன்று குழம்பிப் போகும்போது சிரிப்புடன் உதவினார்கள். மிகவும் இனிமையுடனும் களங்கமில்லாமலும் வேலைகள் நடந்ததால் உர்சுலா தனது கண் காணிப்பை நிறுத்தினாள். அவன் புறப்படுவதற்கு முந்தைய மாலை அவன் பழுது பார்த்த பியானோவின் துணையுடன் ஓர் வழியனுப்பு நடனம் ஏற்பாடு செய்யப்பட்டது. ரெபேக்காவின் துணையுடன் நவீன நடனத்தின் செயல் விளக்கத்தைத் தேர்ச்சியுடன் நிகழ்த்தினான். அர்க்காதியோவும் அமரந்தாவும் நளினமாகவும் திறமையாகவும் சேர்ந்து ஆடினார்கள். ஆனால், வாசலில் பார்வையாளர்கள் நடுவில் நின்றிருந்த பிலர் தெர்னேரா, அர்க்காதியோவின் பின்பக்கம் ஒரு பெண்ணைப் போல இருப்பதாக இடக்காகச் சொன்ன ஒருத்தியின் கூந்தலைப் பிடித்து இழுத்தும் கடித்தும் சண்டையிட்டதில் நடனம் தடைபட்டது. நள்ளிரவை நெருங்கும் வேளையில் உணர்ச்சிகரமான சிற்றுரையுடன் பியத்ரோ கிரெஸ்பி விடைபெற்றான். சீக்கிரம் திரும்பி வருவதாகவும் வாக்குறுதியளித்தான். வாசல்வரை அவனுடன் துணைக்குப் போன ரெபேக்கா வீட்டைச் சாத்தி விளக்குகளை அணைத்த பின்பு தனது அறைக்குப் போய் அழுதாள். ஆறுதல் சொல்ல முடியாத படியான அந்த அழுகை பல நாட்கள் நீடித்தது. அமரந்தாவுக்குக்கூட அதன் காரணம் தெரியாமலிருந்தது. அவளுடைய அந்தரங்கம் விந்தை யானதல்ல. உற்சாகமானவளாகவும் தோழமையானவளாகவும் தென் பட்டாலும் அவளுக்குள் தனிமைக் குணமும் ஊடுருவ முடியாத மனமும் இருந்தன. உயரமும் திடமும் கொண்ட அழகான இளம் பெண்ணாக இருந்தாள். ஆனால் அந்த வீட்டுக்கு வந்தபோது கொண்டு வந்த மரத்தில் செய்த சிறிய ஆடும் நாற்காலியை, கைப்பிடிகள் போய்ப் பலமுறை அது பழுது நீக்கப்பட்டிருந்தும், இன்னும் பயன்படுத்துவதில் பிடிவாதமாக இருந்தாள். அந்த வயதில்கூட விரல் சூப்பும் பழக்கம் அவளுக்கு இருந்ததை யாரும் கண்டுபிடிக்கவில்லை. சுவரோடு முகம் சேர்த்துப் படுத்துறங்கும் பழக்கம் இருந்ததனாலேயே குளியல் அறைக்குள் நுழைந்து தாளிட்டுக்கொள்ளக் கிடைக்கும் வாய்ப்பை அவள் நழுவ விட்டதில்லை. மழைக்காலப் பிற்பகல்களில் பிகோனியாத் தாழ்வாரத் தில் தோழியர் கூட்டத்துடன் எம்பிராய்டரி போட்டுக்கொண் டிருக்கும்போது சட்டென்று அவளுடைய உரையாடல் இழையறுந்து போகும். ஈரமான மண் வரிசைகளையும் தோட்டத்தில் மண் புழுக்கள் புரட்டிக் குவித்த சேற்றுக் குவியல்களையும் பார்த்ததும் ஏக்கத்தின் கண்ணீர் அவளுடைய அண்ணத்தில் கரிக்கும். ஆரஞ்சுச் சாற்றாலும் பேதி மருந்தாலும் முன்பு தோற்கடிக்கப்பட்ட அந்த ரகசிய ருசிகள் அவள் அழத் தொடங்கும்போது அடக்க முடியாத வேட்கையாக வெளிப்படும். அவள் மறுபடியும் மண்ணைத் தின்னத் தொடங்கினாள். முதன்முறை ஏறக்குறைய ஆர்வத்தால்தான் அதைச் செய்தாள். அந்த மோசமான சுவையே அந்த ஆசைக்குச் சரியான மருந்து

என்பது உண்மைதான். உண்மையில் அவளால் மண்ணை வாயில வைக்க முடியவில்லை. வளர்ந்துகொண்டிருந்த பதற்றத்தை மீறி விடாமல் முயன்று கொஞ்சம் கொஞ்சமாகத் தனது பாரம்பரிய ருசியை – புராதனக் கனிமங்களின் ருசியை, முதலாவது உணவின் தடைசெய்ய முடியாத திருப்தி தரும் ருசியைத் திரும்ப வரவழைத்துக் கொண்டாள். கை நிறைய மண்ணை எடுத்துச் சட்டைப் பைகளில் போட்டுக்கொண்டு மகிழ்ச்சியும் கோபமும் கலந்த குழப்பமான உணர்வுடன் தோழிகளுக்கு மிகவும் கடினமான தையல் வேலைகளைப் பற்றிச் சொல்லிக்கொண்டிருந்தபோதும் ஒருத்தி சுவரிலிருந்து சுண்ணாம்பை அடர்த்தியெடுத்துத் தின்னும் தியாகத்துக்கு ஆண்கள் எவரும் தகுதியில்லாதவர்களாகவே இருக்கிறார்கள் என்று சொல்லிக் கொண்டிருந்தபோதும் யாரும் பார்க்காமல் கொஞ்சம் கொஞ்சமாகத் தின்றாள். மண் தின்னும் தியாகத்துக்குத் தகுதியான ஒரே ஒரு ஆள் மட்டுமே இருந்தான். நேர்த்தியான காலணிகள் அணிந்து அவன் நடக்கும் உலகத்தின் வேறொரு பக்கத்திலிருக்கும் நிலம் அவனுடைய எடையையும் அவனுடைய ரத்தத்தின் வெப்பநிலையையும் தனக்குள் கடத்துவதாகத் தோன்றியது. அந்தக் கனிம மணம் தன்னுடைய வாயில் கரிப்பான பின் சுவையையும் மனத்தில் நிம்மதியின் மிச்சத்தையும் கடத்துவதாகத் தோன்றியது.

எந்தக் காரணமும் இல்லாமல் ஒரு பிற்பகல், அம்பரோ மாஸ்கோட் வந்து வீட்டைப் பார்க்க அனுமதி கேட்டாள். அமரந்தாவும் ரெபேக்காவும் அந்த எதிர்பாரா வருகையால் குழப்பமடைந்தாலும் சம்பிரதாயம் மீறாமல் அவளை வரவேற்றார்கள். புதுப்பிக்கப்பட்ட மாளிகையைச் சுற்றிக் காட்டினார்கள். பியானோவில் சங்கீதம் கேட்கச் செய்தார்கள். ஆரஞ்சுச் சாறும் மொறமொறப் பிஸ்கோத்துகளும் கொடுத்து உபசரித்தார்கள். அம்பரோ மாஸ்கோட் கண்ணியமான நடத்தை பற்றியும் அழகுப் பராமரிப்புப் பற்றியும் நல்ல பழக்கங்கள் பற்றியும் பாடம் நடத்தினாள். அவளுடைய வருகையின்போது சில நிமிடங்களே கூட இருந்த உர்சுலாவை அந்தப் பாடம் கவர்ந்தது. இரண்டு மணி நேரத்துக்குப் பிறகு அந்த உரையாடல் தொய்வடையத் தொடங்கியபோது அமரந்தாவின் கவனம் சிதறத் தொடங்கியதைப் பயன்படுத்திக்கொண்டு அம்பரோ ஒரு கடிதத்தை ரெபேக்காவிடம் கொடுத்தாள். பியானோவை இயக்குவது பற்றிய குறிப்புகள் எழுதப்பட்டது போன்ற அதே இதமான சொற்களில் அதே பச்சை நிற மையால் அதே ஒழுங்கான கையெழுத்தில் மதிப்புக்குரிய செல்வி ரெபேக்கா புயேந்தியா என்று எழுதப்பட்ட பெயரைப் பார்த்தாள். அளவற்றதும் நிபந்தனையில்லாததுமான நன்றியுணர்வு தொனிக்கும் பாவத்துடனும் சாகும் வரைக்கும் இதற்குக் கடன்பட்டிருப்பேன் என்பதைத் தெரிவிக்கும் மௌன வாக்குறுதியுடனும் அம்பரோ மாஸ்கோட்டைப் பார்த்தபடியே விரல் முனைகளால் அந்தக் கடிதத்தை மடித்துத் தனது மார்பகங்களுக்குள் ஒளித்து வைத்துக் கொண்டாள்.

அம்பரோ மாஸ்கோட்டுக்கும் ரெபேக்கா புயேந்தியாவுக்கும் இடையில் ஏற்பட்ட திடீர் நட்பு அவுரேலியானோவின் நம்பிக்கைகளை

ஏழச் செய்தது. ரெமேதியோஸின் நினைவுகள் தன்னை வதைப்பதைத் தடுக்க முடியவில்லை. எனினும் அவளைச் சந்திப்பதற்கான ஒரு வாய்ப்பையும் அவனால் கண்டுபிடிக்கவும் முடியவில்லை. தனது நெருங்கிய நண்பர்களான மாக்னிஃபிசியோ விஸ்பால், ஜெரினெல்தோ மார்க்கேஸ் – நகரத்தைக் கண்டுபிடித்தவர்களின் அதே பெயர்கள் கொண்ட பிள்ளைகள் அவர்கள் – ஆகியவர்களுடன் நகரத்துக்குள் சுற்றித் திரியும்போது அவள் இருக்கிறாளா என்று ஆசைப் பார்வை யுடன் தையற்கடைக்குள் எட்டிப் பார்ப்பான். ஆனால் அவளுடைய அக்காள்களையே அவனால் பார்க்க முடிந்தது. அம்பரோ மாஸ்கோட் டின் இருப்பே ஒரு முன்னெச்சரிக்கை போல இருந்தது. "அவள் இவளுடன் வந்தாக வேண்டும்" என்று அவுரேலியானோ தணிந்த குரலில் தனக்குத் தானே சொல்லிக்கொள்வான். "அவள் வர வேண்டும்." அவன் அதையே பலமுறை திரும்பச் சொன்னான். ஒரு பிற்பகல் வேளையில் அவன் பட்டறையில் உட்கார்ந்து ஒரு தங்க மீனின் பகுதிகளை இணைத்துக் கொண்டிருந்தபோது தன்னுடைய அழைப் புக்கு அவள் பதில் சொல்லுவாள் என்ற நிச்சயம் தோன்றியது. உண்மையில் சற்று நேரத்துக்குப் பிறகு அவன் அந்த மழலைக் குரலைக் கேட்டான். பதற்றத்தில் உறைந்துபோன இதயத்துடன் நிமிர்ந்தபோது இளஞ்சிவப்பு ஆர்கண்டி உடையும் வெண்ணிறக் காலணிகளும் அணிந்து வாசலில் அவள் நிற்பதைப் பார்த்தான். கூடத்திலிருந்து அம்பரோ மாஸ்கோட் "ரெமேதியோஸ், நீ அங்கே போகக்கூடாது. அவர்கள் வேலை செய்துகொண்டிருக்கிறார்கள்" என்று சொன்னாள்.

ஆனால் அவுரேலியானோ அவளுக்குப் பதில் சொல்ல அவகாசம் தரவில்லை. வாயில் மாட்டிய சங்கிலியைப் பிடித்து எடுத்தபடியே அவளிடம் சொன்னான்: "உள்ளே வா."

ரெமேதியோஸ் உள்ளே வந்து மீனைப் பற்றிக் கேட்ட சில கேள்விகளுக்கு அவுரேலியானோவால் பதில் சொல்ல முடியவில்லை. ஏனெனில் திடீரென்று ஆஸ்துமா அவனைப் பீடித்திருந்தது. அந்த லில்லி மலர்ச் சருமத்துக்கு அருகில், அந்த மரகத விழிகளுக்கு அருகில், அவளுடைய அப்பாவுக்குக் கொடுக்கும் அதே மரியாதையுடன் ஒவ்வொரு கேள்விக்கும் 'சார்' என்று தன்னை அழைக்கும் அந்தக் குரலுக்கு நெருக்கமாக இருக்க விரும்பினான். மெல்குயாதெஸ் மூலையில் ஒரு மேஜையில் உட்கார்ந்து புரிந்துகொள்ள முடியாத ஏதோ குறியீடுகளைக் கிறுக்கிக்கொண்டிருந்தான். அவுரேலியானோ வுக்கு அவன் மேல் வெறுப்பாக இருந்தது. அந்தச் சிறுமீனை அவளுக்குக் கொடுக்க இருப்பதாக மட்டுமே அவனால் ரெமேதியாஸிடம் சொல்ல முடிந்தது. அந்தச் சலுகையைக் கேட்டுத் திகைத்துப்போன அவள் தன்னால் எவ்வளவு வேகமாக முடியுமோ அவ்வளவு வேகமாகப் பட்டறையை விட்டு வெளியேறினாள். அவளைப் பார்ப்பதற்காக ரகசியப் பொறுமையுடன் காத்திருந்த சந்தர்ப்பத்தை அவன் அந்தப் பிற்பகலில் இழந்தான். வேலையை உதாசீனம் செய்தான். அவள் தென்பட வேண்டும் என்று மனத்தை ஒருமுகப்படுத்தி அவன் செய்த முயற்சிகள் எல்லாம் விரயமாயின. அவளுடைய சகோதரிகளின்

கடையில் அவளைத் தேடினான். அவளுடைய வீட்டு ஜன்னல்களின் நிழல்களுக்குப் பின்னால் தேடினான். அவளுடைய தகப்பனாரின் அலுவலகத்தில் தேடினான். ஆனால் அவனுடைய அந்தரங்கமான கொடும் தனிமையில் மிஞ்சியிருந்த பிம்பத்தில் மட்டுமே அவளைப் பார்க்க முடிந்தது. ரெபேக்காவுடன் வரவேற்பறையில் உட்கார்ந்து நீண்ட நேரம் பியானோ இசையைக் கேட்பதில் கழித்தான். தங்களுக்கு நடனமாடக் கற்றுக்கொடுப்பதற்காக பியத்ரோ கிரெஸ்பி பயன்படுத்திய இசை என்பதனால் அவள் அதையே கேட்டுக்கொண்டிருந்தாள். எல்லாப் பொருட்களும் அந்த இசையும்கூட ரெமேதியோஸை நினைவு படுத்தியது என்பதால் அவுரேலியானோ அதைக் கேட்டுக்கொண் டிருந்தான்.

அந்த வீடு காதலால் நிரம்பத் தொடங்கியிருந்தது. அவுரேலியானோ அதை முதலோ முடிவோ இல்லாத கவிதைகளில் வெளிப்படுத்தினான். மெல்குயாதெஸ் கொடுத்திருந்த முரட்டுக் காகிதத்தில் அவற்றை எழுதினான். குளியல் அறைச் சுவர்கள் மேல் எழுதினான். உள்ளங்கை யில் எழுதினான். அவை எல்லாவற்றிலும் ரெமேதியோஸ் உருமாறித் தெரிந்தாள். பிற்பகல் இரண்டு மணியின் அயர்வூட்டும் காற்றில் ரெமேதியோஸ். ரோஜாப் பூக்களின் மெல்லிய சுவாசத்தில் ரெமேதியோஸ். இரவுப் பூச்சிகளின் நீர்க்கடிகை முணுமுணுப்பில் ரெமேதியோஸ். ஆவி பறக்கும் காலை ரொட்டியில் ரெமேதியோஸ். எங்கும் ரெமேதியோஸ். என்றென்றும் ரெமேதியோஸ். மாலை நான்கு மணிக்கு ரெபேக்கா ஜன்னலருகில் உட்கார்ந்து எம்பிராய்டரி செய்தபடி தன்னுடைய காதலுக்காகக் காத்திருந்தாள். இரண்டு வாரங்களுக்கு ஒருமுறைதான் தபால்காரனின் கோவேறுக் கழுதை வந்து சேரும் என்று அவளுக்குத் தெரியும். இருந்தாலும் தவறுதலாக வேறு நாட் களிலும் அவன் வந்துவிடலாம் என்ற எதிர்பார்ப்பில் அவள் காத்துக் கொண்டிருந்தாள். அந்த எதிர்பார்ப்புக்கு மாறாகத்தான் நடந்தது. ஒருமுறை வழக்கமான நாளில் கோவேறுக் கழுதை வரவில்லை. ஏமாற்றத்தால் பைத்தியம் பிடித்த ரெபேக்கா நள்ளிரவில் எழுந்து தற்கொலை முனைப்புடன் கைநிறையத் தோட்டத்து மண்ணை எடுத்துத் தின்றாள்; வேதனையுடனும் சீற்றத்துடனும் அழுதுகொண்டே இளம் மண்புழுக்களைச் சவைத்தாள். நத்தை ஓடுகளை பற்களில் பொடித்தாள் விடியும்வரை வாந்தியெடுத்தாள். காய்ச்சல் பிடித்து நினைவு இழந்தாள். அவளுடைய இதயம் ஒரு வெட்கமில்லாத மயக்கத்தில் ஆழ்ந்தது. அதிர்ந்துபோன உர்சுலா அவளுடைய டிரங்குப் பெட்டியைப் பலவந்தமாக உடைத்துத் திறந்தாள். அதன் அடிப்பாகத்தில் இளம் சிவப்பு நாடாக் களால் கட்டப்பட்ட சுகந்தம் கமழும் பதினாறு கடிதங்கள் இருப்பதையும் சருகுகளையும் பழைய புத்தகங்களுக்குள் பத்திரப்படுத்தப்பட்ட பூவிதழ் களையும் தொட்டால் தூளாகிவிடும் நிலையிலிருந்த வண்ணத்துப் பூச்சிகளையும் பார்த்தாள்.

அதுபோன்ற ஏமாற்றத்தைப் புரிந்துகொள்ளும் திறமையுள்ள ஒரே ஒருவனாக அவுரேலியானோ மட்டுமே இருந்தான். அன்று பிற்பகல், ரெபேக்காவை உன்மத்த நிலையிலிருந்து மீட்க உர்சுலா முயன்றுகொண்

டிருந்தபோது அவன் மாக்னிஃபிகோ விஸ்பல்லுடனும் ஜெரினெல்தோ மார்க்கேஸுடனும் கதாரினோவின் கடைக்குப் போனான். வாடிப் போன பூக்களின் வாடையடிக்கும் பெண்கள் தனியாக வசிக்கும் மர அறைகள் கொண்ட காட்சிக்கூடத்துடன் அந்த நிறுவனம் விரிவாக்கப்பட்டிருந்தது. அக்கார்டியனும் மத்தளங்களும் வைத்திருந்த ஒரு குழு வருடக்கணக்காக மகோந்தாவில் காணப்படாமலிருந்த பிரான்சிஸ்கோ என்ற நாயகனின் பாடல்களை இசைத்துக்கொண் டிருந்தது. மூன்று நண்பர்களும் நொதிக்கவைத்த கரும்புச் சாற்றைக் குடித்தார்கள். மாக்னிஃபிகோவும் ஜெரினெல்தோவும் அவுரேலியானோ வின் சமவயதுக்காரர்கள். ஆனால் லௌகீகச் செயல்களில் மிகவும் தேர்ந்தவர்கள். பெண்களை மடியில் அமர்த்திக்கொண்டே முறையாகக் குடித்தார்கள். அவர்களில் ஒருத்தி, அவளுக்குப் பல் விழுந்து அந்த இடத்தில் தங்கப் பல் பொருத்தியிருந்தது, அவுரேலியானோவைக் கட்டியணைத்தாள். அது அவனை நடுங்கச் செய்தது. அவளைத் தள்ளி விட்டான். அதிகமாகக் குடிக்கக் குடிக்க ரெமேதியோஸைப் பற்றி அதிகமாக யோசிப்பதைக் கண்டுபிடித்தான். அவனால் ஞாபகங்களின் வதையைத் தாங்க முடியவில்லை. எப்போது மிதக்க ஆரம்பித்தான் என்பதும் அவனுக்குத் தெரியவில்லை. பாரமே இல்லாமலும் வாயி லிருந்து வெளியில் வராத வார்த்தைகளில் பேசிக்கொண்டும் தங்களுடைய பாவங்களுடன் பொருந்தாத புதிரான சைகைகள் காட்டிக்கொண்டும் அவனுடைய நண்பர்களும் அந்தப் பெண்களும் பிரகாசமான வெளிச்சத் தில் மிதந்து போவதைப் பார்த்தான். கதாரினோ அவனுடைய தோளின் மீது ஒரு கையை வைத்து "மணி பதினொன்று ஆகப் போகிறது" என்றான். அவுரேலியானோ தலையைத் திருப்பி, காதுக்குப் பின்னால் கம்பளி நூல் பூவைச் செருகிய பெரிய விகாரமான அந்த முகத்தைப் பார்த்தான். தொடர்ந்து மறதிக் காலத்தில் நடந்தது போலவே நினை விழந்தான். பின்னர், முற்றிலும் அந்நியமான அந்த அறையில் விநோத மான விடியற்காலையில் வெற்றுக் கால்களுடனும் அவிழ்ந்த கூந்த லுடனும் உள்ளாடைகள் மட்டும் அணிந்து நின்ற பிலர் தெர்னேரா ஒரு விளக்கை முன்னால் பிடித்து நம்ப முடியாமல் திகைத்து "அவுரேலியானோ" என்று சொன்னபோதுதான் அவனுக்கு நினைவு திரும்பியது. அவுரேலியானோ தனது கால்களைப் பார்த்துப் பரிசோதித்துவிட்டுத் தலை நிமிர்ந்தான். தான் அங்கே வந்தது எப்படி என்று அவனுக்குத் தெரியவில்லை. ஆனால் தன்னுடைய குறிக்கோள் என்னவென்று தெரிந்திருந்தது. ஏனெனில் அதை அவன் குழந்தைப் பருவத்திலிருந்தே மனதின் அணுகமுடியாத கழிமுகத்தில் மறைத்து வைத்திருந்தான்.

"நான் உன்னுடன் உறவு கொள்ள வந்திருக்கிறேன்" என்றான்.

அவனுடைய உடைகளில் சேறும் வாந்தியும் அப்பியிருந்தன. அந்தச் சமயத்தில் பிலர் தெர்னேரா தன்னுடைய இரு சின்னக் குழந்தைகளுடன் தனியாக வசித்திருந்தாள். அவனிடம் கேள்விகள் எதையும் கேட்கவில்லை. அவனைப் படுக்கை அறைக்கு அழைத்துப் போனாள். ஈரத் துணியால் அவன் முகத்தைத் துடைத்துவிட்டாள்.

அவனுடைய உடைகளைக் களைந்தாள். பின்னர் தனது உடைகளை முற்றிலுமாகக் கழற்றினாள். குழந்தைகள் எழுந்துவிட்டால் பார்க்காமல் இருப்பதற்காகக் கொசு வலையை இறக்கிவிட்டாள். தன்னைப் பிரிந்து போனவர்களிலும் தன் வீட்டுக்கு வரும் பாதையைத் தவற விட்டவர்களிலும் தன்னுடன் கூடவே வசிக்கும் ஓர் ஆணுக்காகக் காத்திருந்து களைத்துப் போயிருந்தாள். சீட்டுகளின் நிச்சயமின்மையால் குழம்பிப் போயிருந்தாள். அந்தக் காத்திருப்பு வேளையில் அவளுடைய சருமம் சுருக்கமடைந்தது. முலைகள் தொய்ந்தன. அவளுடைய மனக்கங்குகள் அணைந்தன. இருட்டில் அவுரேலியானோவைத் தொட்டுணர்ந்தாள். கைகளை அவன் வயிற்றின் மீது வைத்துத் தாய்மையின் மென்மையுடன் அவன் கழுத்தில் முத்தமிட்டாள். "என் அப்பாவிக் குழந்தை" என்று முணுமுணுத்தாள். அவுரேலியானோ திடுக்கிட்டான். நிதானமாக, தவறுதலாக ஒரு எட்டுக்கூட வைக்காமல் திரண்டிருந்த துக்கத்திலிருந்து வெளியேறினான். தொடுவானங்களே இல்லாத சதுப்பு நிலமாகவும் ஏதோ முரட்டுப் பிராணியின் நெடியாகவும் அப்போதுதான் தேய்த்த துணியின் வாசனையாகவும் ரெமேதியோஸ் மாறுவதைக் கண்டுணர்ந்தான். மேற்பரப்பை அடைந்ததும் அழுதுகொண்டிருந்தான். முதலில் அது அனிச்சையானதும் பின்னர் தேம்பலாகவும் இருந்தது. அப்புறம் அவனுக்குள் வீங்கி வேதனைப்படுத்திக்கொண்டிருந்த ஏதோ ஒன்று வெடித்தது போலக் கட்டற்ற நீரோட்டமாக அழுது தன்னைக் காலி செய்துகொண்டான். தன்னுடைய விரல் நுனிகளால் அவனுடைய தலையைக் கோதியபடி அவனை வாழவிடாமல் வதைத்துக் கொண்டிருந்த அந்த இருட்பண்டத்திடமிருந்து அவன் வெளியேறும் வரை அவள் காத்திருந்தாள். பிறகு பிலர் தெர்னேரா அவனிடம் கேட்டாள்: "யார் அது?" அவுரேலியானோ அவளிடம் எல்லாவற்றையும் சொன்னான். அவள் ஒரு சிரிப்பை வெளிப்படுத்தினாள். பழைய காலங்களில் புறாக்களை வெருளச் செய்த அந்தச் சிரிப்பு இப்போது தூங்கிக்கொண்டிருந்த குழந்தைகளைக்கூட எழுப்பவில்லை. "முதலில் நீ அவளை வளர்த்து எடுக்க வேண்டும்" என்று கேலி செய்தாள். ஆனால் அந்தக் கேலியின் ஆழத்தில் புரிந்துகொள்ளலின் சேகரத்தை அவுரேலியானோ பார்த்தான். அந்த அறையை விட்டுப் போகும்போது அவன் தன்னுடைய ஆண்மை பற்றிய சந்தேகங்களை மட்டுமல்ல பல மாதங்களாக அவனுடைய மனம் சுமந்துகொண்டிருந்த கசப்பான பாரத்தையும் விட்டுப் போனான். பிலர் தெர்னேரா அவளாகவே ஒரு வாக்குறுதியைக் கொடுத்தாள்.

"அந்தப் பெண்ணிடம் பேசப் போகிறேன். நான் அவளுக்குத் தாம்பாளத்தில் என்ன வைத்துத் தரப்போகிறேன் என்பதை நீயே பார்ப்பாய்" என்று அவனிடம் சொன்னாள். அவள் தன்னுடைய வாக்குறுதியைக் காப்பாற்றினாள். ஆனால் அது ஒரு மோசமான கணமாக இருந்தது. ஏனெனில் அத்துடன் அந்த வீடு முந்தைய நாட்களின் அமைதியை இழந்தது.

உரக்கக் கத்தியதன் மூலம் ரகசியமாக வைக்க முடியாமல்போன ரெபேக்காவின் ஆசையைக் கண்டுபிடித்தபோது அமரந்தாவுக்குக்

காய்ச்சல் வந்துவிட்டது. ஒரு தனிமைக் காதலின் தூண்டிலால் அவளும் துன்புற்றிருந்தாள். குளியலறைக்குள் புகுந்து கதவைச் சாத்திக்கொண்டாள். நம்பிக்கை கொள்ள முடியாத ஆசையின் சித்திரவதையிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்வதற்காக ஜுர வேகத்தில் கடிதங்கள் எழுதினாள். கடைசியில் அவற்றையெல்லாம் தனது டிரங்குப் பெட்டியின் அடியில் மறைத்து வைத்தாள். நோயாளிகளான இரண்டு பெண்களைக் கவனித்துக்கொள்வதற்கான வலு உர்சுலாவுக்கு இருக்கவில்லை. நீண்ட, நிரந்தரமான விசாரணைகளுக்குப் பின்பும் அமரந்தாவின் நோய்க்கான காரணத்தை அவளால் தீர்மானிக்க முடியவில்லை. கடைசியில் உள்ளுணர்வால் தூண்டப்பட்ட ஒரு கணத்தில் டிரங்குப் பெட்டியின் பூட்டை உடைத்துத் திறந்தாள். இளஞ்சிவப்பு நாடாக்களால் சுற்றப்பட்ட அந்தக் கடிதங்களைப் பார்த்தாள். அவை லில்லிப் பூக்களுடன் சேர்த்துக் கட்டப்பட்டிருந்தன. இன்னும் கண்ணீரின் ஈரத்துடன் இருந்தன. அவற்றில் பியத்ரோ கிரெஸ்பியின் முகவரி எழுதப்பட்டிருந்தும் அனுப்பப்பட்டிருக்கவில்லை. பியானோ வாங்க வேண்டும் என்று தனக்குத் தோன்றிய அந்த நாளைக் கோபத்தில் அழுதுகொண்டே சபித்தாள். எம்பிராய்டரி பாடங்களை நிறுத்தினாள். யாரும் இறந்து போகவில்லை. எனினும் பெண்பிள்ளைகள் அவர்களுடைய எதிர்பார்ப்புகளிலிருந்து மீண்டு வரும்வரைக்கும் துக்கம் கடைப்பிடிக்க உத்தரவிட்டாள். இந்தக் குறுக்கீட்டால் பியத்ரோ கிரெஸ்பியைப் பற்றிய அபிப்பிராயம் மாறியது. இசைக் கருவிகளைக் கையாளுவதில் அவனுக்கு இருக்கும் திறமையை மெச்சிக்கொண்டிருந்த ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவும் தனது ஆரம்ப அபிப்பிராயத்தை மாற்றிக்கொண்டார். அதனால் ரெமேதியோஸ் திருமணத்துக்குத் தயாராக இருப்பதாகப் பிலர் தெர்னேரா சொன்னபோதும் அவுரேலியானோ அந்தத் தகவல் தனது பெற்றோர்களை மேலும் சங்கடப்படுத்தும் என்றே பார்த்தான். சம்பிரதாயமான பேச்சு வார்த்தைக்காக வரவேற்பறைக்கு அழைத்து வரப்பட்ட ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவும் உர்சுலாவும் மகனின் அறிவிப்பை இறுக்கமாக உட்கார்ந்து கேட்டார்கள். மணமகளாக வரவிருப்பவளின் பெயரைத் தெரிந்துகொண்டதும் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா கொதிப்படைந்து சிவந்தார். "காதல் ஒரு நோய்" என்று உறுமினார். "அழகும் குணமும் உள்ள எத்தனையோ பெண்கள் சுற்றிலும் இருக்க உனக்குத் திருமணம் செய்து கொள்ள நமது எதிரியின் பெண்தானா கிடைத்தாள்?" ஆனால் உர்சுலா அந்தத் தேர்வுக்கு ஒத்துக்கொண்டாள். மாஸ்கோட் சகோதரிகள் ஏழு பேர்மீதும் அவர்களுடைய அழகு, அவர்களுடைய வேலை செய்யும் பாங்கு, அவர்களுடைய கண்ணியம், அவர்களுடைய நல்ல பழக்கங்கள் எல்லாவற்றாலும் தனக்கு அவர்கள்மீது பாசமிருப்பதை ஒப்புக்கொண்டாள். மகனுடைய விவேகத்தைப் பாராட்டினாள். மனைவியின் உற்சாகத்துக்குப் பணிந்த ஹோசே அர்க்காதியோ புயேந்தியா ஒரு நிபந்தனை விதித்தார். ரெபேக்கா விரும்பும் பியத்ரோ கிரெஸ்பிக்கு அவளை மணம் செய்து கொடுக்கலாம். உர்சுலா, அவளுக்குச் சமயம் கிடைக்கும்போது அமரந்தாவை பிரதேசத்தின் தலைநகரத்துக்கு அழைத்துச் செல்ல வேண்டும். வெளிமனிதர்களின் தொடர்புகள்

அவளுடைய ஏமாற்றத்தை மட்டுப்படுத்தும். இந்த ஒப்பந்தத்தைப் பற்றிக் கேள்விப்பட்டதும் ரெபேக்காவுக்கு உடல் நலம் திரும்பியது. பெற்றோர்களின் இசைவு பெற்றுத் தனது வரனுக்குக் குதூகலமான கடிதத்தை எழுதினாள். இடைத்தரகர்கள் யாரையும் பயன்படுத்தாமல் அவளே கொண்டு போய்த் தபாலில் சேர்த்தாள். அமரந்தா அந்த முடிவை ஏற்றுக்கொண்டது போலப் பாவனை செய்தாள். மெல்ல மெல்லக் காய்ச்சலிலிருந்து தேறினாள். ஆனால் தனக்குள்ளாகவே உறுதி சொல்லிக்கொண்டாள். தன்னுடைய பிணத்தின் மேல்தான் ரெபேக்காவின் திருமணம் நடக்கும்.

அடுத்து வந்த சனிக்கிழமையன்று ஹோசே அர்க்காதியோ புயேந்தியா கறுப்புக் கோட்டும் செல்லுலாயிட் காலரும் அணிந்து விருந்து தின இரவில் முதன்முதலாக மாட்டிய மான்தோல் காலணியையும் போட்டுக்கொண்டு ரெமேதியோஸ் மாஸ்கோட்டைத் தனது மகனுக்குப் பெண் கேட்கப் புறப்பட்டுப் போனார். அந்த எதிர்பாராத வருகையின் காரணம் என்ன என்று தெரியாத மாஜிஸ்டிரேட்டும் அவர் மனைவியும் மகிழ்ச்சியுடனும் அதே சமயம் கவலையுடனும் அவரை வரவேற்றார்கள். பிறகு மணப்பெண்ணின் பெயரில் அவருக்குக் குழப்பமிருக்கலாம் என்று நினைத்தார்கள். அந்தப் பிழையை நிவர்த்தி செய்வதற்காகத் தாயார் ரெமேதியோஸை எழுப்பித் தூக்கம் கலையாமலிருந்தவளை வரவேற்பறைக்கு எடுத்துக் கொண்டுவந்தாள். அவள் திருமணம் செய்துகொள்ள முடிவுசெய்திருப்பது உண்மைதானா என்று கேட்டார்கள். தன்னைத் தூங்க விட்டால் போதும் என்று அவள் சிணுங்கிக்கொண்டே பதில் சொன்னாள். மாஸ்கோட் தம்பதியரின் இக்கட்டான நிலைமையைப் புரிந்துகொண்ட ஹோசே அர்க்காதியோ புயேந்தியா, அவுரேலியானோவிடம் பேசித் தெளிவுபடுத்திக் கொள்வதற்காகப் போனார். அவர் திரும்பி வந்தபோது மாஸ்கோட் தம்பதியர் மரபான உடைகளை அணிந்திருந்தார்கள். மேஜை நாற்காலிகளை மாற்றிப் போட்டிருந்தார்கள். பூ ஜாடியில் புதிய மலர்களை வைத்திருந்தார்கள். மற்ற மூத்த மகள்களுடன் காத்துக்கொண்டிருந்தார்கள். அந்தத் தருணத்தின் இங்கிதமின்மையையும் கெட்டியான கழுத்துப் பட்டையின் உறுத்தலையும் மிஞ்சி ஹோசே அர்க்காதியோ புயேந்தியா மணப்பெண் அதிருஷ்டசாலியான ரெமேதியோஸ்தான் என்ற உண்மையை உறுதிசெய்தார். "இது விளங்கவில்லை" கலக்கத்துடன் டான் அபோலினார் மாஸ்கோட் சொன்னார். "எங்களுக்கு ஆறு பெண்கள் இருக்கிறார்கள். எல்லாரும் திருமணமாகாதவர்கள். திருமண வயதை எட்டிய அவர்கள், உங்கள் மகனைப் போன்ற கடின உழைப்பாளியும் கனவானுமான ஒருவனின் கௌரவத்துக்குரிய மனைவியாக இருப்பதில் மகிழ்ச்சியடைவார்கள். ஆனால் அவுரேலியோவின் பார்வையோ இன்னும் படுக்கையில் ஒன்றுக்கு இருப்பவள்மீதுதான் விழுந்திருக்கிறது" என்றார். இமைகளின் உறுத்தலால் சிமிட்டிக்கொண்டிருக்கும் முகத்தோற்றமுள்ள ஆரோக்கியவதியான அவர் மனைவி அவருடைய அபத்தப் பேச்சைக் கண்டித்தாள். பழச்சாற்றை அருந்தி முடித்ததும் அவுரேலியானோவின் முடிவை மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டார்கள். உர்சுலாவிடம் தனியாகப் பேச வேண்டும் என்ற

வேண்டுகோளை மட்டும் செனோரா மாஸ்கோட் முன்வைத்தாள். 'ஆர்வம் கிளர்ந்திருந்தாலும் ஆண்களின் விவகாரத்தில் தன்னை மாட்டி விடுகிறார்கள் என்று மறுத்தாலும் ஆழ்ந்த நெகிழ்ச்சியால் உர்சுலா மறுநாள் அவளைச் சந்திக்கப் போனாள். அரை மணி நேரத்துக்குப் பிறகு ரெமேதியாஸ் இன்னும் பூப்படையவில்லை என்ற விவரத்துடன் திரும்பி வந்தாள். அவுரேலியானோ அதை ஒரு சீரிய தடங்கலாக எடுத்துக் கொள்ளவில்லை. இவ்வளவு காலம் காத்திருந்தவன் தேவைப் பட்டால் தன்னுடைய மணப்பெண்ணாக இருப்பவள் வயதுக்கு வரும்வரைக்கும் காத்திருக்கவும் தயாராக இருந்தான்.

அந்தப் புதிய சுமுகநிலை மெல்குயாதெஸின் மரணத்தால் தடைப்பட்டது. அது முன்பே எதிர்பார்த்திருந்த சம்பவம்தான். எனினும் சூழ்நிலைகள் அப்படியிருக்கவில்லை. அவன் திரும்ப வந்த சில மாதங்களிலேயே முதுமை மிக வேகமாகவும் தீவிரமாகவும் அவன் மேல் செயல்பட்டது. நல்ல காலங்களை நினைத்துப் பார்த்துப் புலம்பியபடி கால்களை இழுத்துக்கொண்டு அறை அறையாக நிழல் களைப் போல அலைந்துகொண்டிருக்கும் உபயோகமில்லாத முதுபாட்டன்களில் ஒருவரைப் போல அவன் நடத்தப்பட்டான். ஒரு காலைவேளையில் படுக்கையில் இறந்து கிடந்தவனைப் பார்க்கும் வரையும் யாரும் அவனைப் பற்றிக் கவலைப்படவோ நினைத்துப் பார்க்கவோ இல்லை. ஆரம்பத்தில் புகைப்பட விந்தை மேலிருந்த ஆர்வத்தாலும் நாஸ்டர்டாமஸின் ஆருடங்களைப் பற்றிய ஆர்வத்தாலும் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா அவனுடைய வேலையில் உதவினார். அவனுடன் தொடர்புகொள்வது சிரமமாகிக் கொண்டிருந்தபோது மெல்ல மெல்ல அவர் அவனை அவனுடைய தனிமைக்குள்ளேயே விட்டுவிடத் தொடங்கினார். அவன் பார்வையையும் கேட்கும் திறனை யும் இழந்து கொண்டிருந்தான். தன்னுடன் பேசிக் கொண்டிருப்பவர் களைக் குழம்பச் செய்கிறான் என்று தோன்றியது. அவர்களை வேறு ஏதோ காலகட்டத்தைச் சேர்ந்த மனிதர்கள் என்று அவன் நினைக்க ஆரம்பித்தான். சிக்கலான கலப்பு மொழியில் கேள்விகளுக்குப் பதில் சொன்னான். விளங்கிக்கொள்ள முடியாத நெகிழ் பொருட்களின் ஊடே, ஏதோ உடனடியான முன்னறிவின் அடிப்படையில் திசைகள் பற்றிய உள்ளுணர்வுடன் கடந்து செல்வதைப் போலக் காற்றைத் துழாவிக் கொண்டு நடப்பான். படுக்கைக்கு அருகில் நீர் நிரம்பிய கண்ணாடிக் குவளையில் இரவில் இட்டு வைத்திருந்த தனது பொய்ப் பற்களை எடுத்துப் பொருத்திக்கொள்ள ஒரு நாள் மறந்துபோனான். அதற்குப் பிறகு அவன் அதை வைத்துக்கொள்ளவேயில்லை. உர்சுலா வீட்டைப் பெரிதுபடுத்தும் வேலையைத் தொடங்கியபோது அவுரேலியானோவின் பட்டறைக்கு அருகில் வீட்டுச் சந்தடியிலும் இரைச்சலிலுமிருந்து விலகிய வெளிச்சம் நிரம்பிய ஜன்னலும் புத்தக அலமாரியும் வைத்த ஒரு பிரத்தியேக அறையை அவனுக்காகக் கட்டச் செய்தாள். புழுதி படிந்தும் பூச்சிகள் அரித்தும் கிட்டத்தட்ட நாசமாகி யிருந்த அவனுடைய புத்தகங்களையும் புரிந்துகொள்ள முடியாத குறியீடுகள் எழுதப்பட்ட காகிதக் கத்தைகளையும் சிறிய பூக்கள் பூக்கும் நீர்த்தாவரங்கள் வேர்விட்டிருந்த அவனுடைய பொய்ப்

பல் வைத்த குவளையையும் அவளே ஒழுங்குபடுத்தி வைத்தாள். புதிய இடம் மெல்குயாதெஸ¬க்குப் பிடித்திருந்ததாகத் தோன்றியது. ஏனெனில் அதன் பிறகு அவனை வேறு எங்கும் பார்க்க முடியவில்லை. சாப்பாட்டு அறையிலும்கூட. அவுரேலியானோவின் பட்டறைக்கு மட்டும் போனான். அங்கே உட்கார்ந்து கூடவே கொண்டு வந்த முரட்டுக் காகிதங்களில் தனது புதிரான இலக்கியத்தைக் கிறுக்கிக் கொண்டு பல மணி நேரங்களைக் கழித்தான். ஏதோ உலர்ந்த பொருளிலிருந்து தயாரிக்கப்பட்டிருந்த அந்தத் தாள்கள் களி போலச் சுருங்கியிருந்தன. ஒரு நாளைக்கு இரண்டு வேளையும் விசிட்டாசியா கொண்டு வரும் உணவை அங்கேயே சாப்பிட்டான். கடைசிக் காலங்களில் அவனுக்கு ருசி தெரியாமல் போனது. வெறும் காய்கறிகளை மட்டுமே தின்றான். சீக்கிரமே மரக்கறியை மட்டுமே சாப்பிடுபவர்களின் இரங்கத்தகுந்த தோற்றத்தை அடைந்தான். அவனுடைய புராதனமான உடையில் பூத்திருந்த பூஞ்சனம் போன்ற மெல்லிய திரள் அவனுடைய சருமத்திலும் படர்ந்தது. அவனுடைய மூச்சில் உறங்கும் மிருகத்தின் கவிச்சை வெளியானது. தன்னுடைய கவிதை யாக்கத்தில் மூழ்கியிருந்த அவுரேலியானோ அவனை மறக்கத் தொடங்கியிருந்தான். ஆனால், மெல்குயாதெஸ் தனது துழாவல் தனிமொழியில் சொல்லிக் கொண்டிருப்பவற்றைப் புரிந்துகொள்ள முடிவதாக ஒரு தருணத்தில் நினைத்தான். கவனித்துக் கேட்டான். உண்மையில் அந்தக் கல் போன்ற பத்திகளில் வந்த சொற்களில் அவனால் பிரித்து எடுக்க முடிந்தது ஈக்வினாக்ஸ். ஈக்வினாக்ஸ். ஈக்வினாக்ஸ் என்ற சொல்லையும் அலெக்சாந்தர் வான் ஹம்போல்ட் என்ற பெயரையும்தான். வெள்ளி வேலையில் அவுரேலியானோவுக்கு உதவத் தொடங்கியபோது அர்க்காதியோ அவனிடம் கொஞ்சம்கூட நெருக்கமானான். நடைமுறையுடன் அதிகத் தொடர்பில்லாத ஸ்பானிஷ் மொழி வாக்கியங்களைச் சொன்னாலும் மெல்குயாதெஸ் கருத்துப் பரிமாற்றத்துக்கு துணை செய்தான். ஒருநாள் பிற்பகல் வேளையில் திடீர் உணர்வால் ஞானம் பெற்றவன் போல அவன் ஒளிர்ந்தான். பல ஆண்டுகளுக்குப் பிறகு துப்பாக்கிப் படையை எதிர்கொண்டபோது, தனக்குப் புரியாமல் போனதும், ஆனால் உரத்த குரலில் வாசித்தால் போப்பாண்டவரின் நிருபத்தின் மந்திரத்தொனியில் ஒலித்ததுமான அவனுடைய விளங்க முடியாத எழுத்துகளின் அநேகப் பக்கங்களை மெல்குயாதெஸ் நடுங்கும் குரலில் வாசித்துக் கேட்கச் செய்ததை அர்க்காதியோ நினைத்துக் கொண்டான். அதற்குப் பிறகு நீண்ட காலத்துக்கு அப்புறம் முதல் முறையாகச் சிரித்துவிட்டு ஸ்பானிய மொழியில் சொன்னான்: "நான் செத்துப் போனால் என்னுடைய அறையில் மூன்று நாட்கள் பாதரசத்தை எரியவிடு." அர்க்காதியோ அதை ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவிடம் சொன்னான். அதைப் பற்றி மேலும் விளக்கம் பெறப் பின்னவர் முயன்றார். ஆனால் ஒரே ஒரு பதில்தான் கிடைத்தது. "நான் அழிவற்ற நிலையைக் கண்டுபிடித்துவிட்டேன்." மெல்குயாதெஸின் மூச்சு நாற்றமடிக்கத் தொடங்கியதும் அர்க்காதியோ வியாழக்கிழமைகளில் அவனை ஆற்றில் குளிப்பாட்ட அழைத்துப் போனான். அவன் கொஞ்சம் தேறி வருவதாகத் தோன்றியது. உடைகளைக் களைந்து

பையன்களுடன் தண்ணீருக்குள் இறங்குவான். அவனுடைய கூர்மை யர்ன மர்ம உணர்வு ஆழமான இடங்களிலும் ஆபத்தான இடங்களிலும் செல்ல அனுமதிக்காமல் தவிர்த்தது. அதுபோன்ற ஒரு தருணத்தில் "நாம் நீரிலிருந்து வருகிறோம்" என்றான். பியானோலாவைப் பொருத்தப் பரிதாபமாக முயன்ற அந்த இரவில் பார்த்ததையும் பீர்க்கங் கூட்டை யும் துவாலையில் சுற்றிய பனை எண்ணெய்ச் சோப்புத் துண்டையும் கையில் எடுத்துக்கொண்டு அர்க்காதியோவுடன் ஆற்றுக்குப் போகும் போது பார்த்ததையும் தவிர வீட்டிலிருந்த யாரும் அவனைப் பார்க்காம லேயே பெரும்பான்மையான காலம் கடந்துபோனது. ஒரு வியாழக் கிழமை ஆற்றுக்குப் போக அழைப்பதற்கு முன்பு "சிங்கப்பூரில் மணற் திட்டைகளுக்கு நடுவில் காய்ச்சலில் செத்துப் போனேன்" என்று அவன் சொல்லிக்கொண்டிருந்ததை அவுரேலியானோ கேட்டான். அன்று அவன் நீருக்குள் ஆபத்தான இடத்தில் இறங்கினான். அவர்களால் அவனைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அடுத்த நாள் சில மைல் களுக்கு அப்பால், வெளிச்சம் துலக்கப்படுத்தியிருந்த ஆற்று வளைவில் ஒதுங்கிக் கிடந்தான். அவன் வயிற்றின் மேல் ஒரு பிணந்தின்னிக் கழுகு தனியாக உட்கார்ந்திருந்தது. தன்னுடைய சொந்தத் தகப்பனின் மரணத்தில் ஏற்பட்டதைவிட அதிக துக்கத்துடன் உர்சுலா அழுதாள். அவளுடைய அவமதிப்புச் செய்யும் மறுப்பை மீறி ஹோசே அர்க்காதியோ புயேந்தியா அவனைப் புதைக்கும் அவர்களுடைய யோசனையை எதிர்த்தார். "அவன் சாகாவரம் பெற்றவன். தன்னுடைய புத்துயிர்ப்புக் கான சூத்திரத்தை அவனே வெளிப்படுத்தியிருக்கிறான்" என்றார். இதற்கிடையில் மறந்து போயிருந்த நீர்க் குழாயை எடுத்து வந்தார். கொதிக்க வைப்பதற்கான பாதரசக் கெட்டிலை உடலின் அருகில் வைத்தார். நீல நிறக் குமிழிகளால் கெட்டில் சிறிது சிறிதாக நிரம்பிக் கொண்டிருந்தது. மூழ்கிச் செத்தவனைப் புதைக்காமல் விடுவது பொதுமக்களின் உடல் நலனுக்கு ஆபத்தானது என்று டான் அப்போலினர் மாஸ்கோட் அவருக்கு நினைவூட்ட முயன்றார். "அது சரியல்ல; ஏனென்றால் அவன் உயிரோடுதான் இருக்கிறான்" என்பது ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவின் பதில். அப்போது அவர் எழுபத்திரண்டு மணி நேரம் பாதரசத்தைப் புகைத்து முடித் திருந்தார். உடல் ஏற்கனவே நீல நிற வாடையுடன் வெடித்துத் தெறிக்கத் தொடங்கியிருந்தது. மெல்லிய சீழ்க்கையொலியுடன் நோய்க் கூறான வாடை வீட்டுக்குள் நிரம்பியது. அப்போது மட்டுமே அவனைப் புதைப்பதற்கு அனுமதி கொடுத்தார். ஆனால் அடக்கம் சாதாரண மானதாக இருக்கவில்லை. மகோந்தாவின் மகத்தான கொடையாளனுக் குரிய சகல மரியாதைகளுடனும் இருந்தது. நகரத்தில் முதலாவதும் மிக அதிகமான ஆட்கள் கலந்து கொண்டதுமான சவ அடக்கமாக அது இருந்தது. ஒரு நூற்றாண்டுக்குப் பின்பு பெரிய அம்மாவின் ஈமச் சடங்கில்தான் அதைவிட அதிகம் ஆட்கள் பங்கேற்றார்கள். கல்லறைக்காக ஒதுக்கப்பட்ட மனையின் மையத்தில் அவனுக்காகக் குழி வெட்டினார்கள். அவனைப் பற்றி அவர்களுக்குத் தெரிந்திருந்த ஒரே செய்தியை – மெல்குயாதெஸ் என்ற பெயரை ஒரு கல்லில் எழுதி நட்டார்கள். அவர்கள் அவனுக்காக ஒன்பது இரவுகள் கண்

விழித்தார்கள். முற்றத்தில் காப்பி அருந்தவும் வேடிக்கை பேசவும் சீட்டாடவும் ஆட்கள் திரண்டிருந்த அமளிக்கு இடையில் பியத்ரோ கிரெஸ்பியிடம் தன்னுடைய காதலைச் சொல்ல அமரந்தா ஒரு சந்தர்ப்பத்தைக் கண்டுபிடித்தாள். ரெபேக்காவிடம் தன்னுடைய மண வாக்குறுதியை உறுதிப்படுத்துவதற்காகச் சில வாரங்கள் முன்பு வந்த அவன் இப்போது மக்களால் துருக்கியர் தெரு என்று அழைக்கப்படும் பழைய காலத்தில் அரேபியர்கள் மக்காவ் பறவைகளுக்காகப் பண்ட மாற்று வியாபாரம் செய்து திரிந்த பகுதியில் இசைக் கருவிகளும் இயந்திரப் பொம்மைகளும் விற்பனை செய்யும் கடையைத் திறந் திருந்தான். தோல் சுருள்களால் தலையை மூடியிருந்த அந்த இத்தாலியன் பெண்களிடம் ஏக்கப் பெருமூச்சு விடும் அவசியத்தைத் தூண்டிவிட் டிருந்தான். தீவிரமாகப் பொருட்படுத்தப்பட வேண்டியவள் அல்ல என்றும் திட புத்தியில்லாத சிறுமி என்றும் அமரந்தாவைக் கணித் திருந்தான்.

"எனக்கு ஒரு தம்பி இருக்கிறான். கடையில் எனக்கு உதவி செய்ய வரப்போகிறான்" என்று அவளிடம் சொன்னான்.

தான் அவமதிக்கப்பட்டதாக உணர்ந்த அமரந்தா சகோதரியின் திருமணத்தை நிறுத்த வாசலுக்குக் குறுக்கே பிணமாகக் கிடக்கவும் தான் தயாராக இருப்பதாக நச்சுக் கோபத்துடன் பியத்ரோ கிரெஸ்பி யிடம் தெரிவித்தாள். அந்த மிரட்டலின் நாடகத்தன்மை இத்தாலியனைக் கவர்ந்தது. இதைப் பற்றி ரெபேக்காவிடம் சொல்லிவிடும் குறுகுறுப்பை அவனால் தடுக்க முடியவில்லை. அப்படியாகவே, உர்சுலாவின் வேலை நெருக்கடியால் எப்போதும் ஒத்திவைக்கப்பட்ட அமரந்தாவின் பயணத்துக்கு ஒரு வாரத்துக்குள் ஏற்பாடு செய்யப்பட்டது. அமரந்தா எந்த எதிர்ப்பையும் காட்டவில்லை. ஆனால் விடைபெற்றுக்கொள்வதற் காக ரெபேக்காவை முத்தமிடுகையில் அவளுடைய காதில் கிசுகிசுத் தாள்: "உன்னுடைய நம்பிக்கைகளை அதிகம் வளர்த்துக்கொள்ளாதே. அவர்கள் என்னைப் பூமியின் கோடிக்கே அனுப்பினாலும் உன் திருமணத்தை நிறுத்த எந்த வழியையாவது கண்டுபிடிப்பேன். அதற்காக உன்னைக் கொல்லவும் செய்வேன்."

உர்சுலா இல்லை. அறைகளின் ஊடே கால்களை இழுத்துக் கொண்டு திருட்டுத்தனமாக நடந்து கொண்டிருந்த மெல்குயாதெஸின் புலப்படாத இருப்பு. இரண்டாலும் வீடு பிரம்மாண்டமானதாகவும் காலியாகவும் தோன்றியது. ரெபேக்கா வீட்டுப் பொறுப்பை எடுத்துக் கொண்டாள். இந்தியப் பெண் அடுமனையைக் கவனித்துக்கொண்டாள். மாலையில், குளிர்ந்த லாவெண்டர் வாசனை முந்தி வர பியெத்ரோ கிரெஸ்பி வந்து சேர்வான். எப்போதும் தன்னுடைய மணமகளாகப் போகிறவளுக்கு அன்பளிப்பாக ஒரு பொம்மையை எடுத்து வருவான். அவனுடைய மணமகளாகப் போகிறவள் சந்தேகம் ஏற்படாமலிருக்க எல்லாக் கதவுகளையும் ஜன்னல்களையும் திறந்து வைத்த பிரதான வரவேற்பறையில் அவனை வரவேற்பாள். அது அவசியமில்லாத முன்னெச்சரிக்கை. ஒரு வருடத்துக்குள்ளாகத் தனது மனைவியாகப் போகிற பெண்ணின் கையைத் தொடக்கூடச் செய்யாத விதமாக

மரியாதையுடனேயே அந்த இத்தாலியன் தன்னைக் காட்டிக் கொண்டான். அபூர்வமான பொம்மைகளால் வீட்டை நிறைப்பவையாக இருந்தன அந்த வருகைகள். பியத்ரோ கிரெஸ்பி கொண்டு வந்த இயந்திர நடனப் பெண்கள், இசைப் பேழைகள், வித்தை காட்டும் குரங்குகள், துள்ளியோடும் குதிரைகள், தம்புரா மீட்டும் கோமாளிகள் ஆகியவற்றைப் பார்த்து மெல்குயாதெஸின் மரணத்தால் ஏற்பட்டிருந்த சோகத்திலிருந்து விடுபட்ட ஹோசே அர்க்காதியோ புயேந்தியா திரும்பக் கிடைத்த உற்சாகத்துடன் ஒரு ரசவாதியாகத் தனது பழைய நாட்களுக்குக் கொண்டு செல்லப்பட்டார். அந்த நாட்களில் அவர் உடல் உறுப்புகள் பிரித்தெடுக்கப்பட்ட விலங்குகளின் சொர்க்கத்திலும் ஊசல் தத்துவத்தின்படி நிரந்தரமான அசைவை உருவாக்க முடியும் என்ற நம்பிக்கையில் கழற்றிப் போடப்பட்ட இயந்திரப் பாகங்களின் சொர்க்கத்திலும் வாழ்ந்திருந்தார். அவுரேலியானோவும் அவன் பங்குக்குச் சிறுமி ரெமேதியோஸுக்கு எழுதவும் படிக்கவும் கற்பிப்பதற்காகப் பட்டறையைக் கவனிப்பதை விட்டிருந்தான். விருந்தாளியை வரவேற்பதற்காகக் குளித்து உடை அணிந்து வரவேற்பறையில் உட்காருவதற்காகத் தனது விளையாட்டுப் பொம்மைகளைப் பிரிய வேண்டியிருந்ததால் ஆரம்பத்தில் ஒவ்வொரு நாள் பிற்பகலிலும் தன்னைப் பார்க்க வரும் ஆணைவிட விளையாட்டுப் பொம்மைகளைத்தான் அவள் விரும்பினாள். ஆனால் இறுதியில் அவுரேலியானோவின் பொறுமையும் ஈடுபாடும் அவளை வென்றன. எழுத்துகளின் பொருளைப் புரிந்துகொள்ள முயன்றும் நோட்டுப் புத்தகங்களில் வண்ணப் பென்சில்களால் தொழுவத்தில் பசுக்கள் இருக்கும் சின்ன வீடுகளையும் மலைகளுக்குப் பின்னால் மறைந்திருக்கும் மஞ்சள் கிரணங்கள் கொண்ட வட்டமான சூரியன்களை வரைய முயன்றும் நீண்ட நேரத்தைச் செலவழித்தாள்.

அமரந்தாவின் மிரட்டல் காரணமாக ரெபேக்கா மட்டுமே மகிழ்ச்சியற்றவளாக இருந்தாள். அவளுக்குத் தன் சகோதரியின் குணம் தெரியும். அவளுடைய அகங்காரம் தெரியும். எனவே அவளுடைய நச்சுத்தன்மையான கோபத்துக்குப் பயந்தாள். குளியலறையில் விரலைச் சூப்பிக்கொண்டே வெகு நேரத்தைக் கழித்தாள். மண்ணைத் தின்னக் கூடாது என்பதற்காக மனத்தை இரும்பாக்கிக் கொண்டாள். அந்தத் தடுமாற்றத்திலிருந்து ஆறுதல் தேடப் பிலர் தெர்னேராவைப் பார்த்துத் தன்னுடைய எதிர்காலத்தைப் பற்றிச் சொல்லும்படி கேட்டாள். சாதாரணமான பல விஷயங்களையும் சொன்ன பிறகு பிலர் தெர்னேரா ஆரூடம் சொன்னாள்: "உன்னுடைய பெற்றோர்கள் புதைக்கப்படும் காலம் வரைக்கும் நீ மகிழ்ச்சியாக இருக்க முடியாது."

ரெபேக்கா துணுக்குற்றாள். ஒரு சின்னஞ்சிறுமியாக டிரங்குப் பெட்டியுடனும் சிறிய ஆடும் நாற்காலியுடனும் உள்ளே இருப்பது என்னவென்று தெரியாத ஒரு பையுடனும் தான் அந்த வீட்டுக்குள் நுழைந்த காட்சியை ஒரு கனவின் ஞாபகமாக அவள் பார்த்தாள். கழுத்துப் பட்டிகள் தங்கப் பித்தானால் இணைக்கப்பட்டிருந்த லினன் உடையணிந்த வழுக்கைத் தலைக் கனவானை நினைவுகூர்ந்தாள்.

அவருக்கும் இந்தச் சீட்டுக்கட்டிலிருக்கும் ராஜாவுக்கும் எந்தத் தொடர்புமில்லை. வெதுவெதுப்பும் வாசனையுமுள்ள கைகள் கொண்ட மிக இளமையான அழகியையும் நினைவுகூர்ந்தாள். அவளுக்கும் சீட்டுக் கட்டு ஜாக்குக்கும் அவனுடைய மூட்டுவாதம் பாதித்த கைகளுக்கும் எந்த ஒற்றுமையும் இல்லை. அவள் தன் முடியில் பூச்சூடி விட்டதையும் பிற்பகல்களில் நகரத்தின் பசுமையான தெருக்கள் வழியாகத் தன்னை நடத்திக்கொண்டு போனதையும் ஞாபகப்படுத்திக் கொண்டாள்.

"எனக்குப் புரியவில்லை" என்றாள் அவள். பிலர் தெர்னேராவும் குழம்பியிருந்ததாகத் தோன்றியது.

"எனக்கும் புரியவில்லை. ஆனால் சீட்டுகள் அப்படித்தான் சொல்லுகின்றன."

அந்தப் புதிரால் மிகவும் பீடிக்கப்பட்டிருந்த ரெபேக்கா விவரத்தை ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவிடம் தெரிவித்தாள். சீட்டுகளின் ஆரூடத்தை நம்பியதற்காக அவளைக் கடிந்துகொண்டார். எனினும் அலமாரிகளை பெட்டிகளைத் துழாவியும் மேஜை நாற்காலிகளை நகர்த்தி வைத்தும் படுக்கைகளைப் புரட்டிப் போட்டும் தரையில் பாவியிருந்த பலகைகளைப் பெயர்த்தும் அந்த எலும்புப் பையைத் தேடும் மௌனமான பொறுப்பை அவரே மேற்கொண்டார். வீட்டைப் புதுப்பித்த நாளிலிருந்து அந்தப் பையைப் பார்க்கவில்லை என்பது ஞாபகம் வந்தது. கொத்தனார்களை அழைத்து ரகசியமாக விசாரித்தார். அவர்களில் ஒருவன் அந்தப் பை தன்னுடைய வேலைக்கு இடையூறாக இருந்தது என்பதால் அதை ஏதோ ஒரு படுக்கை அறைச் சுவரில் வைத்துப் பூசி விட்டதாகச் சொன்னான். சுவரோடு காதை வைத்துப் பல நாட்கள் கவனித்ததில் அந்தக் க்ளக் – க்ளக் ஓசையைக் கேட்க முடிந்தது. சுவரைத் துளைத்தார்கள். அங்கே அந்தப் பைக்குள் எலும்புகள் அப்படியே இருந்தன. அவற்றை அன்றே மெல்குயாதெஸின் புதைகுழிக்கு அருகில் நினைவுக்கல் பதிக்காமல் அடக்கம் செய்தார்கள். புருடென்சியோ அகுய்லரின் நினைவைப் போலத் தனது பிரக்ஞையில் பாரமாக இருந்த அந்தப் பொருளை இறக்கி வைத்துவிட்ட நிம்மதியுடன் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா வீடு திரும்பினார். சமையலறை வழியாகப் போகும்போது ரெபேக்காவின் நெற்றியில் முத்தமிட்டார்.

"கெட்ட நினைவுகளை மண்டைக்குள்ளிருந்து வெளியே தள்ளிவிடு. நீ மகிழ்ச்சியாகவே இருக்கப் போகிறாய்" என்றார்.

அர்க்காதியோ பிறந்த பின்பு உர்சுலாவால் பிலர் தெர்னேராவுக்கு அடைக்கப்பட்டிருந்த அந்த வீட்டின் கதவுகளை ரெபேக்காவுடனான நட்பு திறந்துவிட்டது. வெள்ளாட்டு மந்தை போல ஒருநாளின் எந்த வேளையிலும் அவள் அந்த வீட்டுக்கு வருவாள். மிகவும் கடினமான வேலைகளில் தனது முழுப் பலத்தையும் செலவழிப்பாள். சில சமயங்களில் பட்டறைக்குப் போய் புகைப்படத் தட்டுகளை நுட்பமாக்க அர்க்காதியோவுக்கு உதவுவாள். அவள் வேலையில் காட்டும் தேர்ச்சியும் கனிவும் அவனைக் குழப்பத்தில் தள்ளின. அந்தப் பெண் அவனைச்

சஞ்சலப்படுத்தினாள். அவளுடைய சருமத்தின் நிறமும் அவள் மேலிருந்து எழும் புகை மணமும் இருட்டறையில் அவளுடைய சிரிப்பு குலைத்துப் போடும் ஒழுங்கும் அவனுடைய கவனத்தைச் சிதறடித்தன. சமயங்களில் அறையிலிருக்கும் சாமான்கள் மேல் முட்டிமோதி விழச் செய்தன.

ஒரு தருணத்தில் அவுரேலியானோ வெள்ளியில் கைவேலை செய்து கொண்டிருந்தபோது பிலர் தெர்னேரா மேஜைமேல் சாய்ந்து நின்று அவனுடைய அசாத்தியமான பொறுமையைப் பாராட்டினாள். சட்டென்று அது நிகழ்ந்தது. அர்க்காதியோ இருட்டறையில்தான் இருக்கிறான் என்பதை நிச்சயப்படுத்திக்கொண்ட பின்பு அவுரேலியானோ தனது கண்களை உயர்த்தி பிலர் தெர்னேராவை நேருக்கு நேராகப் பார்த்தான். பகல் வெளிச்சத்தில் வெளிப்படுத்தப்பட்டது போல அவளுடைய எண்ணத்தை அந்தக் கண்களில் பார்க்க முடிந்தது.

"சரி, அது என்னவென்று என்னிடம் சொல்" என்றான் அவுரேலியானோ. பிலர் தெர்னேரா ஒரு சோகப் புன்னகையுடன் உதடுகளைக் கடித்துக்கொண்டாள்.

"நீ யுத்தத்தில் தேர்ந்தவன். உன் கண் எங்கே பார்க்கிறதோ அங்கே உன் துப்பாக்கிக் குண்டைச் செலுத்த முடியும்" என்றாள்.

அந்தச் சகுனத்தின் நிரூபணம் அவுரேலியானோவுக்குத் திருப்தியளித்தது. எதுவும் நடக்காதது போலத் திரும்பவும் தனது வேலையில் மும்முரமானான். ஆனால் அவனுடைய குரலுக்கு ஓய்வுக்குப் பிந்தைய வலிமை இருந்தது.

"நான் அவனை ஏற்றுக்கொள்வேன். அவன் என் பெயரைக் கொண்டிருப்பான்."

ஹோசே அர்க்காதியோ புயேந்தியா கடைசியாகத் தான் தேடிக் கொண்டிருந்ததை அடைந்தேவிட்டார். கடிகாரத்தின் இயந்திரவியலை நடனமாடும் பெண் பொம்மையில் அசைவுடன் இணைத்துவிட்டார். பொம்மை அதன் இசைக்கு ஏற்ப மூன்று நாட்கள் இடைவிடாமல் ஆடிக்கொண்டிருந்தது. அவருடைய பிற அரைகுறை முயற்சிகளை விடவும் இந்தக் கண்டுபிடிப்பு அவரை மிகவும் பரவசப்படுத்தியது. உண்பதை நிறுத்தினார். உறங்குவதை நிறுத்தினார். ஒருபோதும் மீள முடியாத சித்தப் பிரமைக்கு இழுத்துச் செல்லப்படாமல் ரெபேக்காவின் எச்சரிக்கையுணர்வும் அக்கறையுமே அவரைத் தடுத்தன. மாட்டு வண்டியிலும் விவசாயக் கருவிகளிலும் நகர்ந்து கொண்டிருக்கும்போது பயன்படக்கூடிய எல்லாவற்றிலும் ஊசல் தத்துவத்தை உபயோகிப்பதைப் பற்றி இரவு முழுவதும் உரக்கச் சிந்தித்துக்கொண்டே அறைக்குள் வளைய வந்தார். உறக்கமின்மை அவரை மிகவும் தளர்ச்சியடையச் செய்திருந்தது. ஒருநாள் அதிகாலையில் தனது அறைக்குள் நரைத்த சிகையுடனும் விசித்திரமான உடல் சமிக்ஞைகளுடனும் வந்த கிழவனை அவரால் அடையாளம் தெரிந்துகொள்ள முடியவில்லை. அது புருடென்சியோ அகுய்லர். கடைசியில் ஆளை இனங்கண்டு கொண்டபோது இறந்தவர்களுக்கும் முதுமை வரும் என்று தெரிந்து திடுக்கிட்டார். பழைய நினைவுகள் ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவை உலுக்கின.

"புருடென்சியோ, நீ வெகு தூரத்திலிருந்து வந்திருக்கிறாய்" என்று வியப்படைந்தார். மரணமடைந்து பல ஆண்டுகளுக்குப் பிறகு உயிருடன் இருப்பவர்களைப் பார்க்கவும் நட்பைப் பேணவும் எல்லை மீறிய வேட்கையுடன் புருடென்சியோ அகுய்லர் வந்திருந்தான். மரணத்துக்குள்ளே மரணம் மிக நெருக்கமானது என்பதைத் தெரிந்து கொண்டதால்தான் அவன் தன்னுடைய மிக மோசமான எதிரியை நேசிக்கும் நிலையை அடைந்திருந்தான். ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவை அவன் நீண்ட காலமாகத் தேடிக்கொண்டிருந்தான். ரியோஹாச்சாவிலிருந்தும் உபார் பள்ளத்தாக்கிலிருந்தும் சதுப்பு நிலப் பிரதேசத்திலிருந்தும் வந்த மரித்தோரிடம் அவரைப் பற்றி விசாரித்தான். யாரும் எதுவும் சொல்லவில்லை. மெல்குயாதெஸ் வந்து சேர்ந்து மரணத்தின் பல வண்ண நிலப்படத்தில் ஒரு கரும் புள்ளியை வைக்கும் வரை மகோந்தா என்ற நகரத்தைப் பற்றி மரித்தோருக்குத் தெரிந்திருக்கவில்லை. ஹோசே அர்க்காதியோ புயேந்தியா விடியும் வரை புருடென்சியோ அகுய்லருடன் பேசிக்கொண்டிருந்தார். சில மணி நேரங்களுக்குப் பின்பு கண் விழித்திருந்த அயர்ச்சியுடன் அவுரேலியானோவின் பட்டறைக்குப் போய் "இன்றைக்கு என்ன கிழமை?" என்று அவனிடம் கேட்டார். செவ்வாய்க்கிழமை என்றான் அவுரேலியானோ. "நானும் அப்படித்தான் நினைத்துக்கொண்டிருந்தேன்" என்றார் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா. "ஆனால் இன்றைக்கும் நேற்று போலத் திங்கட்கிழமைதான் என்பதை திடீரென்றுதான் உணர்ந்தேன். வானத்தைப் பார். சுவர்களைப் பார். பிகோனியாப் பூக்களைப் பார். இன்றைக்கும் திங்கட்கிழமைதான்." அவருடைய கிறுக்குத்தனங்களைப் பற்றித் தெரிந்து வைத்திருந்த அவுரேலியானோ அதைப் பொருட்படுத்தத் தயாராக இல்லை. மறுநாள் புதன் கிழமை, ஹோசே அர்க்காதியோ புயேந்தியா பட்டறைக்குத் திரும்பவும் போனார். "இது பெரும் அவலம்" என்றார். "காற்றைப் பார். சூரியனின் ரீங்காரத்தைக் கேள். நேற்றையும் முந்தின நாளையும் போல இன்றைக்கும் திங்கட்கிழமைதான்." அன்று இரவு முற்றத்தில் உட்கார்ந்து புருடென்சியோ அகுய்லருக்காகவும் மெல்குயாதெஸுக்காகவும் ரெபேக்காவின் பெற்றோருக்காகவும் தன்னுடைய அம்மா அப்பாவுக்காகவும் ஞாபகத்துக்கு வந்த எல்லாருக்காகவும் மரணத்தில் தனித்து விடப்பட்ட சகலருக்காகவும் அவர் அழுதுகொண்டிருப்பதை பியத்ரோ கிரெஸ்பி பார்த்தான். இறுகக் கட்டிய கயிற்றின்மேல் பின்னங்கால்களால் நடக்கும் கரடி பொம்மையை அவரிடம் கொடுத்தான். ஆனால் தன்னை ஆட்டிப் படைக்கும் மனநிலையிலிருந்து அதன் மூலம் அவரைப் பின்வாங்கச் செய்ய முடியவில்லை. மனிதர்கள் பறக்க உதவும் ஊசல் இயந்திரத்தை உற்பத்தி செய்வதைப் பற்றித் தான் சில நாட்களுக்கு முன்பு விளக்கிச் சொன்னதற்கு அப்புறம் என்ன நடந்தது என்று அவர் கேட்டார். எந்தப் பொருளையும் காற்றில் எழும்பச் செய்ய ஊசலால் முடியுமென்றாலும் அதற்குத் தன்னிச்சையாக எழும்ப முடியாது என்பதால் அப்படி ஒரு இயந்திரத்தை உருவாக்குவது சாத்தியமில்லை என்று பியத்ரோ கிரெஸ்பி பதில் சொன்னான். உழுது போட்ட நிலம் போன்ற முகபாவத்துடன்

மறுபடியும் வியாழக்கிழமை பட்டறையில் தென்பட்டார். "கால இயந்திரம் நொறுங்கிப் போய்விட்டது. உர்சுலாவும் அமரந்தாவும் வெகுதூரம் போய் விட்டார்கள்" என்று தேம்பினார். குழந்தையைத் திட்டுவதுபோல அவுரேலியானோ அவரைத் திட்டிவிட்டுப் பிறகு பரிதாபப்படுவதுபோலக் காட்டிக் கொண்டான். அவர் பொருட் களைப் பரிசோதிப்பதில் ஆறு மணி நேரங்களைக் கழித்தார். காலம் இயங்குகிறது என்பதற்கு அத்தாட்சியாக முந்தைய நாள் பார்த்த தோற்றத்தில் ஏதாவது வித்தியாசம் இருக்கும் என்று நம்பினார். இரவு முழுவதும் படுக்கையில் கண் விழித்தபடியே கிடந்து புருடென்சியோ அகுய்லரையும் மெல்குயாதெஸையும் மரித்தோர் எல்லாரையும் தனது குழப்பத்தைப் பகிர்ந்துகொள்ள அழைத்துக் கொண்டிருந்தார். ஆனால் ஒருவரும் வரவில்லை. வெள்ளிக் கிழமை. மற்றவர்கள் எழுந்திருப்பதற்கு முன்னரே எழுந்து இயற்கையை மீண்டும் ஆராய்ந்தார். அன்றைக்கும் திங்கட்கிழமைதான் என்பதில் மெல்லிய சந்தேகம்கூட அவருக்கு ஏற்படவில்லை. பிறகு கதவிலிருந்து ஒரு மரக் கட்டையை உருவியெடுத்துத் தனது அசாதாரணமான வலிமை யின் காட்டுமிராண்டித்தன வன்முறையுடன் ரசவாத ஆய்வுக்கூடத்தி லிருந்த கருவிகளையும் புகைப்பட அறையையும் வெள்ளிப் பட்டறையை யும் அடித்து நொறுக்கினார். பிசாசு பிடித்தவரைப் போலப் புரியாத மொழியில் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாமல் ஆனால் தடைப் படாமல் பேசிக் கத்திக்கொண்டிருந்தார். வீட்டின் மிச்சமிருக்கும் பகுதிகளையும் நாசமாக்கவிருந்தபோது அவுரேலியானோ அண்டை வீட்டுக்காரர்களை உதவக் கேட்டான். அவரைப் பிடிக்கப் பத்துப் பேரும் கட்டிப் போடப் பதினான்கு பேரும் சுற்றுக்கட்டில் இருக்கும் செஸ்நட் மரத்தின் அருகில் இழுத்து வர இருபது பேரும் தேவைப் பட்டார்கள். அவர்கள் அவரை அங்கே கட்டிப்போட்டபோது விநோதமான மொழியில் கத்திக்கொண்டிருந்தார். வாயிலிருந்து பச்சை நுரை வழிந்துகொண்டிருந்தது. உர்சுலாவும் அமரந்தாவும் திரும்பி வந்தபோதும் மரக்கிளையில் கைகால்கள் கட்டப்பட்டு மழையில் ஊறி முழு வெகுளித்தனமான நிலையில்தான் இருந்தார். அவர்கள் அவரிடம் பேசினார்கள். ஆனால் அவர்களை அடையாளம் புரியாமல் அவர்களுக்குப் புரியாத எதையோ சொல்லிக்கொண்டிருந்தார். கயிற்றின் இறுக்கத்தால் சிராய்த்திருந்த கைகளிலும் கால்களிலுமிருந்த கட்டுகளை உர்சுலா அவிழ்த்துவிட்டாள். இடுப்பில் மட்டும் ஒரு கயிற்றைக் கட்டினார்கள். பின்னர் அவரை வெயிலிலிருந்தும் மழையி லிருந்தும் பாதுகாப்பதற்காகப் பனை ஓலை வேய்ந்த பந்தலைக் கட்டினார்கள்.

மார்ச் மாதத்தின் ஒரு ஞாயிற்றுக்கிழமையன்று வீட்டின் வரவேற்பறையில் அருட்தந்தை நிக்கனோர் ரேய்னா எழுப்பிய பலிபீடத்தின் முன்னால் அவுரேலியானோ புயேந்தியாவும் ரெமேதியோஸ் மாஸ்கோட்டும் திருமணம் செய்துகொண்டார்கள். மாஸ்கோட் இல்லத்தில் நான்கு வாரங்களாக நீண்டிருந்த அதிர்ச்சிகளின் நிறைவு அது. சிறுமி ரெமேதியோஸ் குழந்தைப் பருவப் பழக்கங்களைத் தாண்டும் முன்பே பூப்படைந்திருந்தாள். வளரிளம் பருவத்தில் ஏற்படும் மாற்றங்கள் பற்றி அவளுடைய தாய் கற்றுக் கொடுத்திருந்தாலும் ஒரு பிப்ரவரி மாதப் பிற்பகலில் தனது சகோதரிகள் உட்கார்ந்து அவ்ரேலியானோவுடன் பேசிக்கொண்டிருந்த வரவேற்பறைக்குள் உரக்கக் கத்திக்கொண்டு வந்து இளம் பழுப்புப் பசை அப்பிய உள்ளாடையைக் காண்பித்தாள். திருமணத்துக்கான மாதம் பற்றி ஒப்புக்கொள்ளப்பட்டது. தானாகவே குளித்துக்கொள்ளவும் உடையணிந்துகொள்ளவும் ஒரு வீட்டின் அடிப்படையான நடைமுறைகளைப் புரிந்துகொள்ளவும் கற்பிக்கப் போதுமான கால அவகாசம் இல்லாமலிருந்தது. படுக்கையை ஈரமாக்கும் பழக்கத்திலிருந்து குணப்படுத்தச் சுட்ட செங்கற்கள் மேல் மூத்திரம் பெய்ய வைத்தார்கள். தாம்பத்திய ரகசியத்தை வெளியே சொல்லக்கூடாது என்பதை அவளுக்குப் புரியவைக்க அவர்கள் மிகவும் பாடுபட வேண்டியிருந்தது. முதலிரவைப் பற்றி விவரமாக எல்லாரிடமும் பேச விரும்பிய ரெமேதியோஸுக்கு அந்த வெளிப்படுத்தல் மிகவும் குழப்பத்தை ஏற்படுத்தியது. அதே சமயம் ஆச்சரியத்தையும் கொடுத்தது. அது ஒரு அயர்ச்சியான வேலையாக இருந்தது. ஆனால் திருமணச் சடங்குக்கான நாள் நிச்சயிக்கப்பட்டதும் அந்தக் குழந்தை தனது மற்ற சகோதரிகளைப் போலவே உலக நடைமுறைகளில் தேர்ந்திருந்தாள். மலர்களாலும் மலர் வளையங்களாலும் அலங்கரிக்கப்பட்ட தெருவில் வாணவெடிகளுக்கும் வெவ்வேறு குழுக்களின் இசைக்கும் நடுவே டான் அப்போலினர் மாஸ்கோட் அவளைக் கைப்பிடித்து அழைத்து வந்தார். ஜன்னல்கள் வழியே எட்டிப் பார்த்து அவளுக்கு நல்வாழ்த்துச் சொன்னவர்களுக்கு புன்னகையுடன் கையசைத்து நன்றி தெரிவித்தாள். சில வருடங்களுக்குப் பின்னர் துப்பாக்கிப் படையை எதிர்கொண்டபோது அணிந்திருந்த அதே கறுப்பு உடையையும் உலோக இணைப்புகள் வைத்த அதே நிறமான தோல் பூட்சுகளையும் அவுரேலியானோ அணிந்திருந்தான். அவன் அபரிமிதமாகவே வெளிறியிருந்தான். அந்த

வீட்டு வாசலில் மணமகளைப் பார்த்து மேடைக்கு அழைத்துச் செல்லும்போது அவனுடைய தொண்டைக்குள் கடினமான வீக்கம் இருந்தது. அவள் அத்தனை பொருத்தத்துடன் இயல்பாக நடந்து கொண்டாள். அவள் விரலில் அணிவிக்க முயன்ற மோதிரத்தை அவுரேலியானோ தவற விட்டபோதும் அவள் நிதானம் இழக்காமலிருந்தாள். விருந்தினர்களின் முணுமுணுப்புக்கும் குழப்பத்துக்கும் நடுவே உருண்டோடிய மோதிரத்தை அது வாசலை அடையும் முன்பே மணமகன் காலால் தடுத்து நிறுத்தி எடுத்து வெட்கத்துடன் பீடத்துக்குத் திரும்பி வரும்வரைக்கும் லேஸ் உறையணிந்த கையை நீட்டிக்கொண்டே இருந்தாள்.

சடங்கு நடைபெறும்போது அந்தக் குழந்தை தப்பாக எதையாவது செய்துவிடுவாளோ என்று அவள் தாயும் சகோதரிகளும் பதைத்தார்கள். முடிவில் அவர்களே அவளை அள்ளியெடுத்து முத்தமிடும் துடுக்குத் தனத்தைச் செய்தார்கள். அந்த நாள் முதல் பாதகமான சூழ்நிலைகளிலும் ரெமேதியோஸுக்கு இருக்கும் பொறுப்பும் இயல்பான நளினமும் அடக்கமும் வெளிப்பட்டன. அவளாகவே திருமணக் கேக்கில் பெரிய துண்டை வெட்டியெடுத்து முள் கரண்டியுடன் தட்டில் வைத்து ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவுக்குக் கொடுத்தாள். பனையோலைப் பந்தலுக்குள் செந்தவிட்டு மரத்தில் கட்டப்பட்டு மர முக்காலியில் உட்கார்ந்து வெயிலாலும் மழையாலும் நிறம் மங்கிப் போயிருந்த அந்தப் பெருங்கிழவர் நன்றியுணர்வுடன் வெற்றுச் சிரிப்புச் சிரித்தார். தெளிவில்லாத ஏதோ சங்கீதத்தை முனகியபடி கேக்குத் துண்டைக் கைகளால் எடுத்துத் தின்றார். திங்கட்கிழமை விடிகாலை வரை நீண்ட ஆரவாரக் கொண்டாட்டத்தில் மகிழ்ச்சியில்லாமலிருந்த ஒரே நபர் ரெபேக்கா புயேந்தியா மட்டுமே. அவளுக்கு அது மணமுறிவு விருந்து. உர்சுலாவின் ஏற்பாட்டின்படி அதே நாளில் அவளுடைய திருமணக் கொண்டாட்டமும் நடக்கவிருந்தது. ஆனால் வெள்ளிக்கிழமை பியத்ரோ கிரெப்ஸி, அவனுடைய தாயார் சாகக் கிடக்கும் செய்தியுடன் ஒரு கடிதம் வரப் பெற்றான். திருமணம் ஒத்தி வைக்கப்பட்டது. கடிதம் வரப் பெற்ற ஒரு மணி நேரத்துக்குப் பிறகு பியத்ரோ கிரெப்ஸி பிரதேசத் தலைநகருக்குப் புறப்பட்டான். மகனுடைய திருமணத்தில் கலந்துகொள்வதற்காகச் சனிக்கிழமை இரவே குறித்த நேரத்தில் வந்து சேர்ந்திருந்த அம்மாவை வழியில் சந்திக்க ஏனோ அவனால் முடியாமல் போனது. தன்னுடைய மகனின் திருமணத்துக்காகத் தயார் செய்த மணவாழ்த்துப் பாடலை அந்தத் தாய் அவுரேலியானோவின் திருமணத்தில் சோகமாகப் பாடினாள். மண விருந்தின் சாம்பலில் தேய்த்து நடப்பதற்காகப் பியத்ரோ கிரெப்ஸி ஞாயிறு நள்ளிரவே திரும்பி வந்தான். தன்னுடைய திருமணத்துக்குக் குறித்த நேரத்தில் இருக்க வேண்டும் என்பதற்காக அவன் சாலையில் ஐந்து குதிரைகளைச் சோர்வடையச் செய்திருந்தான். அந்தக் கடிதத்தை யார் எழுதினார்கள் என்பது ஒருபோதும் கண்டுபிடிக்கப்படவில்லை. உர்சுலாவால் சித்ரவதைக்குள்ளான அமரந்தா கடுஞ்சீற்றத்துடன் தனது நிரபராதித் துவத்தைத் தச்சர்கள் இன்னும் பிரிக்காமல் விட்டிருந்த பலிபீடத்தின் முன்னால் ஆணையிட்டுச் சொன்னாள்.

சதுப்பு நிலப் பகுதியிலிருந்து திருமணச் சடங்கை நடத்தி வைப்பதற்காக டான் அப்போலினர் மாஸ்கோட் அழைத்து வந்திருந்த அருட் தந்தை நிக்கனோர் ரேய்னா தமது திருச்சபையின் நன்றியின்மையால் இறுகிப்போன கிழவராக இருந்தார். அவருடைய தோல் சுருங்கியிருந்தது. எலும்புகள் கிட்டத்தட்டத் துருத்தி வெளியே தெரிந்தன. தீர்க்கமான வட்ட வயிறு. நன்மையைக் காட்டிலும் எளிமையின் காரணமாக ஒரு முதிய தேவதூதனின் சாயல் வாய்த்திருந்தது. திருமணம் முடிந்ததும் தன்னுடைய பங்குச் சபைக்குத் திரும்பச் செல்லத் திட்டமிட்டிருந்தார். ஆனால் மகோந்தாவாசிகளின் முரட்டுக் குணத்தைப் பார்த்துத் திகைத்துப் போயிருந்தார். குழந்தைகளுக்கு ஞானஸ்நானம் செய்யாமலும் திருநாட்களைப் புனிதப்படுத்தாமலும் இயற்கை விதிக்கு அடங்கியும் முறைகேடுகளுக்கிடையில் வளம் பெற்றும் வாழ்ந்துகொண்டிருந்தார்கள். கடவுளின் வித்துக்காகக் காத்திருக்கும் வேறு நிலம் இல்லை என்று யோசித்து சுன்னத் செய்துகொண்டவர்களையும் செய்துகொள்ளாதவர்களையும் கிறித்துவர்களாக்கவும் வைப்பாட்டி முறையைச் சட்டபூர்வமாக்கவும் மரணத்துக்காகக் காத்திருப்பவர்களுக்கு இறை சாட்சியம் அளிக்கவும் மேலும் ஒரு வாரம் அங்கேயே தங்கிவிடத் தீர்மானித்தார். ஆனால் அவரை ஒருவரும் கவனிக்கவில்லை. வருடக்கணக்காகப் பாதிரியார் இல்லாமலேயே தாங்கள் வாழ்ந்து வருவதாகவும் தங்களது ஆன்மீக விவகாரங்களை நேரடியாகக் கடவுளிடமே நடத்திக்கொள்வதாகவும் ஆதி பாவம் என்ற தீவினையை முன்பே தொலைத்துவிட்டதாகவும் அவருக்குப் பதில் சொன்னார்கள். திறந்தவெளியில் பிரசங்கம் செய்து அலுத்துப்போன அருட் தந்தை நிக்கானோர் ஒரு தேவாலயத்தை – ஆளுயரத்தில் புனிதர்களின் உருவங்களுடனும் எல்லாப் பக்கங்களிலும் வண்ணக் கண்ணாடி பதித்த ஜன்னல்களுடனும் உலகிலேயே மிகப் பெரிய தேவாலயத்தைக் – கட்ட முடிவு செய்தார். அதன் மூலம் இந்தப் பக்தியில்லாத மையத்துக்குக் கடவுளைக் கனம் செய்ய ரோமாபுரியிலிருந்தே ஆட்கள் வரலாம். ஒரு செப்புப் பாத்திரத்தை எடுத்துக்கொண்டு எல்லா இடங்களிலும் போய் யாசித்தார். அவர்கள் பெருந்தொகையைத்தான் கொடுத்தார்கள். ஆனால் அவருக்கு இன்னும் அதிகம் தேவைப்பட்டது. மூழ்கிக் கிடப்பவர்களை நீரின் மேற்பரப்புக்குக் கொண்டு வருமளவு ஒலிக்கும் மணி தேவாலயத்தில் இருக்க வேண்டும்.

அதற்காக மன்றாடி அவருக்குக் குரலே போனது. அவருடைய எலும்புகள் கலகலக்கத் தொடங்கின. ஒரு சனிக்கிழமை கதவுகளுக்கான விலையைக்கூடத் திரட்ட முடியாமல் விரக்திக் குழப்பத்தில் ஆழ்ந்தார். சதுக்கத்தில் ஒரு பலிபீடத்தை அமைத்தார். ஞாயிற்றுக்கிழமை ஒரு சிறிய மணியை அடித்துக்கொண்டு நகரத்தைச் சுற்றி வந்து திறந்த வெளிப் பிரார்த்தனையில் கலந்துகொள்ள மக்களை அழைத்தார். அது உறக்கமின்மைக் கால நாட்களை நினைவூட்டியது. அநேகம் பேர் தெரிந்துகொள்ளும் குறுகுறுப்புடன் போனார்கள். பிறர் பழைய நினைவுகளின் ஏக்கத்திலும் மற்றவர்கள் கடவுளின் தரகரை அலட்சியம் செய்வதைத் தமக்கு இழைக்கும் அவமதிப்பாகக் கடவுள்

எடுத்துக் கொள்ளக் கூடாது என்றும் போனார்கள். ஆகக் காலை எட்டு மணிக்கெல்லாம் நகரத்தின் பாதி மக்கள் திரள் சதுக்கத்தில் திரண்டிருந்தது. தனது இறைஞ்சலால் புண்ணாகிப் போயிருந்த குரலில் அருட்தந்தை நிக்கானோர் சுவிசேஷப் பகுதிகளை வாசித்தார். இறுதியாகக் கூட்டம் கலையத் தொடங்கியபோது அவர்களின் கவனத்தை ஈர்ப்பதற்காகக் கைகளை உயர்த்தினார்.

"ஒரு நிமிடம். நாம் இப்போது கடவுளின் அளப்பரிய சக்தியின் மறுக்க முடியாத சாட்சியத்தைப் பார்க்கப் போகிறோம்" என்றார்.

ஆராதனையில் அவருக்கு உதவியாக இருந்த சிறுவன் ஒரு கோப்பையில் ஆவி பறக்கும் கெட்டிச் சாக்லெட்டைக் கொண்டு வந்தான். அவர் அதை வாங்கி ஒரே மூச்சில் அருந்தினார். பின்னர் அங்கியின் கைப்பகுதியிலிருந்து கைக்குட்டையை எடுத்து உதட்டைத் துடைத்தார். கைகளை விரித்தார். கண்களை மூடினார். அதன் பிறகு அருட்தந்தை தரையிலிருந்து ஆறு அங்குலம் எழும்பி நின்றார். விசுவாசம் ஏற்படுத்தும் நடவடிக்கையாக இருந்தது அது. பல நாட்கள் சாக்லெட் பருகி நிலத்திலிருந்து எழும்பி நிற்கும் பயிற்சியை வீடு வீடாகப் போய்ச் செய்து காட்டினார். தேவாலயப் பரிசாரகன் ஒரு பெரிய பையுடன் கூடவே நடந்து ஒரு மாதத்துக்குள்ளாகவே தேவாலய நிர்மாணத்தைத் தொடங்குவதற்கான ஏராளமான பணத்தைச் சேகரித்தான். அந்த 'எழும்புதலை' இன்னொரு முறை பார்ப்பதற்காக ஒருநாள் காலை செஸ்நட் மரத்தைச் சுற்றிக் கூடிய மக்கள் கூட்டத்தை உணர்ச்சி மாறாத தோற்றத்துடன் கவனித்துக்கொண்டிருந்த ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவைத் தவிர வேறு எவரும் அந்தச் செய்முறை விளக்கத்தின் தெய்வீக மூலத்தைச் சந்தேகிக்கவில்லை. அருட்தந்தை நிக்கனோர் அமர்ந்திருந்த நாற்காலியுடன் தரையிலிருந்து உயரத் தொடங்கியபோது அவர் முக்காலியில் சற்று நிமிர்ந்து உட்கார்ந்து தோள்களைக் குலுக்க மட்டும் செய்தார்.

"ஹாக் எஸ்த் சிம்ப்ளிசிஸிமுஸ்"[1] என்றார் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா. "ஹோமோ இஸ்தே ஸ்டாதும் க்வார்தும் மெட்டீரியே இன்வெனிட்"[2] என்றார். அருட்தந்தை நிக்கனோர் கைகளை உயர்த்தினார். அதே நொடியில் நாற்காலியின் நான்கு கால்களும் நிலத்தில் பதிந்தன. "நெகோ"[3] என்றார். "ஃபாக்தும் ஹாக் எக்ஸ்டெண்டியம் தே ப்ரோபட் சினே துபியோ"[4] என்றார்.

அப்படியாகத்தான் ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவின் பேய்ப் பிதற்றலின் மொழி லத்தீன் என்று கண்டுபிடிக்கப்பட்டது.

---

1. "ஹாக் எஸ்த் சிம்ப்ளிசிஸிமுஸ்" – இது மிகவும் எளிமையானது.
2. "ஹோமோ இஸ்தே ஸ்டாதும் க்வார்தும் மெட்டீரியே இன்வெனிட்" – இந்த மனிதர் பொருட்களின் நிலையைக் கண்டுபிடித்திருக்கிறார்.
3. "நெகோ" – நான் மறுக்கிறேன்
4. "ஃபாக்தும் ஹாக் எக்ஸ்டெண்டியம் தே ப்ரோபட் சினே துபியோ" – இந்த உண்மை கடவுள் இருக்கிறார் என்பதைச் சந்தேகமில்லாமல் நிரூபிக்கிறது.

அவருடன் பேச முடிந்த ஒரே நபர் தான் மட்டுமே என்பதால் அருட்தந்தை நிக்கனோர் சூழ்நிலையைச் சாதகமாக்கிக்கொண்டார். பிறழ்ச்சியடைந்திருந்த அவருடைய மண்டைக்குள் விசுவாசத்தைப் புகுத்த முயன்றார். எல்லாப் பிற்பகல்களிலும் செந்தவிட்டு மரத்தடியில் உட்கார்ந்து லத்தீன் மொழியில் உபதேசம் செய்தார். ஆனால் ஹோஸே அர்க்காதியோ புயேந்தியா அந்தப் பகட்டான வார்த்தைச் சூழ்ச்சிகளையும் சாக்லெட் மாயாஜாலத்தையும் மறுப்பதிலேயே உறுதியாக இருந்தார். கடவுளின் புகைப்படம் மட்டுமே ஆதாரம் என்று வலியுறுத்தினார். அருட்தந்தை நிக்கானோர் சில பதக்கங்களையும் படங்களையும் கொண்டு வந்தார். யேசுவின் முகப்பதிவின் நகலைக்கூடக் கொண்டு வந்தார். அவையெல்லாம் எந்த அறிவியல் அடிப்படையுமில்லாத கலைச் சரக்குகளென்று ஹோஸே அர்க்காதியோ புயேந்தியா மறுத்தார். அவர் விடாப் பிடிவாதத்துடன் இருந்தார். எனவே அருட்தந்தை நிக்கனோர் மத போதனை செய்யும் முயற்சிகளைக் கைவிட்டார். ஆனால் மனிதாபிமான உணர்வுடன் அவரை வந்து பார்ப்பதைத் தொடர்ந்தார். இப்போது ஹோஸே அர்க்காதியோ புயேந்தியா ஆதிக்கத்தைத் தன் கையில் எடுத்துக்கொண்டார். பகுத்தறிவு யுக்திகள் மூலம் பாதிரியாரின் விசுவாசத்தைத் தகர்க்க முயன்றார். ஒரு சமயம் அருட்தந்தை நிக்கனோர் ஒரு சதுரங்கப் பலகையை மரத்தடிக்கு எடுத்து வந்து ஹோஸே அர்க்காதியோ புயேந்தியாவை விளையாட அழைத்தார். அவர் அந்த அழைப்பை ஏற்றுக்கொள்ளவில்லை. அவரைப் பொறுத்தவரை விதிகளை ஏற்றுக்கொண்டு இரண்டு எதிராளிகள் விளையாடும்போது போட்டி உணர்வு எப்படி ஏற்படுகிறது என்பதைப் புரிந்துகொள்ள முடியவில்லை. அவர் சொல்வது போலச் சதுரங்கம் ஆடப்படுவதை அருட்தந்தை நிக்கனோர் ஒருபோதும் பார்த்ததில்லை. அதற்குப் பிறகு அவர் சதுரங்கம் ஆடவுமில்லை. ஹோஸே அர்க்காதியோ புயேந்தியாவின் தெள்ளத் தெளிவான மனநிலைதான் அவரை மேலும் குழப்பியது. அவரை எப்படி அவர்களால் மரத்தில் கட்டிப்போட முடிந்தது என்று கேட்டார்.

"ஹாக் எஸ்த் சிம்ப்ளிசிஸிமுஸ். ஏனெனில் எனக்குப் பைத்தியம்*" என்று பதில் சொன்னார் அவர். தன்னுடைய விசுவாசத்தைப் பற்றிக் கவலைப்பட்ட பாதிரியார் அதற்குப் பிறகு அவரைத் திரும்பவும் சந்திக்க வரவில்லை. தேவாலயக் கட்டுமான வேலைகளைத் துரிதப்படுத்துவதில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டார். தன்னுடைய நம்பிக்கைகள் மறுபடியும் புத்துயிர்ப்பதை ரெபேக்கா உணர்ந்தாள். தேவாலயக் கட்டுமானப் பணி நிறைவுடன் அவளுடைய எதிர்காலமும் பிணைந்திருந்தது. ஒரு ஞாயிற்றுக்கிழமை அருட்தந்தை நிக்கனோர் அந்த வீட்டில் பகலுணவு அருந்திக்கொண்டிருந்தார். மொத்தக் குடும்பமும் உணவு மேஜையில் அமர்ந்து தேவாலயம் கட்டிமுடிக்கப்பட்டதும் மதச் சடங்குகள் எவ்வளவு சிறப்பும் கவர்ச்சியும் அடையும் என்று பேசினார்கள். அப்போது அமரந்தா சொன்னாள்: "ரெபேக்கா

---

* இது மிகவும் எளிமையானது.

தான் மிகவும் அதிருஷ்டசாலியாக இருப்பாள்." அவள் என்ன சொன்னாள் என்பது ரெபேக்காவுக்குப் புரியவில்லை. வெகுளித்தனமான புன்னகையுடன் அவள் விளக்கினாள், "உன்னுடைய திருமணம் மூலம் தேவாலயத்துக்குத் திறப்பு விழா நடத்தப்போவது நீதான்" என்றாள்.

வேறு கருத்துகள் எதுவும் வருவதைத் தடுக்க ரெபேக்கா முயன்றாள். தேவாலயக் கட்டுமான வேலை போகும் போக்கைப் பார்த்தால் இன்னும் பத்து ஆண்டுகளுக்கு முன்பு கட்டி முடிக்கப் படாது என்று தெரிந்தது. அருட்தந்தை நிக்கனோர் அதை ஏற்றுக் கொள்ளவில்லை. விசுவாசிகளின் அதிகரித்து வரும் தாராள குணம் மேலதிக நம்பிக்கையுடன் அவரைக் கணக்குப்போட்டுப் பார்க்க வைத்தது. அடக்கிவைத்த கோபத்தால் பகலுணவை முடிக்காமலிருந்த ரெபேக்காவிடம் உர்சுலா அமரந்தாவின் யோசனையைச் சிலாகித்தாள். கட்டட வேலை வேகமாக நடக்க நன்கொடையும் அளித்தாள். இதே அளவில் இன்னொரு நன்கொடை கிடைத்தால் மூன்றே ஆண்டுகளில் தேவாலயம் முழுமை பெற்றுவிடும் என்று அருட்தந்தை நிக்கனோர் யோசித்தார். அமரந்தாவின் தூண்டுதல் வெளியே தெரிவது போல அப்பாவித்தனமானதல்ல என்று உறுதிப்படுத்திக்கொண்ட ரெபேக்கா அப்போதிருந்து அவளிடம் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. அன்றிரவு நடந்த கடும் சர்ச்சையின்போது அமரந்தா "என்னால் முடிந்த மட்டமான வேலை அதுதான். அதனால் மூன்று வருடங்களுக்கு நான் உன்னைக் கொல்ல வேண்டியதில்லை" என்று பதில் சொன்னாள். அந்தச் சவாலை ரெபேக்காவும் ஏற்றுக்கொண்டாள்.

புதிய ஒத்திவைப்புத் தீர்மானம் தெரிய வந்ததும் பியத்ரோ கிரெஸ்பி ஏமாற்றத்தின் நெருக்கடிக்குள் சிக்கினான். ஆனால் ரெபேக்கா அவன் மேலான தன்னுடைய விசுவாசத்துக்கான கடைசி அத்தாட்சியையும் அளித்தாள். "நீ எப்போது சொன்னாலும் நாம் ஓடிப் போகலாம்" என்று தெரிவித்தாள். எனினும் பியத்ரோ கிரெஸ்பி சாகசக்காரனல்ல. தான் மணந்துகொள்ளவிருக்கும் பெண்ணைப் போல உணர்ச்சி வசப்படும் இயல்பு அவனுக்கு இல்லை. கொடுத்த வாக்கை மதிக்க வேண்டுமென்றும் ஒருவர் கொடுத்த வாக்குத்தான் அவருடைய செல்வமென்றும் அதை ஊதாரித்தனமாகச் செலவிடக்கூடாதென்றும் நினைத்தான். அதன் பின்னர் ரெபேக்கா மேலும் துணிச்சலான நடவடிக்கைகளில் இறங்கினாள். ஒரு மர்மமான காற்று வீசி கூடத்திலிருந்த விளக்குகள் அணைந்தபோது இருட்டில் காதலர்கள் முத்தமிட்டுக் கொண்டிருப்பதை உர்சுலா அதிர்ச்சியுடன் பார்த்தாள். பியத்ரோ கிரெஸ்பி நவீனத் திரி விளக்குகளின் மட்டமான தரத்தைப் பற்றிக் குளறுபடியான விளக்கங்களைச் சொன்னதோடு அறையில் மேலும் பாதுகாப்பாக வெளிச்சம் பரவவும் உதவினான். ஆனால் எண்ணெய் தீர்ந்ததனாலோ திரி கட்டையானதாலோ மறுபடியும் விளக்கு அணைந்தது. அப்போது பியத்ரோ கிரெஸ்பியின் மடியில் ரெபேக்கா உட்கார்ந்திருப்பதைப் பார்த்தாள். இந்த முறை அவள் எந்த விளக்கத்தையும் ஏற்கத் தயாராகவில்லை. அடுமனையைக் கவனித்துக்கொள்ளும்

பொறுப்பை இந்தியப் பெண்ணிடம் ஒப்படைத்துவிட்டு இளம் ஜோடிகள் சந்தித்துக்கொள்ளும்போது ஓர் ஆடும் நாற்காலியைப் போட்டுக்கொண்டு அவர்களைக் கண்காணித்தபடி உட்கார்ந்திருந்தாள். தன்னுடைய இளமைக் காலத்திலேயே காலாவதியாகிப் போயிருந்த அந்தச் சாமர்த்தியங்களைக் கண்டுபிடிப்பது அவளுக்கு மிக எளிதாகவே இருந்தது. சந்திப்பு வேளைகளின்போது உர்சுலா அலுப்படைந்து கொட்டாவி விடுவதைப் பார்த்து ரெபேக்கா "பாவம் அம்மா" என்று ஏளனமாகவும் கோபமாகவும் சொன்னாள். "செத்துப் போகும்போது அவள் அந்த ஆடும் நாற்காலியுடன்தான் சொர்க்கத்துக்குப் போவாள்" என்றாள்.

மூன்று மாதக் கண்காணிப்புக் காதலுக்குப் பிறகும் தான் தினமும் போய்ப் பார்வையிட்டு வந்த தேவாலயக் கட்டட வேலை மந்தமாகவே முன்னேறுவதில் பியத்ரோ கிரெஸ்பி சோர்ந்து போனான். கட்டுமானப் பணியை முடிக்கத் தேவையான பணத்தை அருட்தந்தை நிக்கனோரிடம் கொடுக்க முடிவுசெய்தான். அமரந்தா பொறுமை இழக்காமலிருந்தாள். எல்லா நாட்களிலும் பிற்பகலில் எம்பிராய்டரி போட வீட்டுக் கூடத்துக்கு வரும் தோழிகளுடன் பேசிக்கொண்டே புதிய தந்திரங்களை யோசிக்க முயன்றாள். மிகவும் பயன் தந்திருக்கக் கூடிய ஒரு யுக்தி அவளுடைய கணிப்பில் நேர்ந்த பிழையால் நாசமாகிப் போனது. ரெபேக்கா தன்னுடைய திருமண ஆடைகளை வைப்பதற்கு முன்பே படுக்கையறை அலமாரியில் போட்டு வைத்திருந்த அந்துருண்டைகளை அப்புறப்படுத்தினாள். தேவாலய நிர்மாணப் பணி நிறைவடைய இரண்டு மாதங்கள் இருக்கும்போதே அவள் அதைச் செய்திருந்தாள். திருமணத் தேதி நெருங்க நெருங்கப் பொறுமையிழந்த ரெபேக்கா, அமரந்தா எதிர்பார்த்ததைவிட முன்னதாகவே திருமண உடைகளைத் தயார் செய்ய விரும்பினாள். அலமாரிக் கதவைத் திறந்து சுற்றியிருந்த காகிதங்களைப் பிரித்துப் பாதுகாப்புக்காகப் போட்டிருந்த துணிகளையும் விலக்கியபோது உடையிலும் முகத்திரையின் தையல்களிலும் ஆரஞ்சு வண்ணப் பூக்கள் போட்ட முக்காட்டிலும் அந்துப்பூச்சிகள் துளையிட்டிருந்ததைப் பார்த்தாள். பொட்டலத்துக்குள் கை நிறைய அந்துருண்டைகளைப் போட்டு வைத்தது நிச்சயம். சந்தேகமில்லை. அந்த நாசம் இயற்கையானதாகத் தென்பட்டதால் அவளால் அமரந்தாவைக் குற்றம் சொல்ல முடியவில்லை. திருமணத்துக்கு இன்னும் ஒரு மாதமே இருந்தது. ஆனாலும் ஒரே வாரத்துக்குள் புதிய உடைகளைத் தைத்துத் தருவதாக அம்பரோ மாஸ்கோட் உறுதியளித்தாள். மழை பெய்துகொண்டிருந்த அந்தப் பிற்பகலில் ஊசித் தையல் மட்டும் போட்டிருந்த உடையை ரெபேக்காவுக்கு ஏற்ற கடைசிக்கட்ட நகாசு வேலைகளுக்காக அம்பரோ பொட்டலத்தில் சுற்றி வீட்டுக்கு எடுத்து வந்தபோது அமரந்தாவுக்கு மயக்கம் வருவது போல இருந்தது. தொண்டை அடைத்துக்கொண்டது. முதுகுத்தண்டு வழியாகச் சில்லென்ற வியர்வையின் இழை ஓடியது. இந்த நேரத்துக்காகத்தான் அவள் பல மாதங்கள் நடுக்கத்துடன் காத்திருந்தாள். ஏனெனில் ரெபேக்காவின் திருமணத்துக்கு இறுதித் தடையை உண்டாக்க முடியாமல் போகுமானால், தன்னுடைய

கற்பனை ஆற்றலின் சகல திறமைகளும் தோல்வியடையுமானால் ரெபேக்காவுக்கு விஷம் வைக்கும் துணிச்சல் தனக்கு இருக்க வேண்டும் என்று நினைத்திருந்தாள். அளவில்லாத பொறுமையுடன் அம்பரோ மாஸ்கோட் ஆயிரக்கணக்கான ஊசிகளைச் செருகி உருவாக்கியிருந்த துணிக் கவசத்துக்குள்ளிருக்கும் வெக்கைக்குள் அன்று பிற்பகல் ரெபேக்கா புழுங்கி மூச்சுத் திணறிக்கொண்டிருந்தாள். அமரந்தாவும் அப்போது ஆடையில் தவறாகத் தையல் போட்டாள். ஊசியால் விரலைக் குத்திக் கொண்டாள். ஆனால் அந்த நாள்தான் திருமணத்துக்கு முந்தைய கடைசி வெள்ளிக்கிழமையாக இருக்க வேண்டுமென்றும் காப்பியில் அபின் கரைசலைக் கலந்து கொடுப்பதுதான் கொலை செய்யும் முறையென்றும் அவள் அச்சமூட்டும் உறுதியுடன் தீர்மானித்தாள்.

முன்னறிவிப்பு இல்லாமல் வந்ததும் கடந்து செல்ல முடியாதது மான இன்னொரு பெரிய தடையால் திருமணம் புதிய காலவரையறை யில்லாத ஒத்திவைப்புக்கு உள்ளானது. திருமணத்துக்கு நிச்சயிக்கப் பட்டிருந்த நாளுக்கு ஒரு வாரம் முன்பு ஒரு நள்ளிரவில் சிறுமி ரெமேதியோஸ் அவளுக்குள்ளேயே கொதித்துக்கொண்டிருந்த ஏதோ ஒன்று உள் உறுப்புகளைக் கிழித்து வெடிப்புடன் வெளியேறியது போன்ற குழம்பில் ஊறியவளாக விழித்தெழுந்தாள். வயிற்றில் கிடந்த இரட்டைச் சிசுக்களால் அவளுடைய ரத்தமே விஷமாக மாறியிருந்தது. மூன்று நாட்களுக்குப் பின்பு அவள் இறந்தாள். அமரந்தா மனசாட்சி யின் நெருக்கடியால் பாதிக்கப்பட்டாள். ரெபேக்காவுக்கு விஷம் வைக்கும் அவசியமில்லாமல் வேறுவகையில் பீதியூட்டும் எதையாவது நிகழ்த்துமாறு உணர்ச்சிக் கொந்தளிப்புடன் கடவுளிடம் வேண்டி யிருந்தாள். எனவே ரெமேதியோஸின் மரணத்தில் குற்ற உணர்ச்சி அடைந்தாள். அவள் மன்றாடிக் கேட்ட தடை அதுவேயல்ல.

ரெமேதியோஸ் அந்த வீட்டுக்குக் களிப்பின் சுவாசத்தைக் கொண்டு வந்திருந்தாள். தன் கணவனுடன் பட்டறைக்குப் பக்கத்திலிருந்த அறையில் குடிபுகுந்தாள். அந்த அறையை அண்மைக் காலம்வரை அவளில் இருந்த குழந்தைமையின் விளையாட்டுப் பொம்மைகளாலும் பொருட்களாலும் அலங்கரித்திருந்தாள். அவளுடைய ஆனந்தம் படுக்கையறையின் நான்கு சுவர்களைத் தாண்டியும் பெருக்கெடுத்தது. பிகோனியப் பூக்கள் பூத்த தாழ்வாரத்தின் வழியே ஆரோக்கியமான சுழற்காற்றாகப் பாய்ந்தது. அவள் அதிகாலையிலேயே பாடத் தொடங்குவாள். ரெபேக்காவுக்கும் அமரந்தாவுக்கும் இடையில் வரும் சர்ச்சைகளில் குறுக்கிடும் துணிச்சல் அவள் ஒருத்திக்கு மட்டுமே இருந்தது. ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவைக் கவனித்துக் கொள்ளும் அலுப்பூட்டும் வேலைகளிலும் அவள் தன்னை ஈடுபடுத்திக் கொண்டாள்.

அவருக்கு உணவு எடுத்து வருவாள். பனையோலைப் பந்தலை நல்ல நிலைமையில் வைத்துக்கொள்வாள். காற்றும் மழையும் அடிக்கும் காலநிலைகளில் நீர்புகாத கித்தானை வேய்ந்து வைப்பாள். அவளுடைய கடைசி மாதங்களில் அவருடன் அடிப்படை லத்தீன் மொழியில் பேசுவதிலும் வெற்றியடைந்திருந்தாள். அவுரேலியானோவுக்குப் பிலர்

தெந்னேரா மூலம் பிறந்த குழந்தையை வீட்டுக்கு எடுத்து வந்து தனிப்பட்ட சடங்கில் அவுரேலியானோ ஹோசே என்று ஞானஸ்நானம் செய்து பெயர் வைத்தபோது அவன் தங்களுடைய மூத்த பிள்ளை யாகவே எண்ணப்பட வேண்டும் என்று ரெமேதியோஸ் தீர்மானித்தாள். அவளுடைய தாய்மை உணர்வு உர்சுலாவை வியப்படையச் செய்தது. தான் வாழ்வதற்கான நியாயத்தை அவுரேலியானோ அவளில்தான் கண்டான். அவன் பகல் முழுதும் பட்டறையில் வேலை செய்தான் காலை இடைவேளையில் ரெபேக்கா அவனுக்காக வறக்காப்பியை எடுத்து வருவாள். எல்லா இரவும் மாஸ்கோட் தம்பதிகளைப் பார்க்கப் போவார்கள். ரெமேதியோஸ் தனது சகோதரிகளுடன் அரட்டையடித்துக் கொண்டும் அம்மாவுடன் அதி முக்கியமான விஷயங்களைப் பேசிக் கொண்டும் இருக்கும்போது அவுரேலியானோ தனது மாமனாருடன் டோமினோஸ் விளையாடிக் கொண்டிருப்பான். புயேந்தியாக்களுடன் ஏற்பட்ட உறவு டான் அப்போலினர் மாஸ்கோட்டின் அதிகாரத்தை நகரத்தில் வலுப்படுத்தியது. பிரதேசத் தலைநகரத்துக்கு அடிக்கடி பயணம் சென்று வந்ததால் அந்த வாய்ப்பைப் பயன்படுத்தி அரசாங் கத்தை ஒரு பள்ளிக்கூடம் கட்டவைக்க முடிந்தது. கல்வியில் தாத்தாவின் ஆர்வத்தைப் பெற்றிருந்த அர்க்காதியோவின் பொறுப்பில் பள்ளியை விட்டார். இணக்கமான பேச்சின் மூலமாகத் தேசிய சுதந்திர தினத்துக்கு முன்பே பெரும்பான்மையான வீடுகளுக்கும் நீலச் சாயம் அடிக்கச் செய்ய அவரால் முடிந்தது. அருட்தந்தை நிக்கனோரின் கட்டாயத்தின் பேரில் காதரினோவின் கடையை வெளித் தெருவுக்கு மாற்றவும் நகரத்தின் மையத்தில் காசு கொழித்துக் கொண்டிருந்த சில முறைகேடான நிறுவனங்களை மூடவும் ஏற்பாடு செய்தார். ஒழுங்கைப் பராமரிக்க துப்பாக்கி ஏந்திய ஆறு போலீஸ்காரர் களுடன் அவர் திரும்பி வந்தபோது நகரத்தில் ஆயுதபாணிகள் தேவையில்லை என்று முன்பு நடைமுறைப்படுத்தியிருந்த ஒப்பந்தம் யாருக்கும் நினைவு வரவேயில்லை. மாமனாரின் நிர்வாகத் திறன் அவுரேலியானோவுக்குத் திருப்தியளித்தது. "நீயும் அவரைப் போலத் தடியனாகப் போகிறாய்" என்று அவன் நண்பர்கள் சொன்னார்கள். ஆனால் ஒரே இடத்தில் உட்கார்ந்து வேலை செய்யும் வாழ்க்கை அவனுடைய கன்ன எலும்புகளை வலுப்படுத்தவும் கண்களின் பிரகாசத்தை அதிகப்படுத்தவும் செய்ததே தவிர எடையைக் கூட்டவோ சிக்கனக் குணத்தை மாற்றவோ இல்லை. மாறாகத் தனிமைப் போக்கையும் மன உறுதியையும் காட்டும் ஒரு கோடாக அவனுடைய உதடுகளை இறுக்கியது. தான் கருத்தரித்திருப்பதை ரெபேக்கா தெரிவித்த போது தங்களது இரு குடும்பங்களிலும் அவனும் மனைவியும் எழச் செய்த பாடம் ஆழமானதாக இருந்தது. ரெபேக்காவும் அமரந்தாவும் கூட தற்காலிக உடன்பாட்டுக்கு வந்தார்கள். பிறக்கப் போவது ஆண் குழந்தையாக இருந்தால் நீல நிறக் கம்பளி உடுப்பு என்றும் பெண் குழந்தையாக இருந்தால் இளஞ்சிவப்பு உடுப்பு என்றும் தீர்மானித்துப் பின்னல் வேலையில் முனைந்தார்கள். அநேக வருடங்களுக்குப் பின்னர் துப்பாக்கிப் படையை எதிர்கொண்டபொழுது அர்க்காதியோ கடைசியாக யோசித்ததும் அவளைப் பற்றித்தான்.

உர்சுலா துக்கம் கடைபிடிக்க உத்தரவிட்டாள். மிகமிகத் தேவையான காரியங்களைத் தவிர வேறு எதற்கும் யாரும் வெளியே போகவோ உள்ளே வரவோ கூடாது என்று கதவுகளையும் ஜன்னல்களையும் மூடிவைத்த துக்கக் கடைபிடிப்பாக இருந்தது. அந்த ஒரு வருடம் முழுவதும் உரத்த குரலில் பேசுவதற்கும் தடை போட்டாள். ரெமேதியோஸின் உடலைக் கிடத்தியிருந்த இடத்தில் அவளுடைய படத்தை வைத்தாள். படத்தைச் சுற்றிக் கறுப்பு நாடாவை மாட்டினாள். எப்போதும் எரிந்துகொண்டே இருக்குமாறு ஒரு எண்ணெய் விளக்கை யும் வைத்தாள். அந்த விளக்கை அணையாமல் பார்த்துக்கொண்ட எதிர்காலத் தலைமுறையினருக்கு அது மடிப்பு வைத்த பாவாடையும் வெள்ளைப் பூக்களும் தலையைச் சுற்றி ஆர்கண்டி வளையமும் அணிந்த சிறுமியின் படமாக இருந்தது. வழக்கமான கொள்ளுப் பாட்டியின் உருவத்துடன் அதை ஒருபோதும் அவர்களால் தொடர்புபடுத்திப் பார்க்கவே முடியவில்லை. அவுரேலியானோ ஹோசேயைப் பார்த்துக் கொள்ளும் பொறுப்பை அமரந்தா ஏற்றுக்கொண்டாள். தன்னுடைய தனிமையைப் பகிர்ந்துகொள்ளவும் உன்மத்தமான நிலையில் அனிச்சையாக ரெமோதியோஸின் காப்பியில் அபின் கரைசலைக் கலந்த பாவத்திலிருந்து விடுபடவும் அவனைத் தத்தெடுத்துக் கொண்டாள். சாயங்காலப் பொழுதுகளில் கறுப்பு நாடா குத்திய தொப்பி அணிந்து பியத்ரோ கிரெஸ்பி சந்தடியில்லாமல் வருவான். மணிக்கட்டு வரை நீண்ட கைகள் கொண்ட கறுப்பு அங்கிக்குள் ரத்தம் கசிந்து செத்துக்கொண்டிருப்பவளைப் போலத் தோன்றிய ரெபேக்காவை மௌனமாகச் சந்திப்பான். திருமணத்துக்குப் புதிய தேதியைப் பற்றி யோசிப்பதேகூட பொருத்தமில்லாததாகத் தோன்றச் செய்தது. அந்தத் திருமண நிச்சயம் முடிவில்லாத உறவாக மாறியது. அந்த ஓய்ந்த காதல் யாரும் கவலைப்படாத ஒன்றாகவும் ஆனது. பழைய நாட்களில் முத்தமிட்டுக்கொள்வதற்காக விளக்குகளை அணைத்த காதலர்கள் மரணத்தின் தன்னிச்சைக்கு ஒப்புக் கொடுக்கப்பட்டவர் களானார்கள். தன்னுடைய மனவுறுதியை முழுவதும் இழந்து, முற்றிலும் சிதைந்து போன ரெபேக்கா மறுபடியும் மண்ணைத் தின்னத் தொடங்கினாள்.

இரங்கல் காலம் நீடித்து முடிந்து ஊசிமுனைப் பாடங்கள் மீண்டும் ஆரம்பித்தபோது, ஒருநாள் வெயிலின் கொடும் அமைதியிலிருந்த பிற்பகல் இரண்டு மணிக்கு அஸ்திவாரத்தின் அடிக்கட்டுகளே பலமாகக் குலுங்குவது போலத் தெருப்பக்கக் கதவை யாரோ தள்ளித் திறந்தார்கள். முற்றத்தில் உட்கார்ந்து தைத்துக்கொண்டிருந்த அமரந்தா வும் தோழிகளும் தனது படுக்கையறையில் விரல் சூப்பிக்கொண்டிருந்த ரெபேக்காவும் சமையலறையிலிருந்த உர்சுலாவும் பட்டறையிலிருந்த அவுரேலியானோவும் தனிமையான செந்தவிட்டு மரத்தடியிலிருந்த ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவும்கூட நிலநடுக்கத்தால் வீடு பிளந்துகொண்டிருப்பதாக நினைத்தார்கள். ஒரு பிரம்மாண்டமான ஆள் வந்திருந்தான். அவனுடைய சதுரத் தோள்கள் கதவு வழியாக உள்ளே நுழைய முடியவில்லை. தனது எருமைக் கழுத்தில் சகாய மாதாவின் உருவம் பொறித்த பதக்கத்தை அணிந்திருந்தான். கை

களிலும் மார்பிலும் பச்சை குத்தியிருந்தது. வலது கை மணிக்கட்டில் செம்பால் ஆன மந்திரித்த காப்பை இறுக்கமாக அணிந்திருந்தான். அவனுடைய சருமம் உப்புக் காற்றில் பதப்படுத்தப்பட்டது போல இருந்தது. முடி குட்டையாக வெட்டப்பட்டுக் கோவேறுக் கழுதையின் பிடரிபோலக் சுருட்டையில்லாமல் நேரானதாக இருந்தது. தாடைகள் இரும்பு வலுவுடன் இருந்தன. சோகப் புன்னகையுடனிருந்தான். அவன் போட்டிருந்த பெல்ட் சேணவாரைப் போல இரட்டிப்புக் கனத்துடன் இருந்தது. இடுப்பிலிருந்து பாதம்வரைக்குமான பூட்ஸுகளில் இரும்புக் குதிமுனைகள் இருந்தன. அவன் வந்து நின்றதே நிலநடுக்கம் ஏற்பட்ட உணர்வைத் தோற்றுவித்தது. பாதியும் நைந்த சில சேணப் பைகளைக் கையில் பிடித்துக்கொண்டு வரவேற்பறையையும் கூடத்தையும் கடந்து வந்தான். பிகோனியாப் பூக்கள் நிறைந்த முற்றத்தில் இடி முழக்கம் போல அவன் வந்து நின்றபோது அமரந்தாவும் தோழிகளும் உறைந்து போயிருக்க அவர்களுடைய தையல் ஊசிகள் அந்தரத்தில் நின்றன. சோர்வான குரலில் அவர்களைப் பார்த்து 'ஹலோ' சொல்லிவிட்டுச் சேணப் பைகளைப் பணி மேஜை மேல் தூக்கி எறிந்து வீட்டின் பின்பக்கமாகப் போனான். தனது படுக்கையறை வாசலைத் தாண்டிப் போனவனைப் பார்த்துத் திகைத்த ரெபேக்காவிடமும் 'ஹலோ' என்றான். தன்னுடைய வெள்ளிப் பட்டறை மேஜையில் ஐந்து புலன்களையும் குவித்து எச்சரிக்கையாக உட்கார்ந்திருந்த அவுரேலியானோவிடமும் 'ஹலோ' என்றான். யார் பக்கத்திலும் போய் அவன் நிற்கவில்லை. நேராகச் சமையலறைக்குப் போய் உலகத்தின் மறுபக்கத்தில் ஆரம்பித்த பயணத்தை முதன்முறையாக அங்கே முடித்துக்கொண்டான். 'ஹலோ' என்றான். ஒரு விநாடி அசையாமல் நின்ற உர்சுலா வாயைப் பிளந்து அவன் கண்களையே பார்த்தாள். உரக்க அழுது கைகளை விரித்து அவன் தோள்களைச் சுற்றி அணைத்துக்கொண்டு மகிழ்ச்சியில் கத்தி விசும்பினாள். அது ஹோசே அர்க்காதியோ. எப்படித் தரித்திரனாகப் புறப்பட்டுப் போனானோ அதேபோலத் திரும்பி வந்திருந்தான். அவனுடைய குதிரை வாடகை இரண்டு பெஸோக்களையும் உர்சுலாவே கொடுத்தாள். கடலோடிகளின் கொச்சைகள் நிரம்பிய ஸ்பானிய மொழியில் பேசினான். எங்கே இருந்தான் என்று அவர்கள் கேட்டதும் பதில் சொன்னான்: "அங்கேதான்." அவனுக்காக ஒதுக்கப்பட்ட அறையில் தனது தூக்க மஞ்சத்தைத் தொங்கவிட்டான். மூன்று நாட்கள் தூங்கினான். விழித்து எழுந்ததும் பதினாறு முட்டைகளைப் பச்சையாகச் சாப்பிட்டுவிட்டு நேராகக் கதாரினோவின் கடைக்குப் போனான். அவனுடைய பிரம்மாண்டமான உருவம் அங்கேயிருந்த பெண்களுக்கிடையில் பீதி கலந்த குறுகுறுப்பைத் தூண்டிவிட்டது. இசை நிகழ்ச்சிக்குச் சொன்னான். தன் செலவில் எல்லாருக்கும் சாராயம் கொடுக்கும்படி சொன்னான்.

தன்னால் ஒரே நேரத்தில் ஐந்து பேருடன் இந்திய முறை மல்யுத்தத்தில் ஈடுபட முடியும் என்றான். அவனுடைய கையைக்கூட அசைக்க முடியாது என்று தெரிந்துகொண்டே அவர்கள் "அதெல்லாம் முடியாது" என்றார்கள். "அவனிடம் மந்திரித்த காப்பு இருக்கிறது"

என்றார்கள். உடல்வலுவின் மாயாஜாலங்களில் நம்பிக்கையில்லாத கதர்ரினோ தன்னுடைய கல்லா மேஜையைக்கூட அவனால் தூக்க முடியாது என்று தெரிந்தே பன்னிரண்டு பெஸோக்களைப் பந்தயம் கட்டினான். ஹோராசே அர்க்காதியோ அதை வெளியே இழுத்துத் தலைக்கு மேல் தூக்கிக்கொண்டு போய்த் தெருவில் வைத்தான். அதைத் திரும்பக் கொண்டுவந்து வைக்கப் பதினோரு ஆட்கள் தேவைப்பட்டார்கள். விருந்தின் உச்சகட்டத்தில் மது அருந்துமிடத்தில் தன்னுடைய அசாதாரண உடல்வாகைப் பகிரங்கமாகக் காட்டினான். உடம்பு முழுவதும் வெவ்வேறு மொழிச் சொற்கள் சிவப்பும் நீலமுமான நிறங்களில் பச்சை குத்தப்பட்டிருந்தன. அவனைச் சுற்றி நின்றவர்களில் தன்னுடன் படுத்துக்கொள்ளும் தாபத்துடன் நெருங்கிய பெண்களிடம் யார் அதிகம் பணம் தர முடியும் என்று கேட்டான். அதிகப் பணம் வைத்திருந்த ஒருத்தி இருபது பெஸோக்கள் தருவதாக முன்வந்தாள். இல்லை, ஆளுக்குப் பத்துப் பெஸோக்கள் என்ற கணக்கில் குலுக்கல் நடத்தலாம் என்ற யோசனையைத் தெரிவித்தான். அது கொஞ்சம் அபரிமிதமான தொகைதான். ஏனெனில் அங்கே வாடிக்கையாளர்களால் அதிகம் விரும்பப்படும் பெண்கூட ஓர் இரவில் எட்டுப் பெஸோக்களைத்தான் சம்பாதித்தாள். ஆனாலும் எல்லாரும் அதற்கு ஒப்புக்கொண்டார்கள். தங்கள் பெயர்களைப் பதினான்கு துண்டுச் சீட்டுகளில் எழுதி ஒரு தொப்பிக்குள் போட்டு ஆளுக்கு ஒரு சீட்டை எடுத்தார்கள். இரண்டு சீட்டுகள் மிஞ்சின. அவை யாருடையவை என்பதும் தெரிந்தது.

"ஒவ்வொருவரும் ஐந்து பெஸோக்கள் அதிகம் தர வேண்டும். நான் இரண்டு பேருடனும் என்னைப் பங்கு போட்டுக்கொள்கிறேன்" என்றான் ஹோராசே அர்க்காதியோ. வாழ்வதற்கான மார்க்கத்தை அவன் அப்படி அமைத்துக்கொண்டான். நாடு இல்லாத கடலோடிகளின் குழுவுடன் அவன் அறுபத்துஐந்து முறை உலகத்தைச் சுற்றி வந்திருக்கிறான். கதாரினோவின் கடையில் அன்று இரவு அவனுடன் படுக்கப்போன பெண் அவன் உடம்பில் முன்னும் பின்னும், கழுத்து முதல் கால் நகம் வரை ஒரு சதுர அங்குலம்கூட பச்சை குத்தாத இடமில்லை என்பதை மற்றவர்கள் பார்ப்பதற்காக அவனை அம்மணமாக நடனக் கூடத்துக்கு அழைத்து வந்தாள். குடும்பத்துடன் பொருந்திப்போக அவனால் முடியவில்லை. பகல் முழுவதும் தூங்கினான். சிவப்பு விளக்கு மாவட்டத்தில் தனது உடல் வலிமையைப் பந்தயம் வைப்பதில் இரவைக் கழித்தான். உர்சுலா மேஜையருகில் உட்கார வைக்கும் அபூர்வமான தருணங்களில் வேடிக்கையாகப் பேசுவான். குறிப்பாக, தூரத்து நாடுகளில் அவன் செய்த சாகசங்களைச் சொல்லும் போது வேடிக்கை மின்னும். ஜப்பானியக் கடலில் கப்பல் சேதமடைந்து இரண்டு வாரங்கள் மிதந்துகொண்டிருந்தான். சூரிய வெப்பத்தால் இறந்துபோன சக தோழன் ஒருவனின் சதையைத் தின்றுதான் உயிர் பிழைத்தான். உப்பு அதிகமாக இருந்த அந்தச் சதை வெயிலால் சமைக்கப்பட்டது போல இனிமையானதாகவும் பொடிந்துபோன சுவையுடனும் இருந்தது. வங்காளகுடாக் கடலில் ஒரு பிரகாசமான நண்பகல் வெயிலில் அவனுடைய கப்பல் ஒரு கடல் டிராகனைக்

கொன்றுவிட்டது. அதன் வயிற்றுக்குள் சிலுவைப் போர்வீரன் ஒருவனின் கவசங்களும் கொளுவிகளும் ஆயுதங்களும் இருப்பதைப் பார்த்தார்கள். கரீபியக் கடலில், மரணக் காற்றில் பாய்கள் கிழிந்தும் பாய்மரங்கள் கடற்புழுக்களால் அரிக்கப்பட்டுமிருந்த விக்டர் ஹியூவெஸின் கடற் கொள்ளைக் கப்பலின் சடலம் குவாதெலுப் மார்க்கத்தில் செல்லத் தயாராக இருப்பது போலத் தோன்றியது. ஹோாசே அர்க்காதியோ தன்னுடைய செயல்களையும் சாகசத் தோல்விகளையும் பற்றி எழுதியிருந்து ஒருபோதும் தன் கைக்கு வந்து சேராத கடிதங்களைப் படித்துக்கொண்டிருப்பது போல உர்சுலா மேஜையில் அமர்ந்து அழுவாள். "மகனே, உனக்காக இவ்வளவு பெரிய வீடு இருக்கும்போது, ஏராளமான உணவு பன்றிகளுக்கு எறியப்படும்போது" என்று விசும்புவாள். ஆனால் உள் ஆழத்தில், நாடோடிகள் அழைத்துச் சென்ற அதே சிறுவன்தான் பகலுணவுக்குப் பால் மறக்காத பன்றியின் பாதியைத் தின்பவனும் பூக்கள் வதங்கிவிடுமாறு குசு விடுபவனுமான இந்தக் காட்டான் என்பதை அவளால் ஒத்துக்கொள்ள முடியவில்லை. ஏறத்தாழ இதே உணர்வுதான் குடும்பத்தில் மற்றவர்களுக்கும் இருந்தது. உணவு மேஜையில் உட்கார்ந்து சகிக்க முடியாதபடி அவன் விடும் ஏப்பம் ஏற்படுத்தும் அருவருப்புணர்வை அமரந்தாவால் மறைக்க முடியவில்லை. அவனுக்கும் தனக்குமான உறவின் ரகசியத்தை ஒருபோதும் அறிந்திராத அர்க்காதியோ தன்னுடைய அன்பைப் பெறும் வெளிப்படையான நோக்கத்தில் அவன் கேட்ட கேள்விகளுக்கு அபூர்வமாகவே பதில் சொன்னான். ஒரே அறையில் படுத்துத் தூங்கிய நாட்களை மீண்டும் வாழ்ந்து பார்க்கவும் குழந்தைப் பருவத்தில் ஒருவருக்கொருவர் உடந்தையாக இருந்த குறும்புகளைப் புதுப்பிக்கவும் அவுரேலியானோ முயன்றான். ஆனால் ஹோாசே அர்க்காதியோ அதையெல்லாம் மறந்துவிட்டிருந்தான். ஏனெனில் கடல் வாழ்க்கை நினைத்துப் பார்ப்பதற்கான பல விஷயங்களை அவனுடைய நினைவில் நிரப்பியிருந்தது. முதல் தாக்குதலில் வீழ்ந்தவள் ரெபேக்கா மட்டுமே. தன்னுடைய படுக்கையறையைத் தாண்டி அவன் போவதைப் பார்த்த நாளில் பியத்ரோ கிரெஸ்பி ஒரு சர்க்கரை பூசிய ஒய்யாரன் மட்டுமே என்று நினைத்தாள். பின்னர் வீடு முழுக்கக் கேட்கும்படி எரிமலைப் பெருமூச்சுவிடும் அந்தக் காட்டானை நினைத்தாள். எந்தச் சாக்கிலாவது அவனை நெருங்க முயன்றாள். ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில் ஹோாசே அர்க்காதியோ எந்தக் கூச்சமும் இல்லாமல் அவளுடைய உடம்பை உற்றுப் பார்த்துக்கொண்டே "நீ பெரிய பெண் ஆகிவிட்டாய், குட்டித் தங்கையே" என்றான். ரெபேக்கா சுயக் கட்டுப்பாட்டை இழந்தாள். அவள் முன்னைப் போலவே மண்ணையும் சுவரிலிருந்து சுரண்டிய சுண்ணாம்பையும் ஆத்திரத்துடன் தின்னத் தொடங்கினாள். மிகுந்த பதற்றத்துடன் கட்டை விரலின் மேல்தோல் தடித்து விடுமளவுக்கு விரலைச் சூப்பினாள். செத்த அட்டைகள் மிதந்த பச்சைத் திரவத்தை வாந்தியெடுத்தாள். காய்ச்சலால் நடுங்கிக்கொண்டு விழித்திருந்து இரவுகளைக் கழித்தாள். பிதற்றலுக்கு எதிராகப் போராடினாள். விடியற்காலையில் ஹோாசே அர்க்காதியோ திரும்பியதும் வீடு அதிர்வதை உணரக் காத்துக்கொண்டிருந்தாள். ஒருநாள் பிற்பகல், எல்லாரும் மத்தியானத் தூக்கத்திலிருந்தபோது இனிமேலும் தன்னைக் கட்டுப்

படுத்திக்கொள்ள முடியாமல் அவனுடைய படுக்கையறைக்குப் போனாள். கப்பல்களில் உபயோகிக்கும் முரட்டுக் கயிற்றால் உத்தரத்தி லிருந்து கட்டித் தொங்கவிட்டிருந்த உறக்க மஞ்சத்தில் அரைக்கால் உடுப்புடன் அவன் படுத்திருப்பதைப் பார்த்தாள். அவனுடைய பிரம்மாண்டமான பல வண்ண நிர்வாணம் அவளை ஈர்த்தது. பின் வாங்கச்செய்யும் தூண்டுதலையும் அவள் உணர்ந்தாள். "மன்னிக்க வேண்டும், நீங்கள் இங்கே இருந்தீர்கள் என்று எனக்குத் தெரியாது" என்றாள். மற்றவர்களை எழுப்பிவிடாமலிருக்கக் குரலைத் தணித்துக் கொண்டாள். "இங்கே வா" என்றான் அவன். ரெபேக்கா இசைந்தாள். உறக்க மஞ்சத்துக்கு அருகில் குளிர்ந்த வியர்வையுடன் நின்றாள். குடலில் முடிச்சுகள் விழுவது போல உணர்ந்துகொண்டிருந்தபோது ஹோசே அர்க்காதியோ தன் விரல் முனைகளால் அவளுடைய கணுக்கால்களையும் பிறகு கெண்டைக் கால்களையும் பிறகு தொடை களையும் "குட்டித் தங்கையே, குட்டித் தங்கையே" என்று முணுமுணுத்த படியே வருடினான். திகைப்பை ஏற்படுத்தும் வலிமைப் புயல் தன் னுடைய இடுப்பைப் பிடித்து ஒரு குட்டிப் பறவையைப் போல உயர்த்தித் தனது அந்தரங்கத்தைக் கிழித்து மூன்று நகங்களால் கௌவியபோது அவள் செத்துப் போகாமலிருக்க இயற்கைக்கு அதீதமாக முயல வேண்டியிருந்தது. அந்தப் பொறுக்க முடியாத வலியின் விவரிக்க முடியாத பேரானந்தத்தில் முழுமையாகத் தன்னை இழக்கும் முன்பு தன்னைப் பிறப்பித்த கடவுளுக்கு அவளால் நன்றி சொல்ல முடிந்தது. ஆவி பறக்கப் பீறிட்ட ரத்தத்தை ஒரு உறிஞ்சுதாளைப் போல அந்த உறக்க மஞ்சம் ஒற்றியெடுத்தது.

மூன்று நாட்களுக்குப் பிறகு ஐந்து மணிக்கான பலி பூசையின் போது அவர்கள் திருமணம் செய்துகொண்டார்கள். அதற்கு முந்தைய நாள் பியத்ரோ கிரெஸ்பியின் கடைக்கு அர்க்காதியோ போயிருந்தான். அவன் ஸிதார் வாசிக்கக் கற்பித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தான். பேசுவதற்காக அவனை அருகில் அழைக்காமலேயே "நான் ரெபேக்காவைத் திருமணம் செய்துகொள்ளப் போகிறேன்" என்று அவனிடம் சொன்னான். பியத்ரோ கிரெஸ்பி வெளிறிப் போனான். ஸிதாரை மாணவர்களில் ஒருவனிடம் கொடுத்துவிட்டு வகுப்பை முடித்து அவர்களை அனுப்பினான். இசைக்கருவிகளும் இயந்திரப் பொம்மைகளும் நிறைந்திருந்த அந்த அறையில் அவர்கள் மட்டும் தனித்து விடப்பட்டபோது பியத்ரோ கிரெஸ்பி சொன்னான்:

"அவள் உன் சகோதரி"

"அதைப் பற்றி எனக்கு அக்கறையில்லை" யோசே அர்க்காதியோ பதில் சொன்னான்.

லவெண்டரில் நனைத்த கைக்குட்டையால் பியத்ரோ கிரெஸ்பி தன் புருவங்களைத் துடைத்தான். "அது இயற்கைக்கு விரோதமானது. தவிரவும் சட்ட விரோதமானது" என்று விளக்கினான்.

ஹோசே அர்க்காதியோ பொறுமை இழந்தான். வாதத்தால் அல்ல; வெளிறிப் போயிருந்த பியத்ரோ கிரெஸ்பியைப் பார்த்து.

"இயற்கையை இன்னும் இரண்டு முறை நாசம் பண்ணு. நான் வந்தது ரெபேக்காவிடம் எதையும் கேட்டுத் தொந்தரவு செய்யக் கூடாது என்று சொல்லத்தான்" என்றான்.

ஆனால் பியத்ரோ கிரெஸ்பியின் கண்கள் கலங்கியிருப்பதைப் பார்த்ததும் அவனுடைய மிருகக் குணம் தளர்ந்தது. "சரி" என்று இதமான தொனியில் சொன்னான். "உனக்கு இந்தக் குடும்பத்தை உண்மையாகவே பிடித்திருக்கிறது என்றால் அங்கே உனக்காக அமரந்தா இருக்கிறாளே" என்றான்.

அருட்தந்தை நிக்கனோர் தனது ஞாயிற்றுக்கிழமைப் பிரசங்கத்தின் போது ஹோசே அர்க்காதியோவும் ரெபேக்காவும் அண்ணன் தங்கை அல்ல என்று பகிரங்கமாகச் சொன்னார். யோசிக்கவே முடியாத அவமானம் என்று எண்ணிய உர்சுலா அவர்களை ஒருபோதும் மன்னிக்கவில்லை. தேவாலயத்திலிருந்து திரும்பி வந்த மணமக்களை மீண்டும் வீட்டுக்குள் கால்வைக்கக் கூடாது என்று தடை விதித்தாள். அவளைப் பொறுத்தவரை அவர்கள் மரித்துப் போனவர்கள். எனவே அவர்கள் கல்லறைக்கு அந்தப் பக்கம் ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்துக் குடியேறினார்கள். ஹோசே அர்க்காதியோவின் உறக்க மஞ்சத்தைத் தவிர வேறு அறைகலன்கள் இல்லை. திருமண நாள் இரவு ஒரு தேள் ரெபேக்காவின் காலணிக்குள் புகுந்து அவளைக் கொட்டியது. அவளுடைய நாக்கு மரத்துப்போனது. ஆனால் அது முறையற்ற தேன்நிலவைக் கொண்டாடுவதிலிருந்து அவர்களைத் தடுக்கவில்லை. ஒரே இரவில் எட்டு முறையும் மத்தியானத் தூக்கத்தின் போது மூன்று முறையும் அந்த மாவட்டம் முழுவதற்கும் கேட்கும்படி எழுந்த அலறலால் அண்டையிலிருப்பவர்கள் திகைத்தார்கள். அது போன்ற காட்டுத்தனமான வேட்கை மரித்தோரின் அமைதியைக் குலைத்துவிடக் கூடாது என்று அவர்கள் பிரார்த்தனை செய்தனர்.

அவர்களைப் பற்றிக் கவலைப்பட்ட ஒரே நபர் அவுரேலியானோ மட்டுமே. அறைக்கலன்கள் சிலவற்றை அவர்களுக்கு வாங்கிக் கொடுத்தான். ஹோசே அர்க்காதியோ நடைமுறை உணர்வுக்குத் திரும்பி வீட்டு முற்றத்தில் வரம்பிடப்பட்ட புறம்போக்கு நிலத்தில் வேலை செய்யத் தொடங்கும்வரை அவர்களுக்குப் பணமும் கொடுத்தான். இன்னொரு புறம், தனது கனவில்கூடக் கண்டிராத நிறைவை வாழ்க்கை அவளுக்குக் கொடுத்திருந்தும் அமரந்தாவால் ரெபேக்காவுடனான பகையை ஒருபோதும் வெல்ல முடியவில்லை. அந்த அவமானத்தை எப்படிச் சரி செய்வது என்று புரியாமலிருந்த உர்சுலாவின் ஊக்குவிப்பால் பியத்ரோ கிரெஸ்பி தனது அமைதியான கௌரவத்துடன் தோல்வியிலிருந்து உயர்ந்து எழுந்து எல்லாச் செவ்வாய்க்கிழமைகளிலும் அந்த வீட்டில் பகலுணவு அருந்தினான். அந்தக் குடும்பத்தின் மேலிருக்கும் பாசத்துக்கு அடையாளமாக அப்போதும் தன்னுடைய தொப்பியில் கறுப்பு நாடாவைக் குத்திவைத்திருந்தான். வசீகரமான பரிசுகளைக் கொண்டுவந்து கொடுப்பதன் மூலமாக உர்சுலா மேல் தனக்கிருக்கும் பாசத்தைக் காட்டுவதில் மகிழ்ந்தான். பதப்படுத்திய போர்த்துக்கீசிய மீன்களையும் துருக்கிய ரோஜாப் பழப்பாகையும்

ஒருசமயம் அருமையான மணிலா சால்வையையும் கொண்டுவந்தான். அமரந்தாவும் அவனை அன்பின் உற்சாகத்துடன் கவனித்துக் கொண்டாள். அவனுடைய தேவைகளை முன்கூட்டியே தெரிந்து வைத்திருந்தாள். அவனுடைய சட்டையின் மணிக்கட்டுப் பகுதியில் பிரிந்து தொங்கிய நூலை இழுத்து அகற்றினாள். அவன் பிறந்த நாளுக்காகப் பெயரின் முதல் எழுத்துகளை ஒரு டஜன் கைக்குட்டை களில் பூத்தையல் போட்டுக் கொடுத்தாள். செவ்வாய்க் கிழமைகளில் பகலுணவுக்குப் பிறகு முற்றத்தில் அவள் எம்பிராய்டரி செய்துகொண் டிருக்கும்போது மகிழ்ச்சிகரமான துணையாகப் பக்கத்தில் இருப்பான். எப்போதும் குழந்தையாகவே நினைத்தும் நடத்தப்பட்டும் வந்த அவள், ஒரு பெண் என்று புரியவந்தது பியத்ரோ கிரெஸ்பியைப் பொருத்தவரை ஒரு புதிய செய்தி. அவளுடைய மனப்போக்கில் நளினமில்லை. ஆனால் உலகியல் நடைமுறைகளை ஏற்றுக்கொள்வதில் அபூர்வமான நுண்ணுணர்வும் ரகசியமான மென்மையும் இருந்தன. உடனடியாகவோ அல்லது அப்புறமாகவோ நடக்கப்போகிறது என்பதில் யாருக்கும் சந்தேகமில்லாத நிலையில் ஒரு செவ்வாய்க் கிழமை பியத்ரோ கிரெஸ்பி அவளிடம் தன்னைத் திருமணம் செய்துகொள்ளும்படி கேட்டான். அவள் தன்னுடைய கைவேலையை நிறுத்தாமல் காதுமடல் களில் படர்ந்த வெம்மையான சிவப்புக் கலையக் காத்திருந்தாள். குரலில் முதிர்ச்சியின் அழுத்தம் தொனிக்கும் வரைக்கும் காத்திருந்தாள்.

“நிச்சயம் கிரெஸ்பி, நாம் ஒருவரை ஒருவர் நன்றாகப் புரிந்து கொண்ட பின்பு. அவசரப்படுவது ஒருபோதும் நல்லதல்ல” என்றாள்.

உர்சுலா குழம்பினாள். பியத்ரோ கிரெஸ்பி மேல் அவளுக்குப் பெருமதிப்பு இருந்தபோதும் ரெபேக்காவுடனான அவனுடைய நீண்ட காலம் நீண்டிருந்ததும் பிரசித்தி பெற்றதுமான திருமண நிச்சயதார்த்தத்துக்கு அப்புறம் இந்தத் தீர்மானம் ஒழுக்கநெறிப் பார்வையில் சரியா தவறா என்று அவளால் சொல்ல முடியவில்லை. ஆனால், அவளுடைய சந்தேகத்தைப் பகிர்ந்துகொள்ள வேறு யாரும் இல்லாததால் அந்தத் தகவல் தகுதியில்லாதது என்று கடைசியாக ஒப்புக்கொண்டாள். வீட்டின் தலைவனான அவுரேலியானோ தன் னுடைய புதிரான இறுதி அபிப்பிராயம் மூலம் அவளை மேலும் குழப்பினான்.

“திருமணங்களைப் பற்றி யோசித்துக்கொண்டு திரிவதற்கான காலமல்ல இது.”

சில மாதங்களுக்குப் பின்புதான் அந்த அபிப்பிராயம் உர்சுலாவுக்குப் புரிந்தது. அந்த நொடியில் அவுரேலியானோவால் சொல்ல முடிந்த உண்மையான அபிப்பிராயமாக இருந்தது அது. திருமணத்தைப் பற்றி மட்டுமல்ல, போரைத் தவிர மற்ற எல்லாச் செயல்களுக்கும் பொருந்தக்கூடிய அபிப்பிராயமாகவே இருந்தது. நுட்பமும் தவிர்க்க முடியாததுமான எதிர்பாரா நிகழ்வுகளின் தொடர் கண்ணி அந்தப் புள்ளிக்குத் தன்னை எப்படிக் கொண்டுவந்து நிறுத்தியது என்பதைத் துப்பாக்கிப் படையை எதிர்கொண்ட நிலைமையில் யோசித்துப்

பார்த்தபோது அவனுக்கே புரியவில்லை. ரெமேதியோஸின் மரணம் அவன் பயந்தபடி பெரும் ஏமாற்றத்தை ஏற்படுத்திவிடவில்லை ஆனால் அது பெண் துணையில்லாமலேயே வாழ முடிவுசெய்த நாட்களில் உணர்ந்த கையறுநிலைக்கும் தனிமையில் கரைந்த மொண்ணையான கோபத்துக்கும் இணையான ஒன்றாக இருந்தது. அவன் மீண்டும் தன் வேலைகளில் மூழ்கினான். எனினும் மாமனாருடன் சதுரங்கம் ஆடும் பழக்கத்தை மட்டும் தொடர்ந்தான். துக்கத்தில் தோய்ந்திருந்த வீட்டில் இரவுகளில் நடந்த உரையாடல்கள் இருவரின் நட்பையும் வலுப்படுத்தின. "அவுரேலிதோ, மறுபடியும் திருமணம் செய்துகொள்" என்று அவன் மாமனார் அவனிடம் சொல்லுவார். "நீ தேர்ந்தெடுப்பதற்காகவே எனக்கு ஆறு மகள்கள் இருக்கிறார்கள்." தேர்தலுக்கு முந்தின நாள், தனது வழக்கமான பயணம் முடித்து வந்த டான் அப்போலினர் மாஸ்கோட் நாட்டில் நிலவும் அரசியல் சூழ்நிலை பற்றி ஒரு சந்தர்ப்பத்தில் கவலைப்பட்டார். மிதவாதிகள் போருக்கு ஆயத்தமாக இருந்தார்கள். அந்தச் சமயத்தில் பழமைவாதி[1]களுக்கும் மிதவாதி[2]களுக்கும் இடையிலான வேற்றுமைகள் பற்றி அவுரேலியானோ குழப்பமான கருத்துகளைக் கொண்டிருந்தான். எனவே அவனுடைய மாமனார் முறையான சில பாடங்களைக் கற்பித்தார். மிதவாதிகள் என்பவர்கள் கூட்டுரிமை வேண்டுகிறவர்கள், மோசமானவர்கள், பாதிரியார்களைக் கழுவேற்ற விரும்புகிறவர்கள், பொதுத் திருமணமுறைகளையும் மணவிலக்கையும் நிறுவ விரும்புகிறவர்கள், முறையாகப் பிறந்த குழந்தைகளின் உரிமைகளுக்கு இணையாக முறைகேடாகப் பிறந்த குழந்தைகளின் உரிமைகளுக்கும் அங்கீகாரம் கோருபவர்கள், உச்ச அதிகார அமைப்பிடமிருந்து அதை எடுத்துக் கூட்டமைப்புகளுக்குப் பகிர்ந்துகொடுத்து நாட்டைத் துண்டாட நினைப்பவர்கள். மறுபக்கம் பழமைவாதிகளோ அதிகாரத்தைக் கடவுளிடமிருந்தே நேரடியாகப் பெற்றவர்கள். பொது ஒழுங்கையும் குடும்ப ஒழுக்கத்தையும் நிறுவ எண்ணுபவர்கள். கிறித்தவ விசுவாசத்தின் பாதுகாவலர்கள். அதிகாரத்தின் கொள்கையை ஏற்றுக் கொண்டவர்கள். சுய அதிகாரமுள்ள சிறுஅமைப்புகளாக நாடு துண்டுபடுவதை அனுமதிக்கத் தயாராக இல்லாதவர்கள். தனது மனிதாபிமான உணர்வுகள் காரணமாக அவுரேலியானோ இயற்கையாகப் பிறந்த குழந்தைகளின் உரிமைகளுடன் மரியாதை காட்டும் மிதவாதிகள் மீது அனுதாபம் கொண்டான். ஆனால் கையால் தீண்ட முடியாத விஷயங்களுக்காகப் போர் தொடுப்பது என்ற தீவிர நிலைக்கு எப்படி மனிதர்கள் வந்து சேர்கிறார்கள் என்பதை மட்டும் அவனால் எந்த விதத்திலும் புரிந்துகொள்ள முடியவில்லை. அரசியல் வேட்கைகள் எதுவுமில்லாத அந்த நகரத்துக்கு ஒரு சார்ஜெண்டின் தலைமையில் துப்பாக்கி ஏந்திய ஆறு சிப்பாய்களைத் தேர்தல் நேரத்தில் தன் மாமனார் அனுப்பி வைத்தது அவனுக்கு அதிகப்படியாகத் தோன்றியது. அவர்கள் வந்தது மட்டுமல்ல, வீடு வீடாகப் புகுந்து வேட்டைக் கருவிகளையும் கோடரிகளையும் சமையலறைக் கத்திகளையும்கூடப் பறிமுதல் செய்தார்கள். அதன்பின் இருபத்தியோரு வயது பூர்த்தியான ஆண்களிடையே பழமைவாத உறுப்பினர்கள் பெயர்கள் அச்சிட்ட

நீல நிற வாக்குச் சீட்டுகளையும் மிதவாத உறுப்பினர்கள் பெயர்கள் அச்சிட்ட சிவப்பு நிற வாக்குச் சீட்டுகளையும் விநியோகித்தார்கள். தேர்தலுக்கு முன்தினம் டான் அப்போலினர் மாஸ்கோட் மதுபானங் களின் விற்பனையையும் ஒரே குடும்பத்தவரல்லாத மூன்று பேருக்கும் மேற்பட்டவர்கள் கூட்டம் கூடுவதையும் தடைசெய்யும் உத்தரவைப் பிறப்பித்தார். எந்த அசம்பாவிதமும் இல்லாமல் தேர்தல் நடந்தது. ஞாயிற்றுக் கிழமை காலை எட்டு மணிக்குச் சதுக்கத்தில் மரத்தாலான ஓட்டுப் பெட்டி வைக்கப்பட்டது. ஆறு சிப்பாய்கள் அதைக் காவல் காத்தார்கள். வாக்குப் பதிவு முற்றிலும் சுதந்திரமாகவே நடந்தது என்பதை அவுரேலியானோவால் உறுதிசெய்ய முடிந்தது. தனது மாமனாருடனேயே நாள் முழுக்க இருந்ததனால் ஒரு முறைக்கு மேல் யாரும் வாக்களிக்கவில்லை என்பதையும் அவன் பார்த்துக்கொண் டிருந்தான். மாலை நான்கு மணிக்குச் சதுக்கத்தில் வைத்திருந்த முரசுகள் முழங்கி வாக்களிப்பு முடிந்ததை அறிவித்தன. டான் அப்போலினர் மாஸ்கோட் ஓட்டுப் பெட்டியை மூடித் தனது கையெழுத்துப் போட்ட சீட்டைக் குறுக்கில் ஒட்டி முத்திரையிட்டார். அன்று இரவு அவுரேலியானோவுடன் சதுரங்கம் ஆடிக்கொண்டிருந்த போது சார்ஜெண்டிடம் ஓட்டுகளை எண்ணுவதற்காக முத்திரையை உடைக்குமாறு உத்தரவிட்டார். நீல நிற வாக்குச் சீட்டுகள் எத்தனை இருந்தனவோ அதே அளவு சிவப்பு நிற வாக்குச் சீட்டுகளும் அதில் இருந்தன. ஆனால் சார்ஜெண்ட் பத்துச் சிவப்புச் சீட்டுகளை மட்டும் அதிலேயே போட்டுவிட்டு நீலச் சீட்டுகளின் எண்ணிக்கை வித்தியா சத்தை அதிகமாக்கினார். பிறகு புதிய சீட்டை ஒட்டிப் பெட்டியை மறுபடியும் மூடி முத்திரையிட்டார்கள். மறுநாள் காலையில் முதல் வேலையாகப் பெட்டி பிரதேசத் தலைநகருக்கு எடுத்துச் செல்லப்பட்டது. “மிதவாதிகள் போருக்குத் தயாராவார்கள்” என்றான் அவுரேலியானோ. டான் அப்போலினர் சதுரங்கக் காய்களில் கவனமாக இருந்தார். “ஓட்டுகளில் இருக்கும் மாற்றத்தால் நீ அதைச் சொல்கிறாய் என்றால் அவர்கள் அதைச் செய்யப் போவதில்லை.” என்றார். “சில சிவப்புச் சீட்டுகளையும் விட்டுவைத்திருக்கிறோமே, அதனால் எந்தப் புகாரும் இருக்காது.” எதிர் அணியில் இருப்பதன் அசௌகரியங்களை அவுரேலியானோ புரிந்துகொண்டான். “நான் மட்டும் மிதவாதியாக இருந்தால், இந்த ஓட்டுச் சீட்டுகளுக்காகவே போருக்கு ஆயத்தமாவேன்” என்றான். அவனுடைய மாமனார் கண்ணாடிக்கு மேலாக அவனைப் பார்த்தார்.

“நல்லது அவுரேலிதோ, நீ ஒரு மிதவாதியாக இருந்தால், என் மருமகனாகவே இருந்தாலும்கூட, வாக்குச் சீட்டுகள் மாற்றப்படுவதைப் பார்த்திருக்க முடியாது” என்றார்.

நகரத்தில் கொந்தளிப்பை ஏற்படுத்திய காரணம் தேர்தல் முடிவு களல்ல; உண்மையில் அதற்குக் காரணம் கைப்பற்றிய ஆயுதங்களைச் சிப்பாய்கள் திரும்பக் கொடுக்காததுதான். பெண்கள் குழுவொன்று அவனுடைய மாமனாரிடமிருந்து சமையலறைக் கத்திகளைத் திரும்ப வாங்கிக் கொடுக்கும்படி அவுரேலியானோவிடம் பேச்சுவார்த்தை

நடத்தியது. மிதவாதிகள் போருக்குத் தயாராகிக் கொண்டிருக்கிறார்கள் என்பதற்கு ஆதாரமாக அந்த ஆயுதங்களைச் சிப்பாய்கள் எடுத்துச் சென்றுவிட்டதாக டான் அப்போலினர் மாஸ்கோட் மிக ரகசியமாக அவனிடம் விளக்கினார். அந்தப் பேச்சிலிருந்த வெறுப்பு அவனை அதிர்ச்சியடையச் செய்தது. அவன் எதுவும் பேசவில்லை. ஆனால் ஒரு இரவு நேரம், ஜெரினெல்தோ மார்க்கேஸும் மாக்னிஃபிகோ விஸ்பலும் மற்ற நண்பர்களுடன் கத்தியை எடுத்துச் சென்ற சம்பவம் பற்றிப் பேசிக்கொண்டிருந்தபோது அவன் மிதவாதியா இல்லை பழமைவாதியா என்று கேட்டார்கள்.

"நான் ஏதாவது ஒன்றாக இருக்கவேண்டுமானால் மிதவாதியாகவே இருப்பேன். ஏனென்றால் பழைமைவாதிகள் தந்திரக்காரர்கள்" என்றான்.

மறுநாள் நண்பர்களின் வற்புறுத்தலின் பேரில் அவனுக்கு இருப்பதாகச் சொல்லப்படும் கல்லீரல் வலிக்குச் சிகிச்சை பெற டாக்டர் அலீரியோ நோகுவேராவிடம் போனான். அவனுக்கு அந்தத் தந்திரத்தின் அர்த்தம் புரிந்திருக்கவில்லை. டாக்டர் அலீரியோ நோகுவேரா சில ஆண்டுகளுக்கு முன்பு சுவையில்லாத மாத்திரைகள் அடங்கிய மருந்துப் பெட்டியுடன் மகோந்தாவுக்கு வந்து சேர்ந்திருந்தார். அவருடைய மருத்துவக் குறிக்கோளான 'ஓர் ஆணி இன்னொன்றை ஈர்க்கிறது' யாரையும் கவரவில்லை. உண்மையில் அவர் போலி மருத்துவர். பிரபலமில்லாத டாக்டர் என்ற அவருடைய அப்பாவித்தனமான புறத்தோற்றத்துக்குப் பின்னால் ஒரு தீவிரவாதி ஒளிந்திருந்தான். ஐந்து வருடங்கள் கால்களை மரத்துளையில் நுழைத்தே வைத்திருந்ததால் ஏற்பட்ட வடுக்களை மறைக்கக் குட்டையான பூட்ஸுகளை அணிந்திருந்தார். ஃபெடரலிஸ்டுகளின் முதலாம் தீர சாகசத்தின்போது சிறை பிடிக்கப்பட்டார். வாழ்நாளில் அவர் மிகவும் வெறுக்கும் உடையான பாதிரியார் அங்கியை அணிந்து மாறுவேடத்தில் கியூராக்கோவுக்குத் தப்பிச் செல்ல முடிந்தது. நீண்ட காலம் தலைமறைவாக இருந்த பின்பு கரீபியாவெங்கும் இருந்த தலைமறைவாளர்கள் கியூராக்கோவுக்குக் கொண்டு வந்த உற்சாகச் செய்தி கேட்டுச் சுத்திகரிக்கப்பட்ட சர்க்கரை உருண்டைகள் நிரம்பிய குப்பிகளுடனும் அவரே போலியாகத் தயார் செய்த லேய்ப்சிங் பல்கலைக்கழகப் பட்டயத்துடனும் கள்ளக் கடத்தல்காரர்களின் பாய்மரக்கப்பலில் ஏறி ரியோஹாச்சாவுக்கு வந்து சேர்ந்தார். ஏமாற்றத்தால் அழுதார். வெடித்துச் சிதறவிருக்கும் வெடிமருந்து மிடா என்று தலைமறைவாளர்கள் சித்திரித்த ஃபெடரலிஸ்ட் உணர்ச்சி வேகம் குழப்பமான தேர்தல் மாயையில் கரைந்திருந்தது. தோல்வியின் கசப்பை விழுங்கிக்கொண்டு முதுமைக்காகக் காத்திருக்க ஒரு பாதுகாப்பான இடத்தைத் தேடிக் கொண்டிருந்த அந்தப் போலி ஹோமியோபதி மருத்துவர் மகோந்தாவில் அடைக்கலம் புகுந்தார். டான் அப்போலினார் மாஸ்கோட் ஒரு பொம்மைத் தலைவராக நீடித்த காலம்வரை ஒரு போராளியின் உள்ளுணர்வுகள் அவருக்குள் அடங்கியே இருந்தன. கடந்துபோன நாட்களை நினைவு கூர்ந்தும் ஆஸ்துமாவுக்கு எதிராகப் போராடியும் காலத்தைக் கழித்தார். தேர்தல் நெருங்கி வந்தது. அவரை மீண்டும்

வீழ்த்தும் நூற்கண்டின் இழையாக இருந்தது. நகரத்திலிருந்த இளைஞர்களுடன் தொடர்பு ஏற்படுத்திக்கொண்டார். அரசியல் அறிவு இல்லாமலிருந்த அவர்களிடையே மறைமுகமான பிரச்சாரத்தைத் தூண்டிவிட்டார். இளைஞர்கள் ஆர்வத்துடன் வாக்களித்தவை என்ற எண்ணத்தில் ஓட்டுப் பெட்டியில் டான் அப்போலினர் மாஸ்கோட் கண்ட ஏராளமான சிவப்பு நிற வாக்குச் சீட்டுகள் தேர்தல் ஒரு ஏமாற்று வேலை என்று தனது சீடர்களுக்குக் காட்டுவதற்காக அவர் நடைமுறைப்படுத்திய திட்டத்தின் ஒரு பகுதியாகவே இருந்தது. "வன்முறை மட்டுமே பயன் விளைவிக்கும் ஒரே செயல்" என்று அவர்களிடம் சொல்லுவார். பழைமைவாத அமைப்பைத் தீர்த்துக் கட்டுவதில் அவுரேலியானோவின் பெரும்பான்மை நண்பர்களும் ஆர்வத்துடன் இருந்தார்கள். ஆனால் தங்களுடைய திட்டத்தில் அவனைச் சேர்த்துக் கொள்ள ஒருவருக்கும் துணிவு இல்லை. அதற்கு மாஜிஸ்டிரேட்டுடன் அவன் கொண்டிருக்கும் தொடர்புகள் மட்டுமல்ல; அவனுடைய தனிமையும் நழுவல் குணமும்தான் காரணம். மேலும் தன்னுடைய மாமனாரின் அறிவுரைப்படி நீலத்துக்குத்தான் அவன் வாக்களித்திருந்தான் என்பது தெரிந்தேயிருந்தது. எனவே அவன் தன் அரசியல் உணர்வுகளை வெளிப்படுத்தியது தற்செயலான ஒன்றாக இருந்தது. தனக்கில்லாத வலிக்குச் சிகிச்சை தேடி டாக்டரிடம் வந்ததும் முற்றிலும் ஆர்வம் மிகுதியால் அல்லது மனித சஞ்சலத்தால் ஆக இருக்கலாம். கற்பூர நெடியடிக்கும் சிலந்தி வலைகள் நிரம்பிய கிடங்கில் ஒருவகை அழுக்கான உடும்புகளைப் பார்த்தான். அவன் மூச்சுவிட்டபோது அவற்றின் நுரையீரல்கள் சீழ்க்கையடிப்பதைப் பார்த்தான். அவனிடம் கேள்விகள் எதுவும் கேட்கும் முன்பே டாக்டர் அவனை ஜன்னலருகில் கொண்டு சென்று அவனுடைய கீழ் இமையின் உட்பகுதியைப் பரிசோதித்தார். நண்பர்கள் சொல்லிக் கொடுத்தது போலவே "அது அங்கேயில்லை" என்றான். விரல் முனைகளால் கல்லீரல் பகுதியை அழுத்தி "இதோ, இங்கேதான் வலி, தூங்கவிடுவதில்லை" என்றான். டாக்டர் நோகுவேரா வெயில் அதிகமாக இருப்பது போலக் காட்டிக் கொண்டு ஜன்னலை மூடி அவனிடம் எளிய சொற்களில் பழைமைவாதிகளை ஒழித்துக் கட்டுவது தேசப் பக்திக் கடமை என்று விளக்கினார். மாத்திரைகள் அடங்கிய சிறு குப்பியை அவுரேலியானோ பல நாட்கள் தன் சட்டைப் பையில் வைத்திருந்தான். இரண்டு மணி நேரத்துக்கு ஒரு முறை அதை எடுத்து மூன்று மாத்திரைகளை உள்ளங்கையில் வைத்து நாக்கில் மெதுவாகக் கரையும்படியாக ஒவ்வொன்றாக வாயில் போட்டுக்கொள்வான். டான் அப்போலினர் மாஸ்கோட் ஹோமியோபதியில் அவனுக்கிருந்த நம்பிக்கையைக் கேலி செய்தார். ஆனால் திட்டத்தில் பங்கேற்றிருந்தவர்கள் அவனைத் தங்களில் ஒருவனாக இனங்கண்டு கொண்டார்கள். நகர நிறுவனர்களின் பிள்ளைகளில் பெரும்பான்மையானவர்களும் தாங்கள் எத்தகைய திட்டத்தைச் செயல்படுத்தப் போகிறோம் என்று திட்பமாகத் தெரியாமலேயே இதில் பங்கு பெற்றிருந்தார்கள். இருந்தபோதும் அவுரேலியானோவிடம் டாக்டர் திட்டத்தைப் பகிரங்கப்படுத்தியபோது சதியின் முழுத் திட்டமும் அவர்களுக்கு வெளிப்பட்டது. அந்தத் தருணத்தில் பழைமைவாத

ஆட்சியை ஒழித்துக் கட்ட அவன் உறுதி கொண்டிருந்தாலும் அந்த சதித் திட்டம் பீதியளித்தது. தனிப்பட்ட கொலைகளைப் பற்றி டாக்டர் நோகுவேராவுக்கு அறிவை மீறிய ஓர் உணர்வு இருந்தது. ஒரே சமயத்தில் நாடு முழுவதும் தழுவிய விதம் ஆட்சியமைப்பின் தொண்டர்களை அவர்களுடைய குடும்பத்தோடு, குறிப்பாகக் குழந்தைகளுடன் சேர்த்துத் தீர்த்துக்கட்டுவதற்குப் பல தனி நபர்களின் செயல்பாடுகளையும் ஒருங்கிணைப்பது என்பதாக அவருடைய செயல்முறை எளிமைப்படுத்தப்பட்டது. டான் அப்போலினர் மாஸ்கோட், அவர் மனைவி, அவருடைய ஆறு பெண்மக்கள் எல்லாரும் அந்தப் பட்டியலில் இருந்தார்கள் என்பதைச் சொல்லத் தேவையில்லை.

"நீங்கள் மிதவாதியல்ல. ஏன் எதுவுமேயல்ல. நீங்கள் வெறும் கொலைகாரர். அவ்வளவுதான்" அவுரேலியானோ உணர்ச்சிவசப் படாமல் அவரிடம் சொன்னான்.

"அப்படியென்றால் அந்தக் குப்பியைத் திரும்பக் கொடுத்து விடு. உனக்கு இனி அது தேவையில்லை" என்று அதே அளவு நிதானத்துடன் டாக்டர் பதில் சொன்னார். ஆறு மாதங்களுக்குப் பிறகே தான் எதிர்காலம் இல்லாத வெறும் உணர்ச்சிவசப்படும் நபர், ஊக்கமில்லாதவன், தனிமையானவன் என்றும் தன்னால் செயல்பட முடியாது என்றும்தான் டாக்டர் தன்னைக் கைவிட்டார் என்பதைத் தெரிந்து கொண்டான். அந்தச் சதித் திட்டத்தை அவன் காட்டிக் கொடுத்து விடுவான் என்ற அச்சத்தில் அவர்கள் அவனைச் சூழ்ந்தேயிருக்க முயன்றார்கள். ஒரு வார்த்தைகூடப் பேசமாட்டேன் என்று அவுரேலியானோ அவர்களைச் சமாதானப்படுத்தினான். ஆனால் மாஸ்கோட் குடும்பத்தைக் கொல்ல அவர்கள் போயிருந்த இரவில் வாசலில் அவன் காவல் நிற்பதைப் பார்த்தார்கள். அவனுடைய தீர்மானம் திடமானதாக இருந்தது. எனவே திட்டம் காலவரையறை செய்யப்படாத தேதிக்கு ஒத்தி வைக்கப்பட்டது. பியத்ரோ கிரெப்ஸிக்கும் அமரந்தாவுக்குமான திருமணத்தைப் பற்றி உர்சுலா அவனுடைய அபிப்பிராயத்தைக் கேட்டதும் அதுபோன்ற விஷயங்களுக்கான நாட்கள் அவையல்ல என்று அவன் சொன்னதும் அந்த நாட்களில்தாம். ஒரு வார காலம் அவன் ஒரு பழைய மோஸ்தர் துப்பாக்கியைச் சட்டைக்கடியில் வைத்துக்கொண்டிருந்தான். நண்பர்கள்மீதும் ஒருகண் வைத்திருந்தான். பிற்பகலில் வீட்டை ஒழுங்கு படுத்தத் தொடங்கியிருந்த ஹோராசே அர்க்காதியோ – ரெபேக்கா வீட்டுக்குக் காப்பி குடிக்கப் போவான். ஏழு மணி முதல் மாமனாருடன் சதுரங்கம் விளையாடுவான். பகலுணவு நேரத்தில் ஹோராசே அர்க்காதியோவுடன் அரட்டையடிப்பான். ஹோராசே அர்க்காதியோ ஏற்கனவே விடலைத் தடியனாக வளர்ந்திருந்தான். போர் மூளப்போவதில் அவன் மேலும் மேலும் கிளர்ச்சியடைவதை அவுரேலியானோ பார்த்தான். அவனை விட வயது முதிர்ந்த மாணவர்களும் அப்போதுதான் பேச ஆரம்பித்திருக்கும் குழந்தைகளும் கலந்திருக்கும் பள்ளிக்கூடத்திலும் மிதவாதக் காய்ச்சல் பரவியிருந்தது. அருட்தந்தை நிக்கனார் சுட்டுக் கொல்லப் படுவார்; தேவாலயம் பள்ளிக்கூடமாக மாற்றப்படும்; சுதந்திரமான காதல் நடைமுறைப்படுத்தபடும் என்றெல்லாம் பேச்சிருந்தது.

அவுரேலியானோ அவனுடைய வேகத்தைத் தணிக்க முயன்றான். விருப்ப உணர்வையும் விவேகத்தையும் அவனுக்குப் பரிந்துரைத்தான். அவனுடைய பகுத்தறிவுக்கும் எதார்த்த உணர்வுக்கும் காதைப் பொத்திக் கொண்ட அர்க்காதியோ அவனுடைய பலவீனத்தைப் பகிரங்கமாக இகழ்ந்தான். அவுரேலியானோ காத்திருந்தான். கடைசியில், டிசம்பர் மாத ஆரம்பத்தில் உர்சுலா பட்டறைக்குள் வேகமாக நுழைந்தாள். "போர் மூண்டுவிட்டது."

உண்மையில் மூன்று மாதங்களுக்கு முன்பே போர் தொடங்கியிருந்தது. நாடு முழுவதும் ராணுவச் சட்டம் அமலாக்கப்பட்டிருந்தது. அதை அப்போதே தெரிந்துவைத்திருந்தவர் டான் அப்போலினர் மாஸ்கோட் மட்டுமே. ஆனால் ராணுவப் பிரிவு நகரத்தைத் திடீரென்று முற்றுகையிடுவதற்காக வந்துகொண்டிருக்கும் செய்தியைத் தன் மனைவியிடம்கூட அவர் தெரிவிக்கவில்லை. கோவேறுக் கழுதைகள் இழுத்து வந்த இரண்டு பீரங்கிகளுடன் விடியற்காலைக்கு முன்பாகவே ஓசையில்லாமல் அவர்கள் நுழைந்தார்கள். பள்ளிக்கூடத்தில் தலைமையகத்தை அமைத்துக்கொண்டார்கள். மாலை ஆறு மணிக்கு ஊரடங்கு உத்தரவு நடைமுறைப்படுத்தப்பட்டது. முன்னை விடவும் தீவிரமான தேடுதல் வேட்டை வீடு வீடாக நடத்தப்பட்டது. இந்த முறை பண்ணைக் கருவிகளைக்கூட எடுத்துச் சென்றார்கள். டாக்டர் நோகுவேராவை சதுக்கத்துக்கு இழுத்துவந்து மரத்தில் கட்டிவைத்துச் சட்டபூர்வமான வழிமுறை எதுவுமின்றிச் சுட்டுக் கொன்றார்கள். அருட்தந்தை நிக்கனோர் தனது அந்தர அற்புதத்தைச் செய்து காட்டி ராணுவ அதிகாரிகளை வசீகரிக்க முயன்றார். ஆனால் ஒரு சிப்பாயின் துப்பாக்கிக் கட்டைத் தாக்குதலில் மண்டை உடைந்து செத்தார். மிதவாதப் பெருமிதம் மௌனமான அச்சுறுத்தலில் அணைந்து போயிற்று. வெளிறிப் போயும் புதிரானவனாகவும் மாறியிருந்த அவுரேலியானோ மாமனாருடன் சதுரங்க ஆட்டத்தைத் தொடர்ந்துகொண்டிருந்தான். நகரத்தின் சிவில் ராணுவத் தலைவர் என்ற நிகழ்காலப் பட்டப்பெயரில் அறியப்பட்டிருந்தபோதும் டான் அப்போலினர் மாஸ்கோட் வெறும் பொம்மைத் தலைவர்தான் என்பதைப் புரிந்துகொண்டிருந்தான். எல்லா முடிவுகளும் ராணுவத் தலைவரால் எடுக்கப்பட்டன. பொது ஒழுங்கை நிலைநாட்டுவதற்காக எல்லாக் காலை நேரங்களிலும் அசாதாரண வரியை வசூலித்தார். அவருடைய ஆணைக்கு உட்பட்ட சிப்பாய்கள் நால்வர் வெறிநாய்க் கடிபட்ட ஒரு பெண்ணை அவளுடைய குடும்பத்தினரிடமிருந்து இழுத்து வந்து துப்பாக்கிக் கட்டையால் அடித்துக் கொன்றார்கள். முற்றுகை நடைபெற்று இரண்டு வாரங்களுக்குப் பின்னர் ஒரு ஞாயிற்றுக்கிழமை ஜெரினெல்தோ மார்க்கேஸின் வீட்டுக்கு வந்த அவுரேலியானோ தனது வழக்கமான அடக்கத்துடன் ஒரு கோப்பை சர்க்கரையில்லாத காப்பி வேண்டும் என்றான். சமையலறையில் இரண்டு பேர் மட்டும் தனித்திருந்தபோது முன்பு ஒருபோதும் கேட்டிராத விதத்தில் குரலில் அதிகாரத் தொனியை ஏற்றிக்கொண்டு அவுரேலியானோ சொன்னான்: "பையன்களைத் தயார் செய். நாம் போர் தொடங்கப் போகிறோம்." ஜெரினெல்தோ அவனை நம்பவில்லை.

"எந்த ஆயுதங்களுடன்?" என்று கேட்டான். "அவர்களுடையதை வைத்துத்தான்" என்று பதில் சொன்னான் அவுரேலியானோ. செவ்வாய்க்கிழமை நள்ளிரவு பைத்தியக்காரத்தனமான நடவடிக்கையில் முப்பது வயதுக்குக் கீழேயுள்ள இருபத்தியோரு பேர் அவுரேலியானோ புயேந்தியாவின் ஆணைப்படி சமையலறைக் கத்திகளுடனும் கூரான கருவிகளுடனும் ராணுவப் படையை எதிர்பாராமல் தாக்கி முறியடித்தார்கள். ஆயுதங்களைக் கைப்பற்றினார்கள். பள்ளிக்கூட முற்றத்தில் படைத்தலைவரையும் பெண்ணைக் கொலை செய்த நான்கு சிப்பாய்களையும் தூக்கிலேற்றினார்கள்.

துப்பாக்கிப் படையின் வெடியோசை கேட்டுக்கொண்டிருந்த அந்த இரவே அவுரேலியானோ நகரத்தின் சிவில், ராணுவத் தலைவனாக அறிவிக்கப்பட்டான். மணமான போராளிகள் மனைவிகளிடம் விடைபெற்றுக் கொள்ளக்கூட அவகாசமில்லை. மனைவிகளை அவர்களின் சொந்தப் பொறுப்பிலேயே விட்டு வந்தார்கள். அதிகாலையிலேயே புறப்பட்டார்கள். பீதியிலிருந்து விடுபட்டிருந்த மக்கள் அவர்களை ஆரவாரத்துடன் வழியனுப்பினார்கள். மனௌருக்குச் சென்றுகொண்டிருப்பதாகச் சமீபத்திய அறிக்கையில் சொல்லப்பட்ட புரட்சிப் படைத் தலைவர் விக்டோரியோ மேதினாவின் படையுடன் இணைந்துகொள்ளப் புறப்பட்டிருந்தார்கள். புறப்படுவதற்கு முன்பு அவுரேலியானோ அலமாரிக்குள்ளேயிருந்து டான் அப்போலினர் மாஸ்கோட்டை வெளியே கொண்டு வந்தான். "ஓய்வெடுங்கள் மாமனாரே, உங்களுடைய தனிப்பட்ட பாதுகாப்புக்கும் உங்கள் குடும்பத்தின் பாதுகாப்புக்கும் புதிய அரசாங்கம் உத்தரவாதம் அளிக்கிறது" என்று அவரிடம் சொன்னான். முன்தினம் இரவு ஒன்பது மணிவரை தன்னுடன் உட்கார்ந்து சதுரங்கம் ஆடியவனா உயர்ந்த பூட்ஸுகள் அணிந்து தோளில் துப்பாக்கியைத் தொங்கவிட்டு நிற்கும் சதிகாரன் என்று இனம் கண்டுகொள்ள டான் அப்போலினர் மாஸ்கோட் சிரமப்பட்டார்.

"இது பைத்தியக்காரத்தனம் அவுரேலிதோ" என்று கத்தினார்.

அவுரேலியானோ சொன்னான். "பைத்தியக்காரத்தனமல்ல. போர். அப்புறம், இனிமேல் என்னை அவுரேலிதோ என்று அழைக்காதீர்கள். இப்போது நான் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா."

கர்னல் அவுரேலியானோ புயேந்தியா முப்பத்திரண்டு ஆயுதக் கிளர்ச்சிகளைத் திட்டமிட்டார். அவை எல்லாவற்றிலும் தோற்றார். பதினேழு வெவ்வேறு பெண்கள் மூலமாக அவருக்குப் பதினேழு ஆண் பிள்ளைகள் இருந்தார்கள். எல்லாரிலும் மூத்தவன் முப்பத்தைந்து வயதை எட்டுவதற்கு முன்பே ஒரே இரவில் ஒருவர் பின் ஒருவராக அவர்கள் கொல்லப்பட்டார்கள். தனது வாழ்வில் பதினான்கு கொலை முயற்சிகளிலிருந்தும் மறைந்திருந்து மேற்கொள்ளப்பட்ட எழுபத்து மூன்று தாக்குதல் களிலிருந்தும் ஒரு துப்பாக்கிச் சூட்டிலிருந்தும் அவர் தப்பியிருந் தார். ஒரு குதிரையையே கொன்றுவிடுமளவுக்கு நச்சுத் தன்மை யுள்ள ஸ்டிரைக்னின் அவருடைய காப்பியில் கலந்து கொடுத்ததி லிருந்தும் உயிர் தப்பினார். குடியரசின் தலைவர் அவருக்கு அளித்த கௌரவ விருதையும் மறுத்துவிட்டார். ஒரு எல்லையி லிருந்து மறுஎல்லை வரையான பகுதியின் அதிகாரமும் ஆணையும் கொண்ட புரட்சிப்படைத் தலைமைத் தளபதியாக உயர்வு பெற்றிருந்தார். அரசாங்கம் மிக அதிகம் பயப்பட்டது அவருக்குத் தான். ஆனால் அவர் ஒருபோதும் தன்னைப் புகைப்படமெடுக்க விடவில்லை. போர் முடிந்த பிறகு தனக்கு வழங்கப்படவிருந்த ஓய்வூதியத்தையும் அவர் மறுத்துவிட்டார். முதுவயது வரையிலும் மகோந்தாவில் தனது சிறிய பட்டறையில் அவராகவே உற்பத்தி செய்த தங்க மீன்களை விற்றே வாழ்ந்தார். தனது படையின் முன்னணியில் நின்று போர் செய்திருந்தபோதும் அவர் உடலில் ஒரே ஒரு காயம்தான் பட்டிருந்தார். இருபது ஆண்டுகள் நீண்ட உள்நாட்டுப் போரை முடிவுக்குக் கொண்டுவர நீர்லாந்டியா ஒப்பந்தத்தில் கையெழுத்திட்ட பின்பு அவராகவே அந்தக் காயத்தை ஏற்படுத்திக்கொண்டார். தனது மார்பில் அவராகவே துப்பாக்கி யால் சுட்டுக்கொண்டார். உள்ளுறுப்புகளுக்கு எந்தப் பாதிப்பு மில்லாமல் அந்தக் குண்டு முதுகைத் துளைத்து வெளியே வந்தது. எல்லாவற்றையும் கடந்து மகோந்தாவில் அவர் பெயரைத் தாங்கிய ஒரு தெரு மட்டுமே மிஞ்சியிருந்தது. இருப்பினும் தனது இருபத்தி யோரு ஆட்களுடன் தளபதி விக்டோரியோ மேதினாவின் படையுடன் இணைந்துகொள்ள அதிகாலையில் வெளியேறிய போது இது எதையும் தான் எதிர்பார்க்கவில்லை என்று முதுமை காரணமாக மரிப்பதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்பே பிரகடனம் செய்திருந்தார்.

புறப்படும் முன்பு அர்க்காதியோவிடம் சொன்னதெல்லாம் இது மட்டுமே. "நாங்கள் மகோந்தாவை உன் பொறுப்பில்

விட்டுப் போகிறோம். அதை நல்ல நிலையில் உன்னிடம் ஒப்படைத்திருக்கிறோம். நாங்கள் திரும்பி வரும்போது இன்னும் மேம்பட்ட நிலைமையில் வைத்திருக்க முயற்சி செய்"

அந்த அறிவுறுத்தலுக்கு அர்க்காதியோ மிகவும் தனிப்பட்ட வியாக்கியானத்தைக் கற்பித்துக்கொண்டான். மெல்குயாதெஸின் புத்தகங்கள் ஒன்றில் பார்த்த படங்களின் தூண்டுதலில் பின்னலிழையும் தோள்பட்டைச் சின்னமும் கொண்ட மார்ஷலுக்குரிய ராணுவச் சீருடையைத் தயாரித்து அணிந்தான். தூக்கிலிடப்பட்ட ராணுவத் தளபதியின் உடுப்பிலிருந்து பிய்த்தெடுத்த பொன் குஞ்சங்கள் வைத்த உடைவாளை இடுப்பில் செருகிக்கொண்டான். இரண்டு பீரங்கிகளையும் நகர வாயிலில் நிறுத்தினான்; அவனுடைய ஆக்ரோஷமான பேச்சால் வசீகரிக்கப்பட்டிருந்த பள்ளியின் முன்னாள் மாணவர்களைச் சீருடை அணியச் செய்தான். வெளியாட்கள் ஊறு விளைக்க முடியாது என்று காட்டுவதற்காக அவர்களை ஆயுதம் தரித்துத் தெருக்களில் திரிய விட்டான். அது இரண்டு பக்கமும் கூர்மையான உத்தியாக இருந்தது. அடுத்த பத்து மாதங்கள் அரசாங்கம் அந்த நகரத்தைத் தாக்கத் துணியவில்லை. ஆனால் எதிர்ப்புப் போராட்டம் வந்தபோது பெரிய படையைக் கட்டவிழ்த்துவிட்டு அரைமணி நேரத்தில் அதை ஒடுக்கியது. ஆட்சியின் முதல் நாளிலிருந்தே ஆணைகள் பிறப்பிப்பதில் தனக்கிருக்கும் மனச்சாய்வை அவன் வெளிப்படுத்தினான். தன்னுடைய மண்டைக்குள் உதிக்கும் எண்ணங்களை ஒரு நாளைக்கு நான்கு என்ற கணக்கில் உத்தரவுகளாகப் பிறப்பிப்பான். பதினெட்டு வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு ராணுவப் பணியைக் கட்டாயமாக்கினான். மாலை ஆறு மணிக்குப் பிறகு தெருக்களில் நடமாடும் விலங்குகளைப் பொதுச் சொத்தாக அறிவித்தான். வயது முதிர்ந்த ஆண்கள் எல்லாரையும் சிவப்பு நிறக் கைப்பட்டை அணியச் செய்தான். தூக்கிலேற்றிவிடுவதாகப் பயமுறுத்தி அருட்தந்தை நிக்கனாரை பங்கு இல்லத்திற்குள்ளேயே தனிமையிலிருக்க விட்டான். திருப்பலி பூஜை வேளையில் பேசுவதிலிருந்தும் மிதவாதிகளின் வெற்றியைக் கொண்டாடுவதைத் தவிர வேறு சமயங்களில் மணியடிப்பதிலிருந்தும் அவரை விலக்கினான். அவனுடைய நோக்கங்களின் தீவிரத்தைப் பற்றி யாரும் சந்தேகப்படக் கூடாது என்பதற்காக துப்பாக்கிப் படையைச் சதுக்கத்துக்கு அனுப்பி ஒரு திருஷ்டிப் பொம்மையைச் சுடச் செய்தான். முதலில் யாரும் அவனை அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை. வளர்ந்துவிட்டவர்கள் என்ற பாவனையிலிருக்கும் பள்ளிக்கூடச் சிறுவர்கள்தானே என்று இருந்தார்கள். ஆனால் ஒருநாள் இரவு கதாரினோவின் கடைக்கு அர்க்காதியோ போயிருந்தபோது டிரம்பெட் வாசிப்பவன் அவனை ஆர்ப்பாட்டமாக டிரம்பெட் வாசித்து வரவேற்றான். அது வாடிக்கையாளர்களைச் சிரிக்கவைத்தது. அர்க்காதியோ அதிகாரிகளிடம் காட்டும் அவமரியாதைக்காகத் துப்பாக்கியால் அவனைச் சுட்டுத் தள்ளினான். எதிர்த்தவர்களைக் கால்களில் விலங்கு பூட்டிப் பள்ளிக்கூட அறையில் அடைத்து வைத்து ரொட்டியும் தண்ணீரும் மட்டும் கொடுத்தான். அவனுடைய இரக்கமில்லாத இதுபோன்ற செயல்களைக் கேள்விப்படும் ஒவ்வொரு முறையும் உர்சுலா அவனைப் பார்த்துக் "கொலைகாரா" என்று கூச்சலிட்டாள்.

“அவுரேலியானோவுக்கு இது தெரிய வரும்போது உன்னைச் சுட்டுக் கொல்லப் போகிறான். அதைப் பார்த்து முதலில் மகிழ்ச்சியடைவது நான் தான்.” ஆனால் அதனால் எந்தப் பயனும் இருக்கவில்லை. மகோந்தா கண்ட மிகக் கொடூரமான ஆட்சியாளனாக மாறும் வரை அவன் அவசியமற்ற கோபத்துடன் தன்னுடைய குருதிக் கசிவைத் தடுக்கும் கருவியை இறுக்கிப் பிடிப்பதைத் தொடர்ந்தான். ஒரு தருணத்தில் டான் அப்போலினர் மாஸ்கோட் “இந்த வித்தியாசம் அவர்களுக்கு வேண்டியதுதான்” என்றார். “இதுதான் மிதவாத சொர்க்கம்” என்றார். அவர் சொன்னதை அர்க்காதியோ கண்டு பிடித்தான். காவல் ரோந்துக்குத் தலைமை தாங்கிச் சென்றபோது அந்த வீட்டை ஆக்கிரமித்தான். அறைத் தளவாடங்களை நொறுக்கினான். அவருடைய பெண்மக்களைச் சாட்டையால் அடித்தான். அவரை இழுத்து வந்தான். அவமானத்தால் கூச்சலிட்டுக்கொண்டும் மசகில் முக்கிய சாட்டையை வெறியுடன் சுழற்றி வீசிக்கொண்டும் நகரத்துக் குள் அலைந்த உர்சுலா ராணுவத் தலைமையகத்தின் முற்றத்துக்கு வந்தபோது அர்க்காதியோ துப்பாக்கிப் படைக்குச் சுடுவதற்கான உத்தரவைப் பிறப்பிக்க ஆயத்தமாக இருந்தான்.

“வேசி மகனே, தைரியமிருந்தால் சுடு” என்று உர்சுலா கூச்ச லிட்டாள்.

எதையாவது சொல்வதற்கு அர்க்காதியோவுக்கு அவகாசம் வாய்க்கும் முன்பே அவள் சாட்டையின் முதல் வீச்சை விளாசினாள். “கொலைகாரா, தைரியமிருந்தால் சுடு. என்னையும் சுட்டுக் கொல்லு. கெட்ட தாய்க்குப் பிறந்தவனே, அப்படியாவது ஒரு அரக்கனைப் பெற்று வளர்த்த அவமானத்துக்குக் கண்ணீர் விடாமலிருப்பேன்” என்று கூப்பாடு போட்டாள். கொஞ்சம்கூட இரக்கமில்லாமல் சாட்டையால் அடித்து அவனை முற்றத்தின் பின்பகுதிக்கு விரட்டினாள். அர்க்காதியோ கூட்டுக்குள் ஒடுங்கிய நத்தை போல அங்கே சுருண்டான். முன்பு துப்பாக்கியால் சுட்டுப் பழகுவதற்காகக் கட்டிவைத்த திருஷ்டிப் பொம்மை கிழிந்து தொங்கிக்கொண்டிருந்த கம்பத்தில் டான் அப்போலினர் மாஸ்கோட்டைக் கட்டிப் போட்டிருந்தார்கள். அவர் நினைவிழந்து கிடந்தார். படைப் பிரிவிலிருந்த பையன்கள் உர்சுலா தங்களையும் விரட்டுவாள் என்று பயந்து சிதறி ஓடினார்கள். ஆனால் அவள் அவர்களை ஏறிட்டுகூடப் பார்க்கவில்லை. வேதனையாலும் வலியாலும் உறுமிக்கொண்டு அர்க்காதியோவின் சீருடையைக் கிழித்து எறிந்த பின்பே அவனை விட்டாள். டான் அப்போலினர் மாஸ்கோட்டின் கட்டுகளை அவிழ்த்து அவரை வீட்டுக்கு அழைத்துப் போனாள். தலைமையகத்தை விட்டு வெளியேறும் முன் அங்கே அடைத்து வைத் திருந்த கைதிகளையும் விடுவித்தாள்.

அன்று முதல் அந்த நகரத்தை ஆட்சி செய்தது அவளே. ஞாயிற்றுக் கிழமை பலி பூசையை மீண்டும் தொடங்கச் செய்தாள். சிவப்புப் பட்டையை உடுத்தும் பழக்கத்தை ஒழித்தாள். கிறுக்குத்தனமான ஆணைகளைப் பிறப்பிப்பதை ரத்து செய்தாள். எனினும் வலிமை யானவளாக இருந்தும் தன் துரதிருஷ்டத்துக்காக அப்போதும்

அழுதாள். மிகுந்த தனிமையை உணர்ந்தாள். செந்தவிட்டு மரத்தின் அடியில் மறந்துவிடப்பட்ட கணவரின் பயனற்ற துணையைத் தேடிப் போனாள். "நாம் எந்த நிலைமைக்கு வந்து சேர்ந்திருக்கிறோம் என்று பாருங்கள்" என்று ஜூன் மாத மழையில் இடிந்து விழ அச்சுறுத்திக் கொண்டிருக்கும் பந்தலுக்குள் அமர்ந்து அவரிடம் சொல்லுவாள். "காலியாகக் கிடக்கும் வீட்டைப் பாருங்கள். நம்முடைய பிள்ளைகள் உலகம் முழுவதிலுமாகச் சிதறிப் போனார்கள். ஆரம் பத்தில் இருந்தது போல நாம் இருவர் மட்டும் தன்னந்தனியாகி விட்டோம்." பிரக்ஞை யின்மையின் பாதாளத்தில் வீழ்ந்திருந்த ஹோசே அர்க்காதியோ புயேந்தியா அந்தப் புலம்பல்களைக் கேட்கவில்லை. மனப்பிறழ்வின் தொடக்கத்தில் தன்னுடைய தேவைகளை அவர் லத்தீன் வார்த்தை களில் வெளிப்படுத்துவார். அமரந்தா உணவு கொண்டுவரும்போது அவளிடம் எது தன்னை மிகவும் தொந்தரவு செய்கிறது என்பது பற்றித் தெளிவாகப் பேசுவார். அவள் கொண்டு வரும் பானங்களையும் பதார்த்தங்களையும் ஏற்றுக்கொள்ளுவார். ஆனால் உர்சுலா புலம்ப வந்தபோது அவர் எதார்த்த உலகத்துடனான எல்லாத் தொடர்பு களையும் இழந்திருந்தார். அவரை முக்காலியில் உட்காரவைத்துக் குளிப்பாட்டிக்கொண்டே குடும்பச் செய்திகளைச் சொல்வாள். சோப்பில் முக்கிய பிரஷ்ஷால் அவர் முதுகைத் தேய்த்து விட்டுக்கொண்டே "அவுரேலியானோ போருக்குப் போய் நான்கு மாதங்களுக்கு மேல் ஆகிவிட்டது. அவனைப் பற்றி எந்தத் தகவலும் இல்லை" என்பாள். "ஹோசே அர்க்காதியோ திரும்பி வந்துவிட்டான். பெரிய ஆளாகி விட்டான். உங்களைவிடவும் உயரமாக இருக்கிறான். உடம்பு முழுக்கப் பச்சை குத்தியிருக்கிறான். ஆனால் அவன் நம் குடும்பத்துக்கு அவமானத்தைத்தான் கொண்டு வந்திருக்கிறான்." இந்தக் கெட்ட செய்திகளால் தன் கணவர் வருத்தப்படுவது போலத் தெரிகிறது என்று அவளாகவே நினைத்தாள். ஆகவே அவரிடம் பொய் சொல்லத் தீர்மானித்தாள். அவர் கழித்திருந்த மலத்தின் மேல் சாம்பலைத் தூவி மண்வாரியில் எடுத்து அப்புறப்படுத்தியபடியே "நான் சொல்லப் போவதைக் கேட்டால் நீங்கள் நம்பமாட்டீர்கள்" என்றாள். "ஹோசே அர்க்காதியோவும் ரெபேக்காவும் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்பது கடவுளின் சித்தமாக இருந்தது. இப்போது அவர்கள் இரண்டு பேரும் மிக மகிழ்ச்சியாக இருக்கிறார்கள்." பொய் சொல்லுவதில் அவள் கடைபிடித்த உண்மையுணர் வால் அந்தப் பொய்கள் அவளுக்கே ஆச்சரியமளிப்பவையாக இருந்தன. "அர்க்காதியோ இப்போது பெரிய ஆளாகிவிட்டான். வீரனும் குஞ்சம் வைத்த சீருடையில் பார்க்க வசீகர மான இளைஞனுமாகிவிட்டான்" என்றாள். ஹோசே அர்க்காதியோ புயேந்தியா ஏற்கனவே எந்தக் கவலையும் எட்டாத எல்லையைக் கடந்துவிட்டிருந்தார் என்பதால் அது செத்துப்போன ஒருவரிடம் பேசுவது போலவே இருந்தது. ஆனால் அவர் அமைதியாகவும் எதிலும் பட்டுக்கொள்ளாமலும் இருப்பதாகத் தோற்றமளிப்பதிலிருந்து அவரை விடுவிப்பதற்காக அவள் வற்புறுத்திப் பேசிக்கொண்டிருந்தாள். அவர் முக்காலியைவிட்டு அசையக்கூட இல்லை. வெயிலுக்கும் மழைக்கும் தன்னைத் திறந்து கொடுத்தபடி அங்கேயே இருந்தார். பிணைப்பு

வார்களுக்கு அவசியமில்லாமல் ஆகியிருந்தது. தன்னைத்தானே ஆட்சி செய்து கொள்ளும் மாமனிதனை வெளிப்படையான பிணைப்பால் செந்தவிட்டு மரத்தில் கட்டிவைக்கத் தேவையில்லை என்பது போல இருந்தார். என்றென்றும் நீண்டிருக்கககூடியதாகக் குளிர்காலம் தொடங்கிய ஆகஸ்ட் மாதத்தில் உர்சுலா உண்மை போலத் தொனிக்கும் ஒரு செய்தியை அவரிடம் சொன்னாள்:

"நீங்கள் நம்புவீர்களோ என்னமோ, அதிர்ஷ்டம் நம்மேல் பொழிந்துகொண்டே இருக்கிறது. அமரந்தாவும் அந்தப் பியானோக்கார இத்தாலியனும் திருமணம் செய்துகொள்ளப் போகிறார்கள்."

உண்மையில், உர்சுலாவின் பாதுகாப்பில் அமரந்தாவும் பியத்ரோ கிரெஸ்பியும் தங்கள் காதலில் ஆழ்ந்திருந்தார்கள். இந்த முறை அவனுடைய வருகைகளைக் கண்காணிக்க வேண்டிய அவசியத்தைப் பற்றி அவள் யோசிக்கவில்லை. அது அந்தி நேரக் காதலாக இருந்தது. சட்டையின் பொத்தான் துவாரத்தில் ஒரு கார்டேனியப் பூவைச் செருகி வைத்துக்கொண்டு மாலையில் இத்தாலியன் வருவான். அமரந்தாவுக்காக பெத்ரார்க்கின் சானெட்களை* மொழிபெயர்த்துச் சொல்லிக் கொடுப்பான். ஓரிகானோப் பூக்களும் ரோஜா மலர்களும் மூச்சுத் திணறவைக்கும் முற்றத்தில் அவர்கள் உட்கார்ந்திருப்பார்கள். அவன் வாசித்துக் கொண்டிருக்கும்போது அவள் வலைப் பின்னல் போட்டுக் கொண்டிருப்பாள். யுத்தத்தின் அதிர்ச்சிகளோ துயரச் செய்திகளோ அவர்களை மாற்றவில்லை. கொசுக்கள் வரவேற்பறைக் குள் அடைக்கலம் தேடச் செய்யும்வரைக்கும் உட்கார்ந்திருப்பார்கள். அமரந்தாவின் நுட்ப உணர்வும் மூடிவைத்த இனங்கண்டுகொள்ளும் திறமையும் தனது வருங்காலக் கணவனைப் பற்றிய கண்ணுக்குத் தெரியாத வலையை அவளுக்குள் இழுத்துவிட்டிருந்தன. அது அவன் தனது மோதிரமணியாத வெளிறிய விரல்களால் அவளைத் தொடு வதைத் தவிர்த்தன. வீட்டை விட்டு அவனை எட்டு மணிக்குப் புறப்படச் செய்தன. பியத்ரோ கிரெஸ்பிக்கு இத்தாலியிலிருந்து வந்த அஞ்சல் அட்டைகளால் அவர்கள் இருவரும் சேர்ந்து ஒரு நேர்த்தியான ஆல்பத்தைத் தயாரித்திருந்தார்கள். ஆளில்லாத பூங்காக்களில் காதலர்கள் இருக்கும் படங்கள், அம்புகளால் துளைக்கப்பட்ட இதயங்களின் படங்கள், தங்க நாடாக்களை அலகில் கவ்வியிருக்கும் புறாக்களின் படங்கள் எல்லாம் இருந்தன. அந்த அட்டைகளைப் புரட்டிப் பார்க்கும்போது பியத்ரோ கிரெஸ்பி "ஃபிளாரென்சிலிருக்கும் இந்தப் பூங்காவுக்கு நான் போயிருக்கிறேன். கையை நீட்டினால் போதும் பறவைகள் தீனிக்காகப் பறந்துவந்து உட்காரும்" என்பான். சில சமயங்களில், வெனிஸ் நகரத்தின் நீர்வண்ண ஓவியங்களைப் பார்க்கும் போது கால்வாய்களிலிருந்து எழும் சேற்று வாடையையும் அழுகிய கிளிஞ்சல்களின் துர்நாற்றத்தையும் நினைவேக்கம் பூக்களின்

---

* பெத்ராக்கின் சானெட்கள் – இத்தாலியக் கவிஞா பெதராாக எழுதிய பதினானகு வரிப பாடலகள். 'மனிதாபிமானததின தநதை' எனறு பாராட்டபபட்ட ஃபரானசெஸகோ பெதரார்க பதினானகாம நூறறாணடில வாழநதவா.

நறுமணமாக மாற்றும். வசீகரமான ஆண்களும் அழகான பெண்களும் மழலை மொழியில் பேசித் திரியும் பழங்கால நகரங்களில் – அவை இப்போது சிதிலமாகிப் பூனைகளின் கத்தல்கள் மட்டுமே அங்கே எஞ்சியிருக்கின்றன – அமரந்தா இரண்டாவது தாய்நாட்டைத் தேடிப் பெருமூச்சுவிடுவாள்; சிரிப்பாள். ரெபேக்காவின் அழுத்தமான வருடலே காதல் என்று குழம்பியிருந்த பின்பு, அந்தக் காதலைத் தேடிச் சமுத்திரத்தைக் கடந்த பின்னர் பியத்ரோ கிரெஸ்பி காதலைக் கண்டடைந்திருந்தான். மகிழ்ச்சி வளமையுடன் சேர்ந்தே வந்தது. அந்த நாட்களில் அவனுடைய கிடங்கு பெரும் கூட்டத்தால் நிரம்பி யிருந்தது. விநோதப் பொருள்களின் காட்சிக்கூடமாக இருந்தது. இசைப்பொறியின் கச்சேரி மூலம் நேரத்தைச் சொல்லும் ஃப்ளாரென்ஸ் மணிக் கோபுரத்தின் மாதிரிகள், சோரெண்டோவிலிருந்து வந்த இசைப் பேழைகள், சீனாவிலிருந்து தருவித்த திறந்தவுடன் ஐந்து ஸ்வரங்களில் மெல்லிசை பாடும் தொகுப்புகள் இருந்தன. கற்பனை செய்ய முடிந்த எல்லா இசைக் கருவிகளும் இயந்திர விளையாட்டுச் சாதனங்களும் அங்கே இருந்தன. அவனுடைய தம்பி புருனோ கிரெப்ஸி கடைக்குப் பொறுப்பாக இருந்தான். ஏனெனில் பியத்ரோ கிரெஸ்பிக்குத் தனது இசைப் பள்ளியைக் கவனிக்கப் போதுமான நேரமே கிடைக் காமல் இருந்தது. அவனுக்கு நன்றி சொல்ல வேண்டும். கடையிலிருந்த சிறு விளையாட்டுப் பொருட்களின் பளபளப்பால் துருக்கித் தெருவே மெல்லிசைச் சோலையாக மாறியிருந்தது. அர்க்காதியோவின் அராஜகங் களையும் யுத்தத்தின் கொடுங்கனவுகளையும் அங்கே மறக்க முடிந்தது. ஞாயிற்றுக்கிழமை பலிபூசையை மறுபடியும் ஆரம்பிக்க உர்சுலா உத்தரவிட்டதும் பியத்ரோ கிரெஸ்பி ஒரு ஜெர்மன் ஹார்மோனியத்தைத் தேவாலயத்துக்கு அன்பளிப்பாகக் கொடுத்தான். சிறுவர்கள் இசைக் குழுவை ஒருங்கிணைத்தான். அருட்தந்தை நிக்கனாரின் அமைதியான சடங்குக்கு மேலும் மதிப்பு ஏற்படுத்தும் வகையில் ஒரு கிரகோரிய அரும் பொருட்களஞ்சியத்தையும் உருவாக்கிக் கொடுத்தான். அமரந்தா வுக்கு அவன் அதிருஷ்டசாலித் துணையாக இருப்பான் என்பதில் யாருக்கும் சந்தேகமில்லை. தங்கள் உணர்ச்சிகளைப் பலவந்தப்படுத்தாமல் மனங்கள் இட்டுச் செல்லும் இயல்பான ஓட்டத்துக்கு அவர்கள் தங்களை ஒப்புவித்திருந்தார்கள். எனவே திருமணத்துக்குத் தேதி குறிப்பிட்டால் போதும் என்ற புள்ளிக்கு வந்து சேர்ந்திருந்தார்கள். அவர்களுக்கு இடைஞ்சல்கள் எதுவும் இருக்கவில்லை. மீண்டும் மீண்டும் திருமண நாளை ஒத்தி வைத்ததன் மூலம் ரெபேக்காவின் விதியைத் திசை திருப்பியதைப் பற்றி உர்சுலா தனக்குள்ளேயே அவளைக் குற்றம் சாட்டினாள். மேலும் பச்சாத்தாபத்துக்குரியதாக்க அவள் விரும்ப வில்லை. யுத்தத்தின் அழிவுகளாலும் அர்க்காதியோவின் கொடூரத்தாலும் ஹோசே அர்க்காதியோவும் ரெபேக்காவும் வீட்டைவிட்டு விரட்டப் பட்டதாலும் ரெமேதியோஸின் மரண இரங்கல் பின்னணிக்குத் தள்ளப்பட்டது. தன்னை ஏறத்தாழ ஒரு தகப்பனாக எண்ணிப் பாசம் காட்டும் அவுரேலியானோ அந்தத் திருமணத்தோடு தங்கள் மூத்த மகனாகக் கருதப்படுவான் என்று பியத்ரோ கிரெஸ்பி குறிப்பாகச் சொன்னான். அவை எல்லாமும், தான் ஒரு இதமான மகிழ்ச்சியை

நோக்கிச் செல்வதாகவே அமரந்தாவை யோசிக்கச் செய்தன. ரெபேக்காவைப் போல அல்லாமல் சிறு பதற்றத்தைக்கூட அவள் வெளிக்காட்டவில்லை. அதே நிதானத்துடன் மேஜை விரிப்புகளுக்குச் சாயமேற்றினாள். மகத்தான வலைப் பின்னல்களைப் பின்னினாள். மயில்களின் உருவங்களை எம்பிராய்டரி செய்தாள். மனத்தின் வேட்கை களையும் உடலின் தவிப்புகளையும் தாங்க முடியாமல் பியத்ரோ கிரெஸ்பி தத்தளிப்பதைப் பார்த்துக்கொண்டிருந்தாள். பாழாய்ப்போன அக்டோபர் மாத மழைத் தினங்களுடன் அவளுடைய நாளும் வந்தது. பியத்ரோ கிரெஸ்பி அவளுடைய மடியிலிருந்த தையல் கூடையை எடுத்து ஒதுக்கி வைத்துவிட்டு "நாம் அடுத்த மாதம் திருமணம் செய்துகொள்ளலாம்" என்றான். அவனுடைய சில்லிட்ட விரல்களின் ஸ்பரிசத்தில் அவளுக்கு நடுக்கம் ஏற்படவில்லை. கைகளைச் சிறுபிராணி போலப் பின்னுக்கு இழுத்துக்கொண்டு வேலையைத் தொடர்ந்தாள்.

"அவ்வளவு சாதாரணமாகச் சொல்லாதே கிரெஸ்பி" என்று புன்னகைத்தாள். "செத்தே போவதாக இருந்தாலும் நான் உன்னைத் திருமணம் செய்துகொள்ள மாட்டேன்." பியத்ரோ கிரெஸ்பி சுயக் கட்டுப்பாட்டை இழந்தான். வெட்கமில்லாமல் அழுதான். ஏமாற்றத்தால் கைவிரல்களையே கிட்டத்தட்ட முறித்துக்கொண்டான். ஆனாலும் அவளைச் சம்மதிக்கச் செய்ய அவனால் முடியவில்லை. அமரந்தா சொன்னதெல்லாம் "உங்கள் நேரத்தை வீணாக்காதீர்கள்" என்பதுதான். "நீங்கள் உண்மையாகவே என்னை விரும்பினால் இனி இந்த வீட்டுக்குள் கால் வைக்காதீர்கள்" என்றாள். அவமானத்தால் தனக்குப் பைத்தியம் பிடித்துவிடுமோ என்று உர்சுலா பயந்தாள். பியத்ரோ கிரெஸ்பி அவனுடைய சமரசக் கோரிக்கைகள் எல்லாவற்றையும் காலி செய்தான். உர்சுலாவின் மடியில் கிடந்து ஒருநாள் பிற்பகல் முழுவதும் அழுதான். அவனைத் தேற்றுவதற்காகத் தன்னுடைய ஆன்மாவை விற்கவிருந்தாள். மழை பெய்யும் இரவுகளில், அமரந்தாவின் படுக்கையறையில் வெளிச்சம் தென்படக் காத்திருந்தபடி அவன் குடையுடன் அந்த வீட்டருகில் அலைந்துகொண்டிருந்தான். அந்த நாட்களில் அணிந்தது போல அதன் பிறகு அவன் நேர்த்தியாக உடை அணியவில்லை. ஒரு பேரரசனின் துன்புற்ற தோற்றம் ஒரு விசித்திரக் கம்பீரத்தைக் கொடுத்தது. அமரந்தாவுடன் முற்றத்தில் உட்கார்ந்து தையல் வேலை செய்யும் தோழிகளிடம் அவளைச் சம்மதிக்கச் சொல்லும்படி யாசித்தான். வியாபாரத்தைப் புறக்கணித்தான். கடையின் பின் பகுதியில் உட்கார்ந்து பக்குவமில்லாத குறிப்புகளை எழுதுவான். அதைப் பூவிதழ்களுடனும் பாடம் செய்த பட்டாம்பூச்சிச் சிறகுகளுடனும் சேர்த்து அமரந்தாவுக்கு அனுப்புவான். அவள் அதைத் திறந்தே பார்க்காமல் திருப்பி அனுப்புவாள். மணிக் கணக்காக அடைந்து கிடந்து ஓயாமல் ஸிதார் வாசித்தான். ஒரு நாள் இரவு அவன் பாடினான். ஸிதார் உண்டு பண்ணிய தேவ மயக்கத்திலிருந்து மகோந்தா விழித்து எழுந்தது. இந்த உலகத்தைவிட அந்த இசை அதீதத் தகுதியுடையதாகவே இருந்தது. அதனுடன் இழைந்த குரலில் தெரிந்ததைப் போல உலகத்தில் வேறு யாராலும் காதலை உணர்ந்திருக்க முடியாது. அமரந்தாவின் அறையைத் தவிர

நகரத்தில் எல்லா ஜன்னல்களிலும் விளக்கு அணைவதைப் பியத்ரோ கிரெஸ்பி பார்த்தான். நவம்பர் மாதம் இரண்டாம் தேதி, நீத்தார் நினைவு நாள் அன்று கடையைத் திறந்த அவன் தம்பி எல்லா விளக்குகளும் எரிந்துகொண்டிருந்ததையும் எல்லா இசைப் பேழைகளும் திறந்து கிடந்ததையும் எல்லாக் கடிகாரங்களும் முடிவில்லாமல் அடித்துக்கொண்டிருந்ததையும் அந்தப் பைத்தியக்காரக் கச்சேரியின் நடுவே பின்பக்கத்தில் கிடந்த மேஜை அருகில் ஒரு சவரக்கத்தியால் மணிக்கட்டை வெட்டிக் கைகளைப் பென்சாயின் நிரப்பிய பாத்திரத்தில் மூழ்கவிட்டிருந்த பியத்ரோ கிரெஸ்பியையும் பார்த்தான்.

மரித்தோருக்கான இரங்கல் தன் வீட்டில் நடத்தப்படும் என்று உர்சுலா உத்தரவிட்டாள். புனிதப்படுத்தப்பட்ட இடத்தில் மதச் சடங்குகளை நடத்துவதற்கும் நல்லடக்கம் செய்வதற்கும் அருட்தந்தை நிக்கனார் எதிர்ப்பாக இருந்தார். உர்சுலா அவரை நிராகரித்தாள். “எனக்கோ உங்களுக்கோ புரியாத அர்த்தத்தில் அவன் ஒரு புனிதனாகவே இருந்தான். அதனால் உங்கள் விருப்பத்தை மீறி நான் அவனை மெல்குயாதெஸின் கல்லறைக்குப் பக்கத்தில் அடக்கம் செய்யப் போகிறேன்” என்றாள். மொத்த நகரத்தின் ஆதரவுடன் ஆடம்பரமான இறுதிச் சடங்காக நடத்தவும் செய்தாள். அமரந்தா படுக்கையறையைவிட்டு நகரவில்லை. படுக்கையிலிருந்தபடியே உர்சுலாவின் அழுகையையும் வீட்டுக்கு வந்துபோன ஏராளமானவர்களின் காலடி ஓசைகளையும் முணுமுணுப்புகளையும் கேட்டாள். துக்கம் விசாரிக்க வந்தவர்களின் விசும்பல்களையும் பின்னர் மிதித்து நசுக்கப்பட்ட மலர்களின் வாசனை வீசும் நீண்ட மௌனத்தையும் கவனித்தாள். மாலை நேரங்களில் பியத்ரோ கிரெஸ்பியின் லவெண்டர் சுவாசத்தை நெடுங்காலம் முகர்ந்தாள். எனினும் சித்தப் பிரமைக்கு ஆட்பட்டுவிடாத மன உறுதி அவளுக்கு இருந்தது. உர்சுலா அவளைக் கைவிட்டாள். அமரந்தா சமையல் அறைக்குள் புகுந்து நிலக்கரி கனன்றுகொண்டிருந்த குமுட்டி அடுப்புக்குள் கைவிட்டுப் பொசுக்கிக் கொண்ட அந்தப் பிற்பகலில் பரிதாபப்பட்டு அவளை ஏறிட்டுக்கூடப் பார்க்கவில்லை. அமரந்தா அந்த வலியை அதிகம் உணரவில்லை. ஆனால் தனது சொந்த அடையாளமுள்ள சதையின் கொலைக் குணத்தைத்தான் முகர்ந்தாள். அது அவளுடைய இரக்கமின்மைக்குக் கிறுக்குத்தனமான சிகிச்சையாக இருந்தது. பல நாட்கள் முட்டையின் வெள்ளைக் கரு நிரப்பிய பானையில் கையை முக்கிக்கொண்டு வீட்டுக்குள் நடந்தாள். காயங்கள் முற்றிலும் ஆறியபோது முட்டையின் வெள்ளைப் படிவங்கள் அவளுடைய புண்பட்ட மனத்தைக் காட்டுவதாகத் தோன்றின. அந்தத் துயர நிகழ்ச்சி விட்டு வைத்த வெளியடையாளம் கை பொசுங்கிய இடத்தில் கட்டின் மேல் போட்டிருந்த கருப்பு நிறச் சல்லாத்துணி மட்டுமே. அதை அவள் சாகும் வரை போட்டிருந்தாள்.

பியத்ரோ கிரெஸ்பியின் மரணத்துக்கு அரசுமுறை இரங்கல் அறிவித்ததன் மூலம் அர்க்காதியோ தனது பெருந்தன்மையை அபூர்வமாகக் காட்டிக்கொண்டான். வழி தவறிப்போன ஆட்டுக்

குட்டியின் மறுவருகை என்று உர்சுலா அதை வியாக்கியானம் செய்தாள். ஆனால் அவள் தப்பாகப் புரிந்துகொண்டிருந்தாள். அவள் அர்க்காதியோவை இழந்தது அவன் ராணுவச் சீருடை அணிந்த போதல்ல; தொடக்கத்திலிருந்தே. ரெபேக்காவை வளர்த்தது போலத்தான் மகனாக அவனையும் எந்தச் சலுகையோ பாரபட்சமோ இல்லாமல் வளர்த்திருந்ததாக நினைத்தாள். அப்படியெல்லாம் இருந்தும் உறக்க மின்மைக் கொள்ளை நோய்க் காலத்திலும் உர்சுலா பணம் சம்பாதிக்கப் பாடுபட்டுக்கொண்டிருந்ததன் நடுவிலும் ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவின் மனப்பிறழ்வின்போதும் அவுரேலியானோவின் துறவி லும் அமரந்தாவுக்கும் ரெபேக்காவுக்கும் இடையில் முடிவில்லாத பகை நிலவியபோதும் அர்க்காதியோ தனிமையான குழந்தையாகவும் பயந்த குழந்தையாகவுமே இருந்தான். பிற காரியங்களைப் பற்றி யோசித்துக்கொண்டே ஒரு அந்நியனுக்குச் செய்வது போலத்தான் அவுரேலியானோ அவனுக்கு எழுதவும் படிக்கவும் கற்றுக் கொடுத்தான். விசிட்டேசியா எடுத்துக்கொள்ளும்படி தூக்கி எறிய வைத்திருந்த தன்னுடைய உடைகளைத்தான் அவனுக்குக் கொடுத்தான். காலுக்குப் பெரிதான ஷூக்களும் ஒட்டுப் போட்ட கால்சராய்களும் பெண்களைப் போன்ற புட்டங்களும் அர்க்காதியோவுக்குத் தொல்லையாக இருந்தன. விசிட்டேசியாவிடமும் கடோரிடமும் அவர்களுடைய மொழியில் கருத்துப் பரிமாற்றம் செய்துகொண்டது போலச் சிறப்பாக மற்ற யாருடனும் அவனால் வெற்றிகரமாகத் தொடர்புகொள்ள முடிய வில்லை. மெல்குயாதெஸ் மட்டும்தான் அவன் மேல் உண்மையான அக்கறை காட்டிய ஒரே ஒரு ஆள். புரிந்துகொள்ள முடியாத தன் னுடைய புத்தகங்களை வாசித்துக் கேட்கச் செய்தான். புகைப்படக் கலையின் பாடங்களைக் கற்பித்தான். ரகசியமாகவும் மனம் கசந்தும் அவன் எவ்வளவு அழுதான் என்றோ மெல்குயாதெஸின் பக்கங்களை வீணாகப் படித்து அவனை மீண்டும் பிறப்பிக்க முயன்றான் என்றோ யாரும் கற்பனை செய்ததில்லை. பள்ளிக் கூடத்தில் மாணவர்கள் அவனைக் கவனித்தார்கள்; மதித்தார்கள். பின்பு அதிகாரம் பெற்றதும் அவனுடைய மேன்மை பொருந்திய சீருடையையும் அவன் பிறப்பித்த எண்ணற்ற உத்தரவுகளையும் மதித்தார்கள். அவனைப் பழைய கசப்பின் சுமையிலிருந்து மீட்டார்கள். ஒரு நாள் இரவு காதரினோவின் கடையில் ஒருவன் துணிச்சலாக அவனைப் பார்த்து "உன் பெயரில் வைத்திருக் கும் பின்பகுதிக்கு நீ தகுதியானவனல்ல" என்று சொன்னான்.

"நான் ஒரு புயேந்தியாவல்ல என்பது எனக்குக் கிடைத்த மாபெரும் கௌரவம்." அவனுடைய பிறப்பின் ரகசியத்தைப் பற்றித் தெரிந்தவர்கள் அவனுக்கு அந்த விஷயம் தெரிந்தேயிருக்கிறது என்று நினைத்தார்கள். ஆனால் உண்மையில் அவன் ஒருபோதும் அதைத் தெரிந்துகொள்ள வில்லை. இருட்டு அறையில் அவனுடைய ரத்தத்தைச் சூடேற்றியவ ளான பிலர் தெர்னேரா – அவனுடைய தாய் – முதலில் ஹோசே அர்க்காதியோவையும் பின்னர் அவுரேலியானோவையும் அலைக் கழித்தது போலவே அவனையும் அலைக்கழித்தாள். தனது கவர்ச்சியை யும் சிரிப்பின் பிரகாசத்தையும் இழந்திருந்தபோதும் அவளுடைய புகை மணத்தை மோப்பம் பிடித்து அவள் எங்கே இருக்கிறாள்

என்பதை அவனால் தேடி அடைய முடிந்தது. போருக்குச் சிறிது காலம் முன்பு, அவள் வழக்கம் போலத் தன் இளைய மகனைப் பள்ளியிலிருந்து அழைத்து வரும் சமயம் தாண்டியபோது அர்க்காதியோ அவளுடைய அறையில் அவளுக்காகக் காத்துக்கொண்டிருந்தான். அந்த அறையில்தான் அவன் மத்தியானத் தூக்கம் போடுவதை வழக்கமாக்கியிருந்தான். பின்னர் தனது உடைமைகளையும் அங்கேதான் வைத்தான். முற்றத்தில் குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தபோது பிலர் தெர்னேரா அந்த வழியாகத்தான் வருவாள் என்பதைத் தெரிந்து வைத்துப் பதற்றத்தில் நடுங்கியபடியே கித்தான் தொட்டிலில் காத்திருந்தான். அவள் வந்தாள். அர்க்காதியோ அவள் மணிக்கட்டைப் பற்றித் தொட்டிலுக்குள் இழுக்க முயன்றான். பிலர் தெர்னேரா திகிலுடன் “என்னால் முடியாது, என்னால் முடியாது” என்றாள். “உன்னை மகிழ்ச்சியடையச் செய்ய எவ்வளவு விரும்புகிறேன் என்பதை உன்னால் கற்பனை செய்யக்கூட முடியாது. ஆனால், கடவுள் சாட்சியாக என்னால் அதைச் செய்ய முடியாது.” அர்க்காதியோ அவளுடைய இடுப்பைப் பிடித்துப் பாரம்பரியமான உடல் வலுவுடன் தன்னுடன் நெருக்கினான். அவளுடைய சருமத்தைத் தீண்டியதும் உலகமே காணாமல் போனது போல உணர்ந்தான். “புனித வேஷம் போடாதே. நீ ஒரு வேசி என்று எல்லாருக்கும் தெரியும்” என்றான். அவளுடைய அவமானகரமான விதி தூண்டிவிட்டதில் அருவருப்பிலிருந்து விடுபட்டாள்.

“குழந்தைகள் பார்த்துவிடுவார்கள்” என்று முணுமுணுத்தாள். “இன்று இரவு கதவைத் தாழ்போடாமல் விட்டால் வசதி”

அர்க்காதியோ, அன்று இரவு, தனது உறக்க மஞ்சத்தில் காய்ச்சலில் நடுங்கிக்கொண்டே அவளுக்காகக் காத்திருந்தான். அதிகாலையின் முடிவில்லா நேரங்களில் விழித்திருந்த சுவர்க் கோழிகளின் ரீங்காரத்தையும் நீர்நாரைகளின் மாற்ற முடியாத தொணதொணப்பையும் கவனித்தபடி தூங்காமல் காத்திருந்தான். நேரம் ஆகஆகத் தான் ஏமாற்றப்பட்டிருப்பதாக நம்பினான். பதற்றம் கோபமாக வெடிக்கத் தொடங்கியபோது திடீரென்று கதவு திறந்தது. ஒரு சில மாதங்களுக்குப் பிறகு துப்பாக்கிப் படையை எதிர்கொண்டபோது, வகுப்பறைக்குள் அலைந்த கால்களையும் பெஞ்சுகளிலும் கடைசியில் அறை நிழலில் ஒண்டியிருந்த உடல் திரட்சியிலும் முட்டி மோதிக்கொண்டதையும் அவனுடையதல்லாத ஒரு இதயம் விம்மி வெளியேற்றிய பெருமூச்சையும் அர்க்காதியோ நினைவுகூர்ந்தான். கையை நீட்டியபோது ஒரே விரலில் இரண்டு மோதிரங்கள் அணிந்த கை, இருட்டில் தடுமாறுவதைக் கண்டான். சிரைகளின் அமைப்பை, தனது துரதிருஷ்டத்தின் நாடித் துடிப்பை, உணர்ந்தான். அந்த ஈரமான உள்ளங்கையில் கட்டை விரலின் அடிவாரத்திலேயே சாவின் கூர்நகங்களால் ஆயுள் ரேகை முறித்துத் தள்ளப்பட்டிருந்ததை உணர்ந்தான். தான் காத்துக் கொண்டிருந்த பெண் அவளல்ல என்று புரிந்துகொண்டான். அவள் உடலில் புகை வாடைக்குப் பதிலாக மலர்க் களிம்பின் சுகந்தம் இருந்தது. அவளுடைய முலைகள் தட்டையாக, ஆணின் முலைக்

காம்புகளுடன் இருந்தது. பிறப்புறுப்பு கல்லைப் போலவும் வாதுமைப் பருப்பைப் போல வட்டமாகவும் இருந்தது. அனுபவமின்மையின் பரவசத்தில் குழம்பிய மென்மையுடன் இருந்தது. அவள் கன்னிப்பெண். வழக்கத்திலில்லாத பெயர், சாந்தா சோபியா தெ லா பியாதாத், வைத்துக்கொண்டிருந்தாள். அவள் அப்போது என்ன செய்து கொண்டிருந்தாளோ அதைச் செய்வதற்காகப் பிலர் தெர்னேரா, அவளுடைய பெற்றோருக்குத் தன்னுடைய வாழ்நாள் சேமிப்பின் பாதியான ஐம்பது பெசோக்களைக் கொடுத்திருந்தாள். தன்னுடைய பெற்றோரின் சிறுஉணவு விற்பனைக் கடையில் அர்க்காதியோ அவளைப் பலமுறை பார்த்திருக்கிறான். தேவையான சமயங்களைத் தவிர மற்ற நேரங்களில் ஒருபோதும் தன்னுடைய இருப்பை முழுமையாகக் காட்டாத நல்ல குணம் அவளிடமிருந்ததால் அவளை நன்றாகப் பார்க்க அவனால் முடியவில்லை. ஆனால் அந்த நாளிலிருந்து அக்குளின் வெதுவெதுப்பில் பூனைக் குட்டியைப் போல அவளிடம் சுருண்டுகொண்டான். பகலுறக்கச் சமயத்தில், பெற்றோர்களின் சம்மதத்துடன் பள்ளிக்கூடத்துக்குப் போவாள். அதற்காக பிலர் தெர்னேரா தனது சேமிப்பின் இன்னொரு பாதியை அந்தப் பெற்றோருக்குக் கொடுத்திருந்தாள். பின்னர், அரசாங்கப் படைகள் காம விளையாட்டுகளுக்குப் பயன்படுத்துகிறார்கள் என்று அந்த இடத்திலிருந்து அவர்களை வெளியேற்றியபோது கடைக்குப் பின்னால் இருந்த டின் குவியல்களுக்கும் சோள மூட்டைகளுக்கும் இடையில் அதைத் தொடர்ந்தார்கள். நகரத்தின் சிவில், ராணுவத் தலைவனாக அர்க்காதியோ அறிவிக்கப்பட்டபோது அவர்களுக்கு ஒரு பெண்குழந்தை பிறந்தது.

இதைப் பற்றித் தெரிந்த உறவினர்கள் ஹோசே அர்க்காதியோவும் ரெபேக்காவும் மட்டுமே. உறவின் காரணமாக இல்லையென்றாலும் நிர்ப்பந்தத்தால் அவர்களுடன் நெருங்கிய உறவைப் பேணி வந்தான். ஹோசே அர்க்காதியோ தாம்பத்தியத்தின் நுகத்தடியில் தனது கழுத்தைக் கொடுத்திருந்தான். ரெபேக்காவின் பிடிவாத குணமும் வயிற்றின் பெரும்பசியும் விடாப்பிடியான ஆசையும் அவள் கணவனின் பெரும் வலிமையை உறிஞ்சியிருந்தன. சோம்பேறியும் பெண் பித்தனுமாக இருந்தவனை அபாரமான வேலை செய்யும் விலங்காக மாற்றியிருந்தன. அவர்கள் வீட்டை அழகாகவும் சுத்தமாகவும் வைத்திருந்தார்கள். விடியற்காலையில் ரெபேக்கா அதை விரியத் திறந்துவைப்பாள். கல்லறையிலிருந்து வரும் காற்று ஜன்னல்கள் வழியாக உள்ளே நுழைந்து கதவுகளினூடே வெளியேறும். அது வெள்ளையடித்த சுவர்களிலும் அறைக்கலன்களிலும் மரித்தோரின் வெடியுப்பைத் தூவி மங்கச் செய்யும். மண்ணைத் தின்பதற்கான பசியும் பெற்றோர்களின் எலும்புகளின் க்ளக் க்ளக் கும் பியத்ரோ கிரெஸ்பியின் மந்தத்தன்மைக்கு எதிராக அவளுடைய ரத்தம் கொண்டிருந்த பொறுமையின்மையும் அவளுடைய ஞாபகத்தின் பரணில் ஒழுங்குபடுத்தப்பட்டன. போரின் நெருக்கடி பற்றிய யோசனையில்லாமல் நாள் முழுவதும் ஜன்னல் அருகிலிருந்து எம்பிராய்டரி வேலை செய்வாள். அலமாரியிலிருக்கும் பீங்கான் பாத்திரங்கள் அதிரத் தொடங்கும்வரை வேலை செய்வாள். பின்னர் எழுந்து போய் உணவைச் சூடாக்கி வைப்பாள். அவன் தென்படுவதற்கு

முன்னோடியாக முதலில் வேட்டை நாய்களும் கால் முழுவதும் உறையுணிந்த பேருருவமும் இரட்டைக் குழல் துப்பாக்கி இடற நகரும் குதிகால்களும் தெரியும். அதன் பிறகு வேட்டையாடிய மானைத் தோளில் சுமந்துகொண்டோ முயல்களையும் காட்டு வாத்துகளையும் கையில் தூக்கிக்கொண்டோதான் ஹோசே அர்க்காதியோ வருவான். ஆட்சிப் பொறுப்புக்கு வந்த தொடக்கக் காலத்தில் ஒரு நாள் அர்க்காதியோ அவர்கள் வீட்டுக்குத் திடீரென்று வந்தான். வீட்டைவிட்டு வெளியேறிய பிறகு அவர்கள் அவனைப் பார்க்கவில்லை. எனினும் அவன் மிகவும் சிநேகத்துடனும் நெருக்கத்துடனும் இருந்தான். கஞ்சியைப் பகிர்ந்து கொள்ள அழைத்தார்கள்.

அவர்கள் காப்பி குடித்துக் கொண்டிருந்தபோதுதான் அர்க்காதியோ தனது வருகைக்குப் பின்னுள்ள நோக்கத்தை வெளிப்படுத்தினான். ஹோசே அர்க்காதியோவுக்கு எதிராக ஒரு புகார் அவனிடம் வந்திருக்கிறது. சொந்த நிலத்தில் உழுத பின்பு வேலிகளையும் கட்டடங்களையும் எருதுகளை ஓட்டித் தரைமட்டமாக்கிக் கொண்டு நேராகப் பக்கத்திலிருக்கும் நிலங்களில் புகுந்துவிடுகிறான். சுற்றி இருக்கும் வளமான நிலங்களைச் சொந்தமாக்கிக் கொள்கிறான் என்பதுதான் குற்றச்சாட்டு. யாருடைய நிலங்களை அவன் சொந்தமாக்காமல் விட்டிருந்தானோ அவர்களிடமிருந்து வேட்டை நாய்களையும் இரட்டைக் குழல் துப்பாக்கியையும் காட்டி ஒவ்வொரு சனிக்கிழமையும் வரி வசூல் செய்கிறான். அவன் அதை மறுக்கவில்லை. அடாவடியாகப் பறித்துக்கொண்ட அந்த நிலங்கள் மகோந்தாவை உருவாக்கிய காலத்தில் ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவால் விநியோகம் செய்யப்பட்டவை என்று உரிமை கொண்டாடினான். அந்தக் காலத்துக்குப் பிறகு அப்பாவுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதால் உண்மையில் குடும்பத்துக்குச் சொந்தமான அந்த நிலங்கள் வெறுமனே கொடுக்கப்பட்டு விட்டதாக நிரூபிக்க முடியும் என்று நினைத்தான். அது ஓர் அநாவசியமான குற்றச்சாட்டு, ஏனெனில் அர்க்காதியோ நியாயம் செய்வதற்காக வரவில்லை. அடாவடியாகப் பறித்துக்கொண்ட நிலத்தை ஹோசே அர்க்காதியாவின் பெயரிலேயே சட்டபூர்வமாகப் பதிந்து கொடுக்க ஒரு பதிவாளர் அலுவலகத்தை நிறுவலாம் என்றும் பதிலுக்கு வரி வசூலிக்கும் உரிமையை உள்ளூர் அரசாங்கத்துக்குக் கொடுத்துவிட வேண்டும் என்றும் நிபந்தனை விதித்தான். இருவரும் ஒப்பந்தம் செய்துகொண்டார்கள். பல ஆண்டுகளுக்குப் பிறகு கர்னல் அவுரேலியானோ புயேந்தியா சொத்துப் பத்திரங்களைப் பரிசோதித்த போது, தன்னுடைய கொட்டிலிருக்கும் இடம் முதல் தொடுவானம் வரைக்குமான, கல்லறைத் தோட்டம் உட்பட, எல்லா நிலமும் சகோதரனின் பெயரிலேயே பதிவுசெய்யப்பட்டிருந்ததைப் பார்த்தார். அவனுடைய பதினோரு மாத ஆட்சியில் அர்க்காதியோ வரிகளை மட்டும் வசூலிக்கவில்லை; ஹோசே அர்க்காதியோவின் நிலத்தில் சடலங்களை அடக்கம் செய்யவும் கட்டணம் வாங்கியிருந்தான் என்பதையும் பார்த்தார்.

ஏற்கனவே பொதுமக்களின் கவனத்துக்குள்ளாகியிருந்த அந்த விஷயத்தைப் புரிந்துகொள்ள உர்சுலாவுக்குப் பல மாதங்கள் ஆனது.

ஏனெனில் அவளுடைய துன்பத்தை அதிகரிக்க வேண்டாம் என்று மக்களே அதை மறைத்துவைத்தார்கள். முதலில் அதைப் பற்றி அவள் சந்தேகப்பட்டாள். ஒரு கரண்டி சுரைக்காய்ச் சாற்றைக் கணவன் வாயில் புகட்ட முயன்றுகொண்டே போலிப் பெருமையுடன் "அர்க்காதியோ வீடு கட்டிக்கொண்டிருக்கிறானாம்" என்று அவரிடம் தெரிவித்தாள். இருந்தபோதும் தன்னிச்சையாகப் பெருமூச்சு விட்டபடி "ஏனென்று தெரியவில்லை. இதிலெல்லாம் மோசமான ஏதோ இருக்கிறது" என்றாள்.

அதற்குப் பிறகு அர்க்காதியோ வீட்டை மட்டும் கட்டவில்லை; வியன்னா அறைக்கலன்களுக்கும் சொல்லியிருக்கிறான் என்பதைக் கண்டுபிடித்தபோது அவன் பொதுப்பணத்தைத்தான் பயன்படுத்துகிறான் என்ற தனது சந்தேகத்தை உறுதிப்படுத்திக் கொண்டாள். ஒரு ஞாயிற்றுக்கிழமை பலிபூசை முடிந்து வரும்போது புதிய வீட்டில் தன்னுடைய அதிகாரிகளுடன் சீட்டாடிக் கொண்டிருந்த அர்க்காதியோவைப் பார்த்து "நமது குடும்பத்தின் பெயருக்கே நீ ஒரு அவமானம்" என்று கூச்சலிட்டாள். அவன் அவளைக் கவனிக்கவே இல்லை. அப்போதுதான் அவனுக்கு ஆறு மாதமான மகள் இருக்கிறாள் என்பதையும் சாந்தா சோபியா தே லா பியாதெத்துடன் திருமணம் செய்யாமல் வாழ்ந்து கொண்டிருக்கிறான் என்பதையும் அவள் மறுபடியும் கர்ப்பமாக இருக்கிறாள் என்பதையும் உர்சுலா தெரிந்து கொண்டாள். கர்னல் அவுரேலியானோ புயேந்தியா எங்கே இருந்தாலும் அவருக்கு எழுதி நிலைமையைத் தெரிவிப்பது என்று முடிவெடுத்தாள். ஆனால் அந்த நாட்களின் அவசர நிகழ்வுகள் அவளுடைய திட்டங்களை முன்னெடுத்துச் செல்லத் தடைசெய்தது மட்டுமல்லாமல் அப்படித் திட்டங்களை யோசித்ததைப் பற்றி அவளை வருத்தப்படவும் வைத்தன. குழப்பமான, எங்கோ வெகு தொலைவான சூழலில் நடப்பதைப் பற்றிச் சொல்லும் வார்த்தையாக அதுவரைக்கும் இருந்த யுத்தம் திடமான, நாடகத்தன்மையுள்ள எதார்த்தமாக மாறியிருந்தது. பிப்ரவரி மாதக் கடைசி வாக்கில் சோகை பிடித்த தோற்றமுள்ள ஒரு கிழவி துடைப்பங்களைச் சுமந்த கழுதையை விரட்டிக்கொண்டு மகோந்தாவுக்கு வந்தாள். அபாயமில்லாதவளாகத் தென்பட்டதால் வாயிற் காவலர்கள் அவளையும் சதுப்புப் பிரதேச நகரங்களிலிருந்து வரும் மற்ற வியாபாரிகளில் ஒருத்தி என்று எந்தக் கேள்வியும் கேட்காமல் போகவிட்டார்கள். அவள் நேராக ராணுவக் குடியிருப்புக்குப் போனாள். முன்பு வகுப்பறையாக இருந்து இப்போது ராணுவத்தினரின் ஓய்வு அறையாக மாற்றப்பட்டிருந்த அங்கே தூங்கு மஞ்சங்கள் சுருட்டிச் சுருட்டிக் கொக்கிகளில் தொங்கவிடப்பட்டிருந்தன. பாய்கள் சுருட்டி மூலைகளில் அடுக்கப்பட்டிருந்தன. துப்பாக்கிகளும் கார்பைன்களும் வேட்டைத் துப்பாக்கிகளும் தரையில் சிதறிக் கிடந்தன. கிழவி தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளும் முன்பு விறைப்பாக நின்று ராணுவ சல்யூட் அடித்தாள்.

"என் பெயர் கர்னல் கிரகோரியோ ஸ்டீவன்சன்"

அவர் ஒரு கெட்ட செய்தியைக் கொண்டு வந்திருந்தார். அவர் சொன்னபடி கடைசி மிதவாதப் போராட்ட மையங்கள் அனைத்தும் அழிக்கப்பட்டுவிட்டன. ரியோஹாச்சா அருகில் அவரை எதிர்த்துப் போரிட்ட கர்னல் அவுரேலியானோ புயேந்தியா அவரிடம் அர்க்காதியோவுக்கு ஒரு செய்தியைக் கொடுத்தனுப்பியிருந்தார். மிதவாதிகளின் உயிரும் உடைமைகளும் பாதுகாக்கப்படும் என்ற நிபந்தனையின் பேரில் எந்த எதிர்ப்பும் இல்லாமல் அவன் அந்த நகரத்தை ஒப்படைக்க வேண்டும். பயந்து ஓடிப்போன அப்பாவிப் பாட்டியின் தோற்றத்திலிருந்த அந்த விநோதத் தூதரை அர்க்காதியோ சோதனைப் பார்வை பார்த்தான்.

“இயல்பாகவே, எழுத்துப்பூர்வமாகவும் எதையாவது கொண்டு வந்திருப்பீர்கள்” என்றான்.

“இயல்பாகவே, அதுபோன்ற எதையும் நான் கொண்டு வரவில்லை. நிகழ்காலச் சூழ்நிலையில் ஒருவரின் உயிருக்கே ஆபத்தான எதையாவது எடுத்துக்கொண்டு வரமுடியாதே?” என்றார்.

பேசிக் கொண்டிருக்கும்போதே அவன் தனது உள்ளாடைக்குள் துழாவி ஒரு சிறு தங்க மீனை வெளியே எடுத்தான். “இது போதுமானது என்று நம்புகிறேன்.” அர்க்காதியோ அதைப் பார்த்தான். கர்னல் அவுரேலியானோ புயேந்தியா செய்த சின்ன மீன்களில் ஒன்றுதான் அது. ஆனால் யுத்தத்துக்கு முன்பு யார் வேண்டுமானாலும் அதை வாங்கியிருக்கலாம். அல்லது திருடியிருக்கலாம். ஆனால் பாதுகாப்பான நுழைவுக்கான மதிப்பு அதற்கு இல்லை. எப்படியாவது அவர்கள் தன் அடையாளத்தை நம்ப வேண்டுமென்பதற்காகத் தூதர் ஒரு ராணுவ ரகசியத்தை மீறும் எல்லைவரைகூடப் போனார். தான் ஒரு முக்கியப் பணிக்காக க்யூராக்கோவுக்குச் செல்வதாகவும் அங்கே கரீபியப் பகுதியைச் சேர்ந்த எல்லாத் தலைமறைவாளர்களையும் ராணுவத்தில் சேர்க்க இருப்பதாகவும் அந்த ஆண்டு இறுதியில் ஓர் ஆக்கிரமிப்பு நடத்துவதற்குத் தேவையான ஆயுதங்களையும் தளவாடங்களையும் திரட்ட இருப்பதாகவும் வெளிப்படுத்தினார். இந்தத் திட்டத்தில் நம்பிக்கை இருப்பதால் தற்போது வீணான எந்தத் தியாகத்தையும் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா ஆதரிக்கவில்லை என்றார். ஆனால் அர்க்காதியோ அசைந்து கொடுக்கவில்லை. தனது சரியான அடையாளத்தை நிரூபிக்கும்வரை அவரைக் கைதியாக்கிக் கொட்டடியில் அடைத்தான். சாகும்வரைக்கும் நகரத்தைப் பாதுகாப்பது என்று தீர்மானமும் செய்தான்.

அவன் அதிக காலம் காத்திருக்க வேண்டியிருக்கவில்லை. மார்ச் மாதக் கடைசியில் பருவ காலத்துக்கு முன்னரே மழை பெய்யத் தொடங்கிய தினத்தில் அதிகாலைக்கு முன்னரே வாரக் கணக்காக நிலவி வந்த பதற்றமான அமைதி மூர்க்கமான எக்காள முழக்கத்தாலும் தேவாலயத்தின் ஊசிக் கோபுரத்தை மோதி விழச் செய்த பீரங்கி வெடியோசையாலும் சட்டென்று நொறுங்கியது. எதிர்த்துப் போர் தொடுப்பது என்ற அர்க்காதியோவின் முடிவு உண்மையில் முட்டாள்

தனமானது. அவனிடம் போதுமான ஆயுதங்கள் இல்லாத ஐம்பது ஆட்கள்தாம் இருந்தார்கள். பங்கீட்டு முறையில் ஆளுக்கு இருபது வெடிகுண்டுகள் மட்டுமே கொடுக்கப்பட்டிருந்தன. ஆனால் அவர்களுக்கிடையே இருந்த பள்ளி மாணவர்கள் அவனுடைய உரத்த குரல் பிரகடனத்தில் ஆவேசமடைந்து தோல்வியடைந்த ஓர் இலட்சியத்துக்காகத் தங்களை அர்ப்பணித்துக்கொள்ள முன்வந்தார்கள். பூட்சுகளின் மிதியொலிக்கும் தாறுமாறான உத்தரவுகளுக்கும் பூமியை நடுங்க வைக்கும் பீரங்கி வெடி முழக்கங்களுக்கும் காட்டுத்தனமான துப்பாக்கி வேட்டுகளுக்கும் ஓயாத எக்காள ஓசைகளுக்கும் நடுவே கர்னல் ஸ்டீவன்சன் என்று சொல்லிக்கொண்ட அந்த நபர் அர்க்காதியோவுடன் பேச முயன்றார். "பெண்களின் உடையணிந்து கொட்டடியில் செத்துப் போகும் அவமானத்துக்கு என்னை ஆளாக்கி விடாதீர்கள். நான் சாகத்தான் வேண்டுமென்றால் சண்டை போட்டுச் சாகிறேன்" என்றார். அர்க்காதியோவை இணங்கச் செய்வதில் அவர் வெற்றிபெற்றார். அவருக்குத் துப்பாக்கியும் இருபது வெடிகுண்டுகளும் கொடுக்குமாறு அர்க்காதியோ உத்தரவிட்டான். அவரை வேறு ஐந்து பேருடன் தலைமையகப் பாதுகாவலுக்கு விட்டான். தனது ஆட்களுடன் போருக்குத் தலைமையேற்க முன்னணிக்குப் போனான். சதுப்பு நிலத்துக்குச் செல்லும் பாதைவரைகூட அவன் போக வேண்டியிருக்க வில்லை. ஆதரவுப் படையினர் முதலில் கைவசமிருந்த குண்டுகள் தீரும் வரை துப்பாக்கியாலும் பின்னர் துப்பாக்கிக்கு எதிராகக் கைத்துப்பாக்கியாலும் கடைசியில் கைக்குக் கையாகவும் தெருவிலிறங்கிச் சண்டை போட்டார்கள். தோல்வி உடனடியாக ஏற்படும் என்ற நிலையில் சில பெண்கள் சமையலறைக் கத்திகளையும் தடிகளையும் தூக்கிக்கொண்டு தெருவுக்குள் நுழைந்தார்கள். அந்தக் களேபரத்துக்கு நடுவே, ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவின் பழைய இரண்டு கைத்துப்பாக்கிகளை வைத்துக்கொண்டு பைத்தியக்காரியைப் போல இரவு உடையுடன் அமரந்தா தன்னைத் தேடிக்கொண்டிருப்பதை அர்க்காதியோ பார்த்தான். ஆயுதம் இழந்த அதிகாரியிடம் அவன் தன்னுடைய துப்பாக்கியைக் கொடுத்துவிட்டு அமரந்தாவை வீட்டுக்குக் கொண்டு போய்ச் சேர்ப்பதற்காகப் பக்கத்துத் தெருவழியாக அர்க்காதியோ தப்பினான். உர்சுலா அடுத்த வீட்டின் முன்பக்கச் சுவர் பீரங்கிக் குண்டால் துளைக்கப்பட்டிருப்பதை எந்த வித்தியாசமுமில்லாத உணர்வுடன் பார்த்தபடி வாசலில் காத்துக்கொண்டிருந்தாள். மழை குறைந்துகொண்டிருந்தது. ஆனால் தெருக்கள் கரைந்த சோப்பைப் போல வழுக்கலுடனும் மென்மையுடனும் இருந்தன. இருட்டில் திசை தெரியாமல் தடுமாற வேண்டியிருந்தது. அமரந்தாவை உர்சுலாவுடன் விட்டுவிட்டு வரும்போது அர்க்காதியோ தெரு மூலையிலிருந்து தன்னை நோக்கிச் சரமாரியாகச் சுடும் சிப்பாய்கள் இருவரைத் திருப்பித் தாக்க முயன்றான். அலமாரியில் நீண்ட வருடங்களாக வைத்திருந்த அந்தக் கைத்துப்பாக்கிகள் வேலை செய்யவில்லை. தனது உடலால் அர்க்காதியோவை மறைத்துக்கொண்டே அவனை வீட்டை நோக்கி இழுத்துப் போக உர்சுலா முயன்றாள். "கடவுள் பெயரால் என்னோடு வா. போதும் பைத்தியக்காரத்தனம்" என்று

அவனிடம் கத்தினாள். அந்தச் சிப்பாய்கள் அவர்களைக் குறி பார்த்தார்கள்.

"அவனை விடுங்கள் அம்மா" என்று அவர்களில் ஒருவன் கத்தினான். "இல்லையென்றால் நாங்கள் பொறுப்பல்ல."

அர்க்காதியோ வீட்டை நோக்கி உர்சுலாவைத் தள்ளிவிட்டுச் சரணடைந்தான். அதற்குச் சற்று நேரத்துக்குப் பின்பு வெடிச் சத்தம் ஓய்ந்து மணிகள் ஒலிக்கத் தொடங்கின. அரைமணிக்கும் குறைவான நேரத்திலேயே அந்த எதிர்ப்பு துடைத்து அழிக்கப்பட்டது. அர்க்காதியோ வின் வீரர்களில் ஒருவன்கூட உயிர் தப்பவில்லை. ஆனால் சாவதற்கு முன்னால் அவர்கள் முந்நூறு சிப்பாய்களைக் கொன்றிருந்தார்கள். ர்ாணுவக் குடியிருப்புதான் கடைசி இலக்காக இருந்தது. அது தாக்கப் படுவதற்கு முன்பே கர்னல் ஸ்டீவன்சன் என்று சொல்லிக்கொண்ட நபர் கைதிகளை விடுவித்தார். தனது வீரர்களிடம் வெளியில் போய்த் தெருவிலிறங்கிச் சண்டை போடும்படி உத்தரவிட்டார். அவருடைய அபாரமான உடல் அசைவும் துல்லியமாகக் குறிபார்த்துப் பயன் படுத்திய இருபது குண்டுகளும் ராணுவக் குடியிருப்புக் காப்பாற்றப் பட்டுவிட்டது என்ற எண்ணத்தைத் தந்தது. ஆனால் ஆக்கிரமிப்பாளர்கள் பீரங்கியால் தாக்கி அதைத் தூளாக்கியிருந்தார்கள்.

அந்தத் தாக்குதலை நடத்திய தலைவன், அந்த இடிபாடுகளுக் கிடையில் வெடி பட்டு முழுக்க வெந்துபோன கையில் குண்டு தீர்ந்த துப்பாக்கியை இன்னும் பிடித்துக்கொண்டிருந்த அரைக் காலுடை அணிந்த சடலம் கைவிடப்பட்டுக் கிடப்பதைப் பார்த்துத் திகைத்தான். அவனுக்குப் பெண்களைப் போலத் தலைமுதல் கழுத்து வரை அடர்ந்த கூந்தல் இருந்தது. கூந்தலின் நுனியில் ஒரு சீப்பு முடிந்திருந்தது. கழுத்தில் சிறிய தங்க மீன் கோர்த்த சங்கிலி இருந்தது. பூட்ஸ் முனையால் அந்த உடலைப் புரட்டி முகத்தில் வெளிச்சம் அடித்ததும் தலைவன் தடுமாறினான். "யேசுவே" என்று வியந்தான். மற்ற அதிகாரிகளும் நெருங்கி வந்தார்கள்.

"இது கிரகோரியோ ஸ்டீவன்சன். இந்தப் பயல் எங்கே வந்து சேர்ந்திருக்கிறான் என்று பாருங்கள்" என்றான்.

அதிகாலையில் உடனடி ராணுவ விசாரணைக்குப் பின்பு கல்லறைச் சுவரோடு சேர்த்து நிறுத்தப்பட்ட அர்க்காதியோ சுட்டுக் கொல்லப்பட்டான். அவனுடைய வாழ்க்கையின் அந்தக் கடைசி இரண்டு மணி நேரங்களில், குழந்தைப் பருவம் முதல் தன்னை விடாமல் வதைத்துக்கொண்டிருந்த பயம் ஏன் மறைந்துபோனது என்று எவ்வளவு யோசித்தும் அவனால் புரிந்துகொள்ள முடியவில்லை. அமைதியாக, (கிளர்ச்சியில்லாமல்) அண்மைக் கால வீரத்தை வெளிக் காட்டிக்கொள்ளவும் கவலைப்படாமல் தன்மீது சுமத்தப்பட்ட குற்றச் சாட்டுகளைக் கேட்டுக்கொண்டிருந்தான். உர்சுலாவை நினைத்துக் கொண்டான், அந்த நேரத்தில் அவள் செந்தவிட்டு மரத்தடியில் கணவருடன் சேர்ந்து காப்பி அருந்திக்கொண்டிருப்பாள். தனது எட்டு மாதமே வயதான மகளை நினைத்துக்கொண்டான். அவளுக்கு

இன்னும் பெயர் வைக்கவில்லை. ஆகஸ்ட் மாதம் பிறக்கப் போகும் குழந்தையைப் பற்றியும் நினைத்துக்கொண்டான். சாந்தா சோபியா தெ லா பியாதெத்தை நினைத்துக்கொண்டான். மறுநாள் பகலுணவுக்காக மான் இறைச்சியில் உப்புப் போட்டுக்கொண்டிருந்த முன்தின இரவுதான் அவளை விட்டு வந்திருந்தான். தோளில் வழியும் அவள் கூந்தலையும் செயற்கையானது போலத் தோற்றமளிக்கும் அவளுடைய இமைகளையும் நினைத்துக்கொண்டான். எந்த ஒட்டுணர்வுமில்லாமல் தன் உறவினர்களைப் பற்றி யோசித்தான். வாழ்க்கையுடன் கணக்கைச் சரிசெய்து கொள்ளும் கறாரான முனைப்பில் தான் மிகவும் வெறுத்திருந்த தனது உறவினர்கள் தன்னை எவ்வளவு நேசிக்கவும் செய்தார்கள் என்பதையும் நினைத்துக்கொண்டான். இரண்டு மணி நேரம் கடந்து போயிருப்பதை அர்க்காதியோ உணர்ந்தபோது ராணுவ நீதிமன்றத்தின் தலைவர் தனது இறுதி உரையை நிகழ்த்த ஆரம்பித்தார். “இங்கே நிரூபணம் செய்யப்பட்ட குற்றச்சாட்டுகளுக்குத் தக்க ஆதாரமில்லை என்று வந்தால்கூட தன்னுடைய ஆதரவாளர்களைப் பயனில்லாத மரணத்துக்கு விரட்டிய பொறுப்பின்மையும் குற்றகரமான துணிச்சலுமே மரண தண்டனை விதிக்கப் போதுமானவை” என்று சொல்லிக் கொண்டிருந்தார். அவன் முதன்முறையாக அதிகாரத்தின் பாதுகாப்பை உணர்ந்த அந்தச் சிதறடிக்கப்பட்ட பள்ளிக் கட்டடத்தில், அங்கிருந்து சில அடிகள் தூரத்தில் காதலின் நிச்சயமின்மையை உணர்ந்த அறையில் நின்று மரணத்துக்கான சடங்குகள் எவ்வளவு கேலிக்குரியவை என்பதைப் பார்த்தான். உண்மையில் மரணம் அவனுக்குப் பொருட்டில்லை; வாழ்க்கைதான். எனவே அவர்கள் தங்கள் முடிவைத் தெரிவித்தபோது பயத்தை உணரவில்லை; நினைவேக்கத்தையே உணர்ந்தான். அவனுடைய கடைசி வேண்டுகோள் என்னவென்று அவர்களாகக் கேட்கும்வரை அவன் பேசவில்லை. குரலைச் சரிசெய்துகொண்டு “என் மனைவியிடம் மகளுக்கு உர்சுலா என்று பெயர் வைக்கச் சொல்லுங்கள்.” சிறிது இடைவெளி விட்டு மறுபடியும் சொன்னான் “உர்சுலா, அவள் பாட்டியின் பெயர். இன்னொன்றும் சொல்லுங்கள், பிறக்கவிருக்கும் குழந்தை பையனாக இருந்தால் அவனுக்கு ஹோசே அர்க்காதியோ என்று பெயர் வைக்க வேண்டும். அவனுடைய சிற்றப்பாவின் பெயரையல்ல; தாத்தாவின் பெயரை.” மரண தண்டனை நிறைவேற்றும் சுவருக்கு அருகில் அவனைக் கொண்டு செல்லும்போது அருட்தந்தை நிக்கனோர் அவனைப் பார்த்துப் பேச முயன்றார். “எனக்குக் கழிவிரக்கப்பட எதுவுமில்லை” அர்க்காதியோ சொன்னான். ஒரு குவளை வறக்காப்பியைப் பருகிய பின்பு அவனாகவே படையின் கட்டளைகளுக்கு ஒப்புக்கொடுத்தான். படையின் தலைவன் விரைவாகத் தண்டனையை நிறைவேற்றுவதில் தேர்ந்தவனாக இருந்தான். அவன் பெயர்கூடத் தற்செயலாக அமைந்தது என்பது பொருத்தமாக இருந்தது. கேப்டன் ரோக் கார்னிஸெரோ. கசாப்புக்காரன் என்று அர்த்தம். கல்லறைக்குப் போகும் வழியில் தொடர்ச்சியாகத் தூறல் விழுந்து கொண்டிருந்தபோதும் தொடுவானத்தில் பிரகாசமான புதன்கிழமை விடிந்துகொண்டிருந்ததை அர்க்காதியோ பார்த்தான். அந்தப் பனிப் படலத்துடன் அவனுடைய நினைவேக்கமும் மறைந்தது. அந்த

இடத்தில் தீவிரமான குறுகுறுப்பு மிஞ்சியது. முதுகைச் சுவரோடு பதித்து நிற்கும்படி அவர்கள் கட்டளையிட்டபோதுதான் ஈரக் கூந்தலுடன் இளஞ்சிவப்பு நிறத்தில் பூக்களுள்ள உடையில் கதவை விரியத் திறந்துகொண்டிருந்த ரெபேக்காவை அர்க்காதியோ பார்த்தான். தன்னை அவள் அடையாளம் காண்பதற்காக அவன் சில முயற்சிகளைச் செய்தான். சுவர்ப் பக்கமாகச் சாதாரணமாகப் பார்த்த ரெபேக்கா திகைப்பில் செயலிழந்தாள். அவளால் அர்க்காதியோவைப் பார்த்து விடை கொடுக்கக் கையசைக்க மட்டுமே முடிந்தது. அர்க்காதியோவும் பதிலுக்கு அவளைப் பார்த்துக் கையசைத்தான். துப்பாக்கிகளின் புகைவிடும் வாய்கள் அவனை நோக்கிக் குறிபார்த்த நொடியில் மெல்குயாதெஸ் வாசித்துக் காட்டிய நிருபங்கள் எழுத்தெழுத்தாக ஒலிப்பதைக் கேட்டான். கால்கள் பின்ன வகுப்பறைக்குள் எட்டு வைத்து வந்த கன்னிப்பெண் சாந்தா சோபியா தெலா பியாதெத்தின் விலகிச் சென்ற காலடி ஓசையைக் கேட்டான். ரெமேதியோஸின் சடலத்தின் நாசித் துவாரங்களிலிருந்து எழுந்த அதே பனிக்குளிரின் திண்மையைத் தனது மூக்கிலும் உணர்ந்தான். “கடவுளே, நாசமாயிற்று. சொல்ல மறந்துவிட்டேன். பெண் குழந்தை பிறக்குமானால் அவளுக்கு ரெமேதியோஸ் என்று பெயர் வைக்கச் சொல்லுங்கள்” என்று நினைவூட்டினான். வாழ்நாள் முழுவதும் தன்னைச் சித்திரவதை செய்த அந்தப் பீதி ஒரே நக முனையில் குவிந்திருப்பதை மீண்டும் உணர்ந்தான். கேப்டன் சுடுமாறு கட்டளை இட்டான். தொடைகளை அரிக்கும் அந்த சூடான திரவம் எங்கிருந்து பெருகியது என்று புரிந்துகொள்ள முடியாமலிருந்ததால் அர்க்காதியோவுக்கு நெஞ்சை முன்னுக்குத் தள்ளித் தலையை நிமிர்த்தி நிற்க நேரம் இல்லாமல் போனது.

“வேசி மகன்களே” என்று கத்தினான். “மிதவாதக் கட்சி நீடூழி வாழ்க.”

மே மாதம் போர் முடிவடைந்தது. கலகத்தைத் தொடங்கியவர்களுக்கு இரக்கமற்ற தண்டனை வழங்கப்படுமென்று இரண்டு வாரங்களுக்கு முன்பே படாடோபமான பிரகடனத்தில் அரசாங்கம் அதிகாரப்பூர்வமாக அறிவித்திருந்தது. இந்திய மாந்திரீக மருத்துவரின் மாறுவேடத்தில் மேற்கு எல்லையை நெருங்கியபோது கர்னல் அவுரேலியானோ புயேந்தியா சிறை பிடிக்கப்பட்டார். யுத்தத்தில் அவரைப் பின்தொடர்ந்த இருபத்தியோரு பேரில் பதினான்கு பேர் போராட்டத்தில் மரணமடைந்தார்கள். ஆறு பேர் காயமடைந்தார்கள்; இறுதித் தோல்வியின் நொடிவரை ஒரு நபர் மட்டுமே உடனிருந்தார். கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ். அவர் கைது செய்யப்பட்ட செய்தி மகோந்தாவில் பிரத்தியேகமாகப் பிரகடனப்படுத்தப்பட்டது. "அவன் உயிருடன் இருக்கிறான்" என்று உர்சுலா கணவரிடம் தெரிவித்தாள். "அவனுடைய எதிரிகள் அவன்மீது தயவு காட்ட நாம் கடவுளைப் பிரார்த்திப்போம்." மூன்று நாட்கள் அழுது தீர்த்த பின்பு ஒருநாள் பிற்பகலில் சமையலறையில் இனிப்புப் பால் மிட்டாயைக் கிளறிக்கொண்டிருந்தபோது தன் மகனின் குரலைத் தெளிவாகக் கேட்டாள். "அது அவுரேலியானோதான்" என்று கத்திக்கொண்டு கணவரிடம் தகவலைச் சொல்வதற்காகச் செந்தவிட்டு மரத்தடிக்கு ஓடினாள். "அந்த அற்புதம் எப்படி நிகழ்ந்தது என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் அவன் உயிரோடு இருக்கிறான். சீக்கிரம் நாம் அவனைப் பார்க்கப் போகிறோம்." அதை அவள் நம்பினாள். வீட்டுத் தரைகளைத் தேய்த்துச் சுத்தம் செய்தாள். மேஜை நாற்காலிகளின் இடத்தை மாற்றினாள். ஒரு வாரத்துக்குப் பிறகு அறிவிப்புகளின் துணையெதுவுமில்லாமல் எங்கிருந்தோ வந்த வதந்தி அந்த ஆரூடத்துக்கு நாடகத்தனமான நிச்சயத்தைக் கொடுத்தது. கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுக்கு மரணதண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது; பொதுமக்களுக்குப் படிப்பினையாக இருக்க வேண்டும் என்பதற்காக மகோந்தாவிலேயே தண்டனை நிறைவேற்றப்படும். திங்கட்கிழமை காலை பத்தரை மணி. அவுரேலியானோ ஹோசேவுக்கு உடையணிவித்துக் கொண்டிருந்தாள். "அவர்கள் அவனை இப்போது கொண்டு வந்துகொண்டிருக்கிறார்கள்" என்று உர்சுலா அறைக்குள் நுழைந்து கத்துவதற்கு ஒரு விநாடி முன்பே தூரத்தில் படைகள் வரும் ஓசையையும் எக்காளத்தின் முழக்கத்தையும் கேட்டாள். பொங்கி வழியும் மக்கள் கூட்டத்தைத் துப்பாக்கிக் கட்டைகளால் தடுத்து நிறுத்தப் படை வீரர்கள்

பாடுபட்டார்கள். உர்சுலாவும் அமரந்தாவும் மூலைக்கு ஓடி ஆட்களைத் தள்ளி வழி ஏற்படுத்திக்கொண்டு அவனைப் பார்த்தார்கள். ஒரு பிச்சைக்காரனைப் போல இருந்தார். அவருடைய உடைகள் கிழிந் திருந்தன. தலைமுடியும் தாடியும் சிக்குப் பிடித்திருந்தன. காலணிகள் இல்லாமலிருந்தது. பொசுக்கித் தள்ளும் புழுதிப்படலத்தை உணராமல் நடந்து கொண்டிருந்தார். அவர் கைகள் கயிற்றால் முதுகுப் பக்கமாகக் கட்டப்பட்டு அதன் மறுமுனை அதிகாரி ஒருவன் உட்கார்ந்திருந்த குதிரையின் கழுத்துடன் பிணைக்கப்பட்டிருந்தது. அவருடன் கிழிந்து தொங்கும் உடையுடன் தோல்வியடைந்த தோற்றத்துடனிருந்த கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸையும் கொண்டு வந்திருந்தார்கள். அவர்கள் சோகமாக இருக்கவில்லை. படைவீரர்களை நோக்கி எல்லா வகையான வசைகளையும் முழங்கிக்கொண்டிருந்த கூட்டம்தான் அவர்களை அதிகம் தொந்தரவு செய்ததாகத் தோன்றியது.

அந்தப் பெரும் கூச்சலுக்கு நடுவே உர்சுலா "என் மகனே!" என்று இரைந்தாள். தன்னுடைய முதுகைப் பிடித்துத் தள்ள முயன்ற படைவீரனை அறைந்தாள். அதிகாரியின் குதிரை எகிறியது. கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவும் நின்றார். அம்மாவின் கைகள் தன்னைத் தொட்டுவிடாமல் தவிர்த்துக்கொண்டு அவள் கண்களை நேராகப் பார்த்தார்.

"அம்மா, வீட்டுக்குப் போ. அதிகாரிகளிடம் அனுமதி வாங்கிச் சிறையில் வந்து என்னைப் பார்" என்றார்.

உர்சுலாவுக்கு இரண்டு எட்டு பின்னால் என்ன செய்வதென்று தெரியாமல் நின்ற அமரந்தாவைப் பார்த்துப் புன்னகைத்துவிட்டு "உன் கைக்கு என்ன ஆயிற்று?" என்று கேட்டார். கறுப்பு நிறக் காயத்துணி சுற்றியிருந்த கையைத் தூக்கிக் காட்டித் "தீக்காயம்" என்றாள். குதிரைகள் மிதித்துத் தள்ளிவிடாமலிருக்க உர்சுலாவை அங்கிருந்து நகர்த்தினாள். படை நகர்ந்துபோனது. சிறப்புக் காவல்படை கைதிகளை வளைத்துக்கொண்டது. ஒரே துள்ளல் நடையுடன் அவர் களைச் சிறைக்குக் கொண்டு போனார்கள்.

மாலையில் உர்சுலா சிறையில் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவைப் பார்க்கப் போனாள். டான் அப்போலினர் மாஸ்கோட் வழியாக அனுமதி பெற முயன்றாள். ஆனால், ராணுவ சர்வாதிகாரத் தின் முன்னால் அவர் எல்லா அதிகாரங்களையும் இழந்திருந்தார். அருட்தந்தை நிக்கனார் ஈரல் நோயில் படுத்திருந்தார். மரண தண்டனை விதிக்கப் பட்டிராத கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸின் பெற்றோர் அவனைப் பார்க்க முயன்றார்கள். ஆனால் துப்பாக்கிக் கட்டைகளால் அடித்து விரட்டப்பட்டார்கள். உர்சுலா இந்தச் சாத்தியமின்மையில் தலையிடக்கூடிய எவரையாவது தேடிக்கொண்டிருந்தாள். அதிகாலை யில் தன் மகன் சுட்டுக் கொல்லப்படுவான் என்று நினைத்தாள். அவனுக்குக் கொடுக்க விரும்பிய பொருட்களைச் சுற்றி எடுத்துக் கொண்டு தனியாகவே சிறைக்குப் போனாள்.

"நான் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் தாய்" என்று அறிவித்தாள்.

காவல்காரர்கள் அவளை வழி மறித்தார்கள். "என்ன ஆனாலும் நான் உள்ளே போவேன்" உர்சுலா அவர்களை எச்சரித்தாள். "சுட்டுக் கொல்லும்படி உத்தரவு இருந்தால் இப்போதே அதைச் செய்யுங்கள்." அவர்களில் ஒருவனை ஓரமாகத் தள்ளிக்கொண்டு அந்த முன்னாள் வகுப்பறைக்குள் நுழைந்தாள். அங்கே அரைகுறையாக ஆடையணிந்த சிப்பாய்கள் தங்கள் ஆயுதங்களுக்கு எண்ணெய் விட்டுக்கொண்டிருந் தார்கள். களச்சீருடையில் இருந்த சிவந்த முகமும் மிகத் தடிமனான கண்ணாடியும் அணிந்த, பதவிக்குரிய மிடுக்குகள் கொண்ட அதிகாரி காவலாளிகளை விலகிச் செல்லுமாறு சைகை காட்டினார்.

"நான் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் தாய்" என்று மீண்டும் சொன்னாள்.

அதிகாரி தோழமை நிறைந்த புன்னகையுடன் "நீங்கள் திருவாளர் அவுரேலியானோ புயேந்தியாவின் தாய் என்று சொல்கிறீர்கள் என்றுதான் நினைக்கிறேன்" என்று திருத்தினார். அவருடைய திக்கலான உச்சரிப்பிலிருந்து அவர் மலைப் பகுதியைச் சேர்ந்தவர் என்று உர்சுலா கண்டுகொண்டாள். "நீங்கள் சொல்வது போலத் 'திருவாளர்'தான்" என்று ஒப்புக்கொண்டாள். "அவரைப் பார்க்க வேண்டும்."

மரண தண்டனை விதிக்கப்பட்ட கைதிகளைச் சந்திப்பதைத் தடைசெய்து மேல்மட்ட உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டிருந்தன. ஆனால் அந்த அதிகாரி பொறுப்பை ஏற்றுக்கொண்டு பதினைந்து நிமிடச் சந்திப்புக்கு அவளை அனுமதித்தார். மூட்டையில் வைத்திருந்தவற்றை உர்சுலா அவரிடம் திறந்து காட்டினாள். சலவை செய்த மாற்று உடை, தன் மகன் அவனுடைய திருமணத்தின்போது அணிந்திருந்த குட்டைப் பூட்ஸுகள், அவன் திரும்பி வந்துவிடுவான் என்று உணர்ந்த அன்று தயாரித்து எடுத்து வைத்திருந்த இனிப்புப் பால் மிட்டாய் எல்லாம் அதில் இருந்தன. சிறையாகப் பயன்படுத்தப்பட்டிருந்த அறைக்குள் கட்டிலில் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா படுத்திருப் பதைப் பார்த்தாள். அவனுடைய அக்குள்களில் கட்டிகள் இருந்ததனால் கைகளைப் பரப்பி வைத்துப் படுத்திருந்தான். சவரம் செய்துகொள்ள அனுமதித்திருந்தார்கள். அடர்த்தியான மீசையின் முறுக்கிய இரு முனைகளும் கன்ன எலும்பின் கோணங்களை அழுத்தமாகக் காட்டின. புறப்பட்டுச் சென்றதைவிட அவன் மேலும் வெளுத்துப் போயிருப்பதாக உர்சுலாவுக்குத் தெரிந்தது. மேலும் உயரமானவனாகவும் எப்போதையும் விட மேலும் தனிமையானவனாகவும் தெரிந்தான். வீட்டைப் பற்றிய எல்லா விவரங்களையும் – பியத்ரோ கிரெஸ்பியின் தற்கொலை, அர்க்காதியோவின் கொடுங்கோல் நடவடிக்கைகள், அவனுடைய கொலைத் தண்டனை, ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவின் விடாப்பிடியான செந்தவிட்டு மரத்தடி இருப்பு – தெரிந்து வைத் திருந்தான். அவுரேலியானோ ஹோசேயை வளர்ப்பதற்காக அமரந்தா கன்னியாகவே கைம்மை நிலையை ஏற்றுக்கொண்டதும் அவுரேலியானோ

ஹோசே எதையும் மிக நல்லவிதமாகவே புரிந்துகொள்ள ஆரம்பித்திருப்பதும் பேசத் தெரிந்துகொள்ளும்போதே வாசிக்கவும் எழுதவும் கற்றுக்கொண்டிருப்பதும் அவனுக்குத் தெரிந்திருந்தன. அறைக்குள் பிரவேசித்த விநாடி முதல் தன் மகனின் முதிர்ச்சியைக் கண்டு உர்சுலா திகைத்திருந்தாள். அவனுடைய கம்பீரமான ஒளிரும் சருமத்தில் மின்னிய பிரகாசமும் அவளைக் கூச்சப்பட வைத்தன. அவன் எல்லாவற்றையும் சரியாகவே தெரிந்து வைத்திருப்பதை அறிந்து ஆச்சரியமடைந்தாள். "நான் எப்போதும் ஒரு மந்திரஜாலக்காரன் என்பது உங்களுக்குத் தெரியுமே" என்று வேடிக்கையாகச் சொன்னான். பின்னர் தீவிரமான குரலில் "இன்று காலை அவர்கள் என்னை இங்கே கொண்டு வந்தபோது நான் இதையெல்லாம் ஏற்கனவே அனுபவித்திருப்பது போன்ற எண்ணம் தோன்றியது" என்றான். உண்மையில் அவனுக்கு அருகில் கூட்டம் திரண்டு ஆரவாரம் செய்து கொண்டிருந்தபோது அவன் தன்னுடைய யோசனைகளில்தாம் மூழ்கியிருந்தான். இந்த நகரத்துக்கு எவ்வளவு சீக்கிரம் முதுமை வந்துவிட்டது. வாதுமை மர இலைகள் நொறுங்கிவிட்டன. முதலில் நீலச் சாயமும் பிறகு சிவப்புச் சாயமும் பூசிய அந்த வீடுகள் இப்போது இன்னதென்று சொல்ல முடியாத கலவை நிறத்துக்கு வந்து சேர்ந்திருக்கின்றன.

"நீ என்ன எதிர்பார்த்தாய்? காலம் கடந்து போகிறதில்லையா?" என்று பெருமூச்சு விட்டாள் உர்சுலா. "அது அப்படித்தான். ஆனால் இத்தனை சீக்கிரம் வேண்டியிருக்கவில்லை" என்று அவுரேலியானோ ஒத்துக்கொண்டான்.

அப்படியாக நீண்ட காத்திருப்புக்குப் பின்பு வாய்த்த அந்தச் சந்தர்ப்பம், இரண்டு பேரும் கேள்விகளையும் எதிர்பார்த்த பதில்களையும் முன்பே தயார்செய்து வைத்திருந்தபோதும், வழக்கமான அன்றாடப் பேச்சு வார்த்தையாக மாறியது. காவலாளி வந்து சந்திப்பு நேரம் முடிந்துவிட்டதைத் தெரிவித்தான். அவுரேலியானோ கட்டிலுக்கு அடியிலிருந்து வியர்வையில் ஊறிய காகிதச் சுருளை எடுத்தான். அவை கவிதைகள். ரெமேதியோஸின் தூண்டுதலில் அவன் எழுதிய கவிதைகள். ஊரைவிட்டு வெளியேறியபோது அவற்றையும் உடன் கொண்டு போயிருந்தான். யுத்தத்துக்கு நடுவே வாய்த்த இடைவேளைகளில் சிலவற்றை எழுதியிருந்தான். "இதை யாரும் படிக்கமாட்டார்கள் என்று எனக்கு உறுதி கொடுங்கள். இன்று இரவே அடுப்பில் போட்டு எரித்துவிடுங்கள்" என்றான். உர்சுலா அப்படியே செய்வதாக வாக்குக் கொடுத்தாள். விடைபெறல் முத்தமிடுவதற்காக எழுந்து நின்றாள்.

"நான் உனக்காக ஒரு ரிவால்வரைக் கொண்டு வந்திருக்கிறேன்" என்று கிசுகிசுத்தாள்.

காவலாளி பார்த்துவிட முடியாது என்பதைக் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா கண்டான். "இதனால் எனக்குப் பயனில்லை" என்று தணிந்த குரலில் சொன்னான். "ஆனால், அதை என்னிடம் கொடுங்கள். திரும்பிப் போகும்போது உங்களைச் சோதனை

செய்யலாம்” என்றான். உர்சுலா தனது கச்சைக்குள்ளேயிருந்து ரிவால்வரை எடுத்துக் கட்டிலில் போட்டிருந்த மெத்தைக்கு அடியில் வைத்தாள். தீர்க்கமான அமைதியுடன் “போய் வருகிறேன் என்று சொல்லாதீர்கள்” என்றான். “யாரிடமும் பிச்சை கேட்கவோ தலை குனியவோ வேண்டாம் வெகுநாட்கள் முன்பே அவர்கள் என்னைக் சுட்டுவிட்டார்கள் என்பதாகப் பாசாங்கு செய்யுங்கள்” என்றான். அழுதுவிடாமலிருக்க உதட்டைக் கடித்துக்கொண்டாள் உர்சுலா.

“அந்தக் கட்டிகள் மேல் சூடான கற்களை வைத்துப் பார்” என்றாள்.

பாதி தூரம்வரை நடந்து திரும்பி அந்த அறையை விட்டு வெளியேறினாள். கர்னல் அவுரேலியானோ புயேந்தியா கதவு மூடப் படும்வரை சிந்தனையில் மூழ்கியபடி நின்றார். பிறகு மீண்டும் கைகளை விரித்தபடி படுத்துக் கிடந்தார். வரவிருப்பதை முன் கூட்டியே அறியும் ஆற்றல் தனக்கு இருப்பதை உணரத் தொடங்கிய விடலைப் பருவத்தி லிருந்தே திட்டவட்டமாக, சந்தேகத்துக்கு இடமில்லாத வகையில், மாற்ற முடியாத சமிக்ஞையுடன் மரணம் தன்னை அறிவித்துக்கொள்ளும் என்று நினைத்திருந்தார். ஆனால் தான் இறப்பதற்குச் சில மணி நேரங்களே மிஞ்சியிருக்கையில் அந்த மரண சமிக்ஞை வரவில்லை. துக்குரிங்கா முகாமில் இருந்த வேளையில், மிக அழகான ஒரு பெண் அவரைப் பார்க்கக் காவலாளிகளிடம் அனுமதி கேட்டாள். புகழ் பெற்ற வீரர்களின் படுக்கையறைகளுக்குத் தங்களுடைய பெண் பிள்ளைகளை அனுப்பும் தாய்மாரின், அவர்களைப் பொறுத்தவரை வம்சவிருத்திக்கு என்கிறார்கள், அதீத நம்பிக்கையைப் பற்றி அந்தக் காவலாளிகளுக்குத் தெரியும். எனவே அவளை உள்ளே அனுமதித் தார்கள். அன்றிரவு, கர்னல் அவுரேலியானோ புயேந்தியா மழையில் காணாமற்போன மனிதனைப் பற்றிய கவிதையை எழுதி முடித்திருந்தார். வழக்கமாகக் கவிதையை வைக்கும் பூட்டுப்போட்ட இழுப்பறைக்குள் தாளை வைப்பதற்காக அவளுக்கு முதுகைக் காட்டியபடி திரும்பி நின்றிருந்தார். அப்போதுதான் அதை உணர்ந்தார். தலையைத் திருப்பாம லேயே இழுப்பறைக்குள்ளே இருந்த கைத்துப்பாக்கியை எடுத்துக் கொண்டார்.

“தயவுசெய்து என்னைச் சுட்டுவிடாதே” என்றார்.

துப்பாக்கியைப் பிடித்துக்கொண்டு திரும்பியபோது அந்தப் பெண் தன்னுடைய துப்பாக்கியைக் கீழே இறக்கி என்ன செய்வது என்று தெரியாமல் நின்றாள். அந்த விதமாகத்தான் பதினோரு சதித் திட்டங்களில் நான்கை முறியடித்திருந்தார். இதற்கு மாறாக, மனௌரி விருந்த புரட்சிப்படைத் தலைமையகத்துக்குள் ஓர் இரவு யார் பிடியிலும் அகப்படாமல் ஒருவன் புகுந்து கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் நெருங்கிய நண்பரான கர்னல் மாக்னிஃபிஸ்கோ விஸ்பலைக் குத்திக் கொன்றான். காய்ச்சலாக இருந்ததால் அவனுக்குத் தன் கட்டிலை விட்டுக் கொடுத்திருந்தார். அதே அறைக்குள் சில கஜங்களுக்கு அப்பால் உறக்க மஞ்சத்தில் தூங்கிக்கொண்டிருந்த அவருக்கு நடந்தது எதுவும் தெரியவில்லை. தனது முன்னறியும்

திறமையைச் சீர் செய்துகொள்ள அவர் எடுத்த முயற்சிகள் பயன்படவில்லை. அந்த முன்னுணர்வுகள் இயற்கைக்கு அதீதமான தெளிந்த அலையாக முழுமையாகவும் கணப்பொழுது நம்பிக்கையாகவும் திடீரென்று வரும். ஆனால் அவரால் அவற்றைப் புரிந்துகொள்ள முடிவதில்லை. சில தருணங்களில் அவை மிக இயற்கையானவையாக இருக்கும். சம்பவம் நடந்து முடிந்த பின்பே அவை முன்னுணர்வாக இருந்தன என்று தோன்றும். பல தருணங்களிலும் அவை மூட நம்பிக்கையின் துணுக்குகளே தவிர வேறல்ல. ஆனால் அவர்கள் மரண தண்டனை விதித்து அவருடைய கடைசி விருப்பத்தைச் சொல்லும்படி கேட்டபோது பதில் சொல்லத் தன்னைத் தூண்டியது அந்த முன்னுணர்வுதான் என்பதைப் புரிந்துகொள்ள அவருக்குச் சிக்கலிருக்கவில்லை.

“தண்டனை மகோந்தாவில் நிறைவேற்றப்பட வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்” என்றார்.

ராணுவ நீதிமன்றத்தின் தலைவர் எரிச்சல் அடைந்தார். “புயேந்தியோ, உங்கள் புத்திசாலித்தனத்தைக் காட்ட வேண்டாம். இது நேரத்தை நீட்டிப்பதற்கான தந்திரம்தானே?” என்றார்.

“அதை நிறைவேற்ற முடியாது என்றால் அது உங்கள் கவலை. ஆனால் என் கடைசி விருப்பம் அதுவே” என்றார் கர்னல்.

அன்று முதல் முன்னுணரும் திறன் அவரைக் கைவிட்டது. உர்சுலா தன்னைச் சிறையில் வந்து பார்த்த அன்றைக்கு மரணம் அறிவிக்கப்படாதது ஏன் என்று மிகவும் யோசித்தார். ஏனென்றால் வாய்ப்பைப் பொறுத்ததல்ல; நடைமுறைப்படுத்துபவர்களின் விருப்பத்தைப் பொறுத்ததே என்ற முடிவுக்கு வந்தார். கொப்புளங்கள் ஏற்படுத்திய வலியால் அவதிப்பட்டுக்கொண்டு அந்த இரவைத் தூங்காமல் கழித்தார். விடிவதற்குச் சற்று முன்பு தாழ்வாரத்தில் காலடி ஓசையைக் கேட்டார். “அவர்கள் வருகிறார்கள்” என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டார். காரணமில்லாமலேயே ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவைப் பற்றி நினைத்தார். அதே நொடியில் செந்தவிட்டு மரத்தடியின் வறண்ட அதிகாலையில் அவரும் அர்க்காதியோ புயேந்தியாவைப் பற்றி யோசித்தார். கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுக்கு நினைவேக்கம் எதுவுமில்லை. ஆனால் இந்தச் செயற்கை மரணம் முடிக்காமல் விட்ட அநேக வேலைகளின் முடிவைக் காணத் தன்னை அனுமதிக்காது என்பது மட்டுமே வயிற்றுக்குள் ஆத்திரத்தை மூட்டியது. கதவு திறந்தது. ஒரு காவலாளி காப்பிக் குவளையுடன் வந்தான். மறுநாளும் அதே நேரத்தில் அதே வேலைதான் நடந்தது. அக்குள் வலியால் அவதிப்படுவதும் அதேபோல நடந்தது. வியாழக்கிழமை அவர் காவலாளிகளுடன் இனிப்புப் பால்மிட்டாயைப் பங்கிட்டுக்கொண்டார். கொஞ்சம் இறுக்கமானதாக இருந்தபோதும் சலவை செய்த உடைகளை அணிந்துகொண்டார். தோல் பூட்சுகளை மாட்டிக்கொண்டார். வெள்ளிக்கிழமையும் அவர்கள் அவரைச் சுடவில்லை.

உண்மையைச் சொல்வதென்றால், தண்டனையை நிறைவேற்ற அவர்களுக்குத் துணிச்சலில்லை. நகரத்தில் நிலவிய கலவரச் சூழல் கொலைத் தண்டனையை நடைமுறைப்படுத்துவது பற்றி ராணுவ அதிகாரிகளை யோசிக்க வைத்தது. கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் படுகொலை மகோந்தாவில் மட்டுமல்ல; சதுப்பு நிலப் பகுதிகள் முழுவதிலும் தீவிரமான அரசியல் விளைவுகளை உண்டாக்கும் என்பதால் அவர்கள் பிரதேசத் தலைநகரத்திலிருக்கும் உயர் அதிகாரிகளுடன் ஆலோசனை நடத்திக்கொண்டிருந்தார்கள். சனிக்கிழமை இரவு, அவர்கள் காத்துக்கொண்டிருந்தபோது, கேப்டன் ரோக் கார்னிஸெரோ வேறு சில அதிகாரிகளுடன் கதாரினோவின் கடைக்குப் போனார்கள். ஒரே ஒரு பெண் மட்டும், அதுவும் அச்சுறுத்தப்பட்டதால், அவரை அறைக்குள் கூட்டிச் சென்றாள். "சாகப் போகும் ஒரு மனிதனுடன் படுத்துக்கொள்ள அவர்கள் விரும்பவில்லை" என்று அவரிடம் ஒப்புக்கொண்டாள். "எப்படி நடக்கப் போகிறது என்று யாருக்கும் தெரியாது. ஆனால், கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவைச் சுட்டுக் கொல்லும் அதிகாரியும் அந்தப் படையில் இருக்கும் வீரர்களும் தப்பிவிடாமல் உடனடியாகவோ பிறகோ பூமியின் எந்த மூலையில் போய் ஒளிந்துகொண்டாலும் ஒவ்வொருவராகக் கொல்லப்படுவார்கள் என்று எல்லாரும் சொல்லிக் கொண்டு திரிகிறார்கள்" என்றாள். கேப்டன் ரோக் கார்னிஸெரோ அதை மற்ற அதிகாரிகளிடம் சொன்னார். அவர்கள் மேலதிகாரிகளிடம் தெரிவித்தார்கள். ஞாயிற்றுக்கிழமை, யாரும் தகவலை வெளிப்படையாகத் தெரிவிக்காமலிருந்தபோதும் அந்த நாட்களில் நிலவிய பதற்றமான அமைதியைக் குலைக்கும்படியான எந்த நடவடிக்கையையும் ராணுவம் மேற்கொள்ளாதபோதும் அதிகாரிகள் கொலைத்தண்டனைப் பொறுப்பைத் தவிர்த்துக்கொள்ள எல்லா உபாயங்களையும் பயன் படுத்துகிறார்கள் என்பதை மொத்த நகரமும் தெரிந்துகொண்டது. திங்கட்கிழமை தபாலில் அதிகாரப்பூர்வமான ஆணை வந்தது: இருபத்து நான்கு மணி நேரத்துக்குள் தண்டனை நிறைவேற்றப்பட வேண்டும். அன்று இரவு அதிகாரிகள் ஏழு துண்டுச் சீட்டுகளை ஒரு தொப்பியில் போட்டார்கள். கேப்டன் ரோக் கார்னிஸெரோவின் சமாதானமற்ற விதி அவருடைய பெயர் எழுதிய சீட்டில் முன் கூட்டியே தெரிந்தது. "துரதிருஷ்டத்துக்குத் திணறலே கிடையாது" என்று ஆழ்ந்த கசப்புடன் சொன்னார். "வேசி மகனாகப் பிறந்தேன். வேசி மகனாகவே சாகப் போகிறேன்." காலை ஐந்து மணிக்குத் துப்பாக்கிப் பிரிவைத் தேர்ந்தெடுத்து முற்றத்தில் அணிவகுத்து நிறுத்தினார். சாக விதிக்கப்பட்ட மனிதனை ஆரூட வாசகம் சொல்லி எழுப்பினார்.

"நாம் போகலாம் புயேந்தியோ. நம்முடைய வேளை வந்துவிட்டது."

"அப்படியானால் அதுதான் சங்கதி. நான் என்னவோ என்னுடைய கொப்புளங்கள் உடைந்ததாகக் கனவு கண்டு கொண்டிருந்திருக்கிறேன்" என்று கர்னல் பதில் சொன்னார்.

அவுரேலியானோ சுட்டுக் கொல்லப்படுவார் என்று கேள்விப்பட்டிருந்ததால் ரெபேக்கா புயேந்தியா மூன்று மணிக்கே எழுந்தாள்.

படுக்கையறை இருட்டில் ஹோரேசே அர்க்காதியோவின் குறட்டை சத்தத்தால் உலுக்கப்பட்ட படுக்கையில் உட்கார்ந்து பாதி திறந்த ஜன்னல் வழியாகக் கல்லறைச் சுவரைப் பார்த்துக் கொண்டிருந்தாள். பியத்ரோ கிரெஸ்பியின் கடிதங்களுக்காகக் காத்திருந்த அந்தக் காலங்களின் அதே பொறுமையுடன் அந்த வாரம் முழுவதும் அவள் காத்துக்கொண்டிருந்தாள். "அவர்கள் அவனை இங்கே சுட்டுக் கொல்ல மாட்டார்கள்" என்று ஹோரேசே அர்க்காதியோ அவளிடம் சொன்னான். "நள்ளிரவில் ராணுவக் குடியிருப்பில்தான் சுட்டுக் கொல்வார்கள். அப்போதுதான் படைப் பிரிவில் யாரெல்லாம் இருந்தார்கள் என்பது தெரியாது. அங்கேயே புதைத்துவிடவும் செய்வார்கள்" என்றான். ரெபேக்கா காத்துக்கொண்டேயிருந்தாள். "அவர்கள் முட்டாள்கள் என்பதால்தான் அவனை இங்கே சுடுகிறார்கள்" என்றாள் அவள். விடை அளிப்பதற்காகத் தான் கதவைத் திறக்கும் விதத்தைப் பற்றி அவள் முன்பே அறிந்திருந்தாள். "அவர்கள் அவனைத் தெருவோடு அழைத்து வர மாட்டார்கள். மக்கள் எதற்கும் தயாராக இருக்கிறார்கள் என்பதைத் தெரிந்துவைத்திருக்கும் ஆறு சிப்பாய்கள் அதைச் செய்ய மாட்டார்கள்" என்று ஹோரேசே அர்க்காதியோ உறுதியாகச் சொன்னான். கணவனின் தர்க்கத்தை ஏற்றுக் கொள்ளாத ரெபேக்கா ஜன்னலருகில் நின்றாள். "அவர்கள் முட்டாள்கள்தாம் என்பதை நீயும் பார்க்கப் போகிறாய்" என்றாள்.

செவ்வாய்க்கிழமை காலை ஐந்து மணிக்கு ஹோரேசே அர்க்காதியோ காப்பியைக் குடித்து முடித்து நாய்களை அவிழ்த்து விட்டான். ரெபேக்கா ஜன்னலை மூடிவிட்டுத் தடுமாறி விழாமலிருக்கக் கட்டிலின் தலைப் பகுதியைப் பிடித்துக்கொண்டாள். "அவர்கள் அவனைக் கொண்டு வந்து கொண்டிருக்கிறார்கள்" என்று பெருமூச்சுவிட்டாள். "அவன் மிகவும் அழகன்." ஹோரேசே அர்க்காதியோ ஜன்னல் வழியாக எட்டி வைகறை வெளிச்சத்தில் நடுங்கி நிற்கும் அவரைப் பார்த்தான். அவர் ஏற்கனவே சுவருக்கு முதுகைக் காட்டியபடி நின்றிருந்தார். அக்குளில் இருந்த தகிக்கும் முடிச்சுகள் காரணமாகக் கைகளைக் கீழே இறக்க முடியாமல் இடுப்பில் வைத்திருந்தார். "ஒரு மனிதன் தன்னை எவ்வளவு நிலைகுலைய வைத்துக்கொள்கிறான்" கர்னல் அவுரேலியானோ புயேந்தியா சொல்லிக்கொண்டார். "ஒரு மனிதன் நிலைகுலைந்ததும் ஆறு நோஞ்சான் குட்டித் தெய்வங்கள் அவனைக் கொல்லலாம். அதற்காக அவன் எதுவும் செய்ய முடியாது." வெறிபிடித்துவிட்டதாகத் தோன்றுமளவுக்கு மிகுந்த ஆத்திரத்துடன் அதையே திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தார். அவர் பிரார்த்தித்துக்கொண்டிருக்கிறார் என்று நினைத்துக் கேப்டன் ரோக் கார்னிஸெரோ நெகிழ்ந்தார். படைப் பிரிவு அவரைக் குறி வைத்ததும் அந்த ஆத்திரம் கசப்பான சளிக் கட்டியாகத் திரண்டு நாக்கில் பரவி அதை மௌனமாக்கியது; கண்களை மூடச் செய்தது. விடியலின் அலுமினியப் பளபளப்பு மறைந்து அரைக் கால்சராய் போட்ட கழுத்தில் பட்டை அணிந்த சிறுவனாகத் தன்னைக் கண்டார். பிரகாசமான பிற்பகலில் அப்பா அவரைக் கூடாரத்துக்குள் அழைத்துச் செல்வதைப் பார்த்தார். பனிக்கட்டியைப் பார்த்தார். உரத்த முழக்கத்தைக் கேட்டபோது அது படைப்பிரிவுக்கான

கடைசி உத்தரவு என்று நினைத்தார். மின்னிப் பாய்ந்து வரும் வெடிகுண்டுகளைப் பார்க்கும் எதிர்பார்ப்புடன் அதிர்ச்சிக் குறுகுறுப் புடன் கண்களைத் திறந்தார். கேப்டன் ரோக் கார்னிஸெரோ அந்தரத் தில் உயர்த்திய கைகளுடனிருப்பதையும் ஹோசே அர்க்காதியோ குறி வைத்த துப்பாக்கியுடன் தெருவைக் குறுக்காகக் கடந்து வருவதை யும் மட்டுமே பார்க்க முடிந்தது.

"சுடாதே, தெய்வத்தின் கிருபைதான் உன்னை அனுப்பியிருக்கிறது" என்று ஹோசே அர்க்காதியாவிடம் கேப்டன் சொன்னார்.

இன்னொரு யுத்தம் அங்கேயே தொடங்கியது. கேப்டன் ரோக் கார்னிஸெரோவும் அவருடைய ஆறு ஆட்களும் ரியோஹாச்சாவில் மரண்தண்டனைக்கு விதிக்கப்பட்டிருந்த புரட்சிப் படைத் தளபதி விக்டோரியோ மேதினாவை விடுவிக்கக் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுடன் புறப்பட்டார்கள். மகோந்தாவைக் கண்டுபிடிக்க ஹோசே அர்க்காதியோ போன வழியில் மலைகளைக் கடந்தால் நேரத்தை மிச்சப்படுத்தலாம் என்று நினைத்தார்கள். ஆனால் ஒரு வாரத்துக்குள் அது அசாத்தியமானது என்று அவர்களுக்குப் புரிந்தது. எனவே, துப்பாக்கிப் பிரிவினர் வைத்திருந்ததைத் தவிர வேறு படைக் கலன்கள் இல்லை என்பதால் பாறைக் கூட்டங்கள் நிறைந்த ஆபத்தான மார்க்கத்தைத் தேர்ந்தெடுத்தார்கள். நகரங்களுக்குப் பக்கத்திலேயே முகாம் அமைத்தார்கள். அவர்களில் ஒருவன் மாறுவேடம் புனைந்து பட்டப் பகலிலேயே சிறிய தங்க மீனையும் கையில் எடுத்துக்கொண்டு, தலைமறைவாக இருந்த மிதவாதிகளைத் தேடிப் போனான். காலையில் வேட்டைக்குப் போன அந்த மிதவாதிகள் ஒருபோதும் திரும்பி வரவில்லை. மலைவிளிம்பை அடைந்து ரியோஹாச்சாவை அவர்கள் பார்த்தபோது ஜெனரல் விக்டோரியோ மேதினா சுட்டுக் கொல்லப் பட்டிருந்தார். கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் ஆதரவாளர்கள் கரீபியக் கடற்கரை முழுவதிலுமிருந்த புரட்சிப் படைகளுக்கு அவரைத் தலைமைத் தளபதியாக அறிவித்தார்கள். அவர் அந்தப் பொறுப்பை ஏற்றுக்கொண்டார். ஆனால் பதவி உயர்வை மறுத்தார். பழைமைவாதக் கட்சி ஆட்சியிலிருக்கும்வரை ஒருபோதும் பதவி உயர்வை ஏற்றுக் கொள்வதில்லை என்ற நிலைப்பாட்டை எடுத்தார். மூன்று மாதங்களின் முடிவில் ஆயிரம் பேரை ஆயுதமேந்தச் செய்வதில் அவர்கள் வெற்றி பெற்றார்கள். ஆனால் ஒடுக்கப்பட்டார்கள். தப்பிப் பிழைத்தவர்கள் கிழக்கு எல்லைப் பகுதியை அடைந்தார்கள். அவர்களைப் பற்றிக் கேள்விப்பட்ட அடுத்த தகவல் அவர்கள் ஆன்டிலீஸ் சிறு தீவுக்கூட்டங் களில் ஒன்றான காபோ தெ லா வேலாவை அடைந்தார்கள் என்பதுதான். அரசாங்கத்திடமிருந்து தந்தி வழியாக ஒரு செய்தி எல்லா இடங்களுக் கும் அனுப்பப்பட்டது. கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுக்கு மரணதண்டனை விதிக்கப்பட்டிருப்பதாக அந்தச் செய்தி நாடு முழுவதும் கோலாகலமாகப் பரப்பப்பட்டது. இரண்டு நாட்களுக்குப் பிறகு முந்தைய தந்தியைப் பின்னுக்குத் தள்ளிக்கொண்டு தெற்குப் பகுதியில் மற்றொரு போராட்டம் வெடித்திருப்பதாக இன்னொரு தந்தி அறிவித்தது. அப்படியாகத்தான் ஒரே சமயத்தில் எங்கும் பேசப்படும்

கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் தொன்மக் கதை பரவ ஆரம்பித்தது. அவர் வில்லனுயேவாவில் வெற்றி அடைந்தார் என்றும் குவாகாமயாவில் தோல்வியுற்றார் என்றும் மோதிலன் இந்தியர்களால் விழுங்கப்பட்டார் என்றும் சதுப்பு நிலக் கிராமத்தில் இறந்து கிடந்தார் என்றும் உருமிதாவில் மீண்டும் ஆயுதங்களுடன் எழுந்தார் என்றும் ஒன்றுக்கொன்று முரண்பட்ட தகவல்கள் ஒரே சமயத்தில் சொல்லப் பட்டன. அந்தச் சமயத்தில் மிதவாதத் தலைவர்கள் பேராயத்தில் பங்கேற்பதற்கான பேச்சு வார்த்தைகளை நடத்திக் கொண்டிருந்தார்கள். அவரை ஒரு சாகசக்காரனாக முத்திரை குத்தினார்கள். கட்சியின் பிரதிநிதியல்ல என்றார்கள். தேசிய அரசாங்கம் அவரைக் கொள்ளைக் காரர்களின் பட்டியலில் சேர்த்துத் தலைக்கு ஐந்து ஆயிரம் பெசோக்கள் விலையை நிர்ணயித்தது. பதினாறு தோல்விகளுக்குப் பின்னர் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா குவாஜிராவை விட்டு முழுமையான ஆயுதவீரர்களான இரண்டாயிரம் இந்தியர்களுடன் புறப்பட்டார். ரியோஹாச்சாவில் உறங்கிப் போயிருந்த அரசுப் படை திடீர் ஆக்கிரமிப்பால் பின்வாங்கி ஓடியது. அவர் தனது தலைமையகத்தை அங்கே நிறுவி அரசுக்கு எதிராக முழுப் போரை அறிவித்தார். அரசாங்கத்திடமிருந்து அவருக்கு வந்த முதல் செய்தி கிழக்கு எல்லை யோரத்திலிருந்து நாற்பத்தி எட்டு மணி நேரத்துக்குள் அவர் தனது படைகளைப் பின்வாங்கிக் கொள்ளாவிட்டால் கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் சுட்டுக் கொல்லப்படுவார் என்ற அச்சுறுத்தலாக இருந்தது. இதற்குள் அவருடைய தலைமை அதிகாரியாக ஆகியிருந்த கர்னல் ரோக் கார்னிஸெரோ அந்தத் தந்தியைக் கிலி நிரம்பிய பார்வையுட னேயே அவரிடம் கொடுத்தார். ஆனால் அவர் அதை முன்னெப் போதும் கண்டிராத மகிழ்ச்சியுடன் வாசித்தார். “எவ்வளவு அற்புதம். இப்போது மகோந்தாவில் நமக்குத் தந்தி அலுவலகம் இருக்கிறது” என்று ஆச்சரியப்பட்டார்.

அவருடைய பதில் திட்டவட்டமானதாக இருந்தது. மூன்று மாதங்களுக்குள் மகோந்தாவில் தன்னுடைய தலைமையகத்தை நிறுவ விரும்பினார். அந்தச் சமயத்தில் கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸைத் தான் அங்கே உயிருடன் பார்க்கவில்லை என்றால் அந்தக் கணத்தில் தன் கையில் கைதிகளாகப் பிடிபடும் எல்லா அதிகாரிகளையும் முதலில் தளபதிகள் என்ற வரிசைக்கிரமத்தில் தன் கையாலேயே சுட்டுக் கொல்வார். போர் முடியும்வரை அதையே செய்யும்படி தனது கீழுள்ள ஊழியர்களுக்கும் கட்டளை பிறப்பிப்பார். மூன்று மாதங்களுக்குப் பிறகு வெற்றி பெற்று மகோந்தாவுக்குத் திரும்பியபோது சதுப்புப் பகுதியிருக்கும் சாலையில் அவரை முதலில் கட்டியணைத்தது கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ்தான்.

வீடு முழுக்க குழந்தைகளாக இருந்தன.

சாந்தா சோபியா தெ லா பியாதெத்தை மூத்த பெண் குழந்தை யுடனும் அர்க்காதியோ சுட்டுக் கொல்லப்பட்டு ஐந்து மாதங்களுக்குப் பின்பு பிறந்த இரட்டைச் சிசுக்களுடனும் உர்சுலா வீட்டுக்குக் கூட்டி வந்திருந்தாள். இறந்து போனவனின் கடைசி விருப்பத்துக்கு

மாறாகப் பெண் குழந்தைக்கு ரெமேதியோஸ் என்று பெயரிட்டு ஞானஸ்நானம் செய்து வைத்தாள். "அதைத்தான் அர்க்காதியோ சொல்லியிருப்பான் என்று எனக்கு உறுதியாகத் தெரியும்" என்று சொல்லிக்கொண்டாள். "அவளை உர்சுலா என்று கூப்பிட வேண்டாம். அந்தப் பெயர் வைத்த பெண்கள் மிகவும் துன்பப்படுவார்கள்." இரட்டையர்களுக்கு ஹோராசே அர்க்காதியோ செகுந்தோ என்றும் அவுரேலியானோ செகுந்தோ என்றும் பெயரிடப்பட்டது. அமரந்தா அவர்களைப் பார்த்துக்கொண்டாள். வரவேற்பு அறையில் மர நாற்காலிகளைப் போட்டுப் பக்கத்துக் குடும்பங்களிலிருக்கும் குழந்தைகளையும் சேர்த்து ஒரு நர்சரிப் பள்ளிக்கூடத்தைத் தொடங்கினாள். கர்னல் அவுரேலியானோ புயேந்தியா திரும்பி வந்தபோது வாண வெடிகளுக்கும் மணி ஓசைகளுக்கும் மத்தியில் சிறுவர் இசைக்குழுவும் அவரை வரவேற்றது. அவுரேலியானோ ஹோராசே தாத்தாவைப் போல உயரமாக இருந்தான். புரட்சிப் படை அதிகாரி போல உடுப்பணிந்திருந்தான். அவருக்கு ராணுவ மரியாதை செலுத்தினான்.

எல்லாத் தகவல்களும் நல்லவையாக இருக்கவில்லை. கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் வெளியேற்றம் நடந்து ஒரு வருடத்துக்குப் பிறகு ஹோராசே அர்க்காதியோவும் ரெபேக்காவும் அர்க்காதியோ கட்டிய வீட்டில் குடியேறினார்கள். கொலைத் தண்டனையைத் தடுத்து நிறுத்திய குறுக்கீட்டைப் பற்றி யாருக்கும் தெரியவில்லை. சதுக்கத்தின் மிக அழகான மூலையில் மூன்று செங்குருவிக் கூடுகளால் கௌரவப்படுத்தப்பட்ட வாதுமை மர நிழலில் இருந்தது புதிய வீடு. விருந்தாளிகளை வரவேற்கப் பெரிய கதவும் வெளிச்சத்துக்காக நான்கு பெரிய ஜன்னல்களும் கொண்ட வீட்டை உபசரிப்பு இல்லமாக அமைத்தார்கள். ரெபேக்காவின் பழைய தோழிகள் சில வருடங்களுக்கு முன்பே கைவிடப்பட்டிருந்த எம்பிராய்டரி வகுப்புகளை பெகோனியாப் பூக்கள் நிறைந்த முற்றத்தில் மீண்டும் ஆரம்பித்தார்கள். இன்னும் ஒற்றையாகவே இருந்த மாஸ்கோட் சகோதரிகள் நான்கு பேரும் அதில் இருந்தார்கள். ஆக்கிரமித்த நிலங்கள் மூலம் ஹோராசே அர்க்காதியோ தொடர்ந்து இலாபம் உண்டாக்கிக்கொண்டிருந்தான். பழைமைவாத அரசாங்கம் அந்தப் பத்திரங்களை அங்கீகாரம் செய்திருந்தது. எல்லா நாள் பிற்பகலிலும் தன்னுடைய வேட்டை நாய்களுடனும் இரட்டைக் குழல் துப்பாக்கியுடனும் சேணத்தில் ஒரு கொத்து முயல்களைத் தொங்கவிட்டுக்கொண்டு குதிரைமேல் அவன் திரும்புவதைப் பார்க்க முடிந்தது. புயல் அச்சுறுத்தல் இருந்த ஒரு செப்டம்பர் மாதப் பிற்பகலில் அவன் வழக்கத்தைவிட முன்பே வீடு திரும்பினான். சாப்பாட்டு அறையில் ரெபேக்காவைப் பார்த்துப் பேசினான். நாய்களைச் சுற்றுக்கட்டில் கொண்டுபோய்க் கட்டினான். முயல்களை அப்புறமாக உப்புக்கண்டம் போடுவதற்காகச் சமையலறையில் தொங்கவிட்டான். பிறகு உடை மாற்றிக்கொள்ளப் படுக்கையறைக்குப் போனான். கணவன் படுக்கையறைக்குப் போனபோது தன்னை யாரோ குளியலறையில் பூட்டி வைத்ததாகவும் அதனால் எதையும் கேட்கவில்லை என்றும் ரெபேக்கா பின்னர் வெளிப்படுத்தினாள். அந்த வாசகம் நம்புவதற்குக் கடினமானதாக இருந்தது.

ஆனால் நம்பகமான வேறு எதுவும் இல்லை. தன்னை மகிழ்ச்சியாக வைத்துக் கொண்டவனைக் கொலைசெய்ய ரெபேக்காவுக்கு ஏதாவது உள்நோக்கம் இருக்கும் என்று யாராலும் யோசிக்க முடியவில்லை. மகோந்தாவில் ஒருபோதும் தெளிவுபடுத்தப்படாமல் போன மர்மம் ஒருவேளை அதுவாக இருக்கலாம். ஹோசே அர்க்காதியோ படுக்கை யறைக்குள் புகுந்து கதவை மூடிக்கொண்ட உடனேயே துப்பாக்கி வெடித்த சத்தம் வீடு முழுவதும் எதிரொலித்தது. ஒரு சிறு ரத்த ஓடை கதவுக்கு அடியிலாகக் கூடத்தைத் தாண்டித் தெருவை நோக்கி நகர்ந்து தாறுமாறாக இருந்த கட்டடங்களின் குறுக்கே நேர்க்கோடாகத் தொடர்ந்து படிகளிறங்கி வேலித் தடுப்புகளில் ஏறித் துருக்கித் தெருவைக் கடந்து மூலையில் வலது பக்கமாகவும் இன்னொரு மூலையில் இடது பக்கமாகவும் திரும்பி நேர் கோணத்தில் ஓடிப் புயேந்தியா இல்லத்துக்குள் நுழைந்து மூடப்பட்ட கதவுக்குக் கீழே போய் வரவேற்பறையைக் குறுக்காகத் தாண்டிக் கம்பளங்களைக் கறைப்படுத்திவிடக் கூடாது என்று சுவரையொட்டி ஊர்ந்து இன்னொரு வசிப்பறைக்குப் போய் சாப்பாட்டுக் கூடத்திலிருந்த உணவு மேஜையைத் தவிர்க்க விரிவான வட்டமடித்துப் பெகோனியாப் பூக்கள் இருக்கும் தாழ்வாரத்தின் வழியாக அவுரேலியானோ ஹோசேவுக்குக் கணக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துக்கொண்டு உட்கார்ந்திருந்த அமரந்தாவின் பார்வைக்குப் படாமல் நாற்காலிக்கு அடியிலாகப் பண்ட அறை வழியாகச் சமையலறைக்குள் ரொட்டி தயாரிக்க முப்பத்தி ஆறு முட்டைகளை உடைக்க ஆயத்தமாக நின்றுகொண்டிருந்த உர்சுலாவின் பக்கத்தில் வந்து தேங்கி நின்றது.

"கடவுளின் பரிசுத்த அன்னையே!" உர்சுலா உரக்கக் கூவினாள்.

அவள் அந்த ரத்த இழை எங்கிருந்து வருகிறது என்று கண்டுபிடிப் பதற்காக அதன் போக்கில் பின்தொடர்ந்து பண்ட அறை வழியாக அவுரேலியானோ ஹோசே மூன்றும் மூன்றும் ஆறு, ஆறும் மூன்றும் ஒன்பது என்று உருப்போட்டுக்கொண்டிருந்த பெகோனியாத் தாழ் வாரத்தை ஒட்டி நடந்து சாப்பாட்டு அறையையும் வசிப்பறைகளையும் கடந்து நேராகத் தெருவில் இறங்கி முதலில் வலது பக்கமாகவும் பின்னர் இடது பக்கமாகவும் திரும்பித் துருக்கித் தெருவில் நுழைந்த போது, தான் இன்னும் அடுமனை முந்தானையிலும் வீட்டு உபயோகச் செருப்பணிந்தும் இருப்பதையும் மறந்து சதுக்கத்துக்கு வந்து அவள் ஒருபோதும் கால்வைத்திராத வீட்டின் கதவு வழியாக நுழைந்து படுக்கையறைக் கதவைத் தள்ளியதும் வெடிமருந்துப் புகையால் ஏறக் குறைய மூச்சுத் திணறி தரையில் அவிழ்த்துப் போட்டிருந்த தோல் காலுறை மேல் முகம் பதியக் கிடந்த ஹோசே அவுரேலியானோவை யும் ரத்த ஓடையின் ஆரம்பப் புள்ளியையும் பார்த்தாள். அவனுடைய வலது காதிலிருந்து வழிந்துகொண்டிருந்த ரத்தம் ஏற்கனவே நின்றிருந்தது.

அவன் உடலில் காயம் எதையும் பார்க்க முடியவில்லை; ஆயுதத்தை யும் கண்டுபிடிக்க முடியவில்லை. சடலத்திலிருந்து வீசிய வெடிமருந்து நெடியையும் அகற்ற முடியவில்லை. முதலில் அவனை மூன்று முறை சோப்பும் பிரஷ்ஷும் போட்டுக் கழுவினார்கள். பிறகு உப்பும்

காடியும் கலந்து துடைத்தார்கள். பின்னர் சாம்பலையும் எலுமிச்சைச் சாற்றையும் கலந்து பூசினார்கள். கடைசியாகப் படிகார நீர் நிரப்பிய பீப்பாயில் ஆறுமணி நேரம் வைத்தார்கள். அதிகமாக உரசித் தேய்த்ததனால் அவன் குத்தியிருந்த பச்சையின் சித்திரங்கள் மங்கத் தொடங்கின. மிளகு, சீரகம், புன்னை இலைகள் எல்லாம் போட்டுப் பாடம் செய்து ஒருநாள் முழுவதும் நிதானமான தீயில் வேகவைக்கலாம் என்ற மூர்க்கத்தனமான நடவடிக்கையைப் பற்றி அவர்கள் யோசித்துக் கொண்டிருந்தபோதே அவன் அழுகத் தொடங்கியிருந்தான். எனவே அவசரமாக அவனைப் புதைக்க நேர்ந்தது. ஏழு அடி நீளமும் நான்கு அடி அகலமும் கொண்ட உள்ளே இரும்புத் தகடுகள் பதித்த காற்றுப் புகாத பிரத்தியேகமான சவப்பெட்டியில் அவனை வைத்து மூடினார்கள்; இரும்பு ஆணிகள் போட்டு முறுக்கினார்கள். இருந்தும் சவ ஊர்வலம் தெருக்களைக் கடந்து போனபோது நாற்றம் அடித்தது. மத்தளம் போலப் பெருத்தும் இறுகியும் போயிருந்த ஈரலுடன் கிடந்த அருட்தந்தை நிக்கனார் படுக்கையிலிருந்தபடியே அவனை ஆசீர்வதித்தார். பின்னர் வந்த மாதங்களில் சவக்குழியைச் சுற்றிச் சுவரெழுப்பி அதற்குள் சாம்பலையும் மரத்தூளையும் சுண்ணாம்பையும் கொட்டினார்கள். இருந்தபோதும் பல வருடங்களுக்குப் பிறகு வாழைப்பழக் கம்பெனிப் பொறியாளர்கள் கான்கிரீட் போட்டுக் கல்லறையை மூடும் வரைக்கும் வெடிமருந்தின் வாடை வீசிக்கொண்டிருந்தது. சடலத்தை எடுத்ததும் ரெபேக்கா தன் வீட்டுக் கதவுகளை அடைத்துக்கொண்டு அதற்குள் தன்னை உயிரோடு புதைத்துக்கொண்டாள். அவள் தன்னை மூடிக் கொண்ட இகழ்ச்சியின் கெட்டியான ஓட்டினை உலகியல் சார்ந்த எந்தத் தூண்டுதல் மூலமும் ஒருபோதும் உடைக்க முடியவேயில்லை. மிகவும் வயதான பின்பு அலையும் யூதன்* நகரத்தின் வழியே போனதும் வெப்பக் காற்று வலுவாக அலையடித்துப் பறவைகள் சூடு தாங்க முடியாமல் ஜன்னல் கண்ணாடிகளை உடைத்து வீட்டுக்குள் புகுந்து படுக்கையறைகளில் சாகத் தொடங்கியதுமான காலத்தில் பழைய வெள்ளி நிறமுள்ள காலணிகள் அணிந்து சின்னப் பூக்கள் பதித்த தொப்பியைப் போட்டுக்கொண்டு, ஒரே ஒருமுறை தெருவில் இறங்கினாள். அவளுடைய வீட்டுக் கதவைப் பலவந்தமாக உடைக்க முயன்று கொண்டிருந்த திருடனை ஒரே தோட்டாவில் அவள் சுட்டுக் கொன்றாள். அவளைக் கடைசி முறை உயிரோடு எவராவது பார்த்ததும் அப்போதுதான். அதற்குப் பிறகு அவளுடைய பணிப்பெண்ணும் நம்பிக்கைக்குரியவளுமான அர்கேனிதாவைத் தவிர வேறு யாரும் அவளுடன் தொடர்பில் இருக்கவில்லை. ஒருகாலத்தில் அவள்

---

* ஒரு பழங்கதை. யேசு கிறிஸ்து சிலுவையைச சுமந்து கல்வாரி மலையேறும் வழியில் அஹாசியூரஸ் என்ற செருப்புத தைப்பவனின வீட்டைக் கடந்தார். அப்போது 'அவரைச சிலுவையில் அறையுங்கள்' என்று அஹாசியூரஸ் உரககக கூவினான். சுமை தாளாமல யேசு அவன் வீட்டு வாசலில் இளைப்பாற நின்றபோது, 'நீ எங்கிருந்து வந்தாயோ அங்கேயே போ' என்று விரட்டினான். யேசு அவனைப் பார்த்துச சொன்னார்: 'நான இங்கே நின்று இளைப்பாறுவேன. ஆனால் நீ உன் கடைசி நாளவரை போயககொண்டே இருப்பாய்.' அன்று முதல் அநத யூதன பூமி முழுவதும் அலைந்துகொணடிருககிறான.

தன்னுடைய முறைப் பையன் என்று சொல்லிக்கொண்டிருந்த பிஷப்புக்குக் கடிதங்கள் எழுதிக் கொண்டிருந்தது கண்டுபிடிக்கப்பட்டது. ஆனால் அவளுக்குப் பதில் வந்ததா என்பது சொல்லப்படவில்லை. அந்த நகரம் அவளை மறந்தது.

வெற்றியாளனாகத் திரும்பி வந்தபோதும் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுக்கு நிலைமைகளின் தோற்றம் உற்சாகம் தருவதாக இல்லை. அரசுத் துருப்புகள் எதிர்ப்பில்லாமல் தமது முகாம்களைக் கைவிட்டன. மிதவாத ஆதரவாளர்களுக்கிடையே அந்தப் பொய்த் தோற்றம் ஒரு வெற்றியாகத் தோன்றியது. எதையும் அழித்தொழிப்பது சரியல்ல என்று நினைத்தார்கள். ஆனால் புரட்சிக்காரர்களுக்கு உண்மை தெரிந்திருந்தது. அவர்கள் எவரையும்விட கர்னல் அவுரேலியானோ புயேந்தியா அதை அதிகமாகத் தெரிந்துவைத்திருந்தார். அந்தச் சமயத்தில் அவருடைய கட்டுப்பாட்டில் ஐந்தாயிரம் சிப்பாய்கள் இருந்தார்கள். கடலோர மாநிலங்கள் இரண்டும் இருந்தன. இருந்தும் தான் கடலால் சுற்றி வளைக்கப்பட்டிருக்கும் உணர்வுடன் இருந்தார். குழப்பமான சூழ்நிலையில் அகப்பட்டிருக்கும் உணர்வுடனேயே ராணுவப் பீரங்கித் தாக்குதலில் இடிந்துபோன தேவாலய ஊசிக் கோபுரத்தைப் புதுப்பிக்க ஆணையிட்டார். அருட்தந்தை நிக்கனார் தனது நோய்ப் படுக்கையில் கிடந்து "இது அற்பத்தனம். விசுவாசிகளே தேவாலயத்தை நாசமாக்குகிறார்கள். கொத்தர்கள் அதை மறுபடிக் கட்டுகிறார்கள்" என்று அபிப்பிராயப்பட்டார். தப்புவதற்கான வழி யிருக்கிறதா என்று பார்ப்பதற்காக மற்ற நகரங்களின் படைத் தலைவர்களுடன் தந்தி அலுவலகத்தில் நீண்ட நேரம் ஆலோசனைகள் நடத்தினார். யுத்தம் இக்கட்டான நிலைமையில் இருக்கிறது என்ற திடமான எண்ணத்துடன்தான் ஒவ்வொரு முறையும் எழுவார். மிதவாதிகளின் புதிய வெற்றிகள் பற்றிய செய்திகள் ஆரவாரத்துடனும் கொண்டாட்டத்துடனும் வரவேற்கப்பட்டன. ஆனால் அவற்றின் உண்மையான அர்த்தம் என்னவென்று நிலப்படத்தில் பார்ப்பார். தனது படைகள் காட்டுக்குள் ஊடுருவி மலேரியாவிலிருந்தும் கொசுக் களிடமிருந்தும் தங்களைக் காப்பாற்றிக்கொண்டு எதார்த்தத்துக்கு நேர் எதிர்த் திசையில் முன்னேறிக் கொண்டிருப்பதையே கண்டார். "நாம் காலத்தை வீணடித்துக் கொண்டிருக்கிறோம்" என்று தனது அதிகாரிகளிடம் குறைப்பட்டுக்கொள்வார். "நாம் காலத்தை வீணடித்துக் கொண்டிருக்கும்போது, கட்சியிலிருக்கும் வேசி மகன்கள் பேராயத்தில் பதவிக்காகப் பிச்சை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள்." மரணத்தைக் காத்திருந்த அதே அறையில் உறக்க மஞ்சத்தில் நீட்டிப் படுத்து இரவு முழுதும் விழித்திருந்து கறுப்பு அங்கியணிந்த வழக்கறிஞர்கள் அதிகாலையின் பனிக்குளிரில் அதிபர் மாளிகையிலிருந்து வெளிவந்து தங்கள் கோட்டின் பட்டிகளைக் காதுவரை இழுத்து விட்டுக்கொண்டு கைகளைத் தேய்த்துக்கொண்டும் குசுகுசுத்துக் கொண்டும் அழுதுவடி யும் காலை நேர உணவகங்களில் அடைக்கலம் தேடி 'ஆம்' என்று சொன்னபோது அதிபர் என்ன நினைத்திருப்பார் என்று யூகிப்பதையோ அல்லது 'இல்லை' என்று அதிபர் சொன்னபோது என்ன நினைத் திருப்பார் அல்லது இரண்டுமல்லாமல் முற்றிலும் வேறு ஒன்றைச்

சொல்லும்போது அதிபர் என்ன யோசித்துக் கொண்டிருந்திருப்பார் என்பதையோ கற்பனை செய்து கொண்டிருப்பார். தொண்ணூற்றைந்து டிகிரி வெப்பநிலையில் கொசுக்களை விரட்டிக்கொண்டு தனது வீரர்களைக் கடலில் குதிக்கும்படி கட்டளை பிறப்பிக்கவிருக்கும் பொழுது விடியப்போகும் பயத்துடன் யோசித்துக்கொண்டும்தான் கற்பனையில் மூழ்கியிருப்பார். நிச்சயமின்மையின் இரவொன்றில் முற்றத்தில் பிலர் தெர்னேரா படை வீரர்களுடன் பாடிக்கொண்டிருந்தபோது அவர் சீட்டை வாசித்து எதிர்காலத்தைச் சொல்லச் சொன்னார். பிலர் தெர்னேரா சீட்டுகளைப் பரப்பி மூன்று முறை தேடி எடுத்த சீட்டில் இருந்தது "உன் வாயைப் பற்றிக் கவனமாக இரு" என்ற வாசகம்தான். "அது என்னவென்று எனக்கும் தெரியவில்லை. ஆனால் கணிப்புத் துல்லியமாக இருக்கிறது. உன் வாயைப் பற்றிக் கவனமாக இரு." இரண்டு நாட்களுக்குப் பிறகு யாரோ ஆர்டர்லியிடம் ஒரு குவளை வறக்காப்பியைக் கொடுத்தார்கள். அவன் அதை வேறு யாருக்கோ கொடுத்தான். அந்த வேறு யாரோ அதை இன்னொருவருக்குக் கொடுத்துக் கைமாறிக் கைமாறி அது கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் அலுவலகத்துக்கு வந்து சேர்ந்தது. காப்பி வேண்டுமென்று அவர் கேட்கவில்லை. எனினும் அங்கே இருந்தது என்பதால் கர்னல் அதைப் பருகினார். ஒரு குதிரையைக் கொல்லுமளவுக்கான எட்டிக்காய் விஷம் அதிலிருந்தது. அவர்கள் அவரை வீட்டுக்குத் தூக்கி வந்தபோது விறைத்து வளைந்து போயிருந்தார். நாக்கு பற்களுக்கிடையில் வெளியே துருத்தியிருந்தது. அவரைப் பிடித்திருந்த மரணத்துடன் உர்சுலா போராடினாள். விஷ முறி மருந்துகளால் அவர் வயிற்றைக் கழுவினாள். பிறகு கதகதப்பான போர்வைகளைப் போர்த்தினாள். அவருடைய துன்புற்ற உடம்பு சாதாரண வெப்பநிலைக்குத் திரும்பும்வரையான இரண்டு நாட்களும் முட்டையின் வெள்ளைக் கருவைப் புகட்டினாள். நான்காவது நாள் அவர் அபாயக் கட்டத்தைக் கடந்தார். தனது விருப்பத்தை மீறி உர்சுலாவும் அவருடைய அதிகாரிகளும் வற்புறுத்தியதால் மேலும் ஒரு வாரம் படுக்கையிலேயே இருந்தார். தனது கவிதைகள் எரிக்கப்படவில்லை என்று அப்போதுதான் அவருக்குத் தெரிந்தது. "நான் அவசரப்பட விரும்பவில்லை. அன்றைக்கு இரவு அடுப்பைப் பற்றவைக்கப் போனபோது உடம்பைக் கொண்டு வரும் வரைக்கும் காத்திருப்பது நல்லது என்று எனக்குள்ளேயே சொல்லிக்கொண்டேன்" என்றாள் உர்சுலா. நோய் நீங்கிய அந்தக் குழப்பநிலையில் ரெமேதியோஸின் தூசி படிந்த பொம்மைகளுக்கு மத்தியில் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா தனது கவிதையை வாசித்ததன் மூலம் தனது வாழ்க்கையைத் தீர்மானித்த காலகட்டங்கள் திரும்பக் கண்டார். அவர் மீண்டும் எழுத ஆரம்பித்தார். எதிர்காலமில்லாத யுத்தத்தின் ஆச்சரியத்தின் விளிம்பில் சமநிலைப் படுத்திக்கொண்டு மணிக்கணக்காக உட்கார்ந்து மரணத்தின் கடையில் தனக்கு நேர்ந்த அனுபவங்களைக் கவிதையில் சித்திரித்தார். அவரது சிந்தனைகள் தெளிவடைந்தன. அவற்றை முன்னும் பின்னுமாகப் பரிசோதிக்கவும் அவரால் முடிந்தது. ஒருநாள் இரவு கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸிடம் கேட்டார். "என் பழைய நண்பா, சொல்லு, நீ எதற்காகப் போர் செய்கிறாய்?"

“வேறு என்ன காரணம் இருக்க முடியும்? மகத்தான மிதவாதக் கட்சிக்காக” என்று கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் பதில் சொன்னான்.

“நீ அதிர்ஷ்டக்காரன், ஏனென்றால் எதற்கு என்று உனக்குத் தெரிந்திருக்கிறது” என்று பதிலளித்தார். “என்னைப் பொறுத்தவரை இப்போதுதான் புரிந்துகொள்ள ஆரம்பித்திருக்கிறேன். நான் கௌரவத்துக்காகச் சண்டை போட்டுக்கொண்டிருக்கிறேன்.”

“அது மிக மோசம்” என்று கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் சொன்னான். அவனுடைய அதிர்ச்சி கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுக்கு வேடிக்கையாக இருந்தது. “உண்மையில், எப்படியிருந்தாலும் நீ யாரோடு சண்டை போடுகிறாய் என்று தெரியாமலிருப்பதைவிட அது மேலானது” என்றான். அவனை நேருக்கு நேர் பார்த்துப் புன்னகையுடன் “அல்லது உன்னைப் போல எந்த அர்த்தமும் இல்லாத ஏதோ ஒன்றுக்காகச் சண்டையிடுவது யாருக்கும் எந்த அர்த்தத்தையும் தராது” என்றான்.

அவர் ஒரு கொள்ளைக்காரன் என்ற பிரகடனம் செய்ததைக் கட்சித் தலைவர்கள் வெளிப்படையாகத் திரும்பப் பெறும்வரை நாட்டின் உட்பகுதிகளிலிருந்த ஆயுதமேந்திய அணிகளுடன் அவரால் தொடர்பு வைத்துக்கொள்ள முடியவில்லை. இருப்பினும், அந்த மனசாட்சிக் குத்தலை ஒதுக்கிவைத்தால் போரின் நச்சு வளையத்தைத் தன்னால் முறியடிக்க முடியுமென்றும் அவருக்குத் தெரியும். அப்படிச் சிந்திப்பதற்கான அவகாசத்தை நோய் நீங்கிய தருணம் அவருக்குக் கொடுத்திருந்தது. உர்சுலாவின் புதைத்து வைத்த தங்கத்தின் மீதியையும் அவளுடைய கணிசமான சேமிப்பையும் அவரால் பெற முடிந்தது. கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸை மகோந்தாவின் சிவில், ராணுவத் தலைவராக நியமித்தார். உட்பகுதிகளிலிருந்த போராட்டக் குழுக்களுடன் தொடர்புகொள்ளப் புறப்பட்டார்.

கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ், கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் நெருங்கிய நண்பன் மட்டுமல்ல. உர்சுலா அவனைக் குடும்பத்தில் ஒருவனாகவே வரவேற்றாள். மென்மையானவன், கூச்ச சுபாவி, இயல்பாகவே நல்ல நடத்தையுள்ளவன். இருந்தபோதும் அரசாங்கத்தைவிட யுத்தத்துக்கே அவன் பொருத்தமானவனாக இருந்தான். அவனுடைய அரசியல் ஆலோசகர்கள் எளிதில் சித்தாந்தச் சுழலுக்குள் அவனைத் தள்ளிவிட்டார்கள். எனினும் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா கனவு கண்டது போல மகோந்தாவுக்கு ஒரு கிராமிய அமைதியை அளிப்பதிலும் அதன் மூலம் அவர் முதுமைக் காலத்தில் சிறிய தங்க மீன்களை உற்பத்தி செய்து மரித்துப்போவதற்கான சூழ்நிலையை உருவாக்குவதிலும் அவன் வெற்றியடைந்தான். அவன் தனது பெற்றோர் வீட்டில்தான் வசித்தான். இருந்தாலும் வாரத்தில் இரண்டோ மூன்றோ முறை பகலுணவுக்கு உர்சுலாவின் இல்லத்துக்கு வந்துவிடுவான். அவுரேலியானோ ஹோசேவுக்கு ஆயுதங்களைப் பயன்படுத்துவதில் பயிற்சியளித்தான். ஆரம்பக் கட்ட ராணுவ நடைமுறைகளைச் சொல்லிக் கொடுத்தான். உர்சுலாவின்

சம்மதத்துடன் அவனைப் பல மாதங்கள் ராணுவக் குடியிருப்பில் வசிக்கக் கொண்டு போனான். அதன் மூலம் அவன் ஒரு ஆள் ஆக முடியும். பல ஆண்டுகளுக்கு முன்பு, சிறுவனாக இருந்தபோதே ஜெரினெல்தோ மார்க்கேஸ் தனது காதலை அமரந்தாவிடம் தெரிவித் திருந்தான். அந்தச் சமயத்தில் அவள் பியத்ரோ கிரெஸ்பி மேலிருந்த ஆசையில் பிரமித்திருந்ததால் அதைக் கேலியாகச் சிரித்து ஒதுக்கினாள். ஜெரினெல்தோ மார்க்கேஸ் காத்திருந்தான். ஒரு சமயம் சிறையில் இருந்தபோது தன்னுடைய அப்பாவின் பெயரின் முதலெழுத்தை ஒரு டஜன் மெல்லிய கைக்குட்டைகளில் எம்பிராய்டரி செய்து தரமுடியுமா என்று விசாரித்து ஒரு குறிப்பை அனுப்பினான். பணத்தை யும் அவளுக்கு அனுப்பினான். ஒரு வாரத்துக்குப் பிறகு அமரந்தா அந்த ஒரு டஜன் கைக்குட்டைகளையும் பணத்தையும் எடுத்துக்கொண்டு சிறைக்கு வந்தாள். பழைய நாட்களைப் பற்றி அவர்கள் மணிக்கணக் காகப் பேசிக்கொண்டிருந்தார்கள். அவள் புறப்படும்போது ஜெரினெல்தோ மார்க்கேஸ் "நான் இங்கிருந்து வெளியே வந்ததும் உன்னைத் திருமணம் செய்துகொள்வேன்" என்றான். அமரந்தா சிரித்தாள். எனினும் குழந்தை களுக்கு வாசிக்கக் கற்றுக்கொடுத்துக் கொண்டிருந்தபோது அவனைப் பற்றியே நினைத்தாள். அதே சமயம் பியத்ரோ கிரெஸ்பியிடம் தோன்றிய இளம் பருவத்து ஆசையையும் உயிர்ப்பித்துக்கொண்டாள். சிறைக் கைதிகளைச் சந்திக்கும் நாளான சனிக்கிழமைகளில் வீட்டுக்கு அருகில் ஜெரினெல்தோ மார்க்கேஸின் பெற்றோர் வருவதற்காகக் காத்து நின்று அவர்களுடன் சேர்ந்து சிறைக்குப் போவாள். அது போன்ற சனிக்கிழமைகள் ஒன்றில் அவளைச் சமையலறையில் பார்த்த உர்சுலா வியப்படைந்தாள். அடுகலத்திலிருந்து பிஸ்கோத்துகள் வெந்து வெளியே வருவதற்காக, அவற்றிலிருந்து நல்லவற்றை எடுத்து அந்தச் சந்தர்ப்பத்துக் காகவே எம்பிராய்டரி செய்த துவாலையில் கட்டிக்கொண்டு போகக் காத்திருந்தாள்.

"அவனைத் திருமணம் செய்துகொள்" என்று உர்சுலா அவளிடம் சொன்னாள். "அவனைப் போல இன்னொருவனைக் கண்டுபிடிக்க நீ பாடுபட வேண்டியிருக்கும்" என்றாள். அமரந்தா அதிருப்தியாக இருப்பது போலப் பாசாங்கு செய்தாள்.

"ஆண்களை வேட்டையாடி அலைய வேண்டிய தேவை எனக் கில்லை. நான் இந்தப் பிஸ்கோத்துகளை ஜெரினெல்தோவுக்குக் கொண்டு போவது உடனேயோ அப்புறமோ அவர்கள் அவனைச் சுட்டுக் கொல்லுவார்கள் என்ற இரக்கத்தினால்தான்" என்று பதில் சொன்னாள்.

அவள் அதை யோசிக்காமல்தான் சொன்னாள். ஆனால் அந்தத் தருணத்தில்தான் புரட்சிப் படை ரியோஹாச்சாவை ஒப்படைக்கா விட்டால் கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் சுட்டுக் கொல்லப் படுவான் என்று அரசாங்கம் மிரட்டல் விடுத்திருந்தது. சிறைச் சந்திப்புகள் தடைப்பட்டன. தன்னுடைய அஜாக்கிரதையான பேச்சு இன்னொரு சாவுக்கும் காரணமாகிவிடுமோ என்று நினைத்து ரெமேதியோஸ் இறந்தபோது அவளைச் சித்திரவதை செய்த அதே

குற்ற உணர்வுடன் அமரந்தா அறைக்குள் அடைந்து கிடந்து அழுதாள். அம்மா ஊர்சுலா அவளுக்கு ஆறுதல் சொன்னாள். மரண தண்டனையைத் தடுக்கக் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா ஏதாவது செய்வார் என்று வலியுறுத்திச் சொன்னாள். போர் முடிந்ததும் கர்னல் ரெஜினெல்தோ மார்க்கேஸை வசப்படுத்தும் பொறுப்பைத் தானே செய்யப் போவதாகவும் வாக்களித்தாள். கற்பனை செய்திருந்த காலத்துக்கு முன்பே அவள் தன்னுடைய வாக்குறுதியை நிறைவேற்றவும் செய்தாள். மகோந்தாவின் சிவில், ராணுவத் தலைவர் என்ற புதிய கௌரவத்துடன் கர்னல் ரெஜினெல்தோ மார்க்கேஸ் திரும்ப வீட்டுக்கு வந்தபோது ஒரு மகனைப் போல அவனை வரவேற்றாள். அவனைப் புகழ்ந்து பேசி அதிக நேரம் அங்கே தங்கச் செய்தாள். அமரந்தாவைத் திருமணம் செய்துகொள்ளும் அவனுடைய திட்டத்தை ஞாபகப் படுத்திக் கொள்ளும்படி உயிர் உருக அவனிடம் மன்றாடினாள். அவளுடைய இறைஞ்சல்களுக்குப் பதில் கிடைக்கும் என்றுதான் தோன்றியது. அந்த வீட்டுக்குப் பகலுணவு அருந்த வரும் நாட்களில் கர்னல் ரெஜினெல்தோ மார்க்கேஸ் பிகோனியா முற்றத்தில் அமரந்தாவுடன் சைனீஸ் செக்கர்ஸ் விளையாடுவான். உர்சுலா அவர்களுக்குக் காப்பியும் பாலும் பிஸ்கோத்துகளும் கொண்டுவந்து வைப்பாள். குழந்தைகள் அவர்களுக்குத் தொல்லை கொடுக்காதபடி பார்த்துக் கொள்வாள். இதயத்துக்குள் தனது இளமை வேட்கையின் சாம்பலைக் கிளறிவிட அமரந்தா உண்மையாகவே முயன்றாள். பொறுத்துக் கொள்ள முடியாத பரிதவிப்புடன் பகலுணவு தினங்களுக்காகவும் சைனீஸ் செக்கர்ஸ் பிற்பகல்களுக்காகவும் காத்திருந்தாள். நினைத்து ஏங்க வைக்கும் பெயர் கொண்ட அந்த வீரன் நுட்பமாக அவன் காய்களை நகர்த்தும்போது நேரம் பறந்துபோனது. ஆனால் கர்னல் ரெஜினெல்தோ மார்க்கேஸ் அவளைத் திருமணம் செய்துகொள்ளும் ஆசையை மீண்டும் வெளிப்படுத்தியபோது நிராகரித்தாள். "நான் யாரையும் திருமணம் செய்துகொள்ளப் போவதில்லை. அதிலும் உன்னை. நீ அவுரேலியானோவை மிகவும் நேசிக்கிறாய். அவனைத் திருமணம் செய்துகொள்ள முடியாது என்பதால் என்னை மணந்து கொள்ள விரும்புகிறாய்" என்று அவனிடம் சொன்னாள்.

கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் பொறுமைசாலி. "நான் வற்புறுத்திக் கொண்டிருப்பேன்." என்றான். "உடனடியாகவோ பிறகோ உன்னைச் சம்மதிக்க வைப்பேன்". அவன் வீட்டுக்கு வந்து போய்க் கொண்டிருந்தான். தன்னுடைய ரகசியக் கண்ணீரைக் கட்டுப்படுத்திக் கொள்வதற்காக உதடுகளைக் கடித்துக்கொண்டாள். உர்சுலாவிடம் அவன் போர்ச் செய்திகளைச் சொல்லும்போது அவை விழாமலிருக்கக் கதவைச் சாத்திப் படுக்கையறையில் உட்கார்ந்து காதுகளில் விரல் களைத் திணித்துக்கொண்டாள். உண்மை என்னவென்றால் அவனைப் பார்க்க ஏங்கியபோதும் வெளியே போய் அவனைச் சந்தித்து விடாமலிருப்பதற்கான வலுவும் அவளுக்கு இருந்தது.

அந்த நாட்களில் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா இரண்டு வாரங்களுக்கு ஒருமுறை அவ்வப்போது ஒரு விரிவான அறிக்கையை

மகோந்தாவுக்கு அனுப்புவார். வெளியேறி வந்து ஏறத்தாழ எட்டு மாதங்களுக்குப் பின்பு ஒரே ஒருமுறை உர்சுலாவுக்குக் கடிதம் எழுதினார். கர்னலின் நேர்த்தியான கையொப்பமுள்ள அந்தக் காகிதத்தை மூடி முத்திரையிட்ட உறையில் ஒரு சிறப்புத் தூதன் கொண்டு வந்திருந்தான். 'அப்பாவை நன்றாகப் பார்த்துக்கொள்ளவும். ஏனென்றால் அவர் சாகப் போகிறார்.' உர்சுலா அதிர்ந்தாள். "அவுரேலியானோ அப்படிச் சொன்னால் சரியாகத்தான் இருக்கும். ஏனென்றால் அவுரேலியானோவுக்கு எல்லாம் தெரியும்" என்றாள். மற்றவர்களை உதவச் சொல்லி ஹோசே அர்க்காதியோவை அவரது படுக்கையறைக்குக் கொண்டு சென்றாள். அவர் முன்னைவிடப் பாரமாக இருந்தார் என்பதோடு நீண்ட காலம் செந்தவிட்டு மரத்தடியில் உட்கார்ந்திருந்ததனால் ஏழு ஆட்கள் ஒன்று சேர்ந்தும் தூக்க முடியாத அளவுக்குத் தானாகவே சதைபோட்டிருந்தது. அவரைப் படுக்கை யறைக்கு இழுத்துத்தான் கொண்டு போனார்கள். அந்த அறைக்குள் மெல்லிய காளான்களின் வாசனையும் மரத்தில் பூத்த பூஞ்சணங்களின் வாடையும் புற உலகத்தின் பழைமையும் அடர்த்தியும் கலந்த நெடியும் நிரம்பியிருந்தது. அது வெயிலிலும் மழையிலும் கிடந்த அந்தப் பிரம்மாண்டமான கிழவரின் சுவாசம் போலிருந்தது. மறுநாள் காலையில் அவரைப் படுக்கையில் காணவில்லை. அவருடைய உடல் வலுவுக்குக் குறைவில்லை. எனினும் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா எதிர்த்து நிற்கும் நிலைமையில் இல்லை. அவரைப் பொறுத்தவரை எல்லாம் ஒன்றுதான். செந்தவிட்டு மரத்தடிக்குப் போக வேண்டும் என்பது அவருடைய விருப்பமல்ல; அவருடைய உடம்பின் பழக்கம். உர்சுலா அவரை அக்கறையாகப் பார்த்துக் கொண்டாள். உணவு கொடுத்தாள். அவுரேலியானோவைப் பற்றிய தகவல்களைச் சொன்னாள். ஆனால் வெகுகாலமாக அவரால் தொடர்புகொள்ள முடிந்த ஒரே ஆள் புருடென்சியோ அகுய்லர் மட்டுமே. மரணத்தின் இறுதிக் கட்டத்தில் ஏறத்தாழ நொறுங்கிக் கொண்டிருந்த தருணத்தில்தான் புருடென்சியோ அகுய்லர் தினமும் இரண்டு முறை அவரிடம் அரட்டையடிக்க வந்தான். அவர்கள் சண்டைச் சேவல்களைப் பற்றிப் பேசினார்கள். அந்த மகத்தான பறவைகளை இனவிருத்தி செய்வதற்கு ஒரு பண்ணை அமைக்க வேண்டும். அவற்றின் வெற்றியைப் பார்த்து மகிழ்ச்சியடை வதற்காக அல்ல. அது அவர்களுக்கு அவசியமில்லை. மரணத்தின் அலுப்பூட்டும் ஞாயிற்றுக்கிழமைகளில் எதையாவது செய்ய வேண்டும் என்பதற்காக என்று ஒருவருக்கொருவர் வாக்குறுதியளித்துக் கொண் டார்கள். புருடென்சியோ அகுய்லர்தான் அவரைக் குளிப்பாட்டினார். உணவூட்டினார். போரில் கர்னலாக இருந்த அவுரேலியானோ என்ற அறிமுகமில்லாத ஆளைப் பற்றிய சிறப்பான செய்திகளை அவரிடம் கொண்டுவந்து சேர்த்தார். தனித்து இருக்கும்போது ஹோசே அர்க்காதியோ புயேந்தியா முடிவில்லாத அறைகளைக் கனவு காண்பதில் ஆறுதல் அடைந்தார். படுக்கையை விட்டு எழுந்து கதவைத் திறந்து கொண்டு அதே போன்ற வார்ப்பிரும்புக் கட்டில் போட்ட, அதே போன்ற பிரம்பு நாற்காலி போட்ட பின்பக்கச் சுவரில் அதே போன்ற சகாய அன்னையின் படம் மாட்டிய இன்னொரு அறைக்குள் நுழைவ

தாகவும் கனவு கண்டார். அந்த அறையிலிருந்து அதே போன்ற இன்னொரு அறைக்குப் போவார். அந்த அறையின் கதவு அதே போன்ற இன்னொரு அறைக்குள் திறக்கும். அந்த அறையிலும் கதவு அதே போன்ற இன்னொரு அறைக்குள் திறக்கும். அதிலிருந்து அதே போன்ற வேறு அறைக்குள் திறக்கும். அது போன்ற முடிவற்ற அறைகள். அவர் ஒவ்வொரு அறையாகப் போக விரும்பினார். புருடென்சியோ அகுய்லர் அவருடைய தோளைத் தொட்டு நிறுத்தும்வரை இணை இணையாகக் கண்ணாடிகள் வைத்த அருங் காட்சியகத்துக்குள்ளே போவது போலப் போய்க்கொண்டிருப்பார். பின்னர் போனது போலவே திரும்பவும் அறை அறையாகத் திரும்ப நடந்து தனது இடத்துக்கு மீண்டும் வந்து எதார்த்தத்தின் அறையில் புருடென்சியோ அகுய்லரைப் பார்ப்பார். அவரைப் படுக்கையில் கொண்டு வந்து கிடத்தி இரண்டு வாரங்களுக்குப் பிறகு ஒரு இரவில் எல்லா அறைகளுக்கும் இடையிலிருந்த அறையில், அதுதான் உண்மை யான அறை என்ற எண்ணத்தில் அவருடைய தோளைத் தொட்டார். மறுநாள் காலை அவருக்குக் காலை உணவைக் கொண்டு வந்த உர்சுலா கூடத்தில் ஒருவன் வருவதைப் பார்த்தாள். அவன் குட்டை யாகவும் பருமனாகவும் இருந்தான். கறுப்புக் கோட்டும் கண்களை மறைக்கும்படி இழுத்து விட்ட தொப்பியும் – அதுவும் கறுப்பு – அணிந்திருந்தான். "கடவுளே, இது மெல்குயாதெஸ்தான் என்று நம்பியிருப்பேன்" என்று உர்சுலா நினைத்தாள். அது பணிப்பெண் விசிட்டேசியாவின் சகோதரன் கதௌர். உறக்கமின்மைக் கொள்ளை நோய் பரவிய காலத்தில் வீட்டை விட்டுப்போன அவனைப் பற்றி எந்தத் தகவலுமில்லை. விசிட்டேசியா அவன் ஏன் திரும்ப வந்தான் என்று கேட்டாள். அவர்களுடைய ஆர்ப்பாட்டமான மொழியில் அவளுக்குப் பதிலளித்தான்.

"மன்னரின் இறுதிச் சடங்கில் கலந்துகொள்ள வந்தேன்."

பின்னர் அவர்கள் ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவின் அறைக்குப் போனார்கள். எவ்வளவு முடியுமோ அவ்வளவு வலுவாக அவரைப் பிடித்து உலுக்கினார்கள். அவருடைய காதில் உரக்கக் கத்தினார்கள். அவருடைய நாசித் துவாரங்கள் முன்னால் ஒரு கண்ணாடியை வைத்தார்கள். ஆனால் அவரை எழுப்ப முடியவில்லை. சற்று நேரத்துக்குப் பிறகு சவப்பெட்டிக்குத் தச்சன் அளவெடுத்துக் கொண்டிருந்தபோது குட்டிக் குட்டி மஞ்சள் பூக்கள் மெல்லிய மழையாகப் பொழிந்து கொண்டிருந்ததை அவர்கள் ஜன்னல் வழியே பார்த்தார்கள். நகரத்தின் மேல் மௌனப்புயல் போல இரவு முழுவதும் அவை பெய்துகொண்டிருந்தன. அவை கூரைகளை மூடின. கதவுகளைத் தடுத்தன. வெளியில் விடப்பட்ட பிராணிகளைத் திக்குமுக்காடச் செய்தன. வானத்திலிருந்து ஏராளமான மலர்கள் விழுந்து காலையில் தெருக்களில் மெத்தென்ற கம்பளம் விரித்திருந்தது. சவ ஊர்வலம் கடந்து செல்வதற்காக அவர்கள் அவற்றையெல்லாம் மண்வாரியாலும் வாருகோலாலும் அப்புறப்படுத்த வேண்டியிருந்தது.

பாதியில் நிறுத்திய தையல்வேலையை மடியில் வைத்துப் பிரம்பால் முடைந்த ஆடும் நாற்காலியில் உட்கார்ந்து அவுரேலியானோ ஹோசேயைக் கவனித்துக் கொண்டிருந்தாள் அமரந்தா. அவனுடைய கன்னத்தில் நுரை அப்பியிருந்தது. தன்னுடைய முதல் மழிப்புக்காகச் சவரக் கத்தியை ஓட்டிக் கொண்டிருந்தான். அவனுடைய முகப்பருக்கள் உடைந்து ரத்தம் கசிந்தது. பொன்னிறமான மீசையை வடிவமைக்க முயன்றதில் மேல் உதட்டை வெட்டிக்கொண்டான். எல்லாம் முடிந்த பின்பும் அவன் முன்னைப் போலவே இருந்தான். ஆனால் அந்தக் கடினமான செய்முறை அவன் வளர்ந்துவிட்டான் என்ற உணர்வை அந்த நொடியில் அமரந்தாவுக்குத் தந்தது.

"உன் வயதில் அவுரேலியானோ எப்படி இருந்தானோ அதே போலத்தான் இருக்கிறாய், நீ ஆளாகிவிட்டாய்" என்றாள். மிக நீண்ட காலமாகவே, பிலர் தெர்னேரா அவனை வளர்ப்பதற்காக அவளிடம் ஒப்படைத்த நாளிலிருந்து அமரந்தா சிறுகுழந்தையாகவே நினைத்துச் செய்தது போலவே குளியலறையில் அவன் முன்னால் உடைகளைக் களையும் பழக்கத்தைத் தொடர்ந்தாள். முதல் முறையாகப் பார்த்தபோது அவளுடைய இரண்டு முலைகளுக்கும் நடுவில் தெரிந்த ஆழமான பிளவுதான் அவனுடைய கவனத்தை ஈர்த்தது. அவளுக்கு என்ன ஆயிற்று என்று கேட்கும் வெகுளியாக இருந்தான். விரல் முனைகளால் முலைகளைத் தோண்டுவது போலப் பாவனை செய்து அமரந்தா பதில் சொன்னாள். "என்னைப் பயங்கரமாக வெட்டிவிட்டார்கள்". சிறிது காலத்துக்குப் பிறகு பியத்ரோ கிரெஸ்பி தற்கொலைச் சம்பவத்திலிருந்து மீண்ட பிறகு மறுபடியும் அவுரேலியானோ ஹோசேவுடன் சேர்ந்து குளிக்கத் தொடங்கியபோது அவன் பிளவைக் கவனிக்கவில்லை. ஆனால் பழுப்பு நிறக் காம்புகளுள்ள அந்தத் தாராள முலைகளைப் பார்க்கும்போதே விநோதமான நடுக்கத்தை உணர்ந்தான். அவன் அவளைக் கூர்மையாகக் கவனிக்க ஆரம்பித்தான். அவளுடைய அந்தரங்கத்தின் மர்மத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கண்டுபிடித்துக் கொண்டிருந்தான். தண்ணீரில் படும்போதும் அவளுடைய சருமம் சிலிர்ப்பது போலவே தன்னுடைய சருமமும் சிலிர்ப்பதை உணர்ந்தான். சிறுகுழந்தையாக இருந்தபோதே தன்னுடைய தொட்டிலிலிருந்து எழுந்து அமரந்தாவின் படுக்கையில் படுத்துக்கொள்வது வழக்கம். ஏனென்றால் அவளுடன் ஒட்டிக்கொள்வதுதான் இருட்டுப்

பயத்தை வெல்ல ஒரே வழியாக இருந்தது. ஆனால் தன்னுடைய நிர்வாணக் கோலத்தைப் பற்றி அவன் தெரிந்துகொண்ட நாள் முதல் அவனை அவளுடைய கொசுவலைக்குள் ஊர்ந்து செல்ல விரட்டியது இருட்டைப் பற்றிய பயமல்ல; விடியற்காலையில் அமரந்தாவின் மூச்சை அனுபவித்துக்கொண்டே படுத்திருக்கலாம் என்ற தூண்டுதல்தான். அவள் கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸை நிராகரித்திருந்த காலத்தில் ஒரு நாள் காலை அவுரேலியானோ ஹோசே மூச்சுவிடச் சிரமமாக இருப்பதாகத் தோன்றி விழித்துக் கொண்டான். அமரந்தாவின் விரல்கள் தன் வயிற்றின் மேல் புழுவைப் போலவும் ஆசை மிகுந்த கம்பளிப் பூச்சிகளைப் போலவும் தேடிக் கொண்டிருப்பதை உணர்ந்தான். தூங்குவதுபோல நடித்துக்கொண்டு இன்னும் வசதியாக இருப்பதற்காகப் புரண்டு படுத்தான். கறுப்புக் காயத் துணி சுற்றப்படாத அந்தக் கை பதற்றத்தின் பாசிக்குள் சிப்பிமீனைப் போல மூழ்குவதை உணர்ந்தான். ஒருவரைப் பற்றி இன்னொருவருக்குத் தெரியும் என்று அவர்கள் இருவருக்கும் தெரிந்தே இருந்தது. அப்படியிருந்தும் இருவருக்கும் தெரியும் என்பதை உதாசீனப் படுத்திக்கொண்டு அன்றைய இரவு முதல் மீற முடியாத சிக்கலில் ஒன்றாகப் பிணைந்தார்கள். கூடத்து மணிக்கூண்டில் பன்னிரண்டு மணி இசை கேட்கும்வரை அவுரேலியானோ ஹோசே தூக்கம் பிடிக்காமல் கிடப்பான். தன்னுடைய தனிமைக்கு அவன் மருந்தாக இருப்பான் என்று நினைக்காதபோதும் தான் வளர்த்த அந்தத் தூக்க நடையாளி கொசுவலைக்குக் கீழே நழுவி உள்ளே வருவதை உணரும் வரை அந்த முதிர்ந்த பெண்ணின் உடல் ஒரு நொடிகூடக் காத்திருக்க முடியாமல் பதறத் தொடங்கிவிடும். பிற்காலத்தில் அவர்கள் அம்மண மாக நீண்ட நேரம் குலாவியபடி ஒன்றாகப் படுத்துக்கொள்வதுடன் ஒருவரை ஒருவர் வீட்டுக்குள் விரட்டி விளையாடினார்கள். அடக்க முடியாத பரவசத்துடன் ஒருநாளின் எந்த நேரத்திலும் படுக்கையறை யில் அடைந்து கொண்டார்கள். ஒருநாள் பிற்பகலில் களஞ்சியத்துக்குப் போன உர்சுலா அவர்கள் முத்தமிடத் தொடங்கிக்கொண்டிருந்ததை ஏறக்குறைய கண்டுபிடித்தாள். அவுரேலியானோ ஹோசேயிடம் "உனக்கு உன் அத்தையை மிகவும் பிடிக்குமா?" என்று அப்பாவித்தன மாகக் கேட்டாள். அவன் ஆமாம் என்றான். "அது உனக்கு நல்லது" என்று சொன்னபடி ரொட்டிக்கான மாவை அளந்து எடுத்துக்கொண்டு சமையலறைக்குத் திரும்பினாள். அந்தச் சம்பவம் அமரந்தாவைப் பித்தவெறியிலிருந்து வெளியே இழுத்தது. தான் அத்துமீறிப் போயிருப்பதையும் ஒரு குழந்தையுடன் முத்தமிட்டு விளையாடவில்லை என்பதையும் உணர்ந்தாள். மாறாக வீழ்ச்சிக் காலத்தின் வேட்கையுடன் தடுமாறுவதையும் அது ஆபத்தானது என்றும் எதிர்காலமில்லாதது என்றும் புரிந்துகொண்டாள். ஒரே வெட்டில் அதைத் துண்டித்தாள். ராணுவப் பயிற்சியை முடித்துக்கொண்டிருந்த அவுரேலியானோ ஹோசே கடைசியாக எதார்த்தம் என்னவென்று புரிந்துகொண்டான். ராணுவக் குடியிருப்பில் தூங்கப் போனான். சனிக்கிழமைகளில் சக வீரர்களுடன் கதாரினோவின் கடைக்குப் போவான். தனது திடீர் தனிமைக்கும் தகுந்த காலத்துக்கு முன்பே வந்துவிட்ட விடலைத்

தன்மைக்கும் வதங்கிய மலர்களின் வாடையடிக்கும் பெண்களிடம் ஆறுதல் தேடிக்கொண்டிருந்தான். இருளில் அந்தப் பெண்கள் எல்லாரையும் தனது கற்பனை ஆர்வம் நிறைந்த செயல்கள் மூலம் அமரந்தாவாக மாற்றிக்கொள்ள முயன்றான்.

சிறிது காலத்துக்குப் பின்பு போரைப் பற்றிய முரண்பட்ட செய்திகள் வரத் தொடங்கின. போராட்டம் முன்னேறிக் கொண்டிருந்ததை அரசாங்கம் ஒப்புக்கொண்ட போதும் மகோந்தாவிலிருந்த அதிகாரிகளுக்கு அமைதிக்கான பேச்சுவார்த்தை பற்றிய ரகசிய அறிக்கைகள் வந்துகொண்டிருந்தன. ஏப்ரல் மாதம் முதல் தேதி கர்னல் ரெஜினெல்தோ மார்க்கேஸைத் தேடி ஒரு சிறப்புத் தூதன் வந்து அறிமுகப்படுத்திக் கொண்டான். கட்சித் தலைவர்கள் நாட்டின் உட்பகுதிகளிலிருக்கும் புரட்சிக் குழுத் தலைவர்களுடன் ஒரு உடன்படிக்கை செய்துகொண்டு விட்டதாகவும் போர் நிறுத்த ஏற்பாட்டின் விளிம்பில் இருக்கிறார்கள் என்றும் உறுதிப்படுத்தினான். பதிலாகத் தாராளவாதிகளுக்கு மூன்று அமைச்சுப் பதவிகளும் பேராயத்தில் சிறுபான்மையினருக்கான பிரதிநிதித்துவமும் அளிக்கப்படும் என்றும் ஆயுதங்களைக் கீழே போட்டு விட்டுச் சரணடையும் போராளிகளுக்குப் பொதுமன்னிப்பு வழங்கப் படும் என்றும் உறுதிப்படுத்தினான். போர் நிறுத்த ஒப்பந்தத்தின் நிபந்தனைகளோடு தனக்கு உடன்பாடு இல்லை என்ற கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் தகவலையும் அதிரகசியமான உத்தரவு வழியாக அந்தத் தூதன் கொண்டு வந்திருந்தான். மிகவும் நம்பிக்கைக் குரிய ஐந்து பேரைக் கர்னல் ரெஜினெல்தோ மார்க்கேஸ் தேர்ந்தெடுக்க வேண்டும்; அவர்களுடன் வெளியேற ஆயத்தமாக இருக்க வேண்டும் என்றும் தெரிவிக்கப்பட்டிருந்தது. இந்த உத்தரவு மிக மிக ரகசியமாக நிறைவேற்றப்பட வேண்டும். உடன்படிக்கை அறிவிக்கப்படுவதற்கு ஒரு வாரத்துக்கு முன்பு, ஒன்றுக்கொன்று முரண்பட்ட வதந்திகள் புயலாக வீசிக்கொண்டிருந்ததற்கிடையில், நள்ளிரவுக்குப் பிறகு நம்பிக்கைக்குரிய அதிகாரிகள் பத்துப் பேருடன், அவர்களில் கர்னல் ரோக் கார்னிஸெரோவும் இருந்தார், ஒளிந்து மகோந்தாவுக்கு வந்து சேர்ந்த கர்னல் அவுரேலியானோ புயேந்தியா படை முகாமைக் கலைத்துவிட்டார். அவர்களுடைய ஆயுதங்களைக் குழி தோண்டிப் புதைத்தார். அவர்களுடைய ஆவணங்களைத் தீ வைத்துக் கொளுத்தி னார். விடிவதற்குள் அவர்கள் நகரத்தை விட்டு வெளியேறினார்கள். கர்னல் ரெஜினெல்தோ மார்க்கேஸும் அவருடைய ஐந்து அதிகாரி களும் வெளியேறினார்கள். இது விரைவாகவும் ரகசியமாகவும் நடத்தப் பட்டது. அதனால் கடைசி விநாடிவரை அதைப் பற்றி உர்சுலாவுக்குத் தெரியவில்லை. யாரோ அவளுடைய படுக்கையறை ஜன்னலில் தட்டி "கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவைப் பார்க்க வேண்டுமானால் உடனே வாசலுக்கு வரவும்" என்று கிசுகிசுத்தார்கள். உர்சுலா படுக்கையி லிருந்து துள்ளி எழுந்து இரவு உடையை அணிந்து வாசலை அடைந்த போது குதிரை வீரர்கள் மௌனமான புழுதிப் படலத்தினூடே பாய்ந்து நகரத்தை விட்டுப் போவதைப் பார்த்தாள். அவுரேலியானோ ஹோசே வும் அவன் அப்பாவுடன் போயிருக்கிறான் என்பதை அவள் மறு நாள்தான் கண்டுபிடித்தாள்.

அரசாங்கமும் எதிர்த்தரப்பும் கூட்டாக வெளியிட்ட போர் நிறுத்த அறிவிப்புக்குப் பத்து நாட்களுக்குப் பிறகு மேற்கு எல்லைப் பகுதியில் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் ஆயுத எழுச்சி பற்றிய செய்தி வெளியானது. ஒருவார காலத்துக்குள்ளாகவே ஆயுத வலு வில்லாத அவருடைய சிறிய படை சிதறுண்டது. ஆனால் அதே ஆண்டு மிதவாதிகளும் பழைமைவாதிகளும் சமாதானத்தைப் பற்றி நாட்டு மக்களுக்குப் புரியவைப்பதற்கிடையில் அவர் ஏழு போராட் டங்களை நடத்தினார். ஓர் இரவு கப்பலில் சென்று ரியோஹாச்சாமீது குண்டு வீசித் தகர்த்தார். பழி வாங்கும் நடவடிக்கையாகப் படை முகாமிலிருந்த பதினான்கு பிரபலமான மிதவாதிகளைப் படுக்கையி லிருந்து இழுத்து வந்து சுட்டுக் கொன்றார். இரண்டு வாரங்களுக்கும் மேலாக எல்லையோரச் சுங்கச்சாவடியைக் கைப்பற்றி அங்கிருந்து பொதுயுத்தத்துக்கு அழைப்பு விடுத்தார். தலைநகரத்தின் புறப்பகுதி களில் போர் அறிவிப்புச் செய்வது என்ற எதிர்பார்ப்பு ஆள் தீண்டாத கானகத்தினூடே ஆயிரம் மைல்களை மூன்று மாதங்களாகக் கடக்க நேர்ந்த பைத்தியக்கார நடவடிக்கையால் கைவிடப்பட்டது. இன்னொரு சந்தர்ப்பத்தில் அரசுத் துருப்புகள் மகோந்தாவிலிருந்து பதினைந்தே மைல் தொலைவில் இருந்த, அநேக ஆண்டுகளுக்கு முன்பு அவருடைய தந்தை ஸ்பானிய வியாபாரக் கப்பலின் சிதைவுகளைக் கண்ட அதே மலைப்பகுதிக்குள் ஒளிந்திருக்க அவரை நிர்ப்பந்தித்தன.

அந்தக் காலத்தில்தான் விசிட்டேசியா மரணமடைந்தாள். உறக்க மின்மை நோய்க்குப் பயந்து அரியாசனத்தையே துறந்து ஓடிவந்த அவளுக்கு இயற்கையான மரணம் என்ற மகிழ்ச்சி வாய்த்தது. தன் னுடைய படுக்கைக்குக் கீழே புதைத்து வைத்திருந்த இருபதுக்கும் மேற்பட்ட வருட ஊதியச் சேமிப்பைத் தோண்டியெடுத்துத் தொடர்ந்து போர் செய்வதற்காகக் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுக்கு அனுப்ப வேண்டும் என்பதே அவளுடைய கடைசி ஆசையாக இருந்தது. ஆனால் பிரதேசத் தலைநகரத்துக்கு அருகில் நடந்த சண்டையில் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா கொல்லப்பட்டார் என்று வதந்தி நிலவியதால் அதைத் தோண்டியெடுக்க உர்சுலா அக்கறை காட்டவில்லை. ஏறத்தாழ ஆறு மாதங்களாக அவரைப் பற்றி எந்தத் தகவலும் இல்லாமலிருந்ததால் அதிகாரப்பூர்வமான அறிக்கை – இரண்டு வருடங்களுக்குள் அது நான்காவது – உண்மை என்று கருதப்பட்டது. உர்சுலாவும் அமரந்தாவும் கடந்த கால நீத்தார் இரங்கலுடன் புதியதை யும் சேர்த்தபோது எதிர்பாராத செய்தி வந்தது. கர்னல் அவுரேலியானோ புயேந்தியா உயிரோடு இருக்கிறார். ஆனால் சொந்த நாட்டு அரசாங் கத்தை அலைக்கழிப்பதை நிறுத்திவிட்டுக் கரீபியக் குடியரசுகளுடன் ஒத்துழைத்துச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறார். சொந்த நாட்டிலிருந்து மிக மிகத் தொலைவில் வெவ்வேறு பெயர்களில் தோன்றுவார். அலாஸ்கா முதல் படகோனியா வரையிலான நாடுகளில் இருக்கும் பழைமைவாத அரசாங்கங்களை அகற்றுவதற்காக மத்திய அமெரிக்க நாடுகளிலுள்ள கூட்டமைப்புகளின் ஒருங்கிணைப்புக்காக வேலை செய்வது என்ற யோசனையில் செயல்படுகிறார் என்று பின்னர்

தெரியவந்தது. அவருடைய பிரிவுக்குப் பிறகு கியூபாவிலுள்ள சாந்தியாகோவிலிருந்து பல கைகள் மாறி வந்த கடிதம்தான் உர்சுலாவுக்கு நேரடியாகக் கிடைத்த முதல் செய்தி.

அதைப் படித்ததும் "என்றென்றைக்குமாக அவனை நாம் இழந்து விட்டோம். இந்த வழியைத் தொடர்ந்து போனால் இனி பூமியின் கடைசி விளிம்பில்தான் அவன் கிறிஸ்துமஸ் காலத்தைக் கழிக்க வேண்டியிருக்கும்" என்று உர்சுலா வியந்தாள்.

போருக்குப் பின்பு மகோந்தாவின் மேயராகியிருந்த பழைமைவாதிகளின் தளபதி ஹோரசே ராக்வெல் மன்காடாவிடம்தான் கடிதத்தைப் பற்றி அவள் முதலில் தெரிவித்தாள். "இந்த அவுரேலியானோ ஒரு பழைமைவாதியல்ல என்பது பரிதாபம்" என்று ஜெனரல் மன்காடா அபிப்பிராயப்பட்டார். உண்மையில் அவரை வியந்து பாராட்டினார். மற்ற எல்லாப் பழைமைவாதிப் பொதுத்துறை அலுவலர்களையும் போல ஹோரசே ராக்வெல் மன்காடாவும் கட்சியைப் பாதுகாக்கப் போராடியவர். அதன் மூலம் தொழில் முறையில் ராணுவத்தினராக இல்லாமலிருந்தும் போர்க்களத்தில் ஜெனரல் என்ற பட்டத்தைப் பெற்றார். மாறாகக் கட்சியிலுள்ள தனது சக ஊழியர்களைப் போல அவரும் ராணுவ விரோதி. ராணுவ வீரர்கள் கொள்கையில்லாத பொறுக்கிகள், பேராசை கொண்ட சதிகாரர்கள், சட்டம் ஒழுங்கு குலைந்திருக்கும் காலத்தில் அதிலிருந்து ஆதாயம் தேடுவதில் நிபுணர்கள் என்று எண்ணியிருந்தார். அறிவாளி, இனிமையானவர், சிவந்த முகமுள்ளவர், சாப்பிடுவதிலும் சேவல் சண்டை பார்ப்பதிலும் விருப்பமுள்ளவர். ஒருகாலத்தில் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் தீவிர எதிரியாகவும் இருந்தார். கடலோரப் பிரதேசத்தின் விரிந்த பகுதிகளிலிருந்த அதிகாரிகள்மேல் செல்வாக்குச் செலுத்துவதில் வெற்றி பெற்றிருந்தார். ஒருமுறை ராஜதந்திரமான சூழ்நிலையில் ஒரு வலுவான பகுதியை விட்டுக்கொடுக்க நேர்ந்தபோது கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுக்கு இரண்டு கடிதங்களை எழுதினார். ஒன்று போரை மேலும் மனிதாபிமானமுள்ள நடவடிக்கையாக மாற்றும் பிரச்சாரத்தில் அவரையும் பங்கேற்குமாறு அழைத்த நீண்ட கடிதம். மிதவாதிகளின் கட்டுப்பாட்டு எல்லையில் வசிக்கும் அவர் மனைவிக்கு எழுதிய கடிதம். அதைச் சேர்க்க வேண்டிய இடத்தில் சேர்க்க வேண்டும் என்ற கோரிக்கையையும் வைத்திருந்தார். அன்றிலிருந்து ரத்தம் சொரியும் யுத்தம் நடக்கும் காலங்களிலும் கைதிகளைப் பரிமாறிக்கொள்வதற்காக இரண்டு தளபதிகளும் தற்காலிகப் போர் நிறுத்தங்கள் ஏற்படுத்தினார்கள். கொண்டாட்டச் சூழ்நிலையுள்ள சில இடைவேளைகளில் ஜெனரல் மன்காடா, கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுக்குச் சதுரங்கம் விளையாடவும் கற்றுக் கொடுத்தார். அவர்கள் மிக நெருங்கிய நண்பர்களானார்கள். இரண்டு கட்சிகளிலுமிருக்கும் மக்கள் ஆதரவு அம்சங்களை ஒருங்கிணைத்து ராணுவத்தினர், தொழில்முறை அரசியல்வாதிகளின் பாதிப்பிலிருந்து விலகிய மனிதாபிமான ஆட்சியை அமைப்பது பற்றிச் சிந்தித்தார்கள். போர் முடிந்ததும் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா நிரந்தப் புரட்சி பற்றிய சிக்கலான

வழிகளில் போய்க்கொண்டிருந்தார். ஜெனரல் மன்காடா மகோந்தா வின் மாஜிஸ்திரேட்டாக நியமிக்கப்பட்டார். சாதாரண ஆடைகளை அணிந்தார். ராணுவச் சிப்பாய்களை மாற்றி ஆயுதமில்லாத போலீஸ் காரர்களை நிறுத்தினார். பொதுமன்னிப்புச் சட்டங்களை அமல் படுத்தினார். போரில் கொல்லப்பட்ட சில மிதவாதிகளின் குடும்பங் களுக்கு உதவினார். மகோந்தாவை நகராட்சியின் அந்தஸ்துக்கு உயர்த்தினார். அதனால் அதன் முதல் மேயரானார். போரை ஒரு கெட்ட கனவாக மக்கள் நினைக்கும்படியான நம்பிக்கையளிக்கும் சூழலை உருவாக்கினார். ஈரல் நோயால் படுக்கையிலிருந்த அருட் தந்தை நிக்கனாருக்குப் பதிலாக முதலாவது கூட்டமைப்புப் போரில் கலந்து பெயர் பெற்றிருந்த அருட்தந்தை கரோனல் நியமிக்கப்பட்டார். அவரை "நாய்க்குட்டி" என்று அழைத்தார்கள். புரூனோ கிரெஸ்பி, அம்பாரோ மாஸ்கோட்டை மணந்திருந்தான். விளையாட்டுப் பொம்மை களும் இசைக்கருவிகளும் விற்கும் அவனுடைய கடை மேம்பட்டிருந் தது. ஒரு நாடக அரங்கையும் உருவாக்கினான். அதன் நிகழ்ச்சிப் பட்டியலில் ஸ்பானியக் குழுக்களும் சேர்க்கப்பட்டிருந்தன. அது ஒரு திறந்தவெளி அரங்காக இருந்தது. மரப் பெஞ்சுகள் இருந்தன. கிரேக்க முகமூடிகள் வரையப்பட்ட வெல்வெட் திரை இருந்தது. சிங்கத் தலை வடிவில் சீட்டுக் கொடுக்கும் இடங்கள் மூன்று இருந்தன. அவற்றின் வாய் வழியாக அனுமதிச் சீட்டுகள் விற்கப்பட்டன. அந்தக் காலத்தில்தான் பள்ளிக்கூடமும் மீண்டும் கட்டப்பட்டது. சதுப்புப் பிரதேசத்திலிருந்து அழைத்து வரப்பட்ட பல்கலைக் கழகம் பேராசிரியர் மெல்ஷோர் எஸ்கலோனாவிடம் பள்ளியின் பொறுப்பு விடப்பட்டது. அவர் சோம்பேறி மாணவர்களைச் சுண்ணாம்பு மெழுகிய முற்றத்தில் மண்டியிட்டு நடக்க வைத்தார்; வகுப்பில் பேசிய மாணவர்களை மிளகாயைத் தின்ன வைத்தார். இவற்றுக்கெல்லாம் அவர்களின் பெற்றோரிடமும் சம்மதம் பெற்றிருந்தார். சாந்தா சோபியா தெ லா பியாதெத்தின் குறும்புக்கார இரட்டையரான அவுரேலியானோ செகுந்தோவும் ஹோசே அர்க்காதியோ செகுந்தேவும் தங்களுடைய சிலேட்டுகள், சாக்பீஸ¬கள், அவரவர் பெயர் பொறித்த அலுமினியக் குவளைகளுடன் வகுப்பில் முதல் வரிசையில் உட்கார்ந்தார்கள். அம்மாவின் மொத்த அழகையும் வாரிசுரிமையாகப் பெற்றிருந்த ரெமேதியோஸ் 'அழகி ரெமேதியோஸ்' என்று அழைக்கப்பட்டாள். காலத்தையும் அவளாக விதித்துக்கொண்ட நீண்ட கால நீத்தார் இரங்கல்களையும் வந்து சேர்ந்த வேதனைகளையும் மீறி உர்சுலா முதுமையடைய மறுத்துக்கொண்டிருந்தாள். சாந்தா சோபியா தெ லா பியாதெத்தின் ஒத்துழைப்புடன் தன்னுடைய அடுமனை வியாபாரத்துக்குப் புது வேகம் கொடுத்தாள். அவள் பிள்ளை யுத்தத்தில் செலவழித்ததையெல்லாம் மீட்டதோடு படுக்கையறையில் புதைத்து வைத்திருக்கும் உலர்ந்த சுரைக்குடுவைகளுக்குள் மறுபடியும் தங்கத்தை இட்டு நிரப்பவும் முடிந்தது. "கடவுள் எனக்கு ஆயுளைக் கொடுத்திருக் கும் வரை இந்தப் பைத்தியக்கார வீட்டில் பணம் இருந்துகொண்டே இருக்கும்" என்பாள். நிகராகுவாவில் கூட்டமைப்புத் துருப்புகளிலிருந்து ஒளிந்து ஓடி ஜெர்மானியக் கப்பலில் கடலோடியாக வேலையில்

சேர்ந்த பிறகு ஒருநாள் அவுரேலியானோ ஹோசே வீட்டுச் சமைய லறைக்குள் வந்து நின்றான். போர்க்குதிரையின் உறுதியுடனும் இந்தியர் களைப் போன்ற நீண்ட சிகையுடனும் அமரந்தாவை மணந்து கொள்ளும் ரகசியத் தீர்மானத்துடனும் அவன் வந்து நின்றது அப்படித்தான்.

அவன் வருவதைப் பார்த்ததும், அவனாக எதுவும் சொல்லாத போதும், ஏன் திரும்பி வந்திருக்கிறான் என்பதை அமரந்தா சட்டென்று புரிந்துகொண்டாள். மேஜைக்கு முன்னால் உட்கார்ந்தபோதும் இரண்டு பேரும் நேருக்கு நேர் தைரியமாகப் பார்த்துக் கொள்ளவில்லை. ஆனால் திரும்பி வந்து இரண்டு வாரங்களுக்குப் பிறகு உர்சுலா முன்னிலையிலேயே அவன் அவளை நேராகப் பார்த்து "நான் எப் போதும் உன்னைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தேன்" என்றான். அவள் அவனைத் தவிர்த்தாள். தற்செயலாகப் பார்த்துவிடாமலிருக்க எச்சரிக்கை எடுத்துக் கொண்டாள். அழகி ரெமேதியோஸை விட்டுப் பிரியாமல் இருக்க முயன்றாள். கையில் கட்டியிருந்த கறுப்பு நிறக் காயத்துணி தன்னுடைய கன்னிமையின் அடையாளம் என்று அவள் கற்பனை செய்திருந்தாள். அதை எவ்வளவு காலத்துக்குக் கட்டி யிருப்பாள் என்று மருமகன் கேட்ட அன்று தன்னுடைய கன்னங்களில் சிவப்புப் படர்ந்ததை நினைத்து வெட்கப்பட்டாள். அவன் வந்து சேர்ந்த பிறகு படுக்கையறைக் கதவைத் தாழிட்டாள். ஆனால் அநேக இரவுகளில் அடுத்த அறையிலிருந்து வரும் அவனுடைய நிம்மதி யான குறட்டைச் சத்தத்தைக் கேட்கும்போது தன்னுடைய முன் னெச்சரிக்கையை மறந்தது நினைவு வரும். அவன் திரும்பிவந்து ஏறத்தாழ இரண்டு மாதங்களுக்குப் பிறகு அவன் தன்னுடைய படுக்கையறையை நோக்கி வரும் ஓசையைக் கேட்டாள். வெளியேறிப் போக வேண்டுமென்றும் கூச்சல் போட வேண்டுமென்றும் நினைத் திருந்ததற்கு மாறாக ஓய்வெடுத்துக் கொள்ளும் இதமான உணர்வுடன் படுக்கையிலேயே கிடந்தாள். பிள்ளைப் பருவத்தில் அல்லது எப் போதுமே செய்தது போல அவன் கொசுவலைக்குக் கீழே நுழைந்து படுக்கையில் ஊர்வதை உணர்ந்தாள். அவன் முழு நிர்வாணமாக இருக்கிறான் என்பதை உணர்ந்தபோது குளிர்ந்து நடுங்குவதையும் பற்கள் கிடுகிடுத்துக்கொள்வதையும் அவளால் அடக்கிக்கொள்ள முடியவில்லை. "வெளியே போ" என்று உற்சாகத்தில் மூச்சுத் திணறச் சொன்னாள். "வெளியே போ, இல்லையென்றால் கூச்சல் போடுவேன்" என்றாள். ஆனால் அவுரேலியானோ ஹோசே இன்னும் குழந்தையல்ல; ராணுவ மிருகம். அவனுக்கு என்ன செய்ய வேண்டும் என்று தெரிந் திருந்தது. அந்த இரவிலிருந்து அலுப்பூட்டும் விளைவு எதுவுமில்லாத யுத்தம் மீண்டும் ஆரம்பித்தது. விடியும்வரை தொடர்ந்தது. "நான் உன்னுடைய அத்தை" என்று அமரந்தா களைத்துப் போய் முணு முணுத்தாள். "உன் அம்மாவுக்குச் சமமானவள். வயது காரணமாக மட்டுமல்ல. நான் உனக்காகச் செய்யாதது உனக்குப் பாலூட்டாதது தான்" என்றாள். அவுரேலியானோ விடியற்காலையில் நழுவிப் போய் மறுநாள் அதிகாலைக்கு முன்பு வருவான். ஒவ்வொரு முறையும் அவள் கதவைத் தாழிட்டு வைக்கவில்லை என்பது நிரூபணமாவதில் மேலும் பரவசமடைவான். அவள் மீது மோகம் கொள்வதை அவன்

ஒரு கணம்கூட நிறுத்தவில்லை. கைப்பற்றிய நகரங்களின் இருண்ட அறைகளில், குறிப்பாக மிக மோசமான அறைகளில் அவளைக் கண்டான். காயமடைந்தவர்களின் ரணங்களுக்குமேல் கட்டியிருந்த துணிகளில் உலர்ந்திருந்த ரத்தத்தின் வாடையிலும் மரண அபாயத்தின் உடனடிப் பீதியிலும் அவளையே உருவகப்படுத்துவான். எப்போதும் எங்கேயும் அவளையே நினைத்திருந்தான். அவளுடைய ஞாபகங்களை அழித்து விட வேண்டுமென்பதற்காகவே அவளிடமிருந்து ஒளிந்து ஓடினான். தூரத்தால் மட்டுமல்ல; துணிச்சல் என்று அவனுடைய சக வீரர்கள் எடுத்துக்கொண்ட தாறுமாறான வெறியாலும்தான் ஓடினான். ஆனால் அவளுடைய பிம்பம் யுத்தத்தின் சாணக் குவியலில் அவனை எந்த அளவு புரட்டிப் போட்டதோ அந்த அளவுக்கு யுத்தமும் அமரந்தாவாகத் தோன்றியது. தலைமறைவாக இருந்த காலத்தில் அவன் வாழ்ந்தது அப்படித்தான். யாரோ ஒரு கிழவர் அத்தையைத் திருமணம் செய்து கொண்ட ஒரு மனிதனைப் பற்றி, அவள் அந்த மனிதனின் முறைப் பெண்ணுமாக இருந்தாள், அவர்களுக்குப் பிறந்த மகனுக்கு அந்த மனிதன் தாத்தாவும் ஆனான் என்பது பற்றிச் சொன்ன கதையைக் கேட்கும் வரைக்கும் அவளைக் கொன்றுவிட்டுத் தானும் செத்துப் போக வழி தேடிக் கொண்டிருந்தான்.

"ஒருவர் சொந்த அத்தையைத் திருமணம் செய்துகொள்ளலாமா?" குழப்பத்துடன் கேட்டான்.

"அப்படி ஒருவன் செய்யலாம் என்பது மட்டுமல்ல; அவன் சொந்த அம்மாவையே திருமணம் செய்துகொள்ளலாம் என்பதற்காகத்தான் நாம் பாதிரியார்களுக்கு எதிராகவும் இந்தப் போரை நடத்திக்கொண்டிருக்கிறோம்" என்று ஒரு சிப்பாய் அவனுக்குப் பதில் சொன்னான்.

இரண்டு வாரங்களுக்குப் பிறகு அவன் ஓடிப்போனான். அவனுடைய ஞாபகத்திலிருந்ததைவிட அமரந்தா மிகவும் மெலிந்து போயிருப்பதாகவும் மேலும் சோகமானவளாகவும் வெட்கப்படுபவளாகவும் ஆகியிருப்பதாகவும் உண்மையில் முதிர்ச்சியின் கடைசித் திருப்பத்திலிருப்பதாகவும் படுக்கையறை இருட்டில் முன்னைவிட ஜுர வேகத்துடனும் மூர்க்கத் தன்மைக்கு முன்னைவிடச் சவால் விடுபவளாகவும் இருப்பதைக் கண்டான். அவனுடைய வேட்கையில் வதைபடும்போது "நீ ஒரு மிருகம்" என்று சொல்லுவாள். "போப் ஆண்டவரிடமிருந்து விசேஷ அனுமதி பெறாமல் பாவம் அத்தையிடம் நீ இப்படி நடந்துகொள்ளக் கூடாது" என்பாள். அவுரேலியானோ ஹோசே ரோமாபுரிக்குப் போவதாக உறுதியளித்தான். மண்டியிட்டு நகர்ந்தே ஐரோப்பாவைத் தாண்டிச் சென்று மதகுருவின் பாதுகைகளை முத்தமிடுவதாகவும் உறுதியளித்தான். அதற்குப் பதிலாக தூக்குப்பாலம் போல மேல் நோக்கி வளைந்திருக்கும் தன் உடலை அவள் இறக்க வேண்டும் என்றான்.

"அதுமட்டுமல்ல" என்றபடி அமரந்தா பின்நோக்கி வளைந்தாள் "பிறக்கும் குழந்தைகள் பன்றி வாலுடன் பிறக்கும்" என்றாள்.

அவுரேலியானோ ஹோசே எல்லா விவாதத்துக்கும் காதை அடைத்துக் கொண்டான்.

"அவர்கள் அழுங்குகளாகவே பிறந்தாலும் எனக்குக் கவலையில்லை" என்று கெஞ்சினான்.

அடக்கிக்கொண்ட விறைப்பின் சகிக்க முடியாத வேதனைக்குப் பணிந்து ஒருநாள் அதிகாலையில் கதாரினோவின் கடைக்குப் போனான். சுருங்கிய முலைகள் உடைய பிரியமானவளும் அதிகம் காசு கேட்கா தவளுமான ஒருத்தியைத் தேடிப் பிடித்தான். அவள் அவன் அடிவயிற்றின் நோவைக் கொஞ்ச நேரத்துக்குக் குறைத்தாள். அமரந்தாவை வெறுத்து ஒதுக்கும் சிகிச்சையை முயன்று பார்த்தான். அதற்கிடையில் பாராட்டத் தகுந்த திறமையுடன் இயக்கக் கற்றுக்கொண்ட தையல் எந்திரத்தில் உட்கார்ந்து தைத்துக்கொண்டிருக்கும் அவளை முற்றத்தில் பார்த்தாலும் பேசாமலிருப்பான். ஒரு முடிச்சிலிருந்து விடுபட்டது போல அமரந்தா உணர்ந்தாள். அந்தச் சமயங்களில் கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸைப் பற்றி ஏன் மறுபடியும் யோசிக்கத் தொடங்கினாள்; சைனீஸ் செக்கர்ஸ் விளையாடிய அந்தப் பிற்பகல்களை ஏன் ஏக்கத்துடன் நினைத்துப் பார்த்தாள்; அவளுடைய படுக்கையறையில் இருக்க வேண்டியவன் அவனே என்று ஏன் விரும்பினாள் என்று அவளுக்கே புரியவில்லை. அவளை அசட்டை செய்யும் கேலிக்கூத்தை அதற்கு மேலும் சகித்துக் கொள்ள முடியாமல், அவன் எந்த அளவுக்கு வாய்ப்பை இழந்திருக் கிறான் என்பதையும் உணராமல் அவுரேலியானோ ஹோசே அந்த இரவு அமரந்தாவின் அறைக்குத் திரும்பப் போனான்.

இரக்கமில்லாமல், பிழையே இல்லாத தீர்மானத்துடன் அவள் அவனை நிராகரித்தாள். படுக்கையறைக் கதவை மூடி என்றென்றைக்கு மாகத் தாழிட்டாள்.

அவுரேலியானோ ஹோசே திரும்பி வந்த சில மாதங்களுக்குப் பிறகு மல்லிகை வாசனையுடன் வாளிப்பான ஒரு பெண் ஐந்து வயதுச் சிறுவனுடன் அந்த வீட்டுக்கு வந்தாள். அந்தச் சிறுவன் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் மகன் என்றும் ஞானஸ்நானம் செய்து வைப்பதற்காக உர்சுலாவிடம் அழைத்து வந்திருப்பதாகவும் சொன்னாள். அந்த அநாமதேயச் சிறுவனின் பிறப்பைப் பற்றி யாரும் சந்தேகப்படவில்லை. பனிக்கட்டியைப் பார்ப்பதற்காக அப்பா அழைத்துச் சென்றபோது கர்னல் இருந்ததைப் போலவே அந்தச் சிறுவன் இருந்தான். அவன் கண்களைத் திறந்து வைத்துக்கொண்டே பிறந்தான்; முதிர்ந்த மனிதனைப் போலவே ஆட்களை மதிப்பிடுவது போலப் பார்க்கிறான்; இமையைச் சிமிட்டாமல் உற்றுப் பார்ப்பதைக் கண்டு அவளுக்குப் பயமாக இருக்கிறது. அந்தப் பெண் இதையெல்லாம் சொன்னதும் உர்சுலா பதில் சொன்னாள். "அவனுடைய அப்பனைப் போல. வெறும் பார்வையாலேயே நாற்காலிகளை ஆட வைப்பதில்லை என்பது மட்டுமே இவனிடம் குறை." அவுரேலியானோ என்பதுடன் அவனுடைய தாயின் கடைசிப் பெயரையும் சேர்த்து அவனுக்குப் பெயரிட்டார்கள். ஏனெனில் தகப்பன் வந்து அடையாளம் தெரிந்து

கொள்ளும்வரை ஒரு குழந்தைக்கு அவனுடைய தந்தை வழிப் பெயரைச் சூட்டக் கூடாது என்பது சட்டம். ஜெனரல் மன்காடா ஞானத் தந்தையாக இருந்தார். அவனை அங்கேயே விட்டுவிட்டுப் போகும்படியும் தான் அவனை வளர்க்கும் பொறுப்பை எடுத்துக் கொள்வதாகவும் அமரந்தா சொல்லியும்கூட அவன் தாய் ஒப்புக் கொள்ளவில்லை.

சேவல்களுக்கு நடுவில் பெட்டைக் கோழிகளைத் திரியவிடுவது போலக் கன்னிப்பெண்களை ராணுவ வீரர்களின் படுக்கையறைகளுக்கு அனுப்பும் வழக்கத்தைப் பற்றி உர்சுலாவுக்கு அப்போது தெரிந்திருக்க வில்லை. ஆனால் அந்த வருடத்தில் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் மேலும் ஒன்பது மகன்கள் ஞானஸ்நானத்துக்காக அந்த வீட்டுக்கு அழைத்து வரப்பட்டார்கள். அவர்களில் பெரியவனுக் குப் பத்து வயது. பச்சைக் கண்களுள்ள கறுப்பு நிறமுடைய சிறுவன். அவனுக்குத் தகப்பனின் குடும்பச் சாயலே இருக்கவில்லை. எல்லா வயதிலும் எல்லா நிறத்திலும் இருக்கும் குழந்தைகளை அழைத்து வந்தார்கள். ஆனால் எல்லாமும் ஆண் குழந்தைகள். எல்லாருக்கும் தனிமை நிரம்பிய பார்வை. எனவே உறவைப் பற்றிய சந்தேகத்துக்கு இடமில்லை. அந்தக் கூட்டத்தில் இரண்டு பேர் வேறுபட்டிருந்தார்கள். வயதுக்கு மீறிய வளர்ச்சியுடைய ஒருவன். பூ ஜாடிகளிலிருந்தும் பீங்கான் பொருட்களிலிருந்தும் சில்லுகளை உருவாக்கிக்கொண் டிருந்தான். தொடுகிற எல்லாவற்றையும் நொறுக்கிவிடும் குணம் அவன் கைகளுக்கு இருந்தது. இன்னொருவன் அவன் அம்மாவின் அதே வெளிர்கண்கள் கொண்ட தங்க முடிக்காரன். அவனுடைய சிகை பெண்களுடையதைப் போல நீளமாகவும் சுருளாகவும் வளர்க்கப்பட் டிருந்தது. அவன் அந்த வீட்டிலேயே வளர்ந்தவனைப் போல மிகுந்த சுவாதீனத்துடன் உர்சுலாவின் படுக்கையறைக்குள்ளிருந்த அலமாரி அருகில் வந்து நின்று "எனக்கு அந்த எந்திரப் பெண் வேண்டும்" என்று கேட்டான். உர்சுலா திகைத்தாள். அலமாரியைத் திறந்து மெல்குயாதெஸின் காலத்திலிருந்து அதற்குள்ளேயிருந்த புராதனமான, புழுதி படிந்த பொருட்களுக்கு இடையிலிருந்து ஒரு ஜதைக் காலுறை களால் சுற்றி வைக்கப்பட்டிருந்ததும் பியத்ரோ கிரெஸ்பி அந்த வீட்டுக்குக் கொண்டு வந்ததும் எல்லாரும் மறந்துபோனதுமான அந்த எந்திரப் பாவையைக் கண்டுபிடித்தாள். பன்னிரண்டுக்கும் குறைவான ஆண்டுகளில் அவுரேலியானோ என்ற முதற்பெயருடனும் அவரவர் தாயார்களின் கடைசிப் பெயருடனும் தனது யுத்த நாடகத்துக் காக மேலும் கீழும் நடந்து கர்னல் விதைத்திருந்த எல்லாப் பிள்ளை களுக்கும் ஞானஸ்நானம் செய்து வைத்தார்கள். மொத்தம் பதினேழு. முதலிலெல்லாம் உர்சுலா அவர்கள் சட்டைப் பைகளைப் பணத்தால் நிரப்பினாள். அமரந்தா அவர்களை அங்கேயே தங்கவைக்க முயன்றாள். கடைசியில் அவர்களுக்குப் பரிசுகள் கொடுப்பது, ஞானத் தாய்களாகச் சேவை செய்வது என்பதோடு நிறுத்திக் கொண்டார்கள். குழந்தை பிறந்த இடம், தேதி, தாயின் பெயர் ஆகியவற்றைப் பேரேட்டில் குறித்து வைத்துக்கொண்டே "அவர்களுக்கு ஞானஸ்நானம் செய்து வைப்பதன் மூலம் நம்முடைய கடமையை நிறைவேற்றிவிட்டோம்"

என்று உர்சுலா சொல்லுவாள். "திரும்பி வந்ததும் என்ன செய்வது 'என்று தீர்மானிக்க அவுரேலியானோவுக்குச் சரியான விவரங்கள் தேவைப்படும்" என்பாள். ஒரு சமயம் பகலுணவு வேளையில் இந்த அலங்கோலமான வம்ச விருத்தியைப் பற்றி ஜெனரல் மன்காடாவுடன் பேசிக்கொண்டிருக்கும்போது தன்னுடைய எல்லா மகன்களையும் அந்த வீட்டுக்கு அழைத்துக்கொண்டு வந்துவிட கர்னல் அவுரேலியானோ புயேந்தியா சீக்கிரம் திரும்ப வேண்டும் என்ற விருப்பத்தைச் சொன்னாள். "கவலைப் படாதீர்கள், தோழி. நீங்கள் எதிர்பார்ப்பதைவிடச் சீக்கிரம் அவர் வருவார்" என்று பூடகமாகச் சொன்னார்.

கர்னல் அவுரேலியானோ புயேந்தியா அதுவரை நடத்தியவற்றை யெல்லாம்விடத் தீவிரமானதும் புரட்சிகரமானதும் மிக நீண்டதுமான ரத்தம் சிந்தும் போராட்டத்துக்கு ஆயத்தப்படுத்திக் கொண்டு ஏற்கனவே வந்துகொண்டிருக்கிறார் என்பது ஜெனரல் மன்காடாவுக்குத் தெரியும். இருந்தும் சாப்பாட்டு வேளையில் அதைச் சொல்ல அவர் விரும்பவில்லை.

முதலாவது போருக்கு முன்பிருந்ததைப் போலச் சூழல் மீண்டும் பதற்றமாக மாறியது. மேயரே ஆரம்பித்து வைத்த சேவல் சண்டைகள் நிறுத்தப்பட்டன. ஆயுதப்படையின் தலைவரான கேப்டன் அகுய்லெஸ் ரிக்கார்தோ நகர சபையின் நிர்வாகப் பொறுப்புகளை ஏற்றுக்கொண் டார். அவரைக் குழப்பம் உண்டாக்குகிறவராக மிதவாதிகள் பார்த்தார் கள். "பயங்கரமான எதுவோ நடக்கப் போகிறது" என்று உர்சுலா அவுரேலியானோ ஹோசேயிடம் சொல்லுவாள். "ஆறு மணிக்குப் பிறகு வெளியே தெருவுக்குள் போகாதே" என்றாள். அந்தக் கெஞ்சல் களுக்குப் பயனில்லை. முந்தைய நாட்களில் அர்க்காதியோவை இழந்தது போல அவுரேலியானோ ஹோசேவையும் அவள் இழந்திருந்தாள். அன்றாடத் தேவைகளைப் பற்றி யோசிக்க வேண்டிய அவசியம் இல்லாமலிருந்ததால் மாமன் ஹோசே அர்க்காதியோவைப் போலவே அவனுடைய வீடு திரும்பல் காமவெறியையும் சோம்பலையும்தான் அவனுக்குள் கிளரச் செய்திருந்தது. அமரந்தா மீதான அவனுடைய வேட்கை எந்த வடுவும் இல்லாமல் மறைந்து போனது. மனம்போன போக்கில் திரிவான். சூதாடுவான். தற்காலிகப் பெண்களுடன் தனது தனிமையைத் தளர்த்திக்கொள்வான். உர்சுலா பணத்தை மறந்து வைத்த இடங்களைத் தேடுவான். உடை மாற்றிக்கொள்வதற்காக மட்டுமே வீட்டுக்கு வருவதோடு நிறுத்திக்கொண்டான். "எல்லாரும் ஒரே போலத்தான். முதலில் நல்லபடியாக நடந்துகொள்வார்கள். கீழ்ப்படிவார்கள். காலந்தவறாமல் இருப்பார்கள். அவர்களைப் பார்த்தால் ஒரு ஈயைக்கூடச் சாகடிக்க முடியாது என்று தோன்றும். தாடி முளைக்கத் தொடங்கிய உடனே நாசமாகப் போவார்கள்" என்று உர்சுலா புலம்பினாள். அர்க்காதியோவுக்கு அவனுடைய பிறப்பு பற்றித் தெரியாமலிருந்தது போல அல்லாமல் தான் பிலர் தெர்னேராவின் மகன் என்பது அவுரேலியானோ ஹோசேவுக்குத் தெரிந்திருந்தது. அவனுடைய பகல் தூக்கத்துக்காக அவள் தன் வீட்டில் ஒரு உறக்க மஞ்சத்தைக் கட்டித் தொங்கவிட்டாள். அம்மாவும் மகனும் என்பதைவிட அவர்கள் தனிமையின் பங்காளிகளாக இருந்தார்கள்.

பிலர் தெர்னேரா எல்லா நம்பிக்கைகளையும் இழந்திருந்தாள். அவளுடைய சிரிப்பு ஆர்கனின் தொனி போல ஆனது. முடிவில்லாமல் கசக்கியதனால் முலைகள் குலைந்திருந்தன. அடிவயிறும் தொடைகளும் படுக்கைப் பங்காளியாக இருக்க விட்ட மாற்ற முடியாத விதிக்கு இரையாகி இருந்தன. ஆனால் அவளுடைய இதயம் மட்டும் கசப்பே இல்லாமல் முதுமையடைந்திருந்தது. தடிச்சியானாள். பதவியிலிருந்து இறக்கப்பட்ட தாதியைப் போல வாயாடினாள். சீட்டுகளைப் பார்த்துக் குறி சொல்வதைக் கைவிட்டாள். அடுத்தவர்களின் காதல் விவகாரங் களில் அமைதியும் ஆறுதலும் அடைந்தாள். அவுரேலியானோ பகல் தூக்கம் போடும் அந்த வீட்டில் பக்கத்து வீட்டுப் பெண்கள் தற்காலிகக் காதலர்களை வரவழைப்பார்கள். ஏற்கனவே வீட்டுக்குள் போய் இருந்துகொண்டு "பிலர் உன்னுடைய அறையைக் காலிசெய்து கொடுப்பாயா?" என்று சாதாரணமாகக் கேட்பார்கள். "நிச்சயமாக" என்பாள். உள்ளே யாராவது இருந்தால் இப்படி விளக்குவாள். "மனிதர்கள் படுக்கையில் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள் என்று தெரிந்து கொள்வது எனக்கும் மகிழ்ச்சிதானே."

இந்தச் சேவைக்காக அவள் கட்டணம் வாங்கவில்லை. அவளைத் தேடி வந்த கணக்கில்லாத ஆட்களை ஒருபோதும் புறக்கணிக்காதது போலவே இந்த உதவியையும் அவள் யாருக்கும் மறுக்கவில்லை. அவளுடைய பருவத்தின் அந்திமத்தில் இருந்தபோதும் பணத்தையோ அன்பையோ கொடுக்காமல் தற்காலிகச் சுகத்தை மட்டும் கொடுத்தவர் களையும் அவள் ஏமாற்றவில்லை. அவளுடைய மரபின் வெம்மையில் தகித்த ஐந்து பெண் மக்களும் வளரிளம் பருவத்திலேயே வாழ்க்கையின் வெவ்வேறு வழிகளில் பிரிந்தார்கள். அவள் வளர்த்த இரண்டு மகன் களில் ஒருவன் கர்னல் அவுரேலியானோவின் படையில் சேர்ந்து சண்டையில் இறந்தான். அடுத்தவன் பதினான்கு வயதில் சதுப்புப் பகுதி நகரமொன்றில் ஒரு அட்டிக் கோழிகளைத் திருட முயன்று காயங்களுடன் பிடித்துக் கைது செய்யப்பட்டான். ஒருவகையில், அவுரேலியானோ ஹோசே தான் அரை நூற்றாண்டுக் காலமாக அவள் காத்திருந்த உயரமும், கறுப்பு நிறம் கொண்டவனுமான பிரியத்துக்குரியவன். சீட்டுகளின் ஆரூடத்தால் அவளிடம் வந்து சேர்ந்த எல்லாரையும் போலவே அவனும் அவளுடைய இதயத்தை அடைந் திருந்தான். ஆனால் ஏற்கனவே மரணத்தின் முத்திரை அவன்மீது பதிக்கப்பட்டிருந்தது. அதை அவள் சீட்டுகளில் பார்த்தாள்.

"இன்றிரவு நீ வெளியே போக வேண்டாம். இங்கேயே படுத்துத் தூங்கு. ஏனென்றால் கார்மேலிதா மாண்டியேல் அவளை உன்னுடைய அறைக்கு அனுப்பச் சொல்லி அலுத்துப் போய்விட்டாள்" என்று அவனிடம் சொன்னாள்.

அந்த வேண்டுகோளில் இருந்த கெஞ்சலின் ஆழமான உணர்வை அவுரேலியானோ ஹோசேயால் புரிந்துகொள்ள முடியவில்லை.

"இன்று நள்ளிரவு அவளை எனக்காகக் காத்திருக்கச் சொல்" என்றான்.

ஒரு ஸ்பானியக் குழு நடத்தும் "குள்ள நரியின் உடைவாள்" நாடகத்தைப் பார்க்கப் போனான். அது உண்மையில் ஸோர்ஸிலாவின் நாடகம். கேப்டன் அகுய்லெஸ் ரிக்கார்டோவின் உத்தரவுப்படி தலைப்பு மாற்றப்பட்டிருந்தது. ஏனெனில் மிதவாதிகள், பழைமைவாதிகளை 'கோத்துகள்' என்று அழைத்தார்கள். நாடக அரங்கின் வாசலில் அனுமதிச் சீட்டைக் கொடுத்தபோதுதான் காப்டன் அகுய்லெஸ் ரிக்கார்டோவும் ஆயுதம் தாங்கிய இரண்டு வீரர்களும் பார்வையாளர்களைப் பரிசோதித்துக் கொண்டிருப்பது தெரிந்தது.

"பார்த்து நடந்துகொள்ளுங்கள் காப்டன்" என்று அவுரேலியானோ ஹோசே எச்சரித்தான். "என் கையில் விலங்கு மாட்டும் தைரியமுள்ளவன் இன்னும் பிறக்கவில்லை" என்றான். காப்டன் அவனை வலுக்கட்டாயமாகப் பரிசோதிக்க முயன்றான். நிராயுதபாணியாக இருந்த அவுரேலியானோ ஹோசே ஓட ஆரம்பித்தான். சுடக் கூடாது என்ற கட்டளைக்குச் சிப்பாய்கள் பணியவில்லை. "அவர் ஒரு புயேந்தியா" என்று அவர்களில் ஒருவர் விளக்கிச் சொன்னார். கோபத்தில் குருடாகிப் போன காப்டன் துப்பாக்கியைப் பிடுங்கிக்கொண்டு தெரு நடுவில் போய் நின்று குறிபார்த்தார்.

"கோழைகளே!" என்று கத்தினார். "அது கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவாகவே இருக்க வேண்டும் என்றுதான் விரும்பினேன்."

இருபது வயதுக் கன்னியான கார்மேலிதா மாண்டியேல் ஆரஞ்சுப் பூக்கள் கலந்த நீரில் குளித்து விட்டுப் பிலர் தெர்னேராவின் படுக்கையில் ரோஸ்மேரித் தாவர இலைகளைத் தூவிக் கொண்டிருந்தபோதுதான் வேட்டு ஒலித்தது. அமரந்தாவால் மறுக்கப்பட்ட சுகத்தை அவளிடமிருந்து பெற்று அவள் மூலம் ஏழு பிள்ளைகளைப் பெற்று முதுமைக் காலத்தில் அவள் கைகளில் கிடந்து செத்துப் போவது தான் அவுரேலியானோ ஹோசேயின் விதியாக இருந்தது. ஆனால் அவனுடைய முதுகை ஊடுருவிப் புகுந்து மார்பைச் சிதைத்த துப்பாக்கிக் குண்டு சீட்டுகளின் தவறான விளக்கத்தின்படி குறிபார்க்கப்பட்டதாக இருந்தது. அன்று இரவு சாக விதிக்கப்பட்டிருந்தவரான காப்டன் அகுய்லெஸ் ரிக்கார்டோவும் உண்மையிலேயே அவுரேலியானோ ஹோசே இறப்பதற்கு நான்கு மணி நேரத்துக்கு முன்பே இறந்தார். வெடிச்சத்தம் கேட்ட அதே நொடியில் இரண்டு குண்டுகள் ஒரே சமயத்தில் பாய்ந்து அவரை வீழ்த்தின. அவை எங்கிருந்து வெடித்தன என்று ஒருபோதும் நிரூபிக்கப் படவில்லை. தொடர்ந்து ஒலித்த பல குரல்கள் அந்த இரவை உலுக்கின.

"மிதவாதக் கட்சி நீடூழி வாழ்க. கர்னல் அவுரேலியானோ புயேந்தியா நீடூழி வாழ்க."

நள்ளிரவு பன்னிரண்டு மணிக்கு அவுரேலியானோ ஹோசே ரத்தம் சிந்தி இறந்தான். தன்னுடைய வாழ்க்கையைக் காட்டும் சீட்டுகள் வெறுமையாக இருப்பதைக் கார்மேலிதா மாண்டியேல் பார்த்தாள். நானூறுக்கும் மேற்பட்ட ஆட்கள் திரண்டு வந்து நாடக அரங்கில் கூடி அநாதையாகக் கிடந்த காப்டன் அகுய்லெஸ் ரிக்கார்டோவின் சடலத்தின்மீது துப்பாக்கிக் குண்டுகளைப் பாய்ச்சினார்கள். ரோந்துப்

படையினர் குண்டுகள் பதிந்து தண்ணீரில் ஊறிய ரொட்டி போலச் சிதைந்திருந்த அந்த உடலை ஒரு தள்ளுவண்டியில்தான் எடுத்துச் சென்றார்கள்.

நிரந்தர ராணுவத்தின் அக்கிரமத்தைப் பார்த்து எரிச்சலடைந்த ஜெனரல் ராக்வெல் மன்காடா தன்னுடைய அரசியல் செல்வாக்கைப் பயன்படுத்தினார். மீண்டும் சீருடையை எடுத்து அணிந்தார். மகோந்தா வின் பொது, ராணுவப் பொறுப்பை ஏற்றுக்கொண்டார். தனது சமரசப் போக்கு தவிர்க்கவியலாத சம்பவங்களைக் கட்டுப்படுத்தப் போதுமானது என்று அவர் எதிர்பார்க்கவில்லை. செப்டம்பர் மாதச் செய்திகள் முரண்பட்டவையாக இருந்தன. நாடு முழுவதும் கட்டுப்பாட்டில் இருப்பதாக அரசாங்கம் அறிவித்தபோது உள் பிரதேசங்களில் ஆயுத எழுச்சிகள் உருவாகியிருப்பதாக மிதவாதிகளுக்கு ரகசியச் செய்தி கிடைத்துக்கொண்டிருந்தது. ராணுவ நீதிமன்றம் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுக்கு அவரது இருப்பு இல்லாமலேயே மரண தண்டனை விதிக்கும் வரை நாட்டில் போர்ச் சூழல் நிலவுகிறது என்பதை ஒப்புக்கொள்ள அரசாங்கம் மறுத்தது. அவரைக் கைது செய்த முதல் படைக்குழுவுக்குத் தண்டனையை நிறைவேற்றும்படி கட்டளையிடப் பட்டது. “அதன் அர்த்தம் அவன் திரும்பி வருகிறான்” என்று ஜெனரல் மன்காடாவிடம் குதூகலமாகச் சொன்னாள் உர்சுலா. ஆனால் அவருக்கே அது பற்றி எதுவும் தெரியவில்லை.

உண்மையில் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா ஒரு மாதமாக நாட்டுக்குள்ளேயேதான் இருந்தார். அவர் வந்து சேரும் முன்பே அவர் தொலைதூர இடங்களில் இருக்கிறார் என்ற வதந்தி ஒரே சமயத்தில் பரப்பப்பட்டிருந்தது. இரண்டு கடலோர மாநிலங்களை அவர் கைப்பற்றிவிட்டார் என்று அதிகாரப்பூர்வமாக அறிவிக்கப்படும் வரை ஜெனரல் மன்காடாவும் அவர் திரும்பி வருவார் என்பதை நம்பவில்லை. தந்தியை உர்சுலாவிடம் காட்டி “நீங்கள் அவரைச் சீக்கிரமாக இங்கே பார்க்கலாம். அன்பான தோழி, பாராட்டுகள்” என்றார். உர்சுலா முதல் முறையாகக் கவலைப்பட்டாள். “நீங்கள் என்ன செய்வீர்கள்?” என்று கேட்டாள். “அவர் என்ன செய்வாரோ அதைத்தான். நான் என் கடமையைச் செய்வேன்” என்றார்.

அக்டோபர் மாதம் முதல் தேதி விடியற்காலையில் ஆயுதம் தாங்கிய ஆயிரம் வீரர்களுடனும் படைப் பிரிவுகளுடனும் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா மகோந்தாவை ஆக்கிரமித்தார். இறுதி வரை எதிர்த்து நிற்குமாறு படைப் பிரிவுகளுக்குக் கட்டளையிடப்பட்டது. நண்பகலில் ஜெனரல் மன்காடா உர்சுலாவுடன் உணவருந்திக் கொண் டிருந்தபோது மொத்த நகரத்தையும் அதிரவைத்த புரட்சிப் பீரங்கிக் குண்டு நகரசபைக் கருவூலத்தைத் தரைமட்டமாக்கியது. “அவர்களும் எங்களைப் போல ஆயுத பலத்துடன் இருக்கிறார்கள்” என்று பெருமூச்சு விட்டார் ஜெனரல் மன்காடா. “ஆனால் போர் செய்ய வேண்டும் என்பதற்காகவே போர் செய்கிறார்கள்” என்றார். பிற்பகல் இரண்டு மணிக்கு, இரு தரப்பிலிருந்தும் மோதிய பீரங்கிப் படைகளால் பூமியே நடுங்கிக் கொண்டிருந்தபோது, தோல்வியடையப் போகும்

போரை நடத்தப் போகிறோம் என்ற நிச்சயத்துடனேயே உர்சுலாவிடம் விடைபெற்றுக்கொண்டார்.

"இன்று இரவு அவுரேலியானோ இந்த வீட்டில் இருக்கக் கூடாது என்று கடவுளை வேண்டிக் கொள்ளுகிறேன். மாறாக நடக்குமானால் என் சார்பில் ஒருமுறை அவரை அணைத்துக் கொள்ளுங்கள். ஏனென்றால் இனி ஒருபோதும் அவரைப் பார்க்க முடியுமென்று எனக்குத் தோன்றவில்லை" என்றார்.

அன்று இரவு, மகோந்தாவிலிருந்து தப்பிச் செல்ல முயன்றபோது அவர் கைது செய்யப்பட்டார். அதற்கு முன்பு போரை மனிதாபிமானப்படுத்த வேண்டும் என்ற அவர்கள் இருவரின் பொதுநோக்கத்தை நினைவூட்டி ஒரு நீண்ட கடிதத்தைக் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுக்கு எழுதியிருந்தார். அதில் ராணுவ வெறியர்களின் ஊழல்களையும் இரண்டு கட்சிகளையும் சேர்ந்த அரசியல்வாதிகளின் பேராசைகளையும் அழிப்பதில் இறுதி வெற்றி அடைய வாழ்த்தியிருந்தார். மறுநாள் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா அவருடன் சேர்ந்து உர்சுலாவின் வீட்டில் பகலுணவு அருந்தினார். புரட்சி ராணுவ நீதிமன்றம் அவருடைய விதியைத் தீர்மானிக்கும்வரை அவர் அங்கேதான் தங்கவைக்கப்பட்டார். அது ஒரு தோழமையான சந்திப்புக் கூட்டமாக இருந்தது. எதிராளிகள் பழைய விஷயங்களை நினைவு படுத்திக்கொண்டிருந்ததில் போரை மறந்து போனார்கள். உர்சுலா வுக்குத் தன் மகன் அழையா விருந்தாளி என்ற மூட்டமான உணர்வு தோன்றியது. இரைச்சலுடன் ஏறி வந்த ராணுவப் பரிவாரத்தின் பாதுகாப்பில் அவர் வருவதைப் பார்த்தது முதலே அதை உணர்ந்தாள். பரிவாரத்திலிருந்தவர்கள் அங்கே ஆபத்து எதுவுமில்லை என்ற நம்பிக்கை வரும்வரை படுக்கையறைகளை மேலும் கீழுமாகப் புரட்டினார்கள். கர்னல் அவுரேலியானோ புயேந்தியா அதை ஏற்றுக்கொண்டது மட்டு மல்ல; பாதுகாப்புப் படை உறுப்பினர்கள் வீட்டைச் சுற்றிக் காவலர் களை நிறுத்திய பின்பு, யாரும், உர்சுலாகூட, தன்னிடம் பத்து அடிக்கும் அதிகமான நெருக்கத்தில்தான் வரவேண்டும் என்று கறாரான உத்தரவு பிறப்பித்தார். பதவிக்குரிய சின்னங்கள் இல்லாமல் சாதாரண டெனின் சீருடை அணிந்திருந்தார். சேறும் உலர்ந்த ரத்தமும் அப்பிய நீளமான பூட்ஸுகள் போட்டிருந்தார். இடுப்பில் கோத்திருந்த உறையின் திறப்பை மூடாமல் விட்டுத் துப்பாக்கியின் பின்பாகத்தையே அவர் கை எப்போதும் பற்றியிருந்தது. அவர் கண்களில் தெரிவது போன்ற எச்சரிக்கையையும் திட உறுதியையுமே அது வெளிப்படுத்தியது. இப்போது முடி வளர்ச்சியில் தேக்கமடைந்த தலை நிதானமான அடுப்பில் சுட்டெடுத்தது போல இருந்தது. கரீபிய உப்புக் காற்றால் பழுப்பேறிய முகம் உலோக இறுக்கத்தை அடைந்திருந்தது. உள்ளுக் குள்ளேயிருந்த குளிர்ச்சி போன்ற ஒன்றின் வலுவால் உடனடியாக முதுமையடையாமல் பதனம் செய்யப்பட்டிருந்தார். வீட்டை விட்டு வெளியேறியபோது இருந்ததைவிட உயரமானவராக ஆகியிருந்தார். வெளுத்து மெலிந்திருந்தார். வீட்டைப் பற்றிய ஏக்கத்தை எதிர்க்கும் ஆரம்ப சமிக்ஞைகளைக் காட்டினார். "கடவுளே, இப்போது அவன்

எதையும் செய்யக் கூடியவனாகத் தெரிகிறான்” என்று உர்சுலா தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டாள். அவர் அப்படித்தான் இருந்தார். அமரந்தாவுக்காக அவர் கொண்டு வந்த அஸ்டெக் சால்வை, பகலுணவு வேளையில் பேசிய ஞாபகங்கள், சொன்ன வேடிக்கைக் கதைகள் எல்லாம் வேறு ஏதோ காலத்தைச் சேர்ந்த அவருடைய நகைச்சுவை உணர்வின் மிச்சங்களாகவே இருந்தன. சட்டங்களையெல்லாம் ஒரு பொதுக்கல்லறையில் புதைக்கும்படி பிறப்பித்த கட்டளை நிறைவேறியதும் ராணுவ நீதிமன்றம் அமைக்கும் பொறுப்பைக் கர்னல் ரோக் கார்னிஸெரோவிடம் ஒப்படைத்தார். மீண்டும் நிறுவப்பட்ட பழைமைவாதக் கட்சியின் ஒரு அடையாளச் சின்னமும் இல்லாதபடியான புரட்சிகரச் சீர்திருத்தங்களை அமலாக்கும் சவாலுடன் முன்னேறினார். “கட்சியிலுள்ள அரசியல்வாதிகளை நாம் முந்த வேண்டும். அவர்கள் கண்ணைத் திறக்கும்போது நாம் அமல்படுத்திய உண்மைகளைத்தான் பார்க்க வேண்டும்” என்று தனது ஆதரவாளர்களிடம் சொன்னார். அதன் பிறகு நூறு ஆண்டுகளுக்குள் நடந்த பத்திரப் பதிவுகளை மறுஆய்வு செய்தார். தனது சகோதரன் ஹோசே அர்க்காதியோவின் சட்டரீதியான அத்துமீறல்களைக் கண்டுபிடித்தார். பேனாவின் ஒற்றை இழுப்பில் அந்தப் பதிவுகளைச் செல்லாதவையாக்கினார். மரியாதை நிமித்தமான கடைசி சமிக்ஞையாக தன்னுடைய வேலைகளை ஒருமணி நேரம் விட்டுவிட்டுத் தான் என்ன செய்யத் தீர்மானித்திருக்கிறோம் என்பதைப் புரியவைப்பதற்காக ரெபேக்காவைத் தேடிப் போனார்.

ஒருகாலத்தில் அவருடைய அடக்கிவைக்கப்பட்ட காதல் கதைகளை நம்பிக்கையுடன் கேட்டவளும் அவருடைய உயிரைக் காப்பாற்றியவளுமான அந்த விதவை தனது வீட்டின் நிழலில் இறந்த காலத்திலிருந்து வந்த பார்வையாளராகத் தோன்றினாள். கால் விரல் முனை வரை கறுப்பு உடையால் மூடியிருந்தாள். மனம் சாம்பலாகிக் கிடந்தது. போரைப் பற்றி அவளுக்கு எதுவும் தெரிந்திருக்கவில்லை. அவளுடைய எலும்புகளின் மினுக்கம் தோல் வழியாகத் தெரிவது போலவும் புனித எல்மோவின் அக்கினிப் பின்னணியில் அவள் நடப்பது போலவும் அங்கே வெடிமருந்தின் மறைவான வாடையை முகர முடிவது போலவும் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுக்குத் தோன்றியது. துக்கக் கடைபிடிப்பை அவள் தளர்த்திக்கொள்ள வேண்டும். வீட்டுக்குள் காற்றுவரச் செய்யவேண்டும். ஹோசே அர்க்காதியோவின் சாவுக்காக உலகத்தை மன்னிக்க வேண்டும் என்று அவளுக்கு அறிவுரையுடன் பேசத் தொடங்கினார். ஆனால் ரெபேக்கா ஏற்கனவே அதுபோன்ற மாயையைக் கடந்திருந்தாள். மண்ணின் ருசியிலும் பியத்ரோ க்ரெஸ்பியிடமிருந்து வந்த மணமுள்ள கடிதங்களிலும் கணவனின் சூறாவளிப் படுக்கையிலும் அமைதியைத் தேடினாள். இடம்பெயர்க்க முடியாத பிம்பங்களினூடாக உருவம் பெற்ற நினைவுகள், விலகித் தனித்திருக்கும் அறைகளுக்குள் மனிதர்களைப் போல நடமாடும் அந்த வீட்டில்தான் அந்த அமைதியைக் கண்டடைந்தாள். தன்னுடைய பிரம்பாலான ஆடும் நாற்காலியில் சாய்ந்துகொண்டு கர்னல்

அவுரேலியானோ புயேந்தியாவைப் பார்த்தபோது கடந்த காலத்திலிருந்து வந்த பிசாசாகத் தெரிந்தார். ஹோரசே அர்க்காதியோ பறித்துக்கொண்ட நிலங்களைச் சரியான உரிமையாளர்களுக்குத் திரும்பக் கொடுக்கவிருக்கும் செய்திகூட அவளை அசைக்கவில்லை.

“நீ என்ன தீர்மானிக்கிறாயோ அது நடக்கும் அவுரேலியானோ, நீ வீட்டுக்கு உதவாதவன் என்று எப்போதும் நினைத்திருக்கிறேன். இப்போது அதற்கு என்னிடம் நிரூபணம் இருக்கிறது” என்று பெருமூச்சு விட்டாள். புரட்சிப்படையினர் சிறைப்பிடித்த நிரந்தர ராணுவத்தின் அதிகாரிகளை கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் தலைமையிலான ராணுவ நீதிமன்றம் மரண தண்டனைக்கு விதித்துச் சுட்டுக் கொன்றதும் நில ஆவணங்கள் மாற்றி எழுதப்பட்டதும் ஒரே சமயத்தில் நடந்தன. ராணுவ நீதிமன்றத்தின் கடைசி விசாரணை ஹோரசே ராக்வெல் மன்காடாவுடையதாக இருந்தது. அதில் உர்சுலா தலையிட்டாள். “மகோந்தாவில் நமக்கு வாய்த்த அரசாங்கங்களில் மன்காடாவின் ஆட்சிதான் சிறப்பானதாக இருந்தது. அவருடைய நல்ல மனத்தைப் பற்றியும் நம் மேல் அவருக்கு இருக்கும் பாசம் பற்றியும் நான் சொல்ல வேண்டியதில்லை. அது என்னைவிட உனக்கே நன்றாகத் தெரியும்” என்று கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவிடம் சொன்னாள். அவளை மறுப்பது போலப் பார்த்தார்.

“நீதியைப் பராமரிக்கும் வேலையை என்னால் செய்ய முடியாது. உங்களுக்கு எதாவது சொல்ல வேண்டுமென்றால் ராணுவ நீதிமன்றத்தில் போய்ச் சொல்லுங்கள்” என்று பதிலளித்தார்.

உர்சுலா அதை மட்டுமே செய்யவில்லை; மகோந்தாவில் வசித்த புரட்சி ராணுவ அதிகாரிகளின் தாய்மார் அனைவரையும் சாட்சிக்காகக் கொண்டு வந்து நிறுத்தினாள். அவர்களில் பலர் மலைகளைத் துணிச்சலாகத் தாண்டி வந்து அந்த நகரத்தை நிறுவியவர்கள். அவர்கள் ஒவ்வொருவராக ஜெனரல் மன்காடாவின் நற்குணங்களைப் பாராட்டிச் சொன்னார்கள். உர்சுலா வரிசையில் கடைசியாக இருந்தாள். அவளுடைய நிதானமான கம்பீரமும் பெயருக்கு இருந்த மரியாதையும் அவளுடைய பிரகடனத்தின் பிடிவாதமும் நீதித் தராசை ஒரு கணம் தயங்கச் செய்தது. “இந்தக் கொடூரமான விளையாட்டை நீங்கள் தீவிரமாக எடுத்துக்கொண்டிருக்கிறீர்கள். அதைச் சரியாகவும் செய்திருக்கிறீர்கள். ஏனென்றால் நீங்கள் உங்கள் கடமையைச் செய்தீர்கள்” என்று நீதிமன்ற உறுப்பினர்களிடம் சொன்னாள். “ஆனால் மறந்து விடாதீர்கள், கடவுள் ஆயுளைக் கொடுத்திருக்கும் வரை நாங்கள் அம்மாக்கள்தாம். நீங்கள் எவ்வளவு பெரிய புரட்சிக்காரர்களாக இருந்தாலும் கவலையில்லை. மரியாதைக் குறைவின் முதல் அடையாளத்தைப் பார்த்தாலே உங்கள் சராயை இழுத்துவிட்டு சவுக்கால் அடிக்கும் உரிமை எங்களுக்கு இருக்கிறது.” ராணுவத் தளமாக மாறிய அந்தப் பள்ளிக்கூடத்துக்குள் அந்தச் சொற்கள் எதிரொலித்தன. நள்ளிரவில் ஜெனரல் ஆலோசனைக்காக நீதிமன்றம் கலைந்தது. ஹோரசே ராக்வெல் மன்காடாவுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. உர்சுலாவின் வன்மையான குற்றச்சாட்டுகளை மீறியும் தண்டனையைத்

தளர்த்த கர்னல் அவுரேலியானோ புயேந்தியா மறுத்துவிட்டார். விடியற்காலைக்குச் சற்று முன்பு தண்டனை விதிக்கப்பட்ட மனிதரைச் சிறையாகப் பயன்படுத்தி வந்த அறையில் சந்திக்கப் போனார்.

"பழைய நண்பரே, ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள். நான் உங்களைச் சுடுவதில்லை. புரட்சிதான் உங்களைச் சுடுகிறது" என்றார். அவர் உள்ளே வருவதைப் பார்த்தபோது ஜெனரல் மன்காடா கட்டிலை விட்டு எழுந்திருக்கக்கூட இல்லை.

திரும்பி வந்த பின்னர் அந்த விநாடிவரை கர்னல் அவுரேலியானோ புயேந்தியா தன்னுடைய இதயத்தின் வழியாகத் தன்னைப் பார்த்துக் கொள்ளும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொள்ளவில்லை. எவ்வளவு முதுமையடைந்திருக்கிறோம் என்றும் கைகள் எவ்வளவு நடுங்குகின்றன என்றும் பார்த்துத் திகைப்படைந்தார். திட நிச்சயத்துடன் மரணத்துக் காகக் காத்திருக்கிறோம் என்பதை உணர்ந்து திகைத்தார். தன்னிரக்க மாக அதை மாற்றிக்கொண்டு விட்டதை மாபெரும் அருவருப்பாக அவரே உணந்தார்.

"எல்லா ராணுவ நீதி விசாரணைகளும் கேலிக் கூத்துகள்தாம் என்பதும் உண்மையில் மற்றவர்களின் குற்றங்களுக்காகத்தாம் நீங்கள் உயிரை விடுகிறீர்கள் என்பதும் என்னைவிடவும் உங்களுக்கே நன்றாகத் தெரியும். எனினும் என்ன விலை கொடுத்தும் இந்த முறை நாங்கள் யுத்தத்தில் வெற்றியடைந்தே தீர வேண்டும். என் இடத்தில் இருந்தால் நீங்களும் இதைத்தானே செய்திருப்பீர்கள்?" என்று கேட்டார்.

சட்டை நுனியால் கனத்த சட்டம் போட்ட கண்ணாடியைத் துடைப்பதற்காக ஜெனரல் மன்காடா எழுந்து நின்றார். "இருக்கலாம்" என்றார். "ஆனால் என்னைக் கவலைப்படச் செய்வது நீங்கள் என்னைச் சுட்டுக் கொல்வீர்கள் என்பதல்ல; ஏனென்றால் என்னைப் போன்றவர்களுக்கு அது இயற்கையான சாவுதான்." கண்ணாடியைப் படுக்கை மேல் வைத்துவிட்டுக் கடிகாரத்தையும் சங்கிலியையும் கழற்றினார். "என்னைக் கவலைப்படச் செய்வது" என்று தொடர்ந்தார். "ராணுவத்தின் மீது அத்தனை வெறுப்பிருந்தும் அவர்களுடன் போர் செய்துகொண்டிருந்தும் அவர்களைப் பற்றி யோசித்துக்கொண்டிருந்தும் கடைசியில் நீங்களும் அவர்களைப் போலத்தான் ஆகிவிட்டீர்கள். வாழ்க்கையில் எந்த இலட்சியமும் இந்த அளவு கயமைக்கு உகந்ததல்ல" அவர் தன்னுடைய திருமண மோதிரத்தையும் சகாய மாதாவின் உருவம் பதித்த பதக்கத்தையும் கண்ணாடிக்கும் கடிகாரத்துக்கும் அருகில் வைத்தார்.

"இந்தக் கணக்கில் போனால் நமது வரலாற்றில் நீங்கள்தான் மிகுந்த கொடுங்கோன்மையும் கொடூரமும் கொண்ட சர்வாதிகாரியாக இருப்பீர்கள் என்பது மட்டுமல்ல; உங்கள் மனசாட்சியை சமாதானப் படுத்தும் முயற்சியில் என் அருமைத் தோழி உர்சுலாவையும் சுட்டுக் கொல்வீர்கள்" என்று முடித்துக்கொண்டார்.

ஜெனரல் மன்காடா கண்ணாடி, பதக்கம், கடிகாரம், மோதிரம் எல்லாவற்றையும் அவரிடம் கொடுத்துவிட்டுக் குரலைச் செருமிக் கொண்டு "நான் உங்களைத் திட்டுவதற்காக அழைக்கவில்லை. இந்தப் பொருட்களை என் மனைவிக்கு அனுப்ப உதவச் சொல்லிக் கேட்கத்தான் அழைத்தேன்."

கர்னல் அவுரேலியானோ புயேந்தியா அவற்றைச் சட்டைப் பைக்குள் வைத்துக்கொண்டார். "அவள் இன்னும் மனௌரில்தான் இருக்கிறாளா?"

"மனௌரில்தான். நீங்கள் கடிதம் அனுப்பிய தேவாலயத்துக்குப் பின்னால் இருக்கும் அதே வீட்டில்தான் இன்னும் இருக்கிறாள்" என்று கர்னல் மன்காடா உறுதிப்படுத்தினார்.

"நான் இதை மகிழ்ச்சியுடன் செய்கிறேன், ஹோராசே ராக்வெல்" என்றார் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா.

பனி மூட்டமான நீல வெளியில் இறங்கி நடக்கும்போது கடந்த காலத்தின் ஏதோ ஒரு விடியற்காலையில் நிகழ்ந்தது போல அவர் முகத்தில் ஈரம் படர்ந்தது. கல்லறைச் சுவருக்கு அருகில் அல்ல; இந்த முற்றத்தில்தான் தண்டனை நிறைவேற்றப்பட வேண்டும் என்று உத்தரவிட்டிருந்தது அப்போதுதான் அவருக்கு நினைவுக்கு வந்தது. வாசலுக்கு நேராக அணிவகுத்து நின்ற துப்பாக்கிப் படை ஆட்சித் தலைவருக்கான மரியாதையைச் செலுத்தியது.

"அவரை இப்போதே வெளியில் கொண்டு வாருங்கள்" என்று கட்டளையிட்டார்.

போரின் வெறுமையை முதன்முதலில் புரிந்துகொண்டவன் கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ்தான். மகோந்தாவின் சிவில், ராணுவத் தலைவன் என்ற முறையில் வாரத்துக்கு இரண்டு முறையாவது அவன் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுடன் தந்தி வழியாக உரையாடினான். ஆரம்பத்தில் அது கொடும் போரின் போக்குகளை நிர்ணயிக்கும் தகவல் பரிமாற்றமாக இருந்தது. எந்த இடத்தில் போர் நடக்கிறது, எந்தத் திசையில் அடுத்து அது முன்னேறும் என்ற விவரங்களை அவை துல்லியமாக வரையறுத்தன. தனது அந்தரங்க உலகுக்குள் மிக நெருக்கமான தோழர்களைக்கூடப் புகவிடாதவராக இருந்தபோதும் மறு முனையிலிருப்பது அவர்தான் என்று இனங்கண்டு கொள்ள உதவும் பரிச்சயமான தொனி கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுக்கு அந்தச் சமயத்தில் இருந்தது. பெரும்பாலான தருணங்களில் எதிர்பார்த்த எல்லைக்கு அப்பால் பேச்சை நீட்டிக்கொண்டு போவார். அது தங்கள் சொந்த விவகாரங்களைப் பற்றிய கருத்துக்கு இழுத்துச் செல்லும். இருந்தும் போர் தீவிர மானதாகவும் பரவலானதாகவும் மாறியபோது கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் உருவமும் மெல்ல மெல்ல எதார்த்தமற்ற உலகத்துக்குள் மறைந்துகொண்டிருந்தது. அவருடைய பேச்சின் தனித்துவங்கள் மேலும் மேலும் தெளிவில்லாதவை யாயின. அவை படிப்படியாக அர்த்தமிழந்த வார்த்தைகளாக ஒன்று சேர்ந்தன. அதன் பின்னர் தான் வேறு ஏதோ உலகத்தி லிருக்கும் மாற்றானுடன் பேசுகிறோம் என்ற கனத்த எண்ணத் துடன் கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் அந்தப் பேச்சைக் கேட்பதுடன் நிறுத்திக்கொண்டான்.

"எனக்குப் புரிகிறது அவுரேலியானோ, மிதவாதக் கட்சி நீடு வாழ்க" என்று அந்தப் பொறியின் விரற்கட்டையைத் தட்டி முடித்தான்.

கடைசியில் போருடனான எல்லாத் தொடர்புகளையும் அவன் இழந்தான். முன்காலங்களில் சரியான நடவடிக்கையாக வும் இளம்பருவத்தின் அடக்க முடியாத ஆசையாகவும் இருந்த யுத்தம் மிகத் தொலைவிருக்கும் குறிப்பு மட்டுமாக, ஒரு வெறுமை யாக மாறியது. அவனுடைய ஒரே புகலிடம் அமரந்தாவின் தையல் அறையாக இருந்தது. எல்லாப் பிற்பகல்களிலும் அவளைச் சந்திப்பான். அழகி ரெமேதியோஸ் தள்ளிக்கொடுக்கும் பாவாடைத் துணியை மடிப்புகளாக மாற்றும் அவள் கைகளைப் பார்த்துக்

கொண்டிருக்க விரும்பினான். அவர்கள் பேசாமலேயே பல மணி நேரங்கள் செலவழித்தார்கள். பரஸ்பர நெருக்கத்திலேயே திருப்தி அடைந்தார்கள். அவனுடைய ஈடுபாட்டின் நெருப்பை அணையாமல் பார்த்துக்கொள்வதில் அமரந்தா உள்ளுக்குள் நிறைவடைந்தாள். அந்த விளங்கிக்கொள்ள முடியாத மனத்தின் ரகசிய யோசனைகளைப் பற்றி அவன் உணராமலும் இருந்தான். அவன் திரும்பி வரும் செய்தி அவளை வந்தடைந்தபோது அமரந்தா பதற்றத்தில் கொந்தளித்தாள். ஆனால் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் சந்தடியான பாதுகாப்புப் படையின் மையமாக நடந்து வீட்டுக்குள் வருவதைப் பார்த்தபோது தலைமறைவு வாழ்க்கையால் அவன் எவ்வளவு பாடுபட்டிருக்கிறான் என்பதையும் வயதும் தனிமையும் எவ்வளவு முதுமையைக் கொடுத்திருக்கின்றன என்பதையும் பார்த்தாள். வியர்வையும் புழுதியும் அவனை அலங்கோலப்படுத்தியிருந்தன. ஆட்டு மந்தையின் மொச்சை வாடையுடன் இருந்தான். காயம்பட்ட இடது கை தோளிலிருந்து அசிங்கமாக ஒரு தொட்டிலில் தொங்கியது. அந்த மருட்சி மயக்கம் ஏற்படுத்துமோ என்றும் எண்ணினாள். "கடவுளே, நான் காத்துக் கொண்டிருந்தது இந்த மனிதனுக்காக அல்லவே" என்று நினைத்தாள். மறுநாள் அவன் மழித்த முகத்துடனும் குளித்துச் சுத்தமாகவும் வீட்டுக்கு வந்தான். தொங்கல் இல்லாத மீசைக்கு லவெண்டர் திரவியம் தடவியிருந்தான். பைண்டு செய்த பிரார்த்தனைப் புத்தகமொன்றையும் அவளுக்காகக் கொண்டு வந்திருந்தான். "இந்த ஆண்கள் எவ்வளவு விசித்திரமானவர்கள், வாழ்நாள் முழுவதும் பாதிரியார்களுடன் போரிடுகிறார்கள். பிறகு பிரார்த்தனைப் புத்தகங்களைப் பரிசளிக்கிறார்கள்" என்று நினைத்தாள்.

அன்று முதல், போர் உக்கிரமாக நடந்துகொண்டிருந்த நாட்களிலும் கூட எல்லாப் பிற்பகல்களிலும் அவளைச் சந்திக்க வந்தான். அழகி ரெமேதியோஸ் இல்லாத பெரும்பாலான சமயங்களில் தையல் எந்திரத்தின் சக்கரத்தைச் சுற்றிவிட்டதும் அவன்தான். சகல அதிகாரங்களும் உள்ள அந்த மனிதனின் விடா முயற்சியும் விசுவாசமும் பணிவும் அமரந்தாவை வருத்தப்படுத்தின. உடுப்பின் பகுதியாகவே ஆயுதங்கள் இருந்த சீருடையைக் கூடத்திலேயே கழற்றிவைத்து விட்டுத்தான் தையல் அறைக்குப் போவான். நான்கு வருடங்களாகத் திரும்பத் திரும்பக் காதலை ஏற்கும்படிக் கெஞ்சினான். அவனைப் புண்படுத்தாமல் நிராகரிக்கும் வழியை எப்போதும் தேடிக்கொண்டிருந்தாள் அவள். அவனைக் காதலிக்க முடியவில்லை. ஆனால் அவனில்லாமல் வாழவும் அவளால் முடியவில்லை. எதிலும் அக்கறையில்லாதவள், மனவளர்ச்சி குன்றியவள் என்று அமரந்தா நினைத்திருந்த அழகி ரெமேதியோஸால்கூட இந்த அளவு விசுவாசத்தைப் பொருட்படுத்தாமல் இருக்க முடியவில்லை. கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸுக்கு ஆதரவாகத் தலையிட்டாள். தான் வளர்த்த இந்தப் பெண் வளரிளம் பருவத்துக்குள் நுழைந்து கொண்டிருக்கிறாள் என்பதையும் மகோந்தாவில் இதுவரை பார்த்தவர்களில் மிக அழகானவள் என்பதையும் அமரந்தா திடீரென்று கண்டுபிடித்தாள். கடந்த காலங்களில் ரெபேக்காவிடம் ஏற்பட்ட காழ்ப்பு தன்

மனத்துக்குள் மறுபிறப்பெடுப்பதை உணர்ந்தாள். அவள் செத்துப் போகவேண்டும் என்று ஆசைப்படும் கொடிய மனநிலைக்குத் தன்னை உந்தித் தள்ளிவிடாமலிருக்கக் கடவுளிடம் மன்றாடிக்கொண்டே அவளைத் தையல் அறையிலிருந்து வெளியேற்றினாள். அந்தச் சமயத்தில் தான் கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் போரின் வெறுமையைப் பற்றி அலுப்படையத் தொடங்கினான். தன் வசமிருந்த எல்லா வலுவையும் தனது பரந்த மென்மையையும் அடக்கமான பெருந்தன்மையையும் பயன்படுத்தி அமரந்தாவின் முடிவை மாற்றப் பார்த்தார். தனது நல்ல காலங்களில் பெற்ற பெருமையைக்கூட அமரந்தாவுக்காகத் தியாகம் செய்யச் சித்தமாக இருந்தார். ஆனால் அவளை இசைய வைக்க முடியவில்லை. ஒரு ஆகஸ்ட் மாதப் பிற்பகலில், தனது பிடிவாதத்தின் பாரம் தாள முடியாமல் சாகும்வரைக்கும் தன்னுடைய தனிமையை நினைத்து அழ முடிவு செய்து நிராகரிப்பைத் தாங்க முடியாத காதலனிடம் கடைசியான பதிலைச் சொல்லிவிட்டு அமரந்தா தன் படுக்கை அறைக்குள் அடைந்துகொண்டாள்.

“நாம் ஒருவரையொருவர் என்றென்றைக்குமாக மறந்துவிடுவோம். இது போன்ற சங்கதிகளுக்கு நமக்கு வயது மீறிவிட்டது” என்று அவனிடம் சொன்னாள்.

கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸுக்கு அன்று பிற்பகல் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவிடமிருந்து தந்தி அழைப்பு வந்திருந்தது. பாதியில் நின்றிருக்கும் போரில் எந்த மாற்றமும் ஏற்படுத்தாத வழக்கமான உரையாடலாக இருந்தது அந்த அழைப்பு. உரையாடலின் முடிவில் கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் ஆள் நடமாட்டமற்ற தெருவையும் வாதுமை மரங்களில் தேங்கியிருந்த பளிங்கு நீர்த்துளிகளையும் பார்த்தான். தான் தனிமையில் ஆழ்ந்திருப்பதையும் பார்த்தான்.

“அவுரேலியானோ, மகோந்தாவில் மழை பெய்துகொண்டிருக்கிறது” என்று தந்தியில் செய்தி சொன்னான்.

தந்தித் தொடர்பில் நீண்ட மௌனம் நிலவியது. சட்டென்று கர்னல் அவுரேலியானோவிடமிருந்து வந்த இரக்கமற்ற சொற்களுடன் தந்திக் கருவி துள்ளியது.

“ஜெரினெல்தோ, முட்டாள் கழுதையாக இருக்காதே. ஆகஸ்டு மாதத்தில் மழை பெய்வது இயற்கை” என்றன சமிக்ஞைகள்.

அவர்கள் ஒருவருக்கொருவர் பார்த்தே நீண்ட காலம் ஆகியிருந்ததால் அந்த மூர்க்கமான எதிர்வினை கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸை நிலைகுலையச் செய்தது. இருந்தும் இரண்டு மாதங்களுக்குப் பிறகு கர்னல் அவுரேலியானோ புயேந்தியா மகோந்தாவுக்குத் திரும்பி வந்தபோது கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸின் நிலைகுலைவு மழுங்கிப்போனது. கர்னல் அவுரேலியானோ புயேந்தியா எப்படி மாறிப்போய்விட்டான் என்று உர்சுலாகூட வியப்படைந்தாள். ஆரவாரமின்றிப் பாதுகாப்புப் படையின்றி வெக்கையையும் மீறி ஒரு அங்கியை அணிந்துகொண்டு வந்திருந்தார். அவருடன் வந்த

மூன்று வைப்பாட்டிகளையும் அவர் ஒரே வீட்டில் தங்கவைத்தார். உறக்க மஞ்சத்தில் படுத்துக் கிடந்தே ஒருநாளின் பெரும்பான்மையான நேரத்தையும் கழித்தார். வழக்கமான நடவடிக்கைகளைப் பற்றி அனுப்பப்பட்ட தந்திச் செய்திகளை வாசிக்கவுமில்லை. எல்லைப் பகுதியில் இருக்கும் ஓர் இடத்தைக் காலி செய்தால் அது சர்வதேசப் பிரச்சினையாகிவிடும் ஆபத்து இருக்கிறது என்பதால் கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் அவரிடம் அறிவுரை கேட்டு வந்தார்.

"அற்ப விஷயங்களுக்காக என்னைத் தொந்தரவு செய்யாதே. கடவுளிடம் கலந்து ஆலோசனை செய்" என்று கட்டளையிட்டார்.

போரில் மிகவும் திருப்பமான ஒரு விநாடியாக இருந்தது அது. ஆரம்பத்தில் புரட்சியை ஆதரித்திருந்த மிதவாதி நிலவுடைமையாளர்கள் சொத்துப் பத்திரங்களின் மறுஆய்வை நிறுத்துவதற்காக பழைமைவாத நிலவுடைமையாளர்களுடன் ரகசிய ஒப்பந்தங்கள் போட்டிருந்தார்கள். தலைமறைவுப் போருக்கு நிதி உதவியளித்துக் கொண்டிருந்த அரசியல்வாதிகள் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் அதிரடி இலட்சியங்களை ஏற்றுக்கொள்ள மறுத்தார்கள். ஆனால் அந்த அதிகார மறுப்புக்கூட அவரைப் பாதித்ததாகத் தெரியவில்லை. அவருடைய டிரங்குப் பெட்டியின் அடியில் மறந்து வைக்கப்பட்டிருந்த ஐந்து தொகுதிகளுக்கும் அதிகமான கவிதைகளை வாசிக்கவும் அவருக்கு விருப்பமில்லை. இரவிலோ மத்தியானத் தூக்க வேளையிலோ தனது வைப்பாட்டிகளில் ஒருத்தியை உறக்க மஞ்சத்துக்கு அழைப்பார். அவள் மூலம் கொஞ்சம் திருப்தி அடைவார். பிறகு எதைப் பற்றியும் சற்றும் கவலையில்லாதவராகக் கல்லைப் போலத் தூங்குவார். தனது குழம்பிப்போன மனம் என்றென்றைக்குமாக நிச்சயமின்மைக்கு ஆட்பட்டிருந்ததை அவர் மட்டுமே அறிந்திருந்தார். ஆரம்ப காலத்தில் ஊர் திரும்பிய ஆர்ப்பாட்டத்திலும் அபார வெற்றிகளிலும் மயங்கி மகத்தான பாதாளத்துக்குள் எட்டிப் பார்த்திருந்தார். வலது தோள் அருகில், போர்க்கலையில் தன்னுடைய மகத்தான ஆசிரியரான மால்பரோ கோமகனின்* இலச்சினையைப் பொறித்துக்கொண்டதில் மகிழ்ச்சி அடைந்திருந்தார். புலித் தோல் உடுப்பும் நகங்களும் கொண்ட அந்த உடுப்பு முதிர்ந்தவர்களிடையே மரியாதையையும் குழந்தைகளிடையே அச்சத்தையும் ஏற்படுத்தியது. அந்தச் சமயத்தில்தான் பத்தடிக்குக் குறைந்த நெருக்கத்தில் மனிதர்கள் யாரையும், உர்சுலா உட்பட, தன்னருகில் வரவிடக் கூடாது என்று தீர்மானம் செய்தார். அவர் எங்கே நின்றாலும் அவருடைய பாது காவலர்கள் அவரைச் சுற்றி சாக்குக்கட்டியால் ஒரு வட்டத்தை வரைந்தார்கள். அவர் மையத்தில் நின்றுதான் உலகத்தின் விதியை நிர்ணயிக்கும்படியான முறையீடுகள் இல்லாத உடனடி உத்தரவுகளைப் பிறப்பித்தார். ஜெனரல் மன்காடா சுட்டுக் கொல்லப்பட்ட பின்பு முதன்முறையாக மனௌருக்கு வந்து தன்னால் பலியிடப்பட்ட உயிரின் கடைசி ஆசையை நிறைவேற்ற விரைந்தார். மன்காடாவின் விதவை

---

* டியூக் ஆஃப மால்பரோ – மால்பரோ கோமகன.

அவரது கண்ணாடி, பதக்கம், கடிகாரம், மோதிரம் எல்லாவற்றையும் வாங்கிக்கொண்டாள். ஆனால் அவரைக் கதவைத் தாண்டி உள்ளே அனுமதிக்கவில்லை.

அவரிடம் "நீங்கள் உள்ளே வரக்கூடாது, கர்னல். உங்கள் போருக்கு வேண்டுமானால் நீங்கள் தளபதியாக இருக்கலாம். ஆனால் என் வீட்டுக்கு நான்தான் தளபதி" என்றாள்.

கர்னல் அவுரேலியானோ புயேந்தியா கோபத்தின் அறிகுறி எதையும் வெளிக்காட்டவில்லை. ஆனால் அந்த விதவையின் வீட்டை அவருடைய பாதுகாவலர்கள் இடித்துத் தள்ளி, தீ வைத்துச் சாம்ப லாக்கியபோதுதான் அவருக்கு நிம்மதியாக இருந்தது. அப்போது "உங்கள் மனத்தைப் பத்திரமாகப் பார்த்துக்கொள்ளுங்கள் அவுரேலியானோ, நீங்கள் உயிருடன் அழுகிக்கொண்டிருக்கிறீர்கள்" என்று கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் அவரிடம் சொன்னான். அந்த நாளில்தான் முதன்மைத் தளபதிகளின் இரண்டாவது கூட டத்தைக் கூட்டியிருந்தார். எல்லாத் தரப்பினரையும் அவர் பார்த்தார்: இலட்சியவாதிகள், பேராசைக்காரர்கள், சாகசக்காரர்கள், சமூக நடவடிக்கைகளை எதிர்ப்பவர்கள், சாதாரணக் குற்றவாளிகள் என எல்லாரும் இருந்தார்கள். நிதிக் கையாடல் செய்த பழைமைவாதக் கட்சியின் முன்னாள் செயற்பாட்டாளர் ஒருவர் தீர்ப்பிலிருந்து தப்புவதற்காக அந்தக் கிளர்ச்சியில் புகலிடம் தேடியிருந்தார். அந்தக் கதம்பக் கூட்டத்திலிருந்தவர்களில் பலருக்கும் தாங்கள் ஏன் போர் செய்துகொண்டிருக்கிறோம் என்பதே தெரியவில்லை. கருத்து வேறு பாடுகள் காரணமாக உள்ளுக்குள்ளேயே வெடிக்கும் என்ற நிலை வந்தபோது சிடுசிடுப்பான அதிகாரி ஒருவன் எழுந்து நின்றான்: ஜெனரல் டியோஃபிலேர் வர்காஸ். சரியான இந்தியன். முரடன். படிப்பறிவில்லாதவன். தந்திரசாலி. தன்னுடைய ஆதரவாளர்களிடம் வெறியை எழுப்பும் ரட்சகன். வேலையில் விற்பன்னன். அரசியல்வாதி களின் தந்திரங்களுக்கு எதிராகப் புரட்சிப் படைத் தலைமையை ஒன்றுபடுத்தும் நோக்கத்தில்தான் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா கூட்டத்தைக் கூட்டியிருந்தார். ஜெனரல் டியோஃபிலோ வர்காஸ் அவனுடைய உள்நோக்கங்களுடன் முன்னே வந்தான். சில மணி நேரங்களில் தகுதியுள்ள படைத்தலைவர்களின் கூட்டமைப்பைச் சிதறடித்து முதன்மைத் தலைவனின் பொறுப்பை எடுத்துக்கொண்டான். "மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டிய காட்டு விலங்கு அவன்" என்று கர்னல் அவுரேலியானோ புயேந்தியா தன் அதிகாரிகளிடம் சொன்னார். போர்த்துறை அமைச்சரைவிட நமக்கு மிகவும் ஆபத் தானவன் அவன்தான்." அப்போது கூச்சத்துக்குப் பேர்போன இளம் தளபதி எச்சரிக்கையுடன் சுட்டுவிரலை உயர்த்தினான்.

"அது மிகவும் எளியது, கர்னல். அவனைக் கொன்றுவிடலாம்" என்று முன்மொழிந்தான்.

அந்த யோசனையிலிருந்த இரக்கமின்மை கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுக்கு அதிர்ச்சியளிக்கவில்லை. ஆனால் ஒரு நொடியில் அந்த எண்ணத்தை அவனுடைய சிந்தனையில் எதிர்பார்ப்பை ஏற்படுத்திவிட்டது என்பதை அவர் புரிந்துகொண்டார்.

"அது போன்ற ஓர் உத்தரவைக் கொடுப்பேன் என்று என்னிடம் எதிர்பார்க்க வேண்டாம்" என்றார்.

உண்மையைச் சொன்னால், அவர் அப்படி உத்தரவு கொடுக்க வில்லை. ஆனால் இரண்டு வாரங்களுக்குப் பிறகு நடந்த பதுங்குத் தாக்குதலில் ஜெனரல் டியோஃபிலோ வர்காஸ் கத்தியால் துண்டு துண்டாக வெட்டப்பட்டான். கர்னல் அவுரேலியானோ தலைமை யேற்றார். புரட்சிப்படைத் தலைவர்கள் எல்லாரும் அவருடைய அதிகாரத்தை ஏற்றுக்கொண்ட அன்றைய இரவு அவர் பயந்து விழித்து ஒரு கம்பளி வேண்டுமென்றார். சூரியனின் வெப்பத்தில்கூட அவருடைய எலும்புகளைக் கிடுகிடுக்கச் செய்யும் ஒரு உள்குளிர் அவரைத் துன்புறுத்திப் பல மாதங்கள் தூங்கவிடாமல் செய்தது. பின்பு அதுவே பழக்கமானது. மன உளைச்சலின் அலைகளால் அதிகார மயக்கம் ஒதுக்கித் தள்ளப்பட்டது. குளிருக்கு மருந்தைத் தேடி ஜெனரல் டியோஃபிலோ வர்காஸைக் கொல்லலாம் என்று யோசனை சொன்ன இளம் அதிகாரியைச் சுட்டுக் கொல்லச் செய்தார். அவர் அப்படிக் கட்டளையிடும் முன்பேயும் அவர் அதைப் பற்றி யோசிக்கும் முன்பே யும் அவரது ஆணைகள் நிறைவேற்றப்பட்டன. அவர்களை என்ன செய்யச் சொல்லுவாரோ அதை அவர்கள் மிகவும் முன்கூட்டியே எப்போதும் செய்தார்கள். தனது அளவற்ற அதிகாரத்தின் தனிமையில் அவர் தன்னை இழந்தார். திசை தடுமாறத் தொடங்கினார். பக்கத்துக் கிராமங்களில் வசிக்கும் மக்கள் தன்னை வாழ்த்துவதுகூட அவரைத் துன்புறுத்தியது. இதே வாழ்த்துகளைத்தாமே எதிரிக்கும் தெரிவிப்பார்கள் என்று கற்பனை செய்தார். எல்லா இடத்திலும் அவருடையதைப் போன்ற கண்களால் அவரைப் பார்க்கும், அவருடையதைப் போன்ற குரலில் அவரிடம் பேசும், அவரைப் போன்ற அதே அவநம்பிக்கையுடன் வாழ்த்துச் சொல்லும் விடலைப் பையன்களைப் பார்த்தார். அவர்கள் எல்லாரும் அவருடைய மகன்கள் என்றார்கள். தான் சிதறுண்டு போனதாகவும் பல மடங்கானதாகவும் எப்போதையும்விடத் தனிமை யானவன் ஆனதாகவும் உணர்ந்தார். தனது சொந்த அதிகாரிகள் தன்னிடம் பொய் சொல்லிக்கொண்டிருப்பதாக எண்ணினார். மால்பரோ கோமகனுடன் சண்டையிட்டார். "ஒருவனுக்கு இருக்கும் நல்ல நண்பன் யாரென்றால் சற்று முன்பு செத்துப்போனவன்தான்" என்று ஒரு காலத்தில் அவர் சொல்லுவார். எப்போதும் நிச்சயமின்மை யால் அலுத்துப் போயிருந்தார். எப்போதும் முதுமையடைந்தும் சோர்ந்து போயும்கூட ஏன் என்றோ எப்படி என்றோ எப்போது என்றும்கூடத் தெரியாமல் ஒரே இடத்திலேயே இருக்க வைத்த நிரந்தரப் போரின் நச்சு வளையத்தால் அலுத்துப் போயிருந்தார். அவரைச் சுற்றிப் போட்டிருந்த சாக்குக் கட்டி வளையத்துக்கு வெளியே எப்போதும் யாராவது இருந்தார்கள். பணத் தேவையுள்ள சிலர். கக்குவான் இருமலுள்ள மகனுடன் ஒருவன், யுத்தத்தின் பீ ருசியை வாய்க்குள் அனுபவித்ததனால் வெளியேறிப் போய் நிரந்தரமாகத் தூங்க விருப்ப மிருந்தும் கால்களைச் சேர்த்து நின்று "எல்லாம் சரியாக இருக்கிறது, கர்னல்" என்று தெரிவிப்பவன். சுருக்கமாகச் சொன்னால், முடிவற்ற போரின் மிகவும் அச்சுறுத்தும் பகுதி அந்தச் சரியாக இருப்பதுதான்.

ஒருபோதும் எதுவும் நடக்கவில்லை. தனிமையில், தன்னுடைய முன்னுணரும் திறமைகளை இழந்த நிலையில் மரணம் வரைக்கும் கூடவே இருந்த அந்தக் குளிரிலிருந்து தப்பியோடி மகோந்தாவில் தனது பழைய நினைவுகளின் இதத்தில் கடைசிப் புகலிடத்தைக் கண்டடைந்தார். அவருடைய சோர்வு முற்றிலும் தீவிரமாக இருந்தது. போரின் இக்கட்டான நிலை பற்றி விசாரிக்க அவருடைய கட்சியிலிருந்து ஒரு குழு வருவதைப் பற்றி அவரிடம் தெரிவித்தபோது முழுவதுமாக எழுந்திருக்காமல் உறக்க மஞ்சத்தில் புரண்டு படுத்தார்.

"அவர்களை விபச்சாரிகளிடம் கூட்டிக்கொண்டு போங்கள்" என்றார்.

அங்கியும் நீண்ட தொப்பியும் அணிந்த கொடூரமான நவம்பர் மாத வெயிலைப் பற்றிக் குற்றம் சாட்டாத ஆறு வழக்கறிஞர்கள் உர்சுலா அவர்களைத் தன்வீட்டில் தங்க வைத்தாள். நாளின் பெரும் பகுதியை படுக்கையறையில் கதவை அடைத்துக்கொண்டு காற்றுப் புகாத விவாதங்களை நடத்துவதில் செலவழித்தார்கள். மாலையில் துணைக்கு ஆளையும் அக்கார்டியன் வாசிப்பவர்களையும் அழைத்துக் கொண்டு கதாரினோவின் கடைக்குப் போனார்கள். "அவர்களைத் தனியாக விடுங்கள்" என்று கர்னல் அவுரேலியானோ புயேந்தியா கட்டளையிட்டார். "அவர்களுக்கு என்ன வேண்டுமென்று எனக்குத் தெரியும்." டிசம்பர் மாதத் தொடக்கத்தில், பலரும் முடிவடையாத விவாதம் என்று முன்கூட்டி எண்ணி நீண்ட காலம் காத்திருந்த நேர்காணல் ஒருமணி நேரத்திலேயே முடிந்தது.

வீட்டுக்கூடத்தில், வெள்ளைத் துணியால் மூடப்பட்டிருந்த பியானோ அருகில், இந்த முறை பாதுகாவலர்கள் சாக்குக்கட்டியால் வட்டம் போட்டிராத இடத்தில் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா உட்கார்ந்திருந்தார். தனது அரசியல் ஆலோசகர்கள் நடுவே கம்பளிப் போர்வை போர்த்திக்கொண்டு நாற்காலியில் உட்கார்ந்து தூதர்கள் சுருக்கமாக வாசித்த ஆலோசனைகளை அமைதியாகக் கேட்டார். அவர்கள் முதலாவதாக, மிதவாத நிலவுடைமையாளர்களின் ஆதரவைப் பெறுவதற்காகச் சொத்துப் பத்திரங்களை மறுஆய்வு செய்வதைக் கைவிட வேண்டும் என்றார்கள். இரண்டாவதாக, கத்தோலிக்க விசுவாசிகளின் ஆதரவைப் பெறுவதற்காகப் பாதிரியார்களின் செல்வாக்குக்கு எதிராக நடத்தும் போரை நிறுத்த வேண்டும். இறுதியாகக் குடும்பத்தின் ஒற்றுமையைக் காப்பாற்றுவதற்காக முறையாகப் பிறந்த பிள்ளைகளுக்கும் முறை தவறிப் பிறந்த பிள்ளைகளுக்கும் சம உரிமை என்ற இலட்சியத்தை அவர் கைவிட வேண்டும்.

வாசிப்பு முடிந்ததும் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா புன்னகைத்துக்கொண்டே "அதன் பொருள், நாம் அதிகாரத்தைப் பெறுவதற்காக மட்டுமே போர் செய்கிறோம் என்பதுதானே?" என்றார்.

"இவையெல்லாம் தந்திரோபாயமான மாற்றங்கள்" என்று தூதுக் குழுவினரில் ஒருவர் பதிலளித்தார். "இப்போதைய முதன்மையான

தேவை போரின் வெகுமக்கள் அடிப்படையை விரிவுபடுத்துவது. அதன் பிறகு மற்றவற்றைக் கவனிக்கலாம்."

இதற்கிடையில் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் அரசியல் ஆலோசகர்களில் ஒருவர் குறுக்கிட்டார். "இது முரண்பாடானது. இந்த மாற்றங்கள் நல்லவைதாம் என்றால் அதன் அர்த்தம் பழைமைவாத ஆட்சி நல்லது என்பதுதானே. நீங்கள் சொல்வது போல, போருக்கான வெகுமக்களின் அடிப்படையை விரிவுபடுத்தினால் அதன் அர்த்தம் ஆட்சிக்கான அடிப்படையை விரிவுபடுத்துவது என்பதுதான். சுருக்கமாகச் சொன்னால், கிட்டத்தட்ட இருபது ஆண்டுகளாக நாங்கள் தேசத்தின் உணர்வுகளுக்கு எதிராகப் போரிட்டுக் கொண்டிருக்கிறோம் என்பதுதானே?" என்றார்.

அவர் தொடர்ந்து பேசிக்கொண்டு போனபோது கர்னல் அவுரேலியானோ புயேந்தியா சைகை காட்டி நிறுத்தினார். "உங்கள் நேரத்தை வீணடிக்க வேண்டாம், டாக்டர் இதில் முக்கியமான விஷயம் என்னவென்றால் இப்போது முதல் நாம் அதிகாரத்துக்காக மட்டுமே போரிடப் போகிறோம்" என்றார். இன்னும் புன்னகைத்துக் கொண்டே தூதுக் குழுவினர் கொடுத்த ஆவணங்களில் கையெழுத்துப் போடத் தயாரானார்.

"அதுதான் விவகாரமென்றால் அதை ஏற்றுக்கொள்வதில் எங்களுக்கு ஆட்சேபமில்லை" என்று முடித்தார்.

அவருடைய ஆட்கள் திகைப்புடன் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் "மன்னிக்க வேண்டும் கர்னல், இது ஏமாற்று" என்று மென்மையாகச் சொன்னான்.

கர்னல் அவுரேலியானோ புயேந்தியா மையில் தோய்த்த பேனாவை அந்தரத்தில் பிடித்திருந்தார். அதிகாரத்தின் மொத்தப் பளுவையும் அவன்மேல் செலுத்தினார்.

"உன்னுடைய ஆயுதங்களை ஒப்படைத்துவிடு" என்று கட்டளையிட்டார்.

கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் எழுந்து நின்று தோளிலிருந்த ஆயுதங்களை மேஜைமேல் வைத்தான். "ராணுவ அலுவலகத்துக்குப் போ" என்று கர்னல் அவுரேலியானோ புயேந்தியா அவனுக்குக் கட்டளையிட்டார். "புரட்சி நீதிமன்றத்தின் முன் சரண் அடைந்து விடு" என்றார். பிறகு, அவர் உறுதிமொழிக் கடிதத்தில் கையெழுத்திட்டு "இதோ உங்களுடைய காகிதங்கள். இதிலிருந்து உங்களுக்கு ஏதாவது ஆதாயம் கிடைக்குமென்று நம்புகிறேன்" என்று சொல்லிக்கொண்டே தாள்களைத் தூதுக் குழுவினரிடம் கொடுத்தார்.

இரண்டு நாட்கள் கழித்து, கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் மீது தேசத் துரோகக் குற்றம் சாட்டப்பட்டு மரண தண்டனை விதிக்கப்பட்டது. உறக்க மஞ்சத்தில் கிடந்த கர்னல் அவுரேலியானோ புயேந்தியா கருணை மனுக்கள் எதற்கும் அசைந்து கொடுக்கவில்லை.

மரண தண்டனை நிறைவேற்றப்படுவதற்கு முதல் நாள், தன்னைத் தொந்தரவு செய்யக் கூடாது என்ற கட்டளையைப் பற்றிக் கவலைப் படாமல் உர்சுலா அவருடைய படுக்கையறைக்குள் புகுந்தாள். கறுப்பு உடையில் அபூர்வமான அமைதியுடன் அந்த மூன்று நிமிடப் பேட்டி முழுவதும் நின்றாள். "நீ ஜெரினெல்தோவைச் சுட்டுக் கொல்லப் போகிறாய் என்று தெரியும்" என்று நிதானமாகச் சொன்னாள். "அதைத் தடுக்க நான் எதுவும் செய்ய முடியாது என்றும் தெரியும். ஆனால் உனக்கு ஒரு தாக்கீது கொடுக்கிறேன். அவனுடைய பிணத்தைப் பார்க்கும் அந்த நொடியில், என்னுடைய அப்பா, அம்மா எலும்பு களின் மீது ஆணையாக, ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவின் ஞாபகத்தின் மீது ஆணையாக, கடவுள் சாட்சியாகச் சொல்கிறேன். நீ எங்கே போய் ஒளிந்துகொண்டாலும் அங்கிருந்து உன்னை இழுத்து வந்து என்னுடைய இரண்டு கைகளாலேயே உன்னைக் கொல்வேன்." அறையை விட்டு வெளியேறும் முன்பு எந்தப் பதிலுக்கும் காத்திருக் காமல் கடைசியாகச் சொல்லி முடித்தாள்:

"நீ பன்றி வாலுடன் பிறந்திருந்தாலும் இதே போலத்தான் இறந்திருப்பாய்."

அந்த முடிவற்ற இரவில் அமரந்தாவின் தையல் அறையில் செலவழித்த மௌனமான பிற்பகல்களைப் பற்றிக் கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் யோசித்துக் கொண்டிருந்தபோது கர்னல் அவுரேலியானோ புயேந்தியா தன்னுடைய தனிமையின் கெட்டி ஓட்டை உடைக்கப் பலமணி நேரங்களாக முயன்று தன்னையே பிறாண்டிக்கொண்டார். பனிக்கட்டியைப் பார்ப்பதற்காக வெகுகாலத் துக்கு முந்திய பிற்பகலில் அப்பா தன்னை அழைத்துச் சென்றதைத் தவிர்த்தால் அவருக்குக் குதூகலமான தருணங்கள் வாய்த்தது வெள்ளி வேலைப் பட்டறையில் உட்கார்ந்து தங்க மீன்களை ஒன்று சேர்க்க நேரத்தைச் செலவிட்டபோதுதான். ஏறக்குறைய நாற்பது ஆண்டுகளுக் குப் பிறகு எளிமையின் சலுகைகள் என்னவென்பதைக் கண்டுபிடித்தார். அதற்காக அவர் முப்பத்து இரண்டு போர்களைத் தொடங்கி நடத்த வேண்டியிருந்தது. மரணத்துடனான எல்லா ஒப்பந்தங்களையும் மீற வேண்டியிருந்தது. புகழின் மலக்குவியலில் பன்றியைப் போலப் புரள வேண்டியிருந்தது.

கண் விழித்திருந்ததில் சோர்வடைந்திருந்தபோதும் விடியற் காலையில், மரண தண்டனை நிறைவேற்றப்படுவதற்கு ஒரு மணி நேரத்துக்கு முன்பு சிறையின் முன்னால் நின்றார். கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸிடம் "கேலிக்கூத்து முடிந்துவிட்டது நண்பா" என்றார். "இங்கே இருக்கும் கொசுக்கள் உன்னைக் கொல்வதற்குள் இங்கேயிருந்து போய்விடலாம்." அந்த மனநிலை அவனுக்குள் ஏற்படுத்திய அருவருப்பை கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸால் மறைக்க முடியவில்லை.

"வேண்டாம் அவுரேலியானோ, உன்னை ஒரு கொடுங்கோல னாகப் பார்ப்பதைவிடச் செத்துப் போகவே விரும்புகிறேன்" என்று பதிலளித்தான்.

"நீ என்னை அப்படிப் பார்க்கப்போவதில்லை. உன் ஷூக்களைப் போட்டுக்கொள். இந்த நாற்றம் பிடித்த யுத்தத்திலிருந்து வெளியேற எனக்கு உதவு" என்றார் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா.

அவர் அதைச் சொன்னபோது போரைத் தொடங்குவது அதை நிறுத்துவதைவிட எளிதானது என்பது அவருக்குத் தெரியவில்லை. புரட்சியாளர்களுக்கு ஆதரவான சமாதான நிபந்தனைகளை ஏற்குமாறு அரசாங்கத்தை வற்புறுத்த ஏறக்குறைய ஒரு வருடத்துக்கும் மேற்பட்ட பயங்கரமும் ரத்தக் களரியுமான முயற்சி தேவைப்பட்டது. அவற்றை ஏற்றுக்கொள்வதன் வசதிகளைப் பற்றிக் கட்சிக்காரர்களிடம் பேசி இசையவைக்க இன்னொரு வருடம். வெற்றி பெறும்வரைக்கும் போர் என்ற அறைகூவலுடன் எதிர்த்து நின்ற அவருடைய அதிகாரிகளை ஒடுக்க நினைத்துப் பார்க்கமுடியாத கொடூரத்தில் ஈடுபட நேர்ந்தது. கடைசியில் அவர்களைப் பணியவைக்க எதிரித் தரப்புப் படைகளையே நாட வேண்டியிருந்தது.

அதற்கு முன்னர் ஒருபோதும் அவர் அவ்வளவு மகத்தான போர் வீரராக இருந்ததில்லை. தான் இறுதியாகப் போரிடுவது தன்னுடைய விடுதலைக்குத்தானே அன்றி உருவமற்ற இலட்சியங்களுக்காக அல்ல; அரசியல்வாதிகள் சந்தர்ப்பத்துக்கு ஏற்ப இடமாகவும் வலமாகவும் வளைத்துக் கொள்ளும் முழக்கங்களுக்காக அல்ல என்ற உறுதி அவருக்குள் ஆவேசமாகக் கனன்றது. கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸூம் முன்பு வெற்றிக்காக எந்த அளவு நிச்சயத்தன்மையுடனும் ஆவேசத்துடனும் போரிட்டானோ அதே போன்றே தோல்விக்காகவும் போர் புரிந்தான். கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் அசட்டுத் துணிச்சலுக்காகக் குற்றம் சாட்டினான். அவர் சிரித்துக்கொண்டு "கவலைப்படாதே, சாவது என்பது ஒருவர் நினைப்பதைவிடவும் மிகக் கடினமானது" என்றார். அவரைப் பொறுத்தவரை அது உண்மையாகவே இருந்தது. அன்று அவர் மேற்கொண்ட அந்த உறுதி அவருக்கு மர்மமான எதிர்ப்பு ஆற்றலையும் மரணமின்மையையும் கொடுத்தது. அல்லது குறிப்பிட்ட காலத்துக்குப் போரின் அபாயங்களால் வீழ்த்த முடியாதவராக மாற்றியது. இறுதியில் வெல்வதற்கு அரிதான தோல்வியை, வெற்றியைவிடவும் மிகக் கொடியதும் உயிரிழப்பை ஏற்படுத்தியதுமான தோல்வியை வென்றெடுக்க அவரை அனுமதித்தது.

போர் நடந்துகொண்டிருந்த இருபது ஆண்டுகளில் பலமுறை கர்னல் அவுரேலியானோ புயேந்தியா வீட்டுக்கு வந்திருக்கிறார். எப்போதும் அவசரத்துடனேயே வந்து சேருவார். எல்லா இடத்திலும் ராணுவப் பரிவாரம் அவரைப் பின்தொடரும். கட்டுக் கதைகளிலிருந்து அவருடைய இருப்பைப் பற்றிய பிரகாசம் கசியும். இவையெல்லாம் அவரை அந்நியனாக மாற்றிவிட்டதை உர்சுலாவும் உணர்ந்திருந்தாள். கடந்தமுறை மகோந்தாவில் இருந்தபோது தன்னுடைய மூன்று வைப்பாட்டிகளுக்குமாக ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்திருந்தார். இரண்டோ மூன்றோ சந்தர்ப்பங்களில் மட்டும் உணவுக்கான அழைப்பை ஏற்றுச் சொந்த வீட்டுக்கு வந்தார். அழகி ரெமேதியோஸூக்

கும் இரட்டைச் சகோதரர்களுக்கும் அவர் யார் என்றே தெரியவில்லை. விடலைப் பருவத்தில் தங்க மீன்களை உருவாக்கிக்கொண்டிருந்த சகோதரனின் உருவத்துடன் தனக்கும் மற்ற மனிதர்களுக்கும் இடையில் பத்து அடிதூரம் இருக்கும்படி பார்த்துக்கொண்ட அந்தப் புராணிக வீரனைப் பொருத்தி இனங்காண அமரந்தாவாலும் முடிய வில்லை. ஆனால் போர் நிறுத்தம் அறிவிக்கப்பட்டதாகத் தெரிய வந்தபோது அவர் ஒரு மனிதனாகத் திரும்பி வருவார் என்று அவர்கள் நினைத்தார்கள். நீண்ட காலமாக அடங்கிக் கிடக்கும் மனித உணர்வு களும் குடும்ப உணர்ச்சிகளும் முன்னைவிட ஆற்றலுடன் பிறக்கும் என்று நினைத்தார்கள்.

"கடைசியில் நம் வீட்டில் மறுபடியும் ஒரு ஆண்பிள்ளை இருப்பான்" என்றாள் உர்சுலா.

அவனை என்றென்றைக்குமாக இழந்திருப்பதாக முதலில் சந்தேகப் பட்டவள் அமரந்தாதான். போர் நிறுத்தத்துக்கு ஒரு வாரம் முன்பு பாதுகாவலர்கள் இல்லாமல் அவர் வீட்டுக்குள் வந்தார். உடன் வந்த காலணி அணியாத இரண்டு ஏவலர்கள் கோவேறுக் கழுதை மீதிருந்த சேணத்தையும் பெட்டி நிறைய கவிதைகளையும் எடுத்து முற்றத்தில் இறக்கிவைத்தார்கள். அவருடைய சர்வாதிகாரிப் பையில் மிஞ்சியவை அவை மட்டுமே. தையல் அறையைக் கடந்து சென்றபோது அவள் அவரை அழைத்தாள்.

கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுக்கு அவளை அடையாளம் கண்டுகொள்வது சிரமமாக இருந்தது.

"இதுதான் அமரந்தா" என்று வேடிக்கையாகச் சொன்னாள். அவர் திரும்பி வந்ததில் மகிழ்ச்சியடைந்தாள். கறுப்புநிறக் காயத் துணி சுற்றிய கையைக் காட்டி "இதோ பார்" என்றாள்.

மரண தண்டனை விதிக்கப்பட்டு மகோந்தாவுக்குத் திரும்பி வந்த மிகத் தொலைவான ஒரு காலை நேரத்தில் முதலில் அவளைக் கையில் கட்டுடன் பார்த்ததும் புன்னகைத்தது போலவே கர்னல் அவுரேலியானோ புயேந்தியா இப்போதும் புன்னகை செய்தார்.

"காலம் போகிறதைப் பார்த்தால் எவ்வளவு பயங்கரம்" என்றார்.

நிரந்தர ராணுவம் வீட்டைப் பாதுகாக்க வேண்டியிருந்தது. மிகுந்த அவமானங்களுக்கிடையில் வந்து சேர்ந்திருந்தார். இன்னும் அதிக ஆதாயங்கள் கிடைக்கும் என்பதற்காகப் போரைத் தூண்டி விட்டார் என்று பழிசொல்லிக் காறித் துப்பினார்கள். அவர் ஜுரத் திலும் குளிரிலும் நடுங்கிக்கொண்டிருந்தார். அக்குள்களில் மீண்டும் கொப்புளங்கள் குமிழ்ந்திருந்தன. ஆறு மாதங்களுக்கு முன்பு போர் நிறுத்தம் பற்றிக் கேள்விப்படத் தொடங்கியபோதே உர்சுலா அவருடைய படுக்கை அறையைத் திறந்து பெருக்கிச் சுத்தமாக்கினாள். மூலைகளில் வெள்ளைப் போளத்தை எரியவிட்டாள். ரெமேதியோஸின் கவிச்சை வீசும் பொம்மைகளுக்கு நடுவில் கிடந்து முதுமையடைவான் என்று நினைத்துக்கொண்டாள். ஆனால் உண்மையில் கடந்த இரண்டு

வருடங்களாகவே வாழ்க்கைக்கு முதுமை உட்படத் தனது கடைசித் தவணைகளைச் செலுத்திக் கொண்டுதான் இருந்தார். உர்சுலா பிரத்தியேகக் கவனத்துடன் தயார் செய்திருந்த வெள்ளிப் பட்டறை வழியாகச் சென்றபோதும் சாவிகள் பூட்டிலேயே தொங்கவிடப்பட்டிருப்பதைக்கூட அவர் கவனிக்கவில்லை. காலம் வீட்டின் மேல் விளைவித்திருந்த நுட்பமான நாசத்தின் விரிசலைக் கவனிக்கவில்லை. அவ்வளவு நீண்ட காலம் இல்லாமலிருந்த, நினைவுகளைக் காப்பாற்றிக் கொண்டிருக்கும் எந்த மனிதனுக்கும் கண்ணில்படுபவை அவை. சுவர்களிலிருந்து சுண்ணாம்பு பெயர்ந்து விழுந்துகொண்டிருப்பதோ, மூலைகளில் பஞ்சுத் துகள் போல ஒட்டடை அசிங்கமாகப் பிடித்திருப்பதோ, பிகோனியாச் செடிகள் மேல் புழுதி படிந்திருப்பதோ, உத்தரங்களில் கறையான் அரித்த சுவடுகள் மிஞ்சியிருப்பதோ கீல்களில் காளான் பூத்திருப்பதோ அவரை வருத்தப்படுத்தவில்லை. நினைவேக்கத்தின் நுட்பமான பொறிகள் எதிலாவது அவர் அகப்பட்டிருக்கலாம். கம்பளியைப் போர்த்திக்கொண்டு பூட்ஸுகளைக் கழற்றாமல் முற்றத்தில் உட்கார்ந்திருந்தார். பெய்து ஓயட்டும் என்று காத்திருப்பது போலப் பிகோனியாச் செடிகள்மீது மழை பொழிவதைப் பார்த்துக்கொண்டே பிற்பகல் முழுவதையும் கழித்தார். அதிக காலம் அவர்களுடன் வீட்டில் தங்கமாட்டார் என்று உர்சுலா அப்போது புரிந்துகொண்டாள். "போரல்ல என்றால் அது மரணமாகத்தான் இருக்க முடியும்" என்று எண்ணினாள். அந்த யூகம் அவ்வளவு துல்லியமாக இருந்தது. அவ்வளவு நம்பகமாக இருந்தது. அதைத் தீர்க்கதரிசனமாக இனங்கண்டுகொண்டாள்.

அன்று இரவு உணவு வேளையில், அவுரேலியானோ செகுந்தோ என்று நினைக்கப்பட்டவன் வலது கையால் ரொட்டியைத் துண்டு போட்டு இடது கையால் சூப்பை எடுத்துக் குடித்தான். அவனுடைய இரட்டைச் சகோதரனான ஹோசே அர்க்காதியோ செகுந்தோ என்று நினைக்கப்பட்டவன் இடது கையால் ரொட்டியைத் துண்டு போட்டு வலது கையால் சூப்பை எடுத்துக் குடித்தான். எதிரெதிராக உட்கார்ந்திருக்கும் இரட்டைச் சகோதரர்கள் என்று தோன்றாமல் கண்ணாடியில் தெரியும் தந்திரமான பிம்பம் போலவே தெரிந்தார்கள். அவர்களின் கூட்டுச் செய்கை அந்த அளவு துல்லியமாக இருந்தது. தாங்கள் இருவரும் சமமானவர்கள் என்று புரிந்துகொண்டபோது கண்டுபிடித்திருந்த அந்தக் காட்சி விளையாட்டைப் புதிதாக வந்தவரை வரவேற்பதற்காக நடத்திக் காட்டினார்கள். ஆனால் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா அதைக் கவனிக்கவே இல்லை. அழகி ரெமேதியோஸ் அம்மணமாகக் குளியலறைக்கு நடந்து போனதைக்கூட அவர் கவனிக்கவில்லை. எல்லாவற்றிலிருந்தும் அந்நியப்பட்டவராகத் தெரிந்தார். உர்சுலா மட்டுமே அவனுடைய அரூபச் சிந்தனையைக் குலைக்கும் துணிச்சலுடன் இருந்தாள்.

இரவு உணவு அருந்துவதற்கிடையில் சொன்னாள், "உனக்குத் திரும்பப் போக வேண்டுமென்றிருந்தால் குறைந்தது நாங்கள் எப்படியிருந்தோம் என்பதை இன்று இரவாவது நினைத்துப் பார்." தன்னுடைய

துயரத்துக்குள் ஊடுருவிச் செல்வதில் வெற்றியடைந்த ஒரே மனித உயிர் உர்சுலா மட்டுமே என்பதைக் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா எந்த ஆச்சரியமும் இன்றி உணர்ந்தார். பல வருடங்களுக்குப் பிறகு முதன்முறையாக அவள் முகத்தை உற்றுப் பார்த்தார். சருமம் தடித்திருந்தது. பற்கள் சொத்தை விழுந்திருந்தன. முடி நரைத்து வெளுத் திருந்தது. பார்வை அச்சுறுத்துவதாக இருந்தது. தனக்கு அவளைப் பற்றி இருக்கும் பழைய ஞாபகத்துடன் அவளை ஒப்பிட்டுப் பார்த்தார். சூப் பாத்திரம் மேஜைமேல் நகர்ந்து விழப் போவதை முன் உணர்வுடன் சொன்ன அந்தப் பிற்பகலையும் அவள் உடைந்த துண்டுகளைப் பொறுக்கியதையும் நினைவுகூர்ந்தார். அரை நூற்றாண்டுக்கும் மேற்பட்ட அன்றாட வாழ்க்கை அவள்மேல் விட்டுச் சென்றிருக்கும் சிராய்ப்புகள், தழும்புகள், கொப்புளங்கள், புண்களின் சுவடுகளை ஒரே நொடியில் கண்டுபிடித்தார். அந்தக் குலைவுகள் அவருக்குள் இரக்க உணர்வைக்கூட எழுப்பவில்லை. ஒரு தருணத்தில் தன்னுடைய பாசம் எங்கே அழுகி உறைந்து போனது என்று கடைசியாக ஒருமுறை தனது மனத்துக்குள் தேடிப்பார்த்தார். ஆனால் கண்டுபிடிக்க முடிய வில்லை. இன்னொரு தருணத்தில் தனது சருமத்திலேயே உர்சுலாவின் மணம் வீசுவதை உணர்ந்தபோதும் அவளுடைய எண்ணங்கள் தன் னுடைய எண்ணங்களுடன் குறுக்கிடுவதை ஒன்றுக்கும் மேற்பட்ட முறை உணர்ந்தபோதும் குழப்பமான வெட்கக்கேட்டையாவது அனுபவித்திருந்தார். ஆனால் அவையெல்லாம் போரால் துடைத்து அகற்றப்பட்டன. அந்தக் கணத்தில் மனைவி ரெமேதியோஸ்கூட ஒரு கலங்கிய உருவமாகவே இருந்தாள். அவருடைய மகளாக இருந் திருக்கக்கூடிய ஏதோ பெண்ணின் உருவமாக. நேசத்தின் பாலை வனத்தில் அவர் பார்த்தறிந்த, அந்தக் கடலோரப் பகுதி முழுவதும் அவருடைய வித்துகளைப் பரப்பிய ஏராளமான பெண்களின் எந்தத் தடயமும் அவருடைய உணர்ச்சிகளில் இல்லை. பெரும்பாலானவர்கள் இருட்டோடு அவர் அறைக்கு வந்து விடிவதற்கு முன்பே வெளியேறி னார்கள். மறுநாள் அவருடைய உடம்பின் ஞாபகத்தில் அவர்கள் அலுப்பின் ஸ்பரிசமே தவிர வேறில்லை. காலத்தையும் யுத்தத்தையும் மீறி அவருக்குள் நிலைத்திருந்தது சிறுவர்களாக இருந்தபோது தம்பி ஹோசே அர்க்காதியோ மேலிருந்த கரிசனம் மட்டுமே; ஆனால் அதுவும் அன்பின் அடிப்படையில் அல்ல; ரகசிய நடவடிக்கைகளில் உடந்தையாக இருந்தான் என்பதால் மட்டுமே.

உர்சுலாவின் வேண்டுகோளுக்காக "வருத்தப்படுகிறேன். போர் எல்லாவற்றையும் நாசமாக்கிவிட்டது" என்று தன்னிடமே மன்னிப்புக் கேட்டுக்கொண்டார்.

அடுத்து வந்த நாட்களில் தன்னுடைய உலகப் பயணத்தின் எல்லாத் தடயங்களையும் அழிப்பதில் மும்முரமானார். தன்னுடன் சம்பந்தப்படாத பொருட்களை மட்டும் விட்டுவைத்து வெள்ளிப் பட்டறையைக் காலி செய்தார். உடைகளை ஏவலர்களுக்குக் கொடுத்தார். புருடென்சியோ அகுய்லரைக் கொன்ற குத்தீட்டியை அப்பா புதைத்தது போலவே அதே சுய தண்டனை உணர்வுடன் அவரும் தனது

ஆயுதங்களை முற்றத்தில் குழி தோண்டிப் புதைத்தார். ஒரே ஒரு தோட்டாவுடன் கைத்துப்பாக்கியை மட்டும் வைத்துக்கொண்டார். உர்சுலா தலையிடவில்லை. கூடத்தில் அணையா விளக்குடன் வைத்திருந்த ரெமேதியோஸின் புகைப்படத்தை அவர் அழிக்கவிருந்தபோது மட்டும் அவரைப் பின்வாங்கச் செய்தாள். "அந்தப் படம் வெகு காலத்துக்கு முன்பே உனக்குச் சொந்தமில்லாதது ஆகிவிட்டது. அது குடும்பத்தின் நினைவுச் சின்னம்" என்றாள். போர் நிறுத்தத்துக்கு முந்தைய நாள் தன்னை நினைவுபடுத்தும் ஒரு பொருளைக்கூட அவர் வீட்டில் விட்டு வைக்கவில்லை. கவிதைகள் நிரம்பிய டிரங்குப் பெட்டியை அடுமனைக்கு எடுத்து வந்தபோது சாந்தா சோபியா தெலா பியாதெத் அடுப்பைப் பற்ற வைக்க ஆயத்தம் செய்துகொண்டிருந்தாள்.

"இதை வைத்துப் பற்ற வை." மஞ்சள் நிறமுள்ள காகிதச் சுருள்களில் முதலாவதை எடுத்து அவளிடம் நீட்டிக்கொண்டு சொன்னார். "பழைய சங்கதிகள். அதனால் நன்றாக எரியும்."

யாரிடமும் அதிகம் பேசாதவளும் அமைதியானவளும் விட்டுக் கொடுப்பவளும் யாரிடமும், சொந்தக் குழந்தைகளிடமும்கூட, ஒருபோதும் மறுத்துப் பேசாதவளுமான சாந்தா சோபியா தெலா பியாதெத்துக்கு அது செய்யக் கூடாத செயல் என்று தோன்றியது.

"எல்லாம் முக்கியமான காகிதங்களா?" என்று கேட்டாள்.

"அப்படி எதுவுமில்லை. ஒரு ஆள் தனக்காக எழுதிக் கொண்டவை" என்றார் கர்னல்.

"அப்படியானால் நீங்கள் எரித்துவிடுங்கள், கர்னல்" என்றாள் அவள்.

அவர் அதைச் செய்ததோடு கோடரியால் மர டிரங்குப் பெட்டியை வெட்டிப் பிளந்து துண்டுகளை அடுப்பிலும் போட்டார். அதற்குச் சில மணி நேரங்கள் முன்பு பிலர் தெர்னேரா அவரைப் பார்க்க வந்திருந்தாள். அநேக வருடங்கள் அவளைப் பார்க்காமலிருந்த கர்னல் அவுரேலியானோ புயேந்தியா, அவள் எவ்வளவு முதுமையடைந்திருக்கிறாள் என்பதையும் எவ்வளவு பருத்திருக்கிறாள் என்பதையும் அவளுடைய சிரிப்பில் எவ்வளவு பிரகாசத்தை இழந்திருக்கிறாள் என்பதையும் பார்த்துத் திகைப்படைந்தார். சீட்டைப் பார்த்து ஆரூடம் சொல்வதில் எவ்வளவு ஆழ்ந்த தேர்ச்சி பெற்றிருக்கிறாள் என்பதும் அவரைத் திகைக்கச் செய்தது. "உன் வாயைப் பற்றிக் கவனமாக இரு" என்று அவரைப் பார்த்துச் சொன்னாள். முன்பொரு முறையும் தான் புகழின் உச்சத்தில் இருந்தபோது அவள் அதே போலச் சொன்னது பலித்திருந்ததை நினைத்து வியப்படைந்தார். சற்றுப் பொறுத்து அவருடைய தனி மருத்துவர் கொப்புளங்களை அகற்றி முடித்ததும் குறிப்பாக எந்த ஆர்வமும் இல்லாதவர் போல இதயம் சரியாக எந்த இடத்தில் இருக்கிறது என்று கேட்டார். ஸ்டெதாஸ்கோப்புடன் நின்று அதைக் கேட்டுக்கொண்ட டாக்டர் அயோடினில் முக்கியத்

துண்டுத் துணியால் அவருடைய மார்பின் மேல் ஒரு வட்டத்தை வரைந்தார்.

போர் நிறுத்த நாளான செவ்வாய்க்கிழமை இதமாகவும் மழையுடனும் விடிந்தது. கர்னல் அவுரேலியானோ புயேந்தியா ஐந்து மணிக்கு முன்பாகவே எழுந்து சமையலறைக்கு வந்து அவருடைய வழக்கமான சர்க்கரை சேர்க்காத வறக்காப்பியைக் குடித்தார். "இது போன்ற ஒரு தினத்தில்தான் நீ பிறந்தாய்" என்றாள் உர்சுலா "உன் கண்கள் திறந்தேயிருப்பதைப் பார்த்து ஒவ்வொருவரும் ஆச்சரியப் பட்டார்கள்." துருப்புகள் அணிவகுக்கும் ஓசையும் கார்னெட்டின் இசை முழக்கமும் கட்டளைக் குரல்களும் விடியற்காலையைச் சிதறடித்துக்கொண்டிருந்ததைக் கவனித்துக்கொண்டிருந்ததால் அவள் சொன்ன எதையும் அவர் கவனிக்கவில்லை. பல ஆண்டுகளாகப் போர்க்களத்திலிருந்தவர். எனவே அந்த ஓசைகள் பழக்கப்பட்டவையாகத் தோன்றியிருக்கவேண்டும். அப்படியல்லாமல் அதைக் கேட்டபோது இளம் வயதில் முதன்முதலாக நிர்வாணமாக இருந்த பெண் முன்னால் நின்றபோது கால்களில் ஏற்பட்ட அதே பலவீனத்தையும் சருமத்தில் படர்ந்த அதே சிலிர்ப்பையும் உணர்ந்தார். கடைசியாக நினைவேக்கத்தின் பொறியில் அகப்பட்டவராகக் குழப்பமாக யோசித்தார். ஒருவேளை அந்தப் பெண்ணை மணந்திருந்தால் தான் போரும் புகழுமில்லாத மனிதனாக, பெயரில்லாத கைவினைக் கலைஞனாக, மகிழ்ச்சியான விலங்காக இருந்திருப்போம் என்று யோசித்தார். எதிர்பாராத சிந்தனையில் வந்த அந்த நடுக்கம் அவருடைய காலை உணவைக் கசப்பாக்கியது. ஏழு மணிக்கு அவரை அழைத்துச் செல்வதற்காகக் கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் புரட்சிப்படை அதிகாரிகளின் குழுவுடன் வந்தபோது அவர் மேலும் பேச்சிழந்தவராகவும் மேலும் சிந்தனையில் மூழ்கியவராகவும் மேலும் தனிமையானவராகவும் தெரிந்தார். உர்சுலா அவர் தோள்மீது புதிய போர்வை ஒன்றைப் போர்த்திவிட முயன்றாள். "அரசாங்கம் என்ன நினைத்துக்கொள்ளும், ஒரு போர்வை வாங்கக் கூட காசில்லாமல்தான் நீ சரணடைகிறாய் என்று சொல்லமாட்டார்களா?" என்று அவரிடம் கேட்டாள். அவர் அதைப் போர்த்திக் கொள்ளவில்லை. ஆனால் வாசல் அருகில் போனதும் ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவின் பழைய கம்பளித் தொப்பியை அவள் அணிவிக்க அனுமதித்தார்.

"அவுரேலியானோ, அங்கே உனக்கு நல்ல நேரமல்ல என்று தெரிந்தால் உன் அம்மாவை நினைத்துக்கொள்வதாகச் சத்தியம் செய்" என்றாள் உர்சுலா.

நெருக்கம் தோன்றாத ஒரு புன்னகையைச் சிந்தினார். விரல்களை விரித்துக் கையை உயர்த்தினார். ஒரு வார்த்தை பேசாமல் வீட்டை விட்டிறங்கினார். நகரத்தை விட்டு வெளியேறும்வரை கூக்குரல்களும் அவமதிப்புகளும் பழிச் சொற்களும் அவரைப் பின்தொடர்ந்தன. உர்சுலா இனி தனது வாழ்நாளில் திறக்கப் போவதில்லை என்ற முடிவுடன் கதவை அடைத்துத் தாழிட்டாள். "நாங்கள் இங்கேயே அழுகிச் சாவோம். ஆண்கள் இல்லாத இந்த வீட்டுக்குள் சாம்பலா

வோம். ஆனால் நாங்கள் அழுவதைப் பார்க்கும் ஆனந்தத்தை இந்தப் பாழாய்ப்போகிற நகரத்துக்குக் கொடுக்கமாட்டோம்." என்று எண்ணினாள். அந்தக் காலைப்பொழுது முழுவதும் தன் மகனின் நினைவை கண்ணுக்கு எட்டாத மூலைகளிலும்கூடத் தேடினாள். ஆனால் ஒன்றையும் பார்க்க முடியவில்லை.

மகோந்தாவிலிருந்து பதினைந்து மைல் தூரத்தில் பின்னாளில் நீர்லாந்தியா நகரம் உருவான இடத்தில் பிரம்மாண்டமான இலவ மரத்தின் நிழலில் போர் நிறுத்த விழா நடந்தது. மழையில் வெருண்ட புறாக்களைப் போல வெள்ளை உடையணிந்த கற்றுக்குட்டிகள் அரசாங்கப் பிரதிநிதிகளையும் கட்சிப் பிரதிநிதிகளையும் ஆயுதங்களை ஒப்படைக்கத் தயாராக இருந்த புரட்சிக் குழுவினரையும் உபசரித்துக் கொண்டிருந்தார்கள். கர்னல் அவுரேலியானோ புயேந்தியா சேறு அப்பிய கோவேறுக்கழுதை மேல் உட்கார்ந்து வந்து சேர்ந்தார். தன்னுடைய கனவுகளின் மாபெரும் தோல்வியைக் காட்டிலும் சித்திரவதை தந்துகொண்டிருந்த பருக்களின் வலியால் சவரம் செய்திருக்கவில்லை. புகழுக்கும் புகழின் ஏக்கத்துக்கும் அப்பால் மொத்த நம்பிக்கையும் பொய்த்துப் போயிருந்த இறுதிக் கட்டத்துக்கு அவர் வந்திருந்தார். போர் நிறுத்தத்துக்கு ஒரு துக்கச் சாயல் இருக்க வேண்டும் என்ற அவரது ஏற்பாட்டின்படி அங்கே இசையில்லை; வாண வேடிக்கைகள் இல்லை; மணிகளின் முழக்கமில்லை; வெற்றி கோஷங்கள் இல்லை. பயணியான ஒரு புகைப்படக்காரன் அவருடைய ஒரே ஒரு படத்தை எடுத்தான். அது பத்திரப்படுத்தப்பட்டிருக்கலாம். ஆனால் பிரதியாக மாற்றும் முன்பே அதன் தகடுகள் அழிக்கப்பட்டு விட்டன. ஆவணங்களில் கையெழுத்துப்போடத் தேவைப்படும் நேரத்தின் அளவுதான் விழா நிகழ்ச்சிகள் நீண்டன. பொத்தலாகிப் போன ஒரு சர்க்கஸ் கூடாரத்தின் நடுவில் போடப்பட்ட துருப்பிடித்த மேஜையைச் சுற்றிக் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் நம்பிக்கைக்குரிய அதிகாரிகள் இருந்தார்கள். கையெழுத்துப் போடுவதற்கு முன்பாகக் குடியரசு அதிபரின் பிரதிநிதி ஆயுத ஒப்படைப்பு நடவடிக்கையைப் பற்றிய அறிக்கையை உரக்கப் படிக்க முயன்றார். கர்னல் அவுரேலியானோ புயேந்தியா "நாம் சடங்குகளில் நேரத்தை வீணாக்காமல் இருப்போம்" என்று எதிர்ப்புத் தெரிவித்தார். படித்துப் பார்க்காமலேயே ஆவணங்களில் கையெழுத்துப்போடத் தயாரானார். அதிகாரிகளில் ஒருவன் அந்த அலுப்பூட்டும் அமைதியை முறித்தான்.

"கர்னல், நாம்தான் முதலில் கையெழுத்துப்போட்டோம் என்று இருக்க வேண்டாம். அந்த உதவியைச் செய்யுங்கள்" என்றான்.

கர்னல் அவுரேலியானோ புயேந்தியா ஒத்துக்கொண்டார். மேஜையைச் சுற்றி அந்த ஆவணம் போய்க்கொண்டிருந்தபோது அந்தத் துல்லியமான அமைதியில் பேனா காகிதத்தில் கையெழுத்துகளாக உரசிக்கொள்ளும் சத்தம் மட்டுமே கேட்டது. முதலாவது கையெழுத்துக் கான இடம் காலியாக விடப்பட்டிருந்தது. கர்னல் அவுரேலியானோ புயேந்தியா அந்த வெற்றிடத்தைப் பூர்த்திசெய்யத் தயாரானார். "கர்னல்" இன்னொரு அதிகாரி அழைத்தான். "எல்லாவற்றையும் சரி செய்து கொள்ள இன்னும் சமயமிருக்கிறதே?" என்றான்.

கர்னல் அவுரேலியானோ புயேந்தியா முகபாவம் மாறாமல் முதல் பிரதியில் கையெழுத்துப் போட்டார். இரண்டு பெட்டிகளைச் சுமந்த கோவேறுக்கழுதையை ஓட்டிக்கொண்டு புரட்சிப்படையின் கர்னல்களில் ஒருவன் வாசலில் வந்துகொண்டிருந்தபோது அவர் கடைசி நகலில் கையெழுத்துப் போடவிருந்தார். அவனுடைய மொத்த இளமையையும் மீறி ஒரு வறண்ட நோட்டத்துடனும் நோயாளித் தோற்றத்துடனும் இருந்தான். அவன் புரட்சிப்படையின் மகோந்தா பகுதிக்குப் பொருளாளராக இருந்தவன். அந்தக் கோவேறுக் கழுதையை இழுத்துக்கொண்டு போர் நிறுத்தச் சடங்குக்குக் குறித்த நேரத்தில் வந்து சேர்ந்துவிடவேண்டும் என்று ஆறு நாள் பட்டினியுடன் கடுமையாகப் பயணம் செய்திருந்தான். நோவைப் பொறுத்துக் கொண்டு செட்டாக அந்தப் பெட்டிகளை இறக்கிவைத்தான். அவற்றைத் திறந்து எழுபத்திரண்டு தங்கச் செங்கற்களை ஒவ்வொன்றாக மேஜைமீது அடுக்கி வைத்தான். அந்தப் புதையல் இருப்பதை எல்லாரும் மறந்து போயிருந்தார்கள். சென்ற வருடக் களேபரங்களுக்கு இடையில் மத்தியத் தலைமை விலகியிருந்தது. புரட்சிக் குழுத் தலைவர்களுக்கு இடையிலேயே கொடுமையான சண்டை நடந்து கொண்டிருந்தது. அந்த நிலையில் சில பொறுப்புகளைத் தீர்மானிப்பது எளிதாக இருக்கவில்லை. புரட்சியை நடத்துவதற்காகத் திரட்டப்பட்ட தங்கம் உருக்கிப் பாளங்களாக வார்க்கப்பட்டு சுட்ட களிமண்ணில் மூடி ஒளித்து வைக்கப்பட்டிருந்தது. கர்னல் அவுரேலியானோ புயேந்தியா அந்த எழுபத்திரண்டு தங்கச் செங்கற்களையும் போர் நிறுத்த ஒப்படைப்புப் பட்டியலில் சேர்த்தார். அடுத்துப் பேச யாரையும் அனுமதிக்காமல் சடங்கை முடித்து வைத்தார். அழுக்குப் புரண்ட அந்த இளைஞன் நீர் ததும்பும் தனது கலங்கிய கண்களால் அவரையே பார்த்து நின்றான்.

“வேறு ஏதாவது?” என்று கர்னல் புயேந்தியா அவனிடம் கேட்டார். அந்த இளம் கர்னல் வாயை இறுக மூடிக்கொண்டான். “ரசீது?” என்றான்.

ஹோராசே அர்க்காதியோ புயேந்தியா அதைத் தன் கைப்படவே எழுதிக் கொடுத்தார். பிறகு சுற்றுக்குட்டிப் பயிற்சியாளர்கள் சுற்றி வந்து விநியோகித்துக் கொண்டிருந்ததிலிருந்து ஒரு கிளாஸ் லெமனேடையும் ஒரு துண்டு பிஸ்கோத்தையும் அருந்தினார். அவர் இளைப்பாற விரும்பினால் தேவைப்படும் என்று அமைக்கப்பட்டிருந்த ராணுவக் கூடாரத்துக்குள் ஓய்வெடுக்கப் போனார். சட்டையைக் கழற்றி வைத்துவிட்டுக் கட்டிலின் விளிம்பில் உட்கார்ந்தார். பிற்பகல் மூன்றே கால் மணிக்குத் தன் கைத்துப்பாக்கியை எடுத்து அவருடைய தனி மருத்துவர் மார்பில் வரைந்திருந்த அயோடின் வட்டத்துக்குள் சுட்டுக்கொண்டார். அதே விநாடி, மகோந்தாவில் உர்சுலா அடுப்பிலிருக்கும் பால் பொங்க ஏன் இவ்வளவு நேரமாகிறது என்று ஆச்சரியப்பட்டுக்கொண்டே பால் பானையின் மூடியை எடுத்தாள். உள்ளே நிறையப் புழுக்களிருப்பதைப் பார்த்தாள்.

“அவர்கள் அவுரேலியானோவைக் கொன்றுவிட்டார்கள்” என்று அலறினாள்.

தன்னுடைய தனிமைப் பழக்கத்துக்குப் பணிந்து முற்றத்தைப் பார்த்தாள். மழையில் நனைந்தும் துக்கத்துடனும் இருந்த ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவைப் பார்த்தாள். இறந்து போகும்போது இருந்ததைவிட அவருக்கு வயது கூடியிருந்தது. "அவர்கள் அவனை முதுகில் சுட்டுவிட்டார்கள்" என்று சுருக்கமாகச் சொன்னாள். "அவன் கண்களை மூடிவிடும் கருணைகூட யாருக்கும் இல்லை." அந்திப் பொழுதில் வேகமாகவும் பிரகாசத்துடனும் சில தட்டுகள் புகைமூச்சுப் போல ஆகாயத்தைக் கடந்ததைக் கண்ணீருக்கிடையே பார்த்தாள். அது மரணத்தின் அறிகுறி என்று நினைத்தாள். உலர்ந்த ரத்தத்தால் விறைப்பாகிப் போன போர்வையில் சுற்றிச் சீற்றத்துடன் திறந்திருந்த விழிகளுடன் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவைக் கொண்டு வந்தபோதும் செந்தவிட்டு மரத்தடியில் கணவரின் முழங்கால்கள்மேல் முகம் வைத்துத் தேம்பிக்கொண்டிருந்தாள்.

அவர் அபாயக் கட்டத்தைத் தாண்டினார். துப்பாக்கிக் குண்டு புகுந்து சென்ற தடத்திலேயே மார்பு வழியாக அயோடினில் நனைத்த நூலை உள்ளே நுழைத்து முதுகுப்பக்கமாகக் குண்டை எடுக்க டாக்டரால் முடிந்தது. "அது என்னுடைய சாதனை" என்று டாக்டர் திருப்தியடைந்தார். "முக்கியமான உறுப்புகளைச் சேதப்படுத்தாமல் குண்டு நுழைந்து போகக்கூடிய ஒரே புள்ளி அதுதான்" என்றார். கருணை நிரம்பிய கற்றுக்குட்டிகள் தன்னைச் சுற்றிநின்று ஆத்மாவின் நித்திய சாந்திக்காகப் பிரார்த்தனை கீதங்களை உருவிட்டுக் கொண்டிருப்பதைக் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா பார்த்தார். பிலர் தெர்னேராவைக் கேலி செய்வதற்காகவாவது வாயின் மேற்பகுதியில் சுட்டுக்கொள்ளத் தோன்றவில்லையே என்று அவருக்கு வருத்தமாக இருந்தது.

"எனக்கு இப்போதும் அதிகாரம் இருந்தால்" என்று டாக்டரிடம் சொன்னார். "என் கையாலேயே உங்களைச் சுட்டிருப்பேன். என் உயிரைக் காப்பாற்றினீர்கள் என்பதற்காக அல்ல; என்னை முட்டாளாக்கியதற்காக."

அவருடைய மரணத்தின் தோல்வி சில மணி நேரங்களுக்குள்ளேயே அவர் இழந்த கௌரவத்தைத் திரும்பக் கொண்டு வந்தது. தங்கக் கட்டிகள் வைத்துக் கட்டிய ஒரு அறைக்காக யுத்தத்தையே விற்றுவிட்டார் என்ற கதையை உருவாக்கிய அதே ஆட்கள் அந்தத் தற்கொலை முயற்சி மரியாதைக்குரிய நடவடிக்கை என்றார்கள். அவரைத் தியாகி என்றும் அறிவித்தார்கள். குடியரசின் அதிபர் வழங்கிய 'ஆர்டர் ஆஃப் மெரிட்' என்ற விருதை அவர் மறுத்தபோது அவருடைய மிக மோசமான எதிரிகள்கூட அறைக்குள் வந்து குவிந்து போர்நிறுத்தத்தைத் திரும்பப் பெறும்படியும் புதிய போரைத் தொடங்கும்படியும் கேட்டுக்கொண்டார்கள். தவறுக்குப் பரிகாரமாகப் அன்பளிப்புகளால் அந்த வீட்டை நிரப்பினார்கள். தனது முன்னாள் ராணுவத் தோழர்களின் அபரிமிதமான ஆதரவில் மகிழ்ந்துபோன கர்னல் அவுரேலியானோ புயேந்தியா அவர்களை குதூகலப்படுத்தும் வாய்ப்பையும் ஒதுக்கிவிடவில்லை. நேர்மாறாக, புதிய போர் என்ற எண்ணம் அவருக்கு

உற்சாகம் அளிப்பதாகத் தோன்றுவதாகவும் அதைப் பகிரங்கமாக அறிவிக்க சந்தர்ப்பம் பார்த்துக்கொண்டிருக்கிறார் என்றும் ஒரு தருணத்தில் கர்னல் ரெஜினெல்தோ மார்க்கேஸ் எண்ணினான். அந்தச் சந்தர்ப்பமும் வந்தது. மிதவாதியோ பழைமைவாதியோ யாரானாலும் முன்னாள் போராளிகளுக்குரிய ஓய்வூதியத்தை அனுமதிக்கக் குடியரசின் அதிபர் மறுத்தார். ஒவ்வொரு மனுவையும் ஒரு சிறப்புக் குழு பரிசோதித்து அந்தப் பரிந்துரை பேராயத்தால் அங்கீகரிக்கப்பட்ட பின்னரே வழங்கப்படும் என்றார். "இது அட்டூழியம்" என்று கர்னல் அவுரேலியானோ புயேந்தியா கர்ஜித்தார். "தபாலுக்குக் காத்திருந்து வயதாகியே அவர்கள் செத்துப்போவார்கள்" என்றார். அவர் ஓய்வெடுத்துக் கொள்வதற்காகவென்று உர்சுலா போட்டிருந்த ஆடும் நாற்காலியை விட்டு முதன்முதலாக எழுந்தார். படுக்கையறைக் குள்ளேயே நடந்தபடி குடியரசின் அதிபருக்கு அனுப்புவதற்காக ஒரு கண்டன அறிக்கையைச் சொல்லி எழுதுவித்தார். ஒருபோதும் பொதுமக்களிடையே புழக்கத்துக்கு விடப்படாத அந்தத் தந்தியில் நீர்லாந்தியா ஒப்பந்தத்தின் முதலாவது அத்துமீறலைக் கண்டித்திருந்தார். ஓய்வூதியத் திட்டம் இரண்டு வாரங்களுக்குள் நடைமுறைப் படுத்தப் படவில்லையெனில் மரணம் வரைக்குமான போரை அறிவிக்கப் போவதாக அச்சுறுத்தியிருந்தார். தனது மனவோட்டம் நியாயமானது என்றும் பழமைவாதக் கட்சியின் முன்னாள் போராளிகள்கூட ஆதரவளிப்பார்கள் என்றும் நம்பினார். ஆனால் அவருக்குப் பாதுகாப் பளிப்பது என்ற முகாந்திரத்தில் ஒரு ராணுவக் காவல்படையை வீட்டு முற்றத்தில் நிறுத்தியதுதான் அரசாங்கத்தின் ஒரே பதிலாக இருந்தது. எல்லா வருகைகளும் தடை செய்யப்பட்டன. நாடு முழுவதும் கண்காணிப்புக்கு உள்ளாகி இருந்த எல்லாத் தலைவர்களுக்கும் அதே முறை பின்பற்றப்பட்டது. போர் நிறுத்தத்துக்கு இரண்டு மாதங்களுக்குப் பிறகு, கர்னல் அவுரேலியானோ புயேந்தியா உடல்நலம் தேறியதும் மேற்கொள்ளப்பட்ட அந்த நடவடிக்கை சமயோசிதமானதாகவும் அதிரடியானதாகவும் பயன்விளைவிப்பதாகவும் இருந்தது. அவருட னிருந்த அர்ப்பணிப்பு மிகுந்த சதியாலோசகர்கள் கொல்லப்பட்டார்கள் அல்லது நாடு கடத்தப்பட்டார்கள் அல்லது பொதுநிர்வாகத்தில் பதவியேற்றார்கள்.

டிசம்பர் மாதத்தில் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா தனது அறையை விட்டு வெளியே இறங்கினார். மீண்டும் போரைப் பற்றி யோசிக்காமலிருக்க முற்றத்தைப் பார்த்துக்கொண்டிருப்பதே போது மானதாக இருந்தது. உர்சுலா அவளுடைய வயதை மீறிய துள்ளலுடன் வீட்டை மறுபடியும் புத்துயிர் பெறச் செய்தாள். மகன் உயிரோடு இருப்பான் என்பதைக் கண்டுகொண்டதும் "நான் யார் என்று அவர்கள் பார்க்கத்தான் போகிறார்கள்" என்றாள். "இந்த உலகத்திலேயே இந்தப் பைத்தியக்கார வீட்டைத் தவிர திறந்தே கிடக்கும் இடம் வேறு இருக்கப் போவதில்லை" என்று சொல்லிக்கொண்டாள். வீட்டைக் கழுவி வெள்ளையடித்தாள். அறைக்கலன்களை இடம்மாற்றினாள். தோட்டத்தைச் சீர்படுத்தினாள். புதிய பூச்செடிகளை நட்டு வைத்தாள்.

கோடைக்காலத்தின் ஜொலிக்கும் வெளிச்சம் படுக்கையறை வரைக்கும் நுழையும்படி ஜன்னல்களையும் கதவுகளையும் திறந்து வைத்தாள். ஒன்றுக்கு மேல் ஒன்றாகக் கடைபிடிக்கப்பட்டு வந்த நீத்தார் இரங்கலுக்கான கால அவகாசத்தை ஒழித்தாள். கறாரான கவுன்களுக்குப் பதிலாக இளமையான உடைகளை வாங்கினாள். பியானோ இசை மீண்டும் அந்த வீட்டைக் குதூகலமாக்கியது. அந்த இசையைக் கேட்கும்போது அமரந்தா, பியத்ரோ கிரெஸ்பியை நினைத்துக்கொண்டாள். அவனுடைய மாலை நேர வருகைகளையும் லவெண்டர் மணத்தையும் நினைத்துக்கொண்டாள். சிதறுண்டுபோன அவள் மனதுக்குள்ளிருந்த வன்மத்தைக் காலம் தூய்மைப்படுத்தியிருந்தது. ஒரு மாலை நேரம் கூடத்தை ஒழுங்குபடுத்திக்கொண்டிருந்த உர்சுலா வீட்டுக்குக் காவல் நின்றுகொண்டிருந்த சிப்பாய்களை உதவும்படி கேட்டாள். அவர்களுடைய இளம் கமாண்டர் அனுமதியளித்தான். மெல்ல மெல்ல அவர்களுக்கு வேறு வேலைகளையும் உர்சுலா செய்ய வைத்தாள். அவர்களை உணவருந்த அழைத்தாள். உடைகளும் ஷூக்களும் கொடுத்தாள். படிக்கவும் எழுதவும் கற்பித்தாள். அரசாங்கம் அவர்களைத் திரும்பப் பெற்றுக்கொண்டபோது ஒருவன் மட்டும் அந்த வீட்டிலேயே தங்கினான். பல ஆண்டுகள் அவளுக்குப் பணியாற்றினான். அழகி ரெமேதியோஸின் மறுதலிப்பால் பைத்தியமான அந்த இளம் கமாண்டர் புத்தாண்டு நாளில் அவளுடைய ஜன்னலடியில் செத்துக் கிடந்தான்.

மழை பெய்த ஜூன் மாதப் பிற்பகலில் தன் முதல் மகனைப் பார்ப்பதற்காகப் படுக்கையறைக்குப் போனதை அவுரேலியானோ செகுந்தோ பல ஆண்டுகளுக்குப் பிறகு மரணப்படுக்கையில் நினைத்துப் பார்த்தார். குழந்தை சோர்ந்தும் அழுதுகொண்டே இருந்தும் புயேந்தியாவுக்குரிய எந்த அடையாளமும் இல்லாமலிருந்தும் அதற்குப் பெயர் வைக்க அவன் இரண்டாம் முறை யோசிக்கவில்லை.

"நாம் அவனை ஹோசே அர்க்காதியோ என்று அழைப்போம்" என்றான்.

சென்ற ஆண்டு அவன் திருமணம் செய்து வந்திருந்த பெர்னாண்டா தெல் கார்பியோ என்ற அழகான பெண் ஒப்புக்கொண்டாள். இன்னொரு பக்கம் உர்சுலாவால் அவளுடைய குழப்பமான சந்தேக உணர்வை மறைத்துக்கொள்ள முடியவில்லை. அந்தக் குடும்பத்தின் நீண்ட வரலாற்றில் தொடர்ச்சியாக வரும் பெயர்கள் திடமானவை என்று தோன்றும் சில முடிவுகளுக்கு அவளைக் கொண்டு சென்றிருந்தன. அவுரேலியானோக்கள் அடக்கமானவர்கள். ஆனால் தெளிந்த சிந்தனை கொண்டவர்கள். ஹோசே அர்க்காதியோக்கள் உணர்ச்சிப்பூர்வமானவர்கள்; உழைப்பாளிகள். ஆனால் அவர்கள் எல்லாரும் துயரத்தின் குறியீட்டால் அடையாளப் படுத்தப்பட்டவர்கள்.. இந்த விஷயத்தில் வகைப்படுத்தப்பட முடியாதவர்களாக இருந்தது ஹோசே அர்க்காதியோ செகுந்தோவும் அவுரேலியானோ செகுந்தோவும் மட்டுமே. இருவரும் ஒரே அச்சாக இருந்தார்கள். குழந்தைப் பருவத்தில் மிகவும் குறும்புக்காரர்களாக இருந்தார்கள். சாந்தா சோபியா தெ லா பியாதெத்தால்கூட அவர்களைப் பிரித்துப் பார்க்க முடியவில்லை. பெயர் சூட்டும் தினத்தன்று அமரந்தா அவரவர் பெயர் பொறித்த காப்புகளைக் கைகளில் அணிவித்தாள். அவர்களுடைய பெயரின் முதல் எழுத்துகள் தைத்து வெவ்வேறு நிறமுள்ள உடைகளை அணிவித்தாள். ஆனால் பள்ளிக் கூடத்துக்குப் போகத் தொடங்கியதும் ஒருவருக்கொருவர் காப்பை யும் உடையையும் மாற்றிக்கொள்ளவும் பெயரை மாற்றி அழைத்துக்கொள்ளவும் முடிவுசெய்தார்கள். பச்சைச் சட்டை போட்டவன் ஹோசே அர்க்காதியோ செகுந்தோ என்று தோராயமாகப் புரிந்துவைத்திருந்த ஆசிரியர் மெல்ஷோர் எஸ்கலோனா இரண்டாமவனான அவன் அவுரேலியானோ

செகுந்தோவின் சட்டையையும் காப்பையும் அணிந்திருந்தாலும் அவன் பெயர் அவுரேலியானோ செகுந்தோ அல்லவென்றும் முதலாமவன் ஹோசே அர்க்காதியோ செகுந்தோவின் வெள்ளைச் சட்டையையும் காப்பையும் அணிந்திருந்தாலும் அவன் ஹோசே அர்க்காதியோ செகுந்தோ அல்லவென்றும் கண்டுபிடித்தபோது மண்டை கலங்கிப் போனார். அதற்குப் பிறகு அவர்களில் யார் எவர் என்பது அவருக்கு நிச்சயமாக இருக்கவில்லை. வளர்ந்து பெரியவர்களானபோது வாழ்க்கை அவர்களை மாற்றியது. அப்போதும் தங்கள் ஆள்மாறாட்ட விளையாட்டின் ஏதோ தருணத்தில் அவர்கள் தவறுசெய்துவிட்ட தனால் மாறிப் போனார்களே என்றுதான் உர்சுலா மேலும் வியப் படைந்தாள். விடலைப் பருவத்தின் தொடக்கம் வரையிலும் இருவரும் ஒன்று போலவே இயங்கும் இரு எந்திரங்களாக இருந்தார்கள். ஒரே நேரத்தில் விழித்தெழுவார்கள். ஒரே சமயத்தில்தான் இருவருக்கும் குளியலறைக்குப் போகத் தோன்றும். இருவரும் ஒரே உடல் உபாதை களுக்கு ஆளாவார்கள். ஒரே வகையான கனவைத்தான் இருவரும் கண்டார்கள். ஆட்களைக் குழப்புவது என்ற அற்ப ஆசைக்காகத்தான் அவர்கள் கூட்டாகச் செயல்படுகிறார்கள் என்று வீட்டிலிருப்பவர்கள் நினைத்தார்கள். ஒருநாள் சாந்தா சோபியா தெ லா பியாதெத் அவர்களில் ஒருவனுக்கு ஒரு கிளாஸ் லெமனேடைப் பருகக் கொடுத்தாள். அவன் அதை ருசித்து முடிப்பதற்குள் அடுத்தவன் அதில் சர்க்கரை போடவில்லை என்றான். உண்மையிலேயே சாந்தா சோபியா தெ லா பியாதெத் சர்க்கரை போட மறந்துதான் போயிருந்தாள். இதை உர்சுலாவிடம் சொன்னாள். "அதனால்தான் அவர்கள் ஒன்றுபோல இருக்கிறார்கள். பிறவிக் குறும்பர்கள்" என்று அவள் ஆச்சர்யமில்லாமல் பதிலளித்தாள். காலப்போக்கில் சங்கதிகள் ஒழுங்குக்கு வந்தன. அந்தக் குழப்ப விளையாட்டிலிருந்து வெளிவந்த அவுரேலியானோ செகுந்தோ என்பவன் அவனுடைய மூதாதையர்களைப் போல பிரம்மாண்ட மானவனாக வளர்ந்தான். ஹோசே அர்க்காதியோ செகுந்தோ என்பவன் கர்னலைப் போல மெலிந்திருந்தான். குடும்பத்துக்குரிய தனிமையான தோற்றம் மட்டுமே இருவருக்கும் பொதுவாக இருந்த ஒற்றுமை. குழந்தைப் பருவத்தில் சீட்டுக் கட்டைப் போல அவர்கள் குலுக்கப் பட்டதுதான் தோற்றத்திலும் பெயரிலும் குணத்திலும் மாற்றம் ஏற்பட்டதற்கு ஒருவேளை காரணமாக இருக்கலாம் என்று உர்சுலா சந்தேகித்தாள்.

போர் நடந்துகொண்டிருந்த காலத்தின் இடையில் அந்த நிச்சய மான மாற்றம் வெளிப்பட்டது. மரண தண்டனை நிறுவேற்றப்படு வதைப் பார்க்க வேண்டும் என்று ஹோசே அர்க்காதியோ செகுந்தோ கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸிடம் கேட்டபோதுதான் அது வெளிப்பட்டது. உர்சுலாவின் சரியான முடிவையும் மீறி அவனுடைய ஆசை நிறைவேற்றப்பட்டது. அதற்கு மாறாக, மரண தண்டனை நிறுவேற்றப்படுவதைப் பார்ப்பது என்ற யோசனையே அவுரேலியானோ செகுந்தோவை நடுங்கச் செய்தது. அவன் வீட்டிலேயே இருக்க விரும்பினான். பன்னிரண்டாம் வயதில் பூட்டப்பட்ட அறைக்குள் என்ன இருக்கிறது என்று உர்சுலாவிடம் கேட்டான். "காகிதங்கள்"

என்றாள் அவள். "மெல்குயாதெஸின் புத்தகங்களும் அவருடைய கடைசிக் காலத்தில் அவர் எழுதி வைத்த விசித்திரங்களும்" என்றாள். அந்தப் பதில் அவனைச் சமாதானப்படுத்துவதற்குப் பதில் ஆர்வத்தைத் தோண்டிவிட்டது. அவன் பிடிவாதம் பிடித்தான்; எதையும் பாழாக்க மாட்டேன் என்று வாக்குறுதியளித்ததன் பேரில் உர்சுலா சாவிகளை அவனிடம் கொடுத்தாள். மெல்குயாதெஸின் சடலத்தை அப்புறப் படுத்திய பிறகு யாரும் அந்த அறைக்குள் போகவில்லை. அதில் போட்டிருந்த கொண்டிப் பூட்டு துருப்பிடித்து மொத்தமாக இறுகிப் போயிருந்தது. ஆனால் அவுரேலியானோ செகுந்தோ ஜன்னலைத் திறந்தபோது வழக்கமான வெளிச்சம் அறையை ஒளிரச் செய்யும் தினசரிப் பழக்கத்துடன் உள்ளே புகுந்தது. அறைக்குள் புழுதியோ ஒட்டடையோ இருக்கும் அடையாளமே இல்லை. எல்லா இடமும் தூசி தட்டியும் பெருக்கியும் விடப்பட்டிருந்தன. சவ அடக்கத்தன்று இருந்ததைவிடச் சுத்தமாகவும் ஒழுங்காகவும் இருந்தன. மைக்குப்பிக்குள் மை உறைந்துபோகவில்லை. ரசாயன மாற்றம் பாத்திரங்களின் பளபளப்பை மங்கச் செய்யவில்லை. பாதரசத்தை ஆவியாக மாற்ற ஹோசே அர்க்காதியோ புயேந்தியா பயன்படுத்திய குழாய்களின் கீழே தீக்கங்குகள் அணைந்துவிடவில்லை. அலமாரிகளில் அட்டை போன்ற சாதனத்தால் பைண்டு செய்யப்பட்ட புத்தகங்கள் வெளிறியும் மனித சருமம்போல நிறம் மங்கியும் இருந்தன. கையெழுத்துப் பிரதிகள் கட்டுப் பிரியாமல் இருந்தன. உண்மையில் அந்த அறை பல ஆண்டு களுக்கு முன்பே மூடி வைக்கப்பட்டிருந்தபோதும் உள்ளே இருந்த காற்று வீட்டின் மற்ற அறைகளில் இருந்ததைவிடப் புதிதாக இருந்தது. ஒவ்வொன்றும் புதிதாகவே இருந்தது. இரண்டு வாரங்களுக்குப் பிறகு வாளித் தண்ணீரும் துடைப்பமுமாகத் தரையைக் கழுவிவிட வந்த உர்சுலாவுக்கு அங்கே செய்வதற்கு எதுவுமில்லை. அவுரேலியானோ செகுந்தோ ஒரு புத்தகத்தில் மூழ்கியிருந்தான். அதற்கு மேல்அட்டை இருக்கவில்லை. எந்த இடத்திலும் தலைப்பும் போட்டிருக்கவில்லை. மேஜைக்கருகில் அமர்ந்து ஊசியால் அரிசி மணிகளைக் குத்தியெடுத்து அதை மட்டுமே சாப்பிடும் பெண்ணைப் பற்றிய கதை, வலையில் கட்டிவைப்பதற்காகப் பக்கத்து வீட்டுக்காரனிடம் பளுவைக் கடன் வாங்கி அதற்குக் கூலியாக மீனைக் கொடுக்க அந்த மீனின் வயிற்றுக் குள் வைரம் இருந்தது என்ற மீன்பிடிப்பவனின் கதை, விரும்பியதை யெல்லாம் கொடுக்கும் விளக்கின் கதை, பறக்கும் கம்பளங்களின் கதை எல்லாவற்றையும் அவன் அனுபவித்து வாசித்தான். வியப்புடன் அவையெல்லாம் உண்மையா என்று உர்சுலாவிடம் கேட்டான். அவள் உண்மை என்றாள். பல ஆண்டுகளுக்கு முன்பு நாடோடிகள் அற்புத விளக்குகளையும் பறக்கும் கம்பளங்களையும் மகோந்தாவுக்குக் கொண்டு வந்திருந்ததைச் சொன்னாள்.

"இப்போது நடப்பது என்னவென்றால் இந்த உலகம் மெதுவாக அதன் முடிவை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறது. அந்த விஷயங்கள் இனிமேல் இங்கே வராது" என்று பெருமூச்சு விட்டாள். பல பக்கங்கள் காணாமல் போயிருந்ததனால் அநேகக் கதைகளுக்கு முடிவில்லாமலிருந்த அந்தப் புத்தகத்தை முடித்ததும் அவுரேலியானோ செகுந்தோ

கையெழுத்துப் பிரதிகளை வாசித்துப் புரிந்துகொள்ள முயன்றான். ஆனால் அது அசாத்தியமாக இருந்தது. அந்த எழுத்துக்கள் கொடியில் உலரப்போட்ட துணிகளைப் போலிருந்தன; எழுதப்பட்டவை என்பதைவிட இசைக் குறிப்பீடுகள் போலவே அவை தோன்றின. வெக்கையான அந்த நண்பகல் பொழுதில் கையெழுத்துப் பிரதிகளில் நுணுகி ஆராய்ந்து கொண்டிருந்தபோது அந்த அறையில் தான் மட்டுமே இல்லை என்று உணர்ந்தான். ஜன்னல் வழியாக வரும் வெளிச்சத்துக்கு எதிராகக் கைகளை முழங்கால்களின்மீது ஊன்றியபடி மெல்குயாதெஸ் உட்கார்ந்திருந்தான். வயது நாற்பதுக்கும் குறைவாக இருந்தது. அதே பழைய மோஸ்தரிலான கோட்டும் அண்டங்காக்கையின் சிறகு போன்ற தொப்பியும் அணிந்திருந்தான். முடியில் தேய்த்திருந்த களிம்பு வெயிலில் உருகி வெளிறிய நெற்றிப் பொட்டுகளில் வழிந்திருந்தது. அவுரேலியானோவும் ஹோசே அர்க்காதியோவும் குழந்தைகளாக இருந்தபோது பார்த்த அதே தோற்றத்தில் இருந்தான். அவுரேலியானோ செகுந்தோ அவனை உடனே அடையாளம் கண்டுகொண்டான். ஏனெனில் அந்தப் பரம்பரை ஞாபகம் தலைமுறை தலைமுறையாகக் கடந்து வந்திருந்தது. தாத்தாவிடமிருந்து அது அவனிடம் வந்து சேர்ந்திருந்தது.

அவுரேலியானோ செகுந்தோ "வணக்கம்" என்றான்.

"வணக்கம், இளைஞனே" என்றான் மெல்குயாதெஸ்.

அப்போதிருந்து பல வருடங்களுக்கு அவர்கள் இருவரும் ஏறக்குறைய எல்லாப் பிற்பகல்களிலும் சந்தித்துக்கொண்டார்கள். மெல்குயாதெஸ் உலகத்தைப் பற்றிப் பேசினான். தனது பழைய ஞானத்தை அவனுக்குப் பகிர முயன்றான். ஆனால் அந்தக் கையெழுத்துப் பிரதிகளை மொழிபெயர்க்க மறுத்தான். "நூறு வயது ஆவதற்கு முன்னால் யாருக்கும் அதன் அர்த்தம் புரியக்கூடாது" என்று விளக்கினான். அவுரேலியானோ செகுந்தோ அந்தச் சந்திப்புகளை ரகசியமாக வைத்துக்கொண்டான். ஒரு சமயம் மெல்குயாதெஸ் இருக்கும்பொழுது உர்சுலா அந்த அறைக்குள் வந்தபோது தன்னுடைய தனி உலகம் நொறுங்கிப் போனதாக அவனுக்குத் தோன்றியது. ஆனால் அவள் அவனைப் பார்க்கவில்லை.

"நீ யாருடன் பேசிக்கொண்டிருந்தாய்?" என்று கேட்டாள்.

"யாருடனுமில்லையே" என்றான் அவுரேலியானோ செகுந்தோ.

"உன்னுடைய கொள்ளுத் தாத்தாவும் இப்படித்தான் செய்வார். தனக்குத் தானே பேசிக்கொண்டிருப்பார்" என்றாள் உர்சுலா.

இதற்கிடையில் சுட்டுக் கொல்லப்படுவதைப் பார்த்து ஹோசே அர்க்காதியோ செகுந்தோ திருப்தி அடைந்திருந்தான். ஒரே சமயத்தில் வெடித்த ஆறு துப்பாக்கிக் குண்டுகளின் வெளிர் நீல ஒளி வீச்சும் துப்பாக்கியிலிருந்து வெளியேறிய அவற்றின் சத்தம் மலைகளில் மோதி எழுந்த எதிரொலியும் குண்டு துளைத்துச் சட்டையில் ரத்தம் ஊறிய போதும் விறைப்பாக நின்ற அந்த மனிதனின் சோகப் புன்னகையும் கலங்கிய கண்களும் கட்டை அவிழ்த்துக் கம்பத்திலிருந்து இறக்கிச்

சுண்ணாம்பு நிரப்பிய பெட்டிக்குள் வைத்தபோதும் அவன் சிரித்துக் கொண்டே இருந்ததும் அவனுடைய எஞ்சிய ஆயுள் முழுவதும் மறக்க முடியாததாக இருந்தன. "அவன் உயிரோடு இருக்கிறான்" என்று நினைத்தான். "அவனை உயிரோடு புதைக்கப் போகிறார்கள்." அது அவனிடம் ஏற்படுத்திய பாதிப்பால் அன்றிலிருந்து ராணுவ நடவடிக்கைகள் பற்றியும் போரைப் பற்றியுமான விவகாரங்களிலிருந்து தன்னை விலக்கிக்கொண்டான். அதற்குக் காரணம் அந்தத் தண்டனைக் கொலைகள் அல்ல; குற்றவாளிகளை உயிருடன் புதைக்கும் கொடூர வழக்கம்தான். சரியாக எப்போது அவன் தேவாலயக் கோபுரத்தில் மணியடிக்கவும் "நாய்க்குட்டி"க்குப் பின்னவராக வந்த அருட்தந்தை அந்தோனியோ இசபெல்லுக்கு உதவவும் திருச்சபை இல்லத்தின் முற்றத்தில் சண்டைச் சேவல்களைப் பராமரிக்கவும் தொடங்கினான் என்றும் யாருக்கும் தெரியவில்லை. அதைக் கண்டுபிடித்த கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் மிதவாதிகள் நிராகரித்த தொழில்களைக் கற்றுக்கொள்வதற்காக அவனைக் கடிந்துகொண்டான்.

ஹோராசே அர்க்காதியோ செகுந்தோ "உண்மை என்னவென்றால் நான் பழைமைவாதியாக மாறிவிட்டேன் என்றுதான் நினைக்கிறேன்" என்று பதிலளித்தான். அது விதியால் நிர்ணயிக்கப்பட்டது என்று நம்பினான். கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் இந்தப் புகாரை உர்சுலாவிடம் சொன்னான். "அதுவும் நல்லதுதான். அவன் பாதிரியாக வர வேண்டும். அப்படியாவது கடவுள் இந்த வீட்டுக்கு வரட்டும்."

அருட்தந்தை அந்தோனியோ இசபெல் அவனுடைய முதலாவது திருப்பலிப் பூசைக்கு ஆயத்தப்படுத்திக் கொண்டிருந்தார். சேவல்களின் கழுத்தைச் சிரைத்தபடியே அவனுக்கு வேத பாடம் கற்றுக்கொடுத்தார். படைப்பின் இரண்டாம் நாள் முட்டைக்குள்ளே கோழியைப் புகுத்தும் யோசனை கடவுளுக்கு எப்படி வந்தது என்பதை, நச்சரிக்கும் கோழிகளைக் கூட்டுக்குள் அடைக்கும் லாவகத்தோடு எளிய உதாரணங் களுடன் விளக்கிச் சொன்னார். அன்று முதலே திருச்சபைப் பங்கின் பாதிரியாரிடம் முதுமையின் நொய்மைகள் தென்படத் தொடங்கின. சில ஆண்டுகளுக்குப் பின்னர் கடவுளுக்கு எதிரான போராட்டத்தில் சாத்தான் வெற்றியடைந்திருக்கிறான்; சொர்க்கத்தின் சிம்மாசனத்தில் அவன்தான் உட்கார்ந்திருக்கிறான்; தன்னுடைய அடையாளத்தை வெளியே காட்டிக்கொள்ளாமல் பலவீனர்களை வலையில் சிக்க வைக்கிறான் என்றெல்லாம் பிதற்றத் தொடங்கினார். தன்னுடைய புரவலரின் உற்சாகத்தால் ஹோராசே அர்க்காதியோ செகுந்தோ ஒரு சில மாதங்களிலேயே சாத்தானைக் குழப்பியடிக்கும் மறைத் தந்திரங் களிலும் அதே அளவுக்குக் கோழிச் சண்டை உத்திகளிலும் தேர்ச்சி யடைந்தான். அமரந்தா அவனுக்காகக் கழுத்துப்பட்டி வைத்த லினன் உடுப்பையும் டையையும் தைத்துக் கொடுத்தாள். ஒரு ஜோடி வெள்ளை ஷூக்களை வாங்கிக் கொடுத்தாள். மெழுகுதிரி தாங்கியின் பட்டை வளையத்தில் அவன் பெயரை மினுக்கத்துடன் கொத்தி வைத்தாள். முதலாவது திருப்பலிப் பூசைக்கு இரண்டு இரவுகளுக்கு முன்பு அருட் தந்தை அந்தோனியோ இசபெல், மூடிய பாவமன்னிப்புக்

கூண்டுக்குள் பாவங்களின் அகராதியின் உதவியோடு உட்கார்ந்து அவனுடைய ஒப்புக்கொள்ளலைக் கேட்டார். மிக நீளமான பட்டியலாக இருந்ததால் வழக்கமாக ஆறு மணிக்கெல்லாம் உறங்கப் போய்விடும் அந்த வயோதிகப் பாதிரியார், அது முடிவதற்கு முன்பே நாற்காலியிலிருந்தபடியே தூங்கிப் போனார். ஹோசே அர்க்காதியோ செகுந்தோவுக்கு அந்த விசாரணை ஒரு வெளிப்படுத்தலாக இருந்தது. பெண்களுடன் கெட்ட காரியங்களில் ஈடுபட்டிருக்கிறானா என்று பாதிரியார் கேட்டது அவனுக்கு ஆச்சரியமாக இல்லை; ஆனால் அதுபோன்ற காரியங்களை மிருகங்களுடன் செய்திருக்கிறானா என்ற கேள்விதான் அவனை வருத்தமடையச் செய்தது. அதீத ஆர்வத்தால் பீடிக்கப்பட்டிருந்தவனுக்கு மே மாத முதல் வெள்ளிக்கிழமை திருப்பலிப் பூசை நடத்தக் கிடைத்தது. பின்னர் தேவாலய மணிக் கூண்டிலேயே வசிப்பவனும் நோயாளியுமான பரிசாரகன் பெத்ரோனியோவிடம் – அவன் வௌவால்களைத் தின்பவன் என்று சொல்லப்பட்டது – அதைப் பற்றிக் கேட்டான். “சில ஒழுக்கங்கெட்ட கிறித்தவர்கள் பெண் கழுதைகளுடன் தங்கள் சமாச்சாரங்களைச் செய்வதுண்டு” என்றான் பெத்ரோனியோ. மேலும் குறுகுறுப்புடன் ஹோசே அர்க்காதியோ செகுந்தோ கேள்விமேல் கேள்வியாகக் கேட்டுக் கொண்டிருந்ததில் பெத்ரோனியோ பொறுமையிழந்தான்.

“நான் செவ்வாய்க்கிழமை இரவுகளில் அங்கே போவதுண்டு” என்று ஒப்புக்கொண்டான். “நீ யாரிடமும் சொல்லமாட்டாய் என்று வாக்குறுதி கொடுத்தால் அடுத்த செவ்வாய்க்கிழமை உன்னைக் கூட்டிக்கொண்டு போகிறேன்” என்றான்.

சரியாக அடுத்த செவ்வாய்க்கிழமையன்று பெத்ரோனியோ மணிக் கூண்டை விட்டு இறங்கி வந்தான். ஒரு மர முக்காலி வைத்திருந்தான். அதன் பயன் என்ன என்று அதுவரை யாருக்கும் தெரிந்திருக்கவில்லை. ஹோசே அர்க்காதியோ செகுந்தோவை அருகிலிருக்கும் புல்வெளிக்கு அழைத்துச் சென்றான். அந்த இரவுச் சோதனை அவனை வெகுவாக ஈர்த்தது. அது கதாரினோவின் கடையில் அவன் தென்படத் தொடங்கியதற்கும் மிக நீண்ட காலத்துக்கு முந்தைய நிகழ்ச்சி. அவன் சேவல் சண்டைக்காரனானான். அந்த அருமையான சண்டைப் பறவைகளுடன் முதன்முறையாக வருவதைப் பார்த்ததும் “அந்தப் பிராணிகளை வேறு எங்காவது கொண்டு போ” என்று கட்டளையிட்டாள் உர்சுலா. “சண்டைச் சேவல்கள் ஏற்கனவே இந்த வீட்டுக்கு நிறையக் கசப்பான அனுபவங்களைக் கொண்டுவந்திருக்கின்றன. நீயாக அதை அதிகமாக்க வேண்டாம்.” ஹோசே அர்க்காதியோ செகுந்தோ எந்த விவாதமும் செய்யாமல் அவற்றைத் தூக்கிக்கொண்டு பாட்டியான பிலர் தெர்னேரா வீட்டுக்குப் போனான். அவனை அந்த வீட்டிலேயே வைத்துக்கொள்வதற்காக அவன் ஆசைப்பட்ட எல்லாவற்றையும் அவள் கொடுத்தாள். மிக விரைவிலேயே அருட்தந்தை அந்தோனியோ இசபெல் கொடுத்த ஞானத்தை அவன் ஆடுகளத்தில் காட்டினான். சண்டைச் சேவல்களை இனப்பெருக்கம் செய்வதற்கு மட்டுமல்ல ஒரு ஆணின் கேளிக்கைத் தேவைகளை நிறைவேற்றிக்கொள்ளவும் போதுமான பணத்தை

ஈட்டினான். அந்தத் தருணத்தில் உர்சுலா அவனை அவன் சகோதரனுடன் ஒப்பிட்டுப் பார்த்தாள். குழந்தைப் பருவத்தில் ஒன்றுபோல இருந்த இரட்டையர்கள் இவ்வளவு வேறுபட்டவர்களாக எப்படி மாறினார்கள் என்பது அவளுக்குப் புரியவில்லை. அவளுடைய சந்தேகம் நீண்ட காலம் நீடிக்கவில்லை. வெகுசீக்கிரத்திலேயே அவுரேலியானோ செகுந்தோ சோம்பேறித்தனத்தின் அறிகுறிகளையும் ஊதாரித்தனத்தின் அறிகுறிகளையும் காட்டத் தொடங்கினான். மெல்குயாதெஸின் அறைக்குள் அடைந்து கிடந்தபோது இளம்பருவத்தில் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா இருந்ததைப் போல உள்ளுக்குள் ஒடுங்கியவனாக இருந்தான். நீர்லாந்தியா ஒப்பந்தத்துக்குச் சிறிது காலத்துக்குப் பின்பு நிகழ்ந்த ஒரு தற்செயல் சந்தர்ப்பம் அவனை அந்த உள்ளொடுங்கிய இயல்பிலிருந்து வெளியே கொண்டு வந்தது. உலகியல் எதார்த்தங்களை நேரிட வைத்தது. அக்கார்டியன் லாட்டரிக் குலுக்கல் எண்களை விற்றுக்கொண்டிருந்த இளம்பெண் ஒருத்தி மிகவும் பரிச்சயத்துடன் அவனுக்கு வந்தனம் தெரிவித்தாள். பல சமயங்களில் அவனையும் சகோதரனையும் ஆட்கள் குழப்பிக்கொள்வதால் அவுரேலியானோ செகுந்தோவுக்கு அதில் வியப்பு ஏற்படவில்லை. இருந்தும் அவன் அந்தத் தவறை, அவனுடைய மனதைக் கரைய வைப்பதற்காக அவள் தேம்பியழுதபோதும் கடைசியாக அவனை அவளுடைய அறைக்குக் கூட்டிச் சென்றபோதும்கூடத் திருத்த முற்படவில்லை. இருவரும் ஒரே ஆள்தான் என்ற நினைப்பில் அந்தப் பெண் தன்னுடனும் சகோதரனுடனும் மாறி மாறிப் படுத்துக்கொண்டிருக்கிறாள் என்பதை இரண்டாவது வாரக் கடைசியில் அவுரேலியானோ செகுந்தோ புரிந்துகொண்டான். அதைத் தெளிவு படுத்துவதற்குப் பதில் அந்தச் சூழ்நிலையை நீட்டித்துக்கொள்ளும் வேலைகளைச் செய்தான். மெல்குயாதெஸின் அறைக்குள் அவன் திரும்பப் போகவில்லை. வீட்டு முற்றத்திலேயே பிற்பகல்களைக் கழித்தான். அந்தச் சமயத்தில் வீட்டில் நீத்தார் இரங்கல் கடைபிடிக்கப் பட்டதால் சங்கீதத்துக்குத் தடை போட்டிருந்ததுடன் பிரான்சிஸ்கோ என்ற நாயகனின் ஊர்சுற்றிச் சந்ததிகளுக்கு மட்டுமே பொருத்தமான கருவி என்று அக்கார்டியனை வெறுக்கவும் செய்திருந்த உர்சுலாவின் எதிர்ப்புகளை மீறி அவன் அக்கார்டியன் வாசிக்கக் கற்றுக்கொண்டிருந்தான். எப்படியிருந்தபோதும் அவுரேலியானோ செகுந்தோ அக்கார்டியனில் நிபுணன் ஆனான். திருமணம் முடித்துப் பிள்ளைகள் பெற்று மகோந்தாவில் மதிக்கப்படும் மனிதர்களில் ஒருவனாக ஆனபின்னும் அதில் ஈடுபாடுகொண்டிருந்தான்.

கிட்டத்தட்ட இரண்டு மாதங்கள் அந்தப் பெண்ணைத் தன் சகோதரனுடன் பகிர்ந்துகொண்டான். அவனைக் கண்காணித்து அவன் திட்டங்களைக் குழப்பிவிட்டான். அந்த இரவு ஹோசே அர்க்காதியோ செகுந்தோ தங்களுடைய பொதுவைப்பாட்டியிடம் போகப் போவதில்லை என்று உறுதியானதும் அவன் போய் அவளுடன் படுத்துறங்கினான். ஒருநாள் காலை தனக்கு உடல் நலமில்லை என்பதைக் கண்டுபிடித்தான். இரண்டு நாட்களுக்குப் பிறகு தன் சகோதரன் குளியலறையில் வியர்வையில் ஊறிக் கண்ணீர் பெருகி வழியத்

தூணோடு ஒட்டி நின்றுகொண்டிருப்பதைப் பார்த்தான். அவனுக்குப் புரிந்து போயிற்று. அந்தப் பெண்ணுக்கு அவன் ஆட்கொல்லி நோயைக் கொடுத்துவிட்டான் என்பதால் தன்னை விரட்டிவிட்டாள் என்று சகோதரன் ஒப்புக்கொண்டான். பிலர் தெர்னேரா அவனுக்குச் சிகிச்சையளிக்க முயன்றதையும் சொன்னான். அவுரேலியானோ செகுந்தோ கொதிக்கும் பெர்மாங்கனேட் குளியலுக்கும் சிறுநீரை அதிகம் வெளியேற்றும் நீர்ச் சிகிச்சைக்கும் ரகசியமாக ஒத்துக்கொண்டான். மூன்று மாத ரகசிய வேதனைக்குப் பிறகு இருவரும் தனித் தனியாக நோயிலிருந்து தப்பினார்கள். அதன் பிறகு ஹோசே அர்க்காதியோ செகுந்தோ அந்தப் பெண்ணைப் பார்க்கவில்லை. அவுரேலியானோ செகுந்தோ அவளிடம் மன்னிப்புக் கேட்டுப் பெற்று தனது மரணம் வரை அவளுடன் இருந்தான்.

அவள் பெயர் பெத்ரா கோட்டேஸ். போர்க்காலத்தின் மத்தியில் லாட்டரிச் சீட்டு விற்றுப் பிழைத்தவளுக்குத் தற்செயலாக்க கணவன் ஆன குடிகாரனுடன் மகோந்தாவுக்கு வந்திருந்தாள். அவன் இறந்து போனதும் அவளே வியாபாரத்தைத் தொடர்ந்து நடத்தினாள். சுத்தமானவள். இளமை மிளிரும் பழுப்பு நிறப் பெண். அவளுடைய மஞ்சளான வாதுமைக் கண் அவள் முகத்துக்குச் சிறுத்தையின் மூர்க்கத்தையும் கொடுத்தது. ஆனால் அவளிடம் பெருந்தன்மையான மனமும் அபாரமான காதல் வித்தைகளும் இருந்தன. ஹோசே அர்க்காதியோ செகுந்தோ சேவல் சண்டைக்காரனாகவும் அவுரேலியானோ செகுந்தோ வைப்பாட்டி நடத்தும் சந்தடியான விருந்துகளில் அக்கார்டியன் வாசிப்பவனாகவும் ஆகியிருப்பதைத் தெரிந்துகொண்டபோது உர்சுலா தனக்குப் பைத்தியம் பிடித்துவிடும் என்று நினைத்தாள். அது குடும்பத்துக்கு நேர்ந்த கோளாறு என்பது போல எந்த நற்குணமும் இருவரிடமும் இல்லாமலிருந்தது. இனி யாரும் அவுரேலியானோ அல்லது ஹோசே அர்க்காதியோ என்று அழைக்கப்படக் கூடாது என்று முடிவெடுத்தாள். இருந்தும் அவுரேலியானோ செகுந்தோவுக்கு முதல் பையன் பிறந்தபோது அவனுடைய விருப்பத்துக்கு எதிராக நிற்கத் துணியவில்லை.

“சரி, ஆனால் ஒரு நிபந்தனை. அவனை நான்தான் வளர்ப்பேன்” என்றாள் உர்சுலா.

அவளுக்கு ஏற்கனவே நூறு வயது தாண்டியிருந்தது. புரை படர்ந்து குருடாகும் நிலையிலிருந்தாள். எனினும் உடம்பில் தெம்பிருந்தது. குணாம்சமும் மனநிலையும் குலையாமல் இருந்தன. குடும்ப கௌரவத்தை மீண்டும் நிலைநாட்டக்கூடிய நற்குணமுள்ள மனிதனை உருவாக்க அவளைத் தவிரப் பொருத்தமானவர்கள் யாருமில்லை. உர்சுலாவின் எண்ணப்படி அவளுடைய குடும்பத்தின் வீழ்ச்சிக்கு ஏதுவாக இருந்த நான்கு துன்பங்கள் போரும் சண்டைக் கோழிகளும் கெட்டபெண்களும் அத்துமீறிய நடவடிக்கைகளும்தாம். அந்த வரிசையை பற்றிக் கேள்வியே படாத ஒருவனாக அவனை வளர்க்க அவளாலேயே முடியும். “இவன் ஒரு பாதிரியாவான்” என்று தீவிரமாக நம்பினாள். “எனக்குக் கடவுள் ஆயுளைக் கொடுப்பாரானால் அவன் போப்பாண்டவ

ராக ஆவான்." அவள் சொன்னதைக் கேட்டு எல்லாரும் படுக்கை யறையிலிருந்தபோது மட்டுமல்ல, வீட்டுக்குள் எல்லா இடத்திலுமிருந்தும் அவுரேலியானோ செகுந்தோவின் ரவுடி நண்பர்கள் சிரித்தார்கள். மோசமான ஞாபகங்களின் பரணில் தூக்கிப்போடப்பட்டிருந்த யுத்தம் ஷாம்பெயின் குப்பிகளைத் திறந்த கணத்தில் மட்டும் நினை வுக்கு வந்தது.

"போப்பாண்டவரின் ஆரோக்கியத்துக்காக" என்று அவுரேலியானோ கோப்பையை உயர்த்தினான்.

விருந்தாளிகளும் கூட்டாக உயர்த்தினார்கள். பின்னர் அவன் அக்கார்டியன் வாசித்தான். வாண வேடிக்கைகள் நடந்தன. முரசுகள் அந்த நிகழ்ச்சியை நகரம் முழுவதும் கொண்டாடின. விடியற்காலை யில் ஷாம்பெனியில் நனைந்திருந்த விருந்தாளிகள் ஆறு பசுக்களைத் தெருவிலேயே பலியிட்டு ஊர்க் காரர்களை எடுத்துக்கொள்ள அனுமதித்தார்கள். யாரும் அதைக் கௌரவக் குறைவாக எடுத்துக் கொள்ளவில்லை. அவுரேலியானோ செகுந்தோ வீட்டுப் பொறுப்பை ஏற்றுக்கொண்டது முதல் அதுபோன்ற கொண்டாட்டங்கள் சாதாரண மானவையாகியிருந்தன. அதற்குப் போப்பாண்ட்வரின் பிறப்பு போன்ற நோக்கம் எதுவும் தேவையுமில்லை. சில ஆண்டுகளில் முயலாமலே அதிர்ஷ்டத்தின் மூலமாக மட்டுமே சதுப்புப் பிரதேசத்தில் மிகப் பெரிய பணக்காரர்களில் ஒருவனாக ஆனான். அவனுடைய பிராணி களின் இயற்கைக்கு மிஞ்சிய பெருக்கத்துக்கு நன்றி. அவனுடைய பெட்டைக் குதிரைகள் மூன்று குட்டிகளாக ஈன்றன. அவனுடைய கோழிகள் ஒருநாளைக்கு இரண்டு முறை முட்டையிட்டன. அவனுடைய வளர்ப்புப் பன்றிகள் விளக்கிச் சொல்ல முடியாத வேகத்தில் சதை போட்டன. மந்திரவாதம் தவிர வேறுவிதமாக இந்த மட்டுமீறிய கற்பனைப் பெருக்கத்தை யாராலும் விவரிக்க முடியவில்லை. "இப்போதே எதையாவது சேர்த்து வை. இந்த அதிர்ஷ்டம் உன் ஆயுள் முழுக்க இருக்கப்போவதில்லை" என்று உர்சுலா தன் முரட்டுக் கொள்ளுப்பேரனிடம் சொன்னாள். ஆனால் அவுரேலியானோ செகுந்தோ அவள் சொன்னதைப் பொருட்படுத்தவில்லை. தன் நண்பர் களைக் குளிப்பாட்ட இன்னும் அதிகமான ஷாம்பெயின் குப்பிகளைத் திறந்தான். அவனுடைய வளர்ப்புப் பிராணிகள் இன்னும் அதிகமாகப் பெற்றுப் போட்டன. தன்னுடைய அதிர்ஷ்ட நட்சத்திரத்துக்குக் காரணம் தனது குணமல்ல. இயற்கையைச் சீண்டிவிடக்கூடிய தன் னுடைய வைப்பாட்டி பெத்ரா கோட்டேஸின் செல்வாக்கே என்று அவன் நம்பினான். இதுதான் தன்னுடைய அதிர்ஷ்டத்தின் தோற்றுவாய் என்று உறுதியாக நம்பியதால் பிராணிகளின் இனப்பெருக்கப் பகுதியி லிருந்து ஒருபோதும் பெத்ரோ கோட்டேஸை விலக்கிவைக்கவில்லை. திருமணம் ஆகிப் பிள்ளைகள் பிறந்த பின்னும் பெர்னாண்டாவின் சம்மதத்துடன் அவளுடன் உறவைத் தொடர்ந்திருந்தான். அவனுடைய முன்னோர்களைப் போலத் திடமானவனாகவும் பிரம்மாண்டமானவ னாகவும் இருந்தபோதும் அவர்களுக்கு இல்லாமலிருந்த வாழ்க்கையை ரசித்து வாழும் இயல்பும் மறுக்க முடியாத நகைச்சுவை உணர்வும்

அவுரேலியானோ செகுந்தோவிடம் இருந்தன. அதனால் பிராணி களைக் கவனிக்க நேரமும் இல்லாமலிருந்தது. அவனுடைய முத்திரை போடப்பட்டிருந்த எல்லா விலங்குகளுக்கும் இனப்பெருக்க நோயை ஏற்படுத்தப் பெத்ரோ கோட்டேஸைப் பிராணிகளை அடைத்து வைத் திருக்கும் தனது நிலப்பகுதியில் வெறுமனே அழைத்துச் சென்றதுதான் அவன் செய்த ஒரே காரியம்.

அவனுடைய நீண்டகால வாழ்க்கையில் நிகழ்ந்த எல்லா நல்ல விஷயங்களையும் போல அந்த மாபெரும் அதிர்ஷ்டமும் தற்செயலாகத் தான் ஆரம்பித்தது. போர் முடியும் வரை பெத்ரோ கோட்டேஸ் லாட்டரி வருமானத்திலும் அவுரேலியானோ செகுந்தோ அவ்வப்போது உர்சுலாவின் சேமிப்பிலிருந்து களவாடிக் கொண்டு வந்த பணத் திலும்தான் வாழ்க்கை நடத்தினாள். விலக்கப்பட்ட நாட்கள் உட்பட எல்லா நாள் இரவுகளிலும் ஒன்றாகப் படுத்துக்கொள்வதும் விடியும் வரை கேளிக்கைகளில் ஈடுபடுவதும் தவிர எந்தக் கவலையும் படாத விளையாட்டுத்தனமான இணையாக இருந்தார்கள். தூக்கத்தில் நடப்பவனைப் போல வீடு திரும்பும் கொள்ளுப்பேரனைப் பார்த்து "அந்தப் பெண்தான் உன்னை நாசம் பண்ணுவாள்" என்று உர்சுலா கத்துவாள். "அவள் உன்னை நன்றாகவே வசியம்செய்து வைத்திருக்கிறாள். வயிற்றுக்குள் தேரை புகுந்து வலி வந்து நீ புரண்டு உருளப் போவதைப் பார்க்கத்தானே போகிறேன்" என்பாள். தன்னை மீறிப்போயிருந்த சகோதரனின் வேட்கையைக் கண்டுபிடிக்க ஹோசே அர்க்காதியோ செகுந்தோ நீண்ட காலம் எடுத்துக்கொண்டான். அவனுக்கு அது புரியவுமில்லை. பெத்ரோ கோட்டேஸை ஒரு சாதாரணப் பெண்ணாக வும் அதைவிடப் படுக்கையில் சோம்பேறியாகவும் காதல் களியாட்டத் தில் எந்தச் சாமர்த்தியமும் இல்லாதவளாகவும்தான் நினைவில் வைத் திருந்தான். உர்சுலாவின் கூச்சலுக்கும் சகோதரனின் சீண்டலுக்கும் காது கொடுக்காமல் அவுரேலியானோ செகுந்தோ அந்தத் தருணத்தில் ஒரே ஒரு விஷயத்தைப் பற்றி மட்டுமே யோசித்துக்கொண்டிருந்தான். ஜுர வேகம் கொண்டு ஓர் இரவு முழுவதும் பெத்ரோ கோட்டேஸுடன் இருக்க, அவளுடன் சாக, அவளுக்கு மேலே கிடக்க, அவளுக்குக் கீழே கிடக்க ஒரு வீட்டைக் கண்டுபிடிக்க வேண்டும். அதைப் பராமரிக்க ஒரு வியாபாரத்தைக் கண்டுபிடிக்க வேண்டும். முதுமையின் அமைதி யான வசீகரத்தால் உந்தப்பட்டு கர்னல் அவுரேலியானோ புயேந்தியா தன்னுடைய பட்டறையை மறுபடியும் திறந்தபோது அவுரேலியானோ செகுந்தோ தங்க மீன்களை உற்பத்தி செய்யும் தொழிலில் தானும் ஈடுபடலாம் என்று நினைத்தான். கனமான உலோகத் தகடுகள், எந்த மாயையாலும் கற்பனை செய்ய முடியாத பொறுமையுடன் கர்னலின் கையில் தங்கச் செதில்களாக மாறுவதை அந்தப் புழுக்கமான அறையில் உட்கார்ந்து பார்ப்பதில் பல மணி நேரங்களைக் கழித்தான். அந்த வேலை மிகவும் கடினமானதாக அவனுக்குத் தோன்றியது. கூடவே பெத்ரோ கோட்டேஸின் நினைப்பும் தொடர்ந்து அவனை அழுத்திக்கொண்டிருந்தது. மூன்று வாரங்களுக்குப் பிறகு பட்டறையி லிருந்து காணாமல் போனான். அந்தச் சமயத்தில்தான் முயல்களை வைத்து லாட்டரி நடத்தும் திட்டம் பெத்ரோ கோட்டேஸுக்குத்

தோன்றியது. அவை படுவேகத்தில் பெற்றுத் தள்ளி வளர்ந்ததால் லாட்டரிச் சீட்டு விற்பனைக்கு அவளுக்கு நேரமே கிடைக்கவில்லை. அந்தப் பெருக்கத்தின் அபாயகரமான விகிதத்தை அவுரேலியானோ செகுந்தோ முதலில் கவனிக்கவில்லை. முயல் லாட்டரியைப் பற்றி யாரும் கேட்க விரும்பாத ஓர் இரவில் வாசல் கதவருகில் ஏதோ சத்தத்தைக் கேட்டான். "கவலைப்பட வேண்டாம். எல்லாம் அந்த முயல்கள்தாம்" என்றாள் பெத்ரோ கோட்டேஸ். அந்த விலங்குகளின் சித்திரவதை செய்யும் இரைச்சலால் அவர்களால் தூங்க முடியவில்லை. விடியற்காலையில் கதவைத் திறந்த அவுரேலியானோ செகுந்தோ வைகறையின் நீல வெளிச்சத்தில் முற்றம் முழுவதுமே முயல்களால் பாவப்பட்டது போலிருப்பதைப் பார்த்தான். உயிர் போவது போலச் சிரித்த பெத்ரோ கோட்டேஸுக்கு அவனைச் சீண்டிப் பார்க்கும் குறுகுறுப்பை அடக்க முடியவில்லை.

"எல்லாம் நேற்று இரவு பிறந்தவை" என்று சொன்னாள்.

"கடவுளே, நீ ஏன் பசு லாட்டரி நடத்தக் கூடாது?" என்றான்.

சில நாட்களுக்குப் பிறகு முற்றத்தைத் துப்புரவாக்கும் முயற்சியில் பெத்ரோ கோட்டேஸ் முயல்களைக் கொடுத்துவிட்டுப் பசுவை வாங்கினாள். அது இரண்டு மாதங்களுக்கு அப்புறம் மூன்று கன்றுகளை ஈன்றது. அப்படியாகத்தான் அதிர்ஷ்டம் ஆரம்பமானது. ஒரே இரவில் அவுரேலியானோ செகுந்தோ நிலத்துக்கும் கால்நடைகளுக்கும் சொந்தக்காரன் ஆனான். நிறைந்து வழியும் கிடங்குகளையும் பன்றிக் கொட்டிலையும் விரிவுபடுத்தக்கூட அவனுக்கு அவகாசம் இல்லாமல் போயிற்று. அந்தப் பித்துக்குளித்தனமான செல்வம் அவனைச் சிரிக்கத்தான் வைத்தது. தன்னுடைய நகைச்சுவை உணர்வை வெளிப் படுத்துவதற்காக எல்லாக் கோமாளித்தனங்களையும் செய்தான். "போதும் பசுக்களே, வாழ்க்கை மிகவும் குறுகியது" என்று கத்துவான். திருடிக் கொண்டிருக்கிறானா, வழிப்பறிக் கொள்ளைக்காரனாகிவிட்டானா, என்னென்ன இக்கட்டுகளில் அவன் அகப்பட்டிருக்கிறானோ என்று உர்சுலா குழம்பினாள். நுரையைத் தலையில் கவிழ்த்துக் கொள்வதற் காக மட்டுமே அவன் ஷாம்பெயின் குப்பிகளைத் திறப்பதைப் பலமுறை பார்த்துப் பணத்தைப் பாழாக்குகிறான் என்று அவள் கத்தினாள்; ஏசினாள். அது அவனுக்கு எரிச்சலூட்டியது. ஒருநாள் மகிழ்ச்சியான மனநிலையில் விழித்தெழுந்த அவுரேலியானோ செகுந்தோ பெட்டி நிறையப் பணத்துடனும் பசை நிறைந்த வாளியுடனும் பிரஷ்ஷுடனும் வந்தான். பிரான்சிஸ்கோ என்ற நாயகனின் பாடல்களை மூச்சிரைக்கப் பாடிக்கொண்டே ஒரு பெஸோ நாணயத் தாள்களை வீட்டின் உள்ளும் வெளியும் மேலும் கீழுமாக ஒட்டினான். பியானோ கொண்டுவந்து வைத்தபோது வெள்ளையடிக்கப்பட்ட அந்த வீடு இப்போது ஒரு மசூதியைப் போல விநோதத் தோற்றத்தில் இருந்தது. உர்சுலாவின் அதிர்ச்சி, குடும்பத்தினரின் பரவசம், அந்த ஊதாரித்தனத்தின் உச்ச கட்டத்தை வேடிக்கை பார்க்கத் தெருவில் கூடிய மக்களின் குதூகலம் இவற்றுக்கிடையே அவுரேலியானோ செகுந்தோ குளியலறைகள், படுக்கையறைகள் உட்பட வீட்டின் முன் பக்கத்திலிருந்து சமையலறை

வரை எல்லா இடத்திலும் ஒட்டி முடித்தான். மிஞ்சிய நாணயத் தாள்களை முற்றத்தில் வீசியெறிந்தான்.

"இனி, இந்த வீட்டில் யாரும் பணத்தைப் பற்றி என்னோடு பேசமாட்டீர்கள் என்று நம்புகிறேன்" என்று கடைசியாகச் சொன்னான்.

நடந்தது அதுதான். சுண்ணாம்புப் படிவங்களில் ஒட்டியிருந்த நாணயத் தாள்களை உர்சுலா பிரித்து எடுத்தாள். வீட்டுக்கு மறுபடியும் வெள்ளையடிக்கப்பட்டது. "அன்பான கடவுளே, இந்த நகரத்தைக் கண்டுபிடித்தபோது இருந்தது போல எங்களை மீண்டும் ஏழையாக்கி விடும். அதன் மூலம் இந்த ஊதாரித்தனத்துக்காக அடுத்த பிறவியில் கணக்குக் கேட்காமல் இருப்பீர் அல்லவா?" என்று மன்றாடினாள். அவளுடைய பிரார்த்தனைகளுக்கு எதிர்மறையாகப் பதிலளிக்கப்பட்டது. நாணயத் தாள்களை உரித்தெடுத்துக் கொண்டிருந்த வேலைக்காரர் களில் ஒருவன், போரின் கடைசி வருடங்களில் யாரோ அந்த வீட்டில் விட்டுச் சென்றிருந்த புனித சூசையப்பரின் களிமண் சிலைமீது மோதிக்கொண்டான். உள்ளீடற்ற அந்தச் சிலை தரையில் விழுந்து துண்டுதுண்டாக உடைந்தது. அதற்குள் தங்கக் காசுகள் நிரப்பப்பட் டிருந்தன. "மூன்று ஆட்கள் அதை இங்கே கொண்டு வந்து வைத்தார்கள்" அமரந்தா விளக்கினாள். "மழை நிற்கும் வரை அதை இங்கே வைக்கட்டுமா என்று கேட்டார்கள். நான்தான் அதை யாரும் தட்டிவிடக் கூடாது என்று அந்த மூலையில் வைக்கச் சொன்னேன். மிக ஜாக்கிரதையாகத் தான் அங்கே வைத்தார்கள். அதைத் தேடி மறுபடியும் அவர்கள் வரவில்லை. அதனால் அது வைத்த இடத்திலேயே இருந்திருக்கிறது." பின்னர் உர்சுலா அதன்மீது மெழுகுவர்த்திகளை ஏற்றிவைத்து விழுந்து வணங்கினாள். வணங்க நினைத்தது புனிதரைத்தான் எனினும் அவள் வணங்கியது நான்கு மூட்டைத் தங்கத்தை. தன்னுடைய அனிச்சையான புறச்சமய வழிபாடு பற்றிக் காலங்கடந்து உணர்ந்ததும் அவளை மேலும் வருத்தப்படுத்தியது. அந்த நாணயக் குவியல்மீது காறி உமிழ்ந் தாள். அந்த மூன்று அநாமதேய ஆசாமிகள் அதைத் திருப்பிக் கேட்டு வருவார்கள் என்ற நம்பிக்கையுடன் மூன்று கித்தான் பைகளில் போட்டு ரகசியமான ஓர் இடத்தில் புதைத்து வைத்தாள். நீண்ட காலத்துக்குப் பின்னர் முதுமையின் சிரமமான வருடங்களிலும் வீட்டைக் கடந்து செல்லும் அநேகப் பயணிகளின் உரையாடலில் குறுக்கிட்டுப் போர்க்காலத்தில் மழை நிற்கும்வரை இருக்கட்டும் என்று புனித சூசையின் களிமண் சிலையை விட்டுப் போனார்களா என்று உர்சுலா விசாரித்துக்கொண்டிருந்தாள்.

உர்சுலாவுக்குக் கலக்கத்தைக் கொடுத்த அதுபோன்ற நிகழ்ச்சிகள் அந்தக் காலத்தில் சாதாரணமானவை. மகோந்தா அளப்பரிய செல்வத் தில் மூழ்கியிருந்தது. நகரத்தைக் கண்டுபிடித்த மூதாதையர்களின் களிமண் வீடுகள் இடிக்கப்பட்டு மரக் கதவும், ஜன்னல்களும் சிமெண்டுத் தரையுமுள்ள வீடுகள் கட்டப்பட்டன. அவை பிற்பகல் இரண்டு மணியின் மூச்சுத் திணற வைக்கும் வெயிலைச் சகித்துக்கொள்ளச் செய்வதாக இருந்தன. ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவின் புராதன கிராமத்தில் அப்போது எஞ்சியிருந்தவை புழுதி படிந்த வாதுமை

மரங்களும் மோசமான சூழ்நிலையிலும் எதிர்த்து நிற்க விதிக்கப்பட்டிருந்த தெளிந்த போக்கு நீர் ஓடும் ஆறும் மட்டுமே. வரலாற்றுக்கு முற்பட்ட யுகத்தைச் சேர்ந்த அதன் கற்கள் ஹோசே அர்க்காதியோ செகுந்தோவின் மூர்க்கமான சம்மட்டிகளால் நொறுக்கப்பட்டிருந்தன. படகுப் போக்குவரத்துக்கான நீர்த்தடத்தை உருவாக்கத் தயாராக இருந்தான். அவனுடைய கொள்ளுப்பாட்டனின் கனவுகளுடன் ஒப்பிட்டால் கற்பாங்கான படுகையும் ஏராளமான நீரோட்டங்களும் நிறைந்த ஆற்றில் மகோந்தாவிலிருந்து கடலுக்குப் பயணம் செய்வது ஒரு பைத்தியக்காரக் கனவு. ஆனால் ஹோசே அர்க்காதியோ செகுந்தோவுக்கு அது முன்னெப்போதும் இல்லாத துணிச்சலின் விளைவாக இருந்தது. எனவே அந்தத் திட்டத்தில் பிடிவாதமாக இருந்தான். அதுவரை, பெத்ரோ கோட்டேஸுடன் ஈடுபாடு கொண்ட ஆபத்தான சாகசத்தைத் தவிர, அவனுக்குக் கற்பனை ஆற்றல் இருக்கிறது என்பதற்கான எந்த அறிகுறியும் தென்பட்டதில்லை. அந்தக் குடும்பம் தனது வரலாற்றில் உருவாக்கியவர்களிலேயே அவன்தான் சாதுவான உதாரணமென்றும் கோழிச் சண்டையில் எடுபிடியாக நிற்கக்கூட முடியாதவன் என்றும் உர்சுலா எண்ணியிருந்தாள். போர் நடந்து கொண்டிருந்த காலத்தில் கடலிலிருந்து எட்டு மைல் தொலைவில் கருகிப்போன சட்டங்களுடன் நின்ற ஸ்பானியக் கப்பலைப் பார்த்த கதையைக் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா அவனிடம் சொன்னார். பலருக்கும் பல ஆண்டுகளாக ஓர் அற்புதக் கதையாக மட்டுமே இருந்த அந்தக் கதை ஹோசே அர்க்காதியோ செகுந்தோவுக்கு ஒரு வெளிப்படுத்தலாக இருந்தது. தன்னுடைய சண்டைச் சேவல்களையெல்லாம் உச்ச விலைக்கு ஏலம் விட்டான். ஆட்களை வேலைக்கு எடுத்தான். கருவிகள் வாங்கினான். கற்களை உடைக்கும் ஆயாசமான வேலையை ஆரம்பித்தான். கால்வாய்களை வெட்டினான். நீரோட்டங்களைத் தடுத்தான். அருவிகளைக் கட்டுப்படுத்தினான். "எனக்கு இதெல்லாம் மனப்பாடமாகத் தெரியும்" என்று கத்தினாள் உர்சுலா. "காலம் பின்னோக்கித் திரும்புகிறது. நாம் தொடக்கக் காலத்துக்குத் திரும்பப் போகிறோம்" என்றாள். ஆற்றினூடாகப் பயணம் செய்ய முடியும் என்று நினைத்தபோது ஹோசே அர்க்காதியோ செகுந்தோ விரிவான திட்ட அறிக்கையைக் கொடுத்தான். அடுத்தவன் அதைச் செயல்படுத்துவதற்குத் தேவையான பணத்தைக் கொடுத்தான். பின்னர் நீண்ட காலம் அவன் மறைந்து போனான். படகு வாங்கும் திட்டமெல்லாம் சகோதரனிடமிருந்து பணத்தைப் பறிப்பதற்கான தந்திரம் என்று சொல்லப்பட்டுக் கொண்டிருந்தபோது ஒரு விந்தையான வாகனம் நகரத்தை நோக்கி வந்துகொண்டிருக்கும் செய்தி பரவியது. ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவின் விரிவான பயணத்தைப் பற்றி மறந்துபோயிருந்த மகோந்தாவாசிகள் ஆற்றங்கரைக்கு ஓடிவந்து முதலும் கடைசியுமாக அந்த நகரத்தில் கரையொதுங்கிய படகைக் கண்கள் பிதுங்கப் பார்த்தார்கள். அது படகல்ல. நீளமான தெப்பம். நீளமான கயிற்றால் கட்டப்பட்ட அதை இருபது ஆட்கள் கரையோரமாகவே நடந்து இழுத்து வந்தார்கள். ஹோசே அர்க்காதியோ செகுந்தோ அதன் முகப்பில் கண்களில் நிறைவு மின்ன நின்று அந்தக் கடினமான

பணியை நடத்திக்கொண்டிருந்தான். தகிக்கும் சூரியனிடமிருந்து பாதுகாத்துக் கொள்வதற்காகப் பல வண்ணக் குடைகள் பிடித்துக் கொண்டும் கழுத்தில் நேர்த்தியான பட்டுக் கைக்குட்டைகளைக் கட்டிக்கொண்டும் முகத்தில் வண்ண வண்ணமான களிம்புகள் பூசிக் கொண்டும் தலையில் பூக்களைச் சூடிக்கொண்டும் கைகளில் தங்கப் பாம்பு வளையல்கள் அணிந்துகொண்டும் பற்களில் வைரங்களைப் பதித்துக்கொண்டும் வந்த பெண்களின் பெருங்கூட்டம் அங்கே இருந்தது. ஹோரசே அர்க்காதியோ செகுந்தோவால் மகோந்தாவுக்குக் கொண்டுவர முடிந்த ஒரே நீர்வழி வாகனம் அந்த நீண்ட தெப்பம் மட்டுமாக இருந்தது. ஆனால் அவன் ஒருபோதும் தன் முயற்சியில் ஏற்பட்ட தோல்வியை ஒப்புக்கொள்ளவே இல்லை. மாறாகத் தனது செயலை மனத் திண்மையின் வெற்றியாகப் பிரகடனப் படுத்திக்கொண்டான். துல்லியமான கணக்கு விவரங்களைச் சகோதரனிடம் ஒப்படைத்தான். சீக்கிரமே வழக்கமான சேவல் சண்டை நடைமுறைகளுக்குத் திரும்பி னான். அந்தத் துரதிர்ஷ்டமான முயற்சியில் மிஞ்சியது பிரான்சிலிருந்து அழைத்து வரப்பட்ட அந்தப் பெண்கள் ஏற்படுத்திய மாற்றம்தான். அவர்களுடைய மகத்தான கலைத் திறமைகள் சம்பிரதாயமான காதல் நடைமுறைகளை மாற்றின. அவர்களுடைய சமூக உணர்வு கதாரினோ வின் புராதன இடத்தை ஒழித்தது. தெருக்களை ஜப்பானிய விளக்கு களும் சின்ன மௌத் ஆர்கன்களும் விற்பனையாகும் சந்தையாக மாற்றியது. பிரம்மாண்டமான கலை விழாவையும் அவர்கள்தாம் தொடங்கி வைத்தார்கள். மூன்று நாட்கள் மகோந்தாவைக் கிறக்கத்தில் ஆழ்த்திய அந்த விழாவின் நீடித்த பயன் அவுரேலியானோ செகுந்தோ வுக்கு பெர்னாண்டா தெல் கார்பியோவைச் சந்திக்கும் வாய்ப்புக் கிடைத்ததுதான்.

அழகி ரெமேதியோஸ் அரசியாகப் பிரகடனப்படுத்தப்பட்டாள். தன்னுடைய கொள்ளுப் பேத்தியின் ஆர்ப்பாட்டமான அழகால் நடுங்கிக்கொண்டிருந்த உர்சுலாவால் அந்தத் தேர்வைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. அதுவரை, அமரந்தாவுடன் தேவாலயத்துக்குச் செல்வது தவிர அவளைத் தெருவில் இறங்கவிடாமல் பார்த்துக் கொள்வதில் அவள் வெற்றி அடைந்திருந்தாள். அந்தச் சமயங்களில் அவள் முகத்தை ஒரு கறுப்புச் சால்வையால் மறைத்துவிடுவாள். கதாரினோவின் கடையில் பாதிரிகளின் வேடம் கட்டிக்கொண்டு புனிதத்தை அவமதிக் கும் பிரார்த்தனைகளைச் செய்யும் அவிசுவாசிகள்கூடச் சதுப்பு நிலப் பகுதியெங்கும் அதிர்ச்சியூட்டும் பரவசத்துடன் பேசப்படும் தோற்றமுள்ள அழகி ரெமேதியோஸின் முகத்தை ஒருகணம் பார்த்து விட வேண்டுமென்ற நோக்கத்தில் தேவாலயத்துக்குச் செல்வார்கள். அப்படிச் செய்து பார்க்க முடிந்ததற்கு முன்பே அவளைப் பார்க்காம லிருந்திருந்தார்கள் என்றால் அது அவர்களுக்கு நல்லதாக இருந்திருக் கும். ஏனெனில் அதன் பிறகு பலரும் நிம்மதியாக உறங்கும் பழக்கத்தை இழந்திருந்தார்கள். அப்படிப் பார்த்த ஒரு வெளிநாட்டுக்காரன் என்றென்றைக்குமாக நிம்மதி இழந்து துயரத்திலும் வேதனையிலும் மூழ்கித் தண்டவாளத்தில் படுத்துத் தூங்கியபோது துண்டு துண்டாகச் சிதைக்கப்பட்டான். தேவாலயத்தில் தென்பட்ட நொடியில் அவன்

பச்சை வெல்வெட் சூட்டும் எம்பிராய்டரி செய்த கோட்டும் அணிந்திருந்தான். அவன் தொலை தூரத்திலிருந்து ஒருவேளை நாட்டுக்கு வெளியே ஏதாவது தூரமான நகரத்திலிருந்து வந்திருக்கலாம் என்பதில் யாருக்கும் சந்தேகம் வரவில்லை. அந்த நொடியிலேயே அழகி ரெமேதியோஸின் மாயக் கவர்ச்சியால் ஈர்க்கப்பட்டான். அழகனாக இருந்தான். கவர்ச்சியானவனாகவும் கம்பீரமானவனாகவும் இருந்தான். அந்தத் தோற்றத்தில் அவனருகில் இருக்கக்கூடப் பியத்ரோ கிரெஸ்பிக்கு அருகதையில்லை. பொறாமை மிளிரும் புன்னகையுடன் பெண்கள் கிசுகிசுத்துக் கொண்டார்கள். அவன்தான் முகத்தை மறைத்துக்கொண்டிருக்க வேண்டும். மகோந்தாவில் யாருடனும் அவன் பேசவில்லை. தேவதைக் கதைகளில் வரும் இளவரசனைப் போல வெள்ளிக் கால் கொளுவிகள் பூட்டி, வெல்வெட் போர்வை போர்த்திய குதிரை மேல் சவாரிசெய்து ஞாயிற்றுக்கிழமை விடிகாலையில் தோன்றுவான். திருப்பலி முடிந்ததும் நகரத்தை விட்டுப் போவான்.

தேவாலயத்துக்குள் முதல் நாள் அவன் தென்பட்டபோதே ஒவ்வொருவரும் முடிவு செய்துகொண்டார்கள். அவனுக்கும் அழகி ரெமேதியோஸுக்கும் இடையில் ஒரு மௌன யுத்தம் நடக்கிறது என்றும் காதலில் மட்டுமல்ல மரணத்திலும் சென்று முடியும் ஒரு ரகசிய உடன்படிக்கையோ திரும்பப்பெற முடியாத சவாலோ அவர்களுக்கிடையில் நிலவுகிறது என்று நினைத்தார்கள். அவனுடைய தோற்றத்தின் வலிமை அப்படிப்பட்டதாக இருந்தது. ஆறாவது ஞாயிற்றுக்கிழமை அந்தக் கனவான் கையில் ஒரு மஞ்சள் ரோஜாப் பூவுடன் வந்தான். எப்போதும் செய்வது போலவே நின்றுகொண்டு பூசையில் பங்கெடுத்தான். பூசை முடிந்ததும் அழகி ரெமேதியோஸின் முன்னால் போய் நின்று அந்த ஒற்றை ரோஜாவை அவளிடம் நீட்டினான். அந்த வந்தனத்துக்குத் தயாராக இருந்தது போல அவள் இயல்பான சைகைகளுடன் அதை ஏற்றுக்கொண்டாள். பின்னர் முகத்தைத் திறந்து புன்னகையுடன் நன்றி தெரிவித்தாள். அவள் செய்தது அவ்வளவுதான். அந்தக் கனவானுக்கு மட்டுமல்ல, அவளைப் பார்ப்பது என்ற துரதிர்ஷ்டச் சலுகை வாய்த்த எல்லா ஆண்களுக்கும் அது ஒரு நிரந்தரக் கணமாக இருந்தது.

அன்று முதல் அந்தக் கனவான் அழகி ரெமேதியோஸின் ஜன்னலருகில் ஓர் இசைக் குழுவை அமர்த்தி இசைக்க வைத்தான். சில சமயம் பொழுது புலரும் வரைக்கும். அவன்மீது பரிவு தோன்றியது அவுரேலியானோ செகுந்தோவுக்கு மட்டும்தான். அவனுடைய விடா முயற்சியைத் தடுக்கவும் முயன்றான். "இனியும் உன் பொழுதை விரயம் செய்யாதே. இந்த வீட்டுப் பெண்கள் கோவேறுக் கழுதையை விடவும் மட்டமானவர்கள்" என்று ஒருநாள் இரவு சொன்னான். அவனை நண்பனாக்கிக் கொண்டான். ஷாம்பெயினில் மூழ்க அழைத்தான். தன்னுடைய குடும்பத்தைச் சேர்ந்த பெண்களின் மனம் கல்லால் ஆனது என்று புரியவைக்க முயன்றான். ஆனால் அவன் தன்னுடைய பிடிவாதத்தைத் தளர்த்தவில்லை. ஓயாத சங்கீத இரவுகளால் எரிச்சலடைந்த கர்னல் அவுரேலியானோ புயேந்தியா அவனுடைய காதலைத்

துப்பாக்கிக் குண்டுகளால் சரி பண்ணுவதாக மிரட்டினார். சொந்த ஒழுக்கக் குலைவைத் தவிர வேறு எதுவும் அவனைத் தடுக்கவில்லை. நேர்த்தியாக உடையணிந்த சுத்தமான ஆளாக இருந்தவன் கிழிந்த உடை மாட்டிக்கொண்டு அழுக்காகத் திரிபவனாக மாறினான். அவனுடைய பூர்வீகத்தைப் பற்றி யாருக்கும் தெரியாமலிருந்த போதும் அவன் அதிகாரத்தையும் செல்வத்தையும் உதறிவிட்டு வந்திருக்கிறான் என்ற வதந்தி சொல்லப்பட்டது. அவன் சண்டைக்காரனும் குடியனுமாக ஆனான். கதாரினோவின் கடையில் கிடந்து சொந்த மலத்திலேயே புரண்டு எழுந்தான். நாடகத்தின் துக்ககரமான பகுதி என்னவென்றால் அவன் ஓர் இளவரசனைப் போல தேவாலயத்துக்குள் தென்பட்டபோது அழகி ரெமேதியோஸ் அவனைக் கவனிக்கவே இல்லை என்பதுதான். அவள் அந்த மஞ்சள் ரோஜாவை வாங்கிக்கொண்டது எந்தத் தீய எண்ணமும் இல்லாமல்தான். அதைவிட ஆச்சரியத்துடனும் அந்தச் செய்கையின் ஆர்ப்பாட்டத்தைப் பார்த்தும்தான். அவள் முகத் திரையை உயர்த்தியதுகூட அவனுடைய முகத்தைச் சரியாகப் பார்ப்பதற்குத் தானே தவிர தன்னுடைய் முகத்தைக் காட்டுவதற்கு அல்ல.

உண்மையில் அழகி ரெமேதியோஸ் இந்த உலகத்தின் படைப்பே அல்ல. பூப்படைந்த பின்னும்கூட சாந்தா சோபியா தெ லா பியாதெத் அவளைக் குளிப்பாட்டவும் உடையணிவிக்கவும் வேண்டியிருந்தது. தன்னைத்தானே கவனித்துக்கொள்ளத் தொடங்கிய பின்பும் தன்னுடைய மலத்தில் தோய்த்த குச்சியால் சுவர்களில் சிறு விலங்குகளின் படங்களை வரைந்துவிடுவாள் என்பதால் அவள் மீது ஒரு கண்ணை வைத்திருப்பது அவசியமாக இருந்தது. படிக்கவும் எழுதவும் தெரியாமல் இருபது வயதை எட்டினாள். உணவு மேஜையில் வெள்ளி முள் கரண்டியையும் கத்தியையும் பயன்படுத்தத் தெரியாமலிருந்தாள். அவளுடைய இயற்கைக் குணம் மரபான எல்லா வழக்கங்களையும் நிராகரித்ததனால் வீட்டுக்குள் நிர்வாணமாகவே திரிந்தாள். பாதுகாப்புப் பிரிவைச் சேர்ந்த அந்த இளம் கமாண்டர் தன்னுடைய காதலை வெளிப்படுத்தியபோது அதை நிராகரித்ததன் காரணம் அவனுடைய அப்பாவித்தனம் அவளைத் திகைப்படையச் செய்ததுதான். "அவன் எவ்வளவு அப்பாவியாக இருக்கிறான், பார்" என்று அமரந்தாவிடம் சொன்னாள். "நான் என்னமோ வயிற்று வலிக்காரி என்பதுபோல என்னால்தான் அவன் செத்துக்கொண்டிருப்பதாகச் சொல்கிறான்" என்றாள். அவளுடைய ஜன்னல் அருகே அவன் செத்துக் கிடந்ததைப் பார்த்ததும் அழகி ரெமேதியோஸ் தன்னுடைய முதல் எண்ணத்தையே உறுதிப்படுத்தினாள்.

"பார், அவன் சரியான அப்பாவிதான்" என்றாள்.

ஏதோ ஊடுருவும் தெளிவு பொருட்களின் உருவத்துக்கு அப்பாலிருக்கும் உண்மையைக் கண்டடைய அவளை அனுமதித்திருந்தது போலத் தோன்றியது. கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் பார்வையும் அதுவாகத்தான் இருந்தது. பொதுவாக நம்பப்பட்டது போல அழகி ரெமேதியோஸ் மூளை வளர்ச்சி குன்றியவள் அல்ல. முற்றிலும் அதற்கு மாறானவள். "இருபது ஆண்டுப் போருக்குப் பிறகு திரும்பி வந்தது போல இருக்கிறாள்" என்பார். தன் பங்குக்கு உர்சுலாவும்

குடும்பத்துக்கு அசாதாரணமான பரிசுத்தமுள்ள ஜீவனை அளித்ததற் காகக் கடவுளுக்கு நன்றி சொன்னாள். அதே சமயம் அவளுடைய அழகு தொந்தரவு செய்தது. அது அவளுக்கு இயல்புக்கு முரணானது என்று உர்சுலா நினைத்தாள். வெகுளித்தனத்தின் மையத்தில் சாத்தா னால் வைக்கப்பட்ட பொறி என்று எண்ணினாள். அந்தக் காரணத்தி னாலேயே அவளை உலகத்திடமிருந்து விலக்கி வைத்தாள். உலகியல் தூண்டுதல்கள் எல்லாவற்றிலிருந்தும் பாதுகாத்தாள். தாயின் கருப்பை யில் கிடந்த காலம் முதலே அழகி ரெமேதியோஸ் எந்தத் தொற்றுக்கும் ஆட்படாதவள் என்று உர்சுலாவுக்குத் தெரிந்திருக்கவில்லை. கலை விழாக் கோலாகலத்தின் அழகு ராணியாக அவளைத் தேர்ந்தெடுக்கப் போவது உர்சுலாவின் மண்டைக்குள் நுழையவில்லை. புலியைப் போல மாறுவேடம் அணிந்த விந்தையில் பரவசமடைந்திருந்த அவுரேலியானோ செகுந்தோ கலை விழா அவள் சொல்வது போல அவிசுவாசிகளின் திருவிழா அல்ல; அது ஒரு கத்தோலிக்க மரபுதான் என்று உர்சுலாவை உணர வைப்பதற்காக அருட் தந்தை அந்தோனியோ இசபெல்லை வீட்டுக்கு அழைத்து வந்தான். கடைசியில் விருப்ப மில்லாமல் முடிசூட்டு விழாவுக்கு இசைந்தாள்.

அழகி ரெமேதியோஸ் கலைவிழாவின் அரசியாகப் போகிறாள் என்ற செய்தி சில மணி நேரங்களுக்குள்ளேயே சதுப்பு நிலப் பிரதேசத் தின் எல்லைகளைத் தாண்டி அவளுடைய அழகின் மகத்துவம் பற்றித் தெரியாத தொலைதூர இடங்களுக்கும் போய்ச் சேர்ந்தது. அவளுடைய பெயரின் கடைசிப் பகுதியைப் பற்றி யோசித்தவர்கள் பதற்றத்தைத் தூண்டிவிட்டார்கள். அந்தப் பதற்றம் ஆதாரமில்லாதது. அந்த நாட் களில் யாரையும் துன்புறுத்தாத ஒருவர் இருப்பாரென்றால் அது முதுமையடைந்த விரக்தியுற்ற கர்னல் அவுரேலியானோ புயேந்தியா மட்டுமே. நாட்டு நடப்புடனான எல்லாத் தொடர்புகளையும் அவர் மெல்ல மெல்ல இழந்து கொண்டிருந்தார். தன்னுடைய பட்டறையி லேயே அடைந்து கிடந்தார், வெளியுலகத்துடனான தொடர்பு அவருடைய தங்க மீன் வியாபாரமாக இருந்தது. சமாதான காலத்தில் அவருடைய வீட்டுக்குக் காவல் நின்றிருந்தவர்களில் ஒரு சிப்பாய் சதுப்பு நிலக் கிராமங்களில் அந்த மீன்களைக் கொண்டுபோய் விற்று நாணயங்களுடனும் செய்திகளுடனும் திரும்பினான். அப்படியாகப் பழைமைவாத அரசாங்கம், அவர் சொல்வதுபடி மிதவாதிகளின் ஆதரவுடன், காலண்டரைத் திருத்தியது. அதன் மூலம் ஒவ்வொரு அதிபரும் நூறு ஆண்டுகள் ஆட்சியிலிருக்கலாம். திருச்சபையுடன் செய்துகொண்ட உடன்பாட்டிற்கு ஏற்பக் கடைசியில் ரோம் நகரத்தி லிருந்து போப்பாண்டவரின் பிரதிநிதி ஒருவர் வைரக் கிரீடத்துடனும் அசல் தங்கச் சிம்மாசனத்துடனும் வந்து சேர்ந்தார். மிதவாதக் கட்சி அமைச்சர்களும் அவருடைய மோதிரத்தை முத்தமிடுவது போல முழந்தாளில் நின்று புகைப்படமெடுத்துக் கொண்டார்கள். தலைநகரத் தின் வழியாகச் சென்ற ஸ்பானிய நாடகக் குழுவின் முக்கிய நடிகை முகமூடிக் கொள்ளையர்களால் கடத்தப்பட்டாள். மறுநாள், ஞாயிற்றுக் கிழமை குடியரசு அதிபரின் கோடைக்கால மாளிகையில் நிர்வாணமாக நடனமாடினாள். "என்னிடம் அரசியல் பேச வேண்டாம்" என்று

சிப்பாயிடம் கர்னல் சொன்னார். "நம்முடைய வேலை மீன் விற்பது" என்றார். நாட்டு நடப்பைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டாம் என்று அவர் இருப்பதன் காரணம் பட்டறையில் உட்கார்ந்து பணத்தைப் பெருக்கிக்கொண்டிருப்பதுதான் என்ற வதந்தி பரவியது. அது காதில் விழுந்ததும் உர்சுலா சிரித்தாள். அபாரமான நடைமுறை ஞானம் கொண்ட அவளுக்கு கர்னலின் வியாபாரம் புரியவில்லை. தங்க மீன்களைக் கொடுத்துத் தங்க நாணயங்களைப் பெற்றுக்கொள்கிறார். பிறகு அந்தத் தங்க நாணயங்களையே சின்ன மீன்களாக மாற்றுகிறார். மொத்தத்தில் மீன்களை நாணயங்களாகவும் மீண்டும் நாணயங்களை மீன்களாகவும் மாற்றிக்கொண்டே இருக்க வேண்டிய ஒரு நச்சு வட்டத்தை நிறைவு செய்வதற்காகவே விற்றவற்றைக் காட்டிலும் அதிகமாக உற்பத்தி செய்யும் கடின உழைப்பில் ஈடுபட்டிருந்தார். உண்மையில், அவருடைய விருப்பம் வியாபாரத்தில் அல்ல; வேலையில்தான் இருந்தது. செதில்களை இணைக்கவும் கண்களில் நுண்ணிய கெம்புக் கற்களைப் பதிக்கவும் செவுள்களை மெருகேற்றவும் துடுப்புகளைப் பொருத்தவும் மிகுந்த கவனம் தேவைப்பட்டது. அதனால் போர் கொடுத்த ஏமாற்றத்தைப் பற்றி யோசிக்க ஒரு சின்ன வெற்று விநாடிகூட இல்லாமலிருந்தது.

அவரது கைவினையின் நுட்பத்துக்குத் தேவையான ஆழ்ந்த கவனம் அவரை உறிஞ்சியெடுப்பதாக இருந்தது. மொத்த யுத்த கால வருடங்களில் அடைந்ததைவிட மிக விரைவாக முதுமையடைந்தார். ஒரே நிலையில் இருந்து முதுகுத்தண்டு வளைந்தது. நெருக்கத்தில் வேலை செய்து கண்பார்வை மங்கியது. எனினும் அந்த ஓய்வற்ற கவனம் அவருக்கு ஆத்ம நிறைவைப் பரிசளித்தது. போர் தொடர்பான காரியங்களில் அவர் கடைசியாக அக்கறை காட்டியதாகத் தென்பட்டது, இரண்டு கட்சிகளும் வாழ்நாள் ஓய்வூதியத்துக்கான இசைவைப் பெற அவருடைய ஆதரவை நாடி வந்தபோதுதான். அது ஏற்கனவே உறுதியளிக்கப்பட்டிருந்தது. எப்போதும் நடைமுறைப்படுத்தப்படாமலிருந்தது. "அதை மறந்துவிடுங்கள்" என்று அவர்களிடம் சொன்னார். "நான் இறந்து போகும் நாள்வரை ஓய்வூதியத்துக்காகக் காத்திருந்து வதைபடுவதிலிருந்து தப்பவே அதை வேண்டாம் என்று மறுத்ததை நீங்களும் பார்த்திருக்கிறீர்களே" என்றார். ஆரம்பத்தில் கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் சாயங்காலப் பொழுதில் அவரைப் பார்க்க வருவான். இருவரும் தெருவைப் பார்த்த கதவருகில் உட்கார்ந்து கடந்த காலத்தைப் பற்றிப் பேசுவார்கள். ஆனால் அமரந்தாவுக்கு அவனைப் பார்த்ததும் எழும் நினைவுகளையும் அவனையும் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. வழுக்கை விழுந்து அகால முதுமையின் பாதாளத்தில் ஆழ்ந்து போய்விட்ட அவனை கேலிப் பேச்சுகளால் வதைத்தாள். அதன் பின்னர் முக்கியமான சந்தர்ப்பங்களில் மட்டும் வந்து போனான். பின்னர் பக்கவாதத்தால் பீடிக்கப்பட்டுத் தென்படாமல் போனான். அமைதியாக, மௌனமாக, புதிய சக்தி அந்த வீட்டைக் குலுக்கிக்கொண்டிருப்பதை உணராமல் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா நிம்மதியான முதுமை என்பது தனிமையுடன் செய்து கொள்ளும் மதிப்புக்குரிய ஒப்பந்தம் என்பதை மட்டுமே புரிந்துகொண்

டிருந்தார். அரைகுறையான தூக்கத்துக்குப் பின்பு காலை ஐந்து மணிக்கெல்லாம் விழிப்பார். சமையலறையில் நின்று வழக்கமான ஒரு குவளை வறக்காப்பியைக் குடிப்பார். நாள் முழுக்கப் பட்டறையில் அடைந்து கிடப்பார். மாலை நான்கு மணிக்கு ஒரு முக்காலியை இழுத்துக்கொண்டு ரோஜாப் புதர்களில் மின்னும் மலர்த் தீயையோ அந்திப் பொழுதின் பளபளப்பையோ அமரந்தாவின் விடாப்பிடியான தொணதொணப்பையோ கவனிக்காமல் முற்றத்தில் நடப்பார். அமரந்தாவின் சோகம் அவளைக் கொதிக்கும் பானை போலச் சத்தம் எழுப்ப வைத்திருந்தது. நிச்சயமாக மாலைப் பொழுதில் அந்த ஓசை கவனத்தை ஈர்க்கக்கூடியதுதான். தெருவைப் பார்த்த வாசற் கதவருகே கொசுக்கள் அனுமதிக்கும் வரை உட்காந்திருப்பார். ஒரு முறை, யாரோ ஒருவன் அவருடைய தனிமையைக் குலைக்கப் பார்த்தான்.

தெருவில் போய்க்கொண்டே "எப்படி இருக்கிறீர்கள் கர்னல்?" என்று சும்மா கேட்டான்.

"என்னுடைய சவ ஊர்வலம் இந்த வழியாகப் போவதைப் பார்க்க இதோ காத்துக்கொண்டிருக்கிறேன்" என்று பதிலளித்தார்.

அப்படியாகக் குடும்பத்தின் பெயர் மறுபடியும் பொது விளம்பரம் பெறுவதற்கும் அழகி ரெமேதியோஸின் முடிசூட்டு விழாவுக்கும் தொடர்பு இருக்கிறது என்ற வதந்தி ஏற்படுத்திய பதற்றத்துக்கு ஆதார மில்லாமல் போனது. பலர் அதுபோல எண்ணவில்லை. வரவிருக்கும் துயரத்தைப் பற்றி அறியாத நகரத்தின் மக்கள் கூட்டம் கோலாகல ஆரவாரத்துடன் முக்கிய சதுக்கத்தை நோக்கித் திரண்டது. களி விழா அதன் உச்சகட்ட உன்மத்த நிலையை அடைந்திருந்தது. கடைசி யாகத் தான் கனவு கண்டது போலப் புலிவேடம் அணிய முடிந்ததில் அவுரேலியானோ செகுந்தோ நிறைவடைந்தான். தொண்டை அடைக்கு மளவுக்கு உறுமிக்கொண்டு காட்டுத்தனமான கூட்டத்தோடு நடந்தான். அதே சமயம் சதுப்பு நிலம் தொடங்குமிடத்திலுள்ள பாதையில் ஏராளமான ஆட்கள் கற்பனை செய்தே பார்க்க முடியாத மிக வசீகரமான பெண்ணை ஒரு தங்கப் பல்லக்கில் சுமந்து அணிவகுத்து வந்தார்கள். மரகதக் கற்கள் பதித்த மகுடமும் வெண் மயிர்த் தொப்பி யும் அணிந்த அந்தப் பேரழகுப் பிறவியைச் சரியாகப் பார்ப்பதற்காக மகோந்தாவாசிகள், ஒரு விநாடி தங்கள் முகமூடிகளை அகற்றினார்கள். அவள் நியாயமான அதிகாரமுள்ளவளாகத் தோன்றினாளே தவிர வளையல்களைப் பொதிந்து வைத்த அலங்காரக் காகிதமாகத் தெரிய வில்லை. தங்களைத் தூண்டிவிடுவதற்கான செயல் இது என்று சந்தேகப்படுவதற்கான உள்ளுணர்வு கொண்ட பலர் அங்கே இருந் தார்கள். ஆனால் அவுரேலியானோ செகுந்தோ சட்டென்று தன்னுடைய குழப்பத்தை வென்று புதிதாக வந்தவர்கள் சிறப்பு விருந்தினர்கள் என்று அறிவித்தான். கூடவே சாலொமோனின் விவேகத்துடன் அழகி ரெமேதியோஸையும் புதிய அரசியையும் ஒரே மேடையில் அமரச் செய்தான். அராபிய நாடோடிகளைப் போல மாறுவேடம் தரித்திருந்த அந்த அந்நியர்கள் நள்ளிரவுவரை அந்தப் பரவசத்தில் பங்கேற்றார்கள்.

ஆடம்பரமான வாண வேடிக்கைகளாலும் பழைய நாடோடிகளின் கலையை நினைவுபடுத்தும் கழைக்கூத்து வித்தைகளாலும் நிகழ்ச்சியைப் பிரம்மாண்டமாக்கவும் செய்தார்கள். கொண்டாட்டத்தின் உச்சத்தில் யாரோ ஒருவன் திடீரென்று சமநிலையைக் குலைத்தான்.

"மிதவாதக் கட்சி நீடூழி வாழ்க. கர்னல் அவுரேலியானோ புயேந்தியா நீடூழி வாழ்க" என்று உரக்க முழங்கினான். வாண வேடிக்கைகளின் ஜொலிப்பைத் துப்பாக்கி வேட்டுகள் மூழ்கடித்தன. கூக்குரல்களில் இசை மூழ்கியது. குதூகலம் பீதியாக மாறியது. புதிய அரசியின் மெய்க்காவலர்களாக வந்தவர்கள் அரசாங்க ராணுவத்தைச் சேர்ந்தவர்கள் என்றும் அரசாங்கத் துப்பாக்கிகளைத் தங்கள் ஆடம்பர மான அரபி அங்கிகளுக்குள் ஒளித்துவைத்திருந்தார்கள் என்றும் பல ஆண்டுகளுக்குப் பின்னரும் பலர் நம்பினார்கள். அந்தக் குற்றச் சாட்டை அரசாங்கம் சிறப்பு அறிக்கை மூலம் மறுத்தது. அந்தக் கொடூர சம்பவம் பற்றி முழுமையான விசாரணை நடத்தப்படும் என்றும் உறுதியளித்தது. ஆனால் உண்மை வெளிச்சத்துக்கு ஒருபோதும் வரவேயில்லை. எந்தத் தூண்டுதலும் இல்லாமல்தான் அரசாங்கக் காவலர்கள், தங்கள் கமாண்டரின் சமிக்ஞைப்படி தாக்குதல் நிலையை எடுத்து இரக்கமில்லாமல் கூட்டத்தினரை நோக்கிச் சுட்டார்கள் என்ற எண்ணம் நிலவியது. மீண்டும் அமைதி திரும்பியபோது போலி அராபியர்கள் ஒருவர்கூட நகரத்தில் இல்லை. சதுக்கத்தில் ஏராள மானவர்கள் இறந்தும் பலர் காயமடைந்தும் கிடந்தார்கள். ஒன்பது கோமாளிகள், நான்கு கொலம்பியர்கள், பதினேழு சீட்டாட்ட ராஜாக்கள், ஒரு சாத்தான், மூன்று பாடகர்கள், இரண்டு பிரெஞ்சுச் சிப்பாய்கள், மூன்று ஜப்பானியப் பேரரசிகள். அந்தப் பீதிக் களேபரத்தி லிருந்து ஹோசே அர்க்காதியோ செகுந்தோ அழகி ரெமேதியோஸை மீட்டான். அவுரேலியானோ செகுந்தோ புதிய அரசியை வீட்டுக்குத் தோளில் தூக்கிக்கொண்டு வந்தான். அவளுடைய உடைகள் கிழிந் திருந்தன. வெண்மயிர்த் தொப்பி ரத்தத்தில் ஊறியிருந்தது. அவள் பெயர் பெர்னாண்டா தெல் கார்பியோ. அந்தப் பகுதியிலிருந்த மிக அழகான ஐந்தாயிரம் பெண்களிலிருந்து பேரழகியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தாள். மடகாஸ்கர் அரசியாக நியமிக்கப் போவதாக வாக்குறுதி யளித்து அவளை மகோந்தாவுக்கு அழைத்து வந்திருந்தார்கள். உர்சுலா அவளைத் தன்னுடைய சொந்த மகளைப் போலப் பார்த்துக்கொண் டாள். நகரம் அவளுடைய அப்பாவித்தனத்தைச் சந்தேகிப்பதற்குப் பதிலாக அவளுடைய வெளிப்படையான குணத்துக்காக இரக்கப் பட்டது. படுகொலை நடந்து ஆறு மாதங்களுக்குப் பிறகு காயம் அடைந்தவர்கள் தேறிய பிறகு, ஒட்டு மொத்தமாக எல்லாரையும் அடக்கம் செய்த கல்லறை மேலிருந்த பூக்கள் உதிரத் தொடங்கிய பிறகு அவுரேலியானோ செகுந்தோ தன் தந்தையுடன் அவள் வசிக்கும் தொலைதூர நகரத்துக்குச் சென்று அவளைக் கொண்டு வந்தான். சந்தடியும் கும்மாளமுமாக இருபது நாட்கள் நடந்த வைபவத்தில் அவளைத் திருமணம் செய்துகொண்டான்.

அந்தத் திருமணம் இரண்டு மாதங்களுக்குப் பின்பு முறிவடையும் புள்ளிக்கு வந்திருந்தது. ஏனெனில் மடகாஸ்கர் அரசி போல உடையணிந்து எடுத்துக்கொண்டிருந்த படத்துக்காகப் பெத்ரா கோட்டேஸை அவுரேலியானோ செகுந்தோ எரிச்சலூட்டி யிருந்தான். பெர்னாண்டா அதைக் கண்டுபிடித்ததும் தன்னுடைய திருமணப் பெட்டிகளைத் திரும்பக் கட்டிக்கொண்டு யாரிடமும் சொல்லாமல் மகோந்தாவை விட்டு வெளியேறினாள். சதுப்பு நிலத்துக்குப் போகும் பாதையின் அருகில் அவுரேலியானோ செகுந்தோ அவளைப் பிடித்தான். மிகவும் மன்றாடியும் மாற்றிக் கொள்வதாக வாக்குறுதி அளித்தும் அவளைத் திரும்ப வீட்டுக்கு அழைத்து வந்தான். வைப்பாட்டியைக் கைவிட்டான். பெத்ரோ கோட்டெஸ் வலுவான பெண். ஆகவே கவலைப்படுவதாக எந்த அடையாளமும் தெரியவில்லை. அவனை மனிதனாக்கியவள் அவள்தான். அவன் குழந்தையாக இருந்தபோது மெல்குயாதெஸின் அறையிலிருந்து இழுத்து வருவாள். அவன் மண்டைக்குள் எதார்த்தத்துடன் தொடர்பில்லாத விசித்திரமான கற்பனைகள் நிரம்பியிருந்தன. அவள்தான் இந்த உலகத்தில் அவனுக்காக இடத்தை உருவாக்கிக் கொடுத்தாள். இயற்கையாகவே அவன் உள்ளுக்குள் ஒடுங்கியவனாகவும் கூச்சமுள்ளவனாகவும் இருந்தான். தனிமையில் தியானித்திருக்கும் இயல்புள்ளவனாக இருந்தான். அதற்கு எதிராக உற்சாகமான, வலுவான, வெளிப்படையான குணமுள்ளவனாக அவனை மாற்றியது அவள்தான். வாழ்வின் ஆனந்தத்தை அவனுக்குள் செலுத்தினாள். காசைச் செலவழிப் பதிலும் கொண்டாட்டமாக இருப்பதிலுமுள்ள இன்பத்தைச் செலுத்தினாள். விடலைப் பருவம் முதல் அவனைப் பற்றிக் கண்ட கனவுக்குப் பொருத்தமானவனாக ஆகும்வரை உள்ளும் புறமும் அவனை மாற்றினாள். எல்லாப் பிள்ளைகளும் உடனேயே காலம் கழித்தோ திருமணம் செய்துகொள்வது போல அவனும் திருமணம் செய்துகொண்டான். ஆனால் அதை அவளிடம் தெரிவிக்க அவனுக்குத் தைரியமில்லை. அந்தச் சூழ்நிலையின் நிர்ப்பந்தத்தில் சிறுபிள்ளைத்தனமாக நடந்துகொண்டான். வேண்டுமானால் பெத்ரோ கோட்டேஸ் அந்த உறவைத் துண்டித்துக் கொள்ளட்டும் என்று கோபமாக இருப்பது போல நடித்துக் கற்பனையான மறுப்பைக் காட்டினான். ஒருநாள் அவுரேலியானோ செகுந்தோ காரணமில்லாமல் அவளைக் குற்றம் சாட்டினான். அவள் அந்தப் பொறியில் அகப்பட்டுக் கொள்ளாமல் விஷயங்களைத் தெளிவாகச் சொன்னாள்.

"இதற்கெல்லாம் அர்த்தம், நீ அந்த அரசியை மணந்துகொள்ள விரும்புகிறாய் என்பதுதான்" என்றாள்.

அவமானமடைந்த அவுரேலியானோ செகுந்தோ ஆத்திரப்படுவது போல நடித்துத் தன்னை அவள் தவறாகப் புரிந்துகொண்டிருக்கிறாள் என்றும் பழி சுமத்துவதாகவும் சொன்னான். மறுபடியும் அவளைச் சந்திக்க வரவில்லை. இளைப்பாறிக்கொண்டிருக்கும் வனவிலங்கைப் போல ஒருகணம்கூடத் தன்னுடைய சமநிலையை இழந்துவிடாமல் திருமணம் நடக்குமிடத்திலிருந்து வந்த இசையையும் அதிர் வேட்டுகளையும் கொண்டாட்டத்தின் ஆரவாரங்களையும் கேட்டுக்கொண்டிருந்தாள். அவையெல்லாம் அவுரேலியானோ செகுந்தோவின் தரப்பில் செய்யப்படும் குறும்புகளாக மட்டுமே அவளுக்குத் தோன்றின. அவளுடைய விதியைப் பார்த்துப் பரிதாபப்பட்டவர்களை ஒரு புன்னகையால் "கவலைப்படாதீர்கள்" என்று அமைதிப்படுத்தினாள். "அரசிகள் எனக்கு எடுபிடி வேலைகள் செய்வார்கள்" என்றாள். இழந்துபோன காதலனின் படத்தின் முன்னால் ஏற்றிவைப்பதற்காக ஒரு ஜதை மெழுகுவர்த்திகளைக் கொண்டுவந்து கொடுத்த பக்கத்து வீட்டுக்காரியிடம் புதிர் போலச் சொன்னாள்.

"அவனை வரவழைக்கக் கூடிய ஒரே மெழுகுவர்த்தி எப்போதும் இங்கே எரிந்து கொண்டிருக்கிறது."

அவள் எதிர்பார்த்தது போலவே அவுரேலியானோ செகுந்தோ தேனிலவு முடிந்ததும் அவள் வீட்டுக்குத் திரும்பி வந்தான். வழக்கமான பழைய நண்பர்களையும் ஊர் சுற்றும் புகைப்படக்காரர் ஒருவரையும் அழைத்து வந்திருந்தான். கலைவிழாவின்போது பெர்னாண்டா அணிந்திருந்த கவுனையும் ரத்தக்கறை படிந்த மயிர்த் தொப்பியையும் கொண்டு வந்திருந்தான். அந்த மாலைவேளைக் கோலாகலத்தின் உச்சத்தில் அவன் பெத்ரோ கோட்டேஸை அரசியைப் போல உடையணியச் செய்தான். அவளை மடகாஸ்கரின் வாழ்நாள் அரசியாக முடிசூட்டினான். அவளைப் புகைப்படம் எடுத்து அதன் பிரதிகளை நண்பர்களுக்குக் கொடுத்தான். அவள் அந்த விளையாட்டில் முழுதாக ஈடுபட்டாலும் உள்ளுக்குள் அவனுக்காகப் பரிதாபப்பட்டாள். அவன் பயந்து போயிருக்க வேண்டுமென்றும் அதனால்தான் மீண்டும் ஒன்று சேர்வதற்காக இந்த ஆடம்பர வழிகளைக் கையாளுகிறான் என்றும் நினைத்தாள். மாலை ஏழு மணிக்கு அரசியின் ஒப்பனையுடனேயே அவனைப் படுக்கையில் வரவேற்றாள். அவனுடைய திருமணம் முடிந்து இரண்டு மாதங்கள்தாம் ஆகியிருந்தன. ஆனால் தாம்பத்தியப் படுக்கையில் எதுவும் சரியாக இருக்கவில்லை என்பதை அவள் சட்டென்று உணர்ந்துகொண்டாள். பழிவாங்கலின் இனிய மகிழ்ச்சி அவளுக்குள் நிறைந்தது. எனினும் இரண்டு நாட்களுக்குப் பிறகு அவளிடம் திரும்பி வருவதற்கான துணிவில்லாமல் பிரிந்து செல்வதற்கான நிபந்தனைகளைப் பற்றிப் பேச அவன் ஒரு மத்தியஸ்தனை அனுப்பினான். தான் முன்கூட்டியே யோசித்து வைத்திருந்ததைவிட அதிகமான பொறுமை தேவைப்படும் என்று அவளுக்குப் புரிந்தது. ஏனெனில் எல்லாம் சுமுகமாக இருக்கின்றன என்று தெரியவைப்பதற்காக

அவன் தன்னையே பலியிடத் தயாராக இருப்பதாகத் தோன்றியது. அந்தத் தருணத்தில் அவளுக்கு எந்த ஏமாற்றமுமில்லை. தான் ஒரு அப்பிராவிப் பிசாசுதான் என்ற பொதுநம்பிக்கையை மெய்ப்பிப்பதற்காக மீண்டும் ஒருமுறை அவள் பணிந்தாள். சவப்பெட்டிக்குள் தன்னை அடக்கம் செய்யும்போது அணிந்துகொள்வதற்காக வைத்திருப்பதாக அவன் சொல்லியிருந்த தோல் பூட்சுகளை மட்டும் அவுரேலியானோ செகுந்தோவின் ஞாபகமாக அவள் வைத்துக்கொண்டாள். அவற்றை ஒரு துணியில் சுற்றி டிரங்குப் பெட்டியின் அடியில் வைத்தாள். பின்னர் ஏமாற்றமில்லாமல் நினைவுகளில் மூழ்கத் தயாரானாள்.

“சீக்கிரமோ கொஞ்சம் தாமதமாகவோ அவன் வருவான். அந்தப் பூட்சுகளைப் போட்டுக் கொள்வதற்காகவாவது” என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டாள்.

அவள் கற்பனை செய்தது போல நீண்ட காலம் காத்திருக்க வேண்டி வரவில்லை. உண்மையில் திருமண நாளின் இரவிலேயே அந்தத் தோல் பூட்சுகளை அணிவதற்கு மிக முன்பே தான் பெத்ரோ கோட்டேஸின் வீட்டுக்குத் திரும்ப வேண்டியிருக்கும் என்று அவுரேலியானோ செகுந்தோவுக்குப் புரிந்திருந்தது. பெர்னாண்டா தனது உலகத்தில் ஆழ்ந்துபோனவளாக இருந்தாள். அறுநூறு மைல் களுக்கு அப்பாலிருக்கும் ஒரு நகரத்தில், கற்கள் பாவிய தெருக்களில் மூட்டமான இரவுகளிலும் வைஸ்ராய்களின் கோச்சு வண்டிகள் நறநறத்துப் போகும் மங்கலான நகரத்தில் பிறந்து வளர்ந்தவள். அந்த நகரத்தில் மாலை ஆறுமணிக்கு முப்பத்திரண்டு மணிக்கூண்டு களிலிருந்தும் மணிகள் முழங்கின. கல்லறை மூடி போன்ற கற்பலகைகள் பாவப்பட்ட அந்தப் பண்ணை வீட்டில் ஒருபோதும் சூரிய வெளிச்சத்தைப் பார்க்க முடிந்ததில்லை. சைப்ரஸ் மரங்கள் நின்றிருந்த முற்றத்திலும் வெளிறிய திரைச்சீலைகள் தொங்கிய படுக்கையறைகளிலும் ஈரம் சொட்டும் கொடித் தாவரங்கள் வளைந்திருக்கும் தோட்ட வழிகளிலும் காற்று நிலைத்து நின்றது. பகல் தூக்கம் என்னவென்றே தெரியாத யாரோ ஒருவர் பக்கத்து வீட்டில் நடத்தும் சோகமான பியானோ வகுப்புகளைத் தவிரப் பூப்படையும் வரைக்கும் உலகத்தைப் பற்றிய எந்தச் செய்தியும் பெர்னாண்டாவுக்குத் தெரிந்திருக்கவில்லை. ஜன்னல் வழியாக விழும் வெளிச்சத்தில் மஞ்சளும் பச்சையுமாகத் துலங்கும் அவளுடைய நோயாளித் தாயின் அறையிலிருந்தபடி அந்தச் சிட்டை யான இறுக்கமான மனத்துக்கு இசையாத கணக்குவழக்குகள் கொண்ட இசையைக் கேட்பாள். தயாரித்துக்கொண்டிருக்கும் மலர் வளையங் களுக்கிடையில் தான் மூழ்கியிருக்கும்போது அந்த உலகத்தில் அந்த இசைதான் இருக்கும் என்று யோசிப்பாள். ஐந்து மணிக் காய்ச்சலால் பீடிக்கப்பட்டு வியர்த்தொழுகிக் கொண்டிருக்கும் அவள் அம்மா பழைய காலப் பெருமைகளை அவளிடம் சொன்னாள். சிறுமியாக இருந்தபோது நிலா வெளிச்சம் நிறைந்த இரவில் வெள்ளை உடையணிந்த அழகான பெண் ஒருத்தி தோட்டத்தைத் தாண்டித் தேவாலயத்தை நோக்கிச் செல்வதை பெர்னாண்டா பார்த்தாள். அந்த நகரும் காட்சி யில் அந்தப் பெண் தன்னைப் போலவே இருந்ததுதான் பெர்னாண்டாவை

மிகவும் தொந்தரவு செய்தது. இருபது வருடங்களுக்குப் பிறகு அவள் எப்படியிருப்பாளோ அதைப் போல அந்தப் பெண் இருந்தாள். இருமலுக் கிடையில் இடைத்த அவகாசத்தில் "அது உன்னுடைய கொள்ளுப் பாட்டி, அரசி" என்று அவள் அம்மா அவளிடம் சொன்னாள். "ஒரு பூண்டுக் கொத்தை நறுக்கிக்கொண்டிருந்தபோது ஏதோ கெட்ட ஆவி தாக்கி இறந்துபோனாள்" என்றாள். பல ஆண்டுகளுக்குப் பின்னர் தான் கொள்ளுப்பாட்டியைப் போல ஆகியிருப்பதாக உணரத் தொடங்கிய போது பெர்னாண்டா தன்னுடைய பிள்ளைப்பருவக் காட்சியைப் பற்றி சந்தேகப்பட்டாள். அவளுடைய அவநம்பிக்கையை அம்மா ஏசினாள்.

"நாம் பணக்காரர்கள். செல்வாக்கானவர்கள். ஒரு நாளைக்கு நீயும் அரசியாகப் போகிறாய்" என்று அவளிடம் சொல்லுவாள்.

லினன் விரிப்புப் போட்ட நீண்ட உணவு மேஜையில் வெள்ளிக் கரண்டிகளும் வைத்துக்கொண்டு நீர் விட்ட சாக்லேட் பானத்துடனும் இனிப்புப் பன்னுடனும் அவர்கள் உட்கார்ந்திருந்தபோதும் அவள் அதை நம்பினாள். அவளுடைய அப்பா டான் பெர்னாண்டோ அவளுக்குத் திருமண உடைகள் வாங்குவதற்காக வீட்டை அடமானம் வைத்திருந்தார் என்ற உண்மையை மீறித் திருமண தினம்வரை அவள் ஒரு அற்புத ராஜ்ஜியத்தைக் கனவு கண்டுகொண்டிருந்தாள். அது அப்பாவித்தனமோ பிரம்மாண்டத்தைப் பற்றிய பிரமையோ அல்ல. அவர்கள் அவளை அந்த வகையில்தான் வளர்த்திருந்தார்கள். குடும்ப இலச்சினை பொறிக்கப்பட்ட ஒரு தங்கப் பாத்திரத்தைத்தான் அவள் தன்னுடைய அன்றாடக் கடன்களுக்குப் பயன்படுத்தியிருந்ததை அவள் நினைவில் வைத்திருந்தாள். அவள் தன்னுடைய பன்னிரண்டாவது வயதில்தான் முதல்முறையாக வீட்டை விட்டு வெளியே போனாள். வெறும் இரண்டு கட்டடங்கள் தள்ளி இருக்கும் கான்வெண்டுக்குக் குதிரைகள் பூட்டிய கோச் வண்டி அவளை அழைத்துச் சென்றது. தங்களிடமிருந்தெல்லாம் விலகி உயரமான முதுகுள்ள நாற்காலியில் அவள் உட்காருவதையும் இடைவேளையின்போதுகூடத் தங்களுடன் கலந்து பழகாததையும் பார்த்து அவளுடைய வகுப்புத் தோழிகள் ஆச்சரியப்பட்டார்கள். "அவள் வித்தியாசமானவள்" என்று கன்னியாஸ்திரி கள் சொன்னார்கள். "அவள் அரசியாகப் போகிறவள்" என்றார்கள். ஏற்கனவே அவள் மிக அழகானவளாக இருந்ததாலும் வித்தியாச மானவளாக இருந்ததாலும் அவர்கள் பார்த்ததில் பெருமிதமான பெண்ணாக இருந்ததாலும் பள்ளித் தோழிகள் அதை நம்பினார்கள். எட்டாவது வயது நிறையும்போது அவள் லத்தீன் மொழியில் கவிதை எழுதவும் கிளாவிகார்ட் வாசிக்கவும் பறவை வேட்டை பற்றிக் கனவான்களுடனும் தன் மதத்தைப் பற்றிய ஆதாரவாதங்கள் குறித்து ஆர்ச் பிஷப்புகளுடனும் அரசின் செயல்பாடுகள் பற்றி வெளிநாட்டு ஆட்சியாளர்களுடனும் கடவுளின் செயல்பாடுகள் பற்றிப் போப்பாண்டவ ருடனும் பேசக் கற்றுக்கொண்ட பிறகு மலர் வளையங்கள் தயாரிப் பதற்காக பெற்றோரின் வீட்டுக்குத் திரும்பினாள். வீடு பொலிவிழந் திருப்பதைப் பார்த்தாள். அத்தியாவசியமானதாக இருந்த அறைக்கலன் களும் வெள்ளி மெழுகுவர்த்தித் தாங்கிகளும் உணவு மேஜைக்

கரண்டிகளும் மட்டுமே மிஞ்சியிருந்தன. அன்றாட உபயோகத்துக்கான பாத்திரங்கள்கூட ஒன்றன் பின் ஒன்றாக அவளுடைய படிப்புச் செலவுக்காக விற்கப்பட்டிருந்தன. அம்மா ஐந்து மணிக் காய்ச்சலால் பீடிக்கப்பட்டிருந்தாள். அப்பா, டான் பெர்னாண்டோ விறைப்பான கழுத்துப் பட்டியுள்ள கறுப்பு உடையணிந்து தங்கக் கடிகாரச் சங்கிலியையும் மாட்டிக்கொள்வார். எல்லாத் திங்கட்கிழமைகளிலும் வீட்டுச் செலவுக்காக ஒரு வெள்ளி நாணயத்தைக் கொடுப்பார். பதிலுக்கு முந்தைய வாரம் தயார் செய்து வைத்த மலர் வளையங்களை எடுத்துக்கொண்டு போவார். தன்னுடைய பெரும்பான்மையான நேரத்தை அவர் மூடிய படிப்பறைக்குள்ளேயே கழித்தார். வெளியே போனாலும் உடனடியாகத் திரும்பிவந்து அவளுடன் சேர்ந்து ஜெபமாலையை உருட்டிக்கொண்டிருப்பார். அவளுக்கு யாருடனும் அந்தரங்கமான நட்பு இருக்கவில்லை. நாட்டை ரத்தம் சிந்த வைத்துக் கொண்டிருந்த போரைப் பற்றி அவள் கேள்விப்படவே இல்லை. பிற்பகல் மூன்று மணிவரை தன்னுடைய பியானோ பாடங்களைத் தொடர்ந்தாள். அரசியாகப் போகிறோம் என்ற பிரமையைக் கைவிடத் தொடங்கியிருந்தபோது அதிகாரம் தொனிக்கும் விதமாகக் கதவில் இரண்டு முறை தட்டும் ஒலி கேட்டது. அவள் கதவைத் திறந்தாள். கன்னத்தில் வடுவும் மார்பில் தங்கப் பதக்கமும் சம்பிரதாயமான பழக்கங்களும் கொண்ட ராணுவ அதிகாரி ஒருவர் நின்றிருந்தார். அப்பாவுடன் அவரது படிப்பறையில் உட்கார்ந்து ஆலோசனை நடத்தினார். இரண்டு மணி நேரத்துக்குப் பிறகு அப்பா தையல் அறைக்கு வந்தார். “உனக்கு வேண்டிய பொருட்களை எடுத்து வைத்துக்கொள். ஒரு நீண்ட பயணம் போகப் போகிறாய்” என்றார். அப்படியாகத்தான் அவள் மகோந்தாவுக்கு வந்து சேர்ந்தாள். பல வருடங்களாக அப்பாவும் அம்மாவும் அவளிடமிருந்து மறைத்து வைத்திருந்த உண்மையின் சுமை ஒரே நாளில் ஒரு முரட்டு அடியுடன் வாழ்க்கையால் அவள்மேல் மொத்தமாகச் சுமத்தப்பட்டது. வீட்டுக்குத் திரும்பியதும் அவள் அழுவதற்காகத் தன்னுடைய அறையை மூடிக் கொண்டாள். அந்த விசித்திர வேடிக்கையின் வடுக்களை அழிப்பதற்காக டான் பெர்னாண்டோ செய்த மன்றாட்டுகளும் விளக்கங்களும் அவளிடம் பலிக்கவில்லை. 'அவுரேலியானோ செகுந்தோ அவளை அழைத்துச் செல்ல வரும்வரை செத்தாலும் படுக்கையறையை விட்டு வெளியே போகக் கூடாது என்று தான் சபதம் போட்டிருந்தாள். அசாத்தியமான விதியின் செய்கையாக இருந்தது அது. கோபத்தின் குழப்பத்திலும் அவமானத்தின் சீற்றத்திலும் தனது உண்மையான அடையாளத்தை அவன் தெரிந்துகொள்ளக் கூடாது என்பதற்காக அவள் அவனிடம் பொய் சொல்லியிருந்தாள். அவள் மலர்வளையங்கள் தயாரிப்பவள், மலைப் பகுதியைச் சேர்ந்த உச்சரிப்புடன் பேசுபவள் என்பவை மட்டுமே அவளைத் தேடி வந்தபோது அவுரேலியானோ செகுந்தோவிடம் இருந்த ஊகங்கள். நிறுத்தாமல் அவளைத் தேடினான். மகோந்தாவைக் கண்டுபிடிப்பதற்காக ஹோசே அர்க்காதியோ புயேந்தியா மலைகளைக் கடந்த துணிச்சலுடனும் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா முப்பத்திரண்டு பயனற்ற யுத்தங்களை

மேற்கொண்ட குருட்டுப் பெருமிதத்துடனும் உர்சுலா தனது வம்சம் வாழ்வதைக் கவனித்த பைத்தியக்காரத்தனமான தீர்மானத்துடனும் அவுரேலியானோ செகுந்தோ ஒருநொடிகூட ஓய்வில்லாமல் பெர்னாண்டாவைத் தேடினான். எங்கே மலர் வளையங்கள் விற்கிறார்கள் என்று கேட்டபோது அவர்கள் சிறப்பானதைத் தேர்ந்து எடுத்துக் கொள்ளட்டும் என்று அவனை வீடு வீடாக அழைத்துச் சென்றார்கள். இந்தப் பூமியில் இதுவரை பார்த்ததில் மிக அழகான பெண்ணைப் பற்றிக் கேட்டபோது எல்லாப் பெண்களும் தங்களுடைய மகள்களை அழைத்து வந்தார்கள். மூட்டமான இடைவழிகளில் அவன் தவறிப் போனான். சமயங்களில் ஏமாற்றத்தின் சுழல் வழிகளில் தடுமாறினான். ஒருவரது எண்ணங்களை எதிரொலிக்கும் மஞ்சள் நிறச் சமவெளியை, பதற்றம் எதிர்காலக் கானல்களைக் கொண்டுவரும் சமவெளியைக் கடந்தான். பயனில்லாத பல வாரங்களுக்குப் பிறகு எல்லா மணிகளும் ஒன்றேபோன்று சோகமாக ஒலிக்கும் பெயர் தெரியாத நகரத்துக்கு வந்து சேர்ந்தான். அவர்களை அவன் ஒருபோதும் பார்த்திருக்கவில்லை. அவர்களும் அவனிடம் விளக்கிச் சொல்லவில்லை. எனினும் காரை உப்பால் அரிக்கப்பட்ட சுவர்களையும் பூஞ்சணம் பூத்து நிறைந்து உடைந்து கிடந்த மர உப்பரிகைகளையும் பார்த்ததும் அடையாளம் கண்டுகொண்டான். கதவின் வெளிப்பக்கம் ஆணியடித்துத் தொங்க விடப்பட்டிருந்த, மழையில் பெரும்பாலும் அழிந்துபோயிருந்த, உலகத்திலேயே மிகவும் சோகமான பெயர்ப்பலகையைப் பார்த்தான்: மலர் வளையங்கள் விற்பனைக்கு. அந்த விநாடி முதல் மதர் சுப்பீரியரின் காவலில் பெர்னாண்டா வீட்டை விட்டு வெளியேறிய பனி பெய்யும் காலைப் பொழுது வரைக்கும் கன்னியாஸ்திரிகளுக்கு அவளுடைய திருமண உடையைத் தைப்பதற்குத்தான் நேரம் இருந்தது. இரண்டு நூற்றாண்டுகளாகக் குடும்பத் துயரத்தின் பயனற்ற மிச்சங்களாக இருந்த பொருட்களுடன் மெழுகுவர்த்தித் தாங்கி, வெள்ளிக் கரண்டிகள், தங்கத்தாலான மலப் பாத்திரம் ஆகியவற்றை ஆறு டிரங்குப் பெட்டிகளில் அடைத்தார்கள். அவர்களுடன் வருமாறு விடுத்த அழைப்பைடான் பெர்னாண்டா மறுத்தார். தன்னுடைய வேலைகள் முடிந்ததும் வருவதாக வாக்குறுதியளித்தார். மகளை ஆசிர்வாதம் செய்து அனுப்பிய அந்த நொடியிலிருந்து படிப்பறைக்குள் அடைந்து மூடிக்கொண்டு மறுபடியும் அறிவிப்புகளை எழுத ஆரம்பித்தார். சோகமான வரைபடங்களுடனும் குடும்ப மேற்கோள்களுடனும் எழுதினார். பெர்னாண்டாவுக்கும் அவளுடைய அப்பாவுக்கும் அவர்கள் வாழ்நாளில் இருந்த ஒரே மனிதப் பிணைப்பு அதுமட்டுமே. அன்றுதான் அவளுடைய சரியான பிறந்தநாளாக இருந்தது. அவுரேலியானோ செகுந்தோவைப் பொருத்தவரை அந்த நாள்தான் ஒரே சமயத்தில் மகிழ்ச்சியின் தொடக்கமாகவும் முடிவாகவும் இருந்தது.

தங்க நிறத்தில் விசைப்பொத்தான்கள் வைத்த ஒரு விநோதமான காலண்டர் பெர்னாண்டாவிடம் இருந்தது. அவளுடைய ஆன்மீக ஆலோசகர் அந்த தேதியிட்ட பொத்தான்கள் மீது உடலுறவிலிருந்து விலகி நிற்க வேண்டிய நாட்களை இளஞ்சிவப்பு மையால் குறித்திருந்தார். புனித வாரத்தைத் தவிர்த்து, ஞாயிற்றுக்கிழமைகள், கட்டாயம்

கடைப்பிடிக்க வேண்டிய புனிதத் தினங்கள், முதல் வெள்ளிக்கிழமைகள், உபவாச நாட்கள், ஹுத்தல் தினங்கள், மாதவிடாய்ச் சுழற்சித் தினங்கள் ஆகிய எல்லாவற்றையும் நீக்கியதில் வருடத்துக்கு நாற்பத்திரண்டு நாட்களாகக் காலண்டர் சுருங்கியிருந்தது. அந்தத் தேதிகளின் மேல் இளஞ்சிவப்புச் சிலுவைக்குறிகளின் வலையே படர்ந்திருந்தது. போகப் போக இந்த வலைப்பின்னல் அறுபட்டுவிடும் என்று அவுரேலியானோ செகுந்தோ சமாதானப்படுத்திக்கொண்டான். எதிர்பார்த்த பொழுதைவிட நீண்ட காலத்துக்குத் திருமணக் கொண்டாட்டங்களை ஒத்திவைத்தான். வீட்டுக்குள் தாறுமாறாகக் குவிந்திருந்த ஏராளமான பிராந்திக் குப்பிகளையும் ஷாம்பெய்ன் குப்பிகளையும் வெளியே எடுத்து எறிவதிலேயே களைத்துப்போயிருந்தான். வாணவேடிக்கைகள் நடந்துகொண்டிருந்த, இசை முழங்கிக்கொண்டிருந்த, கால்நடைகள் விருந்துக்காக அறுக்கப் பட்டுக் கொண்டிருந்த அதே சமயம் புதுமணத் தம்பதிகள் தனித்தனி அறைகளில் வெவ்வேறு நேரங்களில் படுத்துத் தூங்கினார்கள். உர்சுலா தன்னுடைய சொந்த அனுபவத்தை நினைத்துப் பார்த்து பெர்னாண்டாவும் கற்பு உடுப்பை அணிந்திருப்பாளா என்று வியந்தாள். அது உடனடி யாகவோ காலப்போக்கிலோ நகரத்தில் வேடிக்கைப் பேச்சுகளைத் தூண்டிவிடுமோ என்றும் தன்னுடைய காலத்தைப் போலத் துயரத்துக்கு வழிவகுக்குமோ என்றும் யோசித்தாள். ஆனால் பெர்னாண்டாவோ இரண்டு வாரத்துக்குப் பிறகுதான் கணவனுடன் முதல் சம்போகத்துக்கு அனுமதிக்கப் போவதாக அவளிடம் வெளிப்படையாகச் சொன்னாள். அந்த நாட்கள் முடிந்ததும் அவள் ஒரு பலி மிருகத்தின் பாவத்துடன் தனது படுக்கையறைக் கதவைத் திறந்து வைத்தாள். பூமியிலேயே பேரழகியான பெண்ணை அவுரேலியானோ பார்த்தான். அவளுடைய பிரகாசமான கண்கள் பயந்த மிருகத்தின் கண்களைப் போல இருந்தன. நீண்ட செம்பு நிறக் கூந்தல் தலையணைமேல் விரிந்து கிடந்தது. அந்தக் காட்சி அவனை மிகவும் வசீகரித்தது. பெர்னாண்டா வெள்ளை நிற இரவு உடையணிந்திருப்பதைப் புரிந்துகொள்ள அவனுக்குச் சில நொடிகள் ஆயின. அந்த கவுன் கணுக்கால் வரை நீண்டும் நீளமான கைகளுடனும் இருந்தது. அடிவயிற்றின் கீழ்ப் பகுதிக்கு நேராகத் துல்லியமாகப் பிசிறு நீக்கப்பட்ட வட்ட வடிவமான பெரிய பொத்தான் துளை இருந்தது. அவுரேலியானோ செகுந்தோவால் வெடிச்சிரிப்பை அடக்க முடியவில்லை.

“என் வாழ்க்கையில் நான் பார்த்த மிக ஆபாசமான விஷயம் அதுதான்” என்று வீடு முழுவதும் ஒலிக்கும்படி உரக்கக் கத்திச் சிரித்தான். “சேவை செய்யும் அருட் சகோதரி ஒருத்தியை நான் மணந்துகொண்டிருக் கிறேன்” என்றான். பின்னர் சமரசம் பேசி பெர்னாண்டாவை வென்று கொண்டான். எனினும் அவன் கனவு கண்டது போல ஒரு மாதத்துக்குப் பின்பு, மனைவியின் இரவு உடையைக் களையச் செய்வதில் தோல்வி யடைந்த போனபோதுதான் அவன் அரசியின் ஒப்பனையில் பெத்ரா கோட்டேஸைப் புகைப்படம் எடுத்தான். எனினும் அவளை அழைத்து வர முப்பத்திரண்டு மணிக்கூண்டுகளுள்ள நகரத்துக்குப் போனபோது அவன் கனவு கண்டிருந்த ஆறுதலைக் கொடுக்க அவளால் முடிய வில்லை. அவளுக்குள் ஓர் ஏமாற்ற உணர்வையே அவுரேலியானோ

செகுந்தோ பார்த்தான். அவர்களுடைய முதல் குழந்தை பிறப்பதற்குக் கொஞ்ச காலத்துக்கு முன்பு தன்னுடைய கணவன் பெத்ரா கோட்டேஸின் படுக்கையறைக்கு ரகசியமாகப் போய் வருவதை பெர்னாண்டா உணர்ந்தாள்.

"அப்படித்தான் அது நடந்தது. நம்முடைய வளர்ப்பு மிருகங்கள் பெற்றுப் பெருக நான் அதைச் செய்ய வேண்டியிருந்தது" என்று பணிவான மனோபாவத்துடன் அதை ஒப்புக்கொண்டான்.

இந்த விநோத நடைமுறையைப் பற்றிச் சொல்லி அவளைச் சமாதானப்படுத்த அவனுக்குக் கொஞ்சம் அவகாசம் தேவைப்பட்டது. கடைசியாக ஆதாரங்களைக் காட்டி அதை நிறைவேற்றிக்கொண்ட போது அது வியர்த்தமானதாகவே தோன்றியது. வைப்பாட்டியின் படுக்கையில் செத்துக் கிடக்கும் ஆச்சரியத்தை அவன் தனக்குத் தந்துவிடக் கூடாது என்ற வாக்குறுதியை மட்டுமே பெர்னாண்டா அவனிடம் கேட்டுக்கொண்டாள். ஒருவரை ஒருவர் தொந்தரவு செய்துகொள்ளாமல் அவர்கள் மூன்று பேரும் வாழ்க்கையைத் தொடர்ந்தார்கள். அவுரேலியானோ செகுந்தோ இரண்டு பேரிடமும் நியமம் தவறாமலும் காதலுடனும் இருந்தான். இணக்கத்தின் புதுப் பொலிவில் தனக்கு உண்மை எதுவும் தெரியாதது போல பெத்ரா கோட்டேஸ் நடித்துக்கொண்டிருந்தாள்.

பெர்னாண்டாவைக் குடும்பத்துக்குள் சேர்த்துக்கொள்ளச் செய்த சமரசம் எதுவும் பலிக்கவில்லை. உடலுறவு முடிந்து எழுந்திருக்கும் போது அவள் அணிந்திருக்கும் கம்பளித் துணியைக் கழற்றி வைக்க வேண்டும்; இல்லையென்றால் அண்டை வீட்டுக்காரர்கள் அதைப் பற்றிக் கிசுகிசுப்பார்கள் என்று பெர்னாண்டாவிடம் உர்சுலா வற்புறுத் தியது வீணாயிற்று. குளியலறையைப் பயன்படுத்தச் சொல்லியும் இரவில் கழிப்பறையைப் பயன்படுத்த அறிவுறுத்தியும் தங்கத்தாலான அவளுடைய மலக் கோப்பையைச் சிறு தங்க மீன்கள் செய்வதற்காக கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுக்கு விற்கவும் அவளை இணங்க வைப்பதில் உர்சுலா தோல்விதான் அடைந்தாள். பெர்னாண்டாவின் உச்சரிப்புக் குறைபாடும் தன் முன்னால் அர்த்தமில்லாத பேச்சுகளைப் பேசும்போது இடக்கரடக்கலான வார்த்தைகளைப் பயன்படுத்தும் பழக்கமும் அமரந்தாவுக்கு அசௌகரியமாக இருந்தன. பெர்னாண்டா வைப் பார்த்து ககுகண்கடி என்பாள். "ககுகண்கடி கக்ககுகம் கழுககத்கதுகக்ககுகம் கவிகத்கதிகயாகசகமிகல்கலாகத கசிகலகர் கஇகருகக்ககிகறாகர்ககள். கநீகயுகம் கஅகவகர்ககளிகல் கஒகருகத்கதி" என்பாள். இந்த ஏளனத்தால் எரிச்சலடைந்த பெர்னாண்டா ஒருநாள் அமரந்தா என்ன சொல்கிறாள் என்று தெரிந்துகொள்ள விரும்பினாள். சங்கேத வார்த்தைகள் இல்லாமல் பதில் சொல்லும்படி கேட்டாள். "நான் சொல்லிக்கொண்டிருந்தது" என்று அமரந்தா அவளிடம் சொன்னாள். "குண்டிக்கும் முகத்துக்கும் வித்தியாசமில்லாத சிலர் இருக்கிறார்கள். நீயும் அவர்களில் ஒருத்தி" என்றாள். அப்போது முதல் அவர்கள் இருவரும் மறுபடியும் பேசிக் கொள்ளவில்லை. சூழ்நிலைகள் கட்டாயப்படுத்தும்போது குறிப்புச் சீட்டுகளை அனுப்பிக்

கொள்வார்கள். தன்னுடைய மூதாதையர்களின் பழக்க வழக்கங்களைத் திணிக்கும் முயற்சியைப் பெர்னாண்டா கைவிடவில்லை. சமையலறையிலேயே சாப்பிடும் பழக்கத்துக்கு முடிவு கட்டினாள். உணவு அறையிலிருக்கும் மேஜையில் வெள்ளி மெழுகுவர்த்தித் தாங்கியை வைக்கும் முறையையும் பரிமாறும் விதத்தையும் மடியில் லினன் துணி விரித்து உட்கார்ந்து சரியான நேரத்துக்கு உணவருந்தும் பழக்கத்தையும் நடைமுறைப்படுத்தினாள். அன்றாட வாழ்க்கையில் மிகவும் எளிதானது என்று உர்சுலா நினைத்திருந்த பயபக்தியான செயல் வீட்டுக்குள் பதற்றமான சூழ்நிலையை ஏற்படுத்தியது. உணவருந்தும் முன்பு ஜெபமாலையை உருட்டிப் பிரார்த்தனை செய்ய வேண்டும் என்ற தீர்மானத்துக்கு எதிராக மற்றவர்களை முந்திக்கொண்டு மௌனியான ஹோசே அர்க்காதியோ செகுந்தோ கலகம் செய்தான். ஆனால் அந்த வழக்கம் கட்டாயமாக்கப்பட்டது. அந்த வழக்கம் அண்டை வீட்டுக்காரர்களின் கவனத்தை ஈர்த்தது. புயேந்தியா குடும்பத்தவர்கள் மற்றவர்களைப் போலச் சாப்பாட்டு மேஜை முன்னால் உட்காருவதில்லை; உணவருந்தும் செயலை ஒரு பலிபூசையாக்கி விட்டார்கள் என்ற வதந்தியைக் கிளப்பிவிட்டார்கள். உர்சுலாவின் மூட நம்பிக்கைகள் பாரம்பரியமாக வந்தது என்பதைவிட அந்தக் கணத்தின் உள்ளுணர்வால் தோன்றுபவை. பெர்னாண்டாவின் நம்பிக்கைகள் அவளுடைய பெற்றோர்களிடமிருந்து அவளுக்குக் கிடைத்தவை. அவற்றை அவள் வரையறுத்து வைத்திருந்தாள். ஒவ்வொரு சந்தர்ப்பத்துக்கும் ஏற்றாற்போல வகைப்படுத்தியும் வைத்திருந்தாள். உர்சுலாவின் நம்பிக்கைகளும் பெர்னாண்டாவின் நம்பிக்கைகளும் மோதிக்கொண்டன. உர்சுலாவுக்குப் புலன்கள் வேலை செய்துகொண்டிருந்த காலம்வரை பழைய வழக்கங்கள் தப்பிப் பிழைத்திருந்தன. குடும்பத்தினரின் வாழ்க்கையில் அவளுடைய உள்ளுணர்வுக்கு மதிப்பு இருந்தது. அவள் பார்வையிழந்து வருடங்களின் பாரத்தால் நிலை தாழ்ந்து ஒரு மூலையில் ஒடுங்கிப் போனதும் அந்த வீட்டுக்கு வந்தது முதல் பெர்னாண்டா தொடங்கிய இறுக்கமான வட்டம் பூர்த்தியானது. அவளைத் தவிர வேறு யாராலும் அந்தக் குடும்பத்தின் விதியைத் தீர்மானிக்க முடியவில்லை. உர்சுலாவின் ஆசைப்படி சாந்தா சோபியா தெ லா பியாதெத் நடத்திக்கொண்டிருந்த அடுமனை வியாபாரத்தையும் மிட்டாய் வியாபாரத்தையும் எந்தப் பயனுமில்லாதவை என்று பெர்னாண்டா நினைத்தாள். அதை மூட அவளுக்கு அதிகமாகவில்லை. அதிகாலை முதல் படுக்கப் போகும் நேரம்வரைக்கும் விரியத் திறந்தே கிடந்த அந்த வீட்டின் கதவுகள் பகலுறக்க வேளைகளில் மூடப்பட்டன. வெயில் படுக்கையறைகளைச் சூடாக்கி விடுகிறது என்று முகாந்திரம் சொல்லப்பட்டது. மெல்ல மெல்ல அந்த வழக்கம் நிரந்தரமானது. அந்த வீடு நிர்மாணிக்கப்பட்ட காலத்திலிருந்து கதவுக்கு மேல்பக்கமாகக் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்த கற்றாழைக் கிளையும் ரொட்டித் துண்டும் யேசுவின் புனித இதயம் பதித்த சுவர்த் தொங்கலால் இடம் மாற்றப்பட்டன. இந்த மாற்றங்களும் அவற்றின் பின்விளைவுகளும் என்னவாக இருக்கும் என்பதைக் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா எப்படியோ முன்கூட்டி உணர்ந்திருந்தார். “நாம் மேட்டுக்குடி ஆட்களாக மாறிக்கொண்டிருக்கிறோம்” என்று எதிர்ப்புத் தெரிவித்தார். “இப்படியே போனால்

மறுபடியும் ஒருமுறை பழமைவாதக் கட்சி அரசாங்கத்துக்கு எதிராகப் போர் செய்ய வேண்டியிருக்கும். ஆனால் இந்த முறை ஓர் அரசனை கொலுவேற்றுவதற்காக இருக்கும்" என்றார். பெர்னாண்டா அவருடைய வழியில் குறுக்கிட்டுவிடாமல் தந்திரமாக நழுவினாள். அவருடைய சுதந்திரமான உணர்வும் எல்லா வகையான சமூகக் கட்டுப்பெட்டித் தனங்களுக்கும் எதிரான குணமும் அவளைத் தொந்தரவு செய்தன. காலை ஐந்து மணிக்கு அவர் குடிக்கும் காப்பி, அவருடைய பட்டறையின் அலங்கோலம், அவருடைய சுருங்கிப் போன போர்வை, மாலை வேளைகளில் தெருவைப் பார்த்த வாசலில் அவரின் இருப்பு எல்லாமும் அவளுக்கு எரிச்சலூட்டின. ஆனால் குடும்ப எந்திரத்தின் ஆட்டம் கண்ட அந்த உறுப்பை அவள் சகித்துக்கொள்ள வேண்டியிருந்தது. ஏனெனில் அந்தப் பழைய கர்னல் காலத்தாலும் ஏமாற்றத்தாலும் வசப்படுத்தப்பட்ட விலங்கு என்றும் முதுமையின் புரட்சியால் அந்த வீட்டின் அஸ்திவாரத்தையே பெயர்க்க அவரால் முடியும் என்றும் அவளுக்குத் தெரிந்திருந்தது. தங்களுடைய முதல் பிள்ளைக்குத் தன்னுடைய முப்பாட்டனின் பெயரை வைக்க வேண்டும் என்று கணவன் முடிவெடுத்தபோது அவள் அதை எதிர்க்கவில்லை. ஏனெனில் அந்த வீட்டில் அவளுக்கு ஒரு வருடப் பழக்கம் மட்டுமே இருந்தது. ஆனால் முதல் பெண் பிறந்தபோது தன்னுடைய தயக்கமில்லாத தீர்மானத்தை வெளிப்படுத்தினாள். குழந்தைக்குத் தன்னுடைய தாயின் பெயரான ரெனேட்டாவைச் சூட்ட வேண்டும் என்றாள். உர்சுலா அந்தப் பெண் குழந்தையை ரெமேதியோஸ் என்று அழைக்க முடிவு செய்திருந்தாள். அவுரேலியானோ செகுந்தோ கேலிக்குரிய மத்தியஸ்தனாக இருந்த அந்தப் பதற்றமான விவாதத்தின் முடிவில் குழந்தைக்கு ரெனேட்டா ரெமேதியோஸ் என்று பெயரிட்டார்கள். ஆனால் பெர்னாண்டா அவளை ரெனேட்டா என்றே அழைத்தாள். கணவனின் குடும்பத்தாரும் நகரவாசிகள் எல்லாரும் அவளை ரெமேதியோஸின் சுருக்கப் பெயரான மேமே என்ற பெயரில் அழைத்தார்கள்.

பெர்னாண்டா ஆரம்பத்தில் தன்னுடைய குடும்பத்தைப் பற்றி எதுவும் பேசாமலிருந்தாள். நாளடைவில் அவளுடைய அப்பாவை இலட்சியவாதியாகச் சித்திரிக்கத் தொடங்கினாள். உணவு மேஜையில் உட்கார்ந்திருக்கும்போது ஆடம்பரத்தின் எல்லா வடிவங்களையும் துறந்து புனிதராகும் பாதையில் இருப்பவர் அவர் என்றாள். தன்னுடைய மாமனாரைப் பற்றிய இந்த மட்டற்ற புகழ்ச்சியைக் கேட்டுத் திகைத்துப் போன அவுரேலியானோ செகுந்தோவால் மனைவியின் முதுகுக்குப் பின்னால் சின்ன வேடிக்கைகளைச் செய்யாமல் இருக்க முடியவில்லை. குடும்பத்தில் மற்றவர்களும் அவனுடைய உதாரணத்தைப் பின்தொடர்ந் தார்கள். குடும்ப இணக்கத்தைக் கட்டிக் காப்பாற்றுவதில் அதீத கவனம் கொண்டவளும் குடும்பச் சச்சரவுகளால் ரகசியமாகப் பாதிக்கப் பட்டவளுமான உர்சுலாகூட ஒருசமயம் அப்படிப் பேசும் சுதந்திரத்தை எடுத்துக்கொண்டாள். தன்னுடைய கொள்ளுப்பேரனுக்கு மடத்துத் தலைவரின் எதிர்காலம் உறுதியளிக்கப்பட்டிருப்பதாகச் சொன்னாள். ஏனெனில் அவன் "ஒரு புனிதரின் பேரன். ஓர் அரசியின் மகன்.

நல்ல மேய்ப்பன்" என்று கேலிசெய்தாள். அந்த ரகசியப் புன்னகையை மீறிக் குழந்தைகள், கடிதங்களில் பக்திக் கவிதை எழுதும் தங்கள் தாத்தாவை ஓர் இதிகாச நாயகனாக நினைத்தார்கள். ஒவ்வொரு கிறிஸ்துமஸுக்கும் அவர் பின்வாசல் வழியாகக் கொண்டுவரக் கடின மான பரிசுப் பெட்டிகளை அவர்களுக்கு அனுப்பினார். உண்மையில் அவை அவருடைய பிரபுத்துவச் சொத்தின் மிச்சங்கள். பிள்ளைகளின் படுக்கையறையில் புனிதர்களின் ஆளுயரத் திருவுருவங்களுக்குப் பீடம் அமைக்க அவற்றைப் பயன்படுத்தினார்கள். புனிதர்களின் பளிங்குக் கண்கள் அந்த உருவங்களுக்குக் கலக்கமான களையைக் கொடுத்தன. அவர்கள் அணிந்திருந்த கலைத்தன்மையுடன் எம்பிராய்டரி செய்யப் பட்ட உடைகள் எந்த மகோந்தாவாசியின் உடையை விடவும் நேர்த்தி யானவையாக இருந்தன. மெல்ல மெல்ல அந்த வசிப்பிடம் புயேந்தியா இல்லத்தின் பொலிவிலிருந்து புராதனமும் உயிர்ப்புமில்லாத சவக்களைக்கு உருமாறியது. "அவர்கள் ஏற்கனவே குடும்பக் கல்லறை முழுவதையும் நம்மிடம் அனுப்பிவிட்டார்கள். இனி நமக்குத் தேவைப்படுவது அழும் வில்லோ மரங்களும் கல்லறை மூடிகளும்தாம்" என்று அவுரேலியானோ செகுந்தோ ஒருநாள் சொன்னார். அந்தப் பெட்டிகளில் குழந்தைகள் விளையாடுவதற்கான எதுவும் வந்திருக்கவில்லை. எனினும் மிகப் பழைமையானதும் எதிர்பாராததுமான அந்தப் பரிசுகள் அந்த வீட்டில் வித்தியாசமானவை என்பதால் பிள்ளைகள் டிசம்பர் மாதம் வருவதற்காக வருடம் முழுவதும் காத்திருந்தார்கள். குட்டி ஹொசே அர்க்காதியோ இறையியல் பள்ளிக்குப் போகத் தயாராகிக்கொண்டிருந்த பத்தாவது கிறிஸ்துமஸின்போது அவனுடைய தாத்தாவிடமிருந்து ஒரு பிரம்மாண்ட மான பெட்டி வழக்கத்தைவிட முன்னதாக வந்து சேர்ந்தது. பெட்டி பலமாக ஆணியடித்து மூடப்பட்டிருந்தது. இடைவெளிகளில் மசகு பூசிப் பாதுகாக்கப்பட்டிருந்தது. வழக்கம்போலவே அச்செழுத்துகளில் 'மிகவும் வந்தனத்துக்குரிய சீமாட்டி டானா பெர்னாண்டா தெல் கார்பியோ தெ புயேந்தியா' என்று முகவரியும் எழுதப்பட்டிருந்தது. அவள் அறைக்குள்ளிருந்து கடிதத்தைப் படித்துக்கொண்டிருந்தபோது பிள்ளைகள் பெட்டியை உடனே திறக்கச் சொல்லி அவசரப்பட்டார்கள். வழக்கம் போல அவுரேலியானோ செகுந்தோ உதவியுடன் முத்திரையை உடைத்து மூடியைத் திறந்தார்கள். உள்ளேயிருந்த மரத்தூளை எடுத்துக் கொட்டினார்கள். செப்பு மரையாணிகள் போட்டு முறுக்கிய நீளமான ஈயப் பேழையைப் பார்த்தார்கள். குழந்தைகள் பொறுமையில்லாமல் பார்த்துக்கொண்டிருக்க அவுரேலியானோ செகுந்தோ அந்த எட்டு மரையாணிகளையும் அகற்றினான். ஈயத் தகட்டு மூடியைத் திறந்தும் அலறக்கூட நேரமில்லாமல் குழந்தைகளை ஓரமாகத் தள்ளிவிட்டான். உள்ளே கறுப்பு உடை அணிந்து, மார்பில் சிலுவையைப் பிடித்தபடி கிடந்த டான் பெர்னாண்டோவைப் பார்த்தான். அவருடைய சருமத்தில் சவப் புண்கள் வெடித்து, நுரைத்து வழிந்த முத்துகளைப் போன்ற குமிழிகளுடன் மெதுவாக அழுகிக்கொண்டிருந்தன.

மகள் பிறந்த கொஞ்ச காலத்துக்குப் பின்பு கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுக்கு எதிர்பாராத வெற்றி விழாக் கொண்டாட்டம் வந்தது. அரசாங்கம் நீர்லாந்தியா உடன்படிக்கை ஆண்டு விழாவையும்

கொண்டாட உத்தரவிட்டது. அந்தத் தீர்மானம் அரசுக் கொள்கைக்கு முரணானது என்று அவர் கடுமையாக எதிர்த்தார். தனக்கான பாராட்டு விழாவை மறுத்தார். "பாராட்டு விழா என்ற வார்த்தையை என் வாழ்நாளில் இப்போதுதான் முதல் முறையாகக் கேட்கிறேன். ஆனால் அர்த்தம் என்னவானாலும் அது ஒரு தந்திரம்" என்றார். தங்க வேலைப் பட்டறை முழுக்கத் தூதர்கள் நிரம்பினார்கள். பழைய நாட்களில் காக்கைகளைப் போலக் கர்னலை விரட்டிய வயதான வழக்கறிஞர்கள் கறுப்பு சூட்டுடன் திரும்பி வந்திருந்தார்கள். பழைய நாட்களில் போரை நிறுத்துவதற்காக வந்த அதே தோற்றத்திலிருந்த அவர்களுடைய பாராட்டுகள் அவருக்கு எரிச்சலைக் கொடுத்தன. தன்னை நிம்மதியாக விடுமாறு உத்தரவிட்டார். அவர்கள் சொன்னது போலத் தான் தேசத்தின் நாயகன் அல்லவென்றும் வேறு ஞாபகங்கள் எதுவுமில்லாத சாதாரணக் கைவினைஞன் என்றும் தன்னுடைய சிறிய தங்க மீன்களுக்கு மத்தியில் மறதியிலும் துயரத்திலும் உழன்று செத்துப் போவதே தன்னுடைய கனவு என்றும் சொன்னார். குடியரசின் அதிபரே மகோந்தாவுக்கு நேரில் வந்து கர்னலுக்குக் கௌரவ விருதை வழங்கத் திட்டமிடப் பட்டிருப்பதாகச் சொன்னதுதான் அவருக்கு மிகவும் ஆத்திரமூட்டியது. தான் அவரைச் சுட்டுக் கொல்ல ஆர்வமாகக் காத்துக்கொண்டிருப்பதாக கர்னல் அவுரேலியானோ புயேந்தியா சொன்னார். அவர் ஆட்சியில் நடந்திருக்கும் முறைகேடுகளுக்கும் ஊழல்களுக்கும் விலையாக அல்ல; யாருக்கும் எந்தத் தொல்லையும் கொடுக்காத ஒரு கிழவனை அவமானப் படுத்தியதற்காகவே அவரைக் கொல்லப் போகும் தகவலை அதிபரிடம் சேர்ப்பிக்கச் சொன்னார். அந்தத் தீர்மானத்தின் பின்னணியிலிருந்த வன்மத்தைப் புரிந்துகொண்ட அதிபர் கடைசி நொடியில் தன்னுடைய பயணத்தை ரத்துசெய்தார். பட்டத்தைத் தனித் தூதர் மூலம் கொடுத் தனுப்பினார். பக்கவாதத்தால் பீடிக்கப்பட்டுப் படுக்கையிலிருந்த கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் எல்லா வகையான நிர்ப்பந்தங் களாலும் நெருக்கப்பட்டுத் தனது பழைய ராணுவத் தோழரைப் பார்த்துச் சமாதானப்படுத்துவதற்காகப் படுக்கையை விட்டு எழுந்தார். இளமைப் பருவம் முதல் தன்னுடைய வெற்றிகளையும் தோல்விகளையும் பகிர்ந்துகொண்ட தன்னுடைய பழைய நண்பர் தலையணைகள் அடுக்கி வைத்த ஆடும் நாற்காலியில் அமர்ந்து நான்கு ஆட்களால் தூக்கிக் கொண்டு வரப்பட்டதைப் பார்த்ததும் தன்னுடனான ஒற்றுமையை வெளிப்படுத்தவே அத்தனை சிரமப்பட்டிருக்கிறார் என்று கொஞ்சமும் சந்தேகப்படாமல் கர்னல் எண்ணினார். ஆனால் அந்த வருகையின் உண்மையான நோக்கம் தெரிய வந்ததும் பட்டறையிலிருந்து அவரைத் தூக்கிக்கொண்டு போகச் செய்தார். "உன்னைச் சுட்டுக் கொல்ல அவர்களை நான் அனுமதித்திருந்தால் உனக்குப் பெரும் உதவியாக இருந்திருக்கும் என்று இப்போது நம்புகிறேன்" என்று அவரிடம் சொன்னார்.

எனவே புயேந்தியா குடும்பத்திலிருந்து யாரும் பங்கேற்காமல் விழாக் கொண்டாடப்பட்டது. பாராட்டு விழாவும் கலை விழாவும் ஒரே சமயத்தில் வந்தது தற்செயலானது. ஆனால் இந்தத் தற்செயல் நிகழ்வு தன்னை மேலும் குரூரமாக ஏளனம் செய்வதற்காக அரசாங்கத்தால்

முன்கூட்டியே திட்டமிடப்பட்ட ஒன்று என்ற உறுதியான எண்ணம் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் மண்டைக்குள் புகுந்திருந்ததை யாரும் அறிந்திருக்கவில்லை. தனது ஏகாந்தமான பட்டறையில் இருந்த படியே ராணுவ இசையையும் பீரங்கி சல்யூட்டின் முழக்கத்தையும் 'கடவுளே உம்மைத் துதிக்கிறோம்' என்ற கீதத்தையும் கேட்டார். தெருவுக்கு அவர் பெயரைச் சூட்டியிருந்ததையொட்டி வீட்டின் முன்னால் நடத்தப்பட்ட கூட்டத்தில் பேசியவற்றிலிருந்து சில வாசகங்களையும் கேட்டார். கோபத்தாலும் இயலாமையாலும் அவர் கண்களில் நீரோடியது. தனது தோல்விக்குப் பிறகு முதல்முறையாக இளமையின் வலு இல்லாமற் போனது பற்றி வேதனைப்பட்டார். அப்படியிருக்குமானால் பழைமைவாத அரசின் இறுதி அடையாளங்களையும் துடைத்து நீக்கும்படியாக மீண்டும் ஒருமுறை உக்கிரமாகப் போர் செய்திருப்பார். பாராட்டு விழாவின் எதிரொலிகள் அடங்காமலிருந்தபோது உர்சுலா பட்டறையின் கதவைத் தட்டினாள்.

"என்னைத் தொந்தரவு செய்யாதீர்கள். வேலையாக இருக்கிறேன்" என்றார்.

"கதவைத் திற. இதற்கும் கொண்டாட்டத்துக்கும் சம்பந்தமில்லை" என்று இயல்பான குரலில் கட்டாயப்படுத்தினாள் உர்சுலா.

கர்னல் அவுரேலியானோ புயேந்தியா தாழ்ப்பாளை நீக்கிக் கதவைத் திறந்தபோது வெவ்வேறு தோற்றத்தில், எல்லா நிறத்திலும் எல்லா வகையிலுமாகப் பதினேழு இளைஞர்கள் நிற்பதைப் பார்த்தார். உலகின் எங்கேயும் அவர்களை இனங்கண்டு கொள்ளத் தோதான தனிமையான தோற்றம் எல்லாரிடமும் இருந்தது. அவர்கள் அவருடைய பிள்ளைகள். முன்கூட்டியே நிச்சயித்துக்கொள்ளாமல், ஒருவரை ஒருவர் தெரிந்து கொள்ளாமல் கடலோரப் பகுதியின் தூரப் பிரதேசங் களிலிருந்து பாராட்டுவிழாவைப் பற்றிக் கேள்விப்பட்ட உற்சாகத்தில் வந்திருந்தார்கள். எல்லாருடைய பெயரிலும் பெருமிதத்துடன் அவுரேலியானாவின் பெயர் சேர்க்கப்பட்டிருந்தது. பெயரின் பின்பகுதியில் அவர்களுடைய தாயார்களின் பெயர்கள் சூட்டப்பட்டிருந்தன. அவர்கள் அந்த வீட்டில் மூன்று நாட்கள் இருந்தார்கள். உர்சுலாவுக்கு மனநிறைவும் பெர்னாண்டா வுக்குப் பொறாமையுமாக அந்த மூன்று நாட்களும் போர்க்காலம்போல இருந்தன. எல்லாருடைய பெயர்கள், பிறப்பு, ஞானஸ்நானம் போன்ற எல்லா விவரங்களையும் பற்றி உர்சுலா எழுதி வைத்த பேரேட்டைப் பழைய காகிதங்களுக்கு இடையில் தேடி எடுத்தாள் அமரந்தா. ஒவ்வொருவரின் பெயருக்கும் பக்கத்தில் இருந்த இடத்தில் அவர்களுடைய தற்போதைய முகவரியை எழுதிச் சேர்த்தாள். இருபது வருட காலப் போரைப் பற்றிய நினைவுகூரலுக்கு அந்தப் பட்டியலே போதுமானதாக இருந்தது. இருபத்தியோரு பேரின் தலைவன் என்ற முறையில் ஒரு விசித்திரப் புரட்சியை நடத்துவதற்காக மகோந்தாவை விட்டுக் கர்னல் வெளியேறிய நாள் விடியற்காலை முதல் ரத்தத்தில் தோய்ந்த போர்வையைப் போர்த்திக்கொண்டு திரும்பிவந்த இரவுநேரப் பயணங்களின் அட்டவணைவரை அதில் இருந்தன. தன்னுடைய ஒன்றுவிட்ட சகோதரர்களைக் குதூகலப்படுத்தும் வாய்ப்பை நழுவவிட

அவுரேலியானோ செகுந்தோ தயாராக இல்லை. ஆர்ப்பாட்டமான ஷாம்பெய்ன் விருந்து கொடுத்தான். அக்கார்டியன் கச்சேரி நடத்தினான். பாராட்டு விழா காரணமாகக் களைகட்டாமல் போய்விட்ட கலை விழாவின் கோலாகலத்தை ஈடுசெய்வதற்கான முயற்சி என்றும் வியாக்கியானம் செய்யப்பட்டது. அந்த இளைஞர்கள் பாத்திரங்களைப் போட்டு உடைத்தார்கள். காளைமாட்டைப் பிடித்துக் கட்டும் முயற்சியில் அதை விரட்டி ஓடவிட்டு ரோஜாச் செடிகளை நாசம் செய்தார்கள். கோழிகளைச் சுட்டுக் கொன்றார்கள். பியத்ரோ கிரெஸ்பியின் சோக மெட்டுக்கு அமரந்தாவை நடனமாட வைத்தார்கள். அழகி ரெமேதியோஸுக்கு ஆண்களின் சராயை மாட்டிவிட்டு அவளை வழுக்கு மரத்தில் ஏறவிட்டார்கள். கொழுப்புப் பூசிய பன்றியைச் சாப்பாட்டறைக்குள் திருப்பிவிட்டது பெர்னாண்டாவைத் தலை குனியச் செய்தது. ஆனால் அந்த நாசங்களைப் பற்றி யாரும் வருத்தப்பட வில்லை. ஏனெனில் அந்த வீடு ஆரோக்கியமான நிலநடுக்கத்தால் அதிர்ந்துகொண்டிருந்தது. கர்னல் அவுரேலியானோ புயேந்தியா அவர்களை முதலில் நம்பிக்கையில்லாமல்தான் வரவேற்றார். சிலருடைய பிறப்பைப் பற்றிக்கூட அவருக்குச் சந்தேகம் இருந்தது. அவரும் அவர்களின் காட்டுத்தனமான கும்மாளத்தை ரசித்தார். அவர்கள் புறப்பட்டுப் போகும்போது ஆளுக்கு ஒரு தங்க மீனையும் கொடுத்தார். சங்கோஜியான ஹோசே அர்க்காதியோ செகுந்தோகூட அவர்களுக்காக ஒரு பிற்பகலில் கோழிச்சண்டை நடத்தினான். ஆனால் அந்தச் சண்டை ஒரு துயரமாக முடிந்தது. ஏனெனில் அந்த இளைஞர்களில் அவுரேலியானோக்கள் பலர் கோழிச்சண்டையில் விற்பன்னர்களாக இருந்தார்கள். அவர்களால் அருட்தந்தை அந்தோனியோ இசபெல்லின் தந்திரங்களைச் சட்டென்று கண்டுபிடித்துவிட முடிந்தது. அந்தப் பைத்தியக்கார உறவினர்கள் மூலம் நிறைவேற்றக்கூடிய செயல்களின் முடிவற்ற சாத்தியங்களை அவுரேலியானோ செகுந்தோ கண்டான். அவர்கள் எல்லாரையும் அங்கேயே தங்கவைத்துத் தனக்காக வேலை செய்யவைக்கத் தீர்மானித்தான். தாத்தாவின் முனைப்பும் பயண வேட்கையும் கொண்ட அவுரேலியானோ டிரிஸ்டே என்ற பழுப்பு நிறத்தவன் மட்டுமே அந்தத் தீர்மானத்தை ஒப்புக்கொண்டான். ஏற்கனவே பாதி உலகத்தைச் சுற்றி வந்து தன்னுடைய அதிருஷ்டத்தைப் பரிசோதித்துப் பார்த்தவன். எனவே எங்கே தங்குகிறோம் என்பது அவனுக்கு முக்கியமானதாக இருக்கவில்லை. மற்றவர்கள் திருமண மாகாதவர்களாக இருந்தபோதும் தங்களுடைய விதி தீர்மானிக்கப்பட்டு விட்டதாக எண்ணினார்கள். அவர்கள் எல்லாரும் தேர்ந்த கைவினைஞர் கள். குடும்பப் பற்றுள்ளவர்கள். அமைதி விரும்பிகள். அவர்கள் திரும்பி கடலோரப் பிரதேசங்களில் கலையத் தயாராக இருந்த தினத்துக்கு முன்பு, விபூதித் திருநாள் அன்று அமரந்தா அவர்களுக்கு ஞாயிற்றுக் கிழமை உடைகளைக் கொடுத்து அணியச் செய்தாள். தன்னுடன் தேவாலயத்துக்கு அழைத்துப் போனாள். பக்தியைவிட வேடிக்கைதான் அவர்களைப் பலிபீடத்தின் தடுப்பு வேலி அருகில் இட்டுச் சென்றது. அருட்தந்தை அந்தோனியோ இசபெல் அவர்கள் நெற்றியில் சாம்பலால் சிலுவைக் குறியைப் போட்டார். வீட்டுக்குத் திரும்பியதும் அவர்களில்

மிகவும் இளையவன் நெற்றியைத் துடைத்தபோது அந்த அடையாளம் அழியாமலிருப்பதைப் பார்த்தான். அது அழிக்க முடியாதது என்பதோடு சகோதரர்களின் நெற்றியிலும் மறையாமல் இருப்பதையும் கண்டு பிடித்தான். சோப்புப் போட்டுக் கழுவியும் மண்ணைத் தேய்த்தும் உறைத்துக் கழுவியும் பிரஷ்ஷால் தேய்த்தும் முடியாமல் மாக்கல்லும் படிக்காரமும் உபயோகித்தார்கள். ஆனாலும் அவர்களால் அந்தச் சிலுவைகளை அழிக்க முடியவில்லை. இன்னொரு பக்கம், பலிபூசைக்குப் போன அமரந்தாவும் மற்றவர்களும் அதைப் பிரச்சினையாக எடுத்துக் கொள்ளவுமில்லை. "அது அப்படியே இருப்பதும் நல்லதுதான்" என்று அவர்களை வழியனுப்பும்போது உர்சுலா சொன்னாள். "இன்று முதல் 'நீங்கள் யாரென்று எல்லாரும் தெரிந்துகொள்வார்கள்" என்றாள். இசைக்குழுவினருடனும் வாண வேடிக்கையுடனும் ஒரு படைப்பிரிவைப் போல அணிவகுத்து நடந்தார்கள். புயேந்தியா வம்சம் பல நூற்றாண்டு களுக்கான விந்தைச் சேகரித்து வைத்திருக்கிறது என்ற எண்ணத்தை நகரத்தில் விட்டுச் சென்றார்கள். ஹோரசே அர்க்காதியோ புயேந்தியா தனது கண்டுபிடிப்புப் பிரமைகளில் கனவுகண்டிருந்த பனிக்கட்டித் தொழிற்சாலையை அவுரேலியானோ டிரிஸ்டே நகரத்தின் எல்லையில் நிறுவினான்.

வந்து சேர்ந்த சில மாதங்களுக்குப் பிறகு, எல்லாருக்கும் அறிமுக மானவனும் எல்லாருக்கும் பிடித்தமானவனுமாக ஏற்கனவே மாறியிருந்த அவுரேலியானோ டிரிஸ்டே, தன்னுடைய அம்மாவையும் திருமணமாகாத சகோதரியையும் (அவள் கர்னலின் மகள் அல்ல) அழைத்து வருவதற்காக ஒரு வீட்டைத் தேடினான். நகரச் சதுக்கத்தின் மூலையில் கைவிடப் பட்டதாகத் தெரிந்த ஆளில்லாத பெரிய வீட்டின் மேல் அவனுக்கு ஈடுபாடு ஏற்பட்டது. அது யாருடையது என்று விசாரித்தான். அது யாருக்கும் சொந்தமல்ல என்று சிலர் சொன்னார்கள். முன்பு ஒரு காலத்தில் மண்ணையும் சுவர்களிலிருந்து சுரண்டிய சுண்ணாம்பையும் தின்றுகொண்டிருந்த தனிமையான விதவையொருத்தி அங்கே வசித்ததாகவும் அவளுடைய கடைசிக் காலங்களில் செயற்கையான சின்னப் பூக்கள் வைத்த தொப்பியும் வெள்ளி நிற ஷூக்களும் அணிந்து பிஷப்புக்கு எழுதிய கடிதத்தை அனுப்ப அஞ்சலகத்துக்குச் சதுக்கத்தைத் தாண்டி போவதை இரண்டே முறை பார்த்திருப்பதாகவும் தெரிவித் தார்கள். இரக்கமில்லாத பணிப்பெண் ஒருத்திதான் அவளுக்குத் துணையாக இருந்தாள் என்றும் அந்தப் பணிப்பெண் வீட்டுக்குள் புகுந்துவிடும் நாய்களையும் பூனைகளையும் கொன்று, பிணவாடையால் மக்களை எரிச்சல் படுத்துவதற்காக, அவற்றின் சடலங்களை நடுத்தெருவில் வீசியெறிவாள் என்றும் அவனிடம் சொன்னார்கள். கடைசியாகக் கொல்லப்பட்ட பிராணியின் தோலை வெயில் பாடம் செய்து நீண்ட காலம் ஆகியிருந்ததை வைத்து அந்த விதவையும் பணிப்பெண்ணும் யுத்தம் முடிவதற்கு மிக முன்பே இறந்துபோயிருக்கலாம் என்று எல்லாரும் ஊகித்தார்கள். சமீப வருடங்களில் கொடுங்குளிர்காலமோ நாசகாரப் புயலோ இல்லாமலிருந்ததனால்தான் அந்த வீடு நின்று கொண்டிருக்கிறது என்றார்கள். கீல்களில் துருவேறி நாசமாகியிருந்தன. நூலாம்படையின் பலத்தால் மட்டுமே கதவுகள் நின்றிருந்தன. ஜன்னல்

கதவுகள் ஈரத்தால் இறுகி அடைபட்டிருந்தன. தரை கண்ணாடிப் பாளமாக நொறுங்கியிருந்தது. அதில் காட்டுப் பூக்கள் பூத்திருந்தன. விரிசல்களில் பல்லிகளும் நச்சு உயிர்களும் குடியேறியிருந்தன. குறைந்தபட்சம் அரை நூற்றாண்டு காலமாவது மனித உயிரே அங்கே இல்லாமலிருந்திருக்க வேண்டும் என்ற எண்ணத்தை அவையெல்லாம் தோற்றுவித்தன. அவுரேலியானோ டிரிஸ்டேவுக்கு உள்ளே நுழைய எந்த அத்தாட்சியும் தேவைப்படவில்லை. தன்னுடைய தோளால் இடித்து வாசல் கதவைத் தள்ளினான். கரையான் அரித்திருந்த அந்தக் கதவு புழுதியின் மந்தமான கொந்தளிப்புக்கும் கரையான் புற்றுகளுக்கும் நடுவில் ஓசையில்லாமல் விழுந்தது. புழுதி அடங்குவதற்காக நிலைப் படியில் நின்று காத்திருந்த அவுரேலியானோ டிரிஸ்டே அறையின் மையத்தில் உருக்குலைந்து போன ஒரு பெண் நிற்பதைப் பார்த்தான். போன நூற்றாண்டு உடைகளை அணிந்திருந்தாள். வழுக்கை மண்டையில் ஓரிரு மஞ்சள் இழைகள் இருந்தன. இப்போதும் அழகானவையான அகண்ட இரு கண்கள். அந்தக் கண்களில் நம்பிக்கையின் நட்சத்திரங்கள் அணைந்திருந்தன. வியர்த்தமான தனிமையால் அவளுடைய முகத்தின் சருமம் சுருங்கியிருந்தது. வேறு ஏதோ உலகத்தைச் சேர்ந்தது போன்ற அந்தக் காட்சியால் அதிர்ந்துபோன அவுரேலியானோ டிரிஸ்டே அந்தப் பெண்ணின் கையில் தன்னை நோக்கிக் குறிபார்த்திருக்கும் கைத்துப்பாக்கியிருந்ததைக் கவனிக்கவில்லை.

“மன்னித்துக் கொள்ளுங்கள்” என்று முணுமுணுத்தான்.

தட்டுமுட்டுச் சாமான்கள் நிறைந்த அந்த அறையின் மையத்தில் அசையாமல் நின்றாள் அவள். அகண்ட தோள்களும் நெற்றியில் சாம்பல் அடையாளமும் உள்ள அந்தப் பிரம்மாண்ட உருவத்தை அங்குலம் அங்குலமாக ஆராய்ந்துகொண்டிருந்தாள். புழுதிப் படலத்தின் ஊடே, இன்னொரு காலத்தின் படலத்தின் ஊடே அவனில் வேறு ஒரு உருவத்தை, தோளில் இரட்டைக் குழல் துப்பாக்கியையும் கைகளில் முயல்களையும் வைத்திருக்கும் உருவத்தைப் பார்த்தாள்.

“கடவுளின் நேசத்தின் பெயரால், எனக்கு அந்த ஞாபகங்கள் வராமலிருக்கட்டும்” என்று தணிந்த குரலில் சொன்னாள்.

“இந்த வீட்டை வாடகைக்கு எடுக்க விரும்புகிறேன்” என்றான் அவுரேலியானோ டிரிஸ்டே.

அந்தப் பெண் துப்பாக்கியை உயர்த்திக் கையை விறைப்பாக வைத்து விசையில் விரலைப் பதித்து அவனுடைய நெற்றியிலிருக்கும் சாம்பல் சிலுவைக்கு நேராகக் குறிபார்த்தாள்.

“வெளியே போ” என்று கட்டளையிட்டாள்.

இரவு உணவுவேளையில் அவுரேலியானோ டிரிஸ்டே அந்தச் சம்பவத்தைக் குடும்பத்தினரிடம் சொன்னான். உர்சுலா பதறி அழுதாள். “பரிசுத்தமான கடவுளே, அவள் இன்னும் உயிரோடுதான் இருக்கிறாள்” என்று கைகளால் தலையைப் பிடித்துக்கொண்டு வியந்தாள். காலம், போர்கள், கணக்கில்லாத அன்றாடத் துயரங்கள் எல்லாம் சேர்ந்து

அவளை ரெபேக்காவை மறக்கச் செய்திருந்தன. ரெபேக்கா உயிருடன் இருக்கிறாள் என்றும் தன்னுடைய புழுக்குழியில் அழுகிக்கொண்டிருக் கிறாள் என்றும் தெரிந்து தான் விழித்திருக்கும் ஒவ்வொரு நிமிடமும் அவளை மறக்காமலிருந்த ஒரு ஜீவன் இருந்தது; அமரந்தா. காலையில் எழுந்திருக்கும்போதும் தொய்ந்த முலைகளிலும் ஒட்டிய வயிற்றிலும் சோப்புத் தேய்த்துக் கொள்ளும்போதும் முதுமைக்குரிய வெள்ளை நிறமான கஞ்சி போட்ட மொடமொடப்பான பாவாடையையும் இடை ஆடையையும் அணியும்போதும் கையில் காயத்துணியை மாற்றிக் கட்டும்போதும் ரெபேக்காவை மறக்காமலிருந்தாள். எப்போதும், ஒவ்வொரு கணமும் தூக்கத்திலும் விழிப்பிலும் மிகப் பரவசமான நொடிகளிலும் மிக மோசமான நொடிகளிலும் அமரந்தா, ரெபேக்காவை நினைத்துக்கொண்டாள். ஏனெனில் தனிமை அவளுடைய ஞாபகத்தில் ஒரு தேர்வை நடத்தியிருந்தது. வாழ்க்கை அவளுடைய மனதுக்குள் குவித்து வைத்திருந்த நினைவேக்கங்களின் மங்கலான அடுக்குகளிலிருந்து வீணானவற்றை எரித்திருந்தது. இதயத்தைச் சுத்திகரித்திருந்தது. மிகக் கசப்பான வேறு சிலவற்றைப் பெருக்கி நிரந்தரப்படுத்தவும் செய்திருந்தது. ரெபேக்காவின் இருப்பைப் பற்றி அழகி ரெமேதியோஸ் அவளிடமிருந்து தெரிந்துகொண்டிருந்தாள். ஆளில்லாத வீட்டை ஒவ்வொரு முறை தாண்டிச் செல்லும்போதும் அவள் மகிழ்ச்சியற்ற ஒரு சம்பவம் பற்றிச் சொல்லுவாள். அதன் மூலமாகத் தன்னுடைய கசப்பை ஒன்றுவிட்ட சகோதரியிடம் பகிர்ந்துகொள்ள முயன்றாள். அதன் தொடர்ச்சியாக அந்த வெறுப்பின் கதை தன்னுடைய மரணத்துக்குப் பிறகும் நீடித்திருக்கட்டும் என்று நினைத்தாள். ஆனால் அவளுடைய திட்டம் பலிக்கவில்லை. ஏனெனில் அதுபோன்ற ஆவேசமான உணர்வுகள் அழகி ரெமேதியோஸுக்கு இல்லை. மற்றவர்களின் உணர்வு களைப் புரிந்துகொள்ளவும் அவளால் முடியாது. மாறாக, அமரந்தாவின் உணர்வுகளுக்கு நேர் எதிரான உணர்வு உர்சுலாவுக்கு இருந்தது. எந்தக் களங்கமும் இல்லாமல் அவள் ரெமேதியோஸை நினைவுகூர்ந்தாள். புயேந்தியா வம்ச மரத்துடன் சேர்க்கத் தகுதியில்லாதவள் என்ற நிலைக்குப் போனவள் என்பதைவிடப் பெற்றோர்களின் எலும்புகள் நிறைத்த பையுடன் வீட்டுக்கு அழைத்து வரப்பட்ட அப்பாவிச் சிறுமியைத் தான் அவள் நினைத்துப் பார்த்தாள். அவளை மீண்டும் வீட்டுக்கு அழைத்து வந்து அக்கறையாகப் பார்த்துக்கொள்ள வேண்டும் என்று அவுரேலியானோ செகுந்தோ தீர்மானித்தான். ஆனால் அவனுடைய நல்ல நோக்கம் ரெபேக்காவின் சமரசமில்லாத பிடிவாதத்தால் முறிந்து போனது. தனிமையின் சலுகைகளை அடைய வேண்டுமானால் இன்னும் அதிக வருடங்கள் துன்பத்தையும் வேதனையையும் தான் அனுபவிக்க வேண்டும். தான் அதை விடப்போவதில்லை. பெருந்தன்மையின் போலியான ஈர்ப்புகளுக்குத் தன்னுடைய முதுமையை மாற்றிக்கொள்வதும் தனக்குச் சம்மதமல்ல என்று பிடிவாதம்செய்தாள்.

பிப்ரவரி மாதத்தில், கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் பதினாறு பிள்ளைகளும் திரும்பி வந்தார்கள். அவர்கள் நெற்றியில் சாம்பற் சிலுவைகள் இன்னும் அழியாமல் இருந்தன. கொண்டாட்டத்தின் சந்தடிக்கிடையில் அவுரேலியானோ டிரிஸ்டே அவர்களிடம்

'ரெபேக்காவைப் பற்றிச் சொன்னான். அரைநாளில் அவர்கள் அந்த வீட்டின் தோற்றத்தையே புதுப்பித்தார்கள். கதவுகளையும் ஜன்னல் களையும் மாற்றினார்கள். வீட்டின் முன்பக்கச் சுவர்களுக்கு உற்சாகமான நிறச் சாயமடித்தார்கள். சுவர்களைப் புதுப்பித்தார்கள். தரைக்குப் புது சிமெண்டைப் பூசினார்கள். ஆனால் வீட்டுக்குள் வேலையைத் தொடர அவர்களுக்கு அதிகாரம் கொடுக்கப்படவில்லை. ரெபேக்கா வாசல் பக்கம்கூட வரவில்லை. அவர்களின் கிறுக்குத்தனமான புதுப்பித்தல் முடியட்டும் என்றிருந்தாள். பிறகு அதற்கு என்ன கூலி ஆகும் என்று கணக்குப் பார்த்தாள். இன்னும் அவளுடனேயே இருக்கும் பணிப்பெண் அர்ஜெனிதாவிடம் போருக்குப் பிறகு திரும்பப் பெற்ற செலாவணியாகாத நாணயங்களை ஒரு கைப்பிடி அளவு கொடுத்தனுப் பினாள். அவற்றுக்கு இன்னும் மதிப்பு இருக்கிறது என்று நினைத் திருந்தாள். உலகத்துடன் ஒட்டாமல் பிரிந்து நின்றதன் மூலம் அவள் என்ன மாதிரியான விசித்திரப் புள்ளிக்கு வந்து சேர்ந்திருக்கிறாள் என்பதை அவர்கள் புரிந்துகொண்டார்கள். உயிரின் சுவாசம் இன்னும் இருந்தபோதும் பிடிவாதச் சிறையிலிருந்து அவளை மீட்க முடியாது என்றும் புரிந்துகொண்டார்கள்.

கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் பிள்ளைகளின் இரண்டாவது மகோந்தா வருகையில் அவர்களில் இன்னொருவன், அவுரேலியானோ சென்டெனோ அங்கேயே தங்கி அவுரேலியானோ டிரிஸ்டேவுடன் பணியாற்றத் தொடங்கினான். ஞானஸ்நானம் செய்விப்பதற்காக அந்த வீட்டுக்கு அழைத்து வரப்பட்டவர்களில் அவன்தான் முதலாமவன். வந்து சேர்ந்த சில மணி நேரங்களுக்குள் அவன் கைகளுக்குத் தட்டுப்பட்ட உடையக் கூடிய எல்லாப் பொருட் களையும் நொறுக்கியிருந்தான். எனவே உர்சுலாவுக்கும் அமரந்தாவுக்கும் அவனை நன்றாக ஞாபகமிருந்தது. வயது அவனுடைய ஆரம்பகாலத் துடிப்புகளை மட்டுப்படுத்தியிருந்தது. சராசரி உயரமுள்ளவனாக இருந்தான். முகத்தில் அம்மைத் தழும்புகள் இருந்தன. ஆனால் பொருட்களை நொறுக்கும் அசாத்திய ஆற்றல் மட்டும் அப்படியே இருந்தது. கையால் தொடாமலேயே பல தட்டுகளை உடைத்தான். தன்னுடைய மிஞ்சியிருக்கும் விலைமதிப்புள்ள பீங்கான் பொருட்களை நொறுக்குவதற்கு முன்பு, தனி உலோகப் பாத்திரங்களைக்கூடச் சீக்கிரத்தில் ஒடுக்கியும் முறுக்கியும் போட்டிருந்தான் என்பதால் உர்சுலா அவனுக்காகக் கலப்பு உலோகப் பாத்திரங்களை வாங்க முடிவெடுத்தாள். ஆனால் அவனுக்கே எரிச்சல் தரும் அந்த மீட்க முடியாத வலிமைக்கு இன்னொரு பக்கம் இருந்தது. அவனுடைய இணக்கமான குணம் மற்றவர்களின் நம்பிக்கையைப் பெற்றுக் கொடுத்தது. வேலை செய்வதற்கான அபாரமான திறமையும் அவனிடமிருந்தது. மிகக் குறுகிய காலத்தில் அவுரேலியானோ டிரிஸ்டே, உள்ளூர்ச் சந்தையின் தேவைக்கு அதிகமான பனிக்கட்டிகளை உற்பத்தி செய்திருந்தான். சதுப்பு நிலப் பகுதியிலிருக்கும் மற்ற நகரங் களிலும் வியாபாரத்தை விரிவாக்கும் வாய்ப்பைப் பற்றி யோசித்தான். அப்போதுதான் அவன் நிர்ணயமான நடவடிக்கை பற்றிச் சிந்தித்தான். தன்னுடைய வியாபாரத்தை நவீனமயமாக்கினால் மட்டும் போதாது. நகரத்தை வெளிஉலகத்துடன் இணைக்க வேண்டும்.

"நாம் ரயில் பாதையைக் கொண்டு வரவேண்டும்" என்றான். மகோந்தாவில் அந்த வார்த்தை அப்போதுதான் முதல்முறையாக உச்சரிக்கப்பட்டது. மேஜைமீது அவுரேலியானோ டிரிஸ்டே தீட்டியிருந்த வரைபடம், சூரிய யுத்தத்துக்காக ஹோரசே அர்க்காதியோ புயேந்தியா சித்திரித்த திட்டத்தின் நேரடித் தொடர்ச்சியாக இருந்ததைப் பார்த்த உர்சுலா காலம் வட்டப் பாதையில்தான் போய்க்கொண்டிருக்கிறது என்று உறுதிப்படுத்திக்கொண்டாள். ஆனால் தனது முன்னோடியைப் போல அவுரேலியானோ டிரிஸ்டே உறக்கமிழக்கவில்லை. பசியிழக்க வில்லை. அபத்தமான நையாண்டியால் யாரையும் துன்புறுத்தவில்லை. நடைமுறைச் சாத்தியமல்லாத திட்டங்களாகத் தோன்றுபவையெல்லாம் உடனடியாக நடக்கக் கூடியவையே என்று எண்ணினான். அவற்றின் செலவு, தேதிகள் எல்லாவற்றையும் எந்த எரிச்சலும் குறுக்கே வராமல் தர்க்கப்பூர்வமாகக் கணக்கிட்டான். அவுரேலியானோ செகுந்தோவிடம் அவனுடைய கொள்ளுத்தாத்தாவின் சில இயல்புகள் இருந்தன. சில இல்லாமலிருந்தன. ஏளனத்தை அவன் பொருட்படுத்தவில்லை. எனவே ரயில் பாதையைக் கொண்டு வருவதற்கான பணத்தை, தனது சகோதரனின் நீர்வழிப் பயணத் திட்டத்துக்குப் பணம் கொடுத்த அதே மென்மனத்துடன் கொடுத்தான். அவுரேலியானோ டிரிஸ்டே காலண்டரில் நல்ல நாள் பார்த்தான். மழைக்காலம் முடிந்ததும் திரும்பி வருவதாகத் திட்டமிட்டுக்கொண்டு அடுத்து வந்த புதன்கிழமை யன்று புறப்பட்டான். அதற்குப் பிறகு அவனைப் பற்றி எந்தச் செய்தியும் இல்லை. பனிக்கட்டி உற்பத்திக் கூடத்தின் விரிவைப் பார்த்துத் திணறிப் போன அவுரேலியானோ செண்டேனோ தண்ணீருக்குப் பதிலாகப் பழச்சாற்றிலிருந்து பனிக்கட்டி உற்பத்திசெய்யும் பரிசோதனையை ஏற்கனவே தொடங்கியிருந்தான். எப்படிச் செய்வது என்று தெரியாமலும் என்ன செய்வது என்று யோசிக்காமலும் நடத்திய பரிசோதனையில் சர்பத் தயாரிப்பதற்கான அடிப்படைகளை உருவாக்கியிருந்தான். மழைக் காலம் போய் முழுக் கோடைகாலமும் கழிந்தும் தனது சகோதரனைப் பற்றி எந்தத் தகவலும் வராததால் சொந்தமாக ஒரு வியாபாரத்தைத் தொடங்கத் திட்டமிட்டான். குளிர்காலத்தின் ஆரம்பத்தில், அந்தப் பருவத்தின் மிக வெம்மையான ஒரு தினத்தில், ஆற்றில் துணி துவைத்துக் கொண்டிருந்த பெண்ணொருத்தி கிளர்ச்சியடைந்த நிலையில் முக்கியத் தெரு வழியாக அலறிக்கொண்டு ஓடினாள்.

"அது வந்துகொண்டிருக்கிறது. பயங்கரமாக, ஒரு சமையலறை தனக்குப் பின்னால் ஒரு கிராமத்தையே இழுத்துவருவது போல வந்துகொண்டிருக்கிறது" என்று விவரித்தாள். அந்த நொடியில் அச்சமூட்டும் எதிரொலி எழுப்பும் சீழ்க்கை ஒலியாலும் உரத்த மூச்சிறைப்பாலும் நகரமே அதிர்ந்தது. முந்தைய வாரங்களில் இருப்புப் பாதைப் பணியாளர்கள் கட்டைகளையும் தண்டவாளங்களையும் அமைத்துக்கொண்டிருந்தார்கள். அதை யாரும் பொருட்படுத்தவில்லை. ஏனெனில் அது நாடோடிகளின் புதிய வித்தையாக இருக்கலாம் என்றே அவர்கள் நினைத்தார்கள். குழல்களின் எக்காளத்துடனும் கூட வாத்தியங்களின் முழக்கத்துடனும் மேதைகளான ஜெருசலேம்

பயணிகளின் வரிகள் கலந்த தங்களது புராதனப் பாடலைப் பாடிக் கொண்டும் நடனமாடிக்கொண்டும் வந்திருக்கிறார்கள் என்று நினைத் தார்கள். ஆனால் சீழ்க்கைகளின் ஓசையிலிருந்தும் சீறலிலிருந்தும் விடுபட்டதும் மொத்த நகரவாசிகளும் தெருவுக்கு ஓடிப்போய் நின்றார்கள். பூக்களால் அலங்காரம் செய்யப்பட்ட எஞ்சினுக்குள் நின்றபடி அவுரேலியானோ டிரிஸ்டே கையசைத்துக் கொண்டிருப்பதைப் பார்த் தார்கள். எட்டு மாதம் தாமதித்து வந்த ரயிலை அரை மயக்கநிலையில் அவர்கள் முதல்முதலாகப் பார்த்தார்கள். ஏராளமான குழப்பங்களையும் தெளிவுகளையும், ஏராளமான இனிமையும் இனிமையற்றதுமான கணங்களையும் ஏராளமான மாறுதல்களையும் கலவரங்களையும் ஏக்க உணர்வுகளையும் அந்த அப்பாவி மஞ்சள் ரயில் மகோந்தாவுக்குக் கொண்டுவரவிருந்தது.

விந்தையான பல கண்டுபிடிப்புகளைப் பார்த்துக் கண் கூசியிருந்தாலும் மகோந்தாவாசிகளுக்குத் தங்களுடைய ஆச்சரியம் எங்கே தொடங்கியது என்று தெரியவில்லை. ரயில் இரண்டாவது முறையாக வந்தபோது அவுரேலியானோ டிரிஸ்டே கொண்டு வந்த மின்உற்பத்திச் சாதனத்தின் உதவியால் எரிந்த வெள்ளை நிற மின்பல்புகளைப் பார்த்துக்கொண்டு இரவு முழுவதும் கண்விழித்திருந்தார்கள். ரயிலின் டூம்டூம் ஓசைக்குப் பழக்கப்பட அவர்களுக்கு அதிக காலம் பிடித்தது. வியாபாரம் மூலம் செல்வந்தனாகிவிட்ட புரூனோ கிரெஸ்பி சிங்க முகமுள்ள நுழைவுச் சீட்டுக் கொடுக்கும் கவுண்டர் வைத்த தனது அரங்கில் திரையிட்ட உயிருள்ள பிம்பங்களுடன் அவர்களுக்கு வெறுப்புத் தோன்றியது. ஒரு படத்தில் தனது துரதிருஷ்டத்துக்காகக் கண்ணீர் வழிய நேசிக்கப்பட்ட பாத்திரம் செத்துப் புதையுண்ட பின்பு இன்னொரு படத்தில் உயிரோடு தோன்றியதையும் அராபியனாக மாறியதையும் அவர்களால் ஏற்க முடியவில்லை. நடிகர்களின் துயரத்தைப் பங்கு போட்டுக்கொள்ள இரண்டு சென்ட் கட்டணம் செலுத்திய பார்வையாளர்களால் அந்த அசாதாரணமான கபடத்தைப் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. அவர்கள் வெகுண்டு இருக்கைகளை நொறுக்கினார்கள். புரூனோ கிரெப்ஸியின் கோரிக்கைப்படி நகர மேயர் சினிமா பொய்த் தோற்றங்களின் எந்திர அமைப்பு மட்டுமே; பார்வையாளர்களின் உணர்ச்சிவசப்பட்ட கோபங்களுக்குத் தகுதியில்லாதது என்று அறிக்கை விட்டார். அந்த விளக்கத்தால் தாங்கள் புதிய வகையான கழைக்கூத்து வியாபாரத்துக்கு இரையாகிவிட்டதாகப் பலர் நினைத்தார்கள். இனி சினிமாவுக்கு வருவதில்லை என்று முடிவெடுத்தார்கள். கற்பனை மனிதர்களின் துயரத்தைக் காட்டிலும் தங்களுக்கே அழுது தீர்க்க வேண்டிய துயரங்கள் தேவைக்கு அதிகமாக இருக்கின்றன என்றார்கள். புராதனமான கையால் வாசிக்கும் ஆர்கன்களுக்குப் பதிலாக பிரான்சிலிருந்து வந்த கேளிக்கைப் பெண்மணிகள் தங்களுடன் கொண்டுவந்த போனோகிராப் என்ற குழாய் வடிவ இசை எந்திரங்களுக்கும் இதே விதி நேர்ந்தது. அது பல இசைக்குழுவினருக்கும் பாதகமான விளைவுகளை ஒருகட்டத்தில் ஏற்படுத்தியது. தொடக்கத்தில் ஆர்வம் காரணமாக விலக்கப்பட்ட தெருவில் வாடிக்கையாளர்கள் அதிகரித்தார்கள். போனோகிராபின் புதுமையை நேரடியாகப் பார்க்க, கௌரவமான பெண்கள்கூட பணிப்பெண்கள் போல மாறுவேடமிட்டு வந்ததாகச் சொல்லப்பட்டது. அதிக முறையும்

அதிக நெருக்கத்திலும் கவனித்துப் பார்த்த பின்னர் எல்லாரும் சொல்வது போலவும் அந்தக் கேளிக்கைப் பெண்கள் சொல்வது போலவும் அது ஒன்றும் வசீகரமான எந்திரம் அல்ல; அவ்வளவு நெகிழ்ச்சியாகவும் அவ்வளவு மனிதத்தன்மையுடனும் அவ்வளவு அன்றாட உண்மைகள் நிரம்பியதாகவும் உள்ள இசைக்குழுச் சங்கீதத்துடன் எந்திரத்தின் வித்தையை ஒப்பிட முடியாது என்ற முடிவுக்கு அவர்கள் வந்தார்கள். அதன் காரணமாக, எல்லா வீடுகளிலும் போனோகிராப்கள் பரவலாக வந்தபோது அவை முதிர்ந்தவர்கள் ரசிப்பதற்கான சாதனங்கள் அல்ல; குழந்தைகள் கழற்றி விளையாடுவதற்கானவை என்ற தீவிர ஏமாற்றத்துக்கு உள்ளாயின. இன்னொரு பக்கம், நகரத்தில் யாரோ ஒருவன் ரயில் நிலையத்தில் நிறுவியிருந்த தொலைபேசியைப் பரிசோதிக்கும் அப்பட்டமான வேலையை மேற்கொண்டான். அதன் வளைந்த பிடியைப் பார்த்து அது போனோகிராபின் கச்சா வடிவம் என்ற உண்மையைச் சொன்னான். மிகவும் அவநம்பிக்கை கொண்டவர்கள்கூடச் சோர்ந்து போனார்கள். கடவுள் ஒவ்வொருவரையும் ஆச்சரியகரமாகச் சோதிப்பதாகவும் மகோந்தாவாசிகளைப் பரவசத்துக்கும் ஏமாற்றத்துக்கும் சந்தேகத்துக்கும் வெளிப்படுத்தலுக்கும் இடையிலான நிரந்தரமான மாற்றங்களுக்குள் வைக்க விரும்புவதாகவும் உண்மையின் எல்லைகள் எங்கே என்று யாருக்கும் தெரிந்துவிடாமலிருக்கச் செய்வதாகவும் பட்டது. உண்மையும் உண்மையின்மையும் கலந்து குழம்பிய அந்தச் சூழல் செந்தவிட்டு மரத்தடியிலிருந்த ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவின் ஆவியைப் பொறுமையிழக்கச் செய்து பட்டப் பகலிலும் வீடு வீடாக அலையவைத்தது. ரயில் பாதை அதிகாரபூர்வமாகத் தொடங்கப்பட்டு புதன்கிழமை காலை சரியாகப் பதினோரு மணிக்கு ரயில் வரத் தொடங்கியது. ஒரு மேஜை, தொலைபேசி, பயணச்சீட்டுக் கொடுக்கும் சாளரம் எல்லாம் கொண்டதாக மரத்தாலான ஆரம்பக் கால ஸ்டேஷன் நிர்மாணிக்கப்பட்டது. சாதாரணமான பழக்கவழக்கங்கள் கொண்டவர்களாக இருந்தபோதும் ஆண்களும் பெண்களும் மகோந்தாத் தெருக்களில் தென்பட்டார்கள். உண்மையில் சர்க்கஸ் கூடாரத்திலிருந்து வந்தவர்கள் போலத் தெரிந்தார்கள். நாடோடிகளின் வித்தைகளால் இறுகிப் போயிருந்த அந்த நகரத்தில் சீழ்க்கை அடிக்கும் கெட்டில்களுடன் வந்தவர்களும் ஏழாவது நாளில் சொர்க்கத்தைக் காட்டுவதாக உத்தரவாதமளித்தவர்களுமான ஊர் சுற்றி வியாபார வித்தை காட்டுபவர்களுக்கு எதிர்காலமிருக்கவில்லை. ஆனால் பட்டினி மூலம் களைத்துப் போனவர்களிடமிருந்தும் ஏமாற்றப்படுகிறோம் என்று தெரியாதவர்களிடமிருந்தும் அவர்கள் சாமர்த்தியமாக ஆதாயங்களை அறுவடை செய்தார்கள். அதுபோன்ற நாடகமாடிகளின் நடுவில், வழக்கமான அநேகப் புதன் கிழமைகள் ஒன்றில் பருமனும் புன்னகை முகமும் கொண்டவரான திரு. ஹெர்பர்ட்டும் மகோந்தாவுக்கு வந்து சேர்ந்தார். சவாரிக்கான சராயும் காலுறையும் அணிந்திருந்தார். வேட்டைத் தொப்பியும் வெள்ளிச் சட்டம் பொருத்திய கண்ணாடியும் போட்டிருந்தார். கண்கள் மஞ்சள் நிறத்திலிருந்தன. சருமம் மெலிந்த சண்டைச் சேவலுடையதைப் போல இருந்தது. புயேந்தியா இல்லத்தில்தான் உணவருந்தினார்.

முதலாவது சீப்பு வாழைப்பழங்களைத் தின்று முடிக்கும்வரை மேஜையில் உட்கார்ந்திருந்த அவரை யாரும் கவனிக்கவில்லை. தற்செயலாகத் தெருவில் அவரைக் கடந்து வந்த அவுரேலியானோ செகுந்தோ உடைந்த ஸ்பானிய மொழியில், ஹோட்டல் ஜேக்கப்பில் அறை கிடைக்காத எதிர்ப்பைக் காட்டிக்கொண்டிருந்தவரைப் பார்த்தான். வழக்கமாக அந்நியர்களுக்குச் செய்வது போல அவரையும் வீட்டுக்கு அழைத்து வந்திருந்தான். வாயு நிரப்பிய பலூன் வியாபாரம் செய்பவர். அந்த வியாபாரத்துக்காகப் பாதி உலகத்தைச் சுற்றி அபாரமான லாபத்தை ஈட்டியிருந்தார். பறக்கும் கம்பளங்களைப் பார்த்தும் பயன்படுத்தியுமிருந்த மகோந்தாவாசிகளுக்கு அவருடைய கண்டுபிடிப்பு பிற்போக்கானதாகத் தோன்றியதால் அவரால் யாரையும் பலூனை வாங்கச் செய்ய முடியவில்லை. எனவே அடுத்த ரயிலில் திரும்பிப் போகிறார். புலிக்கோடுகளுடனிருந்த கனிந்த வாழைப்பழச் சீப்பை – சமையலறையில் வாழைக் குலையைக் கட்டித் தொங்கவிடுவது அவர்கள் வழக்கம் – பகலுணவு வேளையில் மேஜைக்குக் கொண்டு வந்தபோது பெரிய ஆர்வம் இல்லாமல்தான் முதல் பழத்தை எடுத்தார். பேசிக்கொண்டே சாப்பிட ஆரம்பித்தார். சுவை பார்த்தார். மென்றார். அறிவாளி என்பதைவிட நல்ல சாப்பாட்டுப் பிரியர் என்று தெரிவது போல முதல் குலையைத் தின்று முடித்ததும் இன்னொரு குலையைக் கொண்டுவரச் சொன்னார். பிறகு தன்னுடனேயே எப்போதும் எடுத்துச் செல்லும் கருவிப் பெட்டியிலிருந்து ஆப்டிகல் உபகரணங்கள் அடங்கிய சிறுபேழையை வெளியே எடுத்தார். ஒரு வைர வியாபாரியின் துல்லிய கவனத்துடன் வாழைப்பழத்தை நுட்பமாக ஆராய்ந்தார். ஒரு பிரத்தியேகக் கத்தியால் அதை வெட்டினார். மருந்தகத் தராசில் துண்டுகளைப் போட்டு எடை பார்த்தார். துப்பாக்கி தயாரிப்பவனின் அளவியை வைத்து அதன் அகலத்தைக் கணக்கிட்டார். பின்னர் பேழையிலிருந்து வரிசையாகக் கருவிகளை எடுத்து அறையின் வெப்ப நிலையையும் ஈரப்பதத்தின் அளவையும் வெளிச்சத்தின் அடர்த்தியையும் அளந்தார். அது ஒரு குறுகுறுப்பூட்டும் சடங்காக இருந்தது. எனவே எல்லாரும் உணவருந்தாமல் திரு. ஹெர்பர்ட் வெளிப்படுத்தவிருந்த இறுதித் தீர்ப்புக்காகக் காத்திருந்தார்கள். ஆனால் அவர் எதுவும் சொல்லவில்லை. அந்தச் செய்கை அவருடைய நோக்கம் என்னவாக இருக்கும் என்றும் ஒவ்வொருவரையும் ஊகிக்க வைத்தது.

அடுத்து வந்த நாட்களில் நகரத்தின் வெளிப்பகுதியில் அவர், ஒரு வலையையும் சின்னக் கூடையையும் வைத்துக்கொண்டு பட்டாம் பூச்சிகளை வேட்டையாடிக் கொண்டிருப்பதைப் பார்க்க முடிந்தது. பொறியாளர்கள், மண்ணியலாளர்கள், நீரியல் நிபுணர்கள், இடவிவர விற்பன்னர்கள், நில அளவையாளர்கள் ஆகியவர்களைக்கொண்ட ஒரு குழு புதன்கிழமை வந்தது. திரு. ஹெர்பர்ட் பட்டாம்பூச்சிகளை வேட்டையாடிக் கொண்டிருந்த இடங்களில் அந்தக் குழு வாரக் கணக்காக ஆய்வு நடத்தியது. பின்னர் மஞ்சள் ரயிலில் இணைக்கப் பட்ட உபரிப் பெட்டியில் திரு. ஜாக் பிரவுண் வந்து சேர்ந்தார். அந்தப் பெட்டி முழுவதுமாக வெள்ளி முலாம் பூசப்பட்டிருந்தது.

இருக்கைகளில் பிஷப்புகளுக்குரிய வெல்வெட் போட்டிருந்தது. நீல நிறக் கண்ணாடியால் கூரை அமைக்கப்பட்டிருந்தது. அந்தப் பிரத்தியேகப் பெட்டியிலேயே வெவ்வேறு காலங்களில் எல்லா இடங்களிலும் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவைப் பின்தொடர்ந்திருந்த கறுப்பு உடை வழக்கறிஞர்களும் வந்தார்கள். பொறியாளர்கள், மண்ணியலாளர்கள், நீரியல் நிபுணர்கள், இடவிவர விற்பன்னர்கள், நிலஅளவையாளர்கள், வாயு நிரப்பிய பலூன்களுடனும் வண்ணப் பட்டாம்பூச்சிகளுடனும் வந்த திரு. ஹெர்பர்ட், தன்னுடைய நடமாடும் வீட்டுடனும் மூர்க்கமான ஜெர்மன் ஷெப்பர்ட் நாய்களுடனும் வந்த திரு. பிரவுன் அனைவருமே போருடன் தொடர்புடையவர்கள் என்று மக்கள் பேசிக்கொள்ள இடம் கொடுத்தது. அதைப் பற்றி யோசிக்க அதிக அவகாசமில்லை. இருப்பினும் சந்தேகப் பேர்வழிகளான மகோந்தாவாசிகள் என்ன இழவு நடந்துகொண்டிருக்கிறது என்று ஆச்சரியப்படத் தொடங்குவதற்கு முன்பே, துத்தநாகக் கூரைகள் வேய்ந்த மரவீடுகள் நிறைந்த தற்காலிகக் குடியிருப்பாக நகரம் உருமாறியிருந்தது. இருக்கைகளில் மட்டுமல்லாமல், நடைமேடைகளிலும் ரயில் பெட்டிகளின் கூரைகளிலும் அமர்ந்து பயணம் செய்து உலகின் பாதித் தூரத்திலிருந்து வந்து சேர்ந்த வெளிநாட்டவர்கள் அவற்றில் தங்கினார்கள். அந்தக் கிரிங்கோக்கள்* பின்னர் தங்களது ஓய்ந்துபோன மனைவிகளை முஸ்லிம் ஒப்பனையுடனும் நீண்ட திரை தொங்கும் தொப்பிகளுடனும் அழைத்து வந்தார்கள். இருப்புப் பாதையைத் தாண்டி ஒரு நகரத்தையே உருவாக்கினார்கள். தெருக்களில் வரிசையாகப் பனைமரங்களை நட்டார்கள். திரையிட்ட ஜன்னல்களுடனும் மாடிகளில் சிறிய வெள்ளை நிற மேஜைகளுடனும் கூரைகளில் பொருத்திய விசிறிகளுடனும் மயில்களும் குயில்களும் திரியும் புல்வெளிகளுடனும் வீடுகள் அமைக்கப்பட்டன. அந்தப் பகுதியை வளைத்துக் கம்பிவேலி கட்டி மின்சாரம் பாய்ச்சப்பட்டது. கோடைகாலத்தின் குளிர்ந்த காலைகளில் பறவைகள் பொரித்துவைத்தது போல கம்பிகள்மீது தென்படும். அவர்கள் எதற்காக வந்திருக்கிறார்கள் அல்லது உண்மையில் அவர்கள் பெருந்தன்மையாளர்கள் மட்டும்தானா என்பது இன்னும் யாருக்கும் தெரியவில்லை. பழைய நாடோடிகளை விட அதிகமான தொல்லையை ஏற்கனவே அவர்கள் ஏற்படுத்தியிருந்தார்கள். ஆனால் அவர்கள் நிரந்தரமாகத் தங்க வந்தவர்களல்ல என்பதோடு புரிந்துகொள்ளக்கூடியவர்களாகவும் இருந்தார்கள். முந்தைய காலங்களில் தெய்வீக சக்திக்கு மட்டுமாக விடப்பட்டிருந்த செயல்களைச் செய்தார்கள். மழையின் போக்கை மாற்றினார்கள். அறுவடைச் சுழற்சியை வேகப்படுத்தினார்கள். தனது வெண்ணிறக் கற்களுடனும் குளிர் நீரோட்டங்களுடனும் எப்போதும் ஓடிக்கொண்டிருந்த ஆற்றை நகரத்தின் மறுபக்கத்தில் கல்லறைக்குப் பின்னால் திருப்பிவிட்டார்கள். அந்தச் சமயத்தில்தான் ஹோசே அர்க்காதியோவின் வெளிறிப்போன கல்லறை மாடத்தின் மேல் வலுவூட்டிய கான்கிரீட்டால் ஒரு கோட்டையைக் கட்டினார்கள். அதன் மூலம் சடலத்திலிருந்து எழும் வெடிமருந்து வாடை தண்ணீரை அசுத்தமாக்காமல் தடுத்தார்கள்.

---

* கிரிங்கோ, கிரிங்கோக்கள் – அயல்நாட்டவர் (ஸ்பானிய வழக்கு)

பிரான்சிலிருந்து வந்த கேளிக்கைப் பெண்மணிகள் வசித்த தெருவை, காதலிகள் இல்லாமல் வந்த வெளிநாட்டுக்காரர்களுக்காக, முன்னைவிட விசாலமான கிராமமாக மாற்றினார்கள். ஒரு மகத்தான புதன்கிழமை அன்று ரயிலில் நிறைய அந்நிய வேசிகளை அழைத்து வந்தார்கள். பழங்கால முறைகளில் தேர்ந்த பாபிலோனியப் பெண்களை அழைத்து வந்தார்கள். அவர்களிடம் எல்லா வகையான ஆயின்மென்ட்களும் இருந்தன. எழுச்சி உண்டாகாதவர்களுக்கு எழுச்சி உண்டு பண்ணவும், தன்னம்பிக்கை இல்லாதவர்களுக்கு தைரியம் அளிக்கவும் ஆவேசக்காரர் களுக்குத் திகட்டலை உண்டாக்கவும் தோராயமானவர்களுக்குப் பதவி உயர்வு கொடுக்கவும் திரும்பத் திரும்ப வருபவர்களுக்குப் பாடம் கற்பிக்கவும் தனிமையான நபர்களுக்கு ஆறுதல் அளிக்கவுமான உபகரணங்கள் அவர்கள் வசம் இருந்தன. துருக்கியர் தெரு, வெளிநாட்டுப் பொருட்கள் நிரம்பிய, வெளிச்சத்தால் அலங்கரிக்கப்பட்ட கடைகளால் பொலிவூட்டப்பட்டது. பழைய சந்தைகள் பிரகாசமான நிறங்களுக்கு மாறின. சனிக்கிழமை இரவுகளில் சூதாட்ட மேஜைகளிலும் துப்பாக்கிச் சுடும் காலரிகளிலும் சாகசக்காரர்கள் இடித்து நெருக்கிக்கொண்டு நிரம்பித் தெருவில் வழிந்தார்கள். எதிர்காலம் ஆருடம் சொல்லப்பட்ட, கனவுகள் வியாக்கியானிக்கப்பட்ட சந்துகளிலும் பொரித்த உணவும் பானங்களும் விற்கும் மேஜைகளைச் சுற்றியும் கூட்டம் முண்டியது. ஞாயிற்றுக்கிழமைக் காலைகளில் மகிழ்ச்சியான குடிகாரர்கள் தரையில் சிதறிக் கிடந்தார்கள். சிலசமயங்களில் சுட்டுத் தள்ளப்பட்டவர்களும் அடிபட்டவர்களும் கத்தியால் குத்தப்பட்டவர்களும் சச்சரவில் குப்பியால் தாக்கப்பட்டவர்களும் கிடந்தார்கள். இரைச்சலும் கட்டுப் பாடில்லாததுமான ஊடுருவலாக இருந்தது அது. ஆரம்ப நாட்களில் தெருக்களில் நடப்பதே அசாத்தியமாக இருந்தது. அறைக்கலன்களும் பெட்டிகளும் தெருவில் அடுக்கப்பட்டிருந்தன. காலியாகக் கிடந்த எந்த இடத்திலும் யாருடைய அனுமதியையும் கேட்காமல் வீடுகளைக் கட்டிக் கொண்டிருந்தார்கள். தச்சு வேலை செய்யும் ஓசை கேட்டுக் கொண்டிருந்தது. வாதுமை மரங்களுக்கிடையில் உறக்க மஞ்சங்களைக் கட்டித் தொங்கவிட்ட ஜோடிகள் பட்டப் பகலில் எல்லாரும் பார்க்க அந்த வலை மஞ்சங்களின் நிழலிலேயே புணர்ந்து கொண்டிருந்தார்கள். அமைதி விரும்பிகளான மேற்கிந்திய நீக்ரோக்கள் உருவாக்கிய மூலை மட்டுமே சாந்தமானதாக இருந்தது. அவர்களும் ஒதுக்குப்புறமான தெருவில் தூண்களை எழுப்பி மரவீடுகளைக் கட்டியிருந்தார்கள். மாலை நேரங்களில் அவற்றின் வாசல்களில் உட்கார்ந்து சீரற்ற வேகத்தில் சோகமான துதி கீதங்களைப் பாடிக்கொண்டிருப்பார்கள். திரு. ஹெர்பர்ட் வருகை புரிந்த எட்டு மாதங்களுக்குப் பிறகு குறுகிய காலத்தில் ஏராளமான மாறுதல்கள் நடந்தன. பழைய மகோந்தாவாசிகளால் தங்களுடைய நகரத்தையே அடையாளம் காண முடியவில்லை.

“வெறுமனே ஒரு கிரிங்கோவை வாழைப்பழம் தின்ன அழைத்து நாமாக வரவழைத்துக் கொண்ட குழப்பத்தைப் பாருங்கள்” என்று அந்தச் சமயத்தில் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா சொன்னார். இன்னொரு பக்கம், அவுரேலியானோ செகுந்தோவுக்கு பனிச் சரிவு

போல வெளிநாட்டுக்காரர்கள் வந்த மகிழ்ச்சியைத் தாங்க முடியவில்லை. வீடு திடீரென்று அறிமுகமில்லாத விருந்தாளிகளாலும் தவிர்க்க முடியாதவர்களாலும் குடிகாரர்களாலும் நிறைந்திருந்தது. சுற்றுக்கட்டுக்கு வெளியே மேலும் சில படுக்கையறைகளைச் சேர்க்க வேண்டியதும் சாப்பாட்டு அறையைப் பெரிதாக்குவதும் பதினாறு பேர் உட்காரக்கூடிய உணவு மேஜைக்காகப் பழையதை மாற்றுவதும் புதிய பீங்கான், வெள்ளிப் பாத்திரங்கள் வாங்குவதும் அவசியமாக இருந்தன. அப்படியும்கூட அவர்கள் முறைவைத்து உணவருந்த வேண்டியிருந்தது. பெர்னாண்டா தன்னுடைய உறுத்தல்களை விழுங்கிக்கொள்ள வேண்டியதாயிற்று. அவர்களுடைய விருந்தாளிகள் அரசர்களைப் போல மோசமானவர்களாக இருந்தார்கள். தங்களுடைய பூட்ஸ் கால்களால் முற்றத்தைச் சகதியாக்கினார்கள். தோட்டத்தில் சிறுநீர் கழித்தார்கள். கண்ட இடத்திலும் பாயை விரித்துப் பகல் தூக்கம் போட்டார்கள். பெண்களின் உணர்வு பற்றிய மரியாதையோ கனவான்களுக்குரிய முறையான நடத்தையோ இல்லாமல் பேசினார்கள். பாமரர்களின் ஊடுருவலால் அமரந்தா மிகவும் அதிர்ச்சியடைந்தாள். பழைய நாட்களைப் போல மறுபடியும் சமையலறையிலேயே உணவருந்தினாள். தன்னுடைய பட்டறைக்கு முகமன் தெரிவிக்க வந்தவர்களில் பெரும்பான்மையானவர்கள் தன் மேலுள்ள அனுதாபத்தாலோ மரியாதையாலோ வரவில்லை என்றும் ஒரு வரலாற்றுப் பண்டத்தைச் சந்திக்கும் ஆர்வத்தினாலோ அருங்காட்சியகப் படிவத்தைப் பார்க்கும் குறுகுறுப்பாலோ சந்திக்க வருகிறார்கள் என்றும் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா நம்பினார். வாசல் கதவருகில் உட்காரும் அபூர்வமான சந்தர்ப்பங்களைத் தவிர இனிமேலும் யார் பார்வையிலும் படக் கூடாது என்று தீர்மானித்து அறைக்குள்ளேயே அடைந்துகொண்டார். இன்னொரு பக்கம், அந்த நாட்களில் ஏற்கனவே கால்களை இழுத்துக்கொண்டும் சுவர்களைத் தடவியபடி நடந்துகொண்டுமிருந்த உர்சுலா ரயில் வரும் நேரங்களில் இளமையின் பரவசத்தை உணர்ந்தாள்.

"நாம் கொஞ்சம் மாமிசமும் மீனும் சமைக்க வேண்டும்" என்று நான்கு சமையற்காரிகளிடமும் சொல்லுவாள். சாந்தா சோபியா தெ லா பியாதத்தின் மேற்பார்வையிலும் வழிகாட்டலிலும் அவர்கள் எல்லாவற்றையும் தயார் செய்வார்கள். "நாம் எல்லாம் சமைக்க வேண்டும். ஏனென்றால் அந்நியர்கள் என்ன சாப்பிட விரும்புவார்கள் என்று நமக்குத் தெரியாதே" என்றாள். அன்றைய மிக வெப்பமான பொழுதில் ரயில் வந்து சேர்ந்தது. பகலுணவு வேளையில் வீடு சந்தைக் கடை இரைச்சலுடன் குலுங்கியது. வியர்த்து ஒழுகிக் கொண்டிருந்த விருந்தாளிகள் யார் விருந்தளிக்கிறார்கள் என்றுகூடத் தெரியாமல் மேஜையில் நல்ல இடத்துக்காக அணிவகுத்தார்கள். சமையற்காரர்கள் ஒருவரையொருவர் இடித்துத் தள்ளிக்கொண்டு பெரிய சூப்புக் கெட்டில்களுடனும் இறைச்சிப் பாத்திரங்களுடனும் காய்கறிகள் நிரம்பிய பெரிய சுரைக் குடுவைகளுடனும் சோற்றுத் தாம்பாளங்களுடனும் நடந்து பரிமாறினார்கள். வற்றாத அகப்பைகளால் பாரல்களிலிருந்து லெமனேடை முகந்து கொடுத்துக்கொண்டிருந்தார்கள்.

அங்கேயிருந்த ஒழுங்கீனம் பெர்னாண்டாவை தொந்தரவு செய்தது. பலரும் ஒரே சமயம் இரண்டு தடவை சாப்பிட்டுக்கொண்டிருந்ததாகத் தோன்றியது. குழப்பத்தில் யாரோ அவளை எதையோ பரிமாறக் கேட்டுக்கொண்டதில் ஆத்திரமடைந்து காய்கறி விற்பவனை அவமதித்து வைதுகொண்டிருந்தாள். திரு. ஹெர்பர்ட் வந்து சென்று ஒரு வருடத்துக்கும் அதிகமாகியிருந்தது. ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவும் அவருடைய ஆட்களும் தங்கள் மகத்தான கண்டுபிடிப்பைத் தேடிப்போன பகுதியில் கிரிங்கோக்கள் வாழை பயிர் செய்யவிருக்கிறார்கள் என்பது மட்டுமே தெரிய வந்தது. கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் வேறு இரண்டு பிள்ளைகளும், நெற்றியில் சாம்பல் சிலுவைகளுடன், வந்து சேர்ந்தார்கள். எரிமலை போல ஏப்பம் விடுவதை அடக்கிக்கொண்டு தங்கள் வருகையை நியாயப்படுத்தினார்கள். "எல்லாரும் வந்துகொண்டிருக்கிறார்கள். அதனால் நாங்களும் வந்துவிட்டோம்" என்றார்கள்.

வாழைச் சாகுபடி களேபரத்தால் பாதிக்கப்படாத ஒரே ஒரு நபர் அழகி ரெமேதியோஸ் மட்டுமே. அற்புதமான பதின்பருவத்தால் பக்குவப்படுத்தப்பட்டிருந்தாள். மேலும் மேலும் சடங்குகளால் ஊடுருவ முடியாதவளாகவும் கெட்ட எண்ணங்களிலிருந்தும் சந்தேகங்களிலிருந்தும் மேலும் மேலும் விலகியவளாகவும் எளிய உண்மைகள் நிறைந்த தனது உலகத்தில் அவள் மகிழ்ச்சியுடனிருந்தாள். பெண்கள் ஏன் ரவிக்கைகளும் பாவாடைகளும் அணிந்து தங்கள் வாழ்க்கையைச் சிக்கலாக்கிக் கொள்கிறார்கள் என்பது அவளுக்குப் புரியவில்லை. ஆகவே, அவள் தானாகவே ஒரு இடைஅங்கியைத் தைத்துக்கொண்டாள். அதைப் போர்த்தியது போல எடுத்து அணிந்துகொள்ளலாம். அம்மணமாக இருக்கிறோம் என்ற உணர்வை விடாமலேயே வேறு சிரமங்கள் எதுவும் இல்லாமல் உடைப் பிரச்சினையைத் தீர்த்துக் கொண்டாள். அவளைப் பொருத்தவரை வீட்டுக்குள் கௌரவமாக இருக்க ஒரே வழி வெளிச்சம்படும்படி இருப்பதுதான். ஏற்கனவே தொடைவரைக்கும் நீண்டு வளர்ந்திருக்கும் கூந்தலை வெட்டும்படியும் சீப்புகளையும் சரடுகளையும் பயன்படுத்திப் பின்னி சிவப்பு ரிப்பன் கட்டும்படியும் சொன்னார்கள். அவள் தலையை மொத்தமாக மழித்துக் கொண்டாள். கூந்தலைப் புனிதர்களுக்குப் பொய்முடி தயாரிக்கக் கொடுத்தாள். தன்னை எளிமையாக வைத்துக்கொள்ளும் அவளுடைய உள்ளுணர்வு திகைப்பூட்டும் அம்சத்தைக் கொண்டிருந்தது. தனது சௌகரியத்துக்காக புது மோஸ்தர் தேவையில்லை என்று அவள் எவ்வளவு தூரம் விலகினாளோ, தன்னியல்புக்கு அடங்கி எவ்வளவு தூரம் சம்பிரதாயங்களைக் கடந்தாளோ அந்த அளவுக்கு அவளுடைய அழகு தொந்தரவு செய்வதாக மாறியது. ஆண்களை மேலும் இளரச் செய்பவளாக மாறினாள். கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் பிள்ளைகள் முதல் முறையாக மகோந்தா வந்தபோது, அவர்களின் ரத்தமும் தன்னுடைய கொள்ளுப் பேத்தியின் ரத்தம் போன்றதுதான் என்று பயந்ததை உர்சுலா மறந்துபோன ஒரு நடுக்கத்துடன் நினைவு கூர்ந்தாள். "உன் கண்களைத் திறந்து வைத்திரு. இவர்களில் யார் மூலமாவது உனக்குக் குழந்தை உண்டானால் அது பன்றி வாலுடன் தான் பிறக்கும்" என்று அவளை எச்சரித்தாள். அது போன்ற எச்சரிக்கை

களை அந்தப் பெண் பொருட்படுத்தவில்லை. ஆண்பிள்ளை போல உடையணிந்து மணலில் புரண்டாள்; வழுக்கு மரத்தில் ஏறினாள். அவளுடைய தாங்கிக்கொள்ள முடியாத பேரழகால் அந்தப் பதினேழு சகோதரர்களையும் அவலநிலைக்குக் கொண்டுவந்து நிறுத்தினாள். அதனால்தான் நகரத்துக்கு வந்தபோது அவர்கள் யாரும் அந்த வீட்டில் உறங்கவில்லை; மகோந்தாவில் தங்கிவிடத் தீர்மானித்த நான்கு பேரும் உர்சுலாவின் வற்புறுத்தலின்பேரில் வாடகைக்கு வீட்டை அமர்த்திக் கொண்டார்கள். இந்த முன்னெச்சரிக்கையைப் பற்றித் தெரிந்ததும் அழகி ரெமேதியோஸுக்குச் சிரித்துச் சிரித்தே செத்துவிடலாமென்றிருந்தது. பூமியில் அவள் இருந்த கடைசி நொடிவரை ஒரு பெண்ணாக அவளது சீர்திருத்த முடியாத விதி ஓர் அன்றாட அழிவாக இருந்ததை அவள் உணரவேயில்லை. உர்சுலாவின் கட்டளையை மீறி ஒவ்வொரு முறையும் உணவு அறைக்கு அவள் வந்தபோதும் வெளியாட்களின் இடையில் அவள் அபாயகரமான தொந்தரவை ஏற்படுத்தினாள். அவளுடைய கச்சாவான இரவு ஆடைக்குள் முழு நிர்வாணமாக இருப்பது அப்பட்டமாகத் தெரிந்தது. அவளுடைய மொட்டைத் தலை ஏன் உறுத்தலாக இல்லை என்பதும் காற்றாடத் தொடைகளைத் திறந்து வைத்திருந்த துணிச்சல் ஏன் குற்றகரமான தூண்டுதலாகத் தெரியவில்லை என்பதும் சாப்பிட்டு முடித்ததும் அவள் விரல்களை நக்குவது ஏன் மகிழ்ச்சியானதாகத் தெரிகிறது என்பதும் யாருக்கும் புரியவில்லை. அழகி ரெமேதியோஸ் பதற்றத்தைக் கொடுத்ததையும் இருந்த இடத்தை விட்டு விலகிய பலமணி நேரங்களுக்குப் பிறகும் உணரக்கூடிய அலைக்கழிப்பின் சுவாசத்தை அவள் விட்டுச் சென்றதையும் புரிந்துகொள்ள வெளியாட்களுக்கு அதிக நேரமாகவில்லை என்பது புயேந்தியா குடும்பத்தவர்களுக்கு ஒருபோதும் விளங்கவில்லை. காதல் தொல்லைகளுக்கு ஆளாவதில் ஆண்கள் நிபுணர்கள் என்பது உலகம் முழுவதும் அனுபவித்த விஷயம் என்பது அழகி ரெமேதியோஸிடமிருந்து வீசும் இயற்கை மணம் உருவாக்கும் பதற்றத்தைப் போல வேறு ஒன்றைத் தாங்கள் அனுபவித்ததில்லை என்று அவர்கள் சொன்னதிலிருந்து நிரூபணமானது. பிகோனியாப் பூக்கள் இருக்கும் முற்றத்திலோ வரவேற்பறையிலோ வீட்டின் எந்த இடத்திலுமோ எங்கே அவள் இருந்தாள் என்றும் அங்கிருந்து அவள் போய் எவ்வளவு நேரம் ஆயிற்று என்றும் துல்லியமாகச் சொல்ல முடிந்தது. அந்த மணம் நீண்ட காலமாக அன்றாட வாசனைகளுடன் கலந்தேயிருந்தது. எனவே வீட்டிலிருப்பவர்களால் அதைப் பிரித்து அறிய முடியவில்லை. ஆனால் வெளியாட்களால் அதை உடனடியாக இனங்காண முடிந்தது என்பது நிச்சயம். எனவே அவள்மீதான காதலால் எப்படி இளம் கமாண்டர் இறந்தான் என்பதையும் தொலைதூரத்திலிருந்து வந்த கனவான் எப்படி நிராசையில் மூழ்கினான் என்பதையும் அவர்கள் மட்டுமே புரிந்துகொள்ள முடிந்தது. தான் கடந்து போகும் வழியில் அந்தரங்கமான மோதலைத் தூண்டிவிடுகிறோம் என்பதையும் தான் அமைதியற்ற ஒரு வட்டத்துக்குள் நடமாடுகிறோம் என்பதையும் அவள் உணரவில்லை. அழகி ரெமேதியோஸ் ஆண்களுக்கு எந்தச் சிறு கெடுதலையும் செய்யவில்லை. ஆனால் தன்னுடைய வெகுளித்தனமான இயல்பாலேயே அவர்களை வருந்தச் செய்தாள். வெளியாட்கள் அவளைப்

பார்த்துவிடக் கூடாது என்பதற்காக உர்சுலா அவளை அமரந்தாவுடன் சேர்ந்து சமையலறையிலேயே உணவருந்துமாறு உத்தரவிட்டு நடைமுறைப் படுத்தினாள். தான் எல்லாக் கட்டுப்பாடுகளுக்கும் அப்பாற்பட்டவள் என்று தெரிந்துவைத்திருந்ததால் அவளுக்கு அந்தத் தடை மிகவும் வசதியானதாகவே தோன்றியது. உண்மையில் நேரம் பார்த்தல்ல; பசிக்கும்போது சாப்பிடுபவளானதால் அது அவளுக்கு வித்தியாசமான தாகவே இல்லை. சில சமயங்களில் அதிகாலை மூன்று மணிக்கு எழுந்து சாப்பிடுவாள். நாள் முழுக்கத் தூங்குவாள். மாதக் கணக்காக முறையான அட்டவணையில்லாமல் கழிப்பாள். ஏதாவது சின்னச் சம்பவம் நடந்து மறுபடியும் ஒழுங்குகளைக் கடைப்பிடிப்பாள். எல்லாம் நியமமாக நடந்துகொண்டிருக்கும்போது பதினோரு மணிக்கு எழுந்து இரண்டு மணிவரைக்கும் முழு நிர்வாணமாகக் குளியலறையிலேயே அடைந்திருப்பாள். நீண்ட நேரத் தூக்கக் கலக்கத்துடன் தேள்களைக் கொன்றுகொண்டிருப்பாள். பிறகு தொட்டியிலிருந்து சுரைக் குடுக்கையால் தண்ணீரை மொண்டு ஊற்றிக் கொண்டிருப்பாள். அது மிக நீண்ட, மிகக் கவனமான, மிகச் சடங்குபூர்வமானதாக இருக்கும். அவளைப் பற்றிச் சரியாகத் தெரியாதவர்கள் சொந்த உடம்பை ரசித்துக்கொண் டிருப்பதாக நினைத்துக்கொள்வார்கள். ஆனால் அவளைப் பொருத்த வரை அந்தச் சடங்கு உணர்வுபூர்வமானதல்ல; பசியெடுக்கும் வரை பொழுதைப் போக்குவதற்கானது. ஒருநாள், அவள் குளிக்கத் தொடங்கும் போது அந்நியன் ஒருவன் கூரையில் ஓர் ஓட்டைப் பிரித்துப் பார்த்து அவளுடைய பேரழகில் மூச்சடைத்துப் போனான். உடைந்த ஓடு வழியாக அவனுடைய ஸ்தம்பித்த கண்களைப் பார்த்தவளிடம் வேறு எந்த எதிர்வினையும் இல்லை; எச்சரிக்கை மட்டுமிருந்தது.

“ஜாக்கிரதை விழுந்துவிடுவாய்” என்று கத்தினாள்.

“உன்னைப் பார்க்கத்தான் வந்தேன்” என்று வெளிநாட்டுக்காரன் முணுமுணுத்தான்.

“நல்லது. ஆனால் ஜாக்கிரதை. அந்த ஓடுகள் நாசமாகியிருக்கின்றன” அவள் சொன்னாள்.

அந்த அந்நியனின் முகத்தில் போதையில் மூழ்கியது போன்ற வேதனையான தோற்றம் இருந்தது. தனது கற்பனை நொறுங்கிவிடக் கூடாது என்பதால் ஆதாரமான வேட்கைகளுக்கு எதிராக மௌனமாகப் போராடிக்கொண்டிருப்பவனாகத் தெரிந்தான். ஓடுகள் உடைந்துவிடும் என்று அவன் பயப்படுகிறான் என்று அழகி ரெமேதியோஸ் நினைத்தாள். அவன் ஆபத்தில் அகப்படக் கூடாது என்பதற்காக வழக்கத்தைவிட வேகமாகக் குளித்தாள். தண்ணீரை ஊற்றிக் கொள்ளும்போது கூரை மோசமாக இருக்கிறது என்று அவனிடம் சொன்னாள். அதன்மேல் விழுந்து படர்ந்திருந்த இலைகள் மழையில் நனைந்து அழுகியிருப்பதாக வும் அதனால்தான் குளியலறையில் தேள்கள் நிரம்பியிருப்பதாகவும் நினைத்தாள். அவளுடைய பேச்சு இணக்கத்தை மறைத்துக்கொள்வதற் கானது என்று நினைத்த அந்த அந்நியன் அவள் சோப்புத் தேய்த்துக் கொள்ளும்போது ஒரு படி முன்னேறினான்.

"நான் சோப்புத் தேய்த்துவிடுகிறேனே?" என்று முனகினான்.

"உன்னுடைய நல்ல நோக்கத்துக்கு நன்றி. ஆனால் என்னுடைய இரண்டு கைகளே போதுமானவை" என்றாள். "அது உன்னுடைய முதுகுதானே?" என்று வெளிநாட்டுக்காரன் கெஞ்சினான். "அது மடத்தனம். யாரும் முதுகுக்குச் சோப்புத் தேய்த்துக் கொள்வதில்லை" என்றாள் அவள்.

பிறகு அவள் துவட்டிக்கொண்டிருந்தபோது அந்த அந்நியன் கண்களில் நீருடன் தன்னைத் திருமணம் செய்துகொள்ளுமாறு அவளிடம் மன்றாடினான். அவ்வளவு சாதாரணமான ஒருவனைத் தான் ஒருபோதும் திருமணம் செய்துகொள்ளப் போவதில்லை; ஏறக்குறைய ஒரு மணி நேரத்தை வெறுமனே ஒரு பெண் குளிப்பதைப் பார்த்துக்கொண்டு வீணடித்திருக்கிறான் என்று அவள் உண்மையாகப் பதிலளித்தாள். கடைசியாக இடையாடையை எடுத்து அணிந்து கொண்டபோது எல்லாரும் சந்தேகப்பட்டதைப் போல, அவள் உள்ளாடை எதுவும் அணியவில்லை என்பது நிரூபணமானது. அவனால் அதைத் தாங்க முடியவில்லை. அந்த ரகசியத்தின் பேரார்வம் என்றென்றைக்குமாகத் தனக்குள் பதிந்திருக்குமென்று உணர்ந்தான். குளியலறைக்குள் இறங்கு வதற்காக இன்னும் இரண்டு ஓடுகளைப் பிரித்தான்.

"அது மிகவும் உயரம். செத்துப்போவாய்" என்று பயத்துடன் எச்சரித்தாள்.

சிதிலமான ஓடுகள் பேரழிவின் ஓசையுடன் நொறுங்கின. பயந்து கத்தக்கூட அவகாசமில்லாமல் அந்த மனிதன் நேராகச் சிமெண்டுத் தரையில் விழுந்து மண்டை பிளந்து இறந்தான். உணவு அறையில் அந்த ஓசையைக் கேட்டு ஓடிவந்த வெளிநாட்டுக்காரர்கள் அவனுடைய உடலை அப்புறப்படுத்தியபோது அழகி ரெமேதியோஸின் மூச்சுத் திணறவைக்கும் மணத்தை அவன் சருமத்தில் முகர்ந்தார்கள். அது அவன் உடலில் ஆழப் புதைந்திருந்தது. அவனுடைய தலையில் ஏற்பட்டிருந்த விரிசல்களிலிருந்து ரத்தம் கசியவில்லை. பதிலாக ரகசிய மணமுள்ள மஞ்சள் நிறமுள்ள திரவம் கசிந்தது. அழகி ரெமேதியோஸின் மணம் ஆண்களின் எலும்புத் துகள்வரை இறங்கி அவர்களை மரணத்தைத் தாண்டியும் துன்புறுத்துவதை அவர்கள் புரிந்துகொண்டார்கள். இருந்தபோதும் அழகி ரெமேதியோஸால் இரண்டு பேர் இறந்த சம்பவத்துடன் அந்தக் கொடும் விபத்தை அவர்கள் தொடர்புபடுத்தவில்லை. அழகி ரெமேதியோஸ் காதலின் சுவாசமல்ல ஆபத்தின் ஊற்று என்பது வெளிநாட்டுக்காரர்கள் இடையிலும் பழைய மகோந்தாவாசிகளுக்கிடையிலும் ஒரு ஐதீகமாக நிலைபெற இன்னும் ஒருவன் சாக வேண்டியிருந்தது. சில மாதங்களுக்குப் பிறகு ஒரு பிற்பகலில் அழகி ரெமேதியோஸ் தோழிகளுடன் பயிர் நடுவதைப் பார்க்கப் போனபோது அந்தச் சம்பவம் நடந்தது. மகோந்தாப் பெண்களுக்கு அந்தப் புதிய விளையாட்டு சிரிக்கவும் ஆச்சரியப்படவும் பயத்துக்கும் வேடிக்கைக்கும் காரணமாக இருந்தது. அந்த நடையைப் பற்றிப் பேசும்போது கனவில் நடந்த அனுபவத்தைப் பற்றிப் பேசுவது

போலப் பேசினார்கள். அந்த அமைதியின் மதிப்பு அப்படிப்பட்டதாக இருந்தது. அழகி ரெமேதியோஸிடமிருந்து மகிழ்ச்சியை விரட்ட உர்சுலாவுக்கு மனம் வரவில்லை. ஆகவே அந்தப் பிற்பகலில், தொப்பியும் கௌரவமான உடையும் அணிந்தாள். வெளியே போகலாம் என்று அவளுக்கு அனுமதியளித்தாள். தோழிகள் கூட்டம் செடி நடும் இடத்துக்குப் போய்ச் சேர்ந்ததுமே காற்றில் நச்சு மணம் நிரம்பியது. பாத்திகளில் வேலை செய்துகொண்டிருந்த ஆட்கள் விநோதமான ஈர்ப்புக்குள்ளானார்கள். கண்ணுக்குத் தெரியாத ஏதோ ஆபத்தால் தொந்தரவுக்குள்ளானார்கள். அநேகம் பேர் விம்மி அழ விரும்பினார்கள். ஆக்ரோஷமான சில ஆட்கள் அழகி ரெமேதியோஸ்மீதும் தோழிகள் மீதும் பாய்ந்தார்கள். வெருண்டுபோன அவர்கள் பக்கத்திலிருந்த ஒரு வீட்டில் தஞ்சமடைந்தார்கள். சற்று நேரத்துக்குப் பிறகு நான்கு அவுரேலியானோக்கள் அவர்களைக் காப்பாற்றினார்கள். அவர்களுடைய நெற்றியிலிருந்த சாம்பல் சிலுவைகளுக்கு ஒரு புனித மதிப்பு இருந்தது. அவை இனத்தின் அடையாளமாகவும் துணிச்சலின் முத்திரையாகவும் தெரிந்தன. அந்தச் சந்தடியைப் பயன்படுத்திக்கொண்டு ஒருவன் பாறையைப் பற்றியிருக்கும் கழுகு நகங்கள் போலிருந்த கையால் அவளுடைய அடிவயிற்றைப் பிடித்ததை அழகி ரெமேதியோஸ் யாரிடமும் சொல்லவில்லை. தன்னைத் தீண்டியவனை அவள் மின்வெட்டுப் போல எதிர்கொண்டாள். அந்தப் பதற்றமான கண்களை ஏறிட்டுப் பார்த்தாள். அவை அணைந்துபோன நிலக்கரிக் கங்குகள் போல அவள் மனதில் பதிந்தன. அன்று இரவு திமிரால் போதையேறிய அந்த நபர் துருக்கியர்கள் தெருவில் தனக்குக் கிடைத்த அதிருஷ்டத்தைப் பற்றிப் பீற்றிக்கொண்டிருந்த சில நிமிடங்களில் ஒரு குதிரை அவன் மார்பில் மிதித்தது. நடுத்தெருவில் ரத்தம் கக்கி அவன் இறந்ததை வெளியாட்களின் கூட்டம் பார்த்தது. அழகி ரெமேதியோஸுக்கு மரணத்தின் சக்தி இருக்கிறது என்ற மூட நம்பிக்கைக்கு மறுக்க முடியாத நான்கு சம்பவங்கள் அத்தாட்சியாயின. அப்படிப்பட்ட எழுச்சியூட்டும் பெண்ணை ஒரு இரவு புணர்ந்துவிட்டு உயிரைவிட்டாலும் கௌரவம் தான் என்று சில ஓட்டைவாயர்கள் சொன்னார்கள். ஆனால் அப்படிச் செய்ய யாரும் முயலவில்லை என்பதுதான் உண்மை. அவளை அடைய மட்டுமல்ல; அவளுடைய அபாயங்களிலிருந்து தப்பவும் மிகப் புராதனமும் மிக எளிமையானதுமான வழியாகக் காதல் இருந்தது. ஆனால் அது மட்டும் யாருக்கும் தோன்றவில்லை. அவளைப் பற்றி அதற்குமேல் கவலைப்படவில்லை. அவளைப் பாதுகாக்க வேண்டும் என்ற யோசனையை அப்போதும் உர்சுலா கைவிடவில்லை. எனினும் அவளை அடிப்படையான வீட்டுக் காரியங்களில் ஈடுபடுத்த முயன்றாள். "நீ நினைப்பதைவிட ஆண்கள் அதிகமாக எதிர்பார்ப்பார்கள்" என்று புதிராகச் சொல்லுவாள். "நீ நினைப்பதைத் தாண்டி ஏராளமான சமையல், ஏராளமான துப்புரவு, அற்ப விஷயங்களுக்காக ஏராளமான துயரங்கள் இருக்கின்றன" என்பாள். அப்படி அவள் தன்னைத்தானே ஏமாற்றிக்கொண்டாள். அழகி ரெமேதியோஸை வீட்டுக் காரியங்களில் பயிற்சி பெறவைக்க முயன்றாள். ஏனெனில் ஒருமுறை அவளுடைய வேட்கை அடங்கிவிட்டால் இந்த உலகத்தில் எந்த ஆணும் பெண்ணின்

கவனக்குறைவைப் பொறுத்துக்கொள்ள முடியாதவனாகவே இருப்பான் என்பது எல்லாப் புரிந்துகொள்ளலுக்கும் அப்பாற்பட்டது என்று அவள் நிச்சயம் செய்திருந்தாள். புதிய ஹோராசே அர்க்காதியோவின் பிறப்பும் அவனைப் போப்பாண்டவராக்கும் அசைக்க முடியாத நோக்கமும் கொள்ளுப் பேத்தியைப் பற்றிக் கவலைப்படுவதிலிருந்து அவளை விலக்கின. உடனடியாகவோ மெதுவாகவோ ஓர் அற்புதம் நிகழும்; எல்லாவற்றுக்கும் இடமிருக்கும் இந்த உலகத்தில் அவளைக் கைப் பிடிக்கவும் பொறுமையுள்ள ஒருவன் இருப்பான் என்ற நம்பிக்கையில் அவளை விதியிடம் விட்டுக்கொடுத்தாள். அவளை ஒரு உருப்படியான பெண்ணாக மாற்றும் முயற்சியை ஏற்கனவே, நீண்ட காலத்துக்கு முன்பாகவே அமரந்தா கைவிட்டிருந்தாள். மறந்துபோன அந்தப் பிற்பகல்களில், தையல் எந்திரத்தின் சக்கரத்தைச் சுற்றிவிடக்கூடப் போதுமான ஆர்வம் காட்டாமலிருந்த மருமகளை ஓர் அப்பாவி என்று அப்போதே முடிவுசெய்திருந்தாள். ஆண்கள் சொல்வது அவளுக்குள் புகாது என்று தெரிந்தபோது "நாங்கள் உன்னை லாட்டரிக் குலுக்கலில் கொடுத்துவிடப் போகிறோம்" என்பாள். பின்னர் அழகி ரெமேதியோஸ் தேவாலயத்துக்குப் போகும்போது முகத்தைச் சால்வையால் மறைத்துக்கொள்ள வேண்டும் என்று உர்சுலா வற்புறுத்திய போது, முகத்திரைக்கு அப்பால் என்ன இருக்கிறது என்று பார்க்க விரும்பும் ஒருவன் அவளுடைய மனத்தின் பலவீனமான இடத்தைக் கண்டுபிடிக்க எப்படியும் தேடி வருவான். அந்த விந்தை எல்லாவற்றையும் மாற்றும் என்று அமரந்தா நினைத்தாள். பல காரணங்களாலும் ஓர் இளவரசனைவிட அருகதையான ஒருவனின் வேண்டுகோளை அவர் நிராகரித்த மடத்தனத்தைப் பார்த்த பின்பு அமரந்தாவுக்கு எல்லா நம்பிக்கைகளும் போயின. பெர்னாண்டா அவளைப் புரிந்து கொள்ள எந்த முயற்சியும் செய்யவில்லை. கலைவிழாவில் அரசியைப் போல ஒப்பனை செய்திருந்த அழகி ரெமேதியோஸைப் பார்த்தபோது அவள் ஒரு அசாதாரணப் பிறவி என்று நினைத்தாள். ஆனால் கைகளால் உணவை எடுத்து உண்பதையும் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாததையும் பார்த்தபோது ஒரு விஷயத்துக்காக அவள் வருத்தப் பட்டாள். இந்தக் குடும்பத்தில் முட்டாள்கள் நீண்ட காலம் வாழ்கிறார்களே என்ற உண்மைக்காக. தான் பார்த்தவர்களிலேயே மிகவும் தெளிவான நபர் அழகி ரெமேதியோஸ்தான் என்று கர்னல் அவுரேலியானோ புயேந்தியா நம்பியதோடு அதைத் திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டு மிருந்தார். தன்னுடைய திகைப்பூட்டும் திறமையால் அதை ஒவ்வொரு கணமும் அவள் வெளிப்படுத்தவும் செய்தாள். எனவே அவளை அவள் போக்கில் விட்டார்கள். தனிமைப் பாலைவனத்தில் திரிவது போல முதுகில் எந்தச் சுமையும் இல்லாமல் அவள் அந்த வீட்டுக்குள் திரிந்து கொண்டிருந்தாள். கனவுகளிலேயே முதிர்ச்சியடைந்தாள். ஒரு மார்ச் மாதப் பிற்பகல் வரைக்கும் கெட்ட கனவுகளோ ஓயாத குளியல்களோ நேரங்கெட்ட உணவுப் பழக்கமோ இல்லாமல் இருந்தாள். தோட்டத்தில் உலரப் போட்டிருந்த தன்னுடைய பிராபண்ட் விரிப்புகளை எடுத்து மடிக்க உதவுமாறு பெர்னாண்டா கேட்டாள். அதைச் செய்யத் தொடங்கி விரிப்பின் ஒரு முனையைப் பிடித்து நின்றபோது அழகி ரெமேதியோஸ் வெளுத்துப் போயிருப்பதை அமரந்தா கவனித்தாள்.

“நீ நலமாக இல்லையா?” என்று கேட்டாள்.

விரிப்பின் மறுமுனையை இறுகப் பிடித்திருந்த அழகி ரெமேதியோஸ் பரிதாபப் புன்னகையுடன் சொன்னாள் “மாறாக, இப்போதைவிட ஒருபோதும் நன்றாக இருந்ததில்லை.”

அவள் அதைச் சொல்லி முடித்துக்கொண்டிருந்தபோது வெளிச்சத்தின் நுட்பமான காற்று கைகளிலிருந்த விரிப்புகளை மெதுவாக இழுத்து விரித்துப் போட்டது. அமரந்தா, தன்னுடைய பாவாடைலேஸில் மர்மமான நடுக்கத்தை உணர்ந்தாள். அழகி ரெமேதியோஸ் நிலத்திலிருந்து எழும்பத் தொடங்கியபோது கீழே விழுந்துவிடாமலிருக்க விரிப்பின் முனையை இறுகப் பிடித்துக்கொண்டாள். அந்தச் சமயத்தில் உர்சுலா ஏறத்தாழ குருடாகிவிட்டிருந்தாள். ஆனால் அவளுக்கு மட்டுமே அந்தக் காற்றின் இயல்பை அடையாளம் கண்டுகொள்ளப் போதுமான மன அமைதி இருந்தது. விரிப்புகளை வெளிச்சத்தின் கருணைக்கு விட்டுக் கொடுத்தாள். தேனீக்களும் டேலியாக்களும் நிறைந்த சூழலை விட்டுவிட்டு அழகி ரெமேதியோஸ் சிறகடிக்கும் விரிப்புகளுக்கிடையில் விடைபெறும் முகமாகக் கையசைத்து உயர்ந்து ஆகாயத்தினூடே போவதைப் பார்த்தாள். அந்த மாலைப்பொழுதின் நான்காவது மணி நேரம் அப்படி முடிவுக்கு வந்தது. நினைவுப் பறவைகள்கூட அவளை அடைய முடியாத உயரமான வெளியில் அழகி ரெமேதியோஸ் என்றென்றைக்குமாக மறைந்துபோனாள்.

ஒரு ராணித் தேனீயின் தவிர்க்க முடியாத விதிக்கு அழகி ரெமேதியோஸ் சரணடைந்துவிட்டாள் என்று வெளியாட்கள் நினைத்தார்கள். அவளுடைய கௌரவத்தைக் காப்பாற்றுவதற்காகத்தான் அவள் அந்தர்த்தானமாகி விட்டதாகக் குடும்பத்தினர் கதை விடுகிறார்கள் என்றும் எண்ணினார்கள். பொறாமையில் பொசுங்கிக்கொண்டிருந்த பெர்னாண்டா கடைசியாக அந்த அற்புதத்தை ஒப்புக்கொண்டாள். நீண்ட காலம் கடவுளிடம் தன்னுடைய படுக்கை விரிப்புகளை திருப்பியனுப்புமாறு பிரார்த்தித்துக் கொண்டிருந்தாள். பெரும்பாலானவர்கள் அந்த அற்புதத்தை நம்பினார்கள். மெழுகுவர்த்திகளை ஏற்றினார்கள். பிரார்த்தனைக் கூட்டங்களை நடத்தினார்கள். ஒருவேளை அவுரேலியானோக்கள் காட்டுமிராண்டித்தனமாகக் கூட்டமாகக் கொலை செய்யப்படாமலிருந்தால் நீண்ட காலத்துக்கு இதுவே உரையாடலுக்குரிய அதிசயமாக இருந்திருக்கும். சகுனங்கள் எதையும் முன்னதாகக் காணவில்லையென்றபோதும் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா தனது மகன்களின் அவல முடிவை ஊகித்திருந்தார். களேபரத்துக்கு இடையில் வந்து சேர்ந்த அவுரேலியானோ செராதோரும் அவுரேலியானோ அர்க்கயாவும் மகோந்தாவில் தங்கியிருக்கும் விருப்பத்தைத் தெரிவித்தபோது அவர்கள் தந்தை அவர்களைப் பின்வாங்கச் செய்ய முயன்றார். ஒற்றை இரவில் ஆபத்தான இடமாக மாறிவிட்ட நகரத்தில் அவர்கள் என்ன செய்யப் போகிறார்கள் என்று அவருக்குப் புரியவில்லை. ஆனால் அவுரேலியானோ டிரிஸ்டேயும் அவுரேலியானோ செகுந்தோவும் அவர்களை ஆதரித்துத் தங்கள் வியாபார நிறுவனத்தில் வேலை கொடுத்தார்கள். மகோந்தாவுக்கு முதன்முதலாக வந்த ஆரஞ்சு நிறக் காரில் திரு. பிரவுன் வந்தார். காரின் ஹார்ன்

ஒலிக்குப் பயந்து நாய்கள் குரைத்தன. அதைப் பார்த்ததும் அந்தப் பழைய ராணுவ வீரருக்கு மக்களிடையே ஏற்பட்ட அடிமைத்தனமான பரவசம் வியப்பளித்தது. மனைவி, மக்களை விட்டுவிட்டு துப்பாக்கியைத் தோளில் போட்டுக்கொண்டு போருக்குப் புறப்பட்ட அந்த மனிதர்களின் மனப்பாங்கில் ஏதோ மாறுதல் ஏற்பட்டிருந்ததை அவரால் உணர முடிந்தது. நீர்லாந்தியா ஒப்பந்தத்துக்குப் பிறகு அமைதி விரும்பிகளும் ஓய்ந்து போன மகோந்தாப் பழமைவாதிகளுமானவர்களிடையேயிருந்து உள்ளூர் அதிகாரிகளாக ஊக்கமில்லாத மேயர்களும் அலங்காரப் பதுமைகளான நீதிபதிகளும் தேர்ந்தெடுக்கப்பட்டதுதான் என்றும் உணர்ந்தார். பூட்ஸ் அணியாத கால்களுடன் கம்பைப் பிடித்துக் கொண்டு நடந்த போலீஸ்காரர்களைப் பார்த்ததும் அவர் சொன்னார்: "இது உருப்படாதவர்களின் ஆட்சி. நம்முடைய வீடுகளுக்கு நீலச் சாயம் அடிக்கக் கூடாது என்பதற்காகப் போர் செய்தவர்கள் நாம்." இருந்தும் வாழைப்பழக் குழுமம் வந்து சேர்ந்ததும் உள்ளூர் அதிகாரிகள் மாற்றப்பட்டு எதேச்சாதிகாரமுள்ள வெளிநாட்டுக்காரர்கள் நியமிக்கப் பட்டார்கள். திரு. பிரவுன் அவர்களை மின்வேலியடைத்த தளத்தில் கொண்டுவந்து சேர்த்தார். வெப்பத்தாலும் கொசுக்களாலும் பாதிக்கப் படாமல் நகரத்தின் கணக்கற்ற அசௌகரியங்களாலும் தரமின்மையாலும் துன்புறாமல் அவர்களின் அந்தஸ்துக்குத் தகுந்தபடி அங்கே மகிழ்ச்சியாக இருக்கலாம் என்று அவர்களிடம் சொன்னார். பழைய போலீஸ்காரர்கள் மாற்றப்பட்டு பதிலுக்கு வெட்டுக்கத்திகள் வைத்திருந்த வாடகைக் கொலையாளிகள் நியமிக்கப்பட்டார்கள். தனது பட்டறையில் அடைந்து கிடந்த கர்னல் அவுரேலியானோ புயேந்தியா அந்த மாற்றங்களைப் பற்றி யோசித்தார். தனது தனிமையான ஆண்டுகளில், யுத்தத்தை இறுதிவரை தொடராமல் விட்டது தவறாகப் போயிற்று என்று முதல் முறையாக நினைத்து வதைபட்டார். அந்தச் சமயத்தில்தான் அத்தனை காலமாக மறக்கப்பட்டிருந்த கர்னல் மாக்னிஃபிகோ விஸ்பால் அவருடைய ஏழு வயதுப் பேரனைத் தூக்கிக்கொண்டு சதுக்கத்திலிருக்கும் தள்ளு வண்டி விற்பனைக்காரர்களிடமிருந்து அவனுக்குக் குளிர்பானம் வாங்கிக் கொடுக்க வந்தார். தற்செயலாகச் சிறுவன் ராணுவப் போலீஸ்காரன்மீது இடித்துப் பானம் போலீஸ்காரனின் சீருடையில் தெறித்தது. அந்தக் காட்டுமிராண்டி தன்னுடைய வெட்டுக்கத்தியால் சிறுவனைத் துண்டுதுண்டாக வெட்டினான். தடுக்க வந்த தாத்தாவின் தலையையும் ஒரே வீச்சில் சீவித் தள்ளினான். வெட்டுப்பட்ட மனிதனின் உடலை ஒரு கூட்டம் தூக்கிக்கொண்டும் ஒரு பெண் அறுபட்ட தலையை முடியைப் பற்றி இழுத்துக்கொண்டும் சிறுவனின் உடல் துண்டுகளை ரத்தம் வழியும் கோணியில் போட்டுக்கொண்டும் வீட்டுக்குச் செல்வதை மொத்த நகரமும் பார்த்தது.

கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுக்கு இது கழுவாய் தேடுவதன் எல்லையாக இருந்தது. தன்னுடைய இளமைப் பருவத்தில் வெறிநாயால் கடிபட்ட பெண் அடித்தே கொல்லப்பட்டபோது உணர்ந்த அதே ஆத்திரம் சட்டென்று தனக்குள் மூள்வதை உணர்ந்தார். அந்த வீட்டின் முன்னால் அணிகளாக நின்ற சாட்சிகளைப் பார்த்தார். தனது மனத்தில் இனியும் சுமக்க முடியாது என்று பட்ட ஏமாற்றத்தின்

சுமையை அவர்கள் மேல் சுமத்தும் ஆழ்ந்த வெறுப்புடன் கனத்த குரலில் சொன்னார். "இந்தக் கேடுகெட்ட கிரிங்கோக்களை விரட்டு வதற்காக என்னுடைய பிள்ளைகளைச் சீக்கிரமே ஆயுதம் ஏந்த வைப்பேன்."

ஒரு வார காலத்துக்குள் கடலோரப் பிரதேசத்தின் வெவ்வேறு இடங்களில் அவருடைய பதினேழு பிள்ளைகளையும் கண்ணுக்குப் புலனாகாத கொலைகாரர்கள் நெற்றியிலிருக்கும் சாம்பல் சிலுவைகளைக் குறிவைத்து முயல்களைப் போல வேட்டையாடிக் கொன்றார்கள். மாலை ஏழுமணிக்கு அம்மாவுடன் வீட்டிலிருந்து கிளம்பிய அவுரேலியானோ டிரிஸ்டேவின் நெற்றியை இருட்டிலிருந்து வந்த துப்பாக்கிக் குண்டு துளைத்தது. பனிக் கட்டியை உடைக்கும் கூர் ஆயுதம் புருவங்களுக்கிடையில் தைத்த நிலையில் தொழிற்சாலையில் வழக்கமாகத் தொங்கவிடும் உறக்க மஞ்சத்தில் அவுரேலியானோ சென்டெனோ காணப்பட்டான். அவுரேலியானோ செராதோர், சினிமாவுக்கு அழைத்துச் சென்றிருந்த அவனுடைய தோழியை அவளுடைய பெற்றோர் வீட்டில் விட்டுவிட்டு வெளிச்சம் நிரம்பிய துருக்கியர் தெரு வழியாகத் திரும்பிக் கொண்டிருந்தபோது கூட்டத்திலிருந்த அடையாளம் காண முடியாத நபர் கைத்துப்பாக்கியால் அவனைச் சுட்டான். பன்றிக் கொழுப்பு கொதித்துக்கொண்டிருந்த கொப்பரை மேல் மோதி விழுந்தான். சில நிமிடங்களுக்குப் பின்னர், ஒரு பெண்ணுடன் தாழிட்ட அறைக்குள் இருந்த அவுரேலியானோ அர்க்காயாவை யாரோ அறைக்கதவைத் தட்டி உரக்க அழைத்தார்கள். "சீக்கிரம் வா, அவர்கள் உன் சகோதரர்களைக் கொலை செய்து கொண்டிருக்கிறார்கள்." அவுரேலியானோ அர்க்காயா படுக்கையிலிருந்து துள்ளி எழுந்து கதவைத் திறந்தபோது அவனை வரவேற்ற மௌசர் விசைத் துப்பாக்கியின் தோட்டா தலையைப் பிளந்ததாக, அவனுடன் இருந்த பெண் பின்னர் தெரிவித்தாள். அந்த மரண இரவில், நான்கு சடங்களுக்கும் இரவு விழிப்பிருப்பதற்காக வீடு தயாராகிக்கொண்டிருந்தபோது அவுரேலியானோ செகுந்தோவைத் தேடிக்கொண்டு பெர்னாண்டா ஒரு பைத்தியக்காரியைப் போல நகரம் முழுவதும் ஓடினாள். கர்னலின் பெயர் கொண்ட எல்லாரும் வரிசையாகக் கொல்லப்படுவார்கள் என்று நினைத்த பெத்ரா கோட்டேஸ் அவனை ஒரு அலமாரியில் வைத்துப் பூட்டியிருந் தாள். கடலோரப் பிரதேசத்தின் வெவ்வேறு இடங்களிலிருந்து வந்த தந்திகள், கண்ணுக்குத் தெரியாத எதிரியின் ஆத்திரம் சாம்பற்சிலுவை அடையாளமுள்ள சகோதரர்கள் மீதுதான் என்று தெளிவுபடுத்திய நான்காவது நாள்வரை அவள் அவனை வெளியே விடவில்லை. அமரந்தா, தனது ஒன்றுவிட்ட சகோதரர்களின் பெயர் விவரங்கள் எழுதிய பேரேட்டை வெளியே எடுத்தாள். தந்திகள் வரவர ஒவ்வொரு வருடைய பெயராகக் கோடுபோட்டு அடித்தாள். எல்லாருக்கும் மூத்தவன் ஒருவனின் பெயர் மட்டும் எஞ்சியது. அவனுடைய கறுத்த சருமத்துக்கும் பச்சைக் கண்களுக்கும் இருந்த மாறுபாட்டால் அவனை எல்லாருக்கும் ஞாபகமிருந்தது. அவன் பெயர் அவுரேலியானோ அமதோர். தச்சனாக இருந்தான். மலையடிவாரக் கிராமமொன்றில் மறைந்து வாழ்ந்து

கொண்டிருந்தான். அவனுடைய மரணச் செய்தியைத் தெரிவிக்கும் தந்திக்காக இரண்டு வாரங்கள் காத்திருந்த பின்பு அவுரேலியானோ செகுந்தோ தலைக்கு மேலே தொங்கும் ஆபத்தைப் பற்றித் தெரிந்திருக்காது என்ற எண்ணத்தில் அவனை எச்சரிப்பதற்காக ஒரு தூதனை அனுப்பினான். அவுரேலியானோ அமதோர் பாதுகாப்பாக இருக்கிறான் என்ற செய்தியுடன் தூதன் திரும்பினான். படுகொலைகள் நடந்த இரவில் இரண்டு பேர் அவனைப் பிடிப்பதற்காக வீட்டுக்குப் போனார்கள்; தங்கள் கைத்துப்பாக்கியால் அவனைச் சுட்டார்கள். ஆனால் சாம்பல் சிலுவையைக் குறிதவறவிட்டார்கள். அவுரேலியானோ அமதோர் முற்றத்துச் சுவரைத் தாண்டிக் குதித்து மலைகளின் சுழல்வழியில் மறைந்தான். அவன் மரங்களை வாங்கிக்கொண்டிருந்த இந்தியர்களுடன் கொண்டிருந்த நட்பு காரணமாக மலைப்பகுதி முழுவதையும் புறங்கையைப் பற்றித் தெரிந்திருப்பது போலத் தெரிந்துவைத்திருந்தான். அவனைப் பற்றிப் பின்னர் எதுவும் கேள்விப்படவில்லை.

கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுக்கு அவை இருண்ட நாட்களாக இருந்தன. குடியரசின் அதிபர் அவருக்கு அனுதாபத் தந்தி அனுப்பியிருந்தார். அதில் விரிவான விசாரணை நடத்தப்படுமென்று வாக்குறுதி அளித்திருந்தார். இறந்தவர்களுக்கு அஞ்சலி தெரிவித்திருந்தார். அவருடைய ஆணைப்படி பலிபூசையின்போது நான்கு மலர்வளையங்களுடன் மேயர் வந்திருந்தார். சவப்பெட்டி மீது அவற்றை வைக்க முயன்றார். ஆனால் கர்னல் அவரைத் தெருவிலேயே நிற்குமாறு கட்டளையிட்டார். சவ அடக்கம் முடிந்ததும் குடியரசின் அதிபருக்கு வன்மையான தந்தியொன்றை அவராகவே தனிப்பட்ட முறையில் எழுதி அனுப்பக் கொடுத்தார். தந்தியாளர் அதை அனுப்ப மறுத்தான். தந்தி வாசகங்களில் மேலும் ஆக்ரோஷமான வார்த்தைகளைச் சேர்த்து எழுதி அதை உறையில் போட்டுத் தபாலில் அனுப்பினார். மனைவி இறந்தபோதும், போரின்போது பலமுறை நெருங்கிய நண்பர்கள் போரில் இறந்தபோதும் அவருக்குத் துக்கமாக இருக்கவில்லை. ஆனால் குருட்டுத்தனமான, இலக்கற்ற ஆத்திரமும் மலட்டுத்தனமான உணர்வுமே இருந்தன. எதிரிகள் அடையாளம் கண்டு கொள்வதற்கு எளிதாகத் தனது பிள்ளைகளின் நெற்றியில் அழிக்க முடியாத சாம்பல் குறிகளைப் போட்டு உடந்தையாக இருந்ததாக அருட்தந்தை அந்தோனியோ இசபெல்லையும் குற்றம் சாட்டினார். கோர்வையாகச் சிந்திக்க முடியாமலும் பீடத்தில் நின்று தாறுமாறான விளக்கங்களைச் சொல்லிச் சபைப் பங்காளர்களைத் திகைக்க வைக்கவும் தொடங்கியிருந்த அந்த முதிய பாதிரியார் ஒரு பிற்பகல் வேளையில் புயேந்தியா இல்லத்துக்கு வந்தார். அந்தக் குறிப்பிட்ட புதன்கிழமை பூசுவதற்காகத் தயார் செய்த விபூதியையும் கோப்பையில் கொண்டு வந்திருந்தார். குடும்பத்தினர் எல்லாருக்கும் அந்த விபூதியைத் தடவி அது நீரால் கழுவினாலே அழிந்துவிடக் கூடியது என்று காட்ட முயன்றார். அந்த துரதிருஷ்டத்தின் பயங்கரம் எல்லாரையும் ஆழமாக ஊடுருவியிருந்தது. பெர்னாண்டாகூட அந்தப் பரிசோதனைக்கு அவரை அனுமதிக்கவில்லை. அதன் பின்னர் விபூதிப் புதன்கிழமைகளில்

புயேந்தியா குடும்பத்திலிருந்து யாரும் பலிபீடத்தின் முன்னால் மண்டியிடவில்லை.

நீண்ட காலமாகியும் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுக்கு அவருடைய மன அமைதி திரும்பவில்லை. சின்ன மீன்களை உற்பத்தி செய்வதைக் கைவிட்டார். மிகவும் சிரமப்பட்டு உணவருந்தினார். தனது போர்வையை இழுத்துக் கொண்டும் அமைதியான கோபத்தை மென்று விழுங்கிக்கொண்டும் தூக்கத்தில் நடப்பது போல வீடு முழுக்கச் சுற்றி அலைந்தார். மூன்று மாதங்களுக்குப் பின்பு அவருடைய தலைமுடி நரைத்தது. மெழுகு பூசி முறுக்கி விடப்பட்ட பழைய மீசை வெளிறிய உதடுகளுக்கு அருகில் தொங்கியது. இன்னொரு பக்கம் அவர் கண்கள் முன்பைவிட அதிகமாகக் கங்கு போலக் கனன்றன. பிறந்தபோது அவரைப் பார்த்தவர்களும் மற்ற நாட்களில் நாற்காலியில் உட்கார்ந்து ஆடிக்கொண்டிருக்கும்போது பார்த்தவர்களும் திகைப்படைந்தார்கள். தனக்கு ஏற்பட்ட சித்திரவதையின் மூர்க்கத்தில் தனது இளமைக் காலத்தில் ஆபத்தான பாதைகளினூடே ஆளற்ற புகழின் பாழ்நிலத்துக்கு இட்டு வந்த முன்னுணர்திறனை எழுப்ப வீண் முயற்சி செய்தார். அந்த விநோத இல்லத்துக்குள் அவர் வழிதவறிக் காணாமல் போயிருந்தார். எதுவும் எவரும் அவருக்குள் நேசத்தின் சாயலை எழுப்பவில்லை. போருக்கு முந்தைய இறந்த காலத்தின் சுவடுகளைத் தேடி ஒருநாள் அவர் மெல்குயாதெஸின் அறையைத் திறந்தார். வருடக்கணக்காகக் குவிந்து கிடந்த குப்பையையும் கூளத்தையும் கழிவுப் பொருட்களையும்தான் அவரால் காண முடிந்தது. யாரும் ஒருபோதும் படித்திராத, ஈரக் கசிவால் நைந்து போயிருந்த தோல் ஏடுகள் கொண்ட புத்தகங்களின் முகப்பு அட்டைகளுக்கிடையில் நீலச் சாம்பல் நிற மலர் ஒன்று பூத்திருந்தது. அழுகிய ஞாபகங்களின் பொறுக்க முடியாத வாடை மிதந்த அந்த வீட்டுக்குள் அது மட்டுமே பரிசுத்தமானதாகவும் ஒளிபொருந்தியதாகவும் இருந்தது. ஒருநாள் காலையில் செந்தவிட்டு மரத்தின் கீழே தனது கணவரின் முழந்தாளில் சாய்ந்து உர்சுலா கண்ணீர் விட்டு அழுவதைப் பார்த்தார். அரை நூற்றாண்டாக வெளிக் காற்றில் அலைக்கழிந்து கொண்டிருந்த அந்த வலிமையான கிழவரை அதுவரை பார்க்காத குடும்பத்தின் ஒரே நபர் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா மட்டுமே.

"உன் அப்பாவுக்கு வணக்கம் சொல்லு" என்று அவரிடம் சொன்னாள் உர்சுலா. அந்தச் செந்தவிட்டு மரத்தின் முன்னால் அவர் ஒரு நிமிடம் நின்றார். அந்த வெற்று வெளி எந்தவிதமான நேசத்தையும் தனக்குள் கிளரச் செய்யவில்லை என்பதை மறுபடியும் கண்டார்.

"அவர் என்ன சொல்கிறார்?" என்று கேட்டார்.

"மிகவும் வருத்தப்படுகிறார். ஏனென்றால் நீ செத்துப் போகப் போவதாக நினைக்கிறார்" என்று உர்சுலா பதில் சொன்னாள்.

"அவரிடம் சொல்லுங்கள். ஒருவன் எப்போது சாக வேண்டுமோ அப்போது சாவதில்லை; அவனுக்கு எப்போது முடியுமோ அப்போது தான் சாகிறான்" கர்னல் புன்னகையுடன சொன்னார்.

மறைந்துபோன அப்பாவின் சகுனம் அவர் மனத்தில் மிஞ்சியிருந்த கடைசிப் பெருமிதத்தை எழுப்பியது. ஆனால் அவர் அதைத் தனது வலிமையின் திடீர் வெளிப்பாடு என்று குழம்பினார். அதற்காகவே புனித ஜோசையப்பரின் சிலைக்குள்ளிருந்து கண்டுபிடித்த தங்க நாணயங்களை எங்கே புதைத்துவைத்திருக்கிறாள் என்று சொல்லுமாறு உர்சுலாவை வேட்டையாடினார். "உன்னால் அதைக் கண்டுபிடிக்க முடியாது." பழைய பாடம் தூண்டிவிட்ட உறுதியுடன் சொன்னாள். "ஒரு நாள் அதன் உரிமையாளர் வருவார். அவர் மட்டுமே அதைத் தோண்டியெடுக்க முடியும். வெகு தாராளமானவராக இருந்த ஒருவர் இவ்வளவு பதற்றத்துடன் பிறருக்குச் சொந்தமான பணத்துக்காக அலையத் தொடங்கியது ஏன் என்று யாருக்கும் தெரியவில்லை. அது அவசரத்துக் கான சாதாரணத் தொகையல்ல; ஆனால் அந்த அதிருஷ்டத்தின் பைத்தியம் பிடிக்கச் செய்யும் அளவைப் பற்றிய பேச்சுகூட அவுரேலியானோ செகுந்தோவை ஆச்சரியத்தில் தள்ளிவிட்டது. கர்னல் அவுரேலியானோ புயேந்தியா உதவி கேட்டுப் போன அவரது பழைய கட்சித் தோழர்கள் அவரை வரவேற்காமல் ஒளிந்துகொண்டார்கள். அந்தச் சமயத்தில் அவர் சொல்லிக்கொண்டிருந்ததாகக் கேள்விப்பட்டது இது: "இன்று மிதவாதிகளுக்கும் பழைமைவாதிகளுக்கும் இடையிலிருக்கும் ஒரே வேறுபாடு, மிதவாதிகள் ஐந்துமணி பலிப்பூசைக்கும் பழைமை வாதிகள் எட்டுமணிப் பூசைக்கும் போகிறார்கள்." இருப்பினும் தனது மதிப்பை விட்டுக் கொடுத்தும் இங்கிருந்து கொஞ்சம், அங்கிருந்து இன்னும் கொஞ்சம் என்று கிடைக்கும் இடத்திலெல்லாம் வாங்கியும் சறுக்கி விழும் முயற்சியுடனும் இரக்கமற்ற பிடிவாதத்துடனும் பிச்சை எடுத்தும் எட்டே மாதங்களில் உர்சுலா புதைத்து வைத்திருந்ததைவிட அதிகமான பணத்தைத் திரட்ட அவரால் முடிந்தது. அதன் பிறகு நோயுற்றுப் படுத்திருக்கும் கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸை, முழுப் போரைத் தொடங்க அவர் உதவுவார் என்று பார்க்கப் போனார்.

அந்தக் குறிப்பிட்ட தருணத்தில் தனது பக்கவாத நாற்காலியில் இருப்பவரானாலும் போராட்டத்தின் ஊசல் கயிறுகளை இழுக்க முடிந்த ஒரே நபர் கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் மட்டுமே. நீர்லாந்தியா ஒப்பந்தத்துக்குப் பிறகு கர்னல் அவுரேலியானோ புயேந்தியா தனது சின்னத் தங்க மீன்களில் அடைக்கலம் புகுந்தார். அப்போதும் தோல்வி வரை தனக்கு விசுவாசமாக இருந்த புரட்சிப் படை அதிகாரி களுடன் தொடர்பிலிருந்தார். அவர்களுடன் அன்றாட அவமதிப்புகளின் சோக யுத்தத்தில் ஈடுபட்டிருந்தார். கோரிக்கைகள், மனுக்கள், நாளைக்குத் திரும்ப வா – இன்று எந்த வேளையும் – நாங்கள் உங்கள் கோரிக்கையை முறையான கவனத்துடன் பரிசீலித்துக் கொண்டிருக்கிறோம் – உண்மை யுள்ள – மிகவும் உண்மையுள்ளவர்களாகக் கையெழுத்துப் போட்டவர் கள் – வாழ்நாள் ஓய்வூதியத்துக்காக ஒருபோதும் கையெழுத்துப் போடாதவர்கள் – ஆகியவர்களுக்கு எதிரான போர் தோல்வியடைந்து கொண்டிருந்தது. இருபது ஆண்டுகள் நடத்திய ரத்தம் சொரியும் போரைவிட அந்த நிரந்தர ஒத்திவைப்புகளின் போர் அவர்களுக்கு அதிக நாசத்தைக் கொடுத்தது. மூன்று முறை கொலை முயற்சிகளி

லிருந்து தப்பியவரும், ஐந்து படுகாயங்களிலிருந்து மீண்டவரும், எண்ணற்ற போர்க்களங்களில் காயமில்லாமல் எழுந்தவருமான கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் கூட காத்திருப்பின் அராஜகமான முற்றுகைக்கும் முதுமையின் பரிதாபகரமான தோல்விக்கும் ஆட்பட்டார். ஒரு வாடகை வீட்டில் வைர வடிவத்தில் விழும் வெளிச்சப் பொட்டுகளுக் கிடையில் அமரந்தாவைப் பற்றி யோசித்துக்கொண்டிருந்தார். அநாமதேய அதிபர் ஒருவர் அருகில் பழைய போர் வீரர்கள் வெட்கமில்லாமல் முகத்தை நிமிர்த்திக்கொண்டு புகைப்படத்தில் தோன்றியதைச் செய்தித் தாளில் பார்த்தார். தன்னுடைய உருவம் பொறித்த பொத்தான்களை அதிபர் கொடுத்தார். பதிலுக்கு அவர்கள் தங்களுடைய சவப்பெட்டி களின்மீது போர்த்துவதற்காக வைத்திருந்த ரத்தக் கறையும் வெடிமருந் தும் கறையாகப் படிந்திருந்த கொடியைக் கொடுத்தார்கள். முதுமைக்கும் புகழின் நுட்பமான அருவருப்புக்கும் இடையில் வேட்டையாடப்பட்டுக் கொண்டிருந்தார்கள். ஆகவே, வெளிநாட்டுக்காரர்களின் பின்பலத்துடன் நடக்கும் முறைகேடும் ஊழலும் மண்டிய ஆட்சியின் எல்லாத் தடயங்களையும் துடைத்தழிப்பதற்கான அழியாத நெருப்பைக் கொளுத்தத் தொடங்குவதற்காக கர்னல் அவுரேலியானோ புயேந்தியா அழைத்த போது எழுந்த அனுதாப நடுக்கத்தைக் கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸால் தடுத்துக்கொள்ள முடியவில்லை. “அவுரேலியானோ, நீ கிழவனாகிவிட்டாய் என்று தெரியும். ஆனால் உன் தோற்றத்தை விடவும் அதிகம் கிழவனாகியிருக்கிறாய் என்று இப்போதுதான் புரிகிறது” என்று பெருமூச்சுவிட்டார்.

வாழ்க்கையின் கடைசி வருடங்களின் குழப்பத்தால் ஹோசே அர்க்காதியோவின் இறைக்கல்வி மீது அக்கறை காட்ட உர்சுலாவுக்கு நேரம் கிடைக்கவில்லை. அவன் இறையியல் பள்ளிக்குச் செல்ல ஆயத்தமாக வேண்டிய நேரமும் வந்தது. அவனுடைய சகோதரி மேமே, பெர்னாண்டாவின் முரட்டுத்தனத் துக்கும் அமரந்தாவின் கரிப்புக்குமிடையில் தனது நேரத்தைப் பிரித்து வைத்திருந்தாள். ஏறக்குறைய அதே சமயத்தில்தான் கன்னியர் மடத்துக்குச் செல்ல வேண்டிய வயதையும் அடைந்தாள். அங்கே அவளை க்ளேவிகார்ட் வாசிப்பில் நிபுணியாக்குவார்கள். பேரனைத் தலைமைத் துறவியாக்குவதற்காகத் தான் வடிவமைத்த வழிமுறைகளின் பலன்களைக் குறித்த கடுமையான சந்தேகங்கள் உர்சுலாவைத் துன்புறுத்திக்கொண்டிருந்தன. அதற்காகத் தன்னுடைய தள்ளாடும் முதுமையைக் குற்றம் சொல்ல முடிய வில்லை. காரியங்களைச் செவ்வனே செய்ய அனுமதிக்காத இருண்ட சூழ்நிலைகளையும் பிழை சொல்ல முடியவில்லை. அவளாலேயே விளக்கிச் சொல்ல முடியாத ஏதோ ஒன்று இருந்தது. அதைக் காலத்தின் முன்னேற்றமான மாறுதல் என்று குழப்பத்துடனேயே எடுத்துக்கொண்டாள். அன்றாடச் சம்பவங்கள் தன் கைகளிலிருந்து நழுவிச் செல்வதை உணர்ந்து "இந்தக் காலத்தில் நாட்கள் பழைய காலம்போலக் கடந்து போவதில்லை" என்பாள். கடந்த காலங்களில் பிள்ளைகள் வளர்வதற்கு அதிக காலம் எடுத்துக் கொண்டார்கள் என்று நினைத்தாள். மூத்த ஹோசே அர்க்காதியோ நாடோடிகளுடன் ஊரைவிட்டுப் போனதை, பாம்பைப் போல உடல் முழுவதும் சாயம் பூசிக் கொண்டு திரும்பி வந்ததை, வானியல் நிபுணனைப் போலப் பேசிக்கொண்டிருந்ததை, அமரந்தாவும் அர்க்காதியோவும் இந்திய மொழியை மறந்துவிட்டு ஸ்பானிய மொழியைக் கற்கத் தொடங்கும் முன்பு வீட்டில் நடந்தவற்றை நினைத்துப் பார்க்க என்று எல்லாவற்றுக்கும் எவ்வளவோ நேரம் தேவைப்பட்டது. ஹோசே அர்க்காதியோ புயேந்தியா செந்தவிட்டு மரத்தடியில் புதையுண்டபோது அவரது மரணத்துக்காகத் துக்கம் கடைப் பிடிக்கவும் எவ்வளவோ காலம் எடுத்துக்கொண்டது. ஏராளமான யுத்தங்களுக்கும் ஏராளமான துன்பங்களுக்கும் பிறகு சாகும் தறுவாயில் திரும்ப வந்தபோது கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுக்கு ஐம்பது வயதுகூட நிறைவடையவில்லை. மற்ற சமயங்களில் மொத்த நாளையும் விலங்கு வடிவ மிட்டாய்கள் செய்வதில் செலவழித்த பின்பும் குழந்தைகளைக் கவனித்துக்

கொள்ள நேரம் இருந்தது. அவர்களுடைய கண்களில் தெரியும் வெளுப்பைப் பார்த்தே அவர்களுக்கு விளக்கெண்ணெய் புகட்டும் தருணம் வந்திருப்பதைத் தெரிந்துகொள்ளுமளவு நேரம் இருந்தது. இப்போதோ அவள் எதுவும் செய்ய வேண்டியதில்லை. ஹோசே அர்க்காதியோவைக் காலை முதல் மாலைவரை இடுப்பில் இடுக்கிக் கொண்டு திரியலாம். இருந்தும் எல்லா வேலைகளையும் அரைகுறையாகப் போட வேண்டிய மோசமான காலமாக இருந்தது. உண்மையில் உர்சுலா தன்னுடைய வயதின் எண்ணிக்கைக் கணக்கை ஏற்கனவே இழந்திருந்தாள். எனினும் முதுமையடைய மறுத்துக் கொண்டிருந்தாள். எல்லா வகையிலும் அவள் ஒரு தொந்தரவாக மாறியிருந்தாள். எல்லாக் காரியங்களிலும் குறுக்கிட முயன்றாள். அந்நியர்களிடம் அவர்கள் போர்க் காலத்தின்போது மழை முடியும் வரைக்கும் இருக்கட்டும் என்று புனித சூசையப்பரின் சிலையை விட்டுப் போனார்களா என்று கேட்டு எரிச்சலூட்டிக் கொண்டிருந்தாள். அவள் எப்போது தன்னுடைய பார்வையை இழந்தாள் என்பது யாருக்கும் தெரியவில்லை. படுக்கையை விட்டு எழுந்திருக்க முடியாத கடைசி நாட்களில்கூட முதுமையால் தளர்ந்திருப்பதாகத் தோன்றியதே தவிரக் குருடாகிவிட்டதாக யாராலும் கண்டுபிடிக்க முடியவில்லை. ஹோசே அர்க்காதியோ பிறப்பதற்கு முன்பே அவள் அதைக் கவனித்திருந்தாள். முதலில் அது உடல் தளர்ச்சியால் வருவது என்று நினைத்தாள். மஜ்ஜைச் சாற்றையும் தேனையும் ரகசியமாகக் கண்களில் விட்டுக்கொண்டாள். ஆனால் சீக்கிரத்திலேயே தான் மீட்க முடியாதபடி இருட்டுக்குள் ஆழ்ந்து வருவதை உணர்ந்தாள். முதல்முதலாக மின்சாரப் பல்புகளைப் பொருத்தியபோது அவளால் அந்த வெளிச்சத்தை உள்ளுணர முடிந்ததே தவிர மின் விளக்கைப் பற்றித் தெளிவாகத் தெரிந்துகொள்ள முடியவில்லை. அதை அவள் யாரிடமும் சொல்லவில்லை. சொன்னால் அது அவளுடைய பயனின்மைக்கான பகிரங்க விளம்பரமாகிவிடும். பொருட்களுக்கும் தனக்கும் இடையிலுள்ள தூரம் ஆட்களுக்கும் தனக்கும் இடையிலுள்ள தூரம் ஆகியவற்றில் கவனம் செலுத்தினாள். அதன் மூலம் கண்புரை மறைத்தவற்றையெல்லாம் தனது நினைவால் பார்க்க முடிந்தது. பின்னர் வாசனைகளின் அரூப உதவியைக் கண்டுபிடித்தாள். நிழல்களாக வரையறுக்கப்பட்டவற்றை வைத்து உருவம், நிறம் ஆகியவற்றை ஊகிப்பதைவிட இந்த முறை மேலும் இணக்கமானதாக இருந்தது. தன்னுடைய தோல்வியை ஒப்புக்கொள்வதிலிருந்து அது கடைசியாக அவளைக் காப்பாற்றியது. இருட்டான அறைகளில்கூட அவளால் ஊசியில் நூலைக் கோக்கவும் முடிந்தது, பொத்தான் துவாரங்கள் தைக்கவும் முடிந்தது. எப்போது பால் பொங்கும் என்றும் அவளுக்குத் தெரிந்திருந்தது. பொருட்கள் ஒவ்வொன்றும் இருக்கும் இடம் அவளுக்கு நிச்சயமாகத் தெரிந்திருந்தது. சமயங்களில் தனக்குப் பார்வையில்லை என்பதையே அவள் மறந்துவிடுவாள். ஒருசமயம் பெர்னாண்டா தன்னுடைய திருமண மோதிரம் காணாமல் போய்விட்டதாக வீட்டையே தலைகீழாகப் புரட்டினாள். குழந்தைகளின் படுக்கையறை அலமாரியில் உர்சுலா அதைக் கண்டெடுத்தாள். இது மிகச் சாதாரணமானதுதான். மற்றவர்கள் கவனமில்லாமல் நடமாடும்போது அவள் தனது நான்கு

புலன்களாலும் அவர்களைக் கவனித்துக்கொண்டிருந்தாள். அதனால் அவர்களுக்கு அவள் ஆச்சரியத்துக்கு உரியவளாக இல்லை. சில முறைகளுக்குப் பிறகு குடும்பத்திலுள்ள ஒவ்வொருவரும் தாங்களாக உணராமல், ஒரே வழியைத்தான் ஒவ்வொரு நாளும் திரும்பத் திரும்பக் கடைப்பிடிக்கிறார்கள்; அதே செயல்களைத்தான் திரும்பத் திரும்பச் செய்கிறார்கள்; அதே வார்த்தைகளைத்தாம் அதே நேரங்களில் திரும்பத் திரும்பப் பேசுகிறார்கள் என்பதையும் அந்த நியமத்திலிருந்து விலகினால் எதையாவது இழந்துவிடும் சிக்கலில் அகப்பட்டுக்கொள்கிறார்கள் என்பதையும் அவள் கண்டுபிடித்தாள். ஆகவே, மோதிரம் தொலைந்து போனதென்ற பெர்னாண்டாவின் வருத்தத்தைப் பற்றிக் கேள்விப் பட்டதும் அவள் அன்று செய்த வழக்கத்துக்கு மாறான செயல் என்ன என்று உர்சுலா நினைவுகூர்ந்தாள். முந்தைய இரவு மூட்டைப் பூச்சியைப் பார்த்ததாக மேமே சொன்னதால் பாயை வெயிலில் காயப்போட்டிருந்தாள். வீட்டுக்குள் புகைபோட்டபோது குழந்தைகளும் அங்கே இருந்ததால் அலமாரியில் அவர்கள் கைக்கு எட்டாத இடத்தில் பெர்னாண்டா மோதிரத்தை வைத்திருக்க வேண்டும் என்று உர்சுலா உருவகப்படுத்திக் கொண்டாள். மாறாகப் பெர்னாண்டா அன்றாட அட்டவணையில் இருக்கும் இடங்களிலேயே, காணாமற்போன பொருட்களுக்கான தேடலுக்கு வழக்கமான வழிகள் தடை என்பதைப் புரிந்துகொள்ளாமல், வீணாக அதைத் தேடினாள். அதனால்தான் அவர்களுக்கு அதைக் கண்டடைவது சிரமமாக இருந்தது.

ஹோசே அர்க்காதியோவை வளர்க்கும் அலுப்பூட்டும் முயற்சியில் வீட்டுக்குள் நடக்கும் சின்ன மாற்றங்களில்கூடக் கவனம் செலுத்தினாள். படுக்கையறையிலிருக்கும் புனிதர்களின் திருவுருவங்களுக்கு அமரந்தா உடுப்புகள் அணிவித்துக்கொண்டிருக்கிறாள் என்பதைத் தெரிந்து கொண்டபோது நிறங்களின் வேறுபாடுகளைப் பையனுக்குக் காண்பித்துக் கொடுக்க வேண்டும் என்றுகூட நினைத்தாள்.

"எங்கே பார்ப்போம், அதிதூதர் ராபேல் என்ன நிறத்தில் உடையணிந்திருக்கிறார் என்று சொல்லு" என்று அவனிடம் சொல்லுவாள்.

அப்படியாகப் பார்வை அவளுக்குத் தர மறுத்த தகவலைச் சிறுவன் அவளுக்குக் கொடுத்தான். அவன் இறையியல் பள்ளிக்குச் செல்வதற்கு வெகுமுன்பாகவே புனிதர்களின் உடுப்புகளைத் தொட்டுப் பார்த்தே உர்சுலா அவற்றின் நிறங்களைப் பிரித்தறிந்தாள். சில சமயங்களில் எதிர்பாராத விபத்துகளும் நடந்தன. ஒருநாள் மாலை அமரந்தா பிகோனியாப் பூக்கள் நிறைந்த முற்றத்தில் உட்கார்ந்து எம்பிராய்டரி போட்டுக்கொண்டிருந்தபோது உர்சுலா அவள்மீது மோதி விழுந்தாள்.

"கடவுளை நினைத்துச் சொல்கிறேன். எங்கே நடக்கிறோம் என்று கவனமாகப் பார்த்து நடங்கள்" என்று எதிர்ப்புத் தெரிவித்தாள் அமரந்தா. "உன்னுடைய தப்புத்தான். நீ எங்கே உட்கார வேண்டுமோ அங்கே உட்காரவில்லை" என்று உர்சுலா சொன்னாள்.

அவள் சொன்னது சரி. வருடங்கள் போகப் போகச் சூரியனும் தன்னுடைய பாதையை மாற்றியிருந்தது. அதனால் முற்றத்தில் உட்காரு

கிறவர்களும் அதைப் பற்றி உணராமலேயே மெல்ல மெல்லத் தங்கள் இடத்தை மாற்றிக்கொண்டிருந்தார்கள். ஆனால் அந்தத் தினம் தன்னை யாரும் கவனிக்கவில்லை என்பதை உர்சுலா தெரிந்துகொண்டாள். மேலும் எச்சரிக்கையாக நடக்கத் தொடங்கினாள். அன்று முதல் அமரந்தா உட்கார்ந்திருந்த இடத்தைத் தெரிந்துகொள்ள அந்தத் தேதியை மட்டுமே நினைவில் வைத்துக்கொண்டாள். அவளுடைய கைகள் அதிகமாக நடுங்கின. அவளுடைய கால்களின் பாரம் அவளுக்கே அதிகமாக இருந்தது. இருந்தும் ஒரே சமயத்தில் அவளுடைய சின்ன உருவம் எல்லா இடங்களிலும் தென்பட்டது. குடும்பத்தின் மொத்த சுமையையும் தன்னுடைய தோள்களில் சுமந்திருந்த காலத்தைப் போலவே அவள் இப்போதும் எல்லாக் காரியங்களிலும் கவனமாக இருந்தாள். இருந்தபோதும், முதுமையின் ஊடுருவ இயலாத தனிமையில் நுண்ணோக்குடன் குடும்பத்தில் அதுவரை நடந்த முக்கியமான நிகழ்வுகளை அலசினாள். தனது பரபரப்பு மிகுந்த பழைய வாழ்க்கை பல உண்மைகளைப் பார்க்கவிடாமல் தடுத்திருந்தது தெளிவாயிற்று. ஹோசே அர்க்காதியோவை இறையியல் பள்ளிக்கு அனுப்பத் தயாராகிக் கொண்டிருந்தபோது, மகோந்தா கண்டுபிடிக்கப்பட்ட நாள் முதலான குடும்ப வரலாற்றைப் பற்றிய ஆய்வையும் ஏற்கனவே தயாரித்திருந்தாள். அது தனது சந்ததியினரைப் பற்றிய அவளுடைய அபிப்பிராயங்களை மாற்றியது. போரின் விளைவாக ஏற்பட்ட இறுக்கத்தினால்தான் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா குடும்பத்தின் மீது நேசமில்லாமல் இருப்பதாக முன்பு கொண்டிருந்த கருத்தை மாற்றிக்கொண்டாள். நேர்மாறாக, மனைவி ரெமேதியோஸையோ, தனது வாழ்க்கையில் கடந்துபோன கணக்கில்லாத ஓர் இரவுப் பெண்களையோ குறைந்த பட்சம் மகன்களையோ யாரையுமே அவன் நேசிக்கவில்லை என்ற எண்ணத்துக்கு வந்தாள். எல்லாரும் நினைத்தது போல அவன் அத்தனை யுத்தங்களில் ஈடுபட்டது இலட்சியத்துக்காக அல்ல; எல்லாரும் நினைத்தது போல சில வெற்றிகளை மறுத்தது அதீத அலுப்பால் அல்ல என்பதை உணர்ந்தாள். அவன் வென்றதும் தோற்றதும் ஒரே காரணத்துக்காக. முற்றிலும் பாவம் நிறைந்த பெருமைக்காக. எந்த மகனுக்காக உயிரையே கொடுக்கத் தயாராக இருந்தாளோ அவன் நேசத்துக்கு அருகதை இல்லாதவன் என்ற முடிவுக்கு வந்தாள். அவனை வயிற்றில் சுமந்திருந்த காலத்தில் ஒருநாள் அவனுடைய அழுகுரலைக் கேட்டாள். அவ்வளவு தீர்க்கமான புலம்பலுடன் அவன் விழித்திருப்பதை அறிந்தபோது அவளுக்கு ஆனந்தமாக இருந்தது. அவன் ஒரு பலகுரல் கலைஞனாக வருவான் என்று எண்ணினாள். மற்றவர்கள் அவன் ஒரு தீர்க்கதரிசியாக இருப்பான் என்று ஆருடம் சொன்னார்கள். இன்னொரு பக்கம், அந்த ஆழ்ந்த முனகல் பன்றிவாலுடன் பிறக்கும் குழந்தையின் முதல் அறிகுறி என்ற உண்மை அவளை உலுக்கியது. சிசுவைத் தனது கருப்பையிலேயே சாகடித்துவிடுமாறு கடவுளிடம் மன்றாடினாள். தாயார்களின் கருப்பையில் கிடந்து குழந்தைகள் அழுவது, பலமுறை அவள் சொன்னது போல பலகுரல் திறமையின் அறிவிப்போ தீர்க்கதரிசனத்துக்கான ஆற்றலோ அல்ல; அவர்களால் நேசிக்க முடியவில்லை என்பதன் சாட்சி என்று முதுமையின் தெளிவுடன்

பார்க்கவைத்தது. மகன்மீதான மதிப்புக் குறைவு அவன்மீதான பரிவையும் அவளுக்குள் கொண்டு வந்தது. அமரந்தாவைப் பற்றி யோசித்த போது அவளுடைய மனத்தின் இறுக்கம் உர்சுலாவைப் பயமுறுத்தியது. அவளுடைய அடர்த்தியான கசப்பு உர்சுலாவுக்கும் கசப்பைக் கொடுத்தது. கடைசி அலசலில் இதுவரை இருந்தவர்களிலேயே மிக மென்மையான பெண் அவள்தான் என்பது சட்டென்று தெளிவுபட்டது. பியத்ரோ கிரெஸ்பிக்கு அவள் கொடுத்த நியாயமற்ற சித்திரவதைகள் எல்லாரும் நினைத்தது போலப் பழிவாங்கும் வேட்கையால் அல்ல; கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸுக்கு மனமுறிவு ஏற்படுத்தியது எல்லாரும் நினைத்தது போல அவளுடைய கசப்பல்ல. இந்த இரண்டு செயல்களும் அளவற்ற அன்புக்கும் வெல்ல முடியாத கோழைத்தனத்துக்கும் நடுவில் நடந்த ஓயாத யுத்தத்தின் விளைவு என்பதைப் பரிதாபம் கலந்த தெளிவுடன் உர்சுலா புரிந்துகொண்டாள். அமரந்தாவின் அந்தக் காரணமற்ற பயம் அவள் மனத்தை எப்போதும் வதைத்தது; இறுதியில் வெற்றியடைந்தது என்பதையும் புரிந்துகொண்டாள். இந்தத் தருணத்தில்தான் உர்சுலா ரெபேக்காவின் பெயரையும் உச்சரிக்க ஆரம்பித்தாள். பழைய நினைவுகள் எழுப்பிய பாசமும் பச்சாதாபமும் திடீர் அபிமானமும் ரெபேக்கா மட்டுமே தனது பாலைக் குடிக்காமல் தனது ரத்தத்தின் பாகமாக இல்லாமல், இப்போதும் கல்லறைக்குள் ஓசையெழுப்பிக் கொண்டிருக்கும் ஏதோ அந்நியர்களின் அறிமுகமில்லாத ரத்தத்தின் பகுதியாக இருந்தவள், நிலத்தின் மண்ணையும் சுவர்களின் சுண்ணாம்பையும் தின்று வளர்ந்தவள் என்பதைப் புரியவைத்தன. பொறுமையில்லாத இதயமும் ஆக்ரோஷமான கருப்பையும் கொண்ட ரெபேக்காவிடம் மட்டுமே தனது பரம்பரைக்குத் தேவையான கட்டுப்பாடற்ற துணிவை உர்சுலா கண்டாள். சுவர்களைத் தடவிக்கொண்டு "ரெபேக்கா, நாங்கள் எவ்வளவு மோசமாக உன்னிடம் நடந்து கொண்டோம்" என்பாள்.

அவளுடைய மனம் அலைக்கழியத் தொடங்கிவிட்டதாக வீட்டிலிருந்தவர்கள் சாதாரணமாக நினைத்தார்கள். குறிப்பாகக் காபிரியேல் அதிதூதரைப் போல வலது கையை உயர்த்தியபடி அவள் நடக்கத் தொடங்கியது முதல். சென்ற வருடம் வீட்டில் எவ்வளவு பணம் செலவானது என்று தயக்கமில்லாமல் அவள் சொன்னதைக் கேட்டு அந்த அலைக்கழிவின் பின்னணியில் நுண்ணுணர்வின் சூரியன் ஜொலிப்பதை, அவளுக்குத் தீர்க்கதரிசன சக்தி வாய்த்திருப்பதைப் பெர்னாண்டா உணர்ந்தாள். அமரந்தாவுக்கும் அதே எண்ணம் ஏற்பட்டது. ஒருநாள் சமையலறையில் சூப்பைக் கிண்டிக்கொண்டிருந்த அம்மா யாரும் கேட்கமாட்டார்கள் என்ற நினைப்பில், அறுபத்தைந்து முறை உலகத்தைச் சுற்றி வந்த ஹோசே அர்க்காதியோ பிறப்பதற்கெல்லாம் முன்பே, நாடோடிகளிடமிருந்து வாங்கிய சோள அரவைக்கல் இப்போதும் பிலர் தெர்னேராவின் வீட்டில் இருக்கிறது என்று சொல்லிக்கொண்டிருப்பதைக் கேட்டாள். பிலர் தெர்னேராவுக்குச் சுமார் நூறு வயது ஆகியிருந்தது. அவளுடைய நினைத்துப் பார்க்க முடியாத பருமனை மீறி ஆரோக்கியமாகவும் துடிப்பாகவும் இருந்தாள். பழைய நாட்களில் அவளுடைய சிரிப்பு, புறாக்களை

வெருட்டியது போல இப்போது அவளுடைய பருமன் குழந்தைகளைப் பயமுறுத்தியது. உர்சுலா சொன்னது சரிதான் என்பதில் அவளுக்கு வியப்பேற்படவேயில்லை. எச்சரிக்கை நிறைந்த முதுமை, ஆருடச் சீட்டுகளைவிடத் துல்லியமானது என்பதைச் சொந்த அனுபவமே அவளுக்குச் சொல்லத் தொடங்கியிருந்தது.

எல்லாமிருந்தும் ஹோசே அர்க்காதியோவின் படிப்பு விஷயத்தைக் கவனிக்கத் தனக்குப் போதுமான நேரம் கிடைக்கவில்லை என்று உணர்ந்தாள் உர்சுலா. பதற்றம் அவளைத் தொல்லை செய்தது. உள்ளுணர்வு அனுமதிக்கும் விஷயங்களை இன்னும் தெளிவாகப் பார்க்க வேண்டுமென்று முயன்று தவறுகள் செய்யத் தொடங்கினாள். ஒருநாள் காலை பன்னீர் என்று நினைத்துப் பையனின் தலையில் மைக்குப்பியைக் கவிழ்த்துவிட்டாள். தான் விரும்பிய எல்லாக் காரியங் களிலும் பங்கேற்க வேண்டும் என்ற அவளுடைய பிடிவாதம் காரணமாக விருந்தாளிகள் அவளைக் கேலிசெய்து சோர்வடையச் செய்தார்கள். ஒரு சிலந்தி வலைக்கோட்டு போலத் தன்னை மூடத் தொடங்கிய அந்த நிழல்களிலிருந்து தப்ப அவள் முயன்றும் இடறலுக்குள்ளானது. அதன் பிறகுதான் தன்னுடைய அபத்தங்கள் முதுமையின் முதல் வெற்றியோ பார்வையின்மையின் முதல் வெற்றியோ அல்ல என்றும் காலம் விதித்த தண்டனை என்பதும் அவளுக்கு உறைத்தன. துருக்கியர்கள் விரிப்புகளுக்கான துணியை அளந்தபோது கடவுள் மாதங்களிலிருந்தும் வருடங்களிலிருந்தும் எல்லாருக்கும் ஒன்றே போன்ற பொறிகளை உற்பத்தி செய்யவில்லை என்று முன்பே எண்ணியிருந்தாள். குழந்தைகள் இப்போ தெல்லாம் வேகமாக வளர்கிறார்கள் என்பதோடு அவர்களின் உணர்வு களும் வெவ்வேறு வழிகளில் வளர்ச்சியடைகின்றன. அழகி ரெமேதியோஸ் உடலும் உயிருமாகச் சொர்க்கத்துக்கு உயர்ந்தபோது தன்னுடைய விரிப்புகளும் போயிற்றே என்றுதான் பெர்னாண்டா நச்சரித்துக் கொண்டிருந்தாள். அவுரேலியானோக்களின் சடலங்கள் கல்லறை களுக்குள் உறைந்து போகும் முன்பே அவுரேலியானோ செகுந்தோ வீட்டுக்கு மீண்டும் ஒளியூட்டினான். இறந்தது கிறித்துவர்களல்ல; நாய்கள் என்று தோன்றும்படி குடிகாரர்களைக் கொண்டு வந்து நிரப்பினான். அக்கார்டியன் கச்சேரி நடத்தினான். ஷாம்பெய்னில் குளிப்பாட்டினான். அந்தப் பைத்தியக்கார இல்லம் உர்சுலாவுக்கு ஏராளமான தலைவேதனைகளைக் கொடுத்தது. ஏராளமான விலங்கு வடிவ இனிப்புகள் நரகக் குவியலாகக் குவிந்தன. இதையெல்லாம் நினைத்துக்கொண்டு ஹோசே அர்க்காதியோவின் பெட்டியைத் தயார் செய்துகொண்டிருந்த உர்சுலா, ஒட்டு மொத்தமாகக் கல்லறைக்குள் விழுந்துவிடமாட்டோமா, எல்லாரும் தன்மீது மண்ணைப் போட மாட்டார்களா என்று யோசித்தாள். இத்தனை துயரங்களையும் வதைகளையும் பொறுத்துக்கொள்ள மனிதர்கள் இரும்பால் உற்பத்தி செய்யப்பட்டிருப்பதாக அவர் உண்மையில் நம்புகிறாரா என்று கடவுளிடம் பயமில்லாமல் கேட்டாள். மேலும் கேட்கக் கேட்க அவளுக்குள்ளேயே குழம்பினாள். அடக்கிவைக்க முடியாத ஆசைகள் தன்னைவிட்டுப் போகட்டும் என்று எண்ணினாள். அந்நியனைப் போல ஓடிப்போக யோசித்தாள். கடைசியாகப் போராடிப் பார்ப்பது

என்று நினைத்தாள். அந்தக் கணம் பலமுறை தோன்றியிருக்கிறது. பலமுறை ஒத்திப் போடப்பட்டிருக்கிறது. தனது சலிப்பை ஒதுக்கி வைத்துவிட்டு எல்லாவற்றையும் ஒருமுறை திட்டித் தீர்த்து மனத்துக் குள்ளிருந்த கெட்ட வார்த்தைகளின் அடுக்கை வெளியே இழுத்துப் போட்டாள். நூற்றாண்டுகளுக்கும் மேலாகக் காப்பாற்றி வைத்திருந்த மரபு காரணமாக அவற்றை விழுங்கிக்கொண்டாள்.

"சாத்தானே" என்று கத்தினாள்.

துணிகளைப் பெட்டியில் அடுக்கத் தொடங்கியிருந்த அமரந்தா அவளைத் தேள் கொட்டிவிட்டதாக நினைத்தாள்.

"எங்கே அது?" என்று அலறினாள்.

"என்ன?"

"அந்தத் தேள்?" என்றாள் அமரந்தா.

உர்சுலா தனது இதயத்தின் மீது விரலை வைத்துச் சொன்னாள் "இங்கே."

வியாழக்கிழமை பிற்பகல் இரண்டு மணிக்கு ஹோசே அர்க்காதியோ இறையியல் பள்ளிக்குப் புறப்பட்டுச் சென்றான். நிதானமானவனும் தீவிரமானவனுமான அவன் தாமிரப் பொத்தான்கள் வைத்த காட்ராய் சூட்டும் கழுத்தில் கஞ்சிபோட்ட 'போவும்' அணிந்திருந்தான். உர்சுலா கற்றுக் கொடுத்திருந்தது போல ஒரு துளிக் கண்ணீர் சிந்தாமல் வெக்கையில் வாடியபடி விடைபெற்றுக் கொண்டதை அவள் எப்போதும் நினைவில் வைத்திருந்தாள். உணவு அறையை விட்டு அவன் நாசியைத் துளைக்கும் பன்னீர் வாசனையுடன் வெளியேறினான். வீட்டுக்குள் அவன் செல்லுமிடங்களில் பின்தொடர்வதற்காக அவன் தலையில் அவள்தான் பன்னீரைத் தெளித்திருந்தாள். வழியனுப்பு விருந்து நடந்துகொண்டிருந்தபோது குடும்பத்தினர் உற்சாகத் தோற்றம் காட்டிக்கொண்டு பதற்றத்தை மறைத்துக் கொண்டனர். அருட் தந்தை அந்தோனியோ இசபெல் சொன்னவற்றுக்கு எல்லாம் மிகையான உற்சாகத்தைக் காட்டினார்கள். எனினும் வெல்வெட் துணியில் மூடிவைத்த வெள்ளி மூலைகள் கொண்ட பெட்டியை வெளியே எடுத்தது வீட்டுக்குள்ளே இருந்து ஒரு சவப்பெட்டியை எடுப்பது போல இருந்தது. வழியனுப்புச் சடங்கில் கலந்துகொள்ளாத ஒரே நபர் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாதான். "நமக்கு வேண்டியதெல்லாம் ஒரு போப்பாண்டவர்" என்று முணுமுணுத்தார்.

மூன்று மாதங்களுக்குப் பிறகு அவுரேலியானோ செகுந்தோவும் பெர்னாண்டாவும் மேமேயைப் பள்ளிக்கூடத்துக்கு அழைத்துப் போனார்கள். திரும்பி வரும்போது ஒரு க்ளேவிகார்டையும் கொண்டு வந்தார்கள். அது பியானோலாவின் இடத்தைப் பிடித்துக்கொண்டது. அந்தச் சமயத்தில்தான் அமரந்தா தனது சவப் போர்வையைத் தைக்க ஆரம்பித்திருந்தாள். வாழைப்பழக் காய்ச்சல் அடங்கியிருந்தது. பழைய மகோந்தாவாசிகள் புதியவர்கள் சூழ இருந்தார்கள். தங்கள் கடந்த

காலத்தின் நிரந்தரமில்லாத ஆதாரங்களில் தொங்கிக்கொண்டிருக்கப் பாடுபட்டார்கள். ஒரு கப்பல் தகர்ச்சியிலிருந்து தப்பிய ஆசுவாசத்தை உணர்ந்தார்கள். புயேந்தியா இல்லத்தில் அப்போதும் பகலுணவுக்கு விருந்தாளிகள் இருந்தார்கள். பல வருடங்களுக்குப் பின்பு வாழைப் பழக் குழுமம் இடத்தை விட்டுப் போகும்வரை பழைய வழக்கம் பின்பற்றப்படவில்லை. இருந்தபோதும் மரபுரீதியிலான விருந்தோம்பல் அடியோடு மாறியிருந்தது. ஏனெனில் அந்தச் சமயம் பெர்னாண்டாதான் விதிகளைத் தீர்மானித்தாள். உர்சுலா நிழல்களுக்குள் அமிழ்ந்து போனாள். அமரந்தா அவளுடைய சவப் போர்வைக்குள் ஆழ்ந்து போனாள். முன்னாள் பயிற்சிக் கால அரசி விருந்தாளிகளைத் தேர்வுசெய்யும் சுதந்திரத்தை எடுத்துக்கொண்டாள். அவளுடைய பெற்றோர் அவளுக்குக் கற்பித்திருந்த கடுமையான சட்டதிட்டங்களை விருந்தாளிகள்மீது திணித்தாள். அவளுடைய கெட்ட குணம் அந்த வீட்டைப் பழைமைச் சடங்குகளின் புகலிடமாக மாற்றியது. அவளைப் பொருத்தவரை, வாழைப்பழக் குழுமத்துடன் தொடர்பு இல்லாதவர்களே சரியானவர்கள். அவளுடைய மைத்துனன் ஹோராசே அர்க்காதியோ செகுந்தோகூட அவளுடைய பாரபட்சப் பொறாமைக்கு இரையானான். ஏனெனில் பரபரப்பான ஆரம்ப நாட்களிலேயே தனது அற்புதமான சண்டைச் சேவல்களை விற்றுவிட்டு வாழைப்பழக் கம்பெனியில் போர்மென்னாக வேலைக்குச் சேர்ந்திருந்தான்.

“வெளிநாட்டுக்காரர்களுடன் திரியும்வரை அவன் மறுபடி இந்த வீட்டுக்கு வரமாட்டான்” என்றாள் பெர்னாண்டா.

வீட்டில் கட்டுப்பாடுகள் திணிக்கப்பட்டதும் பெத்ரா கோட்டேஸின் வீட்டில் கூடுதல் ஆறுதலை அவுரேலியானோ செகுந்தோ உணர்ந்தான். முதலில் மனைவிக்கு அதிகம் தொல்லைதர வேண்டாமென்ற சாக்கில் விருந்துகளை இடம்மாற்றினான். பின்னர், வளர்ப்புப் பிராணிகளுக்கு இனவிருத்தித் திறன் குறைந்திருப்பதைச் சாக்கிட்டுத் தொழுவங்களையும் லாயங்களையும் மாற்றினான். கடைசியாக, வைப்பாட்டி வீடு இதை விடக் குளிர்ச்சியானது என்ற சாக்கில் தான் மேற்கொண்டிருந்த வியாபாரத்துக்கான சிறு அலுவலகத்தை மாற்றினான். கணவன் உயிரோடு இருக்கும்போதே தான் விதவையாகிவிட்டதாக பெர்னாண்டா உணர்ந்தபோது, காரியங்களைப் பழைய நிலைக்குக் கொண்டு வருவதற் கான சமயம் ஏற்கனவே கடந்துபோயிருந்தது. அவுரேலியானோ செகுந்தோ அபூர்வமாகவே வீட்டில் உணவருந்தினான். வீட்டில் தோன்றுவதும் மனைவியுடன் படுத்துத் தூங்குவதும் யாரையும் நம்பவைக்கப் போதுமானவையாக இல்லை. கவனமின்மையால் ஒரு நாள் இரவு பெத்ரா கோட்டேஸின் படுக்கையிலேயே உறங்கியதைக் காலையில்தான் கண்டுபிடித்தான். எதிர்பார்ப்புகளுக்கு மாறாக, பெர்னாண்டா குறைந்தது அவனை வசைபாடக்கூட இல்லை. கோபமாக மூச்சுவிடவில்லை. ஆனால் அதே நாளில் இரண்டு டிரங்குப் பெட்டிகளில் அவனுடைய துணிகளை நிரப்பி வைப்பாட்டி வீட்டுக்கு அனுப்பினாள். பட்டப்பகலில், நடுத்தெருவில்தான் அவற்றைச் சுமந்துகொண்டு போக வேண்டும் என்ற அறிவுறுத்தல்களுடன்

அனுப்பினாள். அப்படியாக எல்லாரும் அதைப் பார்ப்பார்கள். அந்த அவமானம் பொறுக்க முடியாமல் தலையைத் தொங்கவிட்டுக்கொண்டு வழிக்கு வருவான் என்று அவள் யோசித்தாள். பெர்னாண்டாவுக்குத் தன்னுடைய கணவனின் நடத்தை மட்டுமல்ல; அவளுடைய பெற்றோர் கற்பித்த மதிப்பீடுகளுடன் எந்தத் தொடர்புமில்லாத அந்தச் சமூகத்தின் நடத்தைகூடத் தெரியாது என்பதற்கு அந்தச் சாகசச் செய்கையே இன்னொரு அத்தாட்சியாக இருந்தது. டிரங்குப் பெட்டிகள் எடுத்துச் செல்லப்படுவதைப் பார்த்த ஒவ்வொருவரும் அந்தக் கதையின் அந்தரங்கங்கள் தெரிந்த ஒவ்வொருவரும் அதன் இயற்கையான முடிவு இதுதான் என்றார்கள். அவுரேலியானோ செகுந்தோ தனக்குக் கிடைத்த சுதந்திரத்தை மூன்று நாட்கள் நீண்டிருந்த விருந்து நடத்திக்கொண்டாடினான். பழைய மோஸ்தரிலான நீளமான உடைகள், பழைய பாணிப் பதக்கங்கள், அவளுடைய அசந்தர்ப்பமான கர்வம் – இவையெல்லாம்தான் அவனுடைய மனைவியின் மகத்தான பாதகமான அம்சங்களாக இருந்து அவள் சோகமயமான முதிர்ச்சியை அடைந்துகொண்டிருந்தபோது வைப்பாட்டி அடர்ந்த நிறமுள்ள பட்டாடை அணிந்து புலியின் கோடுகளைப் போல மைதீட்டிய கண்களில் வெற்றியை நிறுவும் ஜொலிப்புடன் இரண்டாவது இளமைப் பருவத்தின் பொலிவுடன் துடித்துக்கொண்டிருப்பதாகத் தோன்றியது. அவுரேலியானோ செகுந்தோ முன்பைப் போல, விடலைத்தனமான மூர்க்கத்துடன் மீண்டும் மீண்டும் தன்னை அவளிடம் கொடுத்துக்கொண்டிருந்தான். பெத்ரா கோட்டேஸ் அவனை அவனுக்காகக் காதலிக்கவில்லை. ஏனெனில் அவனை அவனுடைய இரட்டைச் சகோதரனுடன் குழப்பிக்கொண்டிருந்தாள். ஒரே சமயத்தில் இரண்டு பேருடனும் படுத்துறங்கியிருந்தாள். ஒரே ஆள் இரண்டுபேரைப் போலத் தன்னைப் புணரும் நல்லூழைக் கடவுள் தனக்குக் கொடுத்திருக்கிறார் என்று நினைத்தாள். அந்தப் புதுப்பிக்கப்பட்ட ஆசை மிகவும் அழுத்தமானதாக இருந்தது. சாப்பிடத் தயாராகும்போது ஒருவருக்கு ஒருவர் நேராகக் கண்களுக்குள் பார்த்துக்கொள்வார்கள். எதுவும் பேசாமல் தட்டுகளை மூடி வைத்துவிட்டுக் காமத்துடனும் பசியுடனும் படுக்கையறைக்குள் புகுந்துகொள்வார்கள். பிரெஞ்சுப் பெண்மணிகளின் படுக்கையறைக்குள் ரகசியமாகப் போனபோது பார்த்த பொருள்களால் உந்தப்பட்டு, அவுரேலியானோ செகுந்தோ ஆர்ச்பிஷப்கள் பயன்படுத்துவது போன்ற மேல் விதானமுள்ள கட்டிலை வாங்கிப் பெத்ரா கோட்டேஸின் படுக்கையில் போட்டான். ஜன்னல்களுக்கு வெல்வெட் திரைகளை மாட்டினான். கூரையிலும் குளியலறைச் சுவர்களிலும் பளிங்குக் கண்ணாடிகளைப் பதித்தான். அவன் ஒரே சமயத்தில் உல்லாசியும் ஊதாரியுமாக இருந்தான். ஒவ்வொரு நாளும் பதினோரு மணிக்கு வந்து சேரும் ரயிலில் பெட்டி பெட்டியாக ஷாம்பெய்னையும் பிராந்தியையும் தருவித்தான். ரயில்வே ஸ்டேஷனிலிருந்து திரும்பும் வழியில் கும்பியாம்பா நடனக் குழுவினரையும் பார்க்க விரும்பும் உள்ளூர்க்காரர்கள், வெளியாட்கள், தெரிந்தவர்கள், இனிமேல் அறிமுகமாகப் போகிறவர்கள், எல்லாரையும் எந்த வித்தியாசமும் இல்லாமல் அழைத்து வருவான். நம்ப முடியாதவரான

அந்நிய மொழியில் மட்டுமே பேசும் திரு. பிரவுனும் அவுரேலியானோ செகுந்தோவின் ஆசை காட்டும் சமிக்ஞைகளால் வசீகரிக்கப்பட்டு வந்திருக்கிறார். பெத்ரா கோட்டேஸின் வீட்டில் அவரை மூச்சுமுட்டக் குடிக்க வைத்திருக்கிறான். தன்னுடனேயே எல்லா இடங்களுக்கும் வரும் மூர்க்கமான ஜெர்மன் ஷெப்பர்ட் நாய்களை அவர் அவ்வப்போது முனகும் ஏதோ டெக்ஸாஸ் பாட்டுகளுக்கு ஆட வைத்திருக்கிறார்.

போதையின் உச்சத்தில் அவுரேலியானோ "நிறுத்துங்கள் பசுக்களே" என்று கத்தினான். "நிறுத்துங்கள். வாழ்க்கை குறுகியது" என்றான்.

அவ்வளவு அருமையானவனாக அவன் ஒருபோதும் தோன்றியதில்லை. அவ்வளவு அன்புக்குரியவனாகவும் பிராணிகள் அவ்வளவு காட்டுத்தனமாகப் பெற்றுப் பெருகியிருக்கவில்லை. ஓயாமல் நடக்கும் விருந்துகளுக்காக ஏராளமான பசுக்களும் பன்றிகளும் கோழிகளும் கசாப்பு செய்யப்பட்டுக் கொண்டிருந்தன. அவ்வளவு ரத்தம் சிந்திச் சுற்றுக்கட்டுத் தரை கறுத்துச் சேறாகியிருந்தது. எலும்புகளும் குடல்களும் குவிந்த நிரந்தரக் கொலைக்களமாக இருந்தது. மிச்சம் மீதிகள் போட்ட சகதிப் பள்ளமாக இருந்தது. பருந்துகள் விருந்தாளிகளின் கண்களைத் தோண்டிவிடாமலிருக்க டைனமைட் வெடிகளை வெடிக்க வைத்துக்கொண்டிருக்க வேண்டியிருந்தது. அவுரேலியானோ செகுந்தோ கொழுத்தான். கருஞ்சிவப்பு நிறமானான். ஆமை போல ஆனான். உலகத்தைச் சுற்றிவிட்டு வந்த ஹோசே அர்க்காதியோவின் பெருந்தீனியுடன்தான் அவனுடைய உணவுப் பழக்கத்தை ஒப்பிட வேண்டியிருந்தது. அவனுடைய விநோதமான பெருந்தீனியும் ஆர்ப்பாட்டமான ஊதாரித்தனமும் முன்னுதாரணமில்லாத விருந்தோம்பலின் பெருமையும் சதுப்பு நிலப் பிரதேசத்தின் எல்லைகளைத் தாண்டிப் போயின. கடலோரப் பகுதியிலிருந்த சாப்பாட்டுப் பிரியர்களை ஈர்த்தன. பெத்ரா கோட்டேஸின் வீட்டில் ஏற்பாடு செய்யப்படும் சர்வதேசச் சாப்பாட்டுப் போட்டியில் பங்கெடுப்பதற்காக எல்லா இடங்களிலிருந்தும் பெருந்தீனிக்காரர்கள் வந்துசேர்ந்தார்கள். ஒரு துரதிருஷ்ட சனிக்கிழமையன்று, "யானை" என்ற பட்டப் பெயரில் நாடு முழுவதும் தெரிந்திருந்த கமீலா செகாஸ்ட்யூம் வந்து சேரும்வரை அவுரேலியானோ செகுந்தோதான் வெல்லப்பட முடியாத பெருந் தீனிக்காரனாக இருந்தான். இருவருக்குமிடையிலான போட்டி செவ்வாய்க்கிழமை விடியற்காலை வரை நீண்டிருந்தது. இளங்கன்று மாமிசம் கலந்த மரவள்ளிக் கிழங்கு, சேனைக் கிழங்கு, பொரித்த வாழை, உபரியாக ஒன்றரைப் பெட்டி ஷாம்பெய்ன் எல்லாம் பரிமாறப்பட்ட விருந்தின் முதல் இருபத்து நான்கு மணி நேரத்தில் அவுரேலியானோ செகுந்தோ நிச்சய வெற்றி அடைபவனாக இருந்தான். அவனுடைய நிதானமான எதிராளியைவிட அதிக உற்சாகவானாகவும் வலுவானவனாகவும் தென்பட்டான். கமீலா செகாஸ்ட்யூமிடம் தொழில்முறை சார்ந்த நறுவிசு இருந்தது. அதேசமயம், வீட்டை நிறைத்திருந்த பெருங்கூட்டத்தைப் பற்றிய உணர்வே இல்லாமலிருந்தது. வெற்றியடைய வேண்டும் என்ற பதற்றத்தில் அவுரேலியானோ செகுந்தோ பெரும் கவளங்களாக விழுங்கிக்கொண்டிருந்தபோது 'யானை', ஓர் அறுவைச் சிகிச்சை

மருத்துவரின் கலையுணர்வுடன் மாமிசத்தைத் துண்டுபோட்டு அவசரமே இல்லாமல், ஒருவகையான மகிழ்ச்சியுடனேயே உண்டாள். அவள் பூதாகரமானவளாகவும் வலிமையானவளுமாக இருந்தாலும் அவளுடைய பிரம்மாண்டமான உருவத்தில் பெண்மையின் மென்மை இருந்தது. அவள் முகம் அழகானதாகவும் கைகள் நேர்த்தியாகப் பராமரிக்கப்பட்டு அருமையானதாகவும் இருந்தன. கிளர்ச்சியூட்டும் தனிக் கவர்ச்சியிருந்தது. அவள் வீட்டுக்குள் நுழைவதைப் பார்த்த உடனேயே அவுரேலியானோ செகுந்தோ தணிந்த குரலில் இந்தப் போட்டியை உணவு மேஜையில் அல்ல; படுக்கையில் நடத்த விரும்புவதாகச் சொன்னான். பின்னர், உணவு மேஜைப் பழக்கங்களில் எதையும் மீறாமல் கன்று மாமிசத்தின் பகுதியை அவள் உண்பதைப் பார்த்தபோது நாசுக்கும் வசீகரமும் தீராப்பசியும் கொண்ட அந்த யானை ஒரு லட்சியப் பெண்தான் என்று சொன்னான். அவன் சொன்னதில் தவறில்லை. எலும்பு நொறுக்கி என்று 'யானை'யைப் பற்றிச் சொல்லப்பட்டதற்கு எந்த ஆதாரமுமில்லை. சொல்லப்பட்டது போல அவள் ஒரு மாட்டிறைச்சி விழுங்கியோ கிரேக்க சர்க்கஸிலிருந்து வந்த தாடிக்காரச் சீமாட்டியோ அல்ல. இசைப் பள்ளியின் இயக்குநர். கௌரவமான குடும்பத்தின் தலைவி. குழந்தைகளுக்குச் செயற்கையான ஊக்க மருந்துகள் செலுத்திப் பசியைத் தூண்டாமல் அவர்கள் விருப்பப்படியே நல்ல முறையில் சாப்பிடப் பழக்கிவிடும் வழியைத் தேடித்தான் அவளும் சாப்பிடக் கற்றுக்கொண்டிருந்தாள். நடைமுறையில் பின்பற்றும் அவளுடைய கொள்கை, மனசாட்சி சரியான உருவிலிருக்கும் ஒருவன் அலுக்கும்வரைக்கும் சாப்பிடலாம் என்பதுதான். தார்மீகக் காரணங்களுக்காகவும் விளையாட்டு ஆர்வத்துக்காகவும் பள்ளிக்கூட வேலையை விட்டாள். நாடு முழுவதும் மகத்தானவன் என்றும் பெருந்தீனிக்காரன் என்றும் புகழ் பெற்றிருந்த மனிதனுடன் போட்டியிடுவதற்காகவே வீட்டைவிட்டு வந்தாள். அவுரேலியானோ செகுந்தோ தன்னைப் பார்க்கிறான் என்பதைப் பார்த்த முதல் நொடியிலேயே அவன் இழக்கப் போவது வயிற்றையல்ல; தன்னுடைய நடத்தையை என்பதை ஊகித்தாள். முதல் நாள் இரவின் இறுதியில் 'யானை' முன்னேறிக் கொண்டிருந்தபோது அவுரேலியானோ செகுந்தோ ஓயாமல் பேசியும் சிரித்தும் களைப்படைந்திருந்தான். நான்கு மணி நேரம் தூங்கினார்கள். எழுந்ததும் இருவரும் நாற்பது ஆரஞ்சுப் பழங்களைப் பிழிந்த சாற்றையும் முப்பத்திரண்டு கோப்பைக் காப்பியையும் முப்பது பச்சை முட்டைகளையும் அருந்தினார்கள். இரண்டாம் நாள் காலை நீண்ட நேரம் தூங்காமலிருந்த பிறகு இரண்டு பன்றிகளையும் ஒரு குலை வாழைப் பழங்களையும் நான்கு கேஸ் ஷாம்பெய்னையும் உள்ளே தள்ளினார்கள். தன்னுடைய வழிமுறையை, அவனுக்குத் தெரியாமலேயே அவுரேலியானோ செகுந்தோ பொறுப்பில்லாத வகையில் அபத்தமாகப் பின்பற்றுவதாக 'யானை' சந்தேகப்பட்டாள். அவள் நினைத்திருந்ததை விடவும் ஆபத்தானவனாக இருந்தான். இருப்பினும் பெத்ரா கோட்டேஸ் இரண்டு பொரித்த வான்கோழிகளை உணவு மேஜைக்குக் கொண்டு வந்தபோது அவுரேலியானோ செகுந்தோ தினறும் கட்டத்தை எட்டியிருந்தான்.

"உங்களால் முடியாவிட்டால் சாப்பிட வேண்டாம். சமநிலை என்று சொல்லிக் கொள்ளலாம்" என்று யானை அவனிடம் சொன்னாள்.

தன்னால் இனி ஒருவாய் உணவைச் சாப்பிட முடியாது என்பதையும் எதிராளிக்கும் அதே நிலைதான் என்றும் புரிந்துகொண்டாள். அவனுக்குச் சாவை வரவழைத்துவிடக் கூடாது என்ற குற்ற உணர்வில் அதை மனப்பூர்வமாகத்தான் சொன்னாள். ஆனால் அவுரேலியானோ செகுந்தோ அதை இன்னொரு சவாலாகத் தவறாகப் புரிந்துகொண்டான். தன்னுடைய கொள்திறனை மீறி வான்கோழியை விழுங்கத் தொடங்கினான். மூர்ச்சையடைந்தான். நாயைப் போல நுரைகக்கி வேதனையில் முனகிக்கொண்டு எலும்புகள் நிறைந்திருந்த தட்டில் முகம் குப்புற விழுந்தான். இருட்டுக்குள் ஒரு கோபுரத்தின் உச்சியிலிருந்து ஆழம் தெரியாத பள்ளத்துக்குள் தன்னை யாரோ தள்ளிவிட்டதைப் போல உணர்ந்தான். ஞாபகத்தின் கடைசி வெளிச்சத்தில் முடிவில்லாத அந்த வீழ்ச்சியின் முடிவில் மரணம் தனக்காகக் காத்துக் கொண்டிருப்பதைப் புரிந்துகொண்டான்.

"என்னைப் பெர்னாண்டாவிடம் கொண்டு போங்கள்" என்று மட்டுமே அவனால் சொல்ல முடிந்தது.

வைப்பாட்டியின் படுக்கையில் செத்துப்போக மாட்டேன் என்று மனைவிக்குக் கொடுத்திருந்த வாக்குறுதியை நிறைவேற்றத் தங்களால் உதவ முடிந்ததாக எண்ணிய நண்பர்கள் அவனை வீட்டுக்குக் கொண்டு வந்தார்கள். தன்னைச் சவப்பெட்டிக்குள் வைக்கும்போது அணிந்து கொள்வதற்காகவென்று அவன் வைத்திருந்த ஷூக்களைப் பெத்ரா கோட்டேஸ் வெளியே எடுத்து மெருகேற்றினாள். அதைக் கொடுத்தனுப்ப ஆளைத் தேடிக்கொண்டிருந்தபோது அவுரேலியானோ செகுந்தோ அபாயக் கட்டத்தைத் தாண்டிவிட்டதாக நண்பர்கள் வந்து தெரிவித்தார்கள். ஒரு வார காலத்துக்குள் அவன் தேறினான். இரண்டு வாரங்களுக்குப் பிறகு தனது புத்துயிர்ப்பை முன்னெப்போதுமில்லாத விமரிசைகளுடன் கொண்டாடினான். தொடர்ந்து பெத்ரா கோட்டேஸின் வீட்டில்தான் குடியிருந்தான். ஆனால் தினமும் பெர்னாண்டாவைப் பார்க்கப் போவான். குடும்பத்தோடு உட்கார்ந்து சாப்பிட நேரம் ஒதுக்கினான். அப்படியாக வைப்பாட்டிக்குக் கணவனாகவும் மனைவிக்குக் காதலனாகவும் இருக்கும் விதி அவனுக்கு வாய்த்தது.

பெர்னாண்டாவுக்கு அது ஓய்வாக இருந்தது. அவளுடைய கையறு நிலையின் அலுப்பின்போது பகலுறக்க வேளையில் செய்யும் க்ளேவிகார்ட் பயிற்சியும் பிள்ளைகளிடமிருந்து வந்த கடிதங்களும்தாம் பொழுதுபோக்காக இருந்தன. இரண்டு வாரங்களுக்கு ஒருமுறை அவர்களுக்கு எழுதியனுப்பும் விரிவான கடிதத்தில் ஒரு வரிகூட உண்மையாக இருக்கவில்லை. தன்னுடைய துன்பங்களை அவர்களிடமிருந்து மறைத்தாள். பிகோனியாப் பூக்கள் நிறைந்த முற்றத்தில் படர்ந்திருக்கும் வெளிச்சமிருந்தும் பிற்பகல் இரண்டு மணிக்கு இறுக்கமானதாக இருந்தும் தெருவிலிருந்து அடிக்கடி திருவிழாக் கொண்டாட்டங்கள் வந்துகொண்டிருந்தும் அந்த வீடு, தனது பெற்றோரின் காலனிய

மாளிகை போல இருக்க வேண்டும் என்ற ஏக்கத்தை அவர்களிடமிருந்து மறைத்தாள். உயிரோடு இருக்கும் மூன்று ஆவிகளுக்கும் செத்துப் போன ஹோராசே அர்க்காதியோவின் ஆவிக்கும் இடையில் தனியாக நடமாடிக்கொண்டிருப்பாள். சில சமயங்களில் அவள் க்ளேவிகார்ட் வாசித்துக்கொண்டிருக்கும்போது ஹோராசே அர்க்காதியோ புயேந்தியா அரைவெளிச்சமுள்ள கூடத்தில் தீவிர அக்கறையுடன் வந்து உட்கார்ந் திருப்பார். கர்னல் அவுரேலியானோ புயேந்தியா வெறும் நிழலாக இருந்தார். எதிர்கால நிச்சயமில்லாத போரைத் தொடங்க கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸை அழைப்பதற்காகத் தெருவில் இறங்கிய தற்குப் பிறகு செந்தவிட்டு மரத்தடியில் ஒன்றுக்கிருப்பதற்காக மட்டுமே பட்டறையை விட்டு இறங்கினார். மூன்று வாரங்களுக்கு ஒருமுறை வரும் நாவிதனைத் தவிர அவரைப் பார்க்க யாரும் வரவில்லை. தினம் ஒருமுறை உர்சுலா கொண்டு வருவதை உண்டார். பழைய அதே ஆர்வத்துடன் சிறிய தங்க மீன்களை உருவாக்கினார். ஆனால் மக்கள் ஆபரணமாக அல்ல; வரலாற்றுச் சின்னம் என்ற நினைப்புட னேயே அவற்றை வாங்குகிறார்கள் என்று கண்டபோது விற்பனையை நிறுத்தினார். அவர்களுடைய திருமணம் முதல் படுக்கையறையை அலங்கரித்து வந்த ரெமேதியோஸின் பொம்மைகளை முற்றத்தில் சொக்கப்பானையில் போட்டு எரித்தார். மகன் என்ன செய்து கொண் டிருக்கிறான் என்பதைக் கவனிக்க முடிந்தாலும் உர்சுலாவால் அவனைத் தடுக்க முடியவில்லை.

"உனக்குக் கல் மனசு" என்றாள்.

"பிரச்சினை மனத்தைப் பற்றியதல்ல. அறைக்குள் பூச்சிகள் அதிக மாகின்றன" என்றான் அவன்.

அமரந்தா தனது சவப்போர்வையை இன்னும் நெய்துகொண் டிருந்தாள். மேமேவுக்கு எப்போதாவது கடிதங்கள் எழுதவும் பரிசுகள் அனுப்பவும் செய்யும் அமரந்தா ஏன் ஹோராசே அர்க்காதியோவைப் பற்றி ஒரு வார்த்தை கூடக் கேட்க விரும்பவில்லை என்று பெர்னாண்டா வுக்குப் புரியவில்லை. உர்சுலா மூலமாகக் கேட்டபோது "ஏனென்று தெரியாமலேயே அவர்கள் செத்துப் போவார்கள்" என்றாள். அந்தப் பதில் பெர்னாண்டாவின் மனத்தில் ஒருபோதும் விளங்காத புதிரை ஊன்றியது. உயரமானவள். பரந்த தோள்கள் கொண்டவள். பெருமித மானவள். எப்போதும் லேஸ் வைத்த பாவாடைகளையே அணிபவள். அந்த வேறுபாடுகளே காலத்தையும் கெட்ட நினைவுகளையும் மறுத் திருந்தன. கன்னிமையின் சாம்பல் சிலுவை அடையாளத்தை நெற்றியில் தாங்கிக்கொண்டிருப்பவளாகத் தோன்றினாள் அமரந்தா. உண்மையில் அந்த அடையாளத்தைக் கையில் கட்டிய கறுப்புக் காயத்துணியில்தான் சுமந்திருந்தாள். அந்தக் காயக்கட்டைத் தூங்கும்போதும் அவள் அவிழ்த்ததில்லை. அவளாக அந்தத் துணியைத் துவைத்துத் தேய்த்தாள். அவளுடைய வாழ்க்கை சவப் போர்வை நெய்வதிலேயே கழிந்து விட்டது. பகல் பொழுதில் நெய்வதை இரவில் பிரித்துவிடுகிறாள் என்றும் சொல்லலாம். தனிமையைத் தோற்கடிக்க அல்ல, மாறாக, அதைப் பேணவே அந்த உத்தி.

தன்னுடைய முதல் விடுமுறைக் காலத்தைக் கழிக்க மேமே வரும்போது வீட்டில் அவுரேலியானோ செகுந்தோ இல்லாமலிருப்பதுதான் பெர்னாண்டாவுக்கு அவளுடைய கையறுநிலையின் கடைசி வருடங்களில் பெரிய கவலையாக இருந்தது. அவனுடைய நெருக்கடி அந்த அச்சத்துக்கு முடிவு கட்டியது. மேமே திரும்பி வந்தபோது அவள் பெற்றோர் ஒரு உடன்படிக்கை செய்துகொண்டார்கள். அவுரேலியானோ செகுந்தோ இன்னும் வீட்டுக்கடங்கிய கணவனாகவே இருக்கிறான். வீட்டில் துக்ககரமான எதையும் அவள் பார்க்கும்படி விடக்கூடாது. ஒவ்வொரு ஆண்டும் இரண்டு மாதங்கள் அவுரேலியானோ செகுந்தோ இலட்சியக் கணவனின் பாத்திரத்தில் திறம்பட நடித்தான். ஐஸ்கிரீம்களும் பிஸ்கோத்துகளும் நிறைந்த விருந்துகளுக்கு ஏற்பாடு செய்தான். உற்சாகவதியும் அருமையானவளுமான அந்தப் பள்ளிச் சிறுமி க்ளேவிகார்ட் வாசித்து எல்லாரையும் பரவசப்படுத்தினாள். அதிலிருந்து அம்மாவின் குணத்திலிருந்து கொஞ்சம் மட்டுமே அவளுக்கிருந்தது என்பது வெளிப்படையானது. அவள் அமரந்தாவின் இன்னொரு பதிப்புப் போல – பியத்ரோ கிரெஸ்பிமீதான ரகசியக் காதல் அவளுடைய இதயத்தைத் திசை திருப்புவதற்கு முன்பு கசப்பு என்னவென்று தெரியாத, பன்னிரண்டோ பதினாலோ வயதில் அமரந்தா இருந்ததுபோல – தோன்றினாள். ஆனால் அமரந்தாவைப் போலவோ மற்றவர்களைப் போலவோ மேமே இன்னும் குடும்பத்துக்குரிய தனிமை விதியை வெளிக்காட்டவில்லை. உலகத்துடன் இணக்கமாக இருந்தாள். பிற்பகல் இரண்டு மணிக்கு வரவேற்பறையை மூடி வைத்து அபார ஒழுங்குடன் க்ளேவிகார்ட் இசைக்கருவியில் பயிற்சி செய்யும்போதும்கூட வெளியுலகின் சுமுகத்துடனேயே இருந்தாள். முழுவருடத்தையும் எல்லா இளம் வயதினரைப் போலவே வீடு திரும்பும் பரவசத்தைக் கனவுகண்டு கழித்தவள். எனவே வீட்டை அதிகம் விரும்பினாள் என்பது வெளிப்படை. தவிர, அப்பாவின் உல்லாச ஈடுபாடுகளிலிருந்தும் விருந்தோம்பல் விருப்பங்களிலிருந்தும் அவள் வெகுதூரம் விலகி இருக்கவில்லை. பரம்பரைத் துரதிருஷ்டத்தின் அந்த முதல் அறிகுறி அவளுடைய மூன்றாவது விடுமுறைக் காலத்தின் போது வெளிப்பட்டது. நான்கு கன்னியாஸ்திரீகளுடனும் அறுபத்தெட்டு சகமாணவிகளுடனும் மேமே வீட்டுக்கு வந்தாள். தங்கள் குடும்பத்துடன் ஒரு வாரம் தங்கிச்செல்ல அவளாகவே அழைத்திருந்தாள்.

"என்ன கொடுமை, இந்தப் பெண் அவள் அப்பாவைப் போலவே காட்டுமிராண்டியாக இருக்கிறாளே?" என்று பெர்னாண்டா புலம்பினாள்.

அண்டை வீட்டார்களிடமிருந்து படுக்கைகளையும் உறக்க மஞ்சங்களையும் இரவல் வாங்க வேண்டியிருந்தது. உணவு மேஜையில் ஒன்பது முறை பந்தி போட வேண்டியிருந்தது. குளிப்பதற்காக நேரம் ஒதுக்க வேண்டியிருந்தது. ஆண் பொத்தான்கள் வைத்த நீலநிறச் சீருடை அணிந்த சிறுமிகள் நாள் முழுவதும் ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்துக்கு ஓட வேண்டாம் என்பதற்காக நாற்பது முக்காலிகளையும் கடன் வாங்க வேண்டியிருந்தது. அந்த வருகை தோல்வியடைந்தது.

ஏனெனில் வாயாடிச் சிறுமிகள் காலைச் சிற்றுண்டியை ஒழுங்காகச் சாப்பிடுவதற்கு முன்னால் பகலுணவுக்காக இடம் பிடிக்க வேண்டியிருந்தது. அதுபோலவே பகலுணவை முடிக்கும் முன்பே இரவுணவுக்காக நிற்க வேண்டியிருந்தது. எனவே மொத்த வாரத்திலும் ஒரே ஒருநாள் மட்டுமே தோட்டத்தில் உலாவ முடிந்தது. இரவானதும் கன்னியாஸ்திரீகள் சோர்ந்து போனார்கள். இன்னொரு உத்தரவு போடக்கூட அசைய முடியவில்லை. ஆனால் களைப்பறியாத சிறுமிகள் முற்றத்தில் நேரங்கெட்ட நேரத்தில் பள்ளிப் பாடல்களைப் பாடிக் கொண்டிருந்தார்கள். ஒரு நாள் உர்சுலாவை மோதித் தள்ளப் பார்த்தார்கள். இன்னொரு நாள், முற்றத்தில் பள்ளிச் சிறுமிகள் இருப்பதைப் பொருட்படுத்தாமல் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா செந்தவிட்டு மரத்தடியில் ஒன்றுக்கிருப்பதைப் பார்த்துக் கன்னியாஸ்திரீகள் எழுச்சியடைந்தார்கள். கன்னியாஸ்திரீகளில் ஒருத்தி சமையலறையில் அமரந்தா சூப்பில் உப்பைப் போட்டுக் கொண்டிருந்தபோது பேச வேறு எதுவுமில்லை என்பதால் அவள் கைகளில் இருக்கும் வெள்ளை மாவு என்னவென்று கேட்டாள். அமரந்தா மயங்கி விழாத குறையாகப் பதில் சொன்னாள்:

“பாஷாணம்.”

மாணவிகள் வந்து சேர்ந்த இரவு, படுக்கைக்குப் போவதற்கு முன்பாக, வரிசையாக நின்று குளியலறைக்குப் போக முயன்றுகொண்டிருந்தார்கள். அதிகாலை ஒருமணிக்கும் வரிசையின் கடைசியில் இருந்தவர்கள் போய்க்கொண்டே இருந்தார்கள். பெர்னாண்டா எழுபத்திரண்டு கழிவுப் பானைகளை வாங்கினாள். ஆனால் இந்த இரவுப் பிரச்சினை காலைப் பிரச்சினையாக மாறியது. ஏனெனில் விடியற்காலை முதல் சிறுமிகள் ஒவ்வொருவரும் கையில் பானையை எடுத்துக்கொண்டு கழுவுவதற்காக நீண்ட வரிசையில் நின்றார்கள். அவர்களில் சிலருக்குக் காய்ச்சல் கண்டது. பலர் கொசுக்கடியால் பாதிப்படைந்தார்கள். எனினும் மிக மோசமான சிரமங்களைச் சமாளித்துக் கொண்டதனால் அவர்களில் பெரும்பாலானோரும் தகர்க்க முடியாத எதிர்ப்பாற்றலைக் கொண்டிருந்தார்கள். கொளுத்தும் வெப்பத்திலும் தோட்டங்களுக்குள் சுற்றித் திரிந்தார்கள். இறுதியாக அவர்கள் புறப்பட்டுப் போன பிறகு பார்த்தபோது பூக்கள் நாசமாகியிருந்தன. அறைக்கலன்கள் உடைந்திருந்தன. சுவர்களில் சித்திரங்கள் வரையப்பட்டிருந்தன. கையெழுத்துகள் போடப்பட்டிருந்தன. அவர்கள் வெளியேறிய நிம்மதியில் பெர்னாண்டா எல்லா நாசங்களையும் மன்னித்தாள். இரவல் வாங்கிய படுக்கைகளையும் முக்காலிகளையும் திருப்பிக் கொடுத்தாள். எழுபத்திரண்டு பானைகளையும் மெல்குயாதெஸின் அறையில் கொண்டு போய் வைத்தாள். முன்காலங்களில் அந்த வீட்டின் ஆன்மீக வாழ்க்கை சுழன்றுகொண்டிருந்த மூடப்பட்ட அந்த அறை அந்தச் சமயத்திலிருந்து “கழிவுப்பானை அறை” என்று அறியப்பட்டது. கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவைப் பொருத்தவரை அந்த அறைக்கு அதுதான் பொருத்தமான பெயர். குடும்பத்திலிருக்கும் மற்றவர்கள் மெல்குயாதெஸின் அறைக்குப் புழுதியையும் சிதிலத்தையும் தடுக்கும் சக்தி இருக்கிறது

என்று வியந்து கொண்டிருந்தபோது அவர் அதைக் குப்பைமேடாகவே பார்த்தார். எது சரி என்பது பற்றி அவர் கவலைப்படவில்லை. பானை களை வைப்பதற்காகத் தன்னைத் தாண்டி ஒரு பிற்பகல் முழுவதும் போய்வந்து பெர்னாண்டா தன்னுடைய வேலையைக் கெடுப்பதுதான் அந்த அறையால் ஏற்பட்ட விளைவு என்று நினைத்தார்.

அந்த நாட்களில் ஹோசே அர்க்காதியோ செகுந்தோ திரும்பவும் வீட்டுக்கு வந்தான். முற்றத்தின் வழியாக யாருக்கும் முகமன் தெரிவிக் காமல் நடந்து சென்று கர்னலிடம் பேசுவதற்காகப் பட்டறைக்குள் புகுந்து கதவைச் சாத்திக்கொண்டான். அவனைப் பார்க்க உர்சுலாவால் முடியவில்லை என்பது உண்மை. ஆனாலும் அவனுடைய பூட்சின் கிறீச்சிடலை ஆராய்ந்து கண்டுகொண்டாள். அவனுக்கும் குடும்பத்துக்கும் சிறுவயதில் குழப்பமான உள்ளூர் விளையாட்டுகளை விளையாடிய இரட்டைச் சகோதரன் அவுரேலியானோ செகுந்தோவுக்கும் இடையிலும் நிலவிய நிரப்ப முடியாத இடைவெளி அவளுக்கு வியப்பூட்டியது. அவர்களுக்கிடையில் இருந்த பொதுவான சாயல்கள்கூட இப்போது இல்லை. ஒல்லியானவனாகவும் தீவிரமானவனாகவும் சிந்தனை வயப்பட்டவனாகவும் இருந்தான். அவன் முகத்தில் இலையுதிர்காலத் தின் நிறத்துடன் சாரசென்னின் துக்கமும் சோக ஒலியும் படர்ந்திருந்தன. அவனுடைய அம்மா சாந்தா சோபியா தெ லா பியாதத்தின் சாயல் அவனிடம்தான் அதிகமாக இருந்தது. குடும்பத்தைப் பற்றிப் பேசும்போது அவனை மறந்து விடும் வழக்கத்துக்காக உர்சுலா தன்னையே கடிந்து கொண்டாள். ஆனால் அவன் அந்த வீட்டுக்கு வந்திருப்பதை உணர்ந்த போதும் கர்னல் தன்னுடைய வேலை நேரத்தில் பட்டறைக்குள் அவனை அனுமதித்ததைக் கவனித்தபோதும் அவளுக்கு ஆறுதலாக இருந்தது. இளம்பருவத்தில் அவன் தன்னுடைய இரட்டைச் சகோதர னுடன் அடிக்கடி இடங்களை மாற்றிக்கொள்வான். நான் அல்ல, மற்றவன்தான் அவுரேலியானோ என்று அழைக்கப்பட வேண்டும் என்பதற்காக. அவனுடைய வாழ்க்கையைப் பற்றி யாருக்கும் தெரியாது. அவனுக்கு நிரந்தரமான இருப்பிடம் இல்லை என்பது ஒருமுறை கண்டுபிடிக்கப்பட்டது. பிலர் தெர்னேராவின் வீட்டில் சண்டைச் சேவல்களை வளர்க்கிறான் என்றும் சில சமயங்களில் அங்கேயே தூங்குகிறான் என்றும் பெரும்பாலும், எப்போதும் பிரெஞ்சுப் பெண் களின் அறைகளில்தாம் இரவைக் கழிக்கிறான் என்றும் தெரிந்தது. உர்சுலாவின் கிரக வெளியில் நேசப் பிணைப்புகள் இல்லாமல் பெரிய ஆசைகள் இல்லாமல் அலையும் நட்சத்திரம் போல அவன் அடித்துச் செல்லப்பட்டிருந்தான்.

உண்மையில் ஹோசே அர்க்காதியோ செகுந்தோ அந்தக் குடும் பத்தைச் சேர்ந்தவனே அல்ல. வெகு காலத்துக்கு முந்தைய விடியற் காலையில் கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸுடன் ராணுவத் தளத்துக்கு அழைத்துச் சென்றதற்குப் பின்போ ஆட்கள் சுட்டுக் கொல்லப்படுவதைப் பார்த்ததற்குப் பின்போ எப்போது மாறினான் என்று தெரியவில்லை. ஆனால் சுடப்பட்ட மனிதனின் சோகமான, ஒருவிதத்தில் ஏளனம் போலத் தெரிந்த புன்னகையை அவன் தன்

வாழ்வில் ஒருபோதும் மறக்க முடியவில்லை. அது மட்டுமல்ல அவனுடைய பழைய ஞாபகம். அது மட்டுமேதான் அவனுடைய இளம்பருவத்தின் ஒரே ஞாபகம். பளபளப்பான சட்டத்துக்குள்ளே யிருந்து பழைய மோஸ்தர் கோட்டும் காக்கைச் சிறகு போன்ற விளிம்புள்ள தொப்பியும் அணிந்த கிழவனொருவன் அற்புதக் கதைகள் சொன்னது இன்னொரு ஞாபகம். அதை எந்தக் காலத்துடனும் அவனால் பொருத்த முடியவில்லை. அது ஓர் அநாவசியமான நினைவு. படிப்பினை களோ ஏக்க உணர்வோ இல்லாத நினைவு. சுட்டுக் கொல்லப்பட்ட மனிதனின் நினைவுக்கு நேர்மாறான நினைவு. அந்த நினைவுதான் அவனுடைய வாழ்க்கையின் திசையை நிர்ணயித்தது. அவன் வளர வளரத் தெளிவுடனும் நெருக்கமாகவும், காலத்தின் வழி அவனை நேர்க்கி நெருங்கி வந்ததுபோல, வாழ்க்கைக்குள் கொண்டு போனது. கர்னல் அவுரேலியானோ புயேந்தியா சிறைவாசத்தைக் கைவிடச் செய்ய ஹோசே அர்க்காதியோ செகுந்தோவைப் பயன்படுத்த உர்சுலா முயன்றாள். "அவரை சினிமாவுக்கு அழைத்துப் போ. படம் பிடிக்க வில்லை என்றாலும் கொஞ்சம் சுத்தமான காற்றாவது கிடைக்குமே" என்று அவனிடம் சொன்னாள். அவனும் கர்னலைப் போலத் தன் னுடைய மன்றாட்டுக்கு இசையும் சுரணையில்லாதவன் என்பதைத் தெரிந்துகொள்ள அதிக காலம் பிடிக்கவில்லை. இருவரும் பாசத்தால் கரையாத ஒரே கவசத்துக்குள்ளிருந்தார்கள். அவளுக்கு மட்டுமல்ல வேறு யாருக்கும்கூட, மூடிவைத்த பட்டறைக்குள் உட்கார்ந்து நீண்ட நேரம் அவர்கள் என்ன பேசினார்கள் என்று தெரியாது. இருப்பினும் குடும்பத்துக்குள்ளே அவர்கள் மட்டுமே ஒட்டுதல் உள்ள நபர்களாகத் தோன்றினார்கள்.

ஹோசே அர்க்காதியோ செகுந்தோவால் கர்னலை அவருடைய சிறையிலிருந்து வெளியே கொண்டு வந்திருக்க முடியாது. என்பதே உண்மை. பள்ளிச்சிறுமிகளின் ஊடுருவல் அவருடைய பொறுமையின் எல்லைகளைத் தகர்த்தன. படுக்கையறைக்குள் பூச்சிகள் அதிகமாகி விட்டன என்ற சாக்கில் ரெமேதியோஸின் பொம்மைகளை அழித்த பின்னும் பட்டறைக்குள் ஒரு உறக்க மஞ்சத்தைக் கட்டித் தொங்க விட்டார். இயற்கைக் கடன்களைக் கழிப்பதற்காக மட்டுமே வெளியே போனார். உர்சுலாவால் அவருடன் சாதாரண விஷயங்களைப் பற்றிக்கூடப் பேச முடியவில்லை. பணி மேஜையின் ஓரத்தில் கொண்டு வந்து வைத்த உணவுக்கலங்களை அவர் பார்ப்பதுகூட இல்லை. ஒரு சின்ன மீனைச் செய்து முடித்துக் கொண்டிருக்கும்போது சூப் திரிந்து போயிருப்பதோ மாமிசம் ஆறிப் போயிருப்பதோ பொருட்டே அல்ல என்பதும் அவளுக்குத் தெரிந்திருந்தது. முதுமைப் போருக்கு கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் ஆதரவு தர மறுத்ததிலிருந்து அவர் மேன்மேலும் இறுக்கமானவராகியிருந்தார். தன்னைத் தனக்குள்ளேயே பூட்டிக்கொண்டார். குடும்பத்தவர்கள் அவரைச் செத்துப் போனவராகவே கருதினார்கள். அக்டோபர் மாதம் பதினொன்றாம் தேதிவரை அவரிடம் மனிதர்களுக்குரிய எந்த எதிர்வினையையும் பார்க்க முடியவில்லை. அன்று வாசலுக்குப் போய்ச் சர்க்கஸ் ஊர்வலம் ஒன்று வருவதைப் பார்த்தார். கர்னல்

அவுரேலியானோ புயேந்தியாவுக்குக் கடந்த எல்லா வருடங்களின் நாட்களையும் போல இன்னொரு நாளாகத்தான் இருந்தது. காலை ஐந்து மணிக்கு வெளியிலிருந்து கேட்கும் தவளைகளின் கத்தலும் சுவர்க்கோழிகளின் இரைச்சலும் அவரை எழுப்பிவிட்டன. சனிக்கிழமை தொடங்கிய தூறல் தொடர்ந்திருந்தது. இலைகளுக்கிடையே கிசுகிசுக்கும் அவற்றின் செல்லச் சிணுங்கல்களைக் கேட்கும் அவசியம் அவருக்கு இல்லாமலிருந்தது. அவற்றின் குளிர்ச்சியை அவர் எலும்புகளுக்கிடையி லேயே உணர்ந்திருந்தார். வழக்கம் போலக் கம்பளிப் போர்வையைப் போர்த்தியிருந்தார். பருத்தியினாலான முரட்டுக் காலுறைகளை அணிந் திருந்தார். அவை பழைய மோஸ்தரிலானவையும் நைந்துபோனவையு மாக இருந்தபோதும் வசதியானவை. அவற்றை அவர் 'கோத்துகளின் உள்ளாடைகள்' என்று அழைத்தார். இறுக்கமான பேண்ட்டை பொத்தான் போடாமல் அணிந்திருந்தார். சட்டைக் கழுத்துப் பட்டியிலிருக்கும் தங்கப் பொத்தானையும் வழக்கம் போலப் போட்டிருக்கவில்லை. ஏனெனில் குளிக்கப் போக முடிவுசெய்திருந்தார். போர்வையை முக்காடு போலத் தலையில் போட்டுக்கொண்டு, விரல்களால் மீசையை ஒதுக்கியபடி முற்றத்தில் சிறுநீர் கழிக்கப்போனார். சூரியன் வெளியே வர இன்னும் அதிக நேரமிருந்தது. ஹோசே அர்க்காதியோ புயேந்தியா மழையில் ஊறி அழுகிக்கொண்டிருந்த பனை ஓலைகளின் நிழலில் தூக்கக் கலக்கத்துடன் நின்றிருந்தார். ஒருபோதும் அவரைப் பார்க்காதது போலவே அப்போதும் கர்னல் அவரைப் பார்க்கவில்லை. சம்பந்த மில்லாத வாசகங்களில் அப்பாவின் ஆவி தன்னிடம் எதையோ சொல்லிக் கொண்டிருந்ததையும் கேட்கவில்லை. ஷூக்களை ஈரமாக்கிய சூடான மூத்திர ஓட்டத்தால் திகைத்து விழிப்படைந்தார். குளியலைக் கை விட்டார். குளிரும் ஈரமும் காரணமாக அல்ல. அக்டோபர் மாதப் பனி மூட்டத்தால். பட்டறைக்குத் திரும்பும் வழியில் சாந்தா சோபியா தெ லா பியாதாத் ஸ்டவ்வில் பயன்படுத்தும் திரிகளின் நெருப்பு வாடையைக் கவனித்தார். சர்க்கரை போடாத தன்னுடைய கோப்பைக் காப்பியை எடுத்துச் செல்வதற்காகச் சமையலறைக்குள் காப்பி கொதிக்கும் வரை நின்றார். எல்லா நாள் காலையிலும் கேட்பதைப் போலச் சாந்தா சோபியா தெ லா பியாதாத் அன்று என்ன கிழமை என்று அப்போதும் கேட்டாள். அக்டோபர் மாதம் பதினோராம் தேதி, செவ்வாய்க்கிழமை என்று பதிலளித்தார். அந்தத் தளர்வறியாப் பெண்ணைப் பூச்சிடுவது போலக் கனன்ற நெருப்பில் ஒளியைக் கவனித்துக் கொண்டிருந்தார். முன்போ சொந்த வாழ்க்கை யின் எந்தக் கணத்திலுமோ அவள் முழுமையாகவே இல்லாமலிருந்தாள். போருக்கு நடுவே ஒரு அக்டோபர் மாதப் பதினொன்றாம் தேதி செத்துப்போன பெண்ணொருத்தியுடன் படுத்துக்கிடந்த கொடூர நிச்சயத்துடன் விழித்தெழுந்தது திடீரென்று அவருக்கு ஞாபகம் வந்தது. அவள் உயிருடன் இருந்தாள் என்பது அவருக்கு மறக்கவில்லை. ஏனெனில் அரைமணி நேரத்துக்கு முன்புதான் அன்று என்ன கிழமை என்று அவள் அவரிடம் கேட்டிருந்தாள். இந்த முறை எந்த அளவுக்குத் தனது முன் அறியும் உணர்வு தன்னைக் கைவிட்டது என்பதை உணராமலிருந்திருக்கிறோம் என்பதும் காப்பி கொதித்துக்கொண்டிருக்கும்

போது தனக்குப் பெயரே தெரியாத அந்தப் பெண்ணைப் பற்றி இழப்புணர்வே இல்லாமல் வெறும் குறுகுறுப்புடன் யோசித்துக்கொண்டிருந்தோம் என்பதும் அவருக்குப் பட்டன. இருட்டில் தனது உறக்க மஞ்சத்தில் மோதி விழுந்தவளின் முகமும் தனக்குத் தெரியாது என்பதும் ஞாபகமிருந்தது. எப்படியிருந்தாலும் அவர் வாழ்க்கைக்குள் அநேகப் பெண்கள் வந்துபோன அதே வழியில் அவளும் வந்திருந்தாள். கண்ணீரில் மூழ்கியிருந்தபோதுதான் முதல் சந்திப்பின் மயக்கம் நிகழ்ந்தது. சாகும் வரையும் அவரை நேசிக்க மரணம் அவளுக்கு முடி சூட்டியிருந்தது. மீண்டும் அவர் அவளைப் பற்றி நினைக்கவில்லை. அல்லது யாரைப் பற்றியுமே நினைக்கவில்லை. ஆவி பறக்கும் கோப்பையுடன் பட்டறைக்குள் புகுந்தார். தகர வாளியில் வைத்திருந்த சிறிய தங்க மீன்களை எண்ணிப் பார்ப்பதற்காக விளக்கைப் பற்ற வைத்தார். பதினேழு மீன்கள் இருந்தன. எதையும் விற்பதில்லை என்று முடிவு செய்த பிறகு ஒருநாளைக்கு இரண்டு மீன்களைச் செய்தார். எண்ணிக்கை இருபத்தைந்து ஆனதும் அவற்றை உருக்கி மீண்டும் முதலிலிருந்து தொடங்குவார். எதைப் பற்றியும் யோசிக்காமலும் பத்துமணிக்கு மழை வலுவாகப் பெய்யத் தொடங்கியதை உணராமலும் வெள்ளம் புகுந்துவிடும் முன் கதவைச் சாத்தும்படி யாரோ சொல்லிக் கொண்டு பட்டறையைத் தாண்டிப் போனதைக் கவனிக்காமலும் உர்சுலா பகலுணவைக் கொண்டு வந்து வைத்துவிட்டு விளக்கை அணைத்ததையும் யோசிக்காமலும் தன்னைப் பற்றிக்கூட சிந்திக்காமலும் பகல் முழுவதும் ஒன்றிப்போய் வேலை செய்தார்.

"என்ன மழை இது?" என்றாள் உர்சுலா. "அக்டோபர் மாதம்" என்றார் அவர்.

அதைச் சொன்னபோது அன்றைய தினத்தைய முதல் மீனிலிருந்து கண்களை உயர்த்தவில்லை. அதன் கண்களில் மாணிக்கக் கற்களைப் பொருத்துவதில் ஈடுபட்டிருந்தார். அதை முடித்து வாளியிலிருந்த மற்ற மீன்களுடன் சேர்த்த பின்பே சூப் குடிக்கத் தொடங்கினார். வெங்காயம் போட்டுப் பொரித்த இறைச்சியையும் சோற்றையும் வறுத்த வாழைப்பழங்களையும் ஒரே தட்டில் வைத்து மிக நிதானமாக அருந்தினார். சாதக, பாதகச் சூழ்நிலைகள் எதிலும் அவருடைய உணவுப் பழக்கம் மாறவில்லை. சாப்பிட்டு முடித்ததும் சோம்பேறித்தனமான கிறக்கத்தை உணர்ந்தார். இரண்டு மணிநேரச் செரிமானத்துக்கு முன்பு வேலை செய்யவோ படிக்கவோ குளிக்கவோ புணரவோ கூடாது என்ற விஞ்ஞான மூடநம்பிக்கை அவருக்கிருந்தது. ராணுவ வீரர்களுக்கு அஜீரணக் கோளாறு வந்துவிடக் கூடாது என்பதற்காகப் பலமுறை போர்க்கள நடவடிக்கைகளை நிறுத்திவைக்கும் அளவுக்கு அந்த நம்பிக்கை அவருக்குள் ஆழமாக வேரூன்றியிருந்தது.

காதுகளில் திணித்திருந்த மெழுகைப் பேனாக் கத்தியால் தோண்டி அகற்றிவிட்டு உறக்க மஞ்சத்தில் படுத்த சில நிமிடங்களில் தூங்கிப் போனார். வெள்ளைச் சுவர்கள் உள்ள காலி வீட்டுக்குள் தான் நுழைவதாகவும் அதற்குள் புகுந்த முதல் மனிதன் தானாக இருப்பதைப் பற்றி

ஏமாற்றமடைவதாகவும் கனவு கண்டார். முந்தைய இரவிலும் கடந்த சில வருடங்களாகவே அநேக இரவுகளிலும் கனவில் கண்டது போன்ற கனவையே கண்டுகொண்டிருப்பது அவருக்குக் கனவில் நினைவுக்கு வந்தது. கண் விழித்ததும் அந்தப் பிம்பம் மறைந்துவிடும் என்பதும் அவருக்குப் புரிந்தது. திரும்பத் திரும்ப வந்த அந்தக் கனவுக்குக் கனவைத் தவிர நினைவில் தங்கி நிற்காத இயல்பு இருந்தது. ஒரு கணத்துக்குப் பிறகு பட்டறைக் கதவை நாவிதன் தட்டியபோது கர்னல் அவுரேலியானோ புயேந்தியா அனிச்சையாகச் சில நொடிப் பொழுது தூக்கத்தில் ஆழ்ந்துபோனதையும் எதையும் கனவு காண அவகாசமில்லாமல் போனதையும் உணர்ந்து விழித்தார்.

"இன்றைக்கு வேண்டாம். வெள்ளிக்கிழமை பார்த்துக்கொள்ளலாம்" என்று நாவிதனிடம் சொன்னார்.

நரைமுடித் திட்டுகளுடன் மூன்றுநாள் தாடியில் இருந்தார். எனினும் சவரம் செய்துகொள்ளத் தோன்றவில்லை. ஏனெனில் வெள்ளிக்கிழமை முடிவெட்டிக்கொள்ளப் போகிறார். அந்தச் சமயத்தில் எல்லாவற்றையும் முடித்துக்கொள்ளலாம் என்று நினைத்தார். அநாவசியமான பகலுறக்கத்தின் பிசுபிசுப்பான வியர்வை அக்குளிலிருந்த கொப்புளங்களின் தழும்புகள்மேல் துளிர்த்திருந்தது. வானம் தெளிந்திருந்தும் சூரியன் வெளியே வராமலிருந்தது. கர்னல் அவுரேலியானோ புயேந்தியா, மேல் அண்ணத்தில் சூப் உண்டு பண்ணிய புளிப்பைப் பெரிய ஏப்பமாகத் திரும்ப வெளியே விட்டார். அந்த ஓசை தோளில் போட்டிருக்கும் போர்வையை வீசியெறிந்து விட்டுக் கழிப்பறைக்குப் போ என்று அவருடைய உயிரிலிருந்து பிறப்பிக்கப்பட்ட உத்தரவு போல இருந்தது. வழக்கத்தைவிட அதிக நேரம் அதற்குள்ளேயே இருந்தார். மரப்பெட்டிக்குள் இருந்து நொதித்து வரும் அடர்ந்த திரவத்துக்கு மேலாகக் குனிந்து நின்றிருந்தார். பழக்க உணர்வு வேலைக்கு நேரமாயிற்று என்று சொல்லும்வரை நின்றிருந்தார். அந்தச் சமயத்தில் அன்று செவ்வாய்க்கிழமை என்று நினைத்தது மனதுக்குள் சுழன்றது. வாழைப்பழக் குழுமப் பண்ணைகளில் அன்று சம்பள நாளாகையால் ஹோசே அர்க்காதியோ செகுந்தோ பட்டறைக்கு வரவில்லை. கடந்த காலச் சம்பவங்கள் பற்றிய அந்த நினைவூட்டல் எந்தப் பிரயாசையுமில்லாமல் யுத்தம் பற்றிய சிந்தனைக்கு இட்டுச் சென்றது. கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸ் நெற்றியில் வெள்ளை நட்சத்திரமுள்ள குதிரையொன்றை வாங்கித் தருவதாக முன்பு வாக்களித்திருந்தார். அதைப் பற்றிப் பிறகு பேசவேயில்லை என்பது நினைவுக்கு வந்தது. பின்னர் பழங்கதைகளை நோக்கிப் போனார். யோசிப்பதற்கு வேறு ஒன்றுமில்லை என்பதால் எந்தத் தீர்ப்புமில்லாமல்தான் அவற்றை மனத்துக்குள் திரும்பக் கொண்டுவந்தார். உணர்ச்சிவசப்படாமல் சிந்திக்கக் கற்றுக்கொண்டிருந்தார். எனவே அந்த அழியாத நினைவுகள் எந்த உணர்ச்சியையும் ஏற்படுத்தவில்லை. பட்டறைக்குத் திரும்பும் வழியில் புழுக்கமாக இருந்ததைப் பார்த்துக் குளிப்பதற்கான நேரம் என்று தீர்மானித்தார். ஆனால் அமரந்தா அவரை முந்திக்கொண்டு குளியலறைக்குள் புகுந்திருந்தாள். ஆகவே

அந்த நாளின் இரண்டாவது மீனைச் செய்யத் தொடங்கினார். அதன் வாயில் கொக்கியைப் பற்றவைத்துக் கொண்டிருந்தபோது சூரியன் பெரும் வலிமையுடன் வெளியே வந்தது. மீன்பிடிப் படகு போல ஒளி கிறீச்சிட்டது. மூன்று நாள் தூறலால் ஈரமாகியிருந்த வெளிக்காற்றில் பறக்கும் எறும்புகள் நிறைந்திருந்தன. சின்ன மீனின் வேலை முடியும்வரை அடக்கிக்கொண்டிருந்த சிறுநீரைக் கழிக்க வேண்டும் போலிருப்பதை உணர்ந்தார். நான்கு மணி பத்து நிமிடம் ஆனபோது முற்றத்திலிறங்கினார். தொலைவிலிருந்து வரும் பித்தளை இசையொலியையும் மத்தள முழக்கத்தையும் குழந்தைகளின் ஆரவாரக் கூச்சலையும் கேட்டார். இளம்பருவத்துக்குப் பின்பு முதல்முறையாகத் தெரிந்தே ஏக்கவுணர்வுக்குள் சிக்கினார். நாடோடிகள் நடுவில் பனிக்கட்டியைப் பார்க்க அப்பா அழைத்துப் போன அந்த மாபெரும் பகலை மீண்டும் மானசிகமாக வாழ்ந்து பார்த்தார். சமையலறையி லிருந்த சாந்தா சோபியா தெ லா பியாதெத் கைவேலையைப் போட்டுவிட்டு வாசலுக்கு ஓடினாள்.

"அது சர்க்கஸ்" என்று கூவினாள்.

செந்தவிட்டு மரத்தடிக்குப் போவதற்குப் பதில் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவும் வாசற்கதவருகே போனார். ஊர்வலத்தை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தவர்களிடையே கலந்தார். பொன்னிற உடையணிந்த பெண்ணொருத்தி யானையின் மத்தகத்தின் மேல் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தார். அராபிய ஒட்டகத்தைப் பார்த்தார். சூப் கரண்டி, வாணலி சகிதம் டச்சுக்காரப் பெண்ணைப் போல ஒப்பனை செய்யப்பட்ட கரடி இசைக்குத் தகுந்தாற் போல ஆடுவதைப் பார்த்தார். ஊர்வலத்தின் இறுதியில் கோமாளிகள் குட்டிக் கரணமடிப்பதைப் பார்த்தார். எல்லாம் கடந்து போன பின்னர் அவர் தனது பரிதாபகரமான தனிமையை மீண்டும் ஒருமுறை பார்த்தார். தெருவின் விசாலமான வெளிச்சத்தையும் பறந்து கொண்டிருந்த பறக்கும் எறும்புகளையும் நிச்சயமின்மையின் படுகுழிக் குள் ஆழ்ந்துகொண்டிருந்த சில பார்வையாளர்களையும் தவிர வேறு எதுவுமில்லை. பிறகு அவர் சர்க்கஸைப் பற்றி யோசித்துக்கொண்டே சிறுநீர் கழிப்பதற்காகச் செந்தவிட்டு மரத்தடிக்குப் போனார். ஒன்றுக் கிருக்கும்போதும் சர்க்கஸைப் பற்றித் தொடர்ந்து யோசிக்க முயன்றார். அவரால் நினைவுகளைத் தேட முடியவில்லை. கோழிக்குஞ்சைப் போலத் தலையைத் தோள்களுக்கிடையே முன்னால் உந்திச் செந்தவிட்டு மரத்தின்மேல் நெற்றி பதிய அசையாமல் நின்றார். மறுநாள் காலை பதினோரு மணிவரை குடும்பத்தவர்கள் அவரைப் பார்க்கவில்லை. சாந்தா சோபியா தெ லா பியாதாத் குப்பையைக் கொட்டப் பின் கட்டுக்குப் போனாள். பறந்து இறங்கும் கழுகுகள் அவள் கவனத்தை ஈர்த்தன.

மேமேயின் கடைசி விடுமுறை நாட்கள் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் இரங்கல் காலத்துடன் சேர்ந்து வந்தன. மூடிய வீட்டுக்குள் விருந்துகளுக்கு இடமில்லை. எல்லாரும் குசுகுசுப்பாகப் பேசிக் கொண்டார்கள். அமைதியாக உணவருந்தினார்கள். ஒரு நாளைக்கு மூன்று வேளை ஜெப மாலையை உருட்டிப் பிரார்த்தித்தார்கள். பகலுறக்க வெக்கையின் போது ஒருமுறை நடத்திய க்ளேவிகார்ட் பயிற்சியில்கூட மரணச் சடங்கின் எதிரொலி இருந்தது. கர்னல்மீது ரகசிய வெறுப்பு இருந்தபோதும் மரணமடைந்த எதிரியின் நினைவைப் போற்றிய அரசாங்கத்தின் கௌரவமான நிலைப்பாட்டால் கவரப்பட்ட பெர்னாண்டா நீத்தார் நினைவுகூரலைக் கறாராக நடைமுறைப் படுத்தினாள். மகளின் விடுமுறைக் காலத்தில் அந்த வீட்டில் உறங்குவது என்ற நியதியின்படி அவுரேலியானோ செகுந்தோ திரும்பி வந்திருந்தபோது சட்டபூர்வமான மனைவி என்ற தனது உரிமையை நிலைநாட்டிக்கொள்ள பெர்னாண்டா என்னவோ செய்திருக்க வேண்டும். அடுத்த வருடம் மேமே ஒரு குட்டித் தங்கையை வீட்டில் பார்த்தாள். அம்மா பெர்னாண்டாவின் விருப்பத்துக்கு எதிராகக் குழந்தைக்கு அமரந்தா உர்சுலா என்று பெயர் சூட்டப்பட்டது.

மேமே தன்னுடைய படிப்பை முடித்தாள். க்ளேவிகார்ட் வாசிப்பில் தேர்ச்சியடைந்திருப்பதாகப் பட்டயம் சான்றளித்தது. அவளுடைய கல்வி நிறைவைக் கொண்டாட ஏற்பாடு செய்யப் பட்ட கூட்டத்தில் அவள் பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்த பிரசித்தமான மெல்லிசை மெட்டுகளை வாசித்துத் தன்னுடைய கலைத் திறனை அதிகாரபூர்வமாக நிரூபித்துக் காட்டினாள். அத்துடன் இரங்கல் காலமும் முடிவுக்கு வந்தது. கலைத் திறனை விட அவளுடைய இருமை இயல்பைத்தான் விருந்தாளிகள் பாராட்டினார்கள். அவளுடைய அசட்டையும் குழந்தைத் தனமுமான இயல்பும் எந்தச் சீரிய செயலுக்கும் லாயக்கானவ ளாகக் காட்டவில்லை. ஆனால் க்ளேவிகார்டின் முன்னால் உட்கார்ந்ததும் அவள் வேறொருத்தியாக மாறினாள். முன்பு காண முடியாத பக்குவம் அவளை முதிர்ந்த பெண்ணாக ஆக்கியது. அவள் எப்போதும் அப்படித்தான் இருந்தாள். உண்மையில் இசையைத் தொழிலாக அவள் நினைக்கவில்லை. ஆனால் அம்மாவை எரிச்சலடையச் செய்துவிடக் கூடாது என்பதற்காகவே ஒழுங்கு குலையாமல் படித்து மிக உயர்ந்த மதிப்பெண்களை வாங்கினாள். அவளை எந்தத் துறையில் பயிற்சி பெறவிட்டிருந்

தாலும் பலன் அதுபோன்றே இருந்திருக்கும். மிகச் சின்னவளாக இருந்தபோது முதலே பெர்னாண்டாவின் கண்டிப்பும் எல்லாவற்றையும் அதீதமாகத் தீர்மானிக்கும் வழக்கமும் அவளைத் தொல்லை செய்தன. அவளுடைய விருப்பத்துக்கு எதிராக மேமே இருந்திருப்பாளானால் க்ளேவிகார்ட் பாடங்களைவிடக் கடினமான வேறு ஏதாவது 'தியாகங்க'ளும் அவளுக்குச் சாத்தியப்பட்டிருக்கும். பட்டமளிப்பு விழாக் கொண்டாட்டங்களின்போது அளிக்கப்பட்ட கோதிக் எழுத்துகளில் பதிந்த பட்டயம் கீழ்ப்படிதலின் காரணமாக அல்லாமல் வசதி கருதி ஏற்றுக்கொண்டிருந்த ஒரு சமரசத்திலிருந்து தன்னை விடுவித்திருப்பதாக அவள் எண்ணினாள். கன்னியாஸ்திரீகள்கூட அருங்காட்சியகப் பொருள் என்று கருதும் இசைக்கருவியின் பேரில் இனி பெர்னாண்டா கவலைப் படமாட்டாள் என்று நினைத்தாள். முதலாவது ஆண்டுகளில் தன்னுடைய கணக்குகள் தவறானவை என்று நினைத்தாள். எல்லா அறக்கட்டளை நிகழ்ச்சிகளிலும் பள்ளி விழாக்களிலும் மகோந்தாவில் நடைபெற்ற தேச பக்திக் கொண்டாட்டங்களிலும் க்ளேவிகார்ட் வாசிப்பு மூலம் பாதி நகரத்தையே கிறங்கவைத்த மேமேவுக்கு, மகளின் திறமையை எல்லாரும் தெரிந்து பாராட்ட வேண்டும் என்று நினைத்து அம்மா வீட்டுக்கு அழைக்கும் ஒவ்வொரு புது விருந்தாளி முன்னாலும் வரவேற்பறைக் கச்சேரி நடத்த வேண்டியிருந்தது. அமரந்தாவின் மரணத்துக்குப் பிறகு இரங்கலுக்காக வீட்டை அடைத்தபோதுதான் மேமேயால் க்ளேவிகார்ட் கருவியை மூடிவைத்து பெர்னாண்டாவுக்கு எரிச்சல் வராத வகையில் சாவிகளை ஏதோ துணி அலமாரியின் இழுப்பறைக்குள் ஒளித்து வைக்க முடிந்தது. எங்கே, யாருடைய பிசகால் அவை காணாமற்போயின என்ற அம்மாவிடம் மேமே ஒன்றும் நடக்காதது போல அமைதியாக இருந்தாள். தன்னுடைய பயிற்சிக் காலத்தில் வாசித்து ஈடுபாடு கொண்டிருந்தவற்றையே காட்சிக்கு வைத்துக்கொண்டிருப்பதில் அலுப்புத் தோன்றியது. அது அவளுடைய சுதந்திரத்தின் விலையாக இருந்தது. அவளுடைய கற்றுக்கொள்ளும் ஆர்வம் பெர்னாண்டாவை மிகவும் மகிழ வைத்தது. அவளுடைய கலைக்குக் கிடைத்த பாராட்டில் பெருமைப்பட்டாள். வீடு முழுக்கத் தோழிகள் நிறைந்திருப்பதையும் அவள் பிற்பகல் நேரங்களைத் தோட்டத்தில் செலவழிப்பதையும் ஒருபோதும் எதிர்க்கவில்லை. தேவாலய பீடத்திலிருந்து அருட்தந்தை அந்தோனியோ இசபெல் அங்கீகரித்த படமாக இருக்குமானால் அவுரேலியானோ செகுந்தோவுடனோ அல்லது யாராவது சாதுப் பெண்ணுடனோ பார்க்கப் போவதை மறுக்கவில்லை. அது போன்ற இளைப்பாறல் வேளைகளில் மேமேயின் உண்மையான ரசனைகள் வெளிப்பட்டன. கட்டுப்பாட்டின் மறுமுனையிலிருந்தது அவளுடைய மகிழ்ச்சி. இரைச்சலான விருந்துகளில், காதலர்களைப் பற்றிய கிசுகிசுப்புகளில், தோழிகளுடன் நீண்ட நேரத்தைச் செலவழிப்பதில் மகிழ்ச்சியடைந்தாள். அங்கே அவர்கள் புகைபிடிக்கப் பழகிக்கொண்டார்கள். அங்கே ஆண்பிள்ளைச் சமாச்சாரங்களைப் பற்றிப் பேசினார்கள். அங்கே ஒரு சமயம் குடித்துப் பார்த்தார்கள். நிர்வாணமாக இருந்து எல்லாருடைய உடலுறுப்புகளையும் அளந்து ஒப்பிட்டார்கள். மேமேயால் அந்த

இரவை ஒருபோதும் மறக்க முடியாது. அதிமதுர முரப்பானை மென்றுகொண்டு வீட்டுக்கு வந்தபோது பெர்னாண்டாவும் அமரந்தாவும் ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளாமல் உணவருந்திக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய பதற்றத்தைக் கவனிக்காமலேயே மேஜையில் உட்கார்ந்தாள். ஒரு தோழியின் படுக்கையறையில் இரண்டு அற்புதமான மணி நேரங்களைக் கழித்து வந்திருந்தாள். சிரித்துச் சிரித்து அழுகையாக மாறியிருந்தது. குழப்பங்களை மீறி அபூர்வமான ஒரு துணிச்சலையும் உணர்ந்தாள். ஒன்று பள்ளிக்கூடத்தை விட்டு ஓடிப்போய்விட வேண்டும். அல்லது க்ளேவிகார்டைப் பேதிக்கு உட்காரும் இருக்கையாகப் பயன்படுத்த வேண்டும். மேஜை விளிம்பில் உட்கார்ந்து கோழியிறைச்சி சூப்பைக் குடித்துக்கொண்டிருந்தாள். சூப் புத்துணர்வூட்டும் மருந்து போல அவள் வயிற்றுக்குள் இறங்கிக் கொண்டிருந்தது. வழக்கமான எதார்த்தத்தால் சூழப்பட்டவர்களாக உட்கார்ந்திருந்த பெர்னாண்டாவையும் அமரந்தாவையும் மேமே அப்போதுதான் பார்த்தாள். அவர்களுடைய ஆன்மீக வறுமையையும் பகட்டையும் பற்றிச் சொல்லிவிடாமலிருக்கப் பெருமுயற்சி செய்ய வேண்டியிருந்தது. அவளுடைய இரண்டாவது விடுமுறைக் காலத்தில் அப்பா வீட்டில் வசிப்பது வெறுமனே ஒரு தோற்றத்தை உண்டாக்கத்தான் என்று தெரிந்துகொண்டாள். பெர்னாண்டா என்ன செய்வாள் என்று தெரிந்துகொண்டே பெத்ரோ கோட்டேஸைச் சந்திக்க அப்பாவைச் சம்மதிக்க வைத்தாள். இந்த வைப்பாட்டியின் மகளாக இருந்திருக்கலாம் என்றுகூட அவள் விரும்பினாள். மதுவின் கிறக்கத்தில் தன்னுடைய எண்ணத்தை அந்தக் கணம் வெளிப்படுத்தினால் நடக்கவிருக்கும் களேபரம் பற்றிக் குதூகலத்துடன் யோசித்தாள். அவளுடைய முரட்டுத் தனத்தின் அந்தரங்கமான திருப்தி தீவிரமாக இருந்தது. பெர்னாண்டா அதைக் கவனித்தாள்.

“என்ன விஷயம்?” என்று கேட்டாள்.

“ஒன்றுமில்லை. நான் உங்கள் இருவரையும் எவ்வளவு நேசித்தேன் என்பதை இப்போதுதான் கண்டுபிடித்துக் கொண்டிருக்கிறேன்” என்று பதில் சொன்னாள் மேமே.

அந்தப் பிரகடனத்தில் இருந்த வெளிப்படையான வெறுப்பு அமரந்தாவைத் திகைக்க வைத்தது. ஆனால் பெர்னாண்டா நெகிழ்ந்து போனாள். தனக்குப் பைத்தியம் பிடித்துவிடுமோ என்று நினைத்தாள். நள்ளிரவில் தலையைப் பிளக்கும் வலியிலும் வாந்தியிலும் ஊறி மேமே விழித்துக் கொண்டாள். பெர்னாண்டா கொஞ்சம் விளக் கெண்ணெய் புகட்டினாள். வயிற்றுக்கு ஒத்தடம் கொடுத்தாள். தலையில் பனிக்கட்டிகளை வைத்தாள். ஐந்து நாட்கள் படுக்கையிலிருக்கச்செய்தாள். அசாதாரணத் தோற்றம் கொண்ட புதிய பிரெஞ்சு டாக்டர் சொன்ன உணவுக் கட்டுப்பாட்டைப் பின்பற்றச் செய்தாள். இரண்டுமணி நேரத்துக்கு மேல் பரிசோதனை செய்த டாக்டர் அவளுக்குப் பெண் களுக்குச் சாதாரணமாக வரக்கூடிய உபாதைதான் என்று குழப்பமான தீர்மானத்துக்கு வந்திருந்தார். ஒழுக்கக் குறைவின் பரிதாபகரமான நிலையில் துணிச்சல் இழந்திருந்த மேமேவுக்கு அதைப் பொறுத்துக்

கொள்வதைத் தவிர வேறு வழியிருக்க வில்லை. அந்தச் சமயத்தில் முழுக் குருடாகியிருந்தும் சுறுசுறுப்பாகவும் தெளிவாகவும் இருந்த உர்சுலா மட்டுமே சரியான சிகிச்சையை ஊகித்தாள். "நான் பார்த்த வரைக்கும் இது குடிப்பழக்கமுள்ளவர்களுக்கு வரும் கோளாறு" என்று யோசித்தாள். உடனேயே அந்த யோசனையை நிராகரித்ததோடு அப்படி யோசித்த அற்பத்தனத்துக்காகத் தனக்குள்ளேயே வருத்தப்பட்டாள். மேமேயின் கிடப்பைப் பார்த்த அவுரேலியானொ செகுந்தோ இனிமேல் அவளை அக்கறையாகப் பார்த்துக் கொள்வதாக வாக்குறுதியளித்தான். அப்படியாகத்தான் அப்பாவுக்கும் மகளுக்குமிடையில் உற்சாகமான தோழமை பிறந்தது. அது அவனைக் குடி கூத்தின் கசப்பான தனிமையிலிருந்து விடுவித்தது. அப்போது தவிர்க்க முடியாததாக இருந்த, அவசியமில்லாமல் குடும்பச் சிக்கலைத் தூண்டிவிடும் பெர்னாண்டாவின் கண்காணிப்பிலிருந்து அவளையும் விடுவித்தது. மேமேயுடனேயே இருப்பதற்காக அவுரேலியானொ செகுந்தோ எல்லா நிகழ்ச்சிகளையும் ஒத்தி வைத்தான். அவளைச் சினிமாவுக்கும் சர்க்கஸுக்கும் அழைத்துப் போனான். தனது ஓய்வுவேளையின் பெரும்பகுதியை அவளுடனேயே கழித்தான். சமீப காலமாக, குனிந்து ஷூக்களின் கயிறுகளைக் கட்ட அனுமதிக்காத அசிங்கமான உடல் பருமனும் எல்லா விதமான உணவுகளுடனும் ஏற்பட்டிருந்த பொருந்தாத திருப்தியும் அவனுடைய குணத்தைச் சிடுசிடுப்பானதாக மாற்றத் தொடங்கியிருந்தன. மகளைக் கண்டுபிடித்த செயல் அவனுடைய பழைய உற்சாகத்தையும் அவளுடன் இருப்பது மகிழ்ச்சியையும் கொடுத்தது. மெல்ல அவனுடைய வெட்டித் தனத்திலிருந்து தூர விலக்கியது. மேமே மலர்ச்சிப் பருவத்துக்குள் நுழைந்திருந்தாள். அவள் அமரந்தாவைப் போல அழகானவள் அல்ல. மாறாக இனிமையானவள், சிடுக்கில்லாதவள், முதல் விநாடியிலேயே ஆட்களுக்கு நல்லெண்ணம் ஏற்படுத்தக்கூடிய இயல்பு அவளிடமிருந்தது. பெர்னாண்டாவின் அரதப் பழமையான பதவியும் அற்ப மனமும் அவளுடைய நவீனமான ஆன்மாவைக் காயப்படுத்தியிருந்தது. இன்னொரு பக்கம் அவுரேலியானோ செகுந்தோ அந்த நவீன உற்சாகத்தை வளர்ப்பதில் மகிழ்ச்சியடைந்தான். இப்போதும் அவளுக்கு அச்சமேற்படுத்தும் கண்களுடன் இருக்கும் புனிதர்களின் திருவுருவங்கள் அணிவகுத்திருந்த சிறுவயது முதல் அவள் குடியிருந்த படுக்கையறையிலிருந்து அவன் அவளை வெளியே கொண்டு வந்தான். அவளுக்காக இரட்டைக் கட்டில் போட்ட அறையைத் தயார் செய்தான். பெரிய ஒப்பனை மேஜையைப் போட்டான். வெல்வெட் திரைச் சீலைகளை யிட்டான். பெத்ரோ கோட்டேஸின் இன்னொரு பதிப்பை உருவாக்குகிறேன் என்பதை அறியாமலிருந்தான். மேமேவைப் பொறுத்தவரை தாராளமானவனாக இருந்தான். அவளுக்கு எவ்வளவு பணம் கொடுத்தோம் என்பதே அவனுக்குத் தெரியவில்லை. ஏனெனில் அவளாகவும் அவன் சட்டைப் பையிலிருந்து காசை எடுத்துக் கொண்டிருந்தாள். வாழைப்பழக் குழும நிறுவனத்துக்கு வந்து சேர்ந்த புதிய அழகு சாதனங்களை வாங்கி வைத்தான். மேமேயின் அறைக்குள் நகங்களை மெருகுபடுத்தும் கற்கள், கூந்தலைச் சுருட்டிவிடும் கருவிகள், பல்துலக்கும் பிரஷ்கள், கண்மைகள் முதலான ஒப்பனைப் பொருட்களும் அழகு

சாதனங்களும் ஏராளமாகக் குவிந்திருந்தன. ஒவ்வொரு முறை அவளுடைய அறைக்குள் நுழையும்போதும் ஒப்பனை மேஜை பிரஞ்சுப் பெண்களின் மேஜைகளைப் போலவே இருப்பதைப் பார்த்துக் கலவரப்பட்டாள். இருந்தபோதும் பெர்னாண்டா தனது பொழுதுகளைக் குறும்புக்காரியும் நோயாளியுமான குட்டி அமரந்தா உர்சுலாவைப் பராமரிப்பதிலும் கண்ணுக்குத் தெரியாத மருத்துவர்களுக்கு உருக்கமான கடிதங்கள் எழுதவும் பிரித்து வைத்திருந்தாள். அப்பாவுக்கும் மகளுக்கும் இருந்த நெருக்கத்தைப் பார்த்து அவுரேலியானோ செகுந்தோவிடம் ஒருபோதும் மேமேவை பெத்ரா கோட்டேஸின் வீட்டுக்கு அழைத்துச் செல்லக் கூடாது என்ற வாக்குறுதியைப் பெற்றுக்கொண்டாள். அது அர்த்தமில்லாத வேண்டுகோளாக இருந்தது. தன்னுடைய காதலனுக்கும் அவனுடைய மகளுக்குமிருந்த தோழமை அந்த வைப்பாட்டிக்கு எரிச்சலூட்டியிருந்தது. மகளிடம் நெருங்கவும் அவள் விரும்பவில்லை. மரணம்வரை தன்னோடு இருக்கும் என்று அவள் நம்பிய காதலை பெர்னாண்டாவால் தன்னிடமிருந்து பறித்துவிட முடியாது என்றாலும் மேமே அதைச் செய்துவிடுவாள் என்ற இனம்புரியாத அச்சம் அவளை வதைத்தது. முதன்முறையாகத் தனது வைப்பாட்டியின் வன்மமான வெளிப்பாட்டையும் அவமதிப்புகளையும் அவுரேலியானோ செகுந்தோ சகித்துக்கொள்ள வேண்டியிருந்தது. தன்னுடைய நடமாடும் டிரங்குப் பெட்டிகள் மீண்டும் மனைவி வீட்டுக்கு மறுபயணம் செய்ய வேண்டி வருமோ என்றும் பயந்தான். ஆனால் அப்படி நடக்கவில்லை. பெத்ரா கோட்டேஸுக்குத் தன்னுடைய காதலனைத் தெரிந்த அளவுக்கு வேறு எந்தப் பெண்ணுக்கும் அவளுடைய காதலனைப் பற்றித் தெரியாது. எங்கே இருக்க வேண்டுமென்று அனுப்பப்பட்டனவோ அங்கேயே அந்தப் பெட்டிகள் இருக்கும் என்பது அவளுக்குத் தெரியும். வாழ்க்கையில் திருப்பங்களும் மாற்றங்களும் நெருக்கடியை ஏற்படுத்தும் எதையும் அவுரேலியானோ செகுந்தோ தீவிரமாக வெறுத்தான் என்பதும் தெரியும். எனவே பெட்டிகள் இருந்த இடத்திலேயே இருந்தன. பெத்ரா கோட்டேஸ் அவனைத் திரும்பவும் வென்றெடுப்பதற்காக, ஒரு மகளால் தகப்பன் மேல் பிரயோகிக்க முடியாத ஒரே ஆயுதத்தைக் கூர்மைப்படுத்தினாள். அதுவும் அநாவசியமான முயற்சியாக இருந்தது. மேமேவுக்கு அவளுடைய அப்பாவின் விவகாரங்களில் தலையிட விருப்பமில்லை. அப்படித் தலையிட நேருமானால் அதுவும் வைப்பாட்டிக்கு ஆதரவாகத்தான் இருக்கும். யாரையும் தொந்தரவுசெய்ய அவளுக்கு நேரமில்லை. அவள் தன்னுடைய அறையைக் கூட்டிப் பெருக்கினாள். கன்னியாஸ்திரீகள் கற்றுக்கொடுத்தது போலப் படுக்கையை அவளாகவே தயார்செய்து கொண்டாள். காலையில் தனது துணிகளைத் துவைத்துக்கொண்டாள். முற்றத்தில் உட்கார்ந்து கையால் தைத்தாள். அல்லது அமரந்தாவின் பழைய மிதி எந்திரத்தில் உட்கார்ந்து தையல் வேலை செய்தாள். மற்றவர்கள் மத்தியானத் தூக்கத்திலிருக்கும்போது இரண்டு மணி நேரம் க்ளேவிகார்டில் பயிற்சி செய்வாள். அந்தத் தினசரித் 'தியாகம்' பெர்னாண்டாவுக்கு மன அமைதியளிக்கும் என்பதைத் தெரிந்துவைத்திருந்தாள். அதே காரணத்துக்காகவே, அழைப்புகள் குறைவாகவும் அரிதாகவும் இருந்தபோதும் தேவாலய விழாக்களிலும் பள்ளிக்கூட

விருந்துகளிலும் கச்சேரிகள் செய்தாள். அந்திப் பொழுதில் எளிமையான உடையும் உயர்ந்த குதிவைத்த ஷூக்களும் அணிந்து ஆயத்தமாவாள். அப்பாவுடன் நிகழ்ச்சிகள் எதுவுமில்லையென்றால் தோழிகளின் வீடுகளுக்குப் போவாள். இரவு உணவு வேளைவரை அங்கேயிருப்பாள்.

மேமேயின் தோழிகளில் மூன்று அமெரிக்கப் பெண்களும் இருந்தார்கள். பறவைகள் செத்துத் தொங்கும் மின்சாரத் தடுப்பு வேலியைத் தாண்டி வெளியே வந்து மகோந்தா பெண்களுடன் நட்புப் பாராட்டினார்கள். அவர்களில் ஒருத்தி பெட்ரீஷியா பிரவுன். அவுரேலியானோ செகுந்தோவின் விருந்தோம்பலுக்கு நன்றிக்கடனாக திரு. பிரவுன் தன் வீட்டுக் கதவுகளை மேமேவுக்காக விரியத் திறந்து வைத்தார். சனிக்கிழமை நடனங்களுக்கு வருமாறு அழைத்தார். கிரிங்கோக்களும் உள்ளூர்க்காரர்களும் கலந்து பழகுவது அதில் மட்டும்தான். மேமே அந்த நடனங்களில் கலந்துகொள்கிறாள் என்பதைக் கண்டுபிடித்த பெர்னாண்டா அமரந்தா உர்சுலாவையும் டாக்டர்களையும் ஒரு விநாடி மறந்தாள். மிகவும் உருக்கமாக "கொஞ்சம் யோசித்துப் பார், தன்னுடைய கல்லறைக்குள்ளிருந்து கர்னல் என்ன நினைப்பார்?" என்று மேமேயிடம் கேட்டாள். அதற்கு உர்சுலாவின் ஆதரவும் இருக்கும் என்று அவள் நினைத்தாள். எல்லாருடைய எதிர்பார்ப்புக்கும் மாறாக அந்தக் குருட்டுக் கிழவி; மேமே நடனத்துக்குப் போவதிலோ அவள் வயதுள்ள அமெரிக்கப் பெண்களுடன் நட்புப் பாராட்டுவதிலோ தவறாக எதையும் காணவில்லை. அவள் தன்னுடைய பழக்கவழக்கங்களை விடாமலும் புராட்டெஸ்டென்ட் மதத்துக்கு மாறிவிடாமலும் இருந்தால் சரி. முதுபாட்டியின் எண்ணத்தை மேமே சரியாக உணர்ந்து கொண்டாள். அன்று முதல் நடனத்துக்குப் போய் வந்த நாளுக்கு அடுத்த நாள் வழக்கத்தைவிடச் சீக்கிரமாகவே திருப்பலிப் பூசைக்குப் போனாள். அமெரிக்கர்கள் அவள் க்ளேவிகார்ட் வாசிப்பதைக் கேட்க விரும்புகிறார்கள் என்ற செய்தியை மேமே வெளியிடும்வரைதான் பெர்னாண்டாவின் எதிர்ப்பு நீடித்திருந்தது. அந்த இசைக் கருவி வீட்டுக்குள்ளிருந்து எடுக்கப்பட்டு திரு. பிரவுன் வீட்டுக்குக் கொண்டு செல்லப்பட்டது. அங்கே அந்த இளம் கச்சேரிக் கலைஞர் உண்மையான கரவொலிகளையும் மிக உற்சாகமூட்டும் பாராட்டுகளையும் பெற்றாள். அன்று முதல் நடனங்களுக்கு மட்டுமல்ல வாரம் ஒருமுறை நடக்கும் ஞாயிற்றுக்கிழமை நீச்சல் குள விருந்துகளுக்கும் அழைக்கப்பட்டாள். மேமே ஒரு தொழில்முறை நீச்சல்காரியைப் போல நீந்தக் கற்றுக் கொண்டாள். டென்னிஸ் விளையாடவும் விர்ஜீனியா ஹாமை அன்னாசிப்பழத் துண்டுகளுடன் சேர்த்து உண்ணவும் கற்றுக் கொண்டாள். நடனம், நீச்சல், டென்னிஸ் ஆகியவற்றுடன் ஆங்கில மொழியிலும் ஈடுபாடு கொண்டாள். மகளுடைய முன்னேற்றத்தில் அவுரேலியானோ செகுந்தோ மிகுந்த பரவசமடைந்தான். பயண விற்பனைப் பிரதிநிதி ஒருவனிடமிருந்து ஆறு தொகுதிகள் கொண்ட ஏராளமான வண்ணப் படங்களுள்ள ஆங்கிலக் கலைக்களஞ்சியத்தை மேமே தன் ஓய்வுநேரத்தில் வாசிப்பதற்காக வாங்கிக் கொடுத்தான். முன்பு காதலர்களைப் பற்றிக் கிசுகிசு பேசவும் தோழிகளுடன் சுற்றித் திரியவும் செலுத்தியிருந்த கவனத்தை வாசிப்பு ஆக்கிரமித்துக்

கொண்டது. அது தன்மீது திணிக்கப்பட்ட கட்டுப்பாடாக அவளுக்குத் தோன்றவில்லை. ஏனெனில் புதிர்களைப் பற்றிப் பொதுஇடங்களில் பேசும் எல்லா ஆர்வங்களும் அவளுக்கு இல்லாமல் போயிருந்தன. சிறுபிள்ளைத்தனமான சாகசமென்று மது அருந்திய அந்தக் கதையைத் திரும்பிப் பார்த்தபோது அவளுக்கு வேடிக்கையாகத் தோன்றியது. அதைப் பற்றி அவுரேலியானோ செகுந்தோவிடம் சொன்னபோது அவள் செய்ததைவிடச் சொன்னது விநோதமாக இருப்பதாக நினைத்தான். அவளிடம் எதையாவது அந்தரங்கமாகச் சொல்லும்போது வழக்கமாகக் குலுங்கி சிரிப்பதுபோலச் சிரித்துவிட்டு "உன் அம்மாவுக்கு மட்டும் தெரிந்தால்" என்றான். அதே அந்தரங்க உணர்வுடன் தனது முதல் காதலைப் பற்றியும் அவனிடம் சொல்ல வேண்டும் என்று வாக்குறுதி யளிக்கச் செய்தான். பெற்றோர்களுடன் விடுமுறையைக் கழிக்க வந்த ஒரு செம்பட்டைத் தலை அமெரிக்கப் பையனை விரும்பியதாகச் சொன்னாள். அவுரேலியானோ செகுந்தோ சிரித்துக்கொண்டே "உன் அம்மாவுக்குத் தெரிந்தால் என்ன நடக்கும் தெரியுமா?" என்றான். ஆனால் அந்தப் பையன் திரும்ப நாட்டுக்குப் போய்விட்டதாகவும் கண்ணில் படவேயில்லை என்றும் மேமே அவனிடம் சொன்னாள். அவளுடைய தீர்மானத்திலிருந்த பக்குவம் குடும்பத்தில் அமைதியை நிலைநிறுத்தியது. அவுரேலியானோ செகுந்தோ பெரும்பான்மையான பொழுதைப் பெத்ரா கோட்டேஸின் வீட்டிலேயே கழித்தான். பழைய நாட்களின் படாடோபங்களுக்கு அவனுடைய உடலும் ஆன்மாவும் ஒத்துழைக்கவில்லை என்றபோதும் அவற்றை நடத்தும் வாய்ப்பை அவன் இழக்க விரும்பவில்லை. அக்கார்டியனைத் தேடி எடுத்தான். அதன் சில கட்டைகள் ஷூ கட்டும் கயிற்றால் பிணைத்துக் கட்டப் பட்டிருந்தன. வீட்டில் அமரந்தா முடிவில்லாத சவப் போர்வையை நெய்துகொண்டிருந்தாள். உர்சுலா தனது முதுமையை இழுத்தபடி நிழல்களுக்கிடையில் நடந்துகொண்டிருந்தாள். செந்தவிட்டு மரத்தடியில் ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவின் ஆவி அப்போதும் அவளுக்கு மட்டுமே தெரிந்தது. பெர்னாண்டா தன்னுடைய அதிகாரத்தை உறுதிப்படுத்திக் கொண்டாள். அந்தச் சமயங்களில் மகன் ஹோசே அர்க்காதியோவுக்கு அவள் எழுதிய மாதாந்திரக் கடிதங்களில் ஒற்றை வரிகூடப் பொய்யாக இருக்கவில்லை. கண்ணுக்குத் தெரியாத டாக்டர் களுடனான தொடர்பை மட்டும் மறைத்து வைத்தாள். அந்தக் கடிதத் தொடர்புகளின் பயனாக அவளுடைய பெருங்குடலில் சின்னக் கட்டி யிருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. ஒரு டெலிபதி அறுவைச் சிகிச்சைக்கு அவர்கள் தயாராகிக் கொண்டிருந்தார்கள்.

அமரந்தாவின் திடீர் மரணம் கலவரத்தை ஏற்படுத்தாமலிருந்தால் புயேந்தியா இல்லம் நீண்ட கால அமைதியையும் மகிழ்ச்சியையும் திரும்பப் பெற்றிருக்கும் என்று சொல்லப்பட்டது. அது ஓர் எதிர்பாராத சம்பவமாக இருந்தது. அவளுக்கு வயதாகியிருந்தது; எல்லாரிடமிருந்தும் விலகியிருந்தாள். ஆனாலும், எப்போதும் போல பாறைபோன்று திடமானவளாகவும் நிமிர்ந்த தோற்றத்துடனும்தான் காணப்பட்டாள். கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸின் காதலைக் கடைசி முறையாக நிராகரித்துவிட்டு அறைக்குள் நுழைந்து கதவை அடைத்துக்கொண்டு

அழுத அந்த மாலை நேரம் முதல் அவள் என்ன நினைத்துக்கொண் டிருந்தாள் என்பது யாருக்கும் தெரியாது. அழகி ரெமேதியோஸ் விண்ணுலகுக்கு உயர்ந்தபோதும் அவுரேலியானோக்கள் படுகொலையின் போதும் இந்த உலகத்திலேயே அவள் மிகவும் நேசித்த நபரான கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் சாவின்போதும் அவள் அழவில்லை. இறந்த உடலைக் கண்டெடுத்தபோது மட்டுமே அவள் கண்ணீர் விட்டாள். உடலை எடுக்க உதவினாள். அவருக்கு ராணுவச் சீருடை அணிவித்தாள். முகத்தை மழித்தாள். மெழுகுபோட்டு மீசையை, அவருடைய பொற்காலங்களில் இருந்ததைவிட நேர்த்தியாக முறுக்கி விட்டாள். அந்தச் செய்கையில் காதல் இருந்ததாக யாரும் எண்ண வில்லை. ஏனெனில் அமரந்தாவுக்கு மரணச் சடங்குகளிலிருந்த பரிச்சயம் அவர்களுக்குப் பழக்கப்பட்ட ஒன்றாக இருந்தது. கத்தோலிக்கத்துக்கும் வாழ்க்கைக்கும் இருக்கும் உறவைப் பற்றித் தெரிந்துகொள்ளாமல் அதற்கும் மரணத்துக்கும் இருக்கும் தொடர்பில் மட்டுமே, அதை ஒரு மதமாக அல்லாமல் வெறும் சடங்கு மரபுகளின் தொகுப்பாக அமரந்தா நினைப்பது பெர்னண்டாவுக்குக் கலவரத்தைக் கொடுத்தது. நுட்பமான இந்தத் தர்க்கங்கள் விளங்காத அளவு அமரந்தா தன் னுடைய நினைவுகளின் கத்திரிச்செடிப் பாத்திகளில் புதையுண்டு போயிருந்தாள். பழைய நினைவேக்கங்கள் எதுவும் கலையாமலேயே அவள் முதுமையை அடைந்திருந்தாள். பியத்ரோ கிரெஸ்பியின் வால்ட்ஸ் இசையை இப்போது கேட்கும்போதும் வளரிளம் பருவத்தில் தோன்றியது போல, காலமும் கடின அனுபவங்களும் ஒரு பொருட்டல்ல என்ற பாங்கில், அழுது தீர்க்கவே விரும்பினாள். ஈரத்தில் ஊறி நாசமாகி விட்டன என்ற சாக்கில் அவளே குப்பையில் எறிந்த அந்த இசைச் சுருள்கள் அவளுடைய நினைவில் சுழன்று ஒலித்துக்கொண்டிருந்தன. மருமகன் அவுரேலியானோ ஹோசேயுடன் கொண்டிருந்த புதைகுழி இயல்புள்ள ஆசைக்குள்ளும் கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸிடம் தோன்றிய மன அமைதியும் பாதுகாப்பும் தந்த அடைக்கல உணர்வுக் குள்ளும் அதை மூழ்கடிக்க விரும்பியிருந்தாள். ஆனால் அவளால் அதிலிருந்து மீள முடியாமற்போனது. மூன்று ஆண்டுகளுக்கு முன்பு இறையியல் பள்ளிக்கு இளம் ஹோசே அர்க்காதியோ அனுப்பப்படும் வரையும் குளியலறையில் அவனைக் குளிப்பாட்டியும் தழுவியும் இருந்த தனது முதுமைச் செயலால்கூட அதை வெல்ல முடியவில்லை. அந்தச் செய்கை ஒரு பாட்டி தன் பேரனைக் குளிப்பாட்டுவதுபோல இல்லை; பிரெஞ்சுப் பெண்கள் செய்வதுபோல ஒரு பெண் தனது ஆணுடன் கொஞ்சுவதுபோலவே இருந்தது. பன்னிரண்டோ பதினான்கோ அந்த வயதில், இறுக்கமான நடன உடையிலும் இசையை நெறிப்படுத்த உதவும் கோலுடனும் பியத்ரோ கிரெஸ்பியைப் பார்த்த போதும் அப்படிக் குலாவ விரும்பியிருந்தாள். சமயங்களில் துக்கத்தை அதன் வழியே செல்ல அனுமதிப்பது வலியைக் கொடுத்தது. சமயங் களில் கோபத்தைக் கொடுத்தது. அந்தச் சமயங்களில் ஊசியால் விரல் களைக் குத்திக்கொள்ளுவாள். அவளை அதிகம் வேதனைப்படுத்தியதும் அதிகம் கோபப்படுத்தியதும் அதிகம் கரிப்பை உணரவைத்ததும் சாவை நோக்கி அவளை இழுத்துச் சென்ற காதலின் புழுத்த கொய்யாத்

தோட்டம்தான். கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவால் போரைப் பற்றி யோசிப்பதைத் தவிர்க்க முடியாதது போலவே அமரந்தாவாலும் ரெபேக்காவைப் பற்றி யோசிப்பதைத் தவிர்க்க முடியவில்லை. அவளுடைய சகோதரனால் நினைவுகளை ஆவியாக்கிக் கொள்ள முடிந்தது. மேலும் அந்த நினைவுகளில் எரிந்து தகிக்கவே அவளால் முடிந்தது. நீண்ட காலங்களாகக் கடவுளிடம் அவள் வேண்டிக் கொண்டதெல்லாம், ரெபேக்காவுக்கு முன்னாலேயே தான் செத்துப் போய்விடும் தண்டனை யுடன் தன்னிடம் வர வேண்டாம் என்றுதான். ரெபேக்காவின் வீட்டை ஒவ்வொரு முறை தாண்டிச் செல்லும்போதும் அந்த வீடு அதிகமாகச் சிதைந்து வருவதைப் பார்த்து கடவுள் தனக்குச் செவி சாய்க்கிறார் என்று ஆறுதலடைவாள். ஒரு நாள் பிற்பகலில் முற்றத்தில் சவப் போர்வையைத் தைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். ரெபேக்கா வின் மரணச் செய்தி வரும்போதும் தான் அதே இடத்தில் அதே நிலையில் அதே வெளிச்சத்தில் உட்கார்ந்திருக்க வேண்டும் என்ற எண்ணம் அவளை ஆக்கிரமித்தது. கடிதத்துக்காகக் காத்திருப்பதுபோல அந்தச் செய்திக்காகக் காத்துக்கொண்டு உட்கார்ந்தாள். வெறுமனே உட்கார்ந்திருப்பது அந்தக் காத்திருப்பையும் எதிர்பார்ப்பையும் நீண்டதாக்கிவிடும் என்பதால் தைத்த பொத்தான்களைப் பிய்த்து எடுத்து மீண்டும் அவற்றைத் தைத்துக் கொண்டிருந்தாள். ரெபேக்காவுக் காக ஒரு நேர்த்தியான சவப் போர்வையை அமரந்தா தைத்துக் கொண்டிருப்பதை வீட்டில் யாரும் அறிந்திருக்கவில்லை. பின்னர் அவுரேலியானோ டிரிஸ்டே தான் அவளை எந்த நிலையில் பார்த்தேன் என்று சொன்னான். சருமம் வற்றி உலர்ந்து ஒரு பிசாசைப் போல மாறியிருக்கிறாள்; மண்டையில் சில தங்க இழைகள் இருக்கின்றன என்று சொன்னான். விவரிக்கப்பட்ட அந்தக் காட்சியைக் கடந்த கொஞ்ச காலமாக அவள் கற்பனைசெய்து வந்ததால் அமரந்தாவுக்கு ஆச்சரியமாக இருக்கவில்லை. ரெபேக்காவின் பிணத்தைப் பழைய நிலைக்குக் கொண்டு வரவேண்டும் என்று முடிவுசெய்தாள். அவள் முகத்திலிருக்கும் சிதைவுகளைப் பாரஃபின் மெழுகால் மூட வேண்டும். புனிதர்களின் திருவுருங்களிலிருந்து முடியை எடுத்து ஒரு ஒட்டுமுடி தயாரிக்க வேண்டும். லினன் சவ அங்கியணிந்த மிக அழகான பிணத்தைத் தயார்செய்ய வேண்டும். கருஞ்சிவப்பு நிற விளிம்புகளுள்ள உள்ளே சாட்டின் ஒட்டிய சவப்பெட்டியைத் தயார்செய்ய வேண்டும். பிறகு அதைப் பிரம்மாண்டமான இறுதிச் சடங்குகள் நடத்திப் புழுக்கள் தின்ன விட்டுக் கொடுக்க வேண்டும். யோசிக்கும்போதே நடுக்கத்தைக் கொடுக்கும் அந்தத் திட்டத்தை அத்தனை வெறுப்புடன் தீட்டினாள். அன்பின் காரணமாகச் செய்தாலும் அவள் அதையேதான் செய்திருக்க வேண்டும். ஆனால் அப்படியான குழப்பத்துக்கு அவள் இடம் கொடுக்க வில்லை. எல்லா நுணுக்கங்களையும் ஒரு நிபுணனைவிடச் சூட்சுமமாக, மரணச் சடங்குகளில் கலைத்திறம் கொண்டவளாகச் சரிசெய்து கொண்டாள். கடவுளிடம் அவர் செய்துகொண்ட இந்த மன்றாட்டு களில் அவள் ஞாபகம் வைத்துக்கொள்ளாத ஒன்றும் இருந்தது. ரெபேக்காவுக்கு முன்பே அவள் இறந்து போகலாம். உண்மையில் அதுதான் நடந்தது. ஆனாலும் கடைசி விநாடியில் அமரந்தா ஏமாற்ற

மடையவில்லை. மாறாக எல்லாக் கசப்புகளிலிருந்தும் விடுபட்டாள். ஏனெனில், நிகழவிருக்கும் காலத்துக்குப் பல வருடங்கள் முன்பே மரணம் தனது வருகையை அவளிடம் அறிவித்திருந்தது. மேமே பள்ளிக்குச் சென்ற பின்னர் தகிக்கும் பிற்பகல் ஒன்றில் மரணமும் முற்றத்தில் அவளுடன் அமர்ந்து தைத்துக்கொண்டிருந்தது. அதை அவள் பார்த்தாள். பெண்ணைப் போல நீல உடையணிந்து நீண்ட கூந்தலுடன் பழங்காலத் தோற்றத்துடன் சமையலறையில் வீட்டு வேலைகளில் உதவ நின்றிருந்த பிலர் தெர்னேராவின் சாயலில் இருந்தது. மரண தேவதை அவ்வளவு நிஜமானவளாகவும் அவ்வளவு மனிதத்தனமாகவும் இருந்தாள். ஒரு சந்தர்ப்பத்தில் அமரந்தாவிடம் ஊசியில் நூலைக் கோத்துத் தருமாறும் கேட்டாள். பலமுறை கூடவே இருந்தும் பெர்னாண்டா அவளைப் பார்க்கவில்லை. அமரந்தா என்றைக்கு மரிப்பாள் என்றோ, அவளுடைய நேரம் ரெபேக்காவின் சாவுக்கு முன்பே குறிக்கப்பட்டிருக்கிறது என்றோ மரணம் அவளிடம் சொல்லவில்லை. ஆனால் அடுத்த ஏப்ரல் மாதம் ஆறாம் தேதி தன்னுடைய சவப் போர்வையை அவள் தைத்துக்கொள்ளத் தொடங்க வேண்டும் என்று கட்டளையிட்டது. அதைத் தன் விருப்பம் போலச் சிக்கலானதாகவோ நேர்த்தியானதாகவோ தைத்துக்கொள்ளும் அதிகாரம் அவளுக்கு அளிக்கப்பட்டது. ஆனால் நியாயமாக ரெபேக்காவின் சவப் போர்வை போல இருக்க வேண்டும். அதை முடிக்கும் நாளன்று வேதனையோ பயமோ கசப்போ இல்லாமல் இறந்து போவாள் என்றும் அவளிடம் சொல்லப்பட்டது. அதிக நேரத்தைப் பாழடிக்க முயல்வது சாத்தியமல்ல. அமரந்தா கச்சாவான தாவர இழைகளை வாங்கினாள். அவற்றைத் திரித்து நூலாக்கினாள். அதை மிகக் கவனத்துடன் அக்கறையுடன் செய்ததால் வேலை முடிவடைய நான்கு ஆண்டுகள் பிடித்தன. பிறகு தையலைத் தொடங்கினாள். தவிர்க்கவியலாத முடிவை நெருங்கியபோது ஏதாவது அற்புதம் நடந்தால் மட்டுமே ரெபேக்காவின் மரணத்துக்குப் பின்பும் தையல் வேலையைத் தொடர முடியும் என்று புரிந்துகொண்டாள். ஆனால் தீவிர கவனம், ஏமாற்றத்தைத் தாங்கிக்கொள்ளும் மன அமைதியை அவளுக்குக் கொடுத்தது. அந்தச் சமயத்தில்தான் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் சிறிய தங்க மீன்களின் விஷ வளையத்தைப் பற்றிப் புரிந்துகொண்டாள். உலகம் அவளுடைய சருமத்துக்கு வெளியில் சுருங்கி நின்றது. அவளுடைய உள் மனம் எல்லாக் கசப்புகளிலிருந்தும் விடுபட்டிருந்தது. இந்த வெளிப்படுத்தல் பல ஆண்டுகளுக்கு முன்பே நிகழ்ந்திருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும் என்பது அவளை வேதனைப்படுத்தியது. ஞாபகங்களைத் தூய்மைப்படுத்தியிருக்கலாம். புதிய வெளிச்சத்தின் கீழ் உலகத்தைப் புனர் நிர்மாணம் செய்திருக்கலாம். மாலை நேரங்களில் நடுக்கமில்லாமல் பியத்ரோ கிரெஸ்பியின் லவெண்டர் வாசனையை முகர்ந்திருக்கலாம். வெறுப்பினாலோ அன்பினாலோ அல்லாமல் தனிமையைப் புரிந்துகொண்ட அளப்பரிய புரிந்து கொள்ளல் காரணமாக ரெபேக்காவை அவளுடைய துயரச் சதுப்பிலிருந்து மீட்டிருக்கலாம். ஒரு நாள் இரவு மேமேயின் வார்த்தைகளில் கவனித்த வெறுப்பு அவளைக் குலையச் செய்யவில்லை. ஏனெனில் அது அவளைக் குறிவைத்துச் சொல்லப்பட்டதுதான். ஆனால் வளரிளம்

பருவத்தில் தானிருந்ததன் நகலாக, அத்தனை பரிசுத்தமான ஒரு வளரிளம் பருவப் பெண்ணாகவே அவள் தென்பட்டிருக்க வேண்டும். ஆனால் அவளும் வெறுப்பின் கறை படிந்தவளாக இருந்தாள். ஆனால் அதற்குள் விதியை ஏற்றுக்கொள்ளும் அவளுடைய மனப்பாங்கு ஆழமானதாகியிருந்தது. எல்லாவற்றையும் சரிப்படுத்திக் கொள்வதற்கான சாத்தியங்களின் கதவு மூடப்பட்டு விட்டதுகூட அவளை நிலைகுலையச் செய்யவில்லை. சவப் போர்வை வேலையை முடிப்பது மட்டுமே அவளுடைய ஒரே நோக்கமாக இருந்தது. ஆரம்பத்தில் அநாவசியமான நுணுக்கங்கள்செய்து நிதானமாக்கிக் கொண்டிருந்ததை விட்டு வேலையைத் துரிதமாக்கினாள். பிப்ரவரி 4ஆம் தேதி இரவு கடைசித் தையலைப் போடுவோம் என்று ஒரு வாரத்துக்கு முன்பே கணக்குப் பார்த்திருந்தாள். காரணங்கள் எதையும் சொல்லாமல் மேமே அடுத்த நாள் நடத்துவதாக இருந்த க்ளேவிகார்ட் கச்சேரியை அதற்கு அடுத்த நாளுக்கு ஒத்தி வைக்குமாறு ஆலோசனை சொன்னாள். அந்தச் சிறுமி அவளைப் பொருட்படுத்தவேயில்லை. அமரந்தா நாற்பத்தியெட்டு மணி நேரத் தாமதத்துக்கு வழியுண்டா என்று தேடினாள். பிப்ரவரி நான்காம் தேதி இரவு அடித்த பலமான சூறைக்காற்றில் மின் உற்பத்தி சாதனம் பழுதடைந்தது. மரணம் தனக்கு வழிகாட்டியதாகவே நினைத்தாள். அடுத்த நாள் காலை எட்டு மணிக்கு இதுவரை எந்தப் பெண்ணும் முடிக்காத மிக அழகான படைப்புக்குக் கடைசித் தையலைப் போட்டு முடித்தாள். எந்த நாடகத்தனமும் இல்லாமல் அன்று மாலை இறந்துபோவதாக அறிவித்தாள். குடும்பத்தவர்களிடம் மட்டுமல்ல முழு நகரத்துக்கும் அவள் தகவல் தெரிவித்திருந்தாள். கயமை நிறைந்த வாழ்க்கை குறைந்தபட்சம் இறுதியிலாவது உலகத்துக்கு உதவுவதாக அமையட்டும் என்று அமரந்தா நினைத்திருந்தாள். இறந்து போனவர் களுக்குக் கடிதங்கள் கொண்டுசெல்லத் தன்னைவிடப் பொருத்த மானவர்கள் இல்லை என்று எண்ணினாள்.

அமரந்தா புயேந்தியா இறந்தவர்களின் தபாலுடன் அன்று மாலை பயணம் தொடங்குகிறாள் என்ற செய்தி நண்பகலுக்கு முன்பே மகோந்தா முழுவதும் பரவியது. பிற்பகல் மூன்று மணியளவில் கடிதங்கள் நிறைந்த பெட்டி முற்றத்தில் வைக்கப்பட்டது. கடிதம் எழுத விரும்பாதவர்கள் வாய் வழியாகச் சொன்ன செய்தியை இறந்தவரின் பெயர், இறந்த தேதி சகிதம் குறிப்பேட்டில் எழுதிக் கொண்டாள். "கவலைப்படாதீர்கள். அங்கே போனதும் அவர்களை விசாரித்துக் கண்டுபிடித்து உங்கள் செய்தியைக் கொடுப்பதுதான் முதல் வேலை" என்று அனுப்புநர்களிடம் சொன்னாள். அது ஒரு பாசாங்கு. அமரந்தா கொஞ்சமாவது நிலை குலைந்து போனவளாகவோ துக்கத்தின் சிறு சமிக்ஞையாவது உள்ளவ ளாகவோ காட்டிக் கொள்ளவில்லை. ஒரு கடமையை ஏற்றுக்கொண்ட புத்துணர்ச்சியுடன் இருந்தாள். எப்போதையும்போல நிமிர்ந்து விறைப் பாக இருந்தாள். கன்னத்து எலும்புகள் துருத்தாமலும் பற்கள் விழாமலும் இருந்தால் உண்மையான தோற்றத்தைவிட இளமை யானவளாக இருந்திருப்பாள். கடிதங்களை ஓர் உறையில் போட்டு அரக்குவைத்து முத்திரையிட்டுத் தனது கல்லறையில் வைக்க வேண்டும் என்று அவளே அவர்களிடம் தெரிவித்திருந்தாள். ஈரத்திலிருந்து

கடிதங்களைப் பாதுகாக்க அதுதான் சிறந்த வழி. காலையில் தச்சனை வரச் சொல்லி சவப் பெட்டிக்கு அளவெடுக்கச் செய்தாள். கூடத்தில் அவள் நின்றது, புதிய உடைக்கு அளவு கொடுப்பதற்காக நிற்பது போலிருந்தது. கடைசி மணி நேரங்களில் காட்டிய வேகத்தைப் பார்த்து அவள் எல்லாரையும் கேலி செய்கிறாள் என்று பெர்னாண்டா நினைத்தாள். எந்த நோயும் இல்லாமலேயே புயேந்தியா இறந்து போனார் என்பதை அனுபவித்தறிந்த உர்சுலா சந்தேகப்படவில்லை. மரணத்தின் அறிகுறி அமரந்தாவுக்குக் கிடைத்திருக்கும் என்று நம்பினாள். கடித விவகாரமும் அவற்றைச் சீக்கிரம் கொண்டு சேர்ப்பிக்க அனுப்புநர்கள் காட்டிய பதற்றமும் குழப்பத்தில் அவளை உயிரோடு புதைத்துவிடப் போகிறார்கள் என்ற பயமும் உர்சுலாவை வதைத்தன. எனவே அவள் உள்ளே நுழைந்தவர்களை வீட்டிலிருந்து அப்புறப்படுத்தக் கூச்சல் போட்டாள். நான்கு மணிக்கு அதில் வெற்றியுமடைந்தாள். அந்த நேரத்துக்குள் அமரந்தா தனது பொருட்களை ஏழைகளுக்குப் பங்கிட்டுக் கொடுத்தாள். சவப்பெட்டிக்குள் தேவைப்படும் மாற்று உடைகளும் மரித்ததும் போட்டுக் கொள்ளவிருக்கும் சாதாரணத் துணிச் செருப்புகளும் மட்டுமே சவப்பெட்டியின் முடிக்கப்படாத பலகைமீது இருந்தன. முன்னெச்சரிக்கைகள் எதையும் அவள் மறக்கவில்லை. கர்னல் அவுரேலியானோ புயேந்தியா இறந்தபோது அவர் விட்டுப்போனவை எல்லாம் பட்டறைக்குள் போட்டு நடந்த குளியலறைச் செருப்புகளாகவே இருந்ததால் புதிய ஷூக்களை வாங்க நேர்ந்தது அவளுக்கு நினைவிருந்தது. ஐந்து மணிக்குச் சற்று முன்னால் மேமேவைக் கச்சேரிக்கு அழைத்துச் செல்ல வந்த அவுரேலியானோ செகுந்தோ மரணச் சடங்குக்காக வீடு தயாராகிக்கொண்டிருப்பதைப் பார்த்து வியப்படைந்தான். அந்தக் கணத்தில் யாராவது உயிர்க்களையுடன் தென்பட்டார்கள் என்றால் அது, இன்னும் நேரமிருக்கிறது என்பதால் அமைதியாக நகங்களை வெட்டிக்கொண்டிருந்த அமரந்தா மட்டுமே. அவுரேலியானோ செகுந்தோவும் மேமேயும் நையாண்டியாக விடை பெற்றுக் கொண்டார்கள். அடுத்த சனிக்கிழமை உயிர்த்தெழுதலை ஒட்டிப் பெரிய விருந்தளிப்பதாக வாக்குறுதியும் கொடுத்தார்கள். அமரந்தா புயேந்தியா இறந்தவர்களுக்கான கடிதங்களைப் பெற்றுக் கொண்டிருக்கிறாள் என்ற ஊர்ப் பேச்சால் ஈர்க்கப்பட்ட அருட்தந்தை அந்தோனியோ இசபெல் இறுதிச் சடங்குகள் செய்வதற்காக ஐந்து மணிக்கு வந்தார். பெறுநர் குளியலை முடித்துக் கொண்டு வருவதற்காகப் பதினைந்து நிமிடங்களுக்கும் மேலாகக் காத்திருக்க நேர்ந்தது. மெல்லிய மடப்பள்ளம் துணியில் இரவுடையணிந்து கூந்தல் தோள்களில் புரள வந்த அமரந்தாவைப் பார்த்ததும் அது ஏதோ தந்திரம் என்று எண்ணிய அந்த முதிர்ந்த பாதிரி பரிசாரகச் சிறுவனைத் திருப்பியனுப்பினார். இருப்பினும் அந்தச் சந்தர்ப்பத்தைச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ள நினைத்தார். இருபது வருடங்களாக வாய் திறக்காமலிருந்த அமரந்தாவைப் பாவமன்னிப்புக் கோர வைக்க விரும்பினார். எந்த விதமான ஆன்மீக உதவியும் தனக்குத் தேவையில்லை. ஏனென்றால் தன்னுடைய மனசாட்சி தூய்மையானது என்று பதில் சொன்னாள் அமரந்தா. பெர்னாண்டா கலவரமடைந்தாள். கூடியிருக்கும் ஆட்கள் கேட்பார்கள் என்பதைப்

பொருட்படுத்தாமல் பாவ மன்னிப்பின் அவமானத்துக்குப் பதில் கடவுளுக்கு எதிரான சாவை வரித்துக் கொள்ளுமளவுக்கு அமரந்தா என்ன பாவம் செய்தாள் என்று உரக்கக் கேட்டாள். அதன் பிறகு படுத்துக் கொண்டாள். உர்சுலாவைத் தனது கன்னிமைக்குப் பொது சாட்சியம் சொல்லும்படிச் செய்தாள். பெர்னாண்டா கேட்க வேண்டு மென்பதற்காகவே உரக்கச் சொன்னாள்.

"யாருக்கும் எந்தப் பிரமையும் வேண்டா. அமரந்தா புயேந்தியா எப்படி இந்த உலகத்துக்கு வந்தாளோ அப்படியே திரும்பிப் போகிறாள்."

அமரந்தா மறுபடியும் எழுந்திருக்கவில்லை. உண்மையாகவே நோய்வாய்ப்பட்டவளைப் போல, சவப்பெட்டிக்குள் எப்படி இருக்க வேண்டும் என்று மரணம் அவளிடம் சொல்லியிருந்ததோ அதேபோலத் திண்டுகளில் சாய்ந்து நீண்ட கூந்தலைப் பின்னலிட்டு காதோரமாக மடித்துக் கட்டிக்கொண்டாள். உர்சுலாவிடம் கண்ணாடியைக் கொண்டு வரச் சொன்னாள். நாற்பது வருடங்களுக்குப் பிறகு முதல் முறையாக முதுமையும் தியாகமும் சிதிலப்படுத்திய தன் முகத்தைப் பார்த்தாள். அவள் மானசீகமாகக் கண்டிருந்த பிம்பத்துடன் தனது நிஜமுகம் எவ்வளவு பொருந்திப் போகிறது என்று ஆச்சரியமடைந்தாள். படுக்கை யறையில் நிலவிய அமைதியிலிருந்து இருட்டத் தொடங்கிவிட்டது என்று உர்சுலா புரிந்துகொண்டாள்.

"பெர்னாண்டாவிடம் சொல்லிக்கொள்" என்று கெஞ்சினாள். "ஒரு வாழ்நாள் நட்பைவிட ஒரு நிமிட இணக்கம் மதிப்பு மிகுந்தது" என்றாள்.

"இனி அதனால் பயனில்லை" என்று அமரந்தா பதிலளித்தாள்.

தற்காலிகமாக அமைத்த மேடையில் நிகழ்ச்சியின் இரண்டாவது பகுதி ஆரம்பமாவதற்காக விளக்குகள் போடப்பட்டபோது மேமேயால் அமரந்தாவைப் பற்றி யோசிக்காமல் இருக்க முடியவில்லை. வாசிப்பின் நடுவே யாரோ வந்து அவள் காதில் செய்தியைச் சொன்னார்கள். அந்தப் பகுதியை நிறுத்தினாள். வீடு திரும்பிய அவுரேலியானோ செகுந்தோ கையில் கறுப்பு நிறக் காயத் துணி சுற்றிய, அருவருப்பான, வெளிறிப்போன, கிழட்டு விதவையின் மிக ஆடம்பரமான சவப் போர்வை போர்த்திய சடலத்தைப் பார்க்கக் கூட்டத்தில் முண்டியடிக்க வேண்டி வந்தது. கூடத்தில் கடிதங்கள் நிறைந்த பெட்டிக்கு அருகில் அவளைக் கிடத்தியிருந்தார்கள்.

அமரந்தாவுக்கு இரங்கல் நடந்த ஒன்பது இரவுகளுக்குப் பிறகு உர்சுலா மறுபடியும் எழுந்திருக்கவில்லை. சாந்தா சோபியா தெ லா பியாதாத் அவளைக் கவனித்துக்கொண்டாள். அவளுடைய உணவை யும் குளிப்பதற்கான குப்பைமேனி கலந்த தண்ணீரையும் படுக்கை யறைக்கே எடுத்துச் சென்றாள். மகோந்தாவில் நடந்த எல்லாவற்றைப் பற்றியும் உடனடித் தகவல்களைச் சொன்னாள். அவுரேலியானோ செகுந்தோ அவளை அடிக்கடி வந்து பார்த்தான். அவளுக்காகத் துணிகளைக் கொண்டு வந்தான். அவள் அவற்றையெல்லாம் கட்டிலுக்கு

அருகில் அன்றாட வாழ்வுக்குத் தேவையான பொருட்கள் வைத்திருக்கும் இடத்தில் வைத்துக் கொண்டாள். அப்படியாகச் சிறிது காலத்துக்குள் தன் கைக்கெட்டும் தூரத்தில் ஓர் உலகையே நிர்மாணித்துக் கொண்டாள். குட்டி அமரந்தா உர்சுலாவுக்கு அவள் மேல் பேரன்பு இருந்தது. தன்னைப் போலவே இருந்த அவளுக்கு வாசிக்கக் கற்றுக் கொடுத்தாள். உர்சுலாவின் தெளிவையும் தனக்குள்ளே நிறைவைக் காணும் திறமையும் பார்க்கும் ஒருவருக்கு நூறு ஆண்டுகளின் அனுபவங்களால் இயற்கையாகவே வெற்றிக் கொண்டவளாக நினைக்கத் தோன்றும். அவளுக்குப் பார்வையில் பழுது இருந்தாலும் முழுக் குருடு என்று யாரும் சந்தேகிக்கவில்லை. அபரிமிதமான நேரமும் வீட்டில் நடப்பவற்றை உற்றுக் கவனிக்கும் அபரிமிதமான உள்ளார்ந்த மௌனமும் அவளிடமிருந்தது. எனவே மேமேயின் மௌனமான துக்கத்தை முதலில் அவள்தான் கவனித்தாள்.

"இங்கே வா, இப்போது நாம் மட்டும் தனியாக இருக்கிறோம். உன் பிரச்சினை என்னவென்று இந்த அப்பாவிக் கிழவியிடம் சொல்லு" என்று அவளிடம் சொன்னாள்.

சின்னச் சிரிப்புடன் அந்த உரையாடலை மேமே தவிர்த்தாள். உர்சுலா வற்புறுத்தவில்லை. மேமே திரும்பவும் தன்னைப் பார்க்க வரவில்லை என்பதை வைத்து சந்தேகத்தை உறுதிப்படுத்திக் கொண்டாள். வழக்கத்தைவிடச் சீக்கிரமாக எழுந்திருக்கிறாள். ஒரு நிமிடம்கூட ஓய்வெடுக்காமல் வெளியே போகும் நேரத்துக்காகக் காத்திருக்கிறாள். அருகிலிருக்கும் படுக்கையறைக்குள் இரவு முழுவதும் முன்னும் பின்னும் நடந்துகொண்டிருக்கிறாள். பட்டாம்பூச்சியின் சிறகடிப்பு அவளைத் தொந்தரவு செய்கிறது. எல்லாம் அவளுக்குத் தெரிந்திருந்தது. ஒரு சந்தர்ப்பத்தில் தான் அவுரேலியானோ செகுந்தோவையும் உர்சுலாவையும் பார்க்கப் போவதாகச் சொன்னாள். மகளைத் தேடி அவுரேலியானோ செகுந்தோ வீட்டுக்கு வந்தபோது பெர்னாண்டாவின் கற்பனையாற்றல் எவ்வளவு மட்டமானது என்று வியந்தாள். மேமே ரகசிய நடவடிக்கைகளில் ஈடுபட்டிருக்கிறாள் என்பதும் நெருக்கடியான காரியங்களும் அடக்கிவைத்த பதற்றங்களும் அவளைப் பாடுபடுத்துகின்றன என்பதும், திரையரங்கில் மேமே ஒருவனை முத்தமிட்டுக்கொண்டிருந்ததைப் பெர்னாண்டா பார்த்துத் தளர்ந்துபோன இரவுக்கு வெகு முன்பே உர்சுலாவுக்கு வெளிப்படையாகியிருந்தன. அந்தச் சமயத்தில் மேமே தன்னுடைய காரியங்களில் மட்டுமே அக்கறை கொண்டவளாக இருந்தாள். தன்னைப் பற்றி உர்சுலா கோள் சொல்வதாகக் குற்றம் சாட்டினாள். உண்மையில் அவள் தன்னைத்தான் குற்றம்சாட்டிக் கொண்டாள். நீண்ட காலமாகவே அவள் தடயத்தை விட்டு வந்திருக்கிறாள் என்பது பெரும்பாலான அசட்டைப் பேர்வழிகளைக்கூட விழிப்படையச் செய்யும். பெர்னாண்டாவைப் பொறுத்தவரை அதைக் கண்டுபிடிக்க நீண்ட காலம் தேவைப்பட்டது. ஏனெனில் கண்ணுக்குத் தெரியாத டாக்டர்களுடனான தொடர்பால் குழப்பமடைந்திருந்தாள். இருந்தும் கடைசியிலாவது தன் மகளின் ஆழ்ந்த மௌனங்களையும் எதிர்பாராத கோபங்களையும் மனமாற்றங்களையும்

முரண்பாடுகளையும் அவள் கவனித்தாள். மறைமுகமான ஆனால் கறாரான கண்காணிப்பை மேற்கொண்டாள். அவளை எப்போதும் போலத் தோழிகளுடன் வெளியே போக அனுமதித்தாள். சனிக்கிழமை விருந்துகளுக்குப் போக ஒப்பனைச் செய்துகொடுத்தாள். அவளைச் சீண்டிவிடக்கூடிய எந்தக் கேள்வியையும் கேட்காமலிருந்தாள். சொன்னதற்கு நேர்மாறாகப் பல காரியங்களை மேமே செய்கிறாள் என்பதற்கான ஆதாரம் ஏற்கனவே பெர்னாண்டாவிடம் இருந்தது. ஆனால் தனது சந்தேகத்தை வெளிப்படுத்தும் எந்த அறிகுறியையும் காட்டிக்கொள்ளவில்லை. சரியான தருணத்துக்காகக் காத்திருந்தாள். ஓர் இரவு மேமே அப்பாவுடன் சினிமாவுக்குப் போவதாகச் சொன்னாள். சற்று நேரத்துக்குப் பிறகு பெத்ரா கோட்டேஸின் வீட்டுப் பக்கமிருந்து குடிகாரக் கொட்டத்தின் வெடியோசைகளும் அவுரேலியானோ செகுந்தோவின் அக்கார்டியன் வாசிப்பும் கேட்டன. உடை மாற்றிக் கொண்டு திரையரங்குக்குப் போனாள். இருட்டான இருக்கைகளுக்கு மத்தியில் மகளை அடையாளம் கண்டுகொண்டாள். அது தன் மகள்தான் என்று நிச்சயமானதும் அவள் ஒருவனை முத்தமிட்டுக் கொண்டிருப் பதைப் பார்க்க முடியாமல் திரும்பினாள். ஆனால் பார்வையாளர் களின் காதடைக்கும் இரைச்சலுக்கும், சிரிப்புகளுக்கும் இடையில் அவனுடைய நடுங்கும் குரலை அவளால் கேட்க முடிந்தது. “மன்னித்துக் கொள் அன்பே” என்று அவன் சொல்வதைக் கேட்டாள். ஒரு வார்த்தை கூடப் பேசாமல் மேமேவை அங்கிருந்து இழுத்துக் கொண்டு வெளியே வந்தாள். சந்தடி நிரம்பிய துருக்கியர் தெரு வழியாக அவளை அவமான ஊர்வலம் நடத்தி வீட்டுக்குக் கொண்டு வந்து படுக்கையறைக்குள் தள்ளிப் பூட்டினாள்.

மறுநாள் மாலை ஆறு மணிக்கு அவளைச் சந்திக்க வந்தவனின் குரலை பெர்னாண்டா அடையாளம் தெரிந்து கொண்டாள். இளைஞன். வெளிறிய நிறம். கறுத்த சோகமான கண்கள். நாடோடிகளை அவளுக் குத் தெரிந்திருக்குமானால் அவ்வளவு திகைப்படைந்திருக்க மாட்டாள். கனவு காணும் முகத் தோற்றம். அதைப் பார்த்தாலேயே கொஞ்சம் இளகிய மனம்கொண்ட எந்தப் பெண்ணுக்கும் தன்னுடைய மகளின் மனத்தில் இருப்பது புரிந்திருக்கும். அழுக்கேறிய லினன் சூட் அணிந் திருந்தான். போட்டிருந்த ஷூக்களில் வெள்ளைத் துத்தநாகத் திட்டுகள் அப்பியிருந்தன. கையில் முந்தைய சனிக்கிழமை வாங்கிய வைக்கோல் தொப்பி வைத்திருந்தான். அந்த விநாடியில் பயந்ததுபோல முழு ஆயுளிலும் அவன் பயப்பட்டிருக்க முடியாது. ஆனால் அவமதிப்பிலிருந்து காப்பாற்றிவிடக் கூடிய மரியாதையும் தோற்றமும் அவனிடம் இருந்தது. கடினமான வேலையால் உருக்குலைந்த கைகளும் நகங்களும் தவிர அவனுடைய இயற்கையான கவர்ச்சியில் குறை சொல்ல முடியாம லிருந்தது. அவன் ஒரு மெக்கானிக் என்று கண்டுபிடிக்க பெர்னாண்டா வுக்கு ஒரேயொரு நோட்டம் போதுமாக இருந்தது. தன் வசம் இருக்கும் ஒரே ஒரு ஞாயிற்றுக்கிழமை சூட்டை அணிந்திருப்பதையும் உள்ளே போட்டிருந்த சட்டையில் வாழைப்பழக் குழுமத்தின் அடையாளம் இருப்பதையும் பெர்னாண்டா பார்த்தாள். அவனைப் பேச விடவில்லை. வாசலைத் தாண்டி உள்ளே வரக்கூட அனுமதிக்கவில்லை. அவன்

வந்து ஒரு நொடிக்குப் பிறகு வீட்டுக்குள் மஞ்சள் பட்டாம் பூச்சிகள் நிரம்பின. அவள் கதவைச் சாத்தினாள்.

“போய் விடு. கௌரவமான யாரைப் பார்க்கவும் உனக்கு அருகதை யில்லை” என்று அவனிடம் சொன்னாள்.

அவன் பெயர் மவுரிசியோ பாபிலோனியா. மகோந்தாவிலேயே பிறந்து வளர்ந்தவன். வாழைப்பழக் குழுமத்தின் வாகனப் பணிமனை யில் பயிற்சி மெக்கானிக்காக இருந்தான். தோட்டத்துக்குள் ஓட்டிச் செல்வதற்குக் கார் வேண்டும் என்று ஒருநாள் பிற்பகலில் பாட்ரீஷியா பிரவுனுடன் போனபோது மேமே தற்செயலாக அவனைச் சந்தித்தாள். அன்று ஓட்டுநருக்கு நலமில்லாமலிருந்ததால் அவனிடம் மேமேயை அழைத்துச் செல்லச் சொன்னார்கள். ஓட்டுநருக்குப் பக்கத்தில் உட்கார்ந்து அவர் என்ன செய்கிறார் என்பதைக் கவனிக்க வேண்டும் என்ற அவளுடைய ஆசை கடைசியாக நிறைவேறியது. வழக்கமான ஓட்டுநரைப் போலில்லாமல் மவுரிசியோ பாபிலோனியா செய்முறைப் பயிற்சிப் பாடத்தையே நடத்தினான். அந்தக் கட்டத்தில் தான் திரு.பிரவுன் வீட்டுக்கு மேமே அடிக்கடிப் போய்வர ஆரம்பித்திருந்தாள். ஒரு பெண் கார் ஓட்டுவது முறையல்ல என்று அப்போதும் நம்பப்பட்டிருந்தது. அவன் சொன்ன தொழில்நுட்பத் தகவல்கள் அவளுக்குத் திருப்தியாக இருந்தன. அதன் பிறகு பல மாதங்கள் அவள் மவுரிசியோ பாபிலோனியாவைப் பார்க்கவில்லை. பின்னர் காரோட்டும் போதெல்லாம் அவள் கவனம் அவனது முரட்டுக் கைகளைத் தவிர, அவனுடைய ஆண்மையின் அழகைப் பற்றியதாகவே இருந்தது. பின்னர் தான் அவளுக்குப் பாதுகாப்பாக இருக்கிறோம் என்ற அவனுடைய பெருமிதம் தன்னை அலைக்கழிப்பதாகப் பட்ரீஷியா பிரவுனிடம் அவள் குறிப்பிட்டாள். அப்பாவுடன் சினிமாவுக்குப் போன முதல் சனிக்கிழமை அவள் மறுபடியும் மவுரிசியோ பாபிலோனியாவைப் பார்த்தாள். லினன் சூட் அணிந்திருந்தான். அவர்களிடமிருந்து சில இருக்கைகள் தள்ளி உட்கார்ந்திருந்தான். படத்தைப் பார்ப்பதை விட்டு இடையிடையே தலையைத் திருப்பி, தன்னையே பார்த்துக்கொண்டிருந்ததைக் கவனித்தாள். அது அவளுக்கு அருவருப்பைக் கொடுத்தது. அதற்குப் பிறகு மவுரிசியோ பாபிலோனியா பக்கத்தில் வந்து அவுரேலியானோ செகுந்தோவுக்கு முகமன் கூறினான். அப்போதுதான் அவர்கள் முன்பே ஒருவரையொருவர் தெரிந்தவர்கள்; அவுரேலியானோ டிரிஸ்டேயின் மின் உற்பத்தி அமைப்பில் அவன் வேலை செய்திருக்கிறான்; தொழிலாளியின் பணிவுடன் அப்பாவிடம் நலம் விசாரித்தான் என்பதெல்லாம் மேமேவுக்குப் புரிந்தது. அவனுடைய பெருமித உணர்வு ஏற்படுத்தியிருந்த வெறுப்பை அந்த உண்மை போக்கியது. அவர்கள் தனிமையில் சந்தித்துக் கொண்டதில்லை. பார்த்துக்கொண்டபோது சொன்ன உபசார வார்த்தைகளைத் தவிர வேறு எதுவும் பேசியதில்லை. ஒரு கப்பல் தகர்ச்சியிலிருந்து அவன் தன்னைக் காப்பாற்றியதாக ஓர் இரவு கனவு கண்டாள். நன்றியுணர்வுக்குப் பதிலாக அவளுக்கு ஆத்திரம்தான் தோன்றியது. அவன் காத்திருந்த வாய்ப்பை அவளே ஏற்படுத்திக் கொடுத்ததுபோல இருந்தது. அவன் விஷயத்தில் மட்டுமல்ல;

தன் மேல் ஆசைவைக்கும் எந்த ஆண்பிள்ளையின் விஷயமாக இருந்தாலும் நேர் எதிராக நடக்க வேண்டும் என்பதே அவளுடைய விருப்பமாக இருந்தது. ஆகவே அந்தக் கனவுக்குப் பிறகு அவனை வெறுப்பதற்குப் பதிலாக உடனே பார்க்க வேண்டும் என்ற அடக்க முடியாத வேட்கை ஏற்பட்டது. அந்த வாரத்தில் பதற்றம் மேலும் தீவிரமானது. சனிக்கிழமை திரையரங்கில் மவுரிசியோ பாபிலோனியா அவளைப் பார்த்து முகமன் தெரிவித்தபோது அவளுடைய மனத்தில் இருந்தது என்பது வெளியே வந்தது. மகிழ்ச்சியும் கோபமும் கலந்து குழம்பிய உணர்வுடன் முதல் முறையாக அவளே முன்வந்து அவனை நோக்கிக் கைநீட்டினாள். பற்றிக் கொண்ட பிறகே மவுரிசியோ பாபிலோனியா குலுக்கினான்.

தன்னுடைய கிளர்ச்சியை நினைத்து மேமே ஒரு மாத்திரை நேரம் சுணங்கினாள். அவனுடைய கையும் வியர்த்துக் குளிர்ந்திருப் பதைப் பார்த்ததும் அந்தச் சுணக்கம் சட்டென்று குரூரத் திருப்தியாக மாறியது. அன்று இரவு, மவுரிசியோ பாபிலோனியாவிடம் அவனுடைய ஆசையின் பயனின்மையை எடுத்துச் சொல்லாவிட்டால் தன்னால் ஒரு நிமிடம்கூட நிம்மதியாக இருக்க முடியாது என்பதை உணர்ந்தாள். அந்த வாரம் முழுவதையும் மனதுக்குள்ளிருக்கும் பதற்றத்தை விரட்டு வதிலேயே செலவிட்டாள். பாட்ரீஷியா பிரவுனை அழைத்துக்கொண்டு போகலாம் என்பது போன்ற எல்லாத் தந்திரங்களையும் யோசித்துப் பார்த்தாள். அப்படியிருக்கும்போதுதான் மகோந்தாவில் விடுமுறையைக் கழிக்க வந்த செம்பட்டைத் தலை அமெரிக்கனை அழைத்துக் கொண்டு பணிமனைக்குப் போனாள். அவனைப் பார்த்ததுமே அவனுடன் தனியாக இருக்க வேண்டும் என்ற ஆசை மனதுக்குள் ஓடிக் கொண் டிருப்பதை உணர்ந்தாள். அவள் வந்திருப்பதைப் பார்த்ததும் அவனும் அதைப் புரிந்துகொண்டான்.

“புதிய மாடல்களைப் பார்க்க வந்தேன்” என்றாள் மேமே.

“அது நல்ல சாக்குதான்” என்றான் அவன்.

அவன் தனது பெருமித உணர்வால் பொசுங்கிக் கொண்டிருப்பதை மேமே உணர்ந்தாள். அவனை அவமானப்படுத்த ஏதாவது வழியுண்டா என்று தேடினாள். ஆனால் அவன் அதற்கான அவகாசத்தை அவளுக்குக் கொடுக்கவில்லை. தணிவான குரலில் அவளிடம் “சோர்ந்து போகாதே, ஒரு பெண் ஒரு ஆண்மேல் பைத்தியமாக இருப்பது இது முதல் முறை அல்ல” என்றான். தோல்வியடைந்ததாக உணர்ந்த அவள் புதிய மாடல் கார்களைப் பார்க்காமலேயே பணிமனையை விட்டு வெளியேறினாள். கோபத்தில் அழுதபடியே இரவு முழுவதும் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தாள். அவளை உண்மையாகவே கவரத் தொடங்கியிருந்த செம்பட்டைத் தலை அமெரிக்கன் அணையாடை போட்ட குழந்தையாகத் தோன்றினான். அதன் பின்னரே மவுரிசியோ பாபிலோனியா வரும்போதெல்லாம் மஞ்சள் பட்டாம்பூச்சிகள் பின் தொடர்வதை அவள் உணர்ந்தாள். அவற்றை அவள் முன்பேயும் பார்த்திருக்கிறாள். குறிப்பாகப் பணிமனைக்கு மேலே. பெயின்ட

வாசத்தால் ஈர்க்கப்பட்டு வந்தவை என்றே நினைத்தாள். சினிமாவுக்குப் போனபோது ஒருமுறை அவள் தலைமேல் அவை படபடத்தன. ஒரு ஆவியைப் போல மவுரிசியோ பாபிலோனியா அவளைப் பின் தொடர ஆரம்பித்தபோது கூட்டத்தில் அவளால் மட்டுமே அவனைக் கண்டுபிடிக்க முடிந்தது. அவனுக்கும் அந்தப் பட்டாம்பூச்சிகளுக்கும் ஏதோ தொடர்பிருப்பது புரிந்தது. மவுரிசியோ பாபிலோனியா எல்லாக் கச்சேரிகளிலும் பார்வையாளர் வரிசையில் இருந்தான். திரையரங்கிலும் திருப்பலிப் பூசையிலும் இருந்தான். அவன் அங்கே இருக்கிறானா என்று அவள் தேடிப்பார்க்கத் தேவையில்லை. அங்கெல்லாம் அந்தப் பட்டம்பூச்சிகள் எப்போதும் இருந்தன. ஒருமுறை பட்டாம்பூச்சிகளின் சிறகடிப்புகளால் மூச்சுத்திணறிய அவுரேலியானோ செகுந்தோவிடம், தான் வாக்குறுதி கொடுத்தபடி, தன்னுடைய ரகசியத்தைச் சொல்லி விடும் துடிப்பு மேமேவுக்குத் தோன்றியது. ஆனால் உள்ளுணர்வு அவளிடம் அவன் வழக்கம்போலச் சிரித்துவிட்டு "உன் அம்மாவுக்குத் தெரிந்தால் என்ன சொல்வாள்." என்று கேட்பான் என்று தெரிவித்தது. ஒரு நாள் காலை ரோஜாச் செடிகளை வெட்டிவிட்டுக் கொண்டிருந்த போது பெர்னாண்டா பயந்து அலறினாள். மேமே நின்றிருந்த இடத்தி லிருந்து துள்ளி விலகினாள். தோட்டத்தில் அந்த இடம் சரியாக அழகி ரெமேதியோஸ் சொர்க்கத்துக்கு எழும்பிச் சென்ற இடம். அந்த அற்புதம் தன் மகளை முன்னிருத்தி மீண்டும் நடக்கப் போகிறதா என்று பெர்னாண்டா ஒரு விநாடி யோசித்தாள். திடீர் சிறகடிப்புகள் அவளைத் தொந்தரவு செய்திருந்தன. அவை பட்டாம்பூச்சிகள். அவை வெளிச்சத்திலிருந்துத் திடீரென்று பிறந்தவையாக மேமேவுக்குத் தோன்றின, அவள் இதயம் புரண்டது. அந்த நொடியில் கையில் ஒரு பொட்டலத்துடன் மவுரிசியோ பாபிலோனியா உள்ளே வந்தான். பாட்ரீஷியா பிரவுன் கொடுத்துவிட்ட அன்பளிப்பு என்றான். மேமே நாணத்தை மறைத்துக்கொண்டாள். துயரத்தை ஒதுக்கிக்கொண்டாள். தோட்டத்து மண் படிந்து கைகள் அழுக்காக இருப்பதால் அதைக் கைப்பிடிச் சுவர் மேல் வைத்துவிடும்படி இயற்கையான புன்னகை யுடன் சொல்லவும் அவளால் முடிந்தது. சில மாதங்களுக்குப் பிறகு, அவனை எங்கே பார்த்தோம் என்று நினைவுபடுத்திக் கொள்ள முடியாமல், யாரை வீட்டைவிட்டு விரட்ட இருந்தாளோ அவனிடம் பெர்னாண்டா கவனித்த ஒரே விஷயம் – குமட்டலைத் தரும் அவனுடைய சருமம்.

"மிக விநோதமான ஆள். சாகப் போகிறான் என்பதை அவன் முகத்தைப் பார்த்தாலே தெரியும்" என்றாள் பெர்னாண்டா.

பட்டாம்பூச்சிகளால் அம்மா வசீகரிக்கப்பட்டிருக்கிறாள் என்று மேமே நினைத்தாள். ரோஜாச் செடிகளை வெட்டிச் சீர்திருத்தும் வேலை முடிந்ததும் அவள் கைகளைக் கழுவி வந்து அந்தப் பொட் டலத்தை எடுத்துத் திறப்பதற்காகப் படுக்கையறைக்குக் கொண்டு போனாள், அது ஒரு சீன விளையாட்டுப் பொருள். ஒரே மையப் புள்ளியில் பொருந்தும் ஐந்து பெட்டிகள் இருந்தன. கடைசிப் பெட்டி யில் எழுத்துப்பழக்கம் அதிகமில்லாத யாரோ சிரமப்பட்டு எழுதி

யிருந்தார்கள். "சனிக்கிழமை திரையரங்கில் சந்திக்கலாம்." அந்தப் பெட்டி கைப்பிடிச் சுவரில் நீண்ட நேரம் இருந்தது. பெர்னாண்டாவின் கைக்கு எட்டும் தூரத்தில். ஒரு பின் அதிர்ச்சியுடன் மேமே அதை உணர்ந்தாள். மவுரிசியோ பாபிலோனியாவின் தைரியத்திலும் புத்திசாலித்தனத்திலும் அவளுக்கு மதிப்பு ஏற்பட்டாலும் தான் அவளை நிச்சயம் சந்திப்போம் என்று எதிர்பார்த்த வெகுளித்தனத்தில்தான் அவள் நெகிழ்ந்தாள். அந்தச் சமயம் சனிக்கிழமை இரவு அவுரேலியானோ செகுந்தோவுக்கு ஒரு நிகழ்ச்சி இருந்தது. ஆனாலும் வாரம் முழுவதும் பதற்றத் தீ அவளைச் சுட்டுக் கொண்டிருந்தது. சனிக்கிழமை தன்னைத் திரையரங்குக்குக் கொண்டு விட்டுக் காட்சி முடிந்ததும் அழைத்து வருமாறும் சொல்லிச் சம்மதிக்க வைத்தாள். விளக்குகள் போடப் பட்டதும் ஒரு இராக்காலப் பட்டாம்பூச்சி அவள் தலைமேல் வந்து சிறகடித்தது. அதன் பிறகே அது நிகழந்தது. விளக்குகள் அணைந்த போது மவுரிசியோ பாபிலோனியா அவள் அருகில் உட்கார்ந்திருந்தான். தயக்கத்தின் மூடு பனிக்குள் மேமே தத்தளித்துக் கொண்டிருந்தாள். கனவில் நடந்ததுபோல, நிழல்களின் நடுவே சரியாகப் பார்க்க முடியாத மசகு வாசனை கொண்ட ஆணால்தான் தன்னைக் கரை சேர்க்க முடியும் என்று அவளுக்குப் புரிந்தது. "நீ மட்டும் வராமலிருந்திருந்தால் பிறகு மறுபடி ஒருபோதும் என்னைப் பார்த்திருக்க முடியாது" என்றான். மேமே அவனுடைய கையின் கனத்தைத் தன் தொடைகளில் உணர்ந் தாள். அந்த நொடியில் இருவரும் கையறுநிலையின் மறு பக்கத்தை அடைந்து கொண்டிருப்பது அவளுக்குத் தெரிந்தது. "உன்னைப் பற்றி எனக்கு அதிர்ச்சி தரும் விஷயம் என்னவென்றால் எதைச் சொல்லக் கூடாதோ அதையே நீ எப்போதும் சொல்லுகிறாய்" என்று புன்னகைத்துக் கொண்டே சொன்னாள்.

தன் மனத்தை அவனிடம் இழந்தாள். அவளால் தூங்க முடிய வில்லை. பசி இழந்தாள். அவளுடைய அப்பாகூட எரிச்சலூட்டுபவ ராகத் தோன்றுமளவு தனிமையில் ஆழ்ந்தாள். பெர்னாண்டாவைத் திசை திருப்ப பொய்யான காதல் சந்திப்புகளைக் கற்பனை செய்தாள். தோழிகளைப் பார்க்கப் போகவில்லை. மவுரிசியோ பாபிலோனியாவை எந்த நேரமும் எந்த இடத்திலும் சந்திப்பதற்காக எல்லா மரபுகளையும் புறக்கணித்தாள். அவனுடைய முரட்டுத்தனம் முதலில் அவளைத் தொந்தரவு செய்தது. பணிமனைக்குப் பின்னால் கைவிடப்பட்ட வயலில் முதல் முறை அவர்கள் தனியாக இருந்தபோது மிருகம்போலக் கருணை யில்லாமல் அவளுடன் முயங்கினான். அது அவளைக் களைத்துபோகச் செய்தது. அதுவும் மென்மையின் ஒரு வடிவம்தான் என்று புரியத் தாமதமானது. அதன் பின்பு அவள் மன அமைதி இழந்தாள். அவனுக்காக மட்டுமே வாழ்ந்தாள். படிக்காரத்தால் கழுவப்பட்ட மயங்க வைக்கும் மசகு நெடிக்குள் மூழ்க விரும்பினாள். அமரந்தாவின் மரணத்துக்குச் சற்று முன்பு தனது உன்மதத்தின் இடைவெளியில் கிடைத்த சொற்பத் தெளிவில் தன்னுடைய நிச்சயமில்லாத எதிர்காலம் பற்றி யோசித்து நடுங்கினாள். சீட்டுகளைப் பார்த்து ஆருடம் சொல்லும் பெண்ணைப் பற்றிக் கேள்விப்பட்டு ரகசியமாக அவளைப் பார்க்கப் போனாள். அது பிலெர் தெர்னேரா. அவள் உள்ளே வருவதைப்

பார்த்த உடனேயே மேமேயின் உள் நோக்கம் பிலர் தெர்னேராவுக்கு விளங்கியது. “உட்கார். ஒரு புயேந்தியாவின் எதிர்காலத்தைக் கணித்துச் சொல்ல எனக்கு எந்தச் சீட்டும் வேண்டாம்” என்றாள். அந்த நூற்றுகிழமான சூனியக்காரி தன்னுடைய முது கொள்ளுப் பாட்டி என்பது மேமேவுக்கு ஒருபோதும் தெரிந்திருக்கவில்லை தெரியப் போவதுமில்லை. காதலின் பதற்றம் படுக்கையில்தான் ஓய்வெடுக்கும் என்று அவள் மூர்க்கமாகச் சொன்னபோது அவள் நம்பியிருக்க மாட்டாள். ஆனால் மவுரிசியோ பாபிலோனியாவின் நம்பிக்கையும் அதுவாகவே இருந்தது. ஆனால் ஒரு சாதாரண மெக்கானிக்கின் முடிவு என்று எண்ணிய மேமே முதலில் அதை மறுத்தாள். ஒரு பக்கத்திலிருக்கும் காதலை இன்னொரு பக்கத்திலிருக்கும் காதலால் தோற்கடிக்கப்படுவதாக எண்ணினாள். ஏனென்றால் வயிறு நிறைந்து விட்டால் பின்னர் பசியை மறுப்பதுதான் ஆண்களின் குணம். பிலர் தெர்னேரா பிழையைத் திருத்தியதோடு, தான் மேமேயின் தாத்தா அர்க்காதியோவைக் கருத்தரிக்கத் துணையிருந்த விதானம் வைத்த கட்டிலையும் மேமேவுக்குத் தருவதாகச் சொன்னாள். அதே கட்டிலில் தான் பின்னர் அவுரேலியானோ ஹோசேயையும் கருத்தரித்தாள். அநாவசியமான கருத்தரிப்பை எப்படித் தவிர்ப்பது என்றும் சொல்லிக் கொடுத்தாள். அதைச் செய்வதற்கான கடுகுப் பத்தையும் குடிப்பதற்கான கஷாயத்தையும் கொடுத்தாள். சிக்கல் வந்தால் அந்தக் கஷாயம் ‘மனசாட்சியின் உறுத்தலை’க்கூட விரட்டிவிடும். அந்தச் சந்திப்பு மது அருந்திய இரவில் அனுபவித்த அதே துணிச்சலை அவளுக்குள் நிலைநாட்டியது. அமரந்தாவின் மரணம் அவளுடைய முடிவை ஒத்திப்போட்டது. அந்த ஒன்பது இரவுகளிலும் ஒருமுறைகூட கூட்டத்தோடு வீட்டுக்குள் புகுந்திருந்த மவுரிசியோ பாபிலோனியாவை அவள் விட்டுப் பிரியவில்லை. நீண்ட இரங்கல் காலமும் பொதுச் சடங்குகளிலிருந்து விலகி நிற்கும் நாட்களும் வந்தபோது தற்காலிக மாகப் பிரிந்தார்கள். அந்த நாட்கள் அகப் போராட்டத்தின் நாட்களாக இருந்தன. மாற்ற முடியாத பதற்றத்தின் நாட்களாகவும் அடக்க முடியாத ஏராளமான வேட்கைகளின் நாட்களாகவும் இருந்தன. வெளியே செல்லக் கிடைத்த முதல் வாய்ப்பில்தான் அவள் நேராக பிலர் தெர்னேராவிடம் போனாள். எந்த எதிர்ப்பும் எந்த வெட்கமும் எந்தச் சம்பிரதாயங்களும் இல்லாமல் அவள் மவுரிசியோ பாபிலோனியா விடம் தன்னை ஒப்படைத்தாள். படுக்கையறையில் அவள் காண்பித்தத் தேர்ச்சியைச் சந்தேகப் பிராணியான வேறு ஆணாக இருந்தால் முன் அனுபவம் என்று குழம்பியிருக்கக்கூடும். மூன்று மாதங்களுக்கும் மேலாக வாரத்துக்கு இரண்டு முறை காதலில் ஈடுபட்டார்கள். மகளின் ஏமாற்று வேலைகள் எல்லாம் அம்மாவின் கண்டிப்பிலிருந்து தப்ப அவள் மேற்கொண்ட குறும்புகள் என்று நம்பி அதற்கு உடந்தையாக இருந்த அவுரேலியானோ செகுந்தோவின் அப்பாவித்தனத்தைப் பாதுகாப்புத் திரையாகப் பயன்படுத்திக் கொண்டார்கள்.

திரையரங்கில் பெர்னாண்டா அவர்களுக்கு அதிர்ச்சியூட்டிய அந்த இரவு அவுரேலியானோ செகுந்தோ மனச்சாட்சியின் பாரத்தால் வீழ்த்தப்பட்டதாக உணர்ந்தான். தனக்கு வாக்குறுதி அளித்ததுபோல்

அந்தரங்கங்களைத் தன்னிடம் வெளியிடுவாள் என்ற நம்பிக்கையில் பெர்னாண்டா அவளைப் பூட்டி வைத்திருந்த படுக்கையறைக்குள் புகுந்தான். ஆனால் மேமே எல்லாவற்றையும் மறுத்தாள். பிடிவாத மானவளாக இருந்தாள். தனது தனிமையில் ஊன்றிப் போயிருந்தாள். அவர்களுக்கிடையில் இனி எந்தத் தொடர்பும் இல்லை என்ற எண்ணம் அவுரேலியானோ செகுந்தோவுக்கு வந்தது. அந்தத் தோழமையும் அவளுக்கு உடந்தையாக இருந்ததும் கடந்த கால மாயை மட்டுமே என்று தோன்றியது. மவுரிசியோ பாபிலோனியாவிடம் முன்னாள் முதலாளி என்ற அதிகாரத்தில் அவனுடைய திட்டங்களிருந்து விலகும் படிச் சொல்லலாமா என்று யோசித்தான். ஆனால் அது பெண்களின் வேலை என்று பெத்ரா கோட்டேஸ் அவனைச் சமாதானப்படுத்தினாள். தனிமைச் சிறை மகளின் தொல்லைகளுக்கு முடிவளிக்கும் என்ற நம்பிக்கையில் தீர்மானமின்மையின் புறநரகத்தில் மிதந்து கொண் டிருந்தான்.

மேமே வருத்தத்தின் அறிகுறி எதையும் காட்டவில்லை. நேர் மாறாக, அடுத்த அறையிலிருந்து உர்சுலா, மேமேயின் அமைதியான தூக்கத்தின் தாளத்தையும் அவளுடைய கடமைகளைச் செய்யும் அழகை யும் அவளுடைய உணவுமுறையையும் அவளுடைய செரிமானத்தையும் கவனித்தாள். ஒரு விஷயம் மட்டுமே அவளை ஆச்சரியப்படுத்தியது. சுமார் இரண்டு மாதத் தண்டனைக்குப் பிறகு மேமே, மற்றவர்களைப் போலக் காலையில் குளிப்பதில்லை. மாலை ஏழு மணிக்குத்தான் குளிக்கிறாள். ஒருமுறை தேள்களைப் பற்றி எச்சரிக்க உர்சுலா நினைத்தாள். ஆனால் மேமே தன்னைவிட்டு விலகிப் போனவள். அவளுடைய வழியை அவளே பார்த்துக் கொள்ளுவாள். ஒரு முதுபாட்டி யின் நச்சரிப்பால் அவளைத் தொந்தரவு செய்வதில்லை என்று முடி வெடுத்தாள். அந்திப் பொழுதில் மஞ்சள் பட்டாம்பூச்சிகள் வீட்டுக்குள் ஊடுருவும். எல்லா இரவும் குளியல் முடித்து மேமே திரும்பும்போது நிலைகுலைந்த பெர்னாண்டா பூச்சிக்கொல்லி மருந்தால் பட்டாம் பூச்சிகளைச் சாகடித்துக் கொண்டிருப்பதைப் பார்ப்பாள். "இது கொடூரம்" என்பாள். "இரவில் வரும் பட்டாம் பூச்சிகள் துரதிர்ஷ் டத்தைத்தான் கொண்டு வரும் என்று ஆயுள் முழுக்க என்னிடம் சொல்லியிருக்கிறார்கள்" என்பாள் பெர்னாண்டா. ஒரு இரவு, மேமே குளியலறையில் இருந்தாள். பெர்னாண்டா தற்செயலாக மகளின் படுக்கையறைக்குள் நுழைந்தாள். அவளை மூச்சுத் திணறச் செய்யுமளவு அறைக்குள் ஏராளமான பட்டாம்பூச்சிகள் பறந்து கொண்டிருந்தன. அவற்றை விரட்டுவதற்காகக் கைக்கெட்டிய துணியை எடுத்த அவள் மகளின் மாலை நேரக் குளியலையும் தரையில் உருண்டு விழுந்த கடுகுப் பத்துகளையும் தொடர்புபடுத்தி யோசித்தபோது இதயம் அச்சத்தால் உறைந்தது. முதல் முறையைப் போல அவள் சந்தர்ப்பம் வருவதற்காகக் காத்திருக்கவில்லை. அடுத்த நாளே புதிய மேயரை மத்தியான விருந்துக்கு அழைத்தாள். அவளைப் போலவே அவரும் மலைப்பகுதியிலிருந்து வந்தவர். பின்கட்டில் கோழிகள் திருடப்படுவ தாகவும் ஒரு காவலாளியை நிறுத்த முடியுமா என்றும் கேட்டாள்.

அந்த இரவே, குளியலறைக்குள் இறங்குவதற்காகக் கூரை ஓடுகளைப் பிரித்துக்கொண்டிருந்த மவுரிசியோ பாபிலோனியாவை அந்தக் காவலாளி கூரையிலிருந்து இறக்கி இழுத்து வந்தார். குளியலறைக்குள்ளே மேமே அவனுக்காகக் காத்திருந்தாள். கடந்த சில மாதங்களாக எல்லா இரவுகளிலும் செய்தது போன்று தேள்களுக்கும் பட்டாம் பூச்சிகளுக்கும் நடுவில் நிர்வாணமாகக் காதலால் நடுங்கிக்கொண்டு நின்றிருந்தாள். அவனுடைய முதுகுத் தண்டில் பதிந்த துப்பாக்கிக் குண்டு எஞ்சிய வாழ்நாள் முழுவதும் அவனைப் படுக்கையில் கிடத்தியது. எந்த முனகலும் இல்லாமல் எந்த எதிர்ப்பும் இல்லாமல் ஒரு கண நேரக் காட்டிக் கொடுத்தலும் இல்லாமல் ஞாபகங்களாலும் மஞ்சள் பட்டாம்பூச்சிகளாலும் சித்திரவதைப்பட்டு தனிமையில் முதுமையால் இறந்துபோனான் அவன். அந்தப் பட்டாம்பூச்சிகள் அவனுக்கு ஒரு கணம்கூட நிம்மதியைக் கொடுக்கவில்லை, கோழித் திருடன் என்று ஊரைவிட்டு விலக்கிவைத்திருந்தனர்.

மேமே புயேந்தியாவின் மகனை வீட்டுக்கு அழைத்து வந்தபோதுதான் மகோந்தாவின் பேரழிவுக்குக் காரணமான நிகழ்ச்சிகள் தமது அறிகுறிகளைக் காட்டத் தொடங்கின. பொதுச் சூழ்நிலை நிச்சயமற்றதாக இருந்தது. அந்தரங்கமான புறணி பேசுவதில்கூட ஆட்களுக்கு உற்சாகமில்லை. எனவே அந்தச் சூழ்நிலையைக் கணக்கிலெடுத்துக்கொண்டு அப்படி ஒரு குழந்தை பிறக்கவேயில்லை என்பதுபோல பெர்னாண்டா குழந்தையை மறைத்தாள். அவர்கள் குழந்தையை எடுத்து வந்த சூழ்நிலை நிராகரிப்பை அசாத்தியமானதாக்கியிருந்தது. எனவேதான் அவள் குழந்தையை ஏற்றுக்கொள்ள வேண்டி வந்தது. குளியலறை நீர்த் தொட்டியில் அவனை மூழ்கடித்துவிட விருப்பமிருந்தும் அப்படிச் செய்ய முடியவில்லை. அதனாலேயே வாழ்நாள் முழுவதும் தன்னுடைய விருப்பத்துக்கு மாறாக அவனைப் பொறுத்துக்கொள்ள வேண்டியிருந்தது. அவனை கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் பட்டறைக்குள் போட்டுப் பூட்டினாள். ஒரு கூடையில் மிதந்து வந்த அவனை எடுத்து வந்ததாகச் சாந்தா சோபியா தெ லா பியாதாத்தை நம்பவைத்தாள். அவனுடைய பூர்வீகம் எது என்று தெரியாமலே உர்சுலா மரணமடைந்தாள். ஒருமுறை பட்டறைக்குள் நுழைந்த குட்டி அமரந்தா உர்சுலா, குழந்தைக்கு உணவு ஊட்டிக் கொண்டிருந்த பெர்னாண்டா சொன்ன மிதக்கும் கூடைக் கதையை நம்பினாள். மேமேயின் அவல நிலையை பெர்னாண்டோ முட்டாள்தனமான வழிமுறைகளால் கையாண்டதால் அவுரேலியானோ செகுந்தோ அவளைப் பிரிந்து சென்றான். குழந்தைக்கு மூன்று வயதாகி வீட்டுக்குக் கொண்டுவரும்வரைக்கும் அப்படி ஒரு பேரன் இருப்பதே அவனுக்குத் தெரியாது. பெர்னாண்டா கவனக் குறைவாக இருந்த நேரம் அவன் சிறையிலிருந்து தப்பி முற்றத்துக்கு வந்து ஒரு நொடிக்கும் குறைவான நேரம் நின்றான். அம்மணமாக இருந்தான். சிக்குப் பிடித்த தலை. அவனுடைய ஆண்குறி வான்கோழியின் தாடைச் சதைபோல நீளமாக இருந்தது. மனிதக் குழந்தையாகவே தெரியவில்லை. நர மாமிசம் தின்பவர்களைப் பற்றிய கலைக் களஞ்சிய விளக்கம்போல இருந்தான்.

தன்னுடைய தவிர்க்க முடியாத விதியின் ஆபாசமான உத்திகளைப் பெர்னாண்டா கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை. தான் வீட்டைவிட்டு என்றென்றைக்குமாக விரட்டிவிட்ட அவமானம் திரும்பி வந்ததைப் போல இருந்தது குழந்தையின்

வருகை. சிதறிய முதுகெலும்புடன் மவுரிசியோ பாபிலோனியாவை எடுத்துச் சென்றதும் அவமானத்தின் தடயங்கள் அனைத்தையும் துப்புரவு செய்யும் திட்டத்தை மிகவும் நுணுக்கமாகத் தீட்டினாள். கணவனைக் கலந்து ஆலோசிக்காமலேயே தனது பைகளை நிறைத்தாள். மகளுக்குத் தேவைப்படும் மாற்று உடைகள் மூன்றை சிறிய பெட்டியில் எடுத்துக் கொண்டாள். ரயில் வருவதற்கு அரை மணி நேரம் இருக்கும்போது அவளை அழைக்கப் படுக்கையறைக்குப் போனாள்.

“ரெனேட்டா, நாம் போகலாம்” என்றாள்.

அவள் எந்த விளக்கமும் சொல்லவில்லை, மேமே அவள் பங்குக்கு எதையும் எதிர்பார்க்கவோ விரும்பவோ இல்லை. எங்கே போகிறோம் என்பதும் அவளுக்குத் தெரியவில்லை. அவர்கள் அவளைக் கசாப்புத் தொட்டிக்குக் கொண்டு போனாலும் அவளுக்கு ஒன்றுதான். வீட்டின் பின்கட்டில் வெடியோசையையும் அதே சமயத்தில் மவுரிசியோ பாபிலோனியா எழுப்பிய வேதனைக் கூச்சலையும் கேட்டதிலிருந்து அவள் பேசவில்லை. எஞ்சிய வாழ்க்கை முழுவதும் பேசவில்லை. படுக்கையறையை விட்டு வரச்சொல்லி அம்மா கட்டளையிட்டபோது அவள் தலைவாரி இருக்கவில்லை. முகம் கழுவியிருக்கவில்லை. தூக்கத்தில் நடப்பதுபோல ரயிலில் ஏறினாள். இன்னும் அவளுக்குத் துணையாக வந்துகொண்டிருந்த மஞ்சள் பட்டாம்பூச்சிகளையும் அவள் பார்க்கவில்லை. பிடிவாதத்தாலா அல்லது அந்தத் துயரத்தின் விளைவாக ஊமையானதனாலா கல்லைப் போல மௌனமாக இருக்கிறாள் என்பதைப் பெர்னாண்டாவால் ஒருபோதும் கண்டுபிடிக்க முடியவில்லை. முன்பு அவளைப் பரவசப்படுத்திய அந்தப் பகுதியை அந்தப் பயணம் முழுவதும் மேமே பார்க்கவில்லை. இருப்புப் பாதையின் இரு புறமும் இருக்கும் நிழல் படர்ந்த முடிவற்ற வாழைத் தோப்புகளை அவள் பார்க்கவில்லை. கிரிங்கோக்களின் வெண்ணிறமான வீடுகளையும் வெப்பமும் புழுதியும் மண்டி உலர்ந்திருக்கும் தோட்டங்களையும் உப்பரிகைகளில் அமர்ந்து சீட்டாடிக் கொண்டிருந்த குட்டைச் சராயும் நீலக் கோடுபோட்ட சட்டையும் அணிந்த பெண்களையும் அவள் பார்க்கவில்லை. வாழைக் குலைகளுடன் புழுதிச் சாலைகளில் போய்க் கொண்டிருந்த காளை வண்டிகளையும் அவள் பார்க்கவில்லை. தெளிந்த ஆற்றுக்குள் மீன்களைப் போல மூழ்கும் பெண்கள்; அவர்களுடைய வளமான முலைகளைப் பார்த்து வாய்கசந்து உட்கார்ந்த ரயில் பயணிகள்; மவுரிசியோ பாபிலோனியாவின் மஞ்சள் பட்டாம்பூச்சிகள் சிறகடித்துக் கொண்டிருந்த தொழிலாளர்கள் வசிக்கும் ஏழ்மைக் குடிசைகள்; அவற்றின் பச்சை நிற வாசல்கள்; கழிவுப் பானைகளில் மலம் கழிக்க உட்கார்ந் திருக்கும் அழுக்குக் குழந்தைகள்; ரயிலைப் பார்த்து வசவைச் சொல்லிக் கத்தும் கர்ப்பிணிகள் – யாரையும் அவள் பார்க்கவில்லை. வீட்டிலிருந்து பள்ளிக்கூடத்துக்குப் போனபோது கொண்டாட்டமாகத் தோன்றிய அந்த ஓட்டக் காட்சிகள் எந்தச் சலனமும் இல்லாமல் மேமேயின் இதயத்தைக் கடந்து போயின. அவள் ஜன்னலுக்கு வெளியே பார்க்க வில்லை. தோப்புகளின் எரியும் ஈரம் முடிந்து பாப்பி மலர்கள் பூத்த சமவெளியில் ரயில் ஓடத் தொடங்கியது. ஸ்பானியக் கடற்படையின் பாகங்கள்

சிதிலமாக நிற்கும் இடத்தைக் கடந்து ஏறத்தாழ ஒரு நூற்றாண்டுக்கு முன்பு ஹோரேச அர்க்காதியோ புயேந்தியாவின் கற்பனைகள் தோல்வியடைந்த இடத்தில் நுரைத் ததும்பும் அழுக்குக் கடலையொட்டி முன்னேறியது.

ஐந்து மணிக்கு சதுப்பு நிலப் பகுதியின் கடைசி நிலையத்தை அடைந்தார்கள். பெர்னாண்டா இறங்கச் சொன்னதால் ரயிலை விட்டு இறங்கினாள். ஒரு பெரிய வெளவாலைப் போல இருந்த மூச்சிளைப்புக் குதிரை இழுக்கும் சின்ன வண்டியில் ஏறினார்கள். உப்புக் காற்றால் பிளவுண்ட முடிவற்ற தெருக்கள் கொண்ட ஆள் நடமாட்டமில்லாத நகரத்தினூடே போனார்கள். பியானோ பயிற்சியின் ஓசை கேட்டது. தனது வளரிளம் பருவ காலத்தின் பகலுறக்க வேளைகளில் கேட்ட இசையைப் போன்றே பெர்னாண்டாவுக்குத் தோன்றியது. பின்னர் அவர்கள் ஒரு ஆற்றுப் படகில் பயணம்செய்தார்கள். அதன் மர வளையம் நெருப்பு எரிவதுபோல இரைந்தது. துருப்பிடித்த தகடுகள் உலைவாய்போல எதிரொலித்தது. மேமே தனது கேபினுக்குள்ளேயே அடைந்துகொண்டாள். பெர்னாண்டா தினமும் இரண்டு வேளை உணவு நிறைந்த தட்டை அவளுடைய படுக்கைக்குக் கொண்டு வருவாள். தினமும் இரண்டு வேளை அதை அப்படியே திரும்ப எடுத்துப் போவாள். மேமே பட்டினி கிடந்து சாகத் தீர்மானித்ததனால் அல்ல. சிறிதளவு உணவுகூட அவளுக்குக் குமட்டலைக் கொடுத்தது. தண்ணீர்கூட வயிற்றுக்கு ஒத்துக்கொள்ளவில்லை. ஒரு வருடத்துக்குப் பிறகு குழந்தையை எடுத்து வரும்வரை கடுகு வைத்தியத்தை ஏமாற்றிய தனது கருத்தரிப்பு அவளுக்குத் தெரிந்திருக்கவில்லை. பெர்னாண்டாவுக்கும் தெரிந்திருக்கவில்லை. மூச்சுத் திணறச் செய்யும் கேபினுக்குள் பைத்தியம் பிடிக்கச் செய்யும் உலோகத் தகடுகளின் அதிர்வுகளிலும் படகின் துடுப்புச் சக்கரம் கிளறிவிட்ட சேற்றின் சகிக்க முடியாத நாற்றத்திலும் உட்கார்ந்து மேமே நாட்களின் தடயங்களையே இழந்து போனாள். விசிறியின் தகடுகளில் அடிபட்டுக் கடைசி மஞ்சள் பட்டாம் பூச்சியும் அழிந்து அதிக காலம் கழிந்திருந்தது. எனவே மவுரிசியோ பாபிலோனியா இறந்துபோய்விட்டான் என்ற மீட்க முடியாத உண்மையை ஏற்றுக்கொண்டாள். இருந்தாலும் கையறு நிலை தன்னைத் தோற்கடிக்கவிடக் கூடாது என்றிருந்தாள். கோவேறுக் கழுதை மேல் அமர்ந்து கடினமான பயணம் மேற்கொண்டபோதும் அவனைப் பற்றியே யோசித்துக் கொண்டிருந்தாள். அந்த இடத்தில்தான் அவுரேலியானோ செகுந்தோ உலகத்தில் ஒருபோதும் தோன்றியிராத மிக அழகான பெண்ணைத் தேடிக் காணாமற்போனார். இந்திய மலைத் தொடர்கள் வழியாகப் போய் அந்த மங்கலான நகரத்துக்குள் நுழைந்தபோது முப்பத்திரண்டு தேவாலயங்களிலிருந்தும் மணிகள் ஒலித்தன. இரவில் ஆள் நடமாட்டமில்லாத காலனிய மாளிகையொன்றில் படுத்துறங்கினார்கள். களைகள் ஆக்கிரமித்த தரையில் பெர்னாண்டா படுத்துக் கொண்டாள். அந்தக் களைகளில் ஜன்னல்களிருந்து பிய்ந்த திரைச் சீலைகள் சிக்கியிருந்தன. அவற்றை இழுத்த போது உடம்பைச் சுற்றி எல்லா இடத்திலும் துகளாகச் சிதறின. தாங்கள் எங்கே இருக்கிறோம் என்று மேமேவுக்குத் தெரிந்திருந்தது.

அவளுடைய உறக்கமின்மையின் சஞ்சாரத்தில், வெகு காலத்துக்கு முந்தைய கிறிஸ்துமஸ் முன் தினத்தில் வீட்டுக்குள் கொண்டு வந்து வைக்கப்பட்ட உலோகப் பெட்டிக்குள்ளே கறுப்புக் கோட்டணிந்து படுத்துக் கிடந்த கனவானைத் தாண்டிப் போகும்போது பார்த்திருந்தாள். மறுநாள் பலிப் பூசைக்குப் பிறகு பெர்னாண்டா அவளை ஒரு இருண்ட கட்டடத்துக்குள்ளே அழைத்துச் சென்றாள். அம்மா சொன்ன கதைகளில் அவளை அரசியாக்க வளர்த்ததாகச் சொன்ன அந்தக் கான்வென்டை மேமே உடனடியாக இனங்கண்டு கொண்டாள். தாங்கள் பயணத்தின் முடிவுக்கு வந்துவிட்டதைப் புரிந்துகொண்டாள். பக்கத்திலிருந்த அலுவலக அறைக்குள் பெர்னாண்டா பேசிக் கொண்டிருந்தபோது மேமே கூடத்தில் இருந்தாள். சுவர்களில் ஒன்று விட்டு ஒன்றாகப் பெரிய தைலவண்ண ஓவியங்கள் தொங்கின. கனத்தப் பருத்தித் துணியில் சின்னக் கறுப்பு நிறப் பூக்கள் போட்ட உடைகளும் மலைப் பிரதேசத்துக் குளிரால் வீங்கிய கால்களில் நீண்ட ஷூக்களும் அணிந்த ஆர்ச் பிஷப்புகளின் ஓவியங்கள். கூடத்தின் நடுவே சாயமிட்ட கண்ணாடி ஜன்னல்கள் வழியே வந்த மஞ்சள் வெளிச்சத்தில் மவுரிசியோ பாபிலோனியாவை நினைத்துக்கொண்டே நின்றாள். மிக அழகான கன்னியாஸ்த்ரீ ஒருத்தி அலுவலக அறைக்குள்ளிருந்து மூன்று மாற்றுடைகள் வைத்திருக்கும் பெட்டியை எடுத்துக்கொண்டு வந்தாள். மேமேயைத் தாண்டி வந்து நின்றுவிடாமலே அவளுடைய கையைப் பற்றிக் கொண்டாள்.

“ரெனேட்டா, வா” என்றாள்.

மேமே அவள் கையைப் பிடித்துக்கொண்டு அவளை முன்னே செல்லவிட்டாள். கன்னியாஸ்திரீயுடன் போகும் அவளை பெர்னாண்டா கடைசியாகப் பார்க்கும்போது கன்னியர் மடத்தின் இரும்புக் கதவு ஓசையுடன் அவளுக்குப் பின்னால் மூடிக் கொண்டது. மேமே இன்னும் மவுரிசியோ பாபிலோனியாவைப் பற்றியே யோசித்துக் கொண்டிருந்தாள். அவனுடைய மசகு வாசனையைப் பற்றி. அவனைச் சுற்றியிருந்த பட்டாம்பூச்சி வளையத்தைப் பற்றி. ஓர் இலையுதிர் காலக் காலை நேரத்தில், முடி மழித்துப் பெயர் மாற்றப்பட்டு ஒரு வார்த்தைகூடப் பேசாமலிருந்து, க்ராகோவில் ஒரு இருண்ட மருத்துவமனையில், முதுமையால் இறக்கும்வரை வாழ்க்கையில் எல்லா நாட்களிலும் அவனைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தாள்.

பெர்னாண்டா ஆயுதக் காவலர்களின் பாதுகாப்புடன் ரயிலில் மகோந்தா திரும்பினாள். பயணத்தின்போது பயணிகளிடையே நிலவிய பரபரப்பைக் கவனித்தாள். நகரங்களில் ராணுவ ஆயத்தங்கள் நடப் பதையும் ஏதோ மோசமான சம்பவம் நிகழவிருப்பது போன்ற அபூர்வ மான சூழ்நிலை நிலவுவதையும் கவனித்தாள். மகோந்தாவை அடையும் வரை அவளுக்கு எந்த விவரமும் தெரியவில்லை. ஹோசே அர்க்காதியோ செகுந்தோ வாழைப்பழக் குழுமத் தொழிலாளர்களை வேலை நிறுத்தத் துக்குத் தூண்டிவிட்டுக் கொண்டிருப்பதாகச் சொன்னார்கள். “நமக்கு அதுதான் வேண்டியிருக்கிறது” என்று தனக்குள்ளேயே சலித்துக் கொண்டாள். “குடும்பத்துக்குள்ளே ஒரு அராகஜவாதி” என்றாள். இரண்டு வாரங்களுக்குப் பிறகு வேலை நிறுத்தம் வெடித்தது. அவர்கள்

பயந்ததுபோல எந்த விளைவுகளும் ஏற்படவில்லை. ஞாயிற்றுக்கிழமைகளில் வாழைக்குலைகளை வெட்டி ஏற்ற வற்புறுத்தக் கூடாது என்று தொழிலாளர்கள் கோரிக்கை வைத்தார்கள். கடவுளின் உத்தரவுகளிலும் அதற்கான சான்று இருப்பதால் அருட் தந்தை அந்தோனியோ இசபெல்லும் அந்த நிலைப்பாட்டுக்கு ஆதரவாகத் தலையிட்டார். வேலை நிறுத்தம் பெற்ற வெற்றியும் பின் வந்த மாதங்களில் நடந்த மற்ற நடவடிக்கைகளும் ஹோசே அர்க்காதியோ செகுந்தோவை அவனுடைய அநாமதேயத்தன்மையிலிருந்து வெளியே கொண்டு வந்தது. பிரெஞ்சுக்கார வேசிகளை அழைத்து வந்து நகரத்தை நிரப்புகிறான் என்றுதான் மக்கள் வழக்கமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். பொத்தல் படகை வாங்குவதற்காகச் சண்டைச் சேவல்களை எப்படி உள்ளுணர்வின் முடிவால் ஏலமிட்டானோ அதேபோலவே வாழைப்பழக் குழுமத்தின் ஃபோர்மேன் வேலையை விட்டு தொழிலாளர்கள் பக்கம் சேர்ந்தான். மிக விரைவிலேயே பொது ஒழுங்குக்கு எதிராகச் செயல்படும் ஒரு சர்வதேசச் சதி அமைப்பின் ஏஜெண்ட் என்று சுட்டிக் காட்டப்பட்டான். வதந்திகளால் இருட்டாக்கப்பட்டிருந்த அந்த வாரத்தில் ஓர் இரவு, ரகசியக் கூட்டம் முடிந்து வெளியேறியபோது அடையாளம் தெரியாத நபரால் சுழற் துப்பாக்கியால் நான்கு முறை சுடப்பட்டான். ஆனால் அற்புதகரமாகத் தப்பினான். பிந்தைய மாதங்களில் சூழல் பதற்றம் நிறைந்ததாக இருந்தது. இருண்ட மூலையில் ஒடுங்கியிருந்த உர்சுலாவுக்குத் தான் மீண்டும் ஒருமுறை மகன் அவுரேலியானோ தோல்வியை மறப்பதற்கான ஹோமியோபதி மாத்திரைகளைச் சட்டைப் பையில் போட்டுக்கொண்டு திரிந்த ஆபத்தான காலத்தில் வாழ்வதாகத் தோன்றியது. முன்னோடிச் சம்பவங்களைத் தெரியப்படுத்துவதற்காக ஹோசே அர்க்காதியோ செகுந்தோவிடம் பேச முயன்றாள். அன்றைய இரவு முதல் அவன் வாழ்க்கை ஆபத்தான கட்டத்திலிருப்பதால் அவன் எங்கே இருக்கிறான் என்பது யாருக்கும் தெரியாது என்று அவுரேலியானோ செகுந்தோ தெரிவித்தான்.

“அப்படியே அவுரேலியானோதான்” என்று உர்சுலா வியந்தாள். “உலகம் தன் செயல்களையே திரும்பச் செய்து கொள்கிறதுபோல” என்றாள்.

அந்த நாட்களின் அநிச்சயம் பெர்னாண்டாவைப் பாதிக்கவே இல்லை. கணவனின் சம்மதமில்லாமல் மேமேயின் எதிர்காலத்தை முடிவு செய்ததையொட்டி அவனுடன் நடந்த வன்மமான சண்டைக்குப் பிறகு வெளியுலகத்துடன் அவளுக்குத் தொடர்பே இல்லை. தேவைப்பட்டால் காவல் துறையின் உதவியுடன் மகளை மீட்பதற்கு அவுரேலியானோ செகுந்தோ தயாராக இருந்தான். ஆனால் சொந்த விருப்பத்தின் பேரிலேயே தான் கன்னியர் மடத்தில் சேர்ந்ததாக மேமே கையெழுத்துப் போட்டிருந்த கடிதங்களைப் பெர்னாண்டா சாட்சியமாகக் காட்டினாள். இரும்புக் கதவுக்கு அப்பால் மடத்துக்குள் அழைத்துச் செல்லப்பட்ட போதிருந்த அதே கையறுநிலையில்தான் அவள் ஒருமுறை அந்தக் கடிதங்களிலும் கையெழுத்துப் போட்டிருந்தாள். அந்தச் சாட்சியங்களின் நிரூபணத்தை அவுரேலியானோ செகுந்தோ

நம்பவில்லை. கோழிகளைத் திருடத்தான் மவுரிசியோ பாபிலோனியா பின்கட்டுக்கு வந்தான் என்பதையும் ஒருபோதும் நம்பவில்லை. ஆனால் அவை இரண்டும் அவனுடைய மனசாட்சிக்கு இசைவாக இருந்தன. எனவே, அவன் மீண்டும் குற்ற உணர்வு எதுவுமில்லாமல் பெத்ரா கோட்டேஸின் நிழலை அண்டினான். தன்னுடைய ஆர்ப்பாட்டமான பெருந்தீனியையும் ஓயாத குடி, கூத்தையும் மீண்டும் தொடங்கினான். நகரத்தின் பதற்றத்தையோ செவிட்டு உர்சுலாவின் தீர்க்கதரிசனங் களையோ பொருட்படுத்தாமல் முன் தீர்மானம் செய்துவைத்திருந்த திட்டத்துக்கு இறுதி வடிவம் கொடுத்தாள் பெர்னாண்டா. பட்டம் பெறுவதற்கான முதல் கட்டத்தை முடித்திருந்த மகன் ஹோசே அர்க்காதியோவுக்கு ஒரு நீண்ட கடிதம் எழுதினாள். சூனியம் வைக்கப் பட்டால் வாந்தி எடுத்து அதன் விளைவாக அவன் சகோதரி ரெனேட்டா மரித்து கடவுளுக்குள் அமைதியடைந்துவிட்டாள் என்று அதில் குறிப் பிட்டாள். குட்டி அமரந்தா உர்சுலாவை, சாந்தா சோபியா தெ லா பியாதாத்தின் பராமரிப்பில் விட்டாள். கண்ணுக்குத் தெரியாத டாக்டர்களுடன், மேமேயின் பிரச்சினையால் தாறுமாறாகிப் போயிருந்த கடிதத் தொடர்பை மீண்டும் தொடங்கினாள். முதல் காரியமாக டெலிபதி அறுவைச் சிகிச்சைக்குத் திட்டவட்டமான ஒரு நாளைக் குறித்தாள். ஆனால் மகோந்தாவில் சமூகப் போராட்டங்கள் தொடர்ந்து கொண்டிருக்கும் நிலையில் அது உசிதமானதல்ல என்று அந்த அரூப மருத்துவர்கள் பதிலளித்தார்கள். அவளுக்கு அவசரம். தவிர தகவல் களும் தெரிந்திருக்கவில்லை. ஆகவே போராட்டச் சூழ்நிலை எதுவும் இல்லை; கோழிச் சண்டையும் படகுப் போக்குவரத்தும் நடத்திக் கொண்டு திரியும் உதவாக்கரை மைத்துனன் ஒருவனின் கிறுக்குத்தனத் தின் விளைவுதான் எல்லாம் என்று இன்னொரு கடிதத்தில் விளக்கி எழுதினாள். அவர்கள் சம்மதிக்கவில்லை. மிகவும் வெப்பமாக இருந்த புதன்கிழமை. கையில் சிறு கூடை வைத்திருந்த வயது முதிர்ந்த கன்னியாஸ்திரீ கதவைத் தட்டினாள். கதவைத் திறந்து பார்த்த சாந்தா சோபியா தெ லா பியாதாத் அது ஓர் அன்பளிப்பாக இருக்கும் என்று நினைத்தாள். அழகான லேஸ் துணியால் மூடியிருந்த அந்தக் கூடையை எடுக்க முயன்றாள். ஆனால் அந்தக் கன்னியாஸ்திரீ அவளைத் தடுத்தாள். அதை நேரடியாகவும் ரகசியமாகவும் டானா பெர்னாண்டா தெல் கார்பியோ தெ புயேந்தியாவின் கையில் மட்டுமே கொடுக்க வேண்டும் என்று கண்டிப்பாகச் சொல்லப்பட்டிருப்பதாகத் தெரிவித் தாள். அது மேமேயின் குழந்தை. குழந்தை இரண்டு மாதங்களுக்கு முன்பு பிறந்தது; அதன் தாத்தாவின் பெயரான அவுரேலியானோ என்பதையே உரிமை எடுத்துக்கொண்டு குழந்தைக்கும் சூட்டியிருக்கிறோம். ஏனெனில் அவனுடைய தாய் வாயைத் திறந்து தன் விருப்பம் பற்றி ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை. பெர்னாண்டாவின் பழைய ஆன்மீக நெறியாளர், கடிதத்தில் அவளுக்கு விளக்கமாக எழுதியிருந்தார். விதியின் தந்திரத்துக்கு எதிராகப் பெர்னாண்டா தனக்குள்ளேயே சீறி யெழுந்தாள். கன்னியாஸ்திரீயின் முன்னால் அதைச் சாமர்த்தியமாக மறைத்துக்கொண்டாள்.

"கூடையில் மிதந்து வந்தபோது அவனைக் கண்டெடுத்ததாக எல்லாரிடமும் சொல்வோம்" என்று புன்சிரிப்புடன் சொன்னாள்.

"யாரும் நம்பமாட்டார்கள்" என்றாள் கன்னியாஸ்திரி.

"பைபிளை எல்லாரும் நம்புகிறார்களே, நான் சொல்வதை ஏன் நம்பக் கூடாது?" என்று பெர்னாண்டா பதில் சொன்னாள்.

ரயில் திரும்ப வருவதற்காகக் காத்திருந்த வேளையில் கன்னியாஸ்திரீ அந்த வீட்டிலேயே பகலுணவை அருந்தினாள். கன்னியர் மடத்தி லுள்ளவர்கள் அவளிடம் பெற்றிருந்த இசைவுக்கு ஏற்ப அதன் பின்னர் குழந்தையைப் பற்றிப் பேசவே இல்லை. ஆனால் பெர்னாண்டா அவளைத் தன் அவமானத்தின் விரும்பத் தகாத சாட்சியாகப் பார்த்தாள். கெட்ட செய்தியைக் கொண்டு வரும் தூதர்களைத் தூக்கில்போடும் மத்திய கால வழக்கம் இல்லாமல் போயிற்றே என்று புலம்பினாள். அதன் பிறகுதான், கன்னியாஸ்த்ரீ போனதும் குளியல் தொட்டியில் குழந்தையை மூழ்கடிக்கத் தீர்மானித்தாள். ஆனால் அவளுக்கு மனம் துணியவில்லை. இந்தத் துன்பத்திலிருந்து கடவுளின் எல்லையில்லாத நன்மை தன்னை விடுவிப்பதற்காகப் பொறுமையுடன் காத்திருக்க விரும்பினாள்.

புதிய அவுரேலியானோவுக்கு ஒரு வயதிருக்கும்போது முன் அறிவிப்பில்லாமல் மக்களின் பதற்றம் தளர்ந்தது. தலைமறைவாக இருந்த ஹோசே அர்க்காதியோ செகுந்தோவும் மற்ற தலைவர்களும் திடீரென்று வாரக் கடைசியில் வெளியே வந்தார்கள். வாழைப் பிரதேசம் முழுவதும் ஆர்ப்பாட்டங்களை ஒருங்கமைத்தார்கள். காவல் துறை சட்ட ஒழுங்கைப் பராமரிக்க மட்டுமே செய்தது. ஆனால் திங்கட் கிழமை இரவு எல்லாத் தலைவர்களும் அவர்கள் வீடுகளிலிருந்து கைது செய்யப்பட்டார்கள். பிரதேசத்தின் தலைநகரிலுள்ள சிறைக்கு அனுப்பப்பட்டார்கள். கால்களில் இரண்டு பவுண்டு எடையுள்ள இரும்புக் குண்டுகளைக் கட்டி கொட்டடிகளில் அடைக்கப்பட்டார்கள். சிறைக்குக் கொண்டு செல்லப்பட்டவர்களில் ஹோசே அர்க்காதியோ செகுந்தோவும் தோழர் அர்தெமியோ க்ருஸின் வீரச் செயல்களுக்குச் சாட்சியாக இருந்தவர் என்று சொல்லப்பட்டவரும் மகோந்தாவுக்கு நாடு கடத்தப் பட்டவருமான மெக்ஸிகப் புரட்சிப்படை கர்னல் லாரென்ஸோ காவிலோனும் இருந்தார்கள். சிறையில் கைதிகளுக்கு யார் சாப்பாடு போடுவது என்ற விஷயத்தில் அரசாங்கத்துக்கும் வாழைப்பழக் குழுமத்துக்கும் உடன்பாடு ஏற்படாததால் மூன்று மாதங்களில் எல்லாரும் விடுவிக்கப்பட்டார்கள். குடியிருப்புகளில் கழிப்பிட வசதிகள் போதுமானவையாக இல்லை; மருத்துவச் சேவைகள் இல்லை; பணிச் சூழல் மோசமாக இருக்கின்றன என்பதற்காகத் தொழிலாளர்கள் இந்த முறை போராட்டத்தை அறிவித்தார்கள். தவிரவும், தங்களுக்குச் சம்பளம் பணமாகக் கொடுக்கப்படுவதில்லை என்றும் குழுமத்தின் கடைகளில் விர்ஜீனியா ஹாம்* வாங்கப்

* பன்றி இறைச்சி

போதுமான காசுச் சீட்டாகக் கொடுக்கப்படுகிறது என்றும் எதிர்த்தார்கள். காசுச் சீட்டு வழக்கம் குழுமத்தின் பழக் கப்பல்களுக்கு நிதியுதவி செய்வதற்கான ஏற்பாடு; அது இல்லையென்றால் குழுமத்தின் கடைக்காரர்கள் நியூ ஆர்லியென்ஸிலிருந்து வெறும் கையுடன்தான் வாழைத் துறைமுகத்துக்குத் திரும்ப வேண்டியிருக்கும் என்ற ரகசியத்தை அம்பலப் படுத்தியதற்காக ஹோசே அர்க்காதியோ செகுந்தோ சிறையில் தள்ளப்பட்டான். இதரப் புகார்களெல்லாம் பொதுவாகத் தெரிய வந்தவை. குழுமத்தின் மருத்துவர்கள் நோயாளியைப் பார்க்கமாட்டார்கள். எல்லா நோயாளிகளையும் மருந்தகத்துக்குள்ளே வரிசையாக நிற்கச் செய்வார்கள். செவிலியர் ஒருத்தி காப்பர் சல்பேட் நிறத்திலிருக்கும் மாத்திரையை – அவர்களுக்கு வந்திருக்கும் நோய் மலேரியாவோ, கொனேரியாவோ, மலச் சிக்கலோ எதுவானாலும் – வாயில் போடுவாள். பொதுவான சிகிச்சை அதுமட்டுமே. சிறுவர்கள் மாத்திரைகளுக்காகப் பலமுறை வரிசையில் நின்றார்கள். விழுங்கிவிடாமல் அவற்றை எடுத்து வீட்டுக்குக் கொண்டு போய் பிங்கோ விளையாட்டில் காய்களாகப் பயன்படுத்தினார்கள். குழுமத் தொழிலாளர்கள் வரிசையான வீடுகளில் நெருக்கியடித்துக் குடியிருந்தார்கள். கட்டடப் பொறியாளர்கள் கழிப் பறைகளைக் கட்டுவதற்குப் பதிலாக ஐம்பதைம்பது பேராகப் பயன் படுத்தும் விதமாக உருவாக்கப்பட்ட நடமாடும் கழிப்பறைகளைக் கொண்டு வந்தார்கள். அவற்றை எப்படிப் பயன்படுத்தினால் நீண்ட காலம் உபயோகத்திலிருக்கும் என்று கிறிஸ்துமஸ் காலத்தில் பொதுச் செய்முறை விளக்கமும் நடத்தினார்கள்.

வெவ்வேறு காலங்களில் எல்லா இடங்களிலும் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவைப் பின் தொடர்ந்த கறுப்பு உடை யணிந்த முதிய வழக்கறிஞர்கள் இப்போது வாழைப்பழக் குழுமத்தின் கட்டுப்பாட்டில் இருந்தார்கள். எந்த வேண்டுகோளையும் அவர்கள் மாயாஜாலம்போல மறையச் செய்தார்கள். தொழிலாளர்கள் கூட்டாக விண்ணப்பத்தை உருவாக்கினார்கள். அதை அதிகாரபூர்வமாகக் குழுமத்தின் கவனத்துக்குக் கொண்டு செல்வதற்குள் நீண்ட காலம் உருண்டோடியது. விண்ணப்பத்தைப் பார்த்ததுமே திரு. பிரவுன், கண்ணாடி பொருத்திய தனது ஆடம்பரப் பெட்டியை ரயிலுடன் இணைக்கச் செய்தார். குழுமத்தின் அதிமுக்கியமான பிரதிநிதிகள் சிலருடன் தலைமறைவானார். இருந்தபோதும் அடுத்து வந்த சனிக்கிழமையன்று அவர்களில் ஒருவனை, தொழிலாளிகளில் சிலர் விபச்சார விடுதியில் கண்டுபிடித்தார்கள். பிடிக்க உதவிய பெண்களுடன் சேர்ந்து அவனை அம்மணமாக்கிக் கோரிக்கைகள் அடங்கிய விண்ணப்பத்தின் நகலில் கையெழுத்துப் போடச் செய்தார்கள். முதிய வழக்கறிஞர்கள் அவனை நீதிமன்றத்தில் அவனுக்கும் குழுமத்துக்கும் எந்தத் தொடர்புமில்லை என்று வாதாடினார்கள். யாரும் சந்தேகப்பட முடியாத அவர்களின் வாதங்களைக் கேட்டு அத்துமீறியவன் என்று அவனைச் சிறையில் அடைத்தார்கள். பின்னர் மாறுவேடமிட்டு மூன்றாம் வகுப்புப் பெட்டியில் பயணம் செய்த திரு. பிரவுனைப் பிடித்துக் கோரிக்கை மனுவின் இன்னொரு நகலில் கையெழுத்திட வைத்தார்கள். மறுநாள் தலைக்குச்

சாயம் பூசப்பட்டுக் கறுத்த சிகையுடனும் ஸ்பானிய மொழியில் சரளமாகப் பேசுபவராகவும் நீதிபதிகளின் முன்னால் நிறுத்தப்பட்டார். அவர் அலபாமா மாகாணம், பிராட் வில்லேயில் பிறந்தவரும் வாழைப் பழக் குழுமத்தின் கண்காணிப்பாளருமான திரு. ஜாக் பிரவுன் அல்லவென்றும் மகோந்தாவிலேயே பிறந்து அங்கேயே பெயர் சூட்டப் பட்ட அப்பிராணியான மூலிகை விற்பனையாளன் தாகோபெர்த்தோ பொன்சேகா என்றும் நிரூபிக்கப்பட்டது. அதற்கும் சற்றுப் பிறகு தொழிலாளர்களின் இன்னொரு முயற்சியைச் சமாளிக்க திரு. பிரவுனின் மரணச் சான்றிதழைச் சமர்ப்பித்தார்கள். கடந்த ஜூன் மாதம் ஒன்பதாம் தேதி சிகாகோவில் தீயணைப்பு வண்டியேறி அவர் மரணமடைந்ததாக வெளியுறவு அமைச்சர்களும் தூதர்களும் சான்றளித்திருந்தார்கள். தொழிலாளர்கள் இந்த மாறாட்ட அலுப்பில் மகோந்தா அதிகாரிகளிட மிருந்துத் திரும்பி உயர்மட்ட நீதிமன்றங்களில் தங்களது புகார்களைக் கொடுத்தார்கள். அந்தக் கோரிக்கைகள் எதற்கும் எந்தப் பெறுமானமும் இல்லை என்று வழக்கறிஞர்களின் தந்திரக் கைகள் நிரூபித்தது அங்கேதான். எளிய காரணம்தான். வாழைப்பழக் குழுமத்துக்குத் தொழிலாளர்களே இருந்ததில்லை; ஒருபோதும் இருந்ததில்லை; அது செயல்படும் காலம் முழுவதும் தொழிலாளிகள் இருக்கமாட்டார்கள். ஏனெனில் கோரிக்கை வைத்த எல்லாரும் தற்காலிகமாகவும் அப்போதைக்கப்போதான தேவை களுக்காக அமர்த்தப்பட்ட கூலிக்காரர்களே. ஆக விர்ஜீனியா ஹாமின் கதை முட்டாள்தனம். அற்புத மாத்திரைகளும் கிறிஸ்துமஸ் காலக் கழிப்பறைகளும் மடத்தனம். அவ்வாறாக மதிப்புக்குரிய தீர்ப்பின் மூலம் தொழிலாளர்களே இல்லை என்ற நீதிமன்றத்தின் முடிவு நிலைநாட்டப்பட்டது.

பெரும் வேலை நிறுத்தம் வெடித்தது. சாகுபடி பாதியில் நிறுத்தப் பட்டது. பழங்கள் மரத்திலேயே அழுகின. நூற்றியிருபது பெட்டிகளுடன் ஓடிய ரயில் ஓரங்கட்டப்பட்டது. வேலையில்லாத தொழிலாளர்கள் நகரத்துக்கு வந்து குவிந்தார்கள். துருக்கியர்கள் தெருவில் சனிக்கிழமை தொடங்கிய ஜனசந்தடியும் இரைச்சலும் பல நாட்கள் நீண்டிருந்தன. ஹோட்டல் ஜேக்கப்பின் சூதாட்ட அறை நிறைந்து குவிந்தது. இருபத்து நான்கு மணி நேர ஷிப்ட் அறிமுகப்படுத்தப்பட்டது. பொது ஒழுங்கை மீண்டும் நடைமுறைப்படுத்துவதற்காக ராணுவம் அனுப்பப்பட இருப்பதாக அறிவிக்கப்பட்ட அன்று ஹோராசே அர்க்காதியோ செகுந்தோ அங்கேதான் இருந்தான். அவனுக்குச் சகுனங்களில் நம்பிக்கையில்லை. ஆனால் அந்தச் செய்தி, வெகு காலத்துக்கு முன்பு கர்னல் ரெஜினெல்தோ மார்க்கேஸ் மரணதண்டனை நிறைவேற்றப்படுவதைப் பார்க்க அவனை அனுமதித்த அந்தக் காலைப் பொழுது முதல் காத்துக் கொண்டிருந்த சாவின் அறிவிப்பாகவே தோன்றியது. கெட்ட சகுனம் அவனுடைய நிதானத்தை இழக்கச் செய்யவில்லை. திட்டமிட்டபடி அவன் வைத்த குறி சரியாக இருந்தது. சற்று நேரத்துக்குப் பிறகு முரசொலியும் எக்காள முழக்கமும் ஆட்கள் அலறிக்கொண்டு ஓடும் சத்தமும் கேட்டன. ராணுவம் வந்துவிட்டதாகச் சொன்னார்கள். சூதாட்ட விடுதியில் விளையாட்டுகள் நிறுத்தப்பட்டு அமைதியானது. மரண தண்டனைக் காலை முதல் தன்னுடனேயே அவன் விளையாடி வந்த

விளையாட்டும் நின்றது. தெருவில் இறங்கிப்போய்ப் பார்த்தான். மூன்று படைப்பிரிவுகள் இருந்தன. பெரும் முரசின் தாளத்துக்கு ஏற்ப அணிவகுத்து வந்தது பூமியை நடுங்க வைத்தது. பல தலைகள் கொண்ட டிராகனைப் போல அவர்கள் எழுப்பிய நாசிக் குமறல்கள் நச்சுப் புகைபோலக் பகல் வெளிச்சத்தை மூடின. அவர்கள் குட்டை யாகவும் பருமனாகவும் விலங்குகளைப் போலவுமிருந்தார்கள்.

குதிரைகளைப் போல வியர்த்து வழிந்தார்கள். அவர்களிடமிருந்து வெயிலில் உலரப்போட்ட தோலின் வாடை வீசியது. மலைப் பகுதியைச் சேர்ந்தவர்களைப் போல தடுமாற்றத்துடன் பேசினார்கள். மந்த மானவர்களாக இருந்தார்கள். அணிவகுப்பு கடந்து செல்ல ஒரு மணி நேரம் எடுத்துக் கொண்டது. சில பிரிவுகள் ஒரு வட்டத்துக் குள்ளேயே அணிவகுத்துக் கொண்டிருப்பதாக ஒருவர் நினைக்கக் கூடும். ஏனெனில் எல்லாரும் ஒரே அச்சாக இருந்தார்கள். ஒரே வேசியின் பிள்ளைகளைப் போலவே இருந்தார்கள். எல்லாருக்கும் அதே உணர்ச்சியற்ற தோற்றம். எல்லாரும் உடைமைகளையும் உணவு களையும் சுமந்திருந்தார்கள். கத்தி சொருகிய துப்பாக்கிகளின் அவமான மும் குருட்டுத்தனமான பணிவின் வலியில்லாத புண்களும் பெருமித உணர்வும் எல்லாருக்கும் பொதுவானதாக இருந்தன. உர்சுலா, தனது படுக்கையிலிருந்த வாறே அவர்கள் கடந்து போகும் சத்தத்தைக் கேட்டாள். விரல்களால் சிலுவைக் குறி போட்டுக்கொண்டாள். சாந்தா சோபியா தெ லா பியாதாத், அப்போதுதான் தேய்த்து முடித்த மேஜை விரிப்பு அடுக்கின் மீது சாய்ந்து ஒரு நொடிப் பொழுது நிலைகுத்தி நின்று மகன், ஹோசே அர்க்காதியோ செகுந்தோவை நினைத்துக் கொண்டாள். மகன் ஹோட்டல் ஜேக்கப் வாசலில் நின்று கடைசிச் சிப்பாயும் கடந்து செல்வதைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

ராணுவம், இந்தச் சிக்கலில் ஒரு தனிநடுவரின் நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கான அதிகாரத்தை ராணுவச் சட்டம் அளித்திருந்தது. எனினும் சமரசத்துக்கான எந்த முயற்சியும் எடுக்கப்படவில்லை. மகோந்தாவுக்கு வந்ததுமே ராணுவ வீரர்கள் துப்பாக்கிகளை ஓரமாக வைத்தார்கள். வாழைக் குலைகளை வெட்டி, சுமையாக அடுக்கினார்கள். ரயில்களை ஓட வைத்தார்கள். அதுவரை அமைதியாக இருந்த தொழிலாளர்கள் தங்களுடைய பணி ஆயுதமான வெட்டரிவாள்களுடன் தோப்புகளுக்குள் நுழைந்தார்கள். நாசவேலைகளை நாசம் செய்தார்கள். ரயிலில் வாழை மரங்களை எரித்தார்கள். கடைகளுக்குத் தீயிட்டார்கள். ரயிலில் எந்திரத் துப்பாக்கிகள் வரவிருக்கும் பாதை என்று தண்டவாளங்களைப் பெயர்த்தார்கள். தந்தி, தொலைபேசிக் கம்பிகளை வெட்டினார்கள். பாசனக் கால்வாய்களில் ரத்தம் நிரம்பியது. மின்கம்பித் தடுப்புக் குள்ளே கோழிப் பண்ணைக்குள் உயிரோடு இருந்த திரு. பிரவுன், குடும்பத்தோடும் சக நாட்டவர்களுடனும் மகோந்தாவை விட்டு அழைத்துச் செல்லப்பட்டார். அவர்கள் பத்திரமான இடத்தில் ராணுவப் பாதுகாப்புடன் வைக்கப்பட்டார்கள். ரத்தக் களறியான உள்நாட்டுப் போரை நோக்கிச் சூழ்நிலை செல்வதைப் பார்த்த அதிகாரிகள் தொழிலாளர்களை மகோந்தாவில் ஒன்று திரளுமாறு அழைத்தார்கள்.

பிரதேசத்தின் பொது நிர்வாக, ராணுவத் தலைவர் அடுத்த வெள்ளிக் கிழமை வருவார் என்றும் சிக்கலில் இடையீடு செய்வார் என்றும் அறிவிக்கப்பட்டது.

வெள்ளிக்கிழமை அதிகாலையிலிருந்தே ரயில் நிலையத்தில் திரண்டுகொண்டிருந்த மக்கள் கூட்டத்தில் ஹோசே அர்க்காதியோ செகுந்தோவும் இருந்தான். தொழிற்சங்கத் தலைவர்களுடன் கூட்டத்தில் கலந்துகொண்டிருந்தான். அவனும் கர்னல் காவிலோனும் கூட்டத்துக் குள் கலந்து விஷயங்ளின் போக்குக்கு ஏற்றாற்போல் செயல்பட வேண்டும் என்று சொல்லப்பட்டிருந்தது. அவனுக்கு உடல் நலமில்லாமலிருந்தது. மேல் அண்ணத்தில் கரிப்பான கோழை சேர்ந்துகொண்டிருந்தது. அந்தச் சிறிய சதுக்கத்தைச் சுற்றி இயந்திரத் துப்பாக்கிகள் நிறுத்தப்பட் டிருப்பதையும் வேலிடைத்த வாழைப்பழக் குழுமத்தைச் சுற்றிப் பாதுகாப்புக்காகப் பீரங்கிகள் நிறுத்தப்பட்டிருப்பதையும் பார்த்தான். பன்னிரண்டு மணி வாக்கிலும் காத்திருந்த ரயில் வரவில்லை. தொழிலாளர்கள், பெண்கள், குழந்தைகள் என்று மூவாயிரத்துக்கும் அதிகமானவர்கள் ரயில் நிலையத்துக்கு முன்னாலிருந்த திடலில் காத்திருந்தார்கள். பக்கத்துத் தெருக்களிலிலும் சிதறியிருந்தார்கள். அங்கும் இயந்திரத் துப்பாக்கிகளின் வரிசை அமைக்கப்பட்டிருந்தது. அந்தச் சமயத்தில் காத்திருப்பவர்களின் கூட்டம் என்பதைவிடக் கோலாகலத் திருவிழாக் கூட்டம்போலவே தோன்றியது. துருக்கியர் தெருவிலிருந்து தின்பண்டங்களும் பானங்களும் நிரம்பிய வண்டிகளைத் தள்ளிக்கொண்டு வந்தார்கள். காத்திருப்பின் அலுப்பையும் பொசுக்கும் சூரியனையும் பொறுத்துக்கொண்டு மக்கள் உற்சாகமாவே இருந்தார்கள்.

மூன்று மணிக்குச் சற்று முன்பாக மறுநாள் வரைக்கும் அதிகார பூர்வமான ரயில் வராது என்ற வதந்தி பரவியது. கூட்டம் ஏமாற்றப் பெருமூச்சுவிட்டது. ராணுவ லெஃப்டினெண்ட் ஒருவன் தயார்நிலையி லிருக்கும் நான்கு இயந்திரத் துப்பாக்கிகள் மக்கள் கூட்டத்தைக் குறிபார்த்துக் கொண்டிருந்த ரயில் நிலையக் கூரைமேல் ஏறினான். எல்லாரையும் அமைதியாக இருக்கும்படிச் சொன்னான். ஹோசே அர்க்காதியோ செகுந்தோவுக்குப் பக்கத்தில் காலில் செருப்பணியாத குண்டானப் பெண்ணொருத்தி நான்குக்கும் எட்டுக்கும் இடைப்பட்ட வயதிலிருந்த இரண்டு குழந்தைகளுடன் நின்றிருந்தாள். சின்னக் குழந்தையை அவள் தூக்கி வைத்திருந்தாள். அவன் யாரென்று தெரியாம லேயே ஹோசே அர்க்காதியோ செகுந்தோவிடம் பெரியவனையும் கொஞ்சம் தூக்கிக் காட்ட முடியுமா, முடிந்தால் அவனுக்குக் கேட்கும் என்றாள். ஹோசே அர்க்காதியோ செகுந்தோ குழந்தையைத் தூக்கித் தோள்மீது வைத்துக்கொண்டான். பல ஆண்டுகளுக்குப் பின்னர் எல்லாரும் நம்பிக்கையில்லாமல் பார்க்க, பிரதேசத்தின் பொது நிர்வாக, ராணுவத் தலைவரின் உத்தரவு எண் – 4ஐ லெஃப்டினெண்ட் பழைய போனோகிராப் குழாயை வைத்து வாசிப்பதை நான் பார்த்தேன் என்று அவன் சொல்வான். ஜெனரல் கார்லோஸ் கோர்டேஸ் வர்காஸும் அவரது செயலாளர் மேஜர் என்ரிக்யூ கார்சியா இசாஸாவும் உத்தரவில் கையெழுத்திட்டிருந்தார்கள். அதில் மூன்று ஷரத்துகளும்

எண்பது வார்த்தைகளும் இருந்தன. வேலை நிறுத்தக்காரர்களை 'ரவுடிகள்' என்று பிரகடனம் செய்திருந்தார். அவர்களைச் சுட்டுக் கொல்ல ராணுவத்துக்கு அதிகாரம் கொடுத்திருந்தார். உத்தரவை வாசித்து முடிந்ததும் எழுந்த காதடைக்கும் கூவல்களுக்கிடையே ரயில் நிலையக் கூரைமேல் லெப்டினெண்ட் இருந்த இடத்துக்கு காப்டன் ஒருவர் ஒலிபெருக்கிக் குழாயுடன் வந்தார். பேச விரும்புவ தாகச் சைகை காட்டினார். கூட்டம் மீண்டும் அமைதியானது.

“சீமாட்டிகளே, கனவான்களே, நீங்கள் கலைந்து செல்ல ஐந்து நிமிடங்கள் அனுமதிக்கப்படுகின்றன” காப்டன் தணிந்த குரலிலும் மெதுவாகவும் சற்றுக் களைப்புடனும் சொன்னார்.

இரு மடங்காகியிருந்த கூவலிலும் கத்தலிலும் நேரத்தைக் கணக்கிட ஒலித்த எக்காளத்தின் முழக்கம் மூழ்கிப் போனது. யாரும் அசையவில்லை. ஐந்து நிமிடங்கள் கடந்துபோயின. காப்டன் அதே குரலில் சொன்னார். “ஒரே ஒரு நிமிடம். நாங்கள் சுட்டுவிடுவோம்” என்றார்.

வியர்த்துக் குளிர்ந்திருந்த ஹோாசே அர்க்காதியோ செகுந்தோ குழந்தையை இறக்கி அந்தப் பெண்ணிடம் கொடுத்தான். “இந்த வேசி மகன்கள் சுட்டுக் கொல்லுவார்கள்” என்று முணுமுணுத்தாள். ஹோசே அர்க்காதியோ செகுந்தோவுக்குப் பதில் சொல்ல நேரமில்லை. ஏனெனில் அந்தப் பெண்ணின் வார்த்தைகள் அதே விநாடியில் கர்னல் காவிலோனின் கரகரத்த குரலில் எதிரொலிப்பதைக் கேட்டான். பதற்றத்தின் போதை, மௌனத்தின் அற்புத ஆழம் இன்னும் என்ன வெல்லாமோ ஒன்று திரண்டு மரணத்தால் ஈர்க்கப்பட்ட கூட்டத்தை எதுவும் அசைக்க முடியாது என்று தெளிவாக்கின. தனக்கு முன்னா லிருக்கும் தலைகளுக்கு மேலாக நிமிர்ந்தெழுந்த ஹோசே அர்க்காதியோ செகுந்தோ வாழ்க்கையில் முதல் முறையாகக் குரலை உயர்த்தினான்.

“வேசி மகன்களே, அந்த அதிகப்படி நிமிடத்தை எடுத்து உங்கள் புட்டத்தில் ஒட்டிக்கொள்ளுங்கள்” என்று கத்தினான்.

அவனுடைய கூச்சலுக்குப் பிறகு ஏதோ நடந்தது. பயமல்ல; ஒருவகையான மருட்சி. காப்டன் சுடுமாறு கட்டளையிட்டார். ஒரே சமயம் பதினான்கு துப்பாக்கிகள் பதில் சொல்லின. ஆனால் அது கேலிக் கூத்தைப் போலிருந்தது. இயந்திரத் துப்பாகியில் பொட்டு வெடிகளை நிரப்பியதுபோல இருந்தது. ஏனெனில் அவற்றின் மூச் சிரைக்கும் கிறுகிறுப்பைக் கேட்க முடிந்தது. தொடர்ச்சியற்ற உமிழ்தலைப் பார்க்க முடிந்தது. ஆனால் எந்தச் சிறு விளைவையும் காண முடியவில்லை. கலையாமலிருந்த ஒரு அலறலோ ஒரு பெருமூச்சோ எழுப்பாமல் ஊடுருவியிருந்தது போலத் கூட்டத்தினிடையே திடீர் எதிர்ப்பாற்றல் ஒரு பக்கத்திலிருந்து தோன்றியது. திடீரென்று ரயில் நிலையத்தின் பிளந்தது. “ஐயோ ஒ மரண ஓலம் அந்த வசியநிலையைக் கிழித்துப் குரல், அம்மா”. கூட்டத்தின் மையத்திலிருந்து ஒரு நிலநடுக்கத்தின் கர்ஜனை, ஒரு எரிமலைச் சுவாசம், ஊழிப் பெருவெள்ளத்தின் ஹோசே இன்னும் விரிவடையக்கூடிய பேராற்றலுடன் எழுந்தது. தாய் இன்னொரு அர்க்காதியோ செகுந்தோ குழந்தையை வாரி எடுத்தான்.

குழந்தையை எடுத்துக் கொண்டாள். பீதியில் சுழன்ற கூட்டத்துக்குள் மூழ்கினார்கள்.

பல வருடங்களுக்குப் பின்னர் அந்தக் குழந்தை, அவன் ஒரு பைத்தியக்காரக் கிழவன் என்று நினைத்துக்கொண்டாலும், ஹோசே அர்க்காதியோ செகுந்தோ தன்னை எப்படித் தலைக்கு மேல் தூக்கிக் கிட்டத்தட்ட ஆகாயத்தில், கூட்டத்தின் பயத்தில் மிதப்பதுபோல, ஒரு மரத்தை நோக்கி வீசினார் என்பதைச் சொல்லுவான். குழந்தையின் சௌகரியமான நிலை, கட்டுக்கடங்காத கூட்டம் மூலையில் ஒதுங்கவிருந்த அதே நொடியில் இயந்திரத் துப்பாக்கிகள் நெருப்பைக் கக்கத் தொடங்கியதைப் பார்க்க அவனை அனுமதித்தது.

அநேகக் குரல்கள் ஒரே சமயத்தில் கத்தின:

"கீழே படுங்கள். கீழே படுங்கள்."

முன்வரிசையிலிருந்தவர்கள் தோட்டாக்களின் அலையால் அடித்துத் தள்ளப்பட்டு ஏற்கனவே கீழே கிடந்தார்கள். தப்பியவர்கள் கீழே படுப்பதற்குப் பதில் மீண்டும் சிறிய சதுக்கத்துக்குத் திரும்பிப் போக முயன்றார்கள். பீதி பின்னர் டிராகன் வாலைப் போல ஆனது. நேராகப் போய்க்கொண்டிருந்த ஓர் அலை திரும்பி எதிரில் வரும் இன்னொரு அலையுடன் நேருக்கு நேராக மோதிக்கொள்வதுபோல, இன்னொரு டிராகனின் வாலை நோக்கிப் போவதுபோல கூட்டம் மோதிக்கொண்டது. வழியிலிருந்த தெருக்கள் எல்லாவற்றிலும் இயந்திரத் துப்பாக்கிகளும் இடைவெளியில்லாமல் சுட்டுக்கொண்டிருந்தன. அவர்கள் அடைபட்டிருந்தார்கள். பிரம்மாண்டமான சுழற்காற்றில் அகப்பட்டுப் படிப்படியாக உள்நோக்கித் தள்ளப்பட்டிருந்தார்கள். அவர்களின் விளிம்புகள் வெங்காயம் உரிக்கப்படுவதுபோல இயந்திரத் துப்பாக்கிகளால் அகற்றப்பட்டு மையத்தில் நிறுத்தப்பட்டார்கள்.

நெரிசலிலிருந்து அற்புதகரமாகத் தப்பிய ஒருத்தி வெட்ட வெளியில் கைகளைச் சிலுவைபோல விரித்தபடி மண்டியிட்டுக் கொண்டிருந்ததைக் குழந்தை பார்த்தான். ஹோசே அர்க்காதியோ செகுந்தோ அவனை மரக்கிளைமீது உட்காரவைத்த அதே நொடியில் முகத்தில் ரத்தம் வழியக் கீழே விழுந்தான். பிரம்மாண்டமான படை அந்த வெற்றிடத்தைத் துப்புரவாக்குவதற்கு முன், மண்டியிட்டிருக்கும் பெண், வறண்ட ஆகாயத்தின் வெளிச்சம், ஏராளமான விலங்கு வடிவ இனிப்புகளை உர்சுலா இகுவரான் விற்றிருந்த வேசியர் உலகம். உணர்வு திரும்பியபோது ஹோசே அர்க்காதியோ செகுந்தோ இருட்டில் மல்லாந்து கிடந்தான். முடிவில்லாத மௌனமான ரயிலில் பயணித்துக் கொண்டிருப்பதாக உணர்ந்தான். தலையில் ரத்தம் உறைந்திருந்தது. சகல எலும்புகளும் நொந்தன. தூங்கிவிட வேண்டும் என்ற அடக்க முடியாத ஆசையை உணர்ந்தான். கிலியிலிருந்தும் திகிலிலிருந்தும் விடுபட்டுப் பல மணி நேரங்கள் தூங்க விரும்பினான். வலி குறைவாக இருந்த பக்கமாக உடலை வைத்து வசதியாகப் படுத்தான். அப்போதுதான் தான் இறந்த மனிதர்களின் மேல் படுத்துக் கிடப்பதைக் கண்டான். பெட்டிக்குள் வேறு இடமே இல்லை. படுகொலை நடந்து

பல மணி நேரங்கள் கழிந்திருக்க வேண்டும். ஏனென்றால் சடலங்களின் வெப்ப நிலை இலையுதிர் காலக் களிமண்ணைப் போலிருந்தது. திடப் படுத்தப்பட்ட நுரையின் தாங்குதிறனுடன் இருந்தது. அவற்றை ரயில் பெட்டியில் ஏற்றியவர்களுக்கு அடுக்கிவைக்கவும் சாவகாசம் இருந்திருக்க வேண்டும். வாழைக் குலைகளை அடுக்குவதுபோல அடுக்கியிருந்தார்கள். அந்தக் கொடுங்கனவிலிருந்து தப்புவதற்காக ஹோசே அர்க்காதியோ செகுந்தோ, ரயில் ஓடிக்கொண்டிருந்த திசையிலேயே ஒரு பெட்டியை விட்டு அடுத்தப் பெட்டிக்கு ஓடினான். உறக்கத்தில் ஆழ்ந்திருக்கும் நகரங்களுக்கிடையில் போகும்போது ஜன்னல் வழியாக உள்ளே விழுந்த வெளிச்சக் கீற்றுகளில் அந்தப் பிணங்களைப் பார்த்தான். வேண்டாமென்று தள்ளப்பட்ட வாழைக் குலைகளைப் போல் ஆண் பிணங்கள். பெண் பிணங்கள், குழந்தைப் பிணங்கள். அவற்றில் சதுக்கத்தில் மென்பானங்கள் விற்றிருந்த ஒருத்தியையும் கையில் மொரேலியா* வெள்ளிக் கொளுவி பொருத்திய பட்டையைக் கட்டியிருந்த கர்னல் காவிலோனையும் அடையாளம் கண்டான். முதலாவது பெட்டிக்கு வந்து சேர்ந்ததும் எகிறி இருட்டுக்குள் குதித்தான். ரயில் கடந்து செல்லும்வரை தண்ட வாளத்தின் அருகிலேயே கிடந்தான். யாரும் பார்த்திலேயே மிக நீளமான ரயில். இருநூறுக்கும் மேற்பட்ட பெட்டிகள். இரண்டு முனைகளிலும் நடுவிலுமாக எஞ்சின்கள். விளக்குகளே இல்லை. சிவப்பு, பச்சை விளக்குகூட இல்லை. இரவு நேரத்தின் எச்சரிக்கையான வேகத்தில் நழுவிப்போனது. பெட்டிகளின் மேல் இயந்திரத் துப்பாக்கி களைப் பொருத்தி வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்த ராணுவ வீரர்களின் இருண்ட உருவங்கள் தென்பட்டன.

நள்ளிரவுக்குப் பின்பு மேகம் பிளந்து ஊற்றாகக் கொட்டியது. தான் எங்கே தள்ளப்பட்டிருக்கிறோம் என்பது ஹோசே அவுரேலியானோ செகுந்தோவுக்குத் தெரியவில்லை. ஆனால் ரயில் போகும் திசைக்கு எதிர்த் திசையில் போய்க்கொண்டிருப்பதனால் மகோந்தாவை அடைந்துவிடுவோம் என்று மட்டும் தெரிந்தது. மூன்று மணி நேரத் துக்கும் மேலாக, சருமம் ஊற நனைந்து, பொறுக்க முடியாத தலைவேதனையுடன் நடந்த பிறகு விடியற்காலை வெளிச்சத்தில் முதல் வீடுகளைப் பார்த்தான். காப்பி மணத்தால் ஈர்க்கப்பட்டு, ஒரு சமையலறைக்குள் புகுந்தான். அங்கே ஒரு பெண் கையில் குழந்தையை ஏந்திக்கொண்டு அடுப்பின் மேல் குனிந்திருந்தாள்.

“வந்தனம்” என்று சோர்வாகச் சொன்னான். “நான் ஹோசே அர்க்காதியோ செகுந்தோ புயேந்தியா” என்று முழுப் பெயரையும் தான் உயிரோடுதான் இருக்கிறேன் என அவளுக்கு நம்பிக்கை தரும் விதமாக எழுத்தெழுத்தாக உச்சரித்தான். அப்படிச் செய்தது புத்திசாலித் தனமானதாக இருந்தது. ஏனெனில் அழுக்கு உடையுடன் தலையிலும் உடைகளிலும் ரத்தம் தோய்ந்து நிழலுருவமாக மரணத்தின் ஸ்பரிசத்

---

* மெக்சிகன் நகரம்

துடன் வாசல் வழியாக வந்து நின்றவனை அவள் பிசாசு என்று நினைத்திருக்கலாம். அவளுக்கு அவனை அடையாளம் தெரிந்தது. ஒரு போர்வையைக் கொண்டுவந்து கொடுத்தாள். அவனுடைய உடைகள் நெருப்பருகில் உலரும்வரை அதை உடலில் சுற்றிக்கொள்ளலாம். காயத்தைக் கழுவிக்கொள்ளச் சிறிது நீரைச் சூடாக்கிக் கொடுத்தாள். சதைக் காயம். தலையில் சுற்றிக்கொள்ள சுத்தமான துணியைக் கொடுத்தாள். பிறகு சர்க்கரை போடாத ஒரு கோப்பைக் காப்பியைக் கொடுத்தாள். புயேந்தியாக்கள் அதைத்தான் குடிப்பார்கள் என்று தெரிந்து வைத்திருந்தாள். அவனுடைய உடைகளை நெருப்புக்கு அருகில் உலர வைத்தாள். காப்பியைக் குடித்து முடிக்கும்வரை ஹோசே அர்க்காதியோ செகுந்தோ பேசவில்லை. பின்பு "மூவாயிரம் பேர் இருப்பார்கள்" என்று முனகினான்.

"என்ன ?"

"இறந்துபோனவர்கள்" என்று தெளிவுபடுத்தினான். "ரயில் நிலையத்தில் இருந்தவர்களாக இருக்கும்" என்றான்.

அவள் அவனைப் பரிதாபப் பார்வையால் அளந்தாள். "இங்கே யாரும் இறக்கவில்லை."

"உங்கள் பெரியப்பா, கர்னலின் காலத்துக்குப் பிறகு மகோந்தாவில் எதுவும் நடக்கவில்லை" வீடு திரும்பும் முன்னர் அவன் போய் நின்ற மூன்று சமையலறையிலிருந்தவர்களும் அதையே சொன்னார்கள். "இங்கே யாரும் இறக்கவில்லை". சிறிய சதுக்கத்தின் வழியாக நடந்து ரயில் நிலையத்தின் முன்னால் போனான். தள்ளு வண்டிகள் ஒன்றின் மேல் ஒன்றாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. படுகொலையின் எந்தத் தடயத்தையும் பார்க்க முடியவில்லை. இடைவிடாமல் பெய்த மழையால் தெருக்கள் யாருமில்லாமல் இருந்தன. பூட்டிக் கிடந்த வீடுகளுக்குள்ளே உயிர்ப்பின் சுவடே இல்லை. பூசைக்கு அழைக்கும் மணிகளின் முதல் முழக்கம் மட்டுமே ஒரேயொரு மானுடக் குறிப்பீடாக இருந்தது. கர்னல் காவிலோனின் வீட்டுக் கதவைத் தட்டினான். அநேக முறை அவன் பார்த்திருந்த கர்ப்பிணிப் பெண் ஒருத்தி அவன் முகத்திலடித்தாற் போலக் கதவை அறைந்து மூடினாள்.

"அவர் போய்விட்டார்" என்று பயத்துடன் சொன்னாள். "அவர் சொந்த நாட்டுக்கே திரும்பிப் போய்விட்டார்" என்றாள். வேலியடைத்த கோழிப் பண்ணையின் வாசலில் எப்போதும்போல இரண்டு உள்ளூர் போலீஸ்காரர்கள் இருந்தார்கள். மழைக் கோட்டும் ரப்பர் பூட்ஸ்களும் அணிந்திருந்த அவர்கள் மழையில் கருங்கல்லில் செதுக்கப்பட்டவர் களைப் போலத் தெரிந்தார்கள். ஊர் எல்லையிலிருந்த தெருவில் மேற்கிந்திய நீக்ரோக்கள் சனிக்கிழமை துதி கீதங்களைப் பாடிக் கொண்டிருந்தார்கள். ஹோசே அர்க்காதியோ செகுந்தோ பின்கட்டு மதிலைத் தாண்டிக் குதித்துச் சமையலறை வழியாக வீட்டுக்குள் நுழைந்தான். சாந்தா சோபியா தெ லா பியாதாத் குரலைச் சன்னமாக உயர்த்தி "பெர்னாண்டா உன்னைப் பார்த்துவிட வேண்டாம்" என்றாள். "அவள் இப்போதுதான் எழுந்தாள்" என்றாள். ஏதோ மறைமுக

ஒப்பந்தத்தை நிறைவேற்றுவதுபோல மகனை 'கழிவுப் பானை' அறைக்கு அழைத்துப் போனாள். மெல்குயாதெஸின் உடைசல் கட்டிலைத் தயார் செய்துகொடுத்தாள். பிற்பகல் இரண்டு மணிக்கு பெர்னாண்டா பகலுறக்கத்திலிருக்கும்போது ஒரு தட்டில் அவனுக்காக உணவைக் கொண்டுவந்து ஜன்னல் வழியாகக் கொடுத்தாள்.

மழைக் காரணமாக அவுரேலியானோ செகுந்தோ வீட்டிலேயே படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தான். மூன்று மணிக்கு வெளியில் போகவிருந்தான். மழை விடுவதற்காகக் காத்துக்கொண்டிருந்தான். அந்தச் சமயத்தில், சாந்தா சோபியா தெ லா பியாதாத் ரகசியமாகச் சொல்லியிருந்ததால் மெல்குயாதெஸின் அறைக்குப் போய் சகோதரனைப் பார்த்தான். படுகொலையைப் பற்றியோ பிணங்களைச் சுமந்துகொண்டு ரயில் கடலை நோக்கிப் போன கொடுங்கனவைப் பற்றியோ ஹோசே அர்க்காதியோ செகுந்தோ சொன்னதை நம்பவில்லை. முந்தைய இரவுதான், தொழிலாளர்கள் ரயில் நிலையத்திலிருந்து அமைதியான குழுக்களாகப் பிரிந்து வீடு திரும்பியதாக, நாட்டு மக்களுக்காக வெளியிடப்பட்ட பிரத்தியேக அறிவிப்பைப் படித்திருந்தான். மகத்தான நாட்டுப்பற்றுடன் தொழிற் சங்கத் தலைவர்கள் தங்களது கோரிக்கைகளை இரண்டாக, ஒன்று மருத்துவச் சேவையில் சீர்திருத்தம். வசிப்பிடங்களில் கழிப்பறைகள் கட்டிக்கொடுத்தல் மற்றது – குறைத்துக் கொண்டதாகவும், அந்த அறிவிப்புச் சொன்னது. ராணுவ அதிகாரிகள் தொழிலாளர்களிடமிருந்து உடன்படிக்கையைப் பெற்றிருப்பதாகவும் அதை திரு. பிரவுனிடம் தெரிவித்ததாகவும் அவர் அந்த இரண்டு கோரிக்கைகளை ஏற்றுக்கொண்டதோடு, மோதல் தீர்ந்ததைப் பொது விழாவாகக் கொண்டாட மூன்று நாள் ஊதியத்தை வழங்கியிருப்பதாகவும் அறிவிப்பில் குறிப்பிடப்பட்டிருந்தது. உடன்படிக்கை கையெழுத்திடப்படும் தேதியாக எதைச் சொல்வது என்று ராணுவம் கேட்டபோது அவர் ஜன்னல் வழியாக வெளியே மின்னல்கள் புரளும் வானத்தைப் பார்த்துவிட்டு சந்தேகமாகச் சைகை செய்தார்.

"மழை விட்டதும். தொடர்ந்து மழைபெய்து தீரும்வரை நாம் எல்லா நடவடிக்கைகளையும் நிறுத்தி வைக்கிறோம்" என்றார்.

மூன்று மாதங்களாக மழைப் பெய்யவில்லை. ஆனால் திரு. பிரவுன் அவருடைய முடிவைச் சொன்ன பிறகு வாழைப்பழப் பிரதேசம் முழுவதும் ஊற்றுப் பெருக்கெடுத்ததுபோல மழைக் கொட்டியது. அந்த மழையில்தான் மகோந்தாவுக்குத் திரும்பும்போது ஹோசே அர்க்காதியோ செகுந்தோ நனைந்து ஊறினான். ஒரு வாரத்துக்குப் பிறகும் மழை பெய்துகொண்டே இருந்தது. அதிகாரபூர்வமான அறிவிப்பு ஆயிரக் கணக்கான முறை தெரிவிக்கப்பட்டது. அரசாங்கம் கைக்குக் கிடைத்த எல்லாத் தொடர்பு சாதனங்கள் மூலமாகவும் நாடு முழுவதும் அதைப் பரப்பியது. கடைசியில் அது ஏற்றுக்கொள்ளப்பட்டது. மரணம் நிகழவில்லை. திருப்தியடைந்த தொழிலாளர்கள் வீடுகளுக்குத் திரும்பிப் போனார்கள். மழை ஓயும்வரை எல்லா நடவடிக்கைகளையும் வாழைப் பழக் குழுமம் நிறுத்தி வைக்கிறது. முடிவில்லாத மழையால் பொது மக்களுக்கு ஏற்பட்டிருக்கும் நாசங்களில் அவசர நடவடிக்கை எடுத்து

நிவாரணம் செய்யும் நோக்கில் ராணுவச் சட்டம் தொடந்து அமல் படுத்தப்பட்டது. படைகள் அவற்றின் தளக் குடியிருப்புகளிலே இருந்தன. பகல் பொழுதுகளில் சிப்பாய்கள் கால் சராயைச் சுருட்டிவிட்டுக் கொண்டு தெருக்களில் பெருக்கெடுத்திருந்த நீரோடைகளில் நடந்தார்கள். குழந்தைகளுடன் படகு செய்து மிதக்கவிட்டு விளையாடினார்கள். இரவில் கதவில் சுண்டிய பிறகு துப்பாக்கிக் கட்டைகளால் தட்டித் திறந்து சந்தேககத்துக்குரியவர்களை அவர்களது படுக்கையிலிருந்து இழுத்து வந்து திரும்பி வர முடியாத இடத்துக்குக் கொண்டு போனார்கள். ரவுடிகள், கொலைக்காரர்கள், தீவைப்பாளர்கள், உத்தரவு எண் - 4ஐ எதிர்ப்பவர்கள் எல்லாரையும் அழிப்பதற்கான தேடல் தொடர்ந்து கொண்டிருந்தது. ராணுவம் அதை மறுத்தது. செய்தியைக் கேள்விப் பட்டு அதிகாரியின் அலுவலகத்தின் முன்னால் திரண்ட உறவினர் களிடமும் ராணுவம் அதை மறுத்தது.

"நீங்கள் ஏதாவது கனவு கண்டிருப்பீர்கள். மகோந்தாவில் எதுவும் நடக்கவில்லை. எதுவும் நடந்ததில்லை. இனியும் நடக்காது. இது ஒரு மகிழ்ச்சியான நகரம்." அந்த முறையில் அவர்களால் இறுதியாகத் தொழிற்சங்கத் தலைவர்களை அழித்தொழிக்க முடிந்தது. தப்பிய ஒரே நபர் ஹோசே அர்க்காதியோ செகுந்தோ. ஒரு வெள்ளிக்கிழமை இரவு துப்பாக்கிக் கட்டைகளின் பிசகில்லாத தட்டல் கதவில் ஒலித்தது. அது முடிவதற்காகக் காத்திருந்த அவுரேலியானோ செகுந்தோ கதவைத் திறந்தான். ஒரு அதிகாரியின் தலைமையில் ராணுவ வீரர்கள் ஆறுபேர் உள்ளே நுழைந்தார்கள். மழையில் நனைந்திருந்தவர் ஒரு வார்த்தையும் சொல்லாமல் வீட்டுக்குள் ஒவ்வொரு அறையாக, அலமாரி அலமாரியாக, வரவேற்புக் கூடத்திலிருந்து சமையலறைவரை தேடினார்கள். உர்சுலாவின் அறைக்குள் அவர்கள் விளக்கைப் போட்டதும் அவள் எழுந்து கொண்டாள். அவர்கள் நடமாடிக்கொண்டிருந்தபோது அவளால் மூச்சுவிட முடியவில்லை என்றாலும் சிப்பாய்கள் நகரும் இடம் பார்த்து விரல்களைச் சிலுவைக் குறியாக்கி நீட்டிக்கொண்டிருந்தாள். மெல்குயாதெஸின் அறையில் தூங்கிக்கொண்டிருந்த ஹோசே அர்க்காதியோ செகுந்தோவை சாந்தா சோபியா தெ லா பியாதாத் எச்சரிக்கை செய்தாள். எனினும் தப்பிச் செல்ல மிகவும் தாமதமாகி விட்டதை அவன் கண்டான். சாந்தா சோபியா தெ லா பியாதாத் மறுபடியும் கதவைத் தாளிட்டாள். அவனைச் சட்டையும் ஷூக்களும் போட வைத்தாள். கட்டிலில் உட்கார்ந்து அவர்களுக்காகக் காத் திருக்கச் செய்தாள். அந்த நேரத்தில் அவர்கள் தங்கப் பட்டறையைப் பரிசோதித்துக் கொண்டிருந்தார்கள். அதிகாரி தாழ்ப்பாளைத் திறக்கச் செய்தான். அவனுடைய விளக்கின் வெளிச்சத்தில் பணி மேஜையையும் அமிலக் குப்பிகள் இருந்த கண்ணாடி அலமாரியையும் உரிமையாளர் விட்டுப்போன அதே நிலையிலிருந்த உபகரணங்களையும் பார்த்தான். அந்த அறையில் யாரும் வசிக்கவில்லை என்று புரிந்துகொண்டதாகத் தெரிந்தது. அவுரேலியானோ செகுந்தோவிடம் அவன் வெள்ளி வேலை செய்பவனா என்று புத்திசாலித்தனமாகக் கேட்டான். அது கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் பட்டறை என்று மற்றவன் விளக்கி

னான். “ஓஹோ” என்ற அதிகாரி விளக்கை மீண்டும் ஏற்றி நுணுக்கமாகப் பரிசோதித்தான். உருக்கப்படாமல் விடப்பட்ட பதினெட்டு சிறிய தங்க மீன்களை அவர்கள் கண்டுபிடித்தார்கள். அவை ஒரு தகரக் குவளையில் போடப்பட்டுக் குப்பிகளுக்குப் பின்னால் வைக்கப்பட்டிருந்தது. அதிகாரி அவற்றை ஒவ்வொன்றாக எடுத்துப் பணி மேஜையில் வைத்துப் பரிசோதித்தான். மனிதத்தனமாக உணர்ந்தான். “அனுமதிக்கப்பட்டால் இதில் ஒன்றை எடுத்துக்கொள்ள விரும்புகிறேன். ஒரு காலத்தில் அவையெல்லாம் ஆட்சிக் கவிழ்ப்பின் அடையாளங்கள். இன்று வெறும் பழம்பொருட்கள்” என்றான் இளைஞன். கிட்டத்தட்ட விடலைப் பையன். பயமில்லாமலிருந்தான். அதுவரை வெளியே காட்டாத இயற்கையான மென்மைச் சுபாவம் அப்போது தெரிந்தது. அவுரேலியோ செகுந்தோ அந்தச் சிறிய மீனை அவனிடம் கொடுத்தான். குழந்தைத்தனமான பிரகாசம் கண்களில் ஒளிர அதிகாரி அதை வாங்கிச் சட்டைப் பையில் வைத்துக்கொண்டான். மிச்சமிருந்தவற்றைத் திரும்பவும் குவளையில் போட்டு இருந்த இடத்திலேயே வைத்தான்.

“இது ஓர் அற்புதமான நினைவுப் பரிசு. கர்னல் அவுரேலியானோ புயேந்தியா நமது மகத்தான மனிதர்களில் ஒருவராக இருந்தார்” என்றான். எனினும் அந்த மானுடக் கிளர்ச்சி அவனது தொழில்முறை இயல்பை மாற்ற வில்லை. மறுபடியும் தாளிட்டுப் பூட்டியிருந்த மெல்குயாதெஸின் அறை முன்னால் நின்றபோது கடைசி நம்பிக்கையுடன் சாந்தா சோபியா தெ லா பியாதாத் சொன்னாள் “நூற்றாண்டுகளாக இந்த அறையில் யாரும் வசிக்கவில்லை”. அதிகாரி அதைத் திறக்கச்செய்து விளக்கை அடித்தான். அவுரேலியானோ செகுந்தோவும் சாந்தா சோபியா தெ லா பியாதாத்தும் வெளிச்சக் கீற்று அவன் முகத்தில் பதிந்து கடந்த விநாடியில் ஹோசே அர்க்காதியோ செகுந்தோவின் அராபியக் கண்களைப் பார்த்தார்கள். அது ஒரு பதற்றத்தின் முடிவு என்றும் இன்னொன்றின் ஆரம்பமென்றும் அவர்களுக்குப் புரிந்தது. அதிகாரி விளக்கை அடித்துக்கொண்டே அந்த அறையைப் பரிசோதிப்பதைத் தொடர்ந்தான். அலமாரியில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த எழுபத்திரண்டு பானைகளைப் பார்க்கும் வரைக்கும் எந்த ஆர்வத்தையும் காட்ட வில்லை. விளக்கைத் திருப்பினான். எப்போதையும்விட அமைதியுடனும் சிந்தையில் ஆழ்ந்தும் ஹோசே அர்க்காதியோ செகுந்தோ அவர்களுடன் செல்லத் தயாராக கட்டிலின் முனையில் உட்கார்ந்திருந்தான். பின்னணியில் கிழிந்த புத்தகங்களும் பட்டயச் சுருள்களும் அடுக்கிய அலமாரிகள். சுத்தமும் ஒழுங்குபடுத்தியதுமான பணி மேஜை. அதன் மேலிருந்த மைக்குப்பிகளில் மை இன்னும் உறையாமலிருந்தது. பிள்ளைப்பருவத்தில் பார்த்த அதே தூய்மை, அதே தெளிவு, அதே புழுதி படியாத தன்மை. கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவுக்கு மட்டுமே அது சாத்தியம் என்று அவுரேலியானோ செகுந்தோவுக்குப் புரிந்தது. ஆனால் அதிகாரியைக் கழிவுப் பானைகள்தாம் ஈர்த்தன.

“இந்த வீட்டில் எத்தனை பேர் இருக்கிறார்கள்?” என்று கேட்டான்.

“ஐந்து”.

அந்த அதிகாரிக்குப் புரியவில்லை. அவுரேலியானோ செகுந்தோவும் சாந்தா சோபியா தெ லா பியாதாத்தும் இன்னும் ஹோரசே அர்க்காதியோ செகுந்தோ இருந்த இடத்தையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். அதிகாரியின் பார்வை அதே இடத்தில் பதிந்தது எனினும் அவனால் தன்னைப் பார்க்க முடியவில்லை என்பதும் அந்தப் படைவீரன் தன்னைக் காணாமலே தன்னைப் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்பதும் ஹோரசே அர்க்காதியோ செகுந்தோவுக்குப் புரிந்தது. பின்பு அவன் விளக்குகளை அணைத்துவிட்டுக் கதவை மூடினான். அவன் சிப்பாய்களிடம் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டபோது அந்த அதிகாரி அறையைக் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் பார்வையில் பார்த்தான் என்பதைப் புரிந்துகொண்டான்.

"அந்த அறையில் குறைந்தது நூறு ஆண்டுகளாவது யாரும் இல்லாமலிருந்திருக்க வேண்டும்." அதிகாரி சிப்பாய்களிடம் சொன்னான். "பாம்புகள்கூட இருக்கலாம்" என்றான்.

கதவு மூடப்பட்டதும், போர் முடிந்துவிட்டது என்று ஹோரசே அர்க்காதியோ செகுந்தோவுக்கு நிச்சயமாயிற்று. பல வருடங்களுக்கு முன்பு கர்னல் அவுரேலியானோ புயேந்தியா போரின் கவர்ச்சியைப் பற்றி அவனிடம் பேசினார். சொந்த அனுபவத்திலிருந்து எண்ணற்ற உதாரணங்களைக் காட்டி அதை அவனுக்கு விளக்க முயன்றார். அவன் அவரை நம்பினான். ஆனால் அந்த இரவில் படை வீரர்கள் அவனைத் தேடி வந்து பார்க்க முடியாமல் திரும்பியபோது கடந்த சில மாதங்களின் பதற்றத்தைப் பற்றி யோசித்தான். சிறைச்சாலைத் துயரம். ரயில் நிலையக் கொடூரம். இறந்த மனிதர்கள் குவிந்து கிடந்த ரயில். கர்னல் அவுரேலியானோ புயேந்தியா ஒன்று போலி; அல்லது அடிமுட்டாள் என்ற முடிவுக்கு ஹோரசே அர்க்காதியோ செகுந்தோ வந்தான். போரில் தான் உணர்ந்ததைச் சொல்ல அவருக்கு ஏன் ஏராளமான சொற்கள் தேவைப்பட்டன என்பது அவனுக்குப் புரியவில்லை. ஒரே சொல் போதும்: பயம். இயற்கைக்கு அதீதமான ஒளியால், மழையின் ஓசையால், அரூபியாக இருக்கும் உணர்வால் காப்பாற்றப்பட்டு மெல்குயாதெஸின் அறைக்குள் இருப்பதில், தனது முந்தைய வாழ்க்கையில் ஒரு நொடிகூட அனுபவிக்காத ஆறுதலைக் கண்டடைந்தான். அவர்கள் தன்னை உயிரோடு கொளுத்திவிடுவார்களோ என்ற பயம் மட்டுமே மிஞ்சியிருந்தது. தனக்கு அன்றாட உணவைக் கொண்டு வந்து தரும் சாந்தா சோபியா தெ லா பியாதாத்திடம் அதைச் சொன்னான். இறந்த பிறகே அவனுக்குத் தீமூட்ட வேண்டுமென்பதற்காகத் தனது இயற்கையான சக்திகளை மீறிப் போராடத் தயாராக இருப்பதாக அவள் வாக்குறுதியளித்தாள். எல்லாப் பயங்களிலிருந்தும் விடுபட்டு மெல்குயாதெஸின் கையெழுத்துப் பிரதிகளை வாசிப்பதில் ஈடுபட்டான், அவை புரியாதபோது மிகுந்த ஆனந்தமடைந்தான். பலமுறை வாசித்தான். மழையின் ஓசை அவனுக்குப் பழகியது. இரண்டு மாதங்களுக்குப் பின்னர் அந்த ஓசை மௌனத்தின் இன்னொரு வடிவமாக மாறியது. சாந்தா சோபியா தெ லா பியாதாத்தின் வரவும் போக்கும்தான் ஒரே ஒரு தொந்தரவாக இருந்தது. எனவே அவளிடம்

சாப்பாட்டை ஜன்னல் மேடையில் வைத்துவிட்டுக் கதவைத் தாழிடச் சொன்னான். பெர்னாண்டா உட்படக் குடும்பத்தவர்கள் எல்லாரும் அவனை மறந்தார்கள். ராணுவ வீரர்கள் அவனை அடையாளம் காண முடியாமல் திரும்பியதைக் கண்ட பின்னர் அவன் அங்கே இருப்பதை அவள் பொருட்படுத்தவில்லை. ஆறு மாதங்களுக்குப் பின்னர், ராணுவ வீரர்கள் மகோந்தாவை விட்டு வெளியேறிய பிறகு மழை நிற்கும்வரை யாருடனாவது பேசலாம் என்று எண்ணிய ஒருநாள், அவுரேலியானோ செகுந்தோ பூட்டிய தாழ்ப்பாளைத் திறந்தான். கதவைத் திறந்தவுடன் கழிவுப் பானைகளின் கொள்ளை நோய்த் தாக்குதலை உணர்ந்தான். அவை தரையில் வைக்கப்பட்டிருந்தன. எல்லாப் பானைகளும் பலமுறை பயன்படுத்தப்பட்டிருந்தன. ஹோசே அர்க்காதியோ செகுந்தோவுக்கு வழுக்கை விழுந்திருந்தது. குமட்டலைத் தரும் வாடைகளைப் பொருட்படுத்தாமல் விளங்கிக்கொள்ள முடியாத அந்த ஏடுகளையும் பட்டயங்களையும் மீண்டும் மீண்டும் வாசிப்பதில் ஆழ்ந்திருந்தான். தேவதைத்தனமான ஒளியுடன் ஜொலித்தான். கதவு திறக்கப்படுவதைக் கேட்டு சற்றே விழிகளை உயர்த்தினான். அந்தத் தோற்றமே தனது கொள்ளுப்பாட்டனின் மாற்ற முடியாத விதி அந்தக் கண்களுக்குத் திரும்பியிருப்பதைப் புரிந்துகொள்ள அவுரேலியானோ செகுந்தோவுக்குப் போதுமானதாக இருந்தது.

“மூவாயிரத்துக்கும் மேற்பட்டவர்கள் இருந்தார்கள். எல்லாரும் ரயில் நிலையத்தில் இருந்தவர்கள் என்று எனக்கு நிச்சயமாகத் தெரியும்” ஹோசே அர்க்காதியோ செகுந்தோ அதை மட்டுமே சொல்லிக் கொண்டிருந்தான்.

நான்கு வருடங்களும் பதினோரு மாதங்களும் இரண்டு நாட்களுமாக மழை பெய்துகொண்டிருந்தது. மழை தூறிக் கொண்டிருந்த வேளைகளில் தெளிந்த பொழுதைக் கொண்டாட ஒவ்வொருவரும் முழு உடையலங்காரத்துடனும் நோய் நீங்கிய தோற்றத்துடனும் ஆயத்தமாக இருந்தார்கள். எனினும் அந்த இடைவேளைகள் இரட்டிப்பு மழைக்கான அறிகுறி என்று விளங்கிக்கொள்ளவும் விரைவில் பழகியிருந்தார்கள். வானம் நாசகாரப் புயல்களாக நொறுங்கி விழுந்துகொண்டிருந்தது. வடக்குத் திசையிலிருந்து சூறைக்காற்று வீசியடித்தது. கூரைகளைச் சிதற அடித்தது. சுவர்களை இடித்துத் தள்ளியது. வாழைத் தோப்புகளில் ஒற்றை மரம் மிச்சமில்லாமல் எல்லா மரங்களையும் வேரோடு பிடுங்கித் தள்ளியது. உறக்கமின்மைக் கொள்ளைநோய் பாதித்த நாட்களில் செய்ததைப் போலவே இந்த இடர்ப்பாடும் அலுப்புக்கு எதிரான தற்காப்பு நடவடிக்கைகளைத் தூண்டிவிட்டிருப்பதை உர்சுலா நினைவுகூர்ந்தாள். சோம்பலால் வீழ்த்தப்படாமலிருக்கக் கடினமாகப் பாடுபட்டவர்களில் அவுரேலியானோ செகுந்தோவும் ஒருவன். திருவாளர் பழுப்பு, புயலைக் கட்டவிழ்த்துவிட்ட அந்த இரவு ஏதோ சின்னக் காரியத்துக்காக அவன் வீட்டுக்குப் போயிருந்தான். பெர்னாண்டா அலமாரியிலிருந்து பாதி கிழிந்து போன ஒரு குடையைத் தேடியெடுத்துக் கொடுத்தாள். "எனக்கு இது தேவைப்படாது. வானம் வெளுக்கும்வரை நான் இங்கேதான் இருப்பேன்" என்றான். அதுவொன்றும் திடமான வாக்குறுதியல்ல; இருந்தாலும் அவன் அதை முழுவதுமாகக் காப்பாற்றினான். அவனுடைய உடைகள் எல்லாம் பெத்ரா கொடேஸின் வீட்டில் இருந்தன. ஆகவே மூன்று நாட்களுக்கு ஒருமுறை போட்டிருந்த உடைகளைக் கழற்றித் துவைப்பதற்காகக் கொடுத்துவிட்டு உள்ளாடையுடன் காத்திருந்தான். அலுப்பு ஏற்பட்டுவிடாமலிருக்க வீட்டைப் பராமரிக்க வேண்டியிருந்த மராமத்து வேலைகளில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டான். கீல்களைச் சரி செய்தான். பூட்டுகளுக்கு எண்ணெய் விட்டான். நாதாங்கிகளை முறுக்கி விட்டான். கதவுப் புடைப்புகளைச் சீர் செய்தான். ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவின் காலத்தில் நாடோடிகள் விட்டு விட்டுப் போன கருவிப் பெட்டியுடன் மாதக்கணக்காக அலைந்து திரிந்தான். அந்தத் தற்செயல் உடற்பயிற்சியாலோ குளிர்காலச் சோர்வினாலோ கட்டாயமான உண்ணாவிரதத்தாலோ, எதனால் என்று தெரியவில்லை, அவனுடைய தொப்பை மெல்ல மெல்லத் திராட்சைத் தோல் போலச் சுருங்கி ஒட்டியிருந்தது. அலங்கார

ஆமை போல இருந்த அவன் முகத்தில் ரத்தம் சுண்ட ஆரம்பித்தது. தடித்த சதை குறையக் குறைய அவனுடைய இரட்டை முகவாயும் அரிதாகவே தென்படத் தொடங்கியது. குனிந்து தன்னுடைய ஷூக்களைக் கட்டிக்கொள்ள மறுபடியும் முடிந்தது. அவன் தாழ்ப்பாள்களைப் பொருத்துவதையும் கடிகாரங்களைப் பழுது பார்ப்பதையும் கவனித்த பெர்னாண்டா அந்த வீட்டின் செய்வினையில் அவனும் வீழ்ந்து விட்டானோ என்று வியப்படைந்தாள். கர்னல் அவுரேலியானோ புயேந்தியா தனது சின்னத் தங்க மீன்கள் பராமரிப்பில் மூழ்கியதைப் போலவோ அமரந்தா தனது சவ அங்கியைத் தைப்பதிலும் பொத்தான்கள் வைப்பதிலும் மும்முரமாக இருந்ததைப் போலவோ ஹோசே அர்க்காதியோ காகிதச் சுவர்களை வாசிப்பதில் ஈடுபட்டது போலவோ உர்சுலா தனது ஞாபகங்களில் ஆழ்ந்தது போலவோ அவனுக்கும் நேர்ந்திருக்குமோ என்று வியப்படைந்தாள். ஆனால் பிரச்சினை அதுவல்ல. மழை எல்லாப் பொருட்களையும் பாதித்துக் கொண்டிருந்தது. மூன்று நாட்களுக்கு ஒருமுறை எண்ணெய் விடாமலிருந்ததால் உலர்ந்த இயந்திரங்களின் பற்சக்கரங்ளுக்கிடையில் காளான்கள் பூத்தன. சரிகை வேலைப்பாடுள்ள உடைகளில் இழைகள் துருப்பிடித்தன. ஈரமான துணிகள் சீக்கிரமே காவி நிறக் கந்தையாக மாறின. காற்றில் இருந்த ஈரத்தைப் பார்த்தபோது ஏதாவது மீன் கதவுகளைத் தாண்டி வந்து ஜன்னல் வழியாக நீந்தி அறைகளுக்குள் மிதக்கும் போல இருந்தது. அமைதியான நினைவிழப்பினூடே தன்னுடைய முடிவை எட்டிக் கொண்டிருந்த உணர்வுடன் ஒருநாள் காலை உர்சுலா விழித்தாள். முன்பே கேட்டிருந்தபடி ஸ்டிரெச்சரில் சுமந்தாவது அந்தோனியோ இசபெல் பாதிரியாரிடம் தன்னைக் கொண்டு செல்லுமாறு சொன்னாள். அப்போதுதான் அவள் முதுகில் அட்டைகள் ஒட்டியிருப்பதை சாந்தா சோபியா தெ லா பியாதாத் கண்டுபிடித்தாள். உர்சுலாவின் ரத்தத்தை உறிஞ்சி அவளைக் கொன்றுவிடும் முன்பு சாந்தா சோபியா தெ லா பியாதாத் ஒவ்வொரு அட்டையாகப் பிடுங்கி எரிகொள்ளியால் தீய்த்துச் சாகடித்தாள். வீட்டுக்குள்ளிருந்து மழை நீரை வெளியேற்றவும் தவளை களிடமிருந்தும் நத்தைகளிடமிருந்தும் விடுபடவும் கால்வாய்கள் தோண்டுவது அவசியமானது. அப்படிச் செய்தால் மட்டுமே அவர் களால் தரையைக் காயவிட முடியும். கட்டில் கால்களுக்குக் கீழே முட்டுக் கொடுத்திருந்த செங்கற்களை எடுக்க முடியும். ஷூக்கள் அணிந்து நடக்க முடியும். தன்னுடைய கவனத்தைக் கோரும் ஏராள மான விஷயங்களில் மும்முரமாக இருந்த அவுரேலியானோ செகுந்தோ தனக்கு வயதாகிவிட்டது என்பதை ஒருநாள் பிற்பகல் சீக்கிரமே மாலைப்பொழுது கவிந்ததைப் பற்றி ஆடும் நாற்காலியில் உட்கார்ந்து யோசித்துக்கொண்டிருந்தபோதுதான் உணர்ந்தான். எந்தப் படபடப்பும் இல்லாமல் பெத்ரா கொடேஸைப் பற்றியும் யோசித்தான். பெர்னாண்டாவின் கிளர்ச்சி தராத காதலுக்குத் திரும்பச் செல்வதில் எந்தச் சிக்கலும் இல்லை. ஏனெனில் அவனுடைய அழகு வயது காரணமாக மரியாதைக்குரியதாகி இருந்தது. ஆனால் வேட்கையின் சகல நெருக்கடிகளிலிருந்தும் மழை அவனை விலக்கியிருந்தது. நாட் மில்லாத பூஞ்சை அமைதியை அவனுக்குள் நிரப்பியிருந்தது. இதுவே

வேறு நாட்களாக இருந்தால் ஒரு வருடத்துக்கும் மேலாக நீடித்திருக்கும் இந்த மழைக்காலத்தில் தான் என்னென்ன செய்திருப்போம் என்று அவன் தனக்குள்ளேயே யோசித்து ஆச்சரியப்பட்டான். வாழைப்பழக் குழுமம் தங்களைப் பிரபலப்படுத்திக்கொள்வதற்கு வெகு முன்பே மகோந்தாவுக்குத் துத்தநாகத் தகடுகளைக் கொண்டுவந்தவர்களில் அவனும் ஒருவன். மழைக்காலத்தில் கூரைமேல் நீர் விழுந்து சிதறும் ஓசைக்கேற்றாற் போலக் கலவி செய்யும் மிக அந்தரங்கமான மகிழ்ச்சியை உணர்வதற்காகவே பெத்ரோ கோடெஸின் படுக்கையறைக்குத் துத்தநாகக் கூரை வேய்ந்தான். தன்னுடைய கடைசியான காமத்திளைப்பிலேயே அவன் தனது காம வேட்கையின் பங்கைத் தீர்த்திருந்தான். அதனால் இளமைக் கிறுக்கின் கட்டுப்பாடற்ற ஞாபகங்கள்கூட அவனை அசைக்க வில்லை; அதையெல்லாம் கசப்போ கழிவிரக்கமோ இல்லாமல் நினைத்துப் பார்க்கும் அற்புதமான இயல்பு மட்டுமே அவனிடம் மிஞ்சியிருந்தது. அந்தப் பிரளயம் உட்கார்ந்து சிந்திக்கும் வாய்ப்பை அவனுக்குக் கொடுத்திருந்தது என்றும் எண்ணலாம். குறடுகளையும் எண்ணெய்க் குவளையையும் வைத்துக்கொண்டு வேலை பார்க்கும்போது தன் வாழ்க்கையில் எத்தனையோ உருப்படியான தொழில்களில் ஈடுபட்டிருக்கலாம் என்றும் அதைச் செய்யாமல் விட்டோமே என்றும் மெத்தனமான ஏக்கம் அவனுக்குள் எழுந்திருக்கலாம். ஆனால் இரண்டும் உண்மையல்ல. ஏனெனில் அவனை முற்றுகையிட்டுக் கொண்டிருந்த சலனமில்லாத குடும்பப்பாங்கு எந்த மறுகண்டுபிடிப்பின் விளைவோ ஒழுக்கப் பாடமோ அல்ல; அது வெகு தொலைவிலிருந்து வந்த ஒன்று. மெல்குயாதெஸின் அறையில் இருந்து பறக்கும் கம்பளங்களைப் பற்றியும் கப்பல்களையும் மாலுமிகளையும் மொத்தமாக விழுங்கும் திமிங்கிலங்களைப் பற்றியும் படித்துக்கொண்டிருந்த நாட்களில் மழையின் முள் கவைக்கோலால் அகழ்ந்தெடுக்கப்பட்ட ஒன்று. அந்த நாட்களில்தாம் கவனக்குறைவான ஒரு நொடியில் குட்டி அவுரேலியானோ முற்றத்தில் தென்பட்டான். அவனுடைய அடையாள மர்மத்தைத் தாத்தா கண்டுபிடித்தார். அவனுடைய முடியை வெட்டி விட்டார். உடையணிவித்தார். ஆட்களைப் பார்த்துப் பயப்படாம லிருக்கக் கற்றுக் கொடுத்தார். வெகு சீக்கிரத்திலேயே அவனுடைய எடுப்பான கன்ன எலும்புகள், திகைப்பான பார்வை, தனிமையான இயல்பு எல்லாம் சேர்ந்து அவன் முறையான அவுரேலியானோ புயேந்தியாதான் என்று தெரியச் செய்தன. அது பெர்னாண்டாவுக்கு ஆறுதலாக இருந்தது. தன்னுடைய பெருமிதத்தின் அளவைச் சிறிது காலமாகவே அவள் கணக்கிட்டு வைத்திருந்தாள். ஆனால் அதற்கான மாற்றைக் கண்டுபிடிக்க அவளால் முடியவில்லை. தீர்வுகளைப் பற்றி எவ்வளவு யோசித்தாலும் அவை தர்க்கத்துக்குப் பொருந்தாதவை யாகவே அவளுக்குத் தோன்றின. அவுரேலியானோ செகுந்தோ, இப்போதைப் போல காரியங்களை அதேபடி எடுத்துக்கொள்வான் என்று அவளுக்குத் தெரிந்திருந்தால் இத்தனை அல்லற்பட்டிருக்கவோ குழம்பியிருக்கவோ மாட்டாள். சுயவதையிலிருந்து ஒரு வருடத்துக்கு முன்பே தன்னை விடுவித்துக் கொண்டிருப்பாள். ஏற்கனவே இரண்டாவது பல் முளைத்திருந்த அமரந்தா தன்னுடைய மருமகனைக்

குறுநடை போடும் விளையாட்டுப் பொம்மையாகவும் மழைக்காலச் சோர்வுக்கு ஆறுதலாகவும் நினைத்தாள். அவுரேலியானோ செகுந்தோவுக்கு மேமேயின் பழைய அறையிலிருந்த ஆங்கிலக் கலைக்களஞ்சியத்தை யாரும் தொடவேயில்லை என்பது திடீரென்று நினைவுக்கு வந்தது. அவன் அதிலிருந்தப் படங்களைக் குழந்தைகளுக்குக் காட்டினான். குறிப்பாக விலங்குகளின் படங்களை. பின்னர் நிலப்படங்களையும் தூரத்து நாடுகளின் புகைப்படங்களையும் புகழ்பெற்ற மனிதர்களின் புகைப்படங்களையும் காட்டினான். அவனுக்கு ஆங்கிலம் தெரியாது என்பதால் மிகப் பிரபலமான நகரங்களையும் மனிதர்களையும் மட்டுமே அடையாளம் காட்ட முடிந்தது. குழந்தைகளின் ஆர்வத்தை நிறைவு செய்வதற்காக அவனாகவே பெயர்களையும் ஐதீகங்களையும் கண்டு பிடித்தான்.

மழை ஓய்ந்து வெளுத்ததும் வைப்பாட்டி வீட்டுக்குப் போவதற்காகவே தன் கணவன் காத்துக்கொண்டிருக்கிறான் என்று பெர்னாண்டா உண்மையாகவே நம்பினாள். மழைக் காலத்தின் ஆரம்ப மாதங்களில் அவன் தன்னுடைய படுக்கை அறைக்குள் புகுந்துவிடுவானோ என்று பயந்தாள். அப்படி நடந்திருந்தால் அமரந்தா உர்சுலா பிறந்த பிறகு தன்னால் இணக்கமாக இருக்க முடியாமல் போனது ஏன் என்னும் ரகசியத்தை அவனிடம் வெளிப்படுத்த வேண்டிய அவமானத்தை அவள் சகிக்க நேரும். கண்ணுக்குப் புலப்படாத மருத்துவகளுடன் அவள் கடிதத் தொடர்புவைத்திருந்தாள். அடிக்கடி ஏற்படும் இயற்கை நாசங்களால் தபால் வரத்துக்கு ஏற்பட்ட தடங்கல் அவளைப் பதற்றப்படுத்தியதன் காரணம் அதுதான். மழைக்காலத்தின் ஆரம்ப மாதங்களில் ரயில்கள் தடம் புரண்டுகொண்டிருந்ததைப் பற்றிக் கேட்டுத் தெரிந்துகொண்டாள். அவள் அனுப்பிய கடிதங்கள் கிடைக்கவில்லை என்று அந்த கண்ணுக்குப் புலப்படாத டாக்டர்கள் சொன்னார்கள். பிறகு அந்த அறிமுகமற்ற தொடர்பாளர்களுடன் தகவல் பரிமாற்றம் முறிந்தது. அப்போது திருவிழாவில் கணவன் மாட்டிக்கொண்டு நடந்த புலி முகமூடியை அணிந்து கற்பனைப் பெயரில் வாழைப்பழக் குழும டாக்டர்களிடம் போய்ப் பரிசோதனை செய்துகொள்ளலாமா என்றுகூட அவள் தீவிரமாக யோசித்தாள். பிரளயத்தைப் பற்றிய துக்ககரமான தகவல்களைத் தொடர்ந்து கொண்டு வந்திருந்தவர்களில் ஒருவன் குழும மருத்துவமனையை அங்கிருந்து மாற்றி மழை இல்லாத இடத்துக்குக் கொண்டுபோகவிருக்கிறார்கள் என்பதைத் தெரிவித்தான். அவள் நம்பிக்கை இழந்தாள். மழை ஓய்ந்து தபால் சேவை சகஜ நிலைக்குத் திரும்பும்வரை காத்திருக்கத் தயாரானாள். அதற்கிடையில் தனது ரகசிய நோயிலிருந்து விடுபடக் கற்பனையைத் தஞ்சமடைந்தாள். ஏனெனில் மகோந்தாவில் எஞ்சியிருந்தவரும் கழுதையைப் போலப் புல்லைத் தின்பவரும் அலட்டல் பேர்வழியுமான பிரெஞ்சுக்கார டாக்டரிடம் போவதைவிடவும் செத்துப் போவது மேலானது என்று நினைத்தாள். தன்னுடைய நோயைக் குணப்படுத்தும் ஏதாவது மருந்தைப் பற்றி உர்சுலாவுக்குத் தெரிந்திருக்கும் என்ற நம்பிக்கையில் அவளைத் தேடிப்போனாள். காரியங்களை அவற்றின் பெயரால் அழைக்காத குதர்க்கமான பழக்கம் பெர்னாண்டாவுக்கு இருந்தது.

அது எல்லாவற்றையும் தலைகீழாக மாற்றியது, 'மகப்பேறு' என்பதை அவள் 'வெளியேற்றுதல்' என்றாள். 'ரத்தப் போக்கை' 'எரிதல்' என்றாள். அப்படிச் சொல்வது குறைவான வெட்கத்தையே ஏற்படுத்தும் என்று நினைத்தாள். அதன் விளைவாக பெர்னாண்டாவின் பிரச்சினை கர்ப்பப்பை சம்பந்தப்பட்டது என்பதைவிடக் குடல் சம்பந்தமானது என்ற நியாயமான முடிவுக்கு உர்சுலா வந்துசேர்ந்தாள். வெறும் வயிற்றில் ஒரு வேளை மூலிகைச் சாற்றைக் குடிக்கும்படி ஆலோசனை சொன்னாள். யாருக்காவது அதே போல வேதனையிருந்து வெட்கக் கேட்டுக்கு வருந்தாமலும் இருப்பார்கள் என்று தெரியும் நிலையிருந் தால், அவளுக்கே அந்த வேதனை இல்லாமல் இருந்தால், இழந்துபோன கடிதங்களுக்காக வருத்தப்படாமல் இருந்தால் அந்த மழைக்காலம் பெர்னாண்டாவை தொந்தரவு செய்திருக்க முடியாது. ஏனெனில் அவளுடைய மொத்த வாழ்க்கையுமே கொட்டிக்கொண்டிருக்கும் மழையில் கழிந்ததுதான். அவள் தனது கால அட்டவணையை மாற்ற வில்லை; சடங்குகளில் மாற்றம் செய்யவில்லை. சடங்குகளில் எந்தக் குறைவும் ஏற்பட இயற்கை இடர்ப்பாடுகள் சாக்காக இருக்கக் கூடாது என்று உணர்ந்தாள். மறுபடியும் செங்கற்களின் மேல் உணவு மேஜை நிமிர்த்தி வைக்கப்பட்டது. உட்கார்பவர்களின் கால்கள் நனைந்து விடாமலிருக்கப் பலகைகள்மேல் நாற்காலிகள் போடப்பட்டன லினன் மேஜை விரிப்புகள் போட்டும் நேர்த்தியான சீனப் பீங்கான் பாத்திரங்களை உபயோகித்தும் மெழுகுவத்திகளை ஏற்றிவைத்தும்தான் அவள் பரிமாறினாள். அதன் பிறகு தெருவில் யாரும் இறங்கவில்லை. ஆட்களின் போக்குவரவு பெர்னாண்டாவைச் சார்ந்து இருந்திருக்கு மானால் ஆள் நடமாட்டமே இருந்திருக்காது. மழை பெய்யத் தொடங்கிய காலத்தில் மட்டுமல்ல அதற்கும் வெகு முன்பே அப்படித்தான் இருந்திருக்கும். ஏனெனில் கதவுகள் கண்டுபிடிக்கப்பட்டதே மூடிவைப் பதற்குத்தான் என்றும் தெருவில் என்ன நடந்துகொண்டிருக்கிறது என்று தெரிந்துகொள்ளும் ஆர்வம் விபச்சாரத்தனமானது என்றும் அவள் எண்ணினாள். இருந்தும் கர்னல் ஜெரினால்டோ மார்க்கேஸின் இறுதி ஊர்வலம் தெருவைக் கடந்து போகிறது என்று சொல்லப்பட்ட போது முதலில் வெளியே எட்டிப் பார்த்ததும் அவள்தான்; பாதி திறந்த ஜன்னல் வழியாகவே அவள் அதைப் பார்த்தாள். அது அவளைத் துயரநிலைக்குக் கொண்டுவிட்டது. அதற்காக நீண்ட காலம் தனது பலவீனமான மனநிலையைப் பற்றிக் கழிவிரக்கப்பட்டாள்.

அதைவிட நிராதரவான ஓர் இறுதி ஊர்வலத்தை அவள் யோசித் திருக்கவே முடியாது. சவப்பெட்டியை எருது பூட்டிய வண்டியில் வைத்தார்கள். அதன்மேல் வாழை இலைகளால் மாடம் கட்டினார்கள். ஆனால் மழையின் வீச்சு வலுவானதாக இருந்தது. தெருக்களில் சேறு நிரம்பியிருந்ததால் ஒவ்வொரு எட்டுக்கும் சக்கரங்கள் சிக்கிக்கொண்டன. சவப்பெட்டியின் மூடி கழன்று விழுந்துவிடும் நிலையில் இருந்தது. சவப்பெட்டியின் மேல் விழுந்த துக்க மழைத்தாரைகள் அதன் மேல் போர்த்தியிருந்த கொடியை நனைத்து ஊறவைத்திருந்தன. உண்மையில் அந்தக் கொடி ரத்தத்தாலும் வெடி மருந்தாலும் கறையேறி இருந்தது. மிகவும் கௌரவமான பிரமுகர்களால் அது ஒதுக்கப்பட்டிருந்தது.

சவப்பெட்டியின் மேல் கர்னல் ஜெரினால்தோ மார்க்கேஸின் வெள்ளி, செம்புக்குமிழ்கள்கொண்ட வாளையும் வைத்திருந்தார்கள். அமரந்தாவின் தையல் அறைக்குள் நிராயுதபாணியாகச் செல்வதற்காகக் கோட்டு வைக்கும் அலமாரியில் அவர் தொங்கவிட்டுப் போகும் அதே வாள். வண்டிக்குப் பின்னால் சிலர் வெறும் காலுடன் சேற்றைத் தெறித்துக் கொண்டு நடந்தார்கள். எல்லாரும் கால்சராயை மேலே சுருட்டிவிட்டிருந்தார்கள். நீர்லாண்டியா சண்டையில் சரணடைந்தவர்களான அவர்கள் ஒரு கையில் மேய்ச்சல் கம்பும் இன்னொரு கையில் காகிதப் பூக்களால் செய்த மலர் வளையத்தையும் வைத்திருந்தார்கள். அந்தப் பூக்கள் மழையில் நனைந்து நிறம் மாறியிருந்தன. கர்னல் அவுரேலியானோ புயேந்திதாவின் பெயரிடப்பட்டிருந்த அந்தத் தெருவில் அவர்கள் மாயக்காட்சியைப் போலத் தோன்றினார்கள். நடந்து போகும்போது அந்த வீட்டையே பார்த்தபடி கடந்து சென்று சதுக்கத்தின் மூலையில் திரும்பினார்கள். அங்கே சேற்றில் சிக்கிக்கொண்ட வண்டியை நகர்த்த உதவி தேடினார்கள். சாந்தா சோபியா தெ லா பியாதாத், உர்சுலாவை வாசல் கதவருகில் தூக்கி வந்தாள். ஊர்வலம் படும் சிரமங்களை அவ்வளவு உன்னிப்பாக அவள் பார்த்துக்கொண்டிருந்ததைப் பார்த்த யாருக்கும் அவள் அதைத்தான் பார்த்துக் கொண்டிருக்கிறாள் என்பதில் சந்தேகம் எழவேயில்லை. குறிப்பாகத் தேவதூதனைப் போல உயர்த்திய அவளுடைய கை வண்டியின் ஆட்டத்துக்குத் தகுந்தாற்போல அசைந்து கொண்டிருந்தது.

"மகனே ஜெரினால்தோ, போய் வா. என்னுடைய மனிதர்களுக்கு வாழ்த்துச் சொல்லு. மழை ஓய்ந்ததும் அவர்களை வந்து பார்ப்பேன் என்று அவர்களிடம் சொல்லு" என்று உரக்கச் சொன்னாள். அவுரேலியானோ செகுந்தோ அவளைத் தூக்கி வந்து மறுபடியும் படுக்கையில் படுக்க உதவினான். எப்போதும் அவளிடம் நடந்துகொள்ளும் அதே இதத்துடன் அவள் சொன்ன விடையளிப்பின் பொருளைக் கேட்டான்.

"அது உண்மைதானே! நான் செத்துப் போவதற்காக மழை நிற்க வேண்டுமென்றுதான் காத்துக்கொண்டிருக்கிறேன்."

தெருக்களின் நிலைமை அவுரேலியானோ செகுந்தோவை கலவரமடையச் செய்தது. தன்னுடைய பிராணிகளின் நிலைமை என்ன ஆகியிருக்குமோ என்று கவலைப்படத் தொடங்கினான். தண்ணீர் ஒட்டாத எண்ணெய்த் துணியைத் தலையில் போர்த்திக்கொண்டு பெத்ரா கொடேஸின் வீட்டுக்குப் போனான். அவள் வீட்டு முற்றத்தில் இடுப்பளவு வெள்ளத்தில் நின்று ஒரு குதிரையின் சடலத்தைத் தள்ளிவிட முயன்று கொண்டிருப்பதைப் பார்த்தான். அவுரேலியானோ செகுந்தோ ஒரு கோலை எடுத்து ஊதிப் பெருத்திருந்த அந்தப் பிரம்மாண்டமான உடலைத் தள்ளிவிடுவதில் அவளுக்கு உதவினான். அந்த உடல் ஒரு மணியைப் போலப் புரண்டு சேற்று நீரோட்டத்தில் இழுத்துச் செல்லப்பட்டது. மழை பெய்யத் தொடங்கிய நாள் முதல் இறந்த விலங்குகளை முற்றத்திலிருந்து அப்புறப்படுத்துவதே பெத்ரோ கொடேஸின் வேலையாக இருந்தது. முதல் வாரங்களில் உடனடியாக

ஏதாவது செய்ய வேண்டும் என்று அவள் அவுரேலியானோ செகுந்தோவுக்குத் தகவல் தெரிவித்தாள். அவசரப்படத் தேவையில்லை; நிலைமை அவ்வளவு அபாயகரமானதல்ல; எதையாவது சுத்தப்படுத்துவது பற்றி யோசிக்க ஏராளமான நேரம் இருக்கிறது என்று அவன் பதில் சொன்னான். குதிரை லாயத்தில் வெள்ளம் புகுந்துவிட்டது என்றும் பசுக்கள் மேடான பகுதிக்குத் தப்பி ஓடுகின்றன என்றும் அங்கே அவற்றுக்குத் தின்ன எதுவும் கிடைக்காது என்றும் சிறுத்தைகளின் கருணையிலும் நோயின் கருணையிலும் அவை இருக்கும் என்றும் அவள் சொல்லி அனுப்பினாள். "ஒன்றும் செய்வதற்கில்லை. வானம் வெளுத்தால் மற்றவை பிறக்கும்" என்று அவளுக்குப் பதில் சொன்னான் அவுரேலியானோ செகுந்தோ. குப்பைக்குழிகளில் விழுந்து அவை இறப்பதைப் பார்த்தாள் பெத்ரா கொடேஸ். சேற்றில் சிக்கிக் கொண்டவற்றைக் கசாப்புச் செய்யத்தான் அவளால் முடிந்தது. அந்தப் பிரளயம் இரக்கமேயில்லாமல் ஓர் அதிருஷ்டத்தைத் துடைத்து அழித்துக் கொண்டிருந்ததை அவள் மலட்டு மௌனத்துடன் பார்த்தாள். ஒருகாலத்தில் மகோந்தாவின் பெரிய, உறுதியான அதிர்ஷ்டமாக இருந்தவற்றில் எதுவும் மிஞ்சவில்லை; கொள்ளை நோயைத் தவிர. என்ன நடந்திருக்கிறது என்று பார்க்கத் தீர்மானித்து அவுரேலியானோ செகுந்தோ போனபோது சிதிலமான லாயத்தில் குதிரையின் சடலத்தையும் நோஞ்சான் தோற்றத்தில் ஒரு கோவேறுக் கழுதையையும்தான் பார்த்தான். பெத்ரோ கோடெஸ் அவன் திரும்பி வந்ததை ஆச்சரியமோ மகிழ்ச்சியோ எதிர்ப்போகூட இல்லாமல்தான் பார்த்தாள். வஞ்சப்புகழ்ச்சி நிரம்பிய புன்னகைதான் அவளுக்கு வந்தது.

"சரியான நேரம்தான்" என்றாள் அவள்.

அவளுக்கு வயதாகியிருந்தது. எலும்பும் தோலுமாக ஆகியிருந்தாள். ஓயாமல் மழையையே பார்த்துக்கொண்டிருந்ததில் ஊனுண்ணி விலங்கின் கண்களைப் போன்ற அவளுடைய இடுங்கிய கண்கள் வேதனை நிரம்பியவையாகவும் கிளர்ச்சியற்றவையாகவும் மாறியிருந்தன. அவுரேலியானோ செகுந்தோ அந்த வீட்டில் மூன்று மாதங்களுக்குமேல் தங்கினான். அவனுடைய குடும்பத்தைவிட இங்கே இருப்பது நல்லது என்று உணர்ந்ததால் அல்ல, எண்ணெய்த் துணியை மறுபடியும் தலையில் போர்த்திக்கொள்ள வேண்டுமா வேண்டாமா என்று தீர்மானிக்க அவ்வளவு சமயம் தேவைப்பட்டதே அவன் அங்கே தங்கக் காரணம். "அவசரமில்லை. சில மணி நேரங்களில் வெளுத்து விடும் என்று நம்புவோம்" என்று அந்த வீட்டில் சொல்வது போலவே இங்கும் சொன்னான். முதல் வாரத்திலேயே காலமும் மழையும் தனது வைப்பாட்டியின் உடல்நலத்தில் ஏற்படுத்தியிருந்த அத்துமீறல்களுக்குப் பழகியிருந்தான். மெல்ல மெல்ல அவளை முன்பிருந்தவளைப் போலப் பார்த்துக் கொண்டிருந்தான். அவளுடைய அபரிமிதமான உற்சாகத்தையும் அவளுடைய அன்பால் தூண்டப்பட்டுப் பிராணிகள் பெற்றுத் தள்ளியதையும் நினைத்துக்கொண்டிருந்தான். இரண்டாவது வாரத்தில் ஓர் இரவு பாதிக் காதலும் பாதி வேட்கையுமாக அவளை அவசரமாகக் கட்டிப்பிடித்து எழுப்பினான். பெத்ரோ கோடெஸ்

எதிர்வினை செய்யவில்லை. "திரும்பிப் போய்த் தூங்கு" என்று முணுமுணுத்தாள். "அது போன்ற காரியங்களுக்குப் பொருத்தமான நேரமல்ல இது" என்றாள். அவுரேலியானோ செகுந்தோ மேற்கூரையில் பதித்திருந்த கண்ணாடியில் தன்னுடையப் பிம்பத்தைப் பார்த்தான். பெத்ரோ கோடேஸின் முதுகெலும்பு தொய்ந்துபோன நரம்புகளால் கோக்கப்பட்ட உருளைகளின் வரிசை போல இருப்பதைப் பார்த்தான். அவள் சொன்னது சரிதான் என்பதையும் காலமல்ல காரணம், இனிமேல் அதற்கெல்லாம் பொருத்தமில்லாத தாங்களேதான் என்பதையும் பார்த்தான்.

அவ்ரேலியானோ செகுந்தோ தனது டிரங்குப் பெட்டிகளுடன் வீடு திரும்பினான். உர்சுலா மட்டுமல்ல; எல்லா மகோந்தாவாசிகளும் மழைவிட்டதும் செத்துப் போவதற்காகக் காத்துக்கொண்டிருந்தார்கள். மழையைப் பற்றி யோசிப்பதைத் தவிர வேறு எதுவும் செய்வதற்கில்லை என்பதைப் புரிந்துகொண்டும் முறிக்க முடியாமல் காலம் கடந்து செல்வதையும் அதை மாதங்களாகவும் வருடங்களாகவும் நாட்களை மணி நேரங்களாகவும் துண்டாடுவது பயனற்றது என்று உணர்ந்து கொண்டும் நிலைத்த பார்வையுடன் கைகளைக் கட்டிக்கொண்டு வீட்டுத் தாழ்வாரங்களில் அவர்கள் உட்கார்ந்திருப்பதைச் செல்லும் வழியில் அவன் பார்த்திருந்தான். தங்களுக்காக மூச்சிறைக்கும் அக்கார்டியனை வாசித்துக்கொண்டிருந்த அவுரேலியானோ செகுந்தோவை குழந்தைகள் பரவசத்துடன் வாழ்த்தினார்கள். ஆனால் அந்த இசைக் கச்சேரிகள் கலைக்களஞ்சிய வேளைகளைப் போல அவர்களை ஈர்க்கவில்லை. மீண்டும் ஒருமுறை அவர்கள் மேமேவின் அறைக்குள் கூடினார்கள். அங்கே அவுரேலியானோ செகுந்தோவின் கற்பனை, புகைக்கூண்டை மேகங்களுக்கு இடையில் தூங்குவதற்கு இடம் தேடிப் பறக்கும் யானையாக மாற்றியது. ஒரு சந்தர்ப்பத்தில் வித்தியாசமான உடையணிந்திருந்தாலும் பழக்கப்பட்ட தோற்றமுடைய குதிரை வீரன் ஒருவனைக் கலைக்களஞ்சியத்தில் பார்க்க நேர்ந்தது. அவனை மிக நெருக்கமாகக் கவனித்த பிறகு அது கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் படம்தான் என்ற முடிவுக்கு வந்தான். அதை பெர்னாண்டாவிடம் காண்பித்தான். அந்தக் குதிரை வீரனின் தோற்றம் கர்னலுக்கு மட்டுமல்ல, குடும்பத்தினர் ஒவ்வொருவருக்குமே பொருந்தும் என்று ஒப்புக்கொண்டாள். அது ஒரு தார்த்தாரிய வீரனின் படம். அவன் மனைவி சமையலறையில் இன்னும் மூன்று பவுண்டு உலர்ந்த மாமிசமும் ஒரு மூட்டை அரிசியும் மட்டுமே மிச்சமாக இருக்கிறது என்று அவனிடம் சொல்லும்வரை காலம் ரோட்ஸின் பேருருவச் சிலையையும் பாம்பாட்டிகளையும் கடந்துபோனது.

"அதற்கு நான் என்ன செய்ய வேண்டும் என்கிறாய்?" என்று கேட்டான்.

"எனக்குத் தெரியாது. அது ஆண் பிள்ளைகளின் வேலை" என்று பதில் சொன்னாள் பெர்னாண்டா.

"சரி. மழை நிற்கட்டும். எதையாவது செய்வோம்" என்றான் அவுரேலியானோ செகுந்தோ.

பகல் உணவுக்குக் கிடைத்த சிறுதுண்டு இறைச்சியுடனும் கொஞ்சம் சோற்றுடனும் அவன் திருப்தியடைய வேண்டியிருந்தபோதும் வீட்டுப் பிரச்சினையைவிடக் கலைக்களஞ்சியத்தை வாசிப்பதைத்தான் மிகவும் விரும்பினான். “இப்போது எதுவும் செய்வதற்கில்லை” என்றான். “நம்முடைய மிச்ச வாழ்நாளில் இனி மழை பெய்யாது” என்றான். சமையலறையின் அவசரத் தேவைகள் அதிகரித்ததோடு பெர்னாண்டா வின் மனக்கொந்தளிப்பும் அதிகமானது. அவளுடைய எதிர்ப்பும் கோபக் கூச்சலும் இடைவிடாமல் தொடர்ந்தன. ஒரு காலைப்பொழுதில் கித்தாரின் ஒற்றை மீட்டலாகத் தொடங்கிய கொந்தளிப்பு அடக்கி வைக்கவோ தடுக்கவோ முடியாத நீரோட்டமாகப் பெருகிப் பொழுது ஏற ஏற உச்ச ஸ்தாயியில் அதிகரித்து உச்சக்கட்டப் பேரொலியாக மாறியது. மறுநாள் காலையுணவுக்குப் பிறகு மழையின் சத்தத்தைவிட மிகத் தெளிவாகவும் உரக்கவும் ஒலித்த ரீங்காரம் தன்னைத் தொந்தரவு செய்வதாக உணரும்வரை அவுரேலியானோ செகுந்தோவுக்கு அந்தத் தொணதொணப்பைப் பற்றித் தெரிந்திருக்கவில்லை. பெர்னாண்டா அரசியாக வளர்க்கப்பட்ட தான் ஒரு பைத்தியக்கார வீட்டில் சோம்பேறியும் புத்திமருட்சி கொண்டவனும் காமவெறியனுமான கணவனுக்கு வேலைக்காரியாக வந்து சேர்ந்திருப்பதைப் பற்றிப் புகார் சொன்னபடியே வீட்டுக்குள்ளே நடந்துகொண்டிருந்தாள். அந்த வீட்டை முன்னே நடத்திச் செல்வதற்காகக் கவலையுடன் சிறுநீரகங்கள் வலிக்க அவள் முயன்று கொண்டிருக்கும்போது அந்தக் கணவன் ஆகாயத்திலிருந்து ரொட்டிகள் மழையாகப் பொழியும் என்று மல்லாந்து படுத்துக்கொண்டிருக்கிறான். கடவுள் அவருடைய காலை வெளிச்சத்தைக் கொடுத்தது முதல் பொடிக்கப்பட்ட கண்ணாடித்துண்டு கண்முன் இருப்பது போல ஒரு நொடி மூட முடியாமல் படுக்கைக்குப் போகும் வரைக்கும் அவள் எவ்வளவோ செய்கிறாள். ஆனால் அவளைப் பார்த்து “காலை வணக்கம் பெர்னாண்டா, நன்றாகத் தூங்கினாயா?” என்று கேட்க ஒருவர்கூட இல்லை. மரியாதைக்காகவாவது அவள் ஏன் அவ்வளவு சோகை பிடித்துப் போனாள் என்றோ அவள் ஏன் கலங்கிய கண்ணுடன் எழுகிறாள் என்றோ யாரும் கேட்டதில்லை. அந்தக் குடும்பம் எப்போதுமே அவளை ஒரு தொல்லை என்றும் பழைய கந்தை என்றும் சுவரில் வரையப்பட்ட கிறுக்குச் சித்திரம் என்றும் நினைத்திருந்தாலும் தன்னை அவர்கள் அப்படிக் கேட்க வேண்டும் என்று எதிர்பார்த்தாள். குடும்பத்தவர்கள் முதுகுக்குப் பின்னால் அவளைத் தேவாலயத்துச் சுண்டெலி என்றும் பாசாங்குக்காரி என்றும் வஞ்சகி என்றும் சொல்லித் திரிந்தார்கள். அமரந்தாகூட, அவள் ஆத்மா சாந்தியடையட்டும், அவளை அமுக்குப் பேர்வழிகளில் ஒருத்தி என்று உரக்கச் சொல்லியிருந்தாள். கடவுள் கருணை காட்டுவாராக. அதுபோன்ற வார்த்தைகளையும் மற்ற அவமானங்களையும் அவள் அடக்கத்துடன் பரிசுத்த பிதாவானவருக்காகப் பொறுத்துக்கொண்டாள். ஆனால் அந்தச் சைத்தான் ஹோசே அர்க்காதியோ செகுந்தியா ஒரு காட்டுமிராண்டிப் பெண்ணுக்கு, அடக்கியாளும் பெண்ணைக் கற்பனை செய்து கொள்ளுங்கள், கதவைத் திறந்துவிட்டதிலிருந்துதான் குடும்பம் நரகமானது என்றான். கடவுளே எங்களைக் காப்பாற்றும்,

தொழிலாளர்களைக் கொன்று குவிப்பதற்காக அரசாங்கம் அனுப்பிய காட்டுமிராண்டிகளின் இனத்தைச் சேர்ந்த காட்டுமிராண்டிப் பிசாசு என்று அவன் சொன்னது வேறு யாரையுமல்ல; அவளைத்தான். அல்பா கோமகனின் தங்கக் குழந்தையை, ஜனாதிபதிகளின் மனைவியர்களுடைய மரபு வழி வந்த பெரும் குடும்பத்தின் அங்கமான ஒருத்தியை, உன்னத ரத்தம் ஓடும் சீமாட்டியை, பதினோரு தீபகற்பங் களின் பெயர்களை எழுதிக் கொடுக்கும் உரிமையுள்ள ஒருத்தியை, பதினாறு பகுதிகள் கொண்ட வெள்ளிக் கரண்டியையும் முள்ளையும் பார்த்தால் விளங்காமல் குழம்பும் வேசி மகன்கள் நிரம்பிய அந்த நகரத்தின் ஒரே சிரஞ்சீவியைத்தான் அவன் அப்படிச் சொன்னான். அவளுடைய காமப் பித்தனான கணவன்கூட அத்தனைக் கத்திகளும் முள்கரண்டிகளும் மனிதப் பிறவிகளுக்கானதல்ல. மரவட்டைகளுக் கானது என்று சொல்லிச் சிரித்தான். அவள் ஒன்றும் அமரந்தாவைப் போல, அவள் ஆத்மா சாந்தியடைவதாக, பாமரப் பெண் அல்ல. கண்ணை மூடிக்கொண்டே வெண்ணிற ஒயின் எந்தக் கோப்பையி லிருக்கிறது என்றும் சிவப்பு நிற ஒயின் எந்தக் கோப்பையில் இருக்கிறது என்றும் வெண்ணிற ஒயினை எந்தக் கோப்பையில் எப்போது மேஜையின் எந்தப் பக்கத்தில் பரிமாற வேண்டும் என்றும் சிவப்பு நிற ஒயினை எந்தக் கோப்பையில் எப்போது மேஜையின் எந்தப் பக்கத்தில் பரிமாற வேண்டும் என்றும் வெண்ணிற ஒயினைப் பகலிலும் சிவப்பு நிற ஒயினை இரவிலுமே பரிமாற வேண்டும் என்றும் சொல்லக் கூடியவள் அவள் ஒருத்தி மட்டுமே. தவிர அந்தப் பகுதியிலேயே தங்கத்தில் செய்த கழிவுப்பானையில் தன்னுடைய தினசரி உபாதை களைத் தீர்த்துக்கொள்பவள் என்ற பெருமை யாருக்கு இருக்கிறது? இருந்தும்கூட கர்னல் அர்க்காதியோ புயேந்தியா, அவர் ஆத்மா சாந்தியடைவதாக, தங்கப் பானையில் பேள யார் அவளுக்கு உரிமை கொடுத்தது என்றும் அவள் கழிப்பது வெறும் மலமா, மலம் என்ற பெயரில் துளசிச் சக்கையா என்றும் தனது நல்லொழுக்க ஏளனத்துடன் கேட்கவில்லையா? அந்த வார்த்தைகளை யோசித்துப் பாருங்கள். அது போகட்டும். அவளுடைய சொந்த மகள் ரெனேட்டாகூட, படுக்கையறையில் கவனக்குறைவாக வைத்துவிட்ட அவளுடைய கழிவுப் பானையைப் பார்த்துக் குடும்ப இலச்சினை பதித்தத் தங்கப்பானையாக இருந்தாலும் உள்ளே இருப்பது பீ, வெறும் பீதான் என்று சொல்ல வில்லையா? அதைவிட மோசம் வீட்டிலிருக்கும் மற்றவர்களின் மலத்தை விடக் காட்டுமிராண்டித்தனமாக அது நாறுகிறது என்று சொந்த மகளே சொன்ன பிறகு குடும்பத்திலிருக்கும் மற்றவர்கள் சொல்லக் கூடியவை பற்றிய கற்பனைகளை விட்டுவிட்டாள். எப்படிப் பார்த்தாலும் கணவனிடமிருந்தாவது தனக்குச் சற்று அதிக முக்கியத்துவம் கிடைக்கு மென்று எதிர்பார்க்கும் உரிமை அவளுக்கு இருந்தது. ஏனெனில் நல்லதற்கோ கெட்டதற்கோ அவன்தான் அவளுக்கு ஒப்புவிக்கப்பட்ட வாழ்க்கைத் துணைவன். அவளுடைய சகாயன். அவளைச் சட்டபூர்வ மாகக் கிழித்தெடுத்தவன். எதற்கும் ஏங்கவோ வருந்தவோ அனுமதிக்காத அவளுடைய பிறந்த வீட்டிலிருந்துத் தனது சொந்த விருப்பத்தின் பேரிலும் வலிமையின் பேரிலும் அவளைத் தூக்கிவரும் பெரும் பொறுப்பைத்

தானாகவே ஏற்றுக்கொண்டவன். பிறந்த வீட்டில் அவள் பொழுது போக்காக இறுதிச் சடங்குகளுக்கான மலர் வளையங்களைத் தயாரித்து வந்தாள். அவளுடைய ஞானத் தந்தை தன்னுடைய ஞானப் புதல்வியின் கைகள் இசை தரும் கருவியை முடுக்குவதைத் தவிர மற்ற உலகியல் வேலைகளைச் செய்வதற்காகப் படைக்கப்பட்டவை அல்லவென்று ஒப்பமிட்டுத் தனது மோதிரத்தால் அரக்கு முத்திரையும் பதித்து ஒரு கடிதம் எழுதியிருந்தார். அப்படியிருந்தபோதும், அவளுடைய பைத்தியக்காரக் கணவன் சகல நல்லுரைகளையும் எச்சரிக்கைகளையும் கேட்டிருந்துவிட்டு, வெப்பத்தால் மூச்சு முட்டும் அந்த நரக வாணலியில் அவளைத் தள்ளியிருந்தான். அவள் தன்னுடைய ஈஸ்டருக்குப் பிந்தைய நோன்பை முடித்துக்கொள்வதற்கு முன்பே அவன் தன்னுடைய டிரங்குப் பெட்டிகளையும் பழுதடைந்த அக்கார்டியனையும் தூக்கிக்கொண்டு ஒரு கழிசடையுடன் விபச்சாரத்தில் காலத்தைக் கழிப்பதற்காகப் போனான். அந்தக் கழிசடை, பெட்டைக் குதிரை போலப் பின்பக்கத்தைக் குலுக்கிக்கொண்டு போவதை முதுகுப் பக்கமாகப் பார்த்ததே எப்படிப் பட்டவள் என்று யூகிக்கப் போதுமானதாக இருந்தது. அவள் ஒரு . . . அவள் ஒரு . . . தானோ, பன்றித் தொழுவத்தில் கிடக்கும் அவளுக்கு நேர் மாறானவள். அரண்மனையில் இருந்தவள். உணவு மேஜையிலும் படுக்கையிலும் பிள்ளைப்பேற்றிலும் கடவுளுக்குப் பயந்து நடப்பவள்; அவருடைய கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்தவள். அவருடைய விருப்பத் துக்கு ஆட்பட்டவள். இயற்கையாகவே அந்த மற்றொருத்தியிடம் ஈடுபடுவதுபோலக் கழைக் கூத்துகளையோ நாடோடிக் கோணங்கித் தனங்களையோ தன்னிடம் செய்ய முடியாது. பிரெஞ்சுக் கன்னியா ஸ்த்ரீகள்போல எதுவும் தன்னிடம் செய்யலாம். சந்தேகமில்லை. யோசித்துப் பாருங்கள், அதுபோன்ற பன்றித்தனத்திலும் அந்தக் கழிசடைப் பெண்களுக்கு வீட்டுக்கு முன்னால் சிவப்பு விளக்கைப் பொருத்தி வைக்கும் நேர்மை இருந்தது. டோனா ரெனேடா அர்கோட் – டான் பெர்னாண்டா தெல் கார்பியோ தம்பதியரின் ஒரே செல்ல மகளான அவள் எதிர்பார்த்ததும் அந்த நேர்மையைத்தான். ஏனெனில் டான் பெர்னாண்டா தெல் கார்பியோ நேர்மையானவர்; உத்தமமான கிறித்துவர்; இடுகுழியில் கிடக்கும்போதும் தங்கள் சருமம் மணப் பெண்ணின் கன்னம் போல மென்மையாகவே இருக்கவும் கண்கள் மரகதக் கற்களைப் போலத் தெளிவாகவும் உயிர்ப்புடனும் இருக்கவும் கடவுளிடமே நேரில் வரம் வாங்கிய புனிதக் கல்லறைக் காவல் வீரர்களின் மரபில் வந்தவர்.

“அது உண்மையல்ல; இங்கே கொண்டு வரும்போதே செத்து நாறத் தொடங்கியிருந்தார்” என்று அவுரேலியானோ செகுந்தோ அவள் பேச்சில் குறுக்கிட்டான்.

அவள் இப்படி வாய் தவறிப் பேசாமலிருந்தால் நாள் முழுக்க அவன் பேச்சைப் பொறுமையுடன் கேட்டிருந்திருப்பான். பெர்னாண்டா அவனைப் பொருட்படுத்தவில்லை. ஆனால் குரலைத் தாழ்த்திக் கொண்டாள். அன்றைய இரவுணவு வேளையில் அந்தத் தொண தொணப்பு முனகல், மழையின் சத்தத்தையே தோற்கடித்தது.

அவுரேலியானோ செகுந்தோ தலையைக் குனிந்துகொண்டு கொஞ்சமாகச் சாப்பிட்டான். சீக்கிரமாகவே தனது அறைக்குப் போனான். மறுநாள் காலையுணவு வேளையில் பெர்னாண்டா, தூக்கமிழந்த தோற்றத்தில் நடுங்கிக்கொண்டிருந்தாள். அதீத வெறுப்பால் முற்றிலும் களைப்படைந்து காணப்பட்டாள். அப்படியிருந்தும் கணவன் அரை வேக்காடான முட்டை கிடைக்குமா என்று கேட்டபோது அவள் பேசாமலிருந்தாள். ஒரு வாரத்துக்கு முன்பே கையிருப்பு முட்டைகள் தீர்ந்துபோயிருந்தன. ஆனால் தங்களுடைய தொப்புளை மட்டுமே கவனித்துக்கொண்டு பொழுதைப் போக்கிவிட்டு உணவு மேஜையில் வந்து உட்கார்ந்ததும் வானம்பாடியின் ஈரல் வேண்டும் என்று கேட்கும் ஆண்களுக்கு எதிரான வன்மையான வசைமாரியைத் தொடங்கினாள். அவுரேலியானோ செகுந்தோ வழக்கம் போலக் குழந்தைகளைக் கலைக் களஞ்சியம் பார்க்கக் கொண்டுபோனான். பெர்னாண்டா தன்னுடைய முணுமுணுப்பை அவன் கேட்க வேண்டுமென்பதற்காகவே மேமேவின் அறைக்குள் நுழைந்தாள். கலைக்களஞ்சியத்தில் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் படம் இருப்பதைப் பற்றி அப்பாவிக் குழந்தைகளிடம் சொல்லிக் கொண்டிருந்தவன் முகத்தைத் திருப்பிக்கொண்டான். பிற்பகலில் குழந்தைகள் தூங்கிக்கொண்டிருந்தபோது அவுரேலியானோ செகுந்தோ முற்றத்தில் உட்கார்ந்திருந்தான். பெர்னாண்டா அங்கேயும் அவனைத் தொடர்ந்துவந்து உசுப்பிவிட்டாள். சித்திரவதை செய்தாள். மாற்ற முடியாத தன்னுடைய குதிரைஈ தொணதொணப்பை அவனைச் சுற்றித் திரியவிட்டாள். வீட்டில் தின்பதற்குக் கல்லைத் தவிர வேறு ஒன்றுமில்லாதபோது அவள் கணவன் பாரசீகத்துச் சுல்தானைப் போல உட்கார்ந்து மழையைப் பார்த்துக்கொண்டிருக்கிறான். ஏனெனில் அவன் ஒரு கோழை. வெறும் கடல் பஞ்சு. எதற்கும் பயனில்லாதவன். பஞ்சுப் பொதி. பெண்களின் தயவில் வாழ்பவன். அவன் தனக்குப் பதிலாகத் திமிங்கிலக் கதையிலேயே திருப்தி அடையும் ஜோனாவின் மனைவியை மணந்துகொண்டிருக்க வேண்டும் என்று சீண்டிவிட்டாள். அவுரேலியானோ செகுந்தோ செவிடனைப் போல இரண்டு மணி நேரத்துக்கும் மேல் அமைதியாக உட்கார்ந்திருந்தான். பிற்பகல் முடியும்வரை அவள் பேச்சில் குறுக்கிடாமல் உட்கார்ந் திருந்தான். மண்டைக்குள் வதைத்துக்கொண்டிருந்த பெரும் முரசின் எதிரொலியை அவனால் பொறுக்க முடியவில்லை.

"தயவுசெய்து வாயை மூடு" என்று கெஞ்சினான் அவன்.

மாறாக பெர்னாண்டா தனது குரலை உயர்த்தினாள். "நான் எதற்காக வாயை மூட வேண்டும்? நான் பேசுவதைக் கேட்க விரும்பாதவர்கள் வேறு எங்காவது போக வேண்டியதுதானே?" அவுரேலியானோ செகுந்தோ பொறுமையிழந்தான். உடம்பை நெட்டி முறித்துக்கொள்ளப் போகிறவன்போல அவசரப்படாமல் எழுந்து நின்றான். முழுமையாகக் கட்டுப்படுத்திய முறையான ஆக்ரோஷத்துடன் பிகோனியா, பெரணி, கற்பூரவல்லிச் செடிகள் இருந்த சட்டிகளை ஒவ்வொன்றாக எடுத்துத் தரையில் போட்டு உடைத்தான். பெர்னாண்டா பயந்துவிட்டாள். அதுவரைக்கும் தன்னுடைய தொணதொணப்புக்கு இவ்வளவு வலு

இருக்கும் என்று தெரியாமலிருந்தது. ஆனால் அதற்குள் தவறைத் திருத்திக்கொள்ளும் எந்த முயற்சிக்குமான காலம் கடந்துவிட்டிருந்தது. ஆசுவாசத்தின் அடக்கிவைக்க முடியாத பெருக்கால் வெறியூட்டப் பட்டிருந்த அவுரேலியானோ செகுந்தோ சீனக் கழிப்பறையிலிருந்த கண்ணாடியைச் சில்லுச்சில்லாக நொறுக்கினான். அவசரமில்லாமல் பீங்கான் பாத்திரங்களை எடுத்துத் தரையில் சிதறடித்தான். ஒழுங்காகவும் நிதானமாகவும் பொருட்களை வீட்டில் நிரப்பிய அதே கச்சிதத்துடனும் பொஹீமியப் பளிங்குப் பாத்திரங்களைச் சுவர்களில் எறிந்தான். பூக்கள் ஏற்றிய படகுகளில் கன்னிப் பெண்கள் அமர்ந்திருக்கும் படங்களையும் முலாம் பூசிய சட்டங்கள் போட்ட கண்ணாடிகளையும் 'வரவேற்பறையிலிருந்து சமையல் அறைவரைக்கும் என்னென்ன நொறுங்கக்கூடிய பொருட்கள் இருக்குமோ, அவை எல்லாவற்றையும் அடித்து நொறுக்கினான். தாழ்வாரத்தில் வைக்கப்பட்டிருந்த பெரிய மண்பானையை வெற்றொலியுடன் உடைத்து முடித்தான் பிறகு கைகளைக் கழுவிக்கொண்டான்.

எண்ணெய்த் துணியைப் போர்த்திக்கொண்டு வெளியேறினான். நள்ளிரவில் கொஞ்சம் உலர்ந்த இறைச்சியுடனும் சில அரிசி மூட்டை களுடனும் ஈசல்கள் கலந்த சோளத்துடனும் சூம்பிய வாழைக் குலைகளுடனும் திரும்பி வந்தான். அதன் பிறகு அங்கே உணவுக்குத் தட்டுப்பாடு இருக்கவில்லை. அமரந்தா உர்சுலாவும் குட்டி அவுரேலியானோவும் மழைக்காலத்தை மகிழ்ச்சியான காலமாகவே நினைவு வைத்துக்கொண்டார்கள். பெர்னாண்டாவின் கட்டுப்பாட்டை யும் மீறி அவர்கள் முற்றத்தில் தேங்கியிருந்த குட்டைகளில் தண்ணீரைத் தெறித்து விளையாடினார்கள். பல்லிகளைப் பிடித்துக் கூறுபோட் டார்கள். சூப்பில் விஷம் கலக்கும் பாவனையில் பட்டுப்பூச்சிகளின் சிறகுகளிலிருந்த புழுதியைச் சுண்டினார்கள். சாந்தா சோபியா தெ லா பியாதத் பார்க்காதபோது உர்சுலாதான் அவர்களுடைய பிரியமான விளையாட்டுப் பொம்மையாக இருந்தாள். உடைந்துபோன பெரிய பொம்மையாக அவள் அவர்களுக்குத் தோன்றினாள். அவள் முகத்தில் புகைக்கரியையும் மஞ்சள் சாயத்தையும் தீற்றி ஒரு வண்ணத் துணியையும் சுற்றிவிட்டு மூலைக்கு மூலை இழுத்துக்கொண்டு முன்னும் பின்னுமாக நடந்தார்கள். உர்சுலாவின் மனத் தடுமாற்றத்தைப் போல அவர்களைக் குதூகலப்படுத்திய வேறு எதுவும் இருக்கவில்லை. அவளுடைய மனத்துக்குள் நிச்சயம் என்னவோ நிகழ்ந்திருக்க வேண்டும். மழை பெய்யத் தொடங்கிய மூன்றாவது வருடம் அவள் படிப்படியாக எதார்த்த உணர்வை இழந்துகொண்டிருந்தாள். நிகழ்காலத்துடன் தனது வாழ்க்கையின் தொலைதூர இறந்த காலத்தைப் போட்டுக் குழப்பிக்கொண்டாள். ஒருசமயம், நூற்றாண்டுக்கு முன்பே அடக்கம் செய்யப்பட்டுவிட்ட அவளுடைய பூட்டியான பெத்ரோனிலா இகுவரானின் சாவுக்காக மூன்று நாட்கள் ஓயாமல் அழுதாள். அவள் குழப்பத்தின் பித்து நிலைக்குள் மூழ்கியிருந்தாள். அதனால் குட்டி அவுரேலியானோவைப் பனிக்கட்டியைப் பார்க்க அழைத்துச் செல்லப்பட்ட தனது மகன் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா என்று நம்பினாள். பிற்காலத்தில் நாடோடிகளுடன் ஓடிப்போன

முதல் மகன் ஹோசே அர்க்காதியோ அந்தச் சமயத்தில் மடத்தில் இருந்தான். குடும்பத்தைப் பற்றி நிறையச் சொல்லிக்கொண்டிருந்தாள். கேட்டுக்கொண்டிருந்த குழந்தைகள் நீண்ட காலத்துக்கு முன்பே இறந்தவர்களும் வெவ்வேறு காலங்களில் வாழ்ந்தவர்களுமான அந்த ஜீவன்களுடன் கற்பனைச் சந்திப்புகள் நடத்தக் கற்றுக்கொண்டார்கள். சாம்பல் படர்ந்த கூந்தலுடனும் சிவப்புத் துணியால் முக்காடிட்ட முகத்துடனும் உர்சுலா படுக்கையில் உட்கார்ந்து எல்லாம் தங்களுக்கு ஏற்கனவே தெரிந்திருக்கும் தோரணையில் சகல விவரங்களுடனும் குழந்தைகள் வர்ணித்த மாய உறவினர்களின் மத்தியில் இருப்பதில் மகிழ்ச்சியடைந்தாள். உர்சுலா தான் பிறப்பதற்கு முன்னால் நடந்த சம்பவங்களைப் பற்றித் தனது மூதாதையர்களிடம் பேசிக்கொண்டிருந்தாள். அவர்கள் சொல்லும் விவரங்களைக் கேட்டு மகிழ்ந்தாள். அந்த விருந்தாளிகளின் காலத்துக்கும் முன்பே நிகழ்ந்த மரணங்களைப் பற்றிக் கேட்டு அவர்களுடன் சேர்ந்து அழுதாள். அதுபோன்ற ஆவிகளின் வருகைகளில் மழை நிற்கும்வரைக்கும் வீட்டில் வைப்பதற்காக புனித ஜூசையப்பரின் ஆளுயரக் களிமண் சிலையைக் கொண்டு வரும்படி உர்சுலா எப்போதும் கேட்டுக்கொண்டிருந்ததைக் கவனிக்கக் குழந்தைகளுக்கு அதிக நாட்கள் பிடிக்கவில்லை. அப்படியாகத்தான் அவுரேலியானோ செகுந்தோ, உர்சுலாவுக்கு மட்டுமே தெரிந்த ஓரிடத்தில் அதிர்ஷ்டம் புதைத்து வைக்கப்பட்டிருந்ததைத் தெரிந்துகொண்டான். ஆனால் அவனுக்குத் தோன்றிய கேள்விகளும் தந்திரமான பசப்பல்களும் பயனளிப்பவையாக இல்லை. ஏனெனில் பைத்தியத்தின் சுழல் வழியிலும் ரகசியத்தை வெளிப்படுத்தாமல் வைத்துக்கொள்வதற்கானத் தெளிவை அவள் காப்பாற்றிவைத்திருந்தாள் என்று பட்டது. புதைக்கப் பட்ட தங்கத்தின் சரியான உரிமையாளனிடம் மட்டுமே ரகசியத்தை வெளிப்படுத்துவாள் என்றும் தெரிந்தது. அவுரேலியானோ செகுந்தோ தனது குடிகார சகாக்களில் ஒருவனை அந்தப் புதையலுக்குச் சொந்தக் காரன் என்று சொல்லும்படி பயிற்சி கொடுத்து அவளிடம் அனுப்பினான். வெளிக்குத் தெரியாத பொறிகள் வைத்த நுட்பமான விசாரணையில் அவனை மாட்டிவிடும் சாமர்த்தியமும் கறாரும் அவளிடம் இருந்தன.

அந்த ரகசியத்தை உர்சுலா தன்னுடைய கல்லறைக்கும் கொண்டு போய்விடுவாள் என்று நம்பிய அவுரேலியானோ செகுந்தோ தாழ்வாரத்திலும் பின்கட்டிலும் கழிவுநீர் வாய்க்கால் வெட்டும் சாக்கில் குழி வெட்டுபவர்களின் குழு ஒன்றை அமர்த்தினான். அவனும் இரும்புக் கடப்பாரையாலும் எல்லா வகையான உலோகக் கண்டுபிடிப்பான்களையும் பயன்படுத்தி மூன்று மாத காலம் விரிவாகத் தங்கம் போல ஏதாவது தட்டுப்படுகிறதா என்று பூமியைத் தோண்டி எதுவும் கிடைக்காமல் ஆராய்ந்தான். குழிவெட்டுபவர்களைவிட பிலர் தெர்னேராவின் சீட்டுகளால் பயனிருக்கும் என்று அவளிடம் போனான். உர்சுலாவாகச் சீட்டை எடுத்துத் தராமல் என்ன முயன்றாலும் பயனிருக்காது என்று விளக்கினாள். இன்னொரு பக்கம், ஏழாயிரத்து இருநூறு தங்க நாணயங்கள் செம்புக் கம்பிபோட்டு முறுக்கிய மூன்று கித்தான் மூட்டைகளிலாக, உர்சுலாவின் படுக்கையை மையமாகக் கொண்ட

முந்நூற்று எண்பத்தெட்டு அடி விட்டமுள்ள வட்டத்துக்குள் புதைத்து வைக்கப்பட்டிருப்பதையும் துல்லியமாக உறுதிப்படுத்தினாள். மழை நின்று தொடர்ச்சியாக மூன்று ஜூன் மாதங்கள் வெயில் அடித்துச் சேற்றுத் திட்டுகள் புழுதியாக மாறும்வரை அது தெரியாது என்று எச்சரிக்கவும் செய்தாள். தாராளமாதும் கவனமானதுமான இந்தத் தகவல் குழப்பம் அவுரேலியானோ செகுந்தோவுக்கு இன்னொரு கதைக்கு நெருக்கமானதாகத் தோன்றியது. தன்னுடைய முயற்சியில் ஆன்மீகவாதிகளின் கதைகளையும் சேர்த்து வைத்திருந்தான். அவர்கள் இப்போது ஆகஸ்ட் மாதத்தில் இருக்கிறார்கள்; ஆரூடம் பலிக்க வேண்டுமானால் குறைந்தது மூன்று ஆண்டுகள் காத்திருக்க வேண்டும் என்று தெரிந்தும் அப்படி முயற்சித்திருந்தான். அவனுடைய குழப்பத்தை அதிகரிக்கச்செய்த அதே சமயம் திடுக்கிடவும் செய்த முதல் விஷயம் உர்சுலாவின் படுக்கையறைச் சுவரிலிருந்து சரியாக முந்நூற்று எண்பத் தெட்டு அடி என்று துல்லியமாகச் சொல்லப்பட்ட தகவல். அவன் பூமியை அளந்து கொண்டிருந்ததையும் அதைவிடவும் அதிகமாகக் குழிவெட்டுபவர்களிடம் கால்வாயை மூன்று அடி ஆழத்தில் தோண்டும் படிச் சொன்னதையும் பார்த்துக்கொண்டிருந்த பெர்னாண்டா, அவனுடைய இரட்டைச் சகோதரனைப் போலவே அவனுக்கும் கிறுக்குப் பிடித்திருக்குமோ என்று பயந்தாள். கண்டுபிடிப்புகளின் வழியைத் தேடிக்கொண்டிருந்த அவனுடைய கொள்ளுப் பாட்டனுக்கு இருந்தது போன்ற மூளைக் குழப்பத்தால் ஆட்கொள்ளப்பட்டிருந்த அவுரேலியானோ செகுந்தோ தன்னுடைய சதையின் கடைசி மடிப்பு களையும் இழந்து அவனுடைய இரட்டைச் சகோதரனைப் போன்ற பழைய தோற்றத்தை மறுபடியும் அடைந்தான். மெலிந்த தோற்றத்தால் மட்டுமல்ல; வெறித்த பார்வையாலும் உள்ளொடுங்கிய இயல்பாலும்கூட. அதற்குமேல் அவன் குழந்தைகளைப் பற்றிக் கவலைப்படவில்லை. அகால வேளைகளில் உணவருந்தினான். தலையிலிருந்து கால் நகம்வரை சேறு அப்பியிருந்ததால் சமையலறையின் ஒரு மூலையில் உட்கார்ந்து உணவருந்தினான். சாந்தா சோபியா தெ லா பியாதெத் அபூர்வமாகக் கேட்ட கேள்விகளுக்கு அரைகுறையாகப் பதில் சொன்னான். அவன் அப்படி வேலைசெய்வதைப் பார்த்து, அவன் அப்படியெல்லாம் பணியெடுக்கக் கூடியவன் என்று ஒருபோதும் நினைத்திராத பெர்னாண்டா அவனுடைய பிடிவாதத்தைக் கடும் உழைப்பு என்றும் பேராசையை மறுதலிப்பு என்றும் முட்டாள்தனத்தை விடாமுயற்சி என்றும் நினைத்துக்கொண்டாள். அவனுடைய சோம்பலை ஆக்ரோஷ மாகத் தாக்கிய தன்னுடைய தீய குணத்தைப் பற்றிய ஆழ்ந்த வருத்தத் தால் அவளுடைய உள் மனம் இறுகியது. ஆனால் கருணை நிரம்பிய சமரசத்துக்கான மனநிலையில் அவுரேலியானோ செகுந்தோ இருக்கவில்லை. உபயோகமில்லாத வீட்டுப் பொருட்களும் அழுகிய பூக்களும் நிறைந்த சகதிக்குள் கழுத்தளவு மூழ்கியிருந்தான். முற்றத்தை யும் பின்கட்டையும் சுத்தமாக்கிய பின்னர் தோட்டத்துக் குப்பைகளை வீசியெறிந்தான். ஒருநாள் இரவு வீட்டின் கிழக்குப் பக்கத்து அஸ்திவாரத்துக்குக் கீழே ஆழமாகத் தோண்டினான். உள்ளே தூங்கிக் கொண்டிருந்தவர்கள் நிலநடுக்கம் ஏற்பட்டது போல அதிர்ந்து

விழித்துக்கொண்டார்கள். நிலத்தடி விரிசல் அந்த அளவு அச்சமூட்டு வதாக இருந்தது. மூன்று அறைகள் இடிந்துகொண்டிருந்தன. சுற்றுக் கட்டுத் தாழ்வாரத்திலிருந்து பெர்னாண்டாவின் அறைவரைக்குமாக அச்சுறுத்தும் விரிசலொன்று திறந்துகொண்டது. அதனாலெல்லாம் அவுரேலியானோ செகுந்தோ தன்னுடைய தேடலைக் கைவிட்டு விடவில்லை. அவனுடைய கடைசி நம்பிக்கைகள் வறண்டு போயின. சீட்டுகளின் ஆருடம் மட்டுமே பொருட்படுத்தக்கூடிய ஒன்றாகத் தெரிந்தது. கரடு முரடாகியிருந்த அடிக்கட்டைப் பலப்படுத்தினான். விரிசலைச் சாந்து பூசிச் செப்பனிட்டான். மேற்குப் பக்கமாகத் தோண்டத் தொடங்கினான். அவன் இரண்டாவது வாரமாகத் தொடர்ந்து தோண்டிக்கொண்டிருந்தான். அடுத்து வந்த ஜூன் மாதத்தில் மழை ஓய்த் தொடங்கியது. மேகங்கள் மேல்நோக்கிப் புரளத் தொடங்கின. ஒரு நொடிக்கும் அடுத்த நொடிக்கும் இடையில் வானம் தெளிவடைந்து கொண்டிருப்பது தெரிந்தது. அப்படித்தான் அது நிகழ்ந்தது. வெள்ளிக் கிழமை பிற்பகல் இரண்டு மணிக்குச் செங்கற்புழுதி போன்ற அடர்த்தியும் தண்ணீரைப் போலக் குளிர்ச்சியும் கொண்ட கிறுக்குத் தனமான சூரிய வெளிச்சத்தில் உலகம் மின்னியது. அதற்குப் பின்னர் பத்தாண்டுகள் மழை பெய்யவே இல்லை.

மகோந்தா அழிந்து போயிருந்தது. சதுப்பான தெருக்களில் அறைக் கலன்களின் மிச்சங்களும் சிவப்பு லில்லிப் பூக்களால் மூடப்பட்ட விலங்குகளின் எலும்புக்கூடுகளும் இருந்தன. எவ்வளவு மூர்க்கமாக வந்தார்களோ அதே மூர்க்கத்துடன் மகோந்தாவை விட்டு வெளியேறிய புதிய நாடோடிகளின் கடைசி நினைவுகளில் அவைதாம் இருந்தன. வாழைக் காய்ச்சல் பரவிய காலத்தில் அத்தனை அவசரமாகக் கட்டப் பட்ட வீடுகள் கைவிடப்பட்டன. வாழைப்பழக் குழுமம் அதன் கட்டுமானங்களை அகற்றிக்கொண்டது. வேலியிட்டு வரிசைப்படுத்தப் பட்டிருந்த அந்த முன்னாள் நகரத்தில் எஞ்சியவை இடிபாடுகள் மட்டுமே. மரவீடுகளும் பிற்பகல் நேரங்களில் காற்றாட அமர்ந்து சீட்டாட அமைத்த உப்பரிகைகளும் பின்னர் பூமியிலிருந்தே மகோந்தா அழித்து நீக்கப்படுவதற்கான முன்னறிவிப்புக் காற்றில் வீசியெறியப் பட்டிருந்தன. தீரா வேட்கை கொண்ட அந்தக் கொடுங்காற்றில் மனித அடையாளத்துடன் மிஞ்சி இருந்தது பட்ரீஷியா பிரவுனின் கையுறை மட்டும்தான். சேற்றில் புதையுண்டிருந்த ஒரு காருக்குள் அது கிடந்தது. உருவாக்கக் காலத்தில் ஹோசே அர்க்காதியோ புயேந்தியா கண்டுபிடித்ததும் பின்னர் வாழைப் பயிர் செழித்து வளர்ந்ததுமான அந்த அற்புதப் பிரதேசம் அழுகிக்கொண்டிருந்த வேர்களின் சதுப்பானது. அதன் தொடுவானத்தில் கடலின் மௌன நுரையைப் பார்க்க முடிந்தது. முதலாம் ஞாயிற்றுக்கிழமை அவுரேலியானோ செகுந்தோ உலர்ந்த உடைகளை அணிந்து வெளியே நகரத்துடனான பழக்கத்தைப் புதுப்பித்துக்கொள்ள அந்தப் பேரழிவி போனபோது பெரும் துயரத்தினூடே கடந்தான். அந்தப் பேரழிவி லிருந்து தப்பிய, வாழைப்பழக் குழுமம் சூறையாடுவதற்கு முன்பே மகோந்தாவில் வாழ்ந்த அதே ஆட்கள் தெருவின் நடுவில் உட்கார்ந்து முதலாவது வெயிலை அனுபவித்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள்

சருமத்தில் பச்சைப் பாசி இன்னும் ஒட்டியிருந்தது. மழை அடையாளப் படுத்திய ஈரக் கவிச்சை அவர்கள்மேல் இருந்தது. எனினும் தாங்கள் பிறந்த நகரம் மீண்டிருப்பதன் மகிழ்ச்சி அவர்கள் மனத்துக்குள் இருப்பதாகத் தோன்றியது. துருக்கியர்களின் தெரு முன்பிருந்தது போல ஆனது. காலணிகளும் காதுகளில் வளையங்களும் அணிந்த அராபியர்கள் மக்காவ் பறவைகளுக்குப் பண்டமாற்றாக விளையாட்டுப் பொருட்களை விற்பதற்காக உலகம் சுற்றி வந்தபோது தங்கள் வழியில் ஒரு திருப்பமாக மகோந்தாவைக் கண்டுபிடித்த அந்த நாட்களுக்குத் தெரு திரும்பிச் சென்றது. அதனூடாக மழையின் மறுபக்கத்துக்குக் கடந்து சென்றபோது கடைகளிலிருந்த வியாபாரப் பொருட்கள் சிதறிக்கிடந்தன. கதவுகளின் மேல் விரித்து விட்டிருந்த துணிகளில் பூஞ்சணம் அப்பியிருந்தது. கல்லா மேஜைகள் கறையான்களால் அரிக்கப்பட்டிருந்தன. சுவர்கள் ஈரத்தால் கபளீகரம் செய்யப்பட்டிருந்தன. ஆனாலும் மூன்றாவது தலைமுறையைச் சேர்ந்த அராபியர்கள் தங்கள் தகப்பனார்களைப் போலவும் தாத்தாக்களைப் போலவும் அதே இடத்தில் அதே நிலையில் உட்கார்ந்து இருந்தார்கள். அதிகம் பேசாமல், பயமில்லாமல் காலத்தாலும் இடர்ப்பாடுகளாலும் அசைக்க முடியாதவர்களாக உறக்கமின்மைக் கொள்ளை நோய்க்குப் பிறகும் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் முப்பத்திரண்டு யுத்தங் களுக்குப் பிறகும் இறந்தவர்களைப் போலவே வாழ்ந்துகொண்டிருந் தார்கள். அழிவின் சதுரங்க ஆட்டக் கட்டங்களை, விரயமான நிலைகளை, துப்பாக்கி சுடும் காட்சியகங்களை எதிர்கொண்டிருந்த அவர்களின் ஆன்ம வலுவும் சந்துகளில் உட்கார்ந்து கனவுகளுக்குச் சொல்லிக்கொண்டிருந்த விளக்கமும் எதிர்காலம் பற்றிய ஆரூடங்களும் அவுரேலியானோ செகுந்தோவை வியப்படையச் செய்தன. தனது வழக்கமான சகஜபாவத்துடன் அவர்கள் நம்பும் எந்தப் புதிரான ஆற்றல் அவர்களைப் புயலில் அடித்துச் செல்லாமல் தப்பவிட்டது என்றும் மூழ்கிப் போகாமலிருக்க என்ன இழவைச் செய்தார்கள் என்றும் கேட்டான். வீடு வீடாகக் கேட்டதும் ஒருவர் பின் ஒருவராகத் தேர்ந்த புன்னகையுடனும் கனவு ததும்பும் பார்வையுடனும் எந்த முன்விவாதமும் இல்லாமல் எல்லாரும் ஒரே பதிலைச் சொன்னார்கள்.

“நீச்சல்.”

அரேபிய மனம் கொண்ட ஒரே ஓர் உள்ளூர்வாசியாக பெத்ரா கோட்டேஸ் மட்டுமே இருந்தாள். அவள் தன்னுடைய கால்நடைத் தொழுவங்களின் கடைசி அழிவைப் பார்த்தாள். தன்னுடைய களஞ்சியம் சூறைக்காற்றால் இழுத்துச் செல்லப்படுவதைப் பார்த்தாள். ஆனால் வீட்டை மட்டும் தக்கவைக்க அவளால் முடிந்தது. இரண்டாவது வருடத்தில் அவுரேலியானோ செகுந்தோவுக்கு அவசரச் செய்திகளை அனுப்பினாள். அவள் வீட்டுக்கு எப்போது வர முடியும் என்று தனக்குத் தெரியாது என்றும் ஆனால் எப்படியிருந்தாலும் வரும்போது படுக்கை யறைத் தரையில் பாவும் அளவுக்கான தங்க நாணயங்களைக் கொண்டு வருவதாகவும் அவன் பதிலளித்தான். அந்தச் சமயத்தில் துரதிருஷ்டத்தி லிருந்து மீள தன்னுடைய மனதுக்குள் என்ன வலு இருக்கிறது என்று

அவள் தேடிக்கொண்டிருந்தாள். ஆத்திரம்தான் அங்கே இருக்கிறது என்பதைக் கண்டடைந்தாள். தன்னுடைய காதலன் ஊதாரித்தனமாக அழித்ததும் பிரளயத்தால் அடித்துச் செல்லப்பட்டதுமான தன்னுடைய செல்வத்தைத் திரும்ப அடைவது என்று சபதம் செய்துகொண்டாள். அவளிடமிருந்து கடைசித் தகவல் வந்து எட்டு மாதங்களுக்குப் பிறகு அவுரேலியானோ செகுந்தோ அவள் வீட்டுக்குத் திரும்ப வந்தபோது அவள் குலைந்து போயிருப்பதைப் பார்த்தான். அவளுடைய இமைகள் சுருங்கியிருந்தன. சருமம் தோல் வியாதியால் பளபளத்திருந்தது. ஆனால் அவள் லாட்டரிக் குலுக்கலுக்கானச் சீட்டுகளைத் துண்டுத் தாள்களில் எழுதிக்கொண்டிருந்தாள். அவுரேலியானோ செகுந்தோ அதிர்ச்சியடைந்தான். அவனுடைய அழுக்கான தோற்றத்தைப் பார்த்த பெத்ரா கோட்டேஸ், தன்னைத் தேடி வந்திருப்பவன் தனது வாழ்நாள் காதலன் அல்ல; அவனுடைய இரட்டைச் சகோதரனாக இருக்கலாம் என்று ஏறத்தாழ நம்பினாள்.

“உனக்குக் கிறுக்குப் பிடித்திருக்கிறது. எலும்புகளைத் தவிர வேறு எதை வைத்து லாட்டரி நடத்துவாய்” என்று அவளிடம் சொன்னான்.

அவள் அவனைப் படுக்கையறையை எட்டிப் பார்க்கச் சொன்னாள். அங்கே அந்தக் கோவேறுக் கழுதை நிற்பதை அவுரேலியானோ செகுந்தோ பார்த்தான். அவனுடைய வைப்பாட்டியைப் போலவே அதற்கும் தோல் எலும்போடு ஒட்டியிருந்தது. ஆனால் அவளைப் போலவே அதுவும் உயிர்ப்புடனும் நெஞ்சுரம் கொண்டதாகவும் இருந்தது. அங்கே அதற்குமேல் வைக்கோலோ சோளமோ கிழங்குகளோ இல்லாமலான போது பெத்ரோ கோட்டேஸ் அதற்குத் தன்னுடைய வஞ்சினத்தைத் தீனியாகப் போட்டு வளர்த்திருந்தாள். தன்னுடைய படுக்கையறையிலேயே புகலிடம் கொடுத்திருந்தாள். கெட்டியான விரிப்புகளையும் பாரசீகக் கம்பளிகளையும் ஆடம்பரமான படுக்கை விரிப்புகளையும் வெல்வெட் அங்கிகளையும் பொன்னிழைகளாலும் வெள்ளிக் குஞ்சங்களாலும் எம்பிராய்டரி செய்த விதானத் திரைகளையும் தீவனமாகக் கொடுத்திருந்தாள்.

மழை விட்டதும் இறந்துபோகப் போவதாகத் தான் கொடுத்த வாக்கை நிறைவேற்ற உர்சுலா மிகவும் பாடுபட்டாள். மழைக்காலத்தில் மிக அரிதாக இருந்த தெளிவுநிலை ஆகஸ்டு மாதத்தில் அடிக்கடி பெய்த மழைக்குப் பிறகு மேலும் அதிகரித்தது. வறண்ட காற்று வீசி ரோஜாச் செடிகளைத் திணறடித்தது. சேற்று வண்டல்களைப் பொடியாக்கியது. தகிக்கும் புழுதிப் படலத்தை மகோந்தா முழுக்கப் படரவிட்டது. துருவேறிய துத்தநாகக் கூரைகள்மீதும் வாதுமை மரங்கள்மீதும் புழுதிப்படலம் நிரந்தரமாகப் படிந்தது. மூன்று ஆண்டுகளுக்கும் மேலாகச் சிறுவர்களின் விளையாட்டுப் பாத்திரமாகத் தான் இருந்ததைக் கண்டுபிடித்த போது உர்சுலா புலம்பி அழுதாள். சிறுவர்கள் சாயம் தேய்த்து விட்ட முகத்தைக் கழுவினாள். தொங்கவிட்டிருந்த அடர்ந்த நிறத் துணிக் கிழிசல்களை எடுத்தெறிந்தாள். செத்தப் பல்லிகளையும் தவளைகளையும் ஜெபமாலைகளையும் பிடுங்கி வீசினாள். உடம்பெங்கும் மாட்டிவிட்டிருந்த பழைய அராபிய மாலைகளையும் கழற்றி எறிந்தாள். அமரந்தாவின் சாவுக்குப் பிறகு முதல் முறையாக யாருடைய உதவியுமில்லாமல் படுக்கையை விட்டு எழுந்து வீட்டுக் காரியங்களில் மீண்டும் ஈடுபட்டாள். அவளுடைய மனத்தின் வெல்ல முடியாத ஆற்றல் நிழல்களுக் கிடையில் அவளை வழி நடத்தியது. அவள் தட்டுத் தடுமாறி நடப்பதையும் அதி தூதரைப் போல உயர்த்திக் கண்மட்டத்தில் வைத்திருக்கும் கையால் இடித்துக் கொள்ளுவதையும் பார்த்த யாருக்கும் அவளுடைய உடல் தளர்ந்து விட்டதாகத் தோன்றியதே தவிர அவளுக்குப் பார்வையில்லை என்பது தெரியவில்லை. வீடு புதுப்பித்தலுக்குப் பிறகு அவள் அதிகவனமாகப் பராமரித்த மலர்ப் படுகைகள் மழையாலும் அவுரேலியானோ செகுந்தோ நடத்திய அகழ்வாராய்ச்சியாலும் நாசமாயின. சுவர்களும் தரையில் சிமெண்டும் விரிசல்விட்டன. அறைக்கலன்கள் நைந்து சாயமிழந்தன. கதவுகள் கீல்களிலிருந்து கழன்றன. குடும்பம், அவளுடைய காலத்தில் யோசித்துப் பார்க்கவே முடிந்திராத நிராதரவாலும் இழப்புணர்வாலும் அச்சுறுத்தப்பட்டது. இவற்றையெல்லாம் அறிந்துகொள்ள அவளுக்குக் கண்கள் தேவைப்படவில்லை. காலியான படுக்கையறைகளைத் தாண்டும்போது மரத்தை அரிக்கும் கரையான்களின் தொடர்ச்சியான முரளலையும் அலமாரிகளில் துணிகளைக் கொரிக்கும் அந்துப் பூச்சிகளின் முனகலையும் பிரளய காலத்தில் இனப்பெருக்கம் செய்து வீட்டின் அஸ்திவாரத்தை அரித்துக் கொண்டிருக்கும் செவ்வெறும்புகளின்

அழிப்புக் கூச்சலையும் அவளால் உணர முடிந்தது. புனிதர்களின் திருவுருவம் வைத்த பெட்டியை ஒரு நாள் திறந்தாள். ஏற்கனவே துணிகளைக் கறைபடுத்தியிருந்த கரப்பான் பூச்சிகள் அவள் மேல் ஏறின. சாந்தா சோபியா தெ லா பியா தாத்திடம் அவற்றை விரட்டச் சொன்னாள். "ஒரு ஆள் எவ்வளவு காலம் இதுபோல் உதாசீனத்திலேயே வாழ முடியும்? இப்படியே போனால் விலங்குகள் நம்மை விழுங்கி விடும்" என்றாள். அன்று முதல் ஒரு நொடிகூட ஓய்ந்திருக்கவில்லை. விடிவதற்கு முன்பே, குழந்தைகள் உட்பட யாரும் எழுவதற்குள் எழுந்தாள். இன்னும் உபயோகிக்கும் நிலையிலிருக்கும் துணிகளை வெயிலில் காயப்போட்டாள். சக்தி வாய்ந்த பூச்சிக்கொல்லி மருந்தை அடித்துக் கரப்பான்களைக் கொன்றாள். கதவுகளிலும் ஜன்னல்களிலும் கரையான்கள் இழைத் திருந்த மண்நாளங்களைச் சுரண்டி எறிந்தாள். புற்றுகளில் சுண்ணாம்பைப் போட்டு எறும்புகளை மூச்சுத் திணறச் சாகடித்தாள். சீரமைப்பு ஜுரம் அவளைக் கடைசியாக மறக்கப்பட்ட அறைகளுக்குக் கொண்டு வந்தது. ரசவாதக் கல்லுக்காகத் தனது இயல்பைத் தொலைத்து ஹோசே அர்க்காதியோ புயேந்தியா உட்காந் திருந்த அறைக்குள்ளிருந்த குப்பைக் கூளங்களையும் ஒட்டடைகளையும் சுத்தப்படுத்தினாள். ராணுவ வீரர்கள் தலைகீழாக்கியிருந்த வெள்ளிப் பட்டறையை ஒழுங்குபடுத்தினாள். கடைசியாக மெல்குயாதெஸின் அறை என்ன நிலையில் இருக்கிறது என்று பார்ப்பதற்காகச் சாவியைக் கேட்டாள். தான் மரணமடைந்து விட்ட அறிகுறி தெரிந்தால் ஒழிய யாரையும் உள்ளே அனுமதிக்கக் கூடாது என்ற ஹோசே அர்க்காதியோ செகுந்தோவின் விருப்பத்துக்கு நம்பிக்கையாக இருந்த சாந்தா சோபியா தெ லா பியாதாத் உர்சுலாவைத் திசை திருப்ப எல்லாத் தந்திரங்களை யும் பயன்படுத்தினாள். ஆனால் தீர்மானத்திலிருந்து உர்சுலா பின்வாங்கத் தயாராக இல்லை. பூச்சிகளின் ஆக்கிரமிப்பிலிருந்து வீட்டின் ஒவ்வொரு மூலையையும் காப்பாற்ற முயன்றதனால் தன் வழியில் ஏற்பட்ட எல்லாத் தடங்கல்களையும் மோதித் தள்ளினாள். மூன்று நாட்கள் வற்புறுத்தலுக்குப் பின்னர் கதவைத் திறக்கச் செய்தாள். தடுமாறி விழுந்துவிடாமலிருக்கக் கதவின் சட்டத்தை இறுகப் பிடித்திருந்தாள். எனவே அந்த வாடை அவளைத் தாக்கவில்லை. பள்ளிச் சிறுமிகள் பயன்படுத்திய எழுபத்திரண்டு கழிவுப் பானைகள் அந்த அறைக்குள் இருக்கின்றன; மழைப் பெய்துகொண்டிருந்த இரவுகள் ஒன்றில் ஹோசே அர்க்காதியோ செகுந்தோவைத் தேடி வந்த ராணுவப் பிரிவு வீடு முழுக்கப் பரிசோதித்தும் அவனைக் கண்டுபிடிக்க முடியாமல் திரும்பினார்கள் என்பதை நினைவுக்குக் கொண்டு வர அவளுக்கு இரண்டு நிமிடங்கள் மட்டுமே தேவைப்பட்டன.

தன்னால் எல்லாவற்றையும் பார்க்க முடியும் என்பதுபோல அவள் ஆச்சரியத்துடன் சொன்னாள் "கடவுளே, எம்மைக் காப்பாற்றும். அத்தனை துன்பங்கள் உனக்கு நன்னடத்தையைக் கற்றுக்கொடுத்தும் நீ ஒரு பன்றியைப் போலவே வாழ்கிறாய்"

ஹோசே அர்க்காதியோ செகுந்தோ அப்போதும் பட்டயங்களை வாசித்துக் கொண்டிருந்தான். பார்த்ததும் தெரிந்த ஒரே விஷயம்; முடி சிக்குப் பிடித்திருந்ததும் பற்களில் பச்சை நிறக் காரை படிந்

திருந்ததும் அசையாமலிருந்த கண்களும்தாம். தனது கொள்ளுப் பாட்டியின் குரலை அடையாளம் கண்டுகொண்டதும் வாசலை நோக்கித் தலையைத் திருப்பிப் புன்னகைக்க முயன்றான். உர்சுலாவின் பழைய வாசகம் என்று தெரியாமலே" நீங்கள் என்ன எதிர்பார்த் தீர்கள்?" என்று முணுமுணுத்தான்.

"காலம் கடந்து போகிறது இல்லையா?"

"அது அப்படித்தான். ஆனால் இத்தனை சீக்கிரம் வேண்டியிருக்க வில்லை" என்றாள் உர்சுலா.

அதைச் சொன்னபோதே கர்னல் அவுரேலியானோ புயேந்தியா மரண தண்டனை விதிக்கப்பட்டுச் சிறையில் இருந்தபோது தான் இதே பதிலைச் சொன்னதை அவள் உணர்ந்தாள். மீண்டும் ஒருமுறை அவள் நடுங்கினாள். அவள் ஒத்துக்கொண்டதுபோல காலம் கடந்து போகவில்லை, ஒரு வட்டத்தில் சுழல்கிறது. இருந்தும் செயலின்மைக்கு வாய்ப்பளிக்க விரும்பவில்லை. சிறு குழந்தையைத் திட்டுவதுபோல ஹோசே அர்க்காதியோ செகுந்தோவைத் திட்டினாள். குளித்து, சவரம்செய்து வீட்டு நிர்வாகத்தில் உதவச் சொன்னாள். தனக்கு அமைதியைக் கொடுத்த அறையை விட்டு வெளியேறும் யோசனையே ஹோசே அர்க்காதியோவைப் பயமுறுத்தியது. தன்னை வெளியே கொண்டுசெல்ல வலுவுள்ள யாரும் கிடையாது என்றும் இருநூறு பெட்டிகள் நிறைய மனிதச் சடலங்களை நிறைத்துக்கொண்டு மகோந்தாவை விட்டு தினமும் விடியற்காலை புறப்பட்டுக் கடலை நோக்கிப் போகும் ரயிலைத் தன்னால் பார்க்க முடியாது என்றும் அலறினான். "அவர்கள் எல்லாரும் ரயில் நிலையத்தில் இருந்தவர்கள்" என்று கத்தினான். "மூவாயிரத்து நானூற்றெட்டுப் பேர்" தன்னுடையதை விடவும் ஊடுருவ முடியாத நிழல்களின் உலகத்தில் அவன் இருக்கிறான்; அவனுடைய கொள்ளுப் பாட்டனின் உலகத்தைப் போன்று அடைய முடியாததும் தனிமையானதுமான உலகத்தில் இருக்கிறான் என்பது அப்போதுதான் அவளுக்குப் புரிந்தது. அவனை அந்த அறைக்குள்ளேயே விட்டாள். தாழ்ப்பாளை அகற்றச் செய்தாள். அறையைத் தினமும் சுத்தப்படுத்த வைத்தாள்; ஒன்றைத் தவிர எல்லாக் கழிவுப் பானை களையும் தூக்கியெறிந்தாள். செந்தவிட்டு மரத்தடியில் சிறைப்பட் டிருந்தபோது அவனுடைய கொள்ளுத் தாத்தா இருந்ததுபோலவே, ஹோசே அர்க்காதியோ செகுந்தோவையும் குளிப்பாட்டிப் பார்க்கத் தகுந்தவனாக மாற்றினாள். பெர்னாண்டா அந்த ஆரவாரத்தை முதுமைக் கிறுக்கு என்றுதான் முதலில் வியாக்கியானம் செய்தாள். ஆனால் அந்தச் சமயம்தான், கடைசிப் பிரதிக்ஞை ஏற்பதற்கு முன் ரோமிலிருந்து மகோந்தாவுக்கு வரத் திட்டமிட்டிருப்பதாக ஹோசே அர்க்காதியோ அவளுக்குத் தெரிவித்திருந்தான். அந்த நற்செய்தி அவளுக்குள் புதிய உற்சாகத்தை ஊட்டியது. வீட்டைப் பற்றி அவனுக்கு மோசமான எண்ணம் ஏற்பட்டுவிடக்கூடாது என்பதால் ஒரு நாளைக்கு நான்கு முறை பூச்செடிகளுக்கு நீரூற்றினாள். அதே ஊக்கம்தான் அறியாத டாக்டர்களுடன் கடிதத் தொடர்பைத் துரிதப்படுத்தியது; அவுரேலியானோ செகுந்தோவின் கொலைவெறி ஆத்திரத்தில்

தாறுமாறாக்கப்பட்டிருந்த முற்றத்துப் பெரணித் தொட்டிகளையும் ஓரிகானோ பூந்தொட்டிகளையும் பிகோனியாப் பூச்செடிகளையும் உர்சுலா கண்டுபிடிக்கும் முன்பே இடம்மாற்றச் செய்தது. பின்னர் வெள்ளியிலான உணவு பரிமாறும் உபகரணங்களை விற்றுப் பீங்கான் தட்டுகளையும் கலப்பு உலோகக் கிண்ணங்களையும் சூப் கரண்டிகளையும் அல்பாகா* மேஜை விரிப்புகளையும் வாங்கினாள். அவற்றுடன் சேர்த்துக் காலங்காலமாக இந்தியா கம்பெனியின் சீனக் களிமண் பாத்திரங்களும் பொஹீமியக் கண்ணாடிப் பொருட்களும் நிறைந்திருந்த அலமாரிகளுக்குத் தரித்திரத்தையும் வாங்கினாள். உர்சுலா எப்போதும் அவளைவிட ஒரு எட்டு முன்னால் போக முயற்சித்தாள். "ஜன்னல்களையும் கதவுகளையும் திறந்துபோடு" என்றாள். "கொஞ்சம் இறைச்சியும் மீனும் சமைத்து வை. சுற்றுவட்டத்தில் கிடைக்கும் பெரிய ஆமைகளை வாங்கு. அந்நியர்கள் வந்து வீட்டுக்குள்ளே பாயை விரித்துக்கொள்ளட்டும். ரோஜாச் செடிகள் மேல் ஒன்றுக்கிருக்கட்டும். உட்கார்ந்து எத்தனை தடவை வேண்டுமோ தின்று ஏப்பம் விடட்டும். வாயாடிக் கொண்டிருக்கட்டும். பூட்ஸ் காலால் எல்லா இடத்திலும் சேறு பண்ணட்டும். நம்மை என்ன வேண்டுமானாலும் செய்யட்டும். ஏனென்றால் மழையிலிருந்து ஒதுங்க அதுதான் ஒரே வழி" ஆனால் அது வெறும் பிரமை. அவளுக்கு மிக அதிக வயதாகியிருந்தது. விலங்கு வடிவ இனிப்புகளின் அற்புதத்தை திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கவே இரவல் வாங்கிய காலத்தில் வாழ்ந்துகொண்டிருந்தாள். ஆனால் அவளுடைய சந்ததிகளில் யாருக்கும் அவளுடைய வலு இல்லை. பெர்னாண்டாவின் உத்தரவுப்படி வீடு அடைக்கப்பட்டது.

தன்னுடைய டிரங்குப் பெட்டிகளைத் திரும்ப எடுத்துக்கொண்டு பெத்ரா கோட்டேஸின் வீட்டுக்குத் திரும்பிய அவுரேலியானோ செகுந்தோவால் குடும்பம் பட்டினியில் சாகாமலிருக்கப் போதுமான எந்த வழிகளையும் கண்டடைய முடியவில்லை. கோவேறுக் கழுதை லாட்டரியுடன் பெத்ரா கோட்டேஸும் அவனும் இன்னும் சில விலங்குகளையும் வாங்கினார்கள். அதை வைத்துப் பழங்கால லாட்டரி வியாபாரத்தைத் தொடங்கினார்கள். பார்வைக்குக் கவர்ச்சியாக இருக்கவும் நம்பகத் தன்மை ஏற்படுத்தவும் அவுரேலியானோ செகுந்தோ வண்ண மையால் தானே வரைந்த சீட்டுகளை வீடு வீடாகக் கொண்டு விற்றான். அவற்றை அநேகம் பேரும் நன்றி உணர்வினாலும் இரக்கத்தினாலுமே வாங்கினார்கள் என்பது ஒருவேளை அவனுக்குத் தெரியாமலிருக்கலாம். இருந்தபோதும், மிகவும் பரிதாபப்பட்டு சீட்டு வாங்கியவன்கூட இருபது சென்ட்டுக்குப் பன்றியையோ முப்பது சென்ட்டுக்குக் கன்று குட்டியையோ பரிசாகப் பெற்றும் வாய்ப்பு இருந்தது. எல்லாரும் மிகுந்த நம்பிக்கையுடனிருந்தார்கள். அதனால் செவ்வாய்க்கிழமை இரவுகளில் பெத்ரா கோட்டேஸின் வீட்டு முற்றத்தில் கூட்டம் நிறைந்து வழிந்தது. குழந்தை ஒன்று பையிலிருந்து குலுக்கல் மூலம் பரிசுக்குரிய எண்ணை எடுக்கும் வினாடிக்காகக் காத்திருந்தது.

* ஒட்டக வகையைச் சேர்ந்த தென் அமெரிக்க விலங்கு

அது வாராந்திரத் திருவிழாவாக மாற அதிக காலம் பிடிக்கவில்லை. மாலையில் உணவும் பானங்களும் விற்கும் கடைகள் முற்றத்தில் போடப்பட்டன. விலங்குகளைப் பரிசாகப் பெற்றவர்கள், வேறு யாராவது மதுவும் இசையும் விநியோகம் செய்வதாக இருந்தால் அவற்றை அங்கேயே கசாப்புச் செய்யத் தயார் என்றார்கள். விருப்ப மில்லாமலிருந்தபோதும் அவுரேலியானோ செகுந்தோ மறுபடியும் அக்கார்டியன் வாசித்தான். மெதுவாக, சாப்பாட்டுப் பந்தயங்களிலும் கலந்துகொண்டான். பழைய நாட்களின் மாதிரிகளான அந்த கும்மாளங்கள் அவுரேலியானோ செகுந்தோவுக்கு அவனுடைய உற்சாகம் எவ்வளவு வீழ்ச்சியடைந்திருக்கிறது; தேர்ந்த குடியனான அவனுடைய திறமை எந்த அளவுக்கு வற்றிப்போயிருக்கிறது என்பதை எடுத்துக் காட்டின. அவன் மாறிப்போயிருந்தான். 'யானை'யால் போட்டிக்கு அழைக்கப்பட்ட நாட்களில் இருநூற்று நாற்பது பவுண்டு எடையிருந்த அவன் நூற்று அறுபத்தைந்து பவுண்டாக இளைத்திருந்தான். பளபளப்பும் சதைப்பிடிப்புமாக இருந்த ஆமை முகம் மாறி உடும்பு முகம் போலாகி யிருந்தது. எப்போதும் அலுப்பின் விளிம்பிலும் களைத்தும் இருந்தான். பெத்ரா கோட்டேஸைப் பொறுத்தவரை, இப்போதிருப்பதைவிட ஒருபோதும் அவன் நல்ல மனிதனாக இருந்ததில்லை. காரணம், ஒருவேளை அவனுடைய இரக்கத்தில் காதல் கலந்திருந்தி இருக்கலாம்; அல்லது அவர்கள் இருவருக்குள்ளும் துயரம் எழுப்பிவிட்ட ஒருமித்த தனிமை உணர்வாக இருக்கலாம். காதல் களியாட்டத்தின் மேடையாக இருந்த அந்த உடைந்த கட்டில் அந்தரங்க அடைக்கலமாக மாறியிருந்தது. மறு பிம்பங்களைக் காட்டும் கண்ணாடிகள் இல்லை; லாட்டரிக் குலுக்கலுக்காக மேலும் சில விலங்குகளை வாங்க அவற்றை ஏலத்தில் விற்றிருந்தார்கள். காம வேட்கையுடன் புரண்டிருந்த டமாஸ்கஸ், வெல்வெட் படுக்கை விரிப்புகள் இல்லை; அவற்றைக் கோவேறுக் கழுதை தின்றிருந்தது. தூக்கமில்லாத இரண்டு தாத்தா பாட்டிகளின் வெகுளித்தனத்துடன் நீண்ட நேரம் விழித்திருந்தார்கள். அந்த நேரத்தைப் பயன்படுத்திக் கொண்டு முன்பு ஊதாரித் தனமாகச் செலவழித்த காசுகளைக் கணக்குப் போட்டுச் சிக்கனப்படுத்தினார்கள். சில சமயங்களில் சேவல் கூவும் வரைக்கும் நாணயங்களை அடுக்கியும் கலைத்தும், இங்கேயிருப்பதை அங்கே வைத்தும் அங்கே இருப்பதை இங்கே வைத்தும் கணக்குப் பார்த்தார்கள், இது பெர்னாண்டாவை மகிழ்விக்கப் போதுமானது; அது அமரந்தா உர்சுலாவுக்கு ஷூ வாங்க; அந்த இன்னொன்று சச்சரவு மிகுந்த காலத்திலிருந்து புது உடையே இல்லாமலிருக்கும் சாந்தா சோபியா தெ லா பியாதாத்துக்கு; இது உர்சுலா இறந்துபோனால் சவப்பெட்டிக்குச் சொல்லி வைப்பதற்காக; இது மூன்று மாதத்துக்கு ஒரு தடவை ஒவ்வொரு செண்ட்டாக விலை அதிகரிக்கும் காப்பிக்கு; அப்புறம் இது, தினத்துக்குத் தினம் இனிப்புக் குறைந்து வரும் சர்க்கரைக்கு இது மழையில் நனைந்து இன்னும் ஈரமாகக் கிடக்கும் விறகுகளுக்காக; அந்த இன்னொன்று லாட்டரிச் சீட்டு தயார் செய்யக் காகிதமும் வண்ண மையும் வாங்க; பாக்கித் தொகை ஏப்ரல் பரிசாகக் கொடுக்கப் படவிருக்கும் கன்றுக் குட்டிக்காக; தோலில் புண்ணுடன் வந்த அதை அற்புதகரமாகக்

காப்பாற்றியிருப்பதை மறைத்து வைத்திருந்தார்கள். அதற்குள் குலுக்கலுக்கான எல்லா எண்களும் விற்றுத் தீர்ந்திருந்தன. இந்தத் தரித்திரச் சடங்குகள் துல்லியமாக இருந்தன. எல்லா நேரங்களிலும் பெர்னாண்டாவுக்காகப் பெரும் பங்கை ஒதுக்கி வைத்தார்கள். குற்றவுணர்வு காரணமாகவோ தர்மமாகவோ அல்ல; தங்களுடைய நல்வாழ்க்கையைக் காட்டிலும் அவளுடைய வாழ்க்கை அவர்களுக்கு முக்கியமானதாக இருந்தது. தங்களுக்கு என்ன நடந்துகொண்டிருக்கிறது என்று இருவரில் யாரும் யோசிக்கவில்லை. அவளை ஒரு மகளைப் போலவே நினைத்தார்கள். அப்படியில்லையென்றால் ஒருபோதும் அதைச் செய்திருக்க விரும்பியிருக்கமாட்டார்கள்; செய்திருக்கவும் மாட்டார்கள். அவளுக்கு டச்சு மேஜை விரிப்பு வாங்கப் பணம் கொடுக்க வேண்டுமென்பதற்காக ஒரு சந்தர்ப்பத்தில் இருவரும் மூன்று நாட்கள் ரொட்டித் துகள்களை மட்டுமே உண்டார்கள். எந்த அளவு அவர்கள் உயிரே போவதுபோல வேலை செய்கிறார்கள் என்பது முக்கியமில்லை; எவ்வளவு பணத்தில் வாழ்கிறார்கள் என்பது முக்கிய மில்லை; எத்தனை திட்டங்கள் போடுகிறார்கள் என்பதும் முக்கிய மில்லை. என்னவானாலும் அவர்களுடைய காவல் தேவதைகள் களைத்துப் போய்த் தூங்கிக்கொண்டிருந்தன என்பதுதான் முக்கியம். அவர்கள் சில்லறைத் துட்டுகளில் வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்த போது தேவதைகள் வாழ்வதற்கு அதெல்லாம் போதும் என்று அவர்களை வதைத்துக் கொண்டிருந்தன. கையிருப்பு மோசமாக இருந்தபோது விழித்திருக்கும் நேரங்களிலெல்லாம் அவர்கள் வியந்து கொண்டிருந் தார்கள். முன்னைப்போல வேகத்துடன் தங்கள் வளர்ப்பு மிருகங்கள் விருத்தியடையாத மாதிரி உலகத்தில் என்ன நடந்திருக்கும்; காசு ஏன் விரல்களின் இடுக்கில் நழுவிப் போகிறது; கொஞ்ச காலத்துக்கு முன்பு கற்றை கற்றையாகச் சீட்டுகளை வாங்கிய மக்கள் ஏன் ஆறு கோழிகளைப் பரிசாகக் கொடுக்கும் லாட்டரிச் சீட்டின் பன்னிரண்டு சென்ட் விலையை வழிப்பறிக் கொள்ளை என்கிறார்கள்? என்று கணக்கு மோசமாக இருக்கும் நாட்களில் விழித்திருந்த நேரமெல்லாம் வியந்துகொண்டிருந்தார்கள். சொல்லவில்லையே தவிர அவுரேலியானோ செகுந்தோ, உலகத்தில் தீவினை எதுவும் நடந்துவிடவில்லை என்றும் அது பெத்ரா கோட்டேஸின் மர்ம இதயத்துக்குள்ளே ஏதோ ஒரு இடத்தில் இருக்கிறது என்றும் நினைத்தான். பிரளய காலத்தில் விலங்குகள் பெற்றுப் பெருகாமல் பணமுடை ஏற்படுத்திய நேரத்தில் ஏதோ நடந்திருக்கிறது. இந்தப் புதிரால் உந்தப்பட்டு, அவன் அவளுடைய உணர்வுகளுக்குள் ஆழப் போனான். அவளைத் தன்னைக் காதலிக்கச் செய்வதற்குப் பதில் தான் அவளை மேலும் அதிகமாகக் காதலித்தான். அவனுடைய காதல் அதிகரித்திருப்பதைக் கண்ட பெத்ரா கோட்டேஸ் தன் பங்குக்குத் தானும் அவனை மேலும் அதிகமாகக் காதலித்தாள். இலையுதிர் கால உச்சத்தில் மீண்டுமொரு முறை, வறுமை என்பது காதலின் அடிமை என்ற இளமை ததும்பும் மூட நம்பிக்கையை நம்ப ஆரம்பித்தாள். கட்டுப்பாடற்ற கும்மாளம், கண்ணைப் பறிக்கும் செல்வம், கட்டுக்கடங்கா முயக்கங்கள் எல்லாவற்றையும் இருவரும் திரும்பிப் பார்த்தார்கள். மனச் சோர்வாக இருந்தது. மிக

அதிகம் இழந்துதான் பகிர்ந்து கொண்ட தனிமையின் சொர்க்கத்தைக் கண்டோம் என்று இருவரும் வருந்தினார்கள். அநேக வருடங்களின் 'சுத்தமான சக வாழ்க்கை'க்குப் பிறகு கிறுக்குத்தனமான காதலில் விழுந்தார்கள். ஒருவரையொருவர் காதலிக்கும் அற்புதத்தை அனுபவித்தார்கள். கட்டிலில் போலவே மேஜைமீதும் குலாவினார்கள். இருவரும் அலுத்துப்போன கிழவர்களாக இருந்தும் சின்னக் குழந்தைகளைப் போல மலர்ச்சியடைந்தார்கள். நாய்க் குட்டிகளைப் போலச் சேர்ந்து விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

லாட்டரி வியாபாரம் அதிகம் போகவில்லை. ஆரம்பத்தில் அவுரேலியானோ செகுந்தோ வாரத்தில் மூன்று நாட்கள் தன்னுடைய பண்ணை அலுவலகத்தில் உட்கார்ந்து லாட்டரிச் சீட்டுகளை வரைந்தான். கொஞ்சம் தேர்ச்சியுடனேயே சிவப்புப் பசு, பச்சைப் பன்றி அல்லது நீலக் கோழிக் கூட்டம் என்று பரிசளிக்கப்படும் விலங்குகளுக்குப் பொருத்தமான படங்களை வரைந்தான், அச்சிட்ட எண்களைப் நகலெடுத்தான். பெத்ரா கோட்டேஸ் புதிய வியாபாரத்துக்கு 'டிவைன் புரோவிடென்ஸ் ராஃபில்ஸ்' புனிதக் கடவுளின் லாட்டரி என்ற பெயர் பொருத்தமானது என்று நினைத்தாள். வாரத்துக்குச் சுமார் இரண்டாயிரம் சீட்டுகளை வரைந்து முடித்த போது மிகவும் களைப்பாக உணர்ந்தான். விலங்குகளின் படம், பெயர், எண் எல்லாவற்றையும் ரப்பர் ஸ்டாம்பாக மாற்றினான். வெவ்வேறு வண்ண மையில் ஒற்றினால் போதும் என்ற அளவுக்கு வேலை குறைந்தது. கடைசி வருடங்களில் எண்களுக்குப் பதில் புதிர்களைப் போடலாம்; அதன் மூலம் புதிரைச் சரியாக ஊகிக்கும் எல்லாருக்கும் பரிசைப் பகிர்ந்தளிக்கலாம் என்று யோசித்தான். ஆனால் திட்டம் சிக்கலானதாகவும் சந்தேகத்துக்கு இடமளிக்கக் கூடியதாகவும் இருந்ததால் மறு சிந்தனையில் அதைக் கைவிட்டான்.

தனது லாட்டரிச் சீட்டு நிறுவனத்தின் கௌரவத்தை நிலைநிறுத்துவதில் மும்முரமாக இருந்ததால் பிள்ளைகளைக் கவனித்துக்கொள்ள அவுரேலியானோ செகுந்தோவுக்கு நேரம் கிடைக்கவில்லை. பெர்னாண்டா ஆறு சிறுமிகளை மட்டுமே சேர்த்துக்கொள்ளும் சிறிய தனியார் பள்ளியில் அமரந்தா உர்சுலாவைச் சேர்த்தாள். ஆனால் அவுரேலியானோவைப் பொதுப் பள்ளிக்கு அனுப்ப மறுத்தாள். அறையை விட்டு வெளியே போக அனுமதித்ததன் மூலம் ஏற்கனவே அவனுக்கு நிறைய கருணை காட்டிவிட்டதாக நினைத்தாள். அதுவுமல்லாமல், அந்தக் காலத்தில் கிறிஸ்துவத் திருமணங்களில் பிறந்த சட்டபூர்வமான சந்ததிகளை மட்டுமே ஏற்றுக்கொண்டார்கள். அவுரேலியானோவை வீட்டுக்குக் கொண்டு வந்தபோது அவனுடைய சட்டையில் குத்தியிருந்த பிறப்புச் சான்றிதழில் 'கண்டெடுக்கப்பட்டவன்' என்று பதிவு செய்யப்பட்டிருந்தது. எனவே அவன் சாந்தா சோபியா தெ லா பியாதாத்தின் அன்புப் பார்வை, உர்சுலாவின் கிறுக்குத்தனம் இரண்டின் தயவில் அடைபட்டான். அந்த வீட்டின் குறுகிய உலகத்தில் பாட்டிகள் சொல்லிக் கொடுத்தவற்றிலிருந்து மட்டுமே கற்றுக்கொண்டிருந்தான். மெலிந்தும் பலவீனமாகவும் இருந்தான். அவனுடைய

தெரிந்துகொள்ளும் ஆர்வம் முதியவர்களை ஈர்த்தது. ஆனால் அவனிட மிருந்தவை அதே வயதில் கர்னலிடமிருந்த குறுகுறுப்பான ஆர்வமோ தீர்க்க தரிசனம் மிளிரும் பார்வையோ அல்ல. அவன் பார்வை சிமிட்டல்களும் கவனச் சிதறல்களும் கொண்டவையாக இருந்தன. அமரந்தா உர்சுலா கிண்டர்கார்டனில் இருக்கும்போது அவன் தோட்டத்தில் மண் புழுக்களை வேட்டையாடிக் கொண்டும் பூச்சி களைச் சித்திரவதை செய்துகொண்டுமிருந்தான். ஒருமுறை உர்சுலா வின் படுக்கையில் வைப்பதற்காக அவன் தேள்களைப் பெட்டிக்குள் போட்டுக் கொண்டிருந்ததை பெர்னாண்டா பார்த்தாள். அவனை மேமேயின் அறைக்குள் அடைத்து வைத்தாள். கலைக் களஞ்சியத்தி லுள்ள படங்களைப் பார்த்துக்கொண்டு அவன் தனிமைப் பொழுது களைக் கழித்தான். ஒருநாள் பிற்பகலில் உர்சுலா வடிகட்டிய தண்ணீரை யும் பூனைக்காஞ்சிரச் செடியையும் வீட்டுக்குள்ளே சுற்றி வர நீரைத் தெளித்துக்கொண்டு போனபோது அவனைப் பார்த்தாள். அதற்கு முன்பு பலமுறை அவனைப் பார்த்திருந்தாள் என்றாலும் அப்போதும் அவன் யார் என்று கேட்டாள்.

"நான் அவுரேலியானோ புயேந்தியா" என்றான் அவன்.

"நல்லது, ஒரு நல்ல வெள்ளிக்கொல்லன் ஆவதைக் கற்றுக்கொள்ள இதுதான் நல்ல சமயம்" என்று பதில் சொன்னாள்.

அவள் மறுபடியும் அவனைத் தன் மகனுடன் சேர்த்துக் குழப்பிக் கொண்டிருந்தாள். ஏனெனில் பிரளயக் காலத்துக்குப் பிறகு வந்த வெப்பக் காற்றும் உர்சுலாவின் மூளைக்கு அவ்வப்போது அது கொண்டு வந்த தெளிவுநிலையும் கடந்துபோயிருந்தன. திரும்ப ஒருபோதும் அவள் பிரக்ஞை நிலையில் இல்லை. படுக்கையறைக்குப் போனபோது, தொந்தரவு தரும் மொடமொடப்பான பாவாடையும் உறவினர்களைச் சந்திக்கச் செல்லும்போது மட்டும் பயன்படுத்தும் மணிகள் வைத்த சட்டையும் அணிந்த பெத்ரோனிலா இகுவரானும் மயிலிறகு விசிறியை வீசிக்கொண்டு தனது விலையுயர்ந்த ஆடும் நாற்காலியில் பாட்டி டிரான்குலைனா மரியா மினையதா அலகோக் புயேந்தியாவும் வைஸ்ராய் கவசமுள்ள மேல் கோட்டு அணிந்த முப்பாட்டன் அவுரேலியானோ புயேந்தியாவும் பசுக்களின் வயிற்றிலிருந்து புழுக்கள் சுருண்டு விழும் பிரார்த்தனையைக் கண்டுபிடித்த அப்பா அவுரேலியானோ இகுவரானும் பயந்தாங்குளி அம்மாவும் பன்றி வாலுள்ள மைத்துனியும் ஹோசே அர்க்காதியோ புயேந்தியாவும் இறந்துபோன பிள்ளைகளும் சுவரையொட்டி வரிசையாகப் போடப் பட்டிருந்த நாற்காலிகளில் விருந்து வந்தவர்களைப்போல அல்லாமல் நீத்தார் கண்விழிப்புக்கு வந்தவர்களைப் போல அமர்ந்திருந்தார்கள். வேறுபட்ட பல காலங்களையும் வெவ்வேறு இடங்களையும் சேர்ந்த விஷயங்களைப் பிதற்றலின் வண்ண இழையால் சேர்த்துக் கட்டிக் கொண்டிருந்தாள் உர்சுலா. பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பி வந்த அமரந்தா உர்சுலாவும் கலைக் களஞ்சியத்தைப் புரட்டி அலுத்துப் போன அவுரேலியானோவும் வந்து பார்த்தபோது அவள் படுக்கையில் உட்கார்ந்து இறந்தவர்களின் வட்டத்துக்குள் தன்னை இழந்து தனக்குத்

தானே பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். ஒருமுறை பீதியுடன் அலறினாள். "நெருப்பு". திடீரென்று வீடு முழுக்கக் கிலி பரவியது. ஆனால் தனக்கு நான்கு வயதாக இருக்கும்போது அவள் ஒரு களஞ்சியம் பற்றி எரிவதைப் பார்த்ததைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தாள். கடைசிக் கட்டத்தில் அவள் இறந்த காலத்தையும் நிகழ் காலத்தையும் போட்டுக் குழப்பினாள். இறப்பதற்கு முன்பு நிலவிய இரண்டோ மூன்றோ தெளிவுநிலையிலும் அவள் உணர்ந்ததைப் பற்றிப் பேசுகிறாளா அல்லது நினைத்ததைப் பற்றிப் பேசுகிறாளா என்று தீர்மானிக்க முடியவில்லை. கொஞ்சங் கொஞ்சமாகச் சுருங்கிக் கருவிலிருக்கும் குழந்தையைப்போல ஆனாள். கடைசி மாதங்களில் இரவு ஆடைக்குள் உலர்ந்த செர்ரிப் பழம்போல இருந்தாள். எப்போதும் உயர்த்தி வைத்திருந்த கை மாரிமோந்தா* குரங்கின் கைபோல ஆனது. அநேக நாட்கள் அசையாமல் கிடந்தாள். சாந்தா சோபியா தெ லா பியாதாத் அவளை உலுக்கி மடியில் வைத்து சர்க்கரை நீரைச் சில கரண்டிகள் புகட்டுவாள். புதிதாகப் பிறந்த கிழவிபோல இருந்தாள். அமரந்தா உர்சுலாவும் அவுரேலியானோவும் படுக்கையறையிலிருந்து தூக்கி வரவும் தூக்கிப் போகவும் செய்தார்கள். குழந்தை யேசுவைவிட நீளமாக இருக்கிறாளா என்று பார்க்க அவளைப் பலிபீடத்தில் கிடத்தினார்கள். ஒருநாள் உணவுப்பொருள் வைப்பறை அலமாரிக்குள் ஒளித்து வைத்தார்கள். நல்லவேளை எலிகள் அவளைத் தின்னாமல் விட்டன. ஒரு குருத்தோலை ஞாயிறன்று, பெர்னாண்டா தேவாலயத்துக்குப் போயிருந்தபோது அவர்கள் உர்சுலாவைக் கழுத்திலும் கால்களிலுமாகப் பிடித்துத் தூக்கினார்கள்.

"பாவம் முப்பாட்டி, வயதாகிச் செத்துப் போய்விட்டாள்" என்று அமரந்தா உர்சுலா சொன்னாள்.

உர்சுலா திடுக்கிட்டுப் போனாள்.

"நான் உயிரோடுதான் இருக்கிறேன்" என்றாள்.

"நீ பார், அவள் மூச்சுக்கூட விடவில்லை" என்று சிரிப்பை அடக்கிக்கொண்டே சொன்னாள்.

"நான் பேசிக் கொண்டுதான் இருக்கிறேன்" என்று உர்சுலா கத்தினாள்.

"அவளால் பேசக்கூட முடியவில்லை" என்றான் அவுரேலியானோ. "ஒரு சின்ன சிள்வண்டைப் போலச் செத்துப் போய்விட்டாள்" அந்த நிரூபணத்துக்கு அடிபணிந்தாள் உர்சுலா. "கடவுளே" தணிந்த குரலில் வியப்படைந்தாள். "ஆக, செத்துப் போவது என்பது இதுதானோ?" அவள் திக்கலுடன் முடிவற்ற பிரார்த்தனையைத் தொடங்கினாள். அது இரண்டு நாட்களைத் தாண்டியும் நீண்டது. செவ்வாய்க்கிழமை அது கடவுளிடமான கோரிக்கைகளும் நடைமுறை அறிவுறுத்தல்களும் கலந்த குழப்பமாக உருக்குலைந்தது. செவ்வெறும்புகள் வீட்டைத்

* மாரிமோந்தா குரங்கு – தென் அமெரிக்கக் காட்டுயிர். கொலம்பியத் தொன்மங்களில் இடம்பெறும் உயிரினம். 'காட்டின் தாய்' என்று பொருள்.

தகர்ப்பதைத் தடை செய்ய வேண்டும்; ரெமேதியோஸின் புகைப்படத்தின் முன்னால் விளக்கேற்றி வைக்க வேண்டும்; எந்த புயேந்தியாவும் சொந்த ரத்தத்தைச் சேர்ந்தவரைத் திருமணம் செய்யக் கூடாது; ஏனெனில் அப்படி மணந்துகொண்டவர்களுக்குக் குழந்தைகள் பன்றி வாலுடன் பிறக்கும். அவுரேலியானோ செகுந்தோ அவளுடைய பித்துநிலையைச் சாதகமாக்கித் தங்கம் புதைக்கப்பட்ட இடத்தைத் தன்னிடம் சொல்ல வைக்க முயன்றான். அவனுடைய கெஞ்சல்கள் மீண்டுமொரு முறை பாழாயின. "உரிமையாளர் வரும்போது கடவுள் அவனுக்கு ஞானத்தைக் கொடுப்பார், அவன் அதைக் கண்டுபிடித்துக் கொள்வான்" என்றாள் உர்சுலா. இந்த விநாடி அல்லது அடுத்த விநாடி அவள் இறந்துபோகக் கூடுமென்று சாந்தா சோபியா தெ லா பியாதாத் உறுதியாக இருந்தாள். ஏனெனில் இயற்கையிலேயே சில குழப்பங்களை அந்த நாட்களில் கவனித்தாள். ரோஜாப் பூக்களில் கூஸ்ஃபுட்* செடியின் வாசனை வீசியது. ஒரு பானையில் வைத்திருந்த கோழி அவரை விதைகள் கீழே விழுந்து நட்சத்திர மீனின் ஜியோமிதி வடிவத்தில் தரையில் கிடந்தன. ஒரு இரவு ஆரஞ்சு நிறமுள்ள பறக்கும் தட்டுகள் வரிசையாக ஆகாயத்தின் குறுக்காகப் போனதைப் பார்த்திருந்தாள்.

பெரிய வெள்ளிக்கிழமை, காலையில் அவள் இறந்து கிடந்ததைப் பார்த்தார்கள். வாழைப்பழக் குழுமம் இருந்த நாட்களில், அவளுக்குத் தன்னுடைய வயதைக் கணக்குப் போட உதவியபோது நூற்றிப் பதினைந்துக்கும் நூற்றி இருபத்திரண்டுக்கும் இடையில் என்று கணக் கிட்டிருந்தாள். அவுரேலியானோ எடுத்து வரப்பட்ட கூடையைவிடச் சற்றுப் பெரிய அளவிலிருந்த சவப்பெட்டியில் வைத்து அடக்கம் செய்தார்கள். இறுதிச் சடங்குக்கு மிகக் குறைவானவர்களே இருந்தார்கள். பாதிக் காரணம், அவளை நினைவு வைத்திருப்பவர் களாக அதிகம் பேர் மிஞ்சியிருக்கவில்லை. அன்றைய பகல் மிகவும் வெப்பமாக இருந்தது இன்னொரு பாதிக் காரணம். பறவைகள் குழப்பத்தில், சுடும் பயிற்சியில் இலக்காகப் பயன்படுத்தப்படும் புறா வடிவக் களிமண் வட்டுகளைப் போலப் பறந்து சுவர்களில் மோதிக் கொண்டன; ஜன்னல் திரைகளை விலக்கி நுழைந்து படுக்கையறை களில் செத்து விழுந்தன.

முதலில் அது கொள்ளை நோயாக இருக்குமென்று நினைத்தார்கள். குறிப்பாகப் பகலுறக்க வேளையில் ஏராளமான செத்த பறவைகளைப் பெருக்கித் தள்ளியதில் வீட்டுப் பெண்கள் களைத்துப் போனார்கள். ஆண்கள் அவற்றை வண்டியில் சுமத்தி ஆற்றுப்படுகையில் கொண்டு போய்க் கொட்டினார்கள். ஈஸ்டர் நாள் அன்று நூறு வயதைத் தாண்டிய பாதிரியார் அருட்தந்தை அந்தோனியோ இசபெல் பீடத்தி லிருந்து ஒரு பிரகடனம் செய்தார். பறவைகளின் மரணம் அலையும் யூதனின் தீமையான பாதிப்பால் விளைந்தது என்றும் சம்பவத்துக்கு முந்தைய இரவில் தான் அவனைப் பார்த்ததாகவும் சொன்னார். வெள்ளாட்டுக்கும் அவிசுவாசி ஒருத்திக்கும் பிறந்த நரகஜீவி அவன்; அவனுடைய மூச்சு ஆகாயத்தையே சாம்பலாக்கிவிடும். அவன்

* அசகாரக கிழங்கு

பார்த்தாலே புதிதாகத் திருமணமான பெண்கள் அரக்கர்களைப் பெற்றெடுப்பார்கள் என்றும் சொன்னார். அவருடைய ஊழிமுடிவுப் பேச்சை நகரவாசிகளில் பலரும் நம்பவில்லை. கிழவரின் பிதற்றல் என்றார்கள். புதன்கிழமை அதிகாலை ஒரு பெண் எல்லாரையும் எழுப்பினாள். அவள் பிளவுபட்ட குளம்புகளுள்ள இரண்டு கால் மிருகத்தைப் பார்த்திருந்தாள். அதைப் பார்க்கச் சென்றவர்களுக்குத் திருச்சபைப் பாதிரியார் வர்ணித்ததுபோலப் பயங்கரமான உயிரினம் இருப்பதில் சந்தேகம் ஏற்படவில்லை. அதன் காலடிச் சுவடுகள் தெளிவாகவும் பிசகில்லாமலும் இருந்தன. எல்லாரும் சேர்ந்து அதைப் பிடிக்க அவரவர் முற்றங்களில் பொறிகளை வைத்தார்கள். பிடிக்கவும் செய்தார்கள். உர்சுலா இறந்து இரண்டு வாரங்களுக்குப் பிறகு கன்றுக் குட்டியின் விபரீதமான பலத்த உறுமலை மிக நெருக்கத்தில் கேட்டு பெத்ரா கோட்டேஸூம் அவுரேலியானோ செகுந்தோவும் பயந்து விழித்தார்கள். எழுந்துபோய்ப் பார்த்தபோது கூட்டமாக நின்ற சிலர் சருகுகள் மூடிக் கிடந்த குழிக்குள்ளே விழுந்திருந்த அரக்க மிருகத்தைக் கூர்மையான ஈட்டிகளால் குத்தி மேலே தூக்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். அது உறுமலை நிறுத்தியது. சிறிய மானைவிட அதிக உயரமில்லை என்றாலும் எருதைப் போலப் பாரமாக இருந்தது. அதன் காயங்களிலிருந்து பச்சை நிறமுள்ள பிசுபிசுப்பான திரவம் வழிந்தது. உடல் முரட்டு ரோமத்தால் மூடப்பட்டிருந்தது. அதில் சிறிய உண்ணிகள் அப்பியிருந்தன. தோல் கெட்டியாக, ரிமோரா மீனின் செதில்களுடன் இருந்தது. பாதிரியாரின் வர்ணனைக்கு மாறாக அதன் மனித உறுப்புகள் மனிதருடையவை என்பதைவிடச் சீக்காளித் தேவதையுடையவை போலிருந்தன. கைகள் இறுக்கமானதாகவும் ஆடிக்கொண்டுமிருந்தன. கண்கள் பெரியவையாக, மந்தமானவையாக இருந்தன. தோள்பட்டைகளிலிருந்த வலுவான சிறகுகள் சிதைந்திருந்தன. விறகுவெட்டும் கோடரியால் சீவப்பட்டிருக்க வேண்டும். சதுக்கத்தில், எல்லாரும் பார்க்கட்டும் என்று ஒரு வாதுமை மரத்தில் அதைத் தலைகீழாகக் கட்டித் தொங்கவிட்டார்கள். அழுகத் தொடங்கியதும் அதன் வேசைப் பிறப்பை வைத்து மிருகம் என்று ஆற்றில் தள்ளுவதா அல்லது மனிதன் என்று புதைப்பதா என்பதைத் தீர்மானிக்க முடியாமல் சொக்கப்பனை போட்டுக் கொளுத்தினார்கள். பறவைகளின் சாவுக்கு அதுதான் காரணமாக இருந்ததா என்று ஒருபோதும் நிரூபிக்கப்படவில்லை. புதிதாகத் திருமணமான பெண்கள் அரக்கர்களை வயிற்றில் சுமக்கவில்லை. வெப்பத்தின் உக்கிரமும் தணியவில்லை.

அந்த ஆண்டின் இறுதியில் ரெபேக்கா இறந்துபோனாள். அவளுடைய வாழ்நாள் பணிப்பெண்ணாக இருந்த அர்ஜெண்டினா, தனது எஜமானி மூன்று நாட்களாக மூடியே வைத்திருக்கும் படுக்கையறைக் கதவை உடைத்து உதவுமாறு அதிகாரிகளிடம் கேட்டிருந்தாள். அவர்கள் வந்து தனது தனிமைப் படுக்கையில் படர்தாமரை பீடித்து வழுக்கையாகியிருந்த தலையுடன் வாயில் விரலை வைத்து இறால் மீனைப்போலச் சுருண்டு கிடந்தவளைப் பார்த்தார்கள். நல்லடக்கப் பொறுப்பை அவுரேலியானோ செகுந்தோ ஏற்றுக்கொண்டான். வீட்டை மராமத்துச் செய்து விற்க முயன்றான். ஆனால் சிதைவு ஏற்கனவே

அதிகமாகியிருந்தது. சுவர்களில் அடித்த புதுச் சாயம் செதில் செதிலாக உதிர்ந்தது. தடுப்பதற்குக் காரை இல்லாததால் களைகள் தரையைப் பிளந்து முளைத்தன. உத்தரங்களிலிருந்து ஐவிக் கொடிகள் தொங்கின.

பிரளயத்துக்குப் பிறகு நிலைமைகள் அப்படித்தான் தொடர்ந்தன. மக்களின் சோம்பேறித்தனம் மறதியின் பெரும் வேட்கைக்கு நேர் எதிராக இருந்தது. மறதி கொஞ்சம் கொஞ்சமாக இரக்கமற்ற விதத்தில் நினைவுகளைக் குழி பறித்துக் கொண்டிருந்தது. எந்த அளவுக்கு என்றால், அந்தச் சமயத்தில் நீர்லாந்தியா ஒப்பந்தத்தின் இன்னொரு ஆண்டு விழா வந்தது. குடியரசு அதிபரின் தூதர்கள் சிலர் மகோந்தாவுக்கு வந்து கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவால் மறுக்கப்பட்ட கௌரவ விருதை மறுபடியும் அளிக்க விரும்பினார்கள். புயேந்தியாவின் வாரிசுகளில் ஒருவரைப் பார்க்க முடியும் என்ற தகவலைச் சொல்லக் கூடிய யாராவது கிடைப்பார்களா என்று பிற்பகல் முழுவதும் தேடினார்கள். விருது கட்டித் தங்கத்தில் செய்ததாக இருக்கும் என்று நினைப்பில் அவுரேலியானோ செகுந்தோ அதை ஏற்றுக்கொள்ள ஆசைப்பட்டான். தூதர்கள் ஏற்கனவே பிரகடனங்களையும் உரைகளையும் தயார் செய்து வைத்திருக்கும் நிலையில் அது சரியல்ல என்று பெத்ரா கோட்டேஸ் அவனிடம் சொன்னாள். ஏறத்தாழ அதே தருணத்தில்தான் மெல்குயாதெஸின் கடைசி வாரிசுகள் திரும்ப வந்தார்கள். நகரம் மிகவும் தோற்றுப் போயிருப்பதையும் நகரவாசிகள் வெளி உலகத்திலிருந்து மிகவும் விலகியிருப்பதையும் புரிந்துகொண்டார்கள். மீண்டும் ஒருமுறை, பாபிலோனிய அறிஞர்களின் புதிய கண்டுபிடிப்பு என்று காந்தமேற்றப்பட்ட உலோகப் பாளங்களை வீடுகளினூடே இழுத்துப் போனார்கள். இன்னொரு முறை பிரம்மாண்டமான உருப்பெருக்குக் கண்ணாடியை வைத்து சூரியக் கதிர்களைக் குவித்துக் காண்பித்தார்கள். ஆனால் கெட்டில்கள் தாமாக விழுவதையோ பாத்திரங்கள் உருள்வதையோ பார்த்து வாய் பிளந்து நிற்கவோ, நாடோடிப் பெண் பொய்ப் பற்களை வைப்பதையும் எடுப்பதையும் ஐம்பது சென்ட் கொடுத்துத் திகைப்படையவோ ஆட்கள் இல்லை. கண்ணாடிக் கூரை அமைத்ததும் பிஷப்புகளுக்குரிய வெல்வெட் பதித்ததுமான பெட்டியைத் திரு. பிரவுன் எதனுடன் இணைக்கச் சொன்னாரோ அந்த நூற்றியிருபது பெட்டிகள் கொண்ட பழ ரயிலின் எச்சமாக, யாரும் ஏறவோ இறங்கவோ செய்யாத ஒரு உடைசல் மஞ்சள் ரயில் கைவிடப்பட்ட ஸ்டேஷனில் தாமதிக்காமல் ஒரு பிற்பகல் முழுவதும் நகரத்தைக் கடந்துகொண்டிருந்தது. பறவைகளின் விநோத மரணத்தையும் அலையும் யூதனின் பலியையும் பற்றிய அறிக்கையைக் குறித்து விசாரணை நடத்துவதற்காக வந்த திருச்சபைப் பிரதிநிதிகள் அருட்தந்தை அந்தோனியோ இசபெல் குழந்தைகளுடன் கண்ணாமூச்சி ஆடிக் கொண்டிருந்ததைப் பார்த்து அவருடைய அறிக்கை மனப்பிறழ்வின் விளைவு என்று அறிந்து அவரை மனநல விடுதிக்குக் கொண்டுபோனார்கள். சிறிது காலத்துக்குப் பிறகு புதிய தலைமுறையைச் சேர்ந்த சிலுவைப் போர் வீரரும் பிடிவாதக்காரரும் வளைந்து கொடுக்காதவரும் துணிச்சலானவருமான அருட்தந்தை அகஸ்டோ ஏஞ்சலை அனுப்பி வைத்தார்கள். மக்களின் ஆன்மா உறக்கத்தில்

ஆழ்ந்துவிடக் கூடாது என்பதற்காக அவரே ஒரு நாளைக்குப் பலமுறை மணியை அடித்தார். வீடு வீடாகப் போய்த் தூங்கிக் கொண்டிருப்பவர் களை எழுப்பிப் பலிப்பூசைக்கு வர வைத்தார். ஆனால் ஒரு வருடம் முடியும் முன்பே, தகிக்கும் புழுதி எல்லாவற்றையும் பழையதாகவும் நைந்ததாகவும் ஆக்கியிருந்ததாலும் மத்தியானச் சாப்பாட்டிலிருந்த மாமிச உருண்டைகள் பொறுக்க முடியாத வெப்பத்தால் பகலுறக்க வேளையில் அயர்ச்சியைக் கொடுத்ததாலும் அந்தக் காற்றில் கலந்திருந்த உதாசீன மனநிலைக்கே அவரும் ஆட்பட்டார்.

உர்சுலாவின் மரணத்தோடு வீடு மறுபடியும் கவனிப்பாரில்லாமல் ஆனது. தீர்மானங்களும் தீவிரமும் கொண்ட அமரந்தா உர்சுலாவால் கூட அதைப் பழைய நிலைக்கு மீட்க முடியவில்லை. பல ஆண்டு களுக்குப் பிறகு அமரந்தா உர்சுலா திருமணம் செய்துகொண்டாள். மகிழ்ச்சியானவளாகவும் பாரபட்சமில்லாத நவீனப் பெண்ணாகவும் தரையில் காலூன்றியவளாகவும் இருந்தாள். மழை ஓதத்தை விரட்டக் கதவுகளையும் ஜன்னல்களையும் திறந்து வைத்தாள். தோட்டத்தை மீண்டும் அமைத்தாள். பட்டப் பகலிலும் முற்றத்தில் நடமாடிக் கொண்டிருந்த செவ்வெறும்புகளைக் கொன்றாள். மறந்துபோன விருந்தோம்பல் உணர்வை மீண்டும் எழுப்ப வீண் முயற்சி செய்தாள். பெர்னாண்டாவின் துறவு ஆசை, உர்சுலாவின் நூறு ஆண்டுகளின் நீரோட்டத்தாலும் ஊடுருவ முடியாத நெடுஞ்சுவராக இருந்தது. வறண்ட காற்று வீட்டுக்குள் கடக்கும்போது கதவுகளைத் திறக்க மறுத்தாள். அதுமட்டுமல்ல உயிரோடு புதைக்கப்பட வேண்டும் என்ற தகப்பனின் கட்டளைக்குப் பணிந்து ஜன்னல்களில் சிலுவை வடிவப் பலகைகளை ஆணியடித்து மூடினாள். கண்ணுக்குப் புலப்படாத மருத்துவர்களுடன் நடத்திய விலை அதிகமான கடிதத் தொடர்பு தோல்வியில் முடிந்தது. கணக்கில்லாத முறை மாற்றி வைத்த பிறகு முன்னரே ஒப்புக்கொண்ட தேதியிலும் நேரத்திலும் அறையைச் சாத்திக்கொண்டு வெள்ளை நிறப் போர்வையை மட்டும் போர்த்தி வடக்குப் பக்கமாகத் தலையை வைத்துப் படுத்தாள். இரவு ஒரு மணிக்கு பனித் திரவத்தில் நனைத்த கைக்குட்டையால் தலையை மூடுவதாக உணர்ந்தாள். அவள் விழித்து எழுந்தபோது சூரியன் ஜன்னலில் பிரகாசித்துக் கொண்டிருந்தது. அவளுடைய உடலில் கவட்டையி லிருந்து மார்பெலும்பு வரைவில் வடிவத்தில் ஒரு காட்டுமிராண்டித் தனமான தையல் போடப்பட்டிருந்தது. சொல்லப்பட்ட ஓய்வை முழுமையாக்கும் முன்பே அறியாத டாக்டரிடமிருந்து கலவரப்படுத்தும் கடிதமொன்று அவளுக்கு வந்தது. அவர்கள் அவளை ஆறு மணி நேரம் பரிசோதனை செய்திருந்தார்களென்றும் அவள் பலமுறையும் மிக எச்சரிக்கையுடன் விவரித்ததுப் போல அறிகுறிகள் எதையும் பார்க்க முடியவில்லை என்றும் தெரிவித்திருந்தார்கள். பொருட்களை அவற்றின் பெயரால் அழைக்காமல் வேறு பெயரால் அழைக்கும் வழக்கத்திலிருந்துதான் உண்மையில் இந்தப் புதிய குழப்பத்துக்குக் காரணம். டெலிபதி அறுவைச் சிகிச்சை நிபுணர்கள் கருப்பையில் சின்னப் புள்ளியைப் பார்த்தார்கள். பெஸ்ஸரி* மூலமே அதைச் சரி

* கருத்தடை வளையம்

செய்திருக்கலாம். ஏமாற்றமடைந்த பெர்னாண்டா மேலும் தகவல்களைப் பெற முயன்றாள். ஆனால் அந்த மருத்துவர்கள் அதன் பின்னர் அவளுடைய கடிதங்களுக்குப் பதில் அளிக்கவில்லை. தெரியாத ஒரு வார்த்தையின் பொருளால் தோற்கடிக்கப்பட்டதாக உணர்ந்தாள். அந்த அவமானத்தைப் பொருட்படுத்தாமல் பெஸ்ஸரி என்ற வார்த்தையின் அர்த்தத்தைக் கேட்டுத் தெரிந்துகொள்ளத் தீர்மானித்தாள். அப்போதுதான் அந்தப் பிரெஞ்சுக்கார டாக்டர் மூன்று மாதங்களுக்கு முன்பே உத்தரத்தில் தூக்குப்போட்டு இறந்துபோனார் என்றும் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் படையில் இருந்த ஒருவன் நகர மக்களின் விருப்பத்துக்கு எதிராகப் பிணத்தை அடக்கம் செய்தான் என்றும் தெரிந்துகொண்டாள். அதை மகன் ஹோசே அர்க்காதியோவிடம் வெளிப்படையாகச் சொன்னாள். அவன் ரோமிலிருந்து பெஸ்ஸரிகளையும் கூடவே அதன் உபயோகத்தைப் பற்றிய விவரக் குறிப்பையும் அனுப்பியிருந்தான். தன்னுடைய பிரச்சனை யாருக்கும் தெரியக்கூடாது என்பதனால் அதை வாசித்து மனப்பாடம் செய்துகொண்ட பிறகுக் கழிப்பறையில் போட்டு நீரை இறைத்தாள். அந்த முன்னெச்சரிக்கை பயனில்லாதது. ஏனெனில் அந்த வீட்டிலிருந்தவர்கள் யாரும் அவளைக் கவனிப்பதே இல்லை. சாந்தா சோபியா தெ லா பியாதாத் முதுமையின் தனிமையில் நடமாடிக் கொண்டிருந்தாள். அவர்கள் அருந்தும் கொஞ்சம் உணவைச் சமைத்தாள். ஹோசே அர்க்காதியோ செகுந்தோவை கவனித்துக் கொள்வதிலேயே பெரும்பாலும் ஈடுபட்டிருந்தாள். அமரந்தா உர்சுலா குறிப்பிட்ட சில வசீகரங்களை அழகி ரெமேதியோசிடமிருந்து பெற்றிருந்தாள். முன்பு உர்சுலாவைச் சீண்டுவதில் கழிந்த அந்த நேரத்தைப் பள்ளிப் பாடங்களுக்குச் செல விட்டாள். படிப்பின் மீது அவள் காட்ட ஆரம்பித்திருந்த சரியான முடிவும் ஈடுபாடும் மேமே அவனுக்குள் ஏற்படுத்திய பெரும் நம்பிக்கைகளை அவுரேலியானோ செகுந்தோவுக்குத் திரும்பவும் கொடுத்தது. வாழைப்பழக் குழுமக் காலத்தில் நிறுவப்பட்ட வழக்கத்துக்கு ஏற்ப அவளைப் பிரஸ்ஸெல்ஸுக்குப் படிக்க அனுப்புவதாக வாக்களித்தான். அந்தக் கற்பனையில் பிரளயத்தால் பாழடைந்துபோன நிலங்களைப் பண்படுத்த முயன்றான். சில நேரங்களில் அமரந்தா உர்சுலாவைப் பார்ப்பதற்காக வீட்டுக்கு வந்தான். ஏனெனில் அவன் பெர்னாண்டாவுக்கு அந்நியமானவனாகியிருந்தான். வளரிளம் பருவத்தை நெருங்கியிருந்த குட்டி அவுரேலியானோ ஒதுங்கிய இயல்புள்ளவனாக மாறியிருந்தான். வயது அதிகமாகும்போது பெர்னாண்டாவின் மனமும் மென்மையாகிவிடும் என்றும் நிச்சயமாக யாரும் அவனுடைய பிறப்பைப் பற்றிச் சந்தேகத்துடன் ஊகிக்க முடியாத நகர வாழ்க்கையுடன் சிறுவன் கலந்துவிடுவான் என்றும் அவுரேலியானோ செகுந்தோ நம்பினான். தனிமையான துறவைத்தான் அவுரேலியானோ விரும்பினான் என்று தோன்றியது. ஏனெனில் வீட்டு வாசலைத் தாண்டித் தெருவிலிருந்து தொடங்கும் உலகத்தைத் தெரிந்துகொள்ளும் குறைந்த அளவு ஆசைகூட அவனுக்கு இல்லை. மெல்குயாதெஸின் அறைக்கதவை உர்சுலா திறந்து வைத்திருக்கச் செய்தது முதல் அங்கேயே சுற்றத் தொடங்கினான். பாதி திறந்த கதவு வழியாக உள்ளே எட்டிப் பார்த்துக்கொண்டிருந்தான். எப்போது ஹோசே அர்க்காதியோ செகுந்தோவும் அவனும் பரஸ்பரம்

நெருங்கினார்கள் என்று யாருக்கும் தெரியவில்லை. நட்புத் தொடங்கி நீண்ட காலத்துக்குப் பிறகு, ரயில் நிலையத்தில் நடந்த படுகொலையைப் பற்றிச் சிறுவன் பேசிக் கொண்டிருந்தபோதுதான் அவுரேலியானோ செகுந்தோ அதைக் கண்டுபிடித்தான். உணவு மேஜைக்கு அருகில் யாரோ ஒருவர் நகரம் பாழாகிப் போனதற்குக் காரணம் வாழைப்பழக் குழுமம் அதைக் கைவிட்டுப் போனதுதான் என்றார். முதிர்ச்சியுடனும் பெரியவர்களுக்குரிய பக்குவத்துடனும் சிறுவன் அவுரேலியானோ வாழைப்பழக் குழுமம் சீரழித்து நாசமாக்கி ஒடுக்கும்வரை, மகோந்தா வளமாகவும் முன்னேற்றமாகவும் இருந்தது என்றும் தொழிலாளர்களுக்குக் கொடுத்த வாக்குறுதியிலிருந்து நழுவுவதற்காகக் குழுமத்தின் பொறியாளர்களே பிரளயத்தை உண்டாக்கினார்கள் என்றும் அவரை மறுத்தான். சுருக்கமாகவும் ஆனால் நம்பகமான தகவல்களுடனும் ரயில் நிலையத்தில் நெருக்குண்டிருந்த மூவாயிரத்துக்கும் மேற்பட்ட தொழிலாளர்களை எப்படி ராணுவத்தினர் இயந்திரத் துப்பாக்கிகளால் வீழ்த்தினார்களென்றும் சடலங்களை இருநூறு பெட்டிகள் பூட்டிய ரயிலில் ஏற்றிக் கடலில் கொண்டுபோய் வீசினார்களென்றும் விளக்கிக் கொண்டிருப்பதைப் பார்த்த பெர்னாண்டாவுக்கு அவன் ஞானிகளின் நடுவே நின்ற யேசுவின் நாத்திகப் பகடியாகத் தென்பட்டான். பெரும்பாலானவர்களைப் போல அவளும் எதுவுமே நடக்கவில்லை என்று அதிகாரத்தரப்பு சொன்னதைத்தான் நம்பியிருந்தாள். கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவை அராஜகக் கருத்துகளைப் பையன் மரபுரிமையாகப் பெற்றிருக்கிறானோ என்று பெர்னாண்டா கலவரப்பட்டாள். அவனைப் பேசாமலிருக்கச் சொன்னாள். அவுரேலியானோ செகுந்தாவோ அவனிடம் தன்னுடைய இரட்டைச் சகோதரனின் சாயலைப் பார்த்தான். எல்லாரும் அவனுக்குப் பைத்தியம் என்று முடிவு கட்டியிருந்த அந்தச் சமயத்தில் உண்மையில் குடும்பத்தில் தெளிவாக இருந்தது ஹோசே அவுரேலியானோ செகுந்தோ மட்டுமே. அவன் குட்டி அவுரேலியானோவுக்கு எழுதவும் வாசிக்கவும் கற்றுக் கொடுத்தான். பட்டயங்களை வாசிக்கக் கற்றுக் கொடுத்தான். பல ஆண்டுகளுக்குப் பிறகு, அவுரேலியானோ உலகத்தில் ஒருவனாக ஆன பிறகு, வாழைப்பழக் குழுமம் மகோந்தா நகரத்தை எப்படி நிர்மூலமாக்கியது என்று சொந்த விளக்கங்களுடன் மக்களிடம் எடுத்துச் சொன்னபோது அவர்கள் அதையெல்லாம் அவனுடைய பேதலிப்பாகவே நினைத்தார்கள். ஏனெனில் அது வரலாற்றாளர்கள் உருவாக்கிப் பள்ளிக்கூடப் பாடப் புத்தகங்களில் புனிதப்படுத்தியிருந்தவற்றை அடிப்படையாகவே எதிர்ப்பதாக நினைத்தார்கள். வறண்ட காற்றோ புழுதியோ வெக்கையோ ஒருபோதும் உள்ளே நுழையாத ஒதுக்கமான அறையில், இருவருமே பிறந்திராத காலத்திய உலகத்தைப் பற்றி, ஜன்னலையொட்டி முதுகு பதிய உட்கார்ந்திருந்த காக்கைச் சிறகு போன்ற தொப்பியை அணிந்த மனிதன் சொன்ன கதைகளைக் கேட்டு இருவரும் மரபை மீட்கும் பார்வையைப் பெற்றார்கள். மார்ச் மாதம் எப்போதும் எப்படியிருந்தது என்பதையும் மகோந்தா எப்போதும் எப்படி இருந்தது என்றும் இருவரும் ஓரே நேரத்தில் விளக்கினார்கள். அப்போதுதான் குடும்பத்தினர் சொன்னதுபோல ஹோசே அர்க்காதியோ

புயேந்தியா பைத்தியமல்ல என்பதும் மக்களுக்குப் புரிந்தது. காலம் இடறி விழுந்து விபத்துக்குள்ளாகிச் சிதறி நிரந்தமான துணுக்குகளை ஓர் அறைக்குள் விட்டுப் போயிருக்கும் உண்மையை உணர்ந்துகொள்ளப் போதுமான மனத் தெளிவு அவருக்கு இருந்தது என்பதையும் அப்போதுதான் மக்கள் புரிந்துகொண்டார்கள். ஹோசே அர்க்காதியோ செகுந்தோ பட்டயங்களில் இருக்கும் பூடகமான எழுத்துக்களை வகைப்படுத்தினான். அது நாற்பத்தேழிலிருந்து ஐம்பத்து மூன்றுக்குள் வரும் எழுத்துகள் கொண்ட அரிச்சுவடி; அதைப் பிரித்துப் பார்த்தால் திற்றலாகவும் இறுக்கலாகவும் தென்பட்டது; அதுவே மெல்குயாதெஸின் நேர்த்தியான கையெழுத்தில் கொடியில் காயப்போட்டத் துணிகளைப் போல இருந்தது. ஆங்கிலக் கலைக் களஞ்சியத்தில் அதே போன்ற அட்டவணையைப் பார்த்திருந்தது அவுரேலியானோவுக்கு ஞாபகம் வந்தது. கலைக் களஞ்சியத்தை அறைக்கு எடுத்து வந்து ஹோசே அர்க்காதியோ செகுந்தோவின் கையிலிருந்த பட்டயங்களுடன் ஒப்பிட்டான். இரண்டும் ஒன்றே.

புதிர் லாட்டரி நடத்திக் கொண்டிருந்த காலத்தில் அவுரேலியானோ செகுந்தோ தொண்டைக்குள்ளே அழுகை அடைத்துக்கொண்டது போல உணர்ந்து அடிக்கடி எழுந்தான். கெட்ட காலம் கொண்டு வந்திருக்கும் சோதனைகளில் ஒன்றாக இருக்கலாம் என்று பெத்ரா கோட்டேஸ் சொன்னாள். ஒரு வருடத்துக்கும் மேலாகத் தினமும் காலையில் அவனுடைய மேல் அண்ணத்தில் குச்சத்தால் தேனைத் தடவிவிட்டாள். கொஞ்சம் முள்ளங்கிச் சாற்றையும் புகட்டினாள். தொண்டை அடைப்பு கட்டுப்படுத்த முடியாததாக மாறியபோது மூச்சுவிடச் சிரமப்பட்டான். குணப்படுத்தக் கூடிய ஏதாவது மூலிகை வைத்திருப்பாளா என்று பார்ப்பதற்காகப் பிலர் தெர்னேராவைத் தேடிப் போனான். துணிச்சல்காரியான அந்தப் பாட்டிக்கு நூறு வயதுக்கும் அதிகமாக ஆகியிருந்தது. ரகசியமாக ஒரு விபச்சார விடுதியை நடத்திக் கொண்டிருந்தாள். மருந்துச் சிகிச்சையைவிட சீட்டு ஆரூடமே பிரச்சனைக்கு வழி என்றாள். டயமண்ட் ராணியின் குரல்வளை ஸ்பேடு ஜாக்கின் ஈட்டியால் காயப்படுத்தப்பட்டிருந்ததைச் சீட்டில் பார்த்தாள். கணவனைத் திரும்ப வீட்டுக்கு வரவழைப்பதற்காக அவள் சித்துவேலை செய்திருப்பதாகச் சொன்னாள். அவனுடைய படத்தில் ஊசிகளைக் குத்திவைப்பதன் மூலம் அவனை வசியம் செய்யப் பார்த்து சூனிய வேலையில் அற்பஅறிவு மட்டுமே இருப்பதால் பிரயோகம் தவறியதில் அவனுக்குத் தொண்டைக்குள்ளே கட்டி வந்திருக்கிறது என்ற முடிவுக்கு வந்தாள். திருமணத்தன்று எடுத்ததைத் தவிர அவுரேலியானோ செகுந்தோவிடம் வேறு படங்கள் இல்லை. இருப்பவையும் திருமண ஆல்பத்தில் இருந்தன. மனைவி பார்க்காத போது வீடு முழுவதும் வேறு படம் இருக்கிறதா என்று தேடினான். கிடைக்கவில்லை. கடைசியாக ஒப்பனை மேஜையின் இழுப்பறைக்குள் சின்னப் பெட்டிக்குள் இருந்த அரை டஜன் வளையங்களைப் பார்த்தான். அந்தச் சிறிய ரப்பர் வளையங்களைச் செப்படி வித்தைப் பொருட்கள் என்று நினைத்து பிலர் தெர்னேராவிடம் காட்டுவதற்காக அவற்றையெடுத்துப் பையில் போட்டுக்கொண்டான். அவளுக்கும்

புரியவில்லை. சந்தேகமளிப்பவையாக இருந்தன. அவற்றைப் பின்கட்டில் கட்டிவைத்திருந்த கணப்படுப்பில் போட்டு எரித்தாள். பெர்னாண்டா என்று சொல்லப்பட்ட சாபத்திலிருந்து விடுபட முட்டையிடும் கோழியொன்றைக் குளிப்பாட்டி செந்தவிட்டு மரத் தடியில் உயிரோடு புதைக்கச் சொன்னாள். மிகுந்த நம்பிக்கையுடன் அதைச் செய்து புதைத்த இடத்தில் சருகுகள் போட்டு மண்ணை மூடியபோது நன்றாக மூச்சுவிட முடிவதாக உணர்ந்தான். கண்ணுக்குப் புலனாகாத மருத்துவர்களின் பழிவாங்கும் நடவடிக்கையால்தான் வளையங்கள் மாயமாகிப் போனதாக விளங்கிக்கொண்ட பெர்னாண்டா தனது உள்ளாடைக்குள் பையைத் தைத்து மகன் அனுப்பிய புதிய வளையங்களை வைத்துக்கொண்டாள்.

கோழியை மரத்தடியில் புதைத்து ஆறு மாதங்களுக்குப் பின்பு அவுரேலியானோ செகுந்தோ நள்ளிரவில் இருமலின் தாக்குதல் தாளாமல் எழுந்தான். நண்டு ஒன்று தன் கால்களால் கழுத்தை இறுகக் கவ்வி நெரிப்பதாகத் தோன்றியது. மாந்திரீக வளையங்கள் எல்லாவற்றையும் அழித்த பிறகும் நேர்த்திக்கடனாக விடப்பட்ட கோழிகள் எல்லா வற்றையும் புதைத்த பிறகும் தனித்த, சோகமான ஒரு உண்மை இருப்பதை அப்போதுதான் புரிந்துகொண்டான், அவன் இறந்துகொண் டிருக்கிறான். அதை யாரிடமும் சொல்லவில்லை. மரண பயத்தால் அமரந்தாவை பிரஸ்ஸல்சுக்கு அனுப்பாமல் முன்பு எப்போதுமில்லாத வகையில் உழைத்தான். வாரம் ஒன்று என்பதற்குப் பதிலாக வாரம் மூன்று லாட்டரிகளை நடத்தினான். மிக அதிகாலையிலேயே நகரத்தின் வழியே அவன் செல்வதைப் பார்க்க முடிந்தது. நகரத்தின் ஒதுக்குப்புற மானவையும் துயரம் நிரம்பியவையுமான பகுதிகளுக்கெல்லாம்கூடப் போனான். சாகப் போகும் ஒருவனுக்கு மட்டுமே விளங்கும் ஒருவிதப் பதற்றத்துடன் லாட்டரிச் சீட்டுகளை விற்க முயன்றான். 'டிவைன் புரோவிடன்ஸ்' இதோ. நூறு வருடங்களுக்கு ஒரு முறை மட்டுமே நல்வாய்ப்பை நழுவவிடாதீர்கள்" என்று கூவிக் கூவி விற்றான். உற்சாகமாகவும் இனிமையாகவும் அரட்டையடிப்பவனாகவும் காட்டிக்கொள்ளப் பரிதாபமாக முயன்றான். வியர்வையும் வெளிறலும் அவன் கவனம் வியாபாரத்தில் இல்லை என்று காட்டப் போதுமா னவையாக இருந்தன. சில சமயம் யார் பார்வையிலும் பட்டுவிடாமல் காலியாகக் கிடக்கும் இடங்களுக்குப் போய், தன்னை உள்ளுக்குள் கிழித்துக்கொண்டிருக்கும் வளை நகங்களிடமிருந்து விடுபட முயற்சிப்பான்.

நள்ளிரவில் சிவப்பு விளக்குத் தெருக்களுக்குப் போய் போனோ கிராப்புகளைச் சுற்றியமர்ந்து அழுதுகொண்டிருக்கும் தனிமையான பெண்களிடம் அதிர்ஷ்டத்தைப் பற்றிச் சொல்லி ஆறுதல்படுத்தப் பார்ப்பான். லாட்டரிச் சீட்டுகளைக் காட்டி "இந்த எண்ணுக்கு நான்கு மாதமாகப் பரிசு விழவில்லை. அதை நழுவவிடாதீர்கள். வாழ்க்கை நீங்கள் நினைப்பதைவிடக் குறுகியது" என்பான். கடைசியாக அவர்களிடம் மரியாதை இழந்தான். அவர்கள் அவனைக் கேலி செய்ய ஆரம்பித்தார்கள். கடைசி நான்கு மாதங்களில் வழக்கமாக டான். அவுரேலியானோ என்று அழைத்துக் கொண்டிருந்தவர்கள்

அவனுடைய முகத்துக்கு நேராகவே திருவாளர். 'டிவைன் புரோவிடன்ஸ்' என்று சொன்னார்கள். அவனுடைய குரல் சுருதியிழந்துகொண் டிருந்தது. கம்மிக் கம்மி வந்து கடைசியில் நாயின் ஊளைபோல ஆனது. இருந்துங்கூட பெத்ரா கோட்டேஸின் வீட்டு வாசலில் ஆட்கள் வருவது குறைந்துவிடாமல் பார்த்துக் கொள்வதற்காக ஊக்கத்துடனேயே இருந்தான். குரலை இழந்து கொண்டிருப்பது தெரிந்ததும் இன்னும் சில நாட்கள் மட்டுமே தன்னால் வேதனையைப் பொறுத்துக் கொள்ள முடியும் என்றும் பன்றி லாட்டரியையும் ஆடு லாட்டரியையும் நடத்தி மகளை பிரஸ்ஸெல்ஸுக்கு அனுப்ப முடியாது என்றும் புரிந்துகொண்டான். பிரளயத்தால் தரிசாக்கப்பட்ட நிலங் களைப் பரிசளிக்கும் லாட்டரியை ஆரம்பிக்கும் திட்டத்தை யோசித்தான். இழந்ததையெல்லாம் அதில் வரும் பணம் மீட்டுத்தரும் என்று நினைத்தான். கோலாகலமான திட்டமாக இருந்ததால் மேயர் ஓர் அறிவிப்பை வெளியிட்டு அவனுக்கு ஆதரவை வழங்கினார். ஒரு சீட்டின் விலை நூறு பெசோக்கள் என்று நிர்ணயித்தான். சீட்டுகளை வாங்குவதற்காகவே உள்ளூர் அமைப்புகள் உருவாயின. ஒரு வாரத்துக் குள்ளாகவே எல்லாச் சீட்டுகளும் விற்றுத் தீர்ந்தன. லாட்டரிக் குலுக்கல் முடிந்த இரவு பரிசு பெற்றவர்கள், வாழைப்பழக் குழுமக் காலத்தில் நடைபெற்றது போன்ற பெரும் விழாவையே நடத்தினார்கள். அவுரேலியானோ செகுந்தோ, தன்னால் இனிமேல் பாட முடியாது என்பதால், நாயகன் பிரான்சிஸ்கோவின் மறக்கப்பட்ட பாடல்களை அக்கார்டியனில் வாழ்வில் இறுதிமுறையாக வாசித்தான்.

இரண்டு மாதங்கள் கழித்து அமரந்தா உர்சுலா பிரஸ்ஸெல்ஸுக்குப் போனாள். லாட்டரி விற்பனையில் கிடைத்த பணத்தை மட்டுமல்ல, முந்தைய மாதங்களில் ஒதுக்கி வைத்திருந்தவை, பழுதுபார்க்கப்பட முடியாமல் பழைய பொருட்களுடன் போட்டிருந்த பியானோலாவையும் க்ளேவிகார்ட்டையும் விற்றுக் கிடைத்த சிறு தொகை என எல்லா வற்றையும் அவுரேலியானோ செகுந்தோ அவளிடம் கொடுத்தான். அவனுடைய கணக்குப்படி அவளுடைய படிப்புக்கு அந்தத் தொகை போதுமானது. ஆனால் வீடு திரும்புவதற்கான செலவு பற்றாக்குறை யாக இருந்தது. பெர்னாண்டா இறுதி நிமிடம் வரை பயணத்தை எதிர்த்தாள். பிரஸ்ஸல்ஸ், பாரீசுக்கும் நிரந்தர நரகத்துக்கும் மிக அருகில் இருக்கிறதே என்ற யோசனையால் கலவரப்பட்டாள். அருட்தந்தை ஏஞ்சல் கொடுத்த ஒரு கடிதம் அவளைச் சமாதானப்படுத்தியது. கத்தோலிக்க இளம் பெண்களுக்காகக் கன்னியாஸ்த்ரீகளால் நடத்தப் படும் விடுதியின் முகவரிக்குக் கடிதம் எழுதப்பட்டிருந்தது. படிப்பு முடியும் வரை அந்த விடுதியிலேயே தங்கியிருப்பதாக அமரந்தா உர்சுலா வாக்குறுதியளித்தாள். அதற்கு மேலும், டோலெடோ*வுக்குச் செல்லும் பிரான்சிஸ்கன் சகோதரிகளின் குழு ஒன்றின் பாதுகாப்புடன் பயணம் செல்லுவதற்கும் பெல்ஜியத்தில் நம்பகமான துணையைக் கண்டு பிடித்துக் கொடுக்கவும் திருச்சபைப் பாதிரியாரே ஏற்பாடு செய்தார். அந்த அவசரக் கடிதத் தொடர்புகள் பயணத்தை முன் நகர்த்தும் ஒருங்கிணைப்பைச் செய்துகொண்டிருந்தபோது அவுரேலியானோ

* ஸ்பெயின் நாட்டு நகரம்

செகுந்தோ, பெத்ரோ கோட்டேஸின் உதவியுடன் பயணத் தளவாடங்களை ஆயத்தம் செய்தான். பெர்னாண்டாவின் சீதனப் பெட்டியில் ஒவ்வொன்றும் நேர்த்தியாக வைக்கப்படும்போதே அந்தப் பள்ளி மாணவி அவற்றைப் பார்த்து, எங்கே எந்த உடைகளையும் எந்தக் காலணிகளையும் அணிய வேண்டும் என்பதை மனப்பாடமாக்கிக் கொண்டாள். அட்லாண்டிக் கடலைக் கடக்கும் போது செப்புப் பொத்தான்கள் வைத்த நீல நிற துணிக் கோட்டும் சேரவேண்டிய இடத்தை அடைந்ததும் ஆட்டுத் தோல் ஷூக்களை அளிய வேண்டும் என்பது மனப்பாடமாகியிருந்தது. கப்பலிலிருந்து படகுக்குச் செல்லப் போடும் பலகை மேல் போகும்போது தண்ணீரில் விழுந்துவிடாமல் நடப்பது எப்படி என்று கற்றுக்கொண்டாள். சாப்பிடப் போவதைத் தவிர வேறு எதற்கு அறையைவிட்டோ சகோதரியர் குழுவைவிட்டோ போகக் கூடாது. எந்தக் காரணத்தைக் கொண்டும் கடற்பயணத்தின் போது ஆணோ பெண்ணோ யார் எந்தக் கேள்வியைக் கேட்டாலும் பதில் சொல்லக்கூடாது என்றும் எச்சரிக்கப்பட்டிருந்தாள். கடற் காய்ச்சலுக்கான சொட்டு மருந்துள்ள சின்னக் குப்பியையும் புயலை விரட்டுவதற்காக அருட்தந்தை ஏஞ்சல் தன் கைப்பட எழுதிய ஆறு பிரார்த்தனைகள் அடங்கிய குறிப்பேட்டையும் வைத்திருந்தாள். பெர்னாண்டா பணம் வைப்பதற்காகக் கித்தான் பெல்ட் ஒன்றைத் தயாரித்து தூங்கும்போதுகூட அதை அவிழ்த்துவிடக்கூடாது என்று அமரந்தா உர்சுலாவின் இடுப்பில் அதைக் கட்டிவிட்டிருந்தாள். அவளுடைய கழிவுப் பானையைப் படிக்கார நீராலும் எரிசாராயத்தாலும் கழுவி அதையும் கொடுத்துவிட பெர்னாண்டா முயன்றாள். பள்ளித் தோழிகள் கேலி செய்வார்கள் என்ற பயத்தில் அமரந்தா உர்சுலா அதை எடுத்துச் செல்ல மறுத்தாள். ஒரு சில மாதங்களுக்குப் பின்பு, ரயிலில் இரண்டாம் வகுப்புப் பெட்டியில் அமர்ந்து பெர்னாண்டாவின் கடைசிப் பங்கு அறிவுரையைக் கேட்பதற்காக ஜன்னல் கதவை இறக்க முயற்சி செய்துகொண்டிருந்த அவளைக் கடைசியாகப் பார்த்ததையே இறக்கும் தருணத்தில் அவுரேலியானோ செகுந்தோ நினைத்துக் கொண்டிருந்தான். இடதுதோள் பகுதியில் செயற்கை 'பேன்சி'ப் பூக்கள் வைத்துத் தைத்த இளஞ்சிவப்பு நிற உடையணிந்திருந்தாள். பக்கிள் வைத்த, குதி அதிகமில்லாத ஆட்டுத் தோல் செருப்பும் தொடையில் எலாஸ்டிக்கால் பிணைத்த சாட்டீன் ஸ்டாக்கிங்சும் அணிந்திருந்தாள். ஒல்லியான உடல். தளர்வான நீண்ட கூந்தல். உர்சுலாவுக்கு இந்த வயது இருக்கும்போது இருந்த உயிர்ப்புள்ள கண்கள். அழாமலும் புன்னகைக்காமலும் விடைபெற்றுக் கொண்டது அவளுடைய இயல்பை வெளிப்படுத்தியது. நகரத் தொடங்கிய ரயிலின் பெட்டியை ஒட்டி, அவள் கால்தடுக்கி விழக்கூடாது என்று பெர்னாண்டாவின் கையைப் பிடித்து நின்ற அவுரேலியானோவால் மகள் விரல் நுனிகளால் உதட்டிலிருந்து பறித்து வீசிய முத்தத்துக்குப் பதிலாகக் கையசைக்க முடியவில்லை. தம்பதியர் இருவரும் அசையாமல், அடிவானத்தின் கறுப்புத் தீற்றாக ரயில் கரைந்து மறைவதைப் பார்த்துக் கொண்டு பொசுக்கும் வெயிலில், திருமணத்துக்குப் பிறகு முதல் முறையாகக் கைகளைப் பிணைத்தபடி நின்றிருந்தார்கள். ஆகஸ்ட் ஒன்பதாம் தேதி, பிரெஸ்ஸெல்ஸிலிருந்து முதல் கடிதம் வருவதற்கு

முன்பு, அவ்ரேலியானோவுடன் மெல்குயாதெஸின் அறையில் அமர்ந்து ஹோசே அர்க்காதியோ செகுந்தோ தான் சொல்வது இன்னதென்று உணராமலேயே சொன்னான்: "எப்போதும் ஞாபகத்தில் வைத்திரு. அவர்கள் மூவாயிரத்துக்கும் அதிகமானவர்கள். கடலில் வீசியெறியப் பட்டார்கள்."

பிறகு பட்டயங்களின் மேலேயே விழுந்தான். கண்கள் திறந்தபடியே இருக்க இறந்தான். அதே நொடியில், பெர்னாண்டாவின் படுக்கையில் அவனுடைய இரட்டைச் சகோதரன் தனது குரல்வளையைத் தின்று கொண்டிருந்த இரும்பு நண்டுகளின் நீண்ட காலப் பலியின் இறுதிக்கு வந்தான். ஒரு வாரத்துக்கு முன்பு குரல் எழும்பாமல், மூச்சுவிட முடியாமல், எலும்பும் தோலுமாக மனைவியின் படுக்கையில் கிடந்துதான் சாவான் என்ற வாக்கைக் காப்பாற்றுவதற்காக வீடு திரும்பியிருந்தான். பெத்ரா கோட்டேஸ் அவனுக்கு உடைகளை எடுத்து வைக்க உதவி, துளிக் கண்ணீர் சிந்தாமல் அவனுக்கு விடைகொடுத்தாள். ஆனால் சவப்பெட்டியில் வைக்கப்படும்போது அணிவதற்காக வாங்கி வைத் திருந்த ஷூக்களைக் கொடுக்க மறந்தாள். எனவே அவன் இறந்து விட்டான் என்று கேள்விப்பட்டதும் கறுப்பு உடையை அணிந்து ஷூக்களைச் செய்தித்தாளில் சுற்றியெடுத்து வந்து பெர்னாண்டாவிடம் சடலத்தைப் பார்க்க அனுமதிக்குமாறு வேண்டினாள். பெர்னாண்டா அவளை வாசலைத் தாண்ட விடவில்லை.

"உன்னை என் இடத்தில் வைத்துப் பார்" பெத்ரா கோட்டேஸ் கெஞ்சினாள்.

"இந்த அவமானத்தைச் சகித்துக்கொள்வதென்றால் நான் அவரை அந்த அளவுக்கு நேசித்திருக்க வேண்டும் என்று கற்பனை செய்து பார்".

"வைப்பாட்டிகளுக்கு அவமானத்தைப் பற்றிப் பேச அருகதை இல்லை" பெர்னாண்டா பதிலளித்தாள். "அதனால் உன்னுடைய ஆசை நாயகன்களில் இன்னொருவன் சாகக் காத்திருந்து அவனுக்கு இந்த ஷூக்களை மாட்டிவிடு".

தன்னுடைய வாக்குறுதியை நிறைவேற்றுவதற்காக சாந்தா சோபியா தெ லா பியாதாத் சமையலறைக் கத்தியால் ஹோசே அர்க்காதியோ செகுந்தோ சடலத்தின் கழுத்தில் கீறிவிட்டாள். இரண்டு உடல்களும் ஒரே மாதிரியான சவப்பெட்டிகளில் வைக்கப்பட்டன. விடலைப் பருவம் வரைக்கும் இருந்ததுபோல, மரணத்தில் மீண்டும் ஒருமுறை ஒரே சாயலுள்ள இரட்டையர்களாகத் தெரிந்தார்கள். அவ்ரேலியானோ செகுந்தோவின் குடிகாரத் தோழர்கள் அவனுடைய பெட்டியின் மேல் மலர் வளையத்தை வைத்தார்கள். அதில் கோர்த்திருந்த கருஞ் சிவப்பு நிற நாடாவில் எழுத்துக்கள் இருந்தன: "நிறுத்துங்கள் பசுக்களே, வாழ்க்கை குறுகியது". அதுபோன்ற அவமரியாதையால் மனங்கொதித்த பெர்னாண்டா அந்த மலர்வளைத்தை எடுத்துக் குப்பைக் குவியலில் எறிந்தாள். வீட்டுக்குள்ளிருந்து சவப்பெட்டிகளை எடுத்துச் சுமந்துவந்த துக்கமான குடியர்கள் இறுதிநேரக் குழப்பத்தில் பெட்டிகளை மாற்றித் தவறான கல்லறைகளுக்குள் அவர்களைப் புதைத்தார்கள்.

அவுரேலியானோ, நீண்ட காலமாக மெல்குயாதெஸின் அறையைவிட்டு வெளியேறவில்லை. நொறுங்கும் புத்தகத்தின் அற்புத இதிகாசங்களை, ஹெர்மன் கிரிப்பிளின் ஆராய்ச்சித் தொகுப்புகளை, சாத்தானியலின் விஞ்ஞானம் தொடர்பான குறிப்புகளை, ரசவாதக் கல்லின் ரகசியங்களை மேலும் நாஸ்ட்ராடாமஸின் நூற்றாண்டுகளையும் கொள்ளை நோய் தொடர்பான அவருடைய ஆய்வையும் மனப்பாடம் செய்தான். எனவே தன்னுடைய காலத்தைப் பற்றி எதையும் தெரிந்துகொள் ளாமல், மத்திய கால மனிதனின் அடிப்படை அறிவுடன் வளரிளம் பருவத்தை அடைந்தான். சாந்தா சோபியா தெ லா பியாதாத் அவனுடைய அறைக்குப் போகும்போதெல்லாம் அவன் வாசிப்பில் மூழ்கியிருப்பதையே பார்ப்பாள். விடியற்காலையில் சர்க்கரை போடாத காப்பி ஒரு கோப்பை அவனுக்காகக் கொண்டு வருவாள். பிற்பகலில் ஒரு தட்டுச் சோறும் பொரித்த வாழைப்பழத் துண்டு களும். அவுரேலியானோ செகுந்தோவின் மரணத்துக்குப் பிறகு அந்த வீட்டில் அவை மட்டுமே சாப்பிடக் கிடைத்தன. அவனுடைய முடி வெட்டப்பட்டிருந்ததையும் தலையில் பேன்கள் இல்லாம லிருந்ததையும் பார்த்தாள். மறக்கப்பட்ட பெட்டிகளிலிருந்து அவனுடைய அளவுக்கான சட்டையைக் கண்டெடுத்தாள். அவனுக்கு மீசை அரும்பத் தொடங்கியதும் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் சவரக் கத்தியையும் அவர் சவரக் கிண்ணமாகப் பயன்படுத்திய சிறிய சுரைக்குடுக்கையை யும் கொண்டுவந்து கொடுத்தாள். கர்னலின் பதினேழு பிள்ளை களில் யாருமே அவுரேலியானோவைப் போல அவர் சாயலைக் கொண்டவர்களாக இல்லை. அவுரேலியானோ ஹோசேகூட அப்படி இல்லை. குறிப்பாக எடுப்பான கன்ன எலும்புகள், திடமும், சரியாகச் சொன்னால் இரக்கமில்லாததும் போன்ற உதடுகள் கர்னலுடையதைப் போன்றதல்ல. அவுரேலியானோ செகுந்தோ விஷயத்தில் அவன் அறையில் படித்துக் கொண் டிருக்கும்போது உர்சுலாவுக்கு நிகழ்ந்ததுதான் சாந்தா சோபியா தெ லா பியாதாத்துக்கும் நிகழ்ந்தது. அவுரேலியானோ அறையில் தனக்குத்தானே பேசிக் கொண்டிருக்கிறான் என்று அவள் நினைத்தாள். உண்மையில் அவன் மெல்குயாதெஸிடம் பேசிக் கொண்டிருந்தான். ஒரு தகிக்கும் மத்தியானம், இரட்டையர் களின் மரணத்துக்குச் சற்றுப் பின்பு, ஜன்னல் வெளிச்சத்துக்கு நேராக, தான் பிறப்பதற்கு வெகுகாலம் முன்பிருந்தே தனது மண்டைக்குள் இருக்கும் ஞாபகத்தின் ஸ்தூல வடிவம்போலக்

காக்கைச் சிறகுத் தொப்பியுடன் மங்கலான கிழவன் நிற்பதைப் பார்த்தான். அந்தப் பட்டயங்களிலிருந்த எழுத்துகளை வகைப்படுத்தி முடித்திருந்தான். எனவே அவை எழுதப்பட்டிருக்கும் மொழியைக் கண்டுபிடித்துவிட்டானா என்று கேட்டபோது தயக்கம் ஏற்படவில்லை.

"சம்ஸ்கிருதம்" என்று பதில் சொன்னான்.

அந்த அறைக்குத் திரும்ப வருவதற்கான சாத்தியங்கள் மிகவும் குறைவு என்று மெல்குயாதெஸ் வெளிப்படுத்தினான். எனினும் சம்ஸ்கிருதம் கற்றுக்கொள்ள அவுரேலியானோவுக்குக் காலமிருக்கிறது; அதற்கிடையில் மீதமுள்ள பட்டயப் பிரதிகளுக்கும் நூறு ஆண்டுகள் ஆகிவிடும்; அவை முழுமையாகப் புரிந்துகொள்ளப்படும். அதனால் இறுதி மரணத்தின் புல்வெளிகளுக்கு நிம்மதியாகவே செல்வதாகவும் சொன்னான். ஆற்றை நோக்கிச் செல்லும் குறுகலான, வாழைப்பழக் குழுமக் காலத்தில் கனவுப் பலன்கள் சொல்பவர்கள் நிரம்பியிருந்த தெருவில் ஞானியான காட்டலோனியனின் புத்தகக் கடையில் உடனடியாக அவன் வாங்காமல்விட்டால் ஆறே ஆண்டுகளில் பூச்சிகளால் முற்றிலும் அரிக்கப்பட்டு அழியவிருக்கும் சமஸ்கிருத மூலநூல் ஒன்று இருப்பதையும் மெல்குயாதெஸ் சுட்டிக் காட்டினான். சாந்தா சோபியா தெ லா பியாதாத் வாழ்க்கையில் எந்த உணர்ச்சியை யாவது வெளிக்காட்டியிருப்பாள் என்றால் அது, புத்தகக் கடைக்குப் போய் மிகவும் வலது பக்கமாக வைத்திருக்கும் அலமாரியின் இரண்டாவது தட்டில் ஜெருசலேம் பிறந்தது என்ற புத்தகத்துக்கும் மில்டனின் கவிதைகளுக்கும் நடுவில் வைத்திருக்கும் புத்தகத்தை வாங்கிவந்து கொடுக்கும்படி என்று அவுரேலியானோ சொன்னதைக் கேட்டு தனக்கு ஏற்பட்ட ஆச்சரியமாகத்தான் இருக்கும். தனக்கு வாசிக்கத் தெரியாது என்பதால் அவன் சொன்ன பெயரை நெட்டுருப் போட்டுக்கொண்டு. ராணுவ வீரர்கள் பரிசோதனை நடத்திப்போன இரவுக்குப் பிறகு அவளுக்கும் அவுரேலியானோவுக்கும் மட்டுமே தெரிந்த இடத்தில் மறைத்து வைத்திருந்த பதினேழு சிறிய தங்க மீன்களில் ஒன்றை விற்றுக் கிடைத்த பணத்துடன் வெளியே போனாள். மெல்குயாதெஸின் வருகைகள் மெல்ல மெல்லக் குறைந்து அவன் தொலைதூரத்தில் பகலின் பிரகாசமான ஒளியில் மறைந்து கொண் டிருந்ததனால் அவுரேலியானோ தனது சமஸ்கிருதப் படிப்பில் முன்னேறியிருந்தான்.

அவுரேலியானோ அவனைக் கடைசி முறையாக உணர்ந்தபோது அவன் கண்ணுக்குப் புலப்படாதவனாக முணுமுணுத்தான். "நான் சிங்கப்பூர் கடற்கரையில் காய்ச்சல் வந்து இறந்துவிட்டேன்". அந்த அறைக்குள் சகிக்க முடியாத அளவுக்குத் தூசும் வெக்கையும் கறையான் களும் செவ்வெறும்புகளும் அந்துப்பூச்சிகளும் நிரம்பின.

வீட்டில் உணவுக்குப் பஞ்சமில்லை. அவுரேலியானோ செகுந்தோ இறந்துபோன மறுநாள் அனுதாபச் செய்தி எழுதி இணைத்த மலர் வளையங்களுடன் அந்த வீட்டுக்கு வந்த நண்பர்களில் ஒருவன் பெர்னாண்டாவிடம் அவள் கணவனுக்குத் தான் கடன்பட்டிருந்ததாகச்

சொல்லி ஒரு தொகையைக் கொடுத்தான். அதன் பிறகு ஒவ்வொரு புதன்கிழமையும் ஒரு வாரத்துக்குப் போதுமான அளவு உணவுப் பொருட்களை ஒரு கூடையில் கொண்டுவந்து கொடுத்துச் சென்றான். தன்னை அவமதித்தவர்களுக்குத் தொடர்ந்து அறத்தைச் செய்வது அவர்களை அவமதிப்பதுதான் என்ற யோசனையில் பெத்ரா கோட்டேஸால் அனுப்பப்பட்டவை அந்த மளிகைப் பொருட்கள் என்பது யாருக்கும் ஒருபோதும் தெரியவே இல்லை. அவளே எதிர் பார்த்ததைவிடவும் விரைவிலேயே ஆத்திரம் மறைந்திருந்தது. அதன் பின்பும் அவள் உணவுப் பொருட்களை அனுப்பிக் கொண்டேயிருந்தாள். முதலில் பெருமைக்காக முடிவில் கருணையால். பலமுறை லாட்டரிக் குலுக்கல் நடத்துவதற்கு விலங்குகள் இல்லாமலானபோதும், அவளே பட்டினி கிடந்தபோதும் பெர்னாண்டாவுக்கு சாப்பிட எதையாவது அனுப்பிக் கொண்டேயிருந்தாள். பெர்னாண்டாவின் சவ ஊர்வலம் தன்னைக் கடந்து செல்வதைப் பார்க்கும் நாள்வரை அந்தச் சபதத்தைத் தொடர்ந்திருந்தாள்.

அரை நூற்றாண்டுக் காலத்துக்கும் மேலாக வேலை செய்த சாந்தா சோபியா தெ லா பியாதாத்துக்கு வீட்டு நபர்களின் எண்ணிக்கைக் குறைவு ஓய்வுக்கான வாய்ப்பாக அமைந்தது. அழகி ரெமேதியோஸ் என்ற தேவதையையும் ஹோரசே அர்க்காதியோ செகுந்தோ புதிர்க் கௌரவத்தையும் அந்தக் குடும்பத்தில் விதைத்த எச்சரிக்கையும் இறுக்கமும் நிரம்பிய பெண்ணிடமிருந்து சிறு புலம்பல்கூட ஒருநாளும் கேட்டதில்லை, எல்லாக் குழந்தைகளையும் வளர்த்து ஆளாக்கத் தனது தனிமையான வாழ்க்கை மொத்தத்தையும் செலவழித்த அவள் தான் வளர்த்தது தன் பிள்ளைகளையா, பேரப் பிள்ளைகளையா என்று நினைத்ததுமில்லை. அவுரேலியானோவையும் தன்னுடைய வயிற்றில் பிறந்த குழந்தையாகத்தான் பார்த்துக்கொண்டாளே தவிர தான் அவனுடைய கொள்ளுப்பாட்டி என்று சொல்லிக்கொண்டதில்லை. பொருள் வைப்பறையில் தரையில் வெறும் பாயை விரித்துப்போட்டு எலிகளின் இரவு நேரக் கீச்சிடல்களைக் கேட்டுக் கொண்டு தூங்கிக் கொண்டிருந்ததையும் ஒருநாள் இரவு இருட்டில் யாரோ தன்னைப் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள் என்று பயந்து விழித்துப் பார்த்தபோது நச்சுப் பாம்பு ஒன்று தன் வயிற்றின் மேல் ஊர்ந்து கொண்டிருந்ததை யும் அவள் யாரிடமும் சொன்னதில்லை. இந்த வீட்டைத் தவிர வேறு எங்கும் இது நடக்கும் என்று யோசிக்கவே முடியாது. உர்சுலா விடம் சொல்லியிருந்தால் தன்னை அவளுடைய அறையிலேயே படுத்துறங்கச் செய்திருப்பாள் என்று அவளுக்குத் தெரியும். ஆனால் அந்த நாட்களில் முற்றத்தில் நின்று உரக்கக் கத்தினாலொழிய யாருக்கும் எதுவும் கேட்காது. ஏனெனில் வீடு, அடுமனைப் பரபரப்பும் போர்க்கால ஆச்சரியங்களும் குழந்தைப் பராமரிப்புமாகப் பரபரத்துக் கொண் டிருந்ததால் யாருக்கும் அடுத்தவருடைய மகிழ்ச்சியைப் பற்றி நினைக்க வாய்ப்பே இல்லாமலிருந்தது. அவள் ஒருபோதும் பார்த்திராத பெத்ரா கோட்டேஸ்தான் அவளை ஞாபகம் வைத்திருந்தாள். சாந்தா சோபியா தெ லா பியாதாத் தெருவில் செல்லும்போது போட்டுக்கொள்ள நேர்த்தியாக ஒரு ஜதை செருப்புகளையும் அவள் அணிந்துகொள்வதற்

கான உடைகளையும் பெத்ரா கோட்டேஸ்தான் அனுப்பிக்கொண்டிருந்தாள். லாட்டரி விற்பனை ஏதோ அற்புதத்தால் நடந்துகொண்டிருந்த மோசமான நாட்களிலும் அதைத் தொடர்ந்தாள். பெர்னாண்டா அந்த வீட்டுக்கு வந்தபோது கணவனின் அம்மா என்று பலமுறை சொல்லக் கேட்டும்கூட அவளை மூப்பே வராத வேலைக்காரி என்றுதான் நினைத்தாள்; உண்மையைக் கண்டுபிடிப்பதற்கு எடுத்துக்கொண்டதைவிட அவளுடைய மறதி அதிக காலத்தை எடுத்துக்கொண்டது. தன்னுடைய தகுதிக் குறைவைப் பற்றி சாந்தா சோபியா தெ லா பியாதாத் ஒருபோதும் வருத்தப்பட்டதாகத் தெரியவில்லை. மாறாக அவளே ஒரு மூலையில் ஒடுங்கியிருக்க விரும்புகிறாள் என்ற எண்ணத்தை ஏற்படுத்தினாள். வளரிளம் பருவத்திலிருந்து வசித்துவந்த பரந்த வீட்டை இடைவேளையில்லாமல் புகாரில்லாமல் சுத்தப்படுத்திக் கொண்டும் ஒழுங்குபடுத்திக் கொண்டுமிருந்தாள். குறிப்பாக வாழைப்பழக் குழுமக் காலத்தில் அது ஒரு வீடாக இல்லாமல் ராணுவக் குடியிருப்பாக இருந்த காலத்திலும்.

ஆனால் உர்சுலாவின் மரணத்தோடு சாந்தா சோபியா தெ லா பியாதாத்தின் அதிமானுட ஊக்கமும் வேலை செய்வதற்கான அளப்பரிய வலுவும் வீழ்ச்சியடையத் தொடங்கின. அவளுக்கு வயதும் களைப்பும் ஏற்பட்டது மட்டுமல்ல ஒரே இரவில் வீடும் முதுமையின் நெருக்கடிக்குள் மூழ்கியது. மெல்லிய பாசி சுவர்களில் படர்ந்தது. வாசலில் வெற்றிடம் இல்லாததால் முற்றத்து சிமென்டுத் தரைக்குள் ஊடுருவிய களைகள் தரையைக் கண்ணாடிபோலப் பிளந்தன. அந்த விரிசல்களிலிருந்து ஒரு நூற்றாண்டுக்கு முன்பு மெல்குயாதெஸின் பொய்ப் பற்களில் உர்சுலா பார்த்தது போன்ற மஞ்சள் பூச்செடிகள் வளர்ந்தன. இயற்கையின் சவாலை எதிர்கொள்வதற்கான நேரமோ தடுத்து நிறுத்துவதற்கான சக்தியோ இல்லாததால் சாந்தா சோபியா தெ லா பியாதாத் பகல் வேளையில் படுக்கையறைகளுக்குள் இருந்த பல்லிகளை விரட்டுவதில் பொழுதைப் போக்கினாள். அவை இரவில் திரும்ப வந்தன. ஒருநாள் காலை, செவ்வெறும்புகள் அஸ்திவாரத்தை விட்டுத் தோட்டத்தைத் தாண்டிப் பிகோனியாப் பூக்கள் மண் நிறத்துக்கு மட்கிப்போயிருந்த கைப்பிடிச் சுவர்களில் ஏறி வீட்டின் நடுப்பகுதிக்குள்ளே நுழைந்திருப்பதைப் பார்த்தாள். முதலில் துடைப்பத்தால் அடித்தும் பிறகு பூச்சிக்கொல்லி மருந்துகளாலும் கடைசியில் சுண்ணாம்பைத் தூவியும் கொல்ல முயன்றாள். மறுநாள் அவை திரும்பவும் அதே இடத்தில் தந்திரமாகவும் கண்ணுக்குப் படாமலும் ஊர்ந்துகொண்டிருந்தன. குழந்தைகளுக்குக் கடிதங்கள் எழுதுவதில் மட்டுமே மும்முரமாக இருந்த பெர்னாண்டாவுக்கு வீட்டுக்கு நேர்ந்துகொண்டிருந்த கட்டற்ற அழிவு புலப்படவேயில்லை. சாந்தா சோபியா தெ லா பியாதாத் தன்னந்தனியாகப் போராடிக் கொண்டிருந்தாள். களைகள் வீட்டுக்குள்ளே புகுந்துவிடாமல் தடுக்கப் போராடிக் கொண்டிருந்தாள். சுவர்களிலிருந்த சிலந்தி வலைகளின் தொங்கல்களை இழுத்தெறிந்தாள். ஆனால் சில மணி நேரங்களிலேயே அவை மீண்டும் கட்டப்பட்டன. கரையான்களைச் சுரண்டி வீசினாள். ஆனால் மூன்று நாட்களுக்கு ஒருமுறை அவளே பெருக்கிச் சுத்தப்படுத்தியிருந்த

மெல்குயாதெஸின் அறை புழுதியடைந்தும் ஒட்டடைப் படிந்தும் கிடந்ததைப் பார்த்தாள். அவளுடைய ஆவேசமான சுத்திகரிப்புக்குப் பின்னும் அந்த அறைக்கு நேர்ந்த சிதிலம் பயமுறுத்தியது. கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவும் அந்த இளம் அதிகாரியும் முன்கூட்டியே உணர்ந்த துயரச் சூழலை உணர்ந்தாள்; தான் தோற்றுப் போயிருப்பதை உணர்ந்தாள். தனது ஞாயிற்றுக்கிழமை உடையை அணிந்து உர்சுலாவின் பழைய ஷூக்களைப் போட்டுக் கொண்டாள். இரண்டோ மூன்றோ மாற்று உடைகளை எடுத்து மூட்டையாகக் கட்டிக்கொண்டு வெளியேறினாள்.

“நான் தோற்றுப் போய்விட்டேன். என்னுடைய எலும்புகளுக்கு இந்த வீட்டின் பாரம் அதிகம்” என்று அவுரேலியானோவிடம் சொன்னாள்.

அவள் எங்கே போகிறாள் என்று கேட்ட அவுரேலியானோவிடம் தான் எங்கே போகப் போகிறேன் என்று எந்த யோசனையும் இல்லையென்பதாக வெற்றுச் சைகை காட்டினாள். ரியோஹாச்சாவிலிருக்கும் ஒன்றுவிட்ட சகோதரியின் வீட்டுக்குப் போய்க் கடைசிக் காலத்தைக் கழிக்கப் போவதாகச் சொன்னாள். அது நம்பக்கூடிய விளக்கமாக இல்லை. அவளுடைய பெற்றோர் மறைவுக்குப் பிறகு யாருடனும் அந்த நகரத்தில் அவளுக்குத் தொடர்பு இல்லை. அவளுக்குக் கடிதங்களோ சேதிகளோ வந்ததில்லை. அவளேகூட எந்த உறவினரைப் பற்றியும் பேசியதுமில்லை. கைவசமிருந்த ஒரு பெசோ – இருபத்தைந்து சென்ட்களுடன் வெளியே போகத் தயாராக இருந்தாள். அவுரேலியானோ அவளிடம் பதினான்கு சிறிய தங்க மீன்களைக் கொடுத்தான். அறை ஜன்னல் வழியே தனது துணி மூட்டையுடன் காலை இழுத்தபடி வயதுகளின் கூனலைச் சுமந்துகொண்டு முற்றத்தைத் தாண்டி நடந்ததையும் பிரதான கதவுக்கு வெளியிலிருந்து அவளுடைய கை இடைவெளி வழியாக உள்ளே நுழைந்து தாழை மீண்டும் பொருத்திவிட்டுப் போவதையும் பார்த்தான். அதற்குப் பிறகு அவளைப் பற்றி எதையும் கேள்விப் படவில்லை.

சாந்தா சோபியா தெ லா பியாதாத்தின் வெளியேற்றத்தைப் பற்றி தெரிந்ததும் பெர்னாண்டா ஒரு நாள் முழுக்கக் கத்திக் கொண்டிருந்தாள். அந்தக் கிழவி எதையாவது எடுத்துக்கொண்டு போயிருப்பாள் என்று பெட்டிகளையும் அலமாரிகளையும் வைப்பறைகளையும் ஒவ்வொன்றாகப் பரிசோதித்தாள். வாழ்க்கையில் முதல் முறையாக அடுப்பைப் பற்றவைக்கும் முயற்சியில் கையைச் சுட்டுக் கொண்டாள். எப்படிக் காப்பி போடுவது என்று காண்பித்துத் தருமாறு அவுரேலியானோவிடம் கேட்க நேர்ந்தது. நாளடைவில் சமையலறை வேலைகள் அவன் பொறுப்பாயின. பெர்னாண்டாவின் காலையுணவு அவள் எழுவதற்குள் தயாராக இருந்தது. கணப்பின் மீது அவுரேலியானோ வைத்திருக்கும் உணவை எடுத்து உண்பதற்காக மட்டுமே அறையை விட்டு வந்தாள். அதை எடுத்துக்கொண்டு வந்து உணவுமேஜையில் லினன் விரிப்புகளுக்கும் கொத்து மெழுகுவர்த்தித் தாங்கிக்கும் இடையில் வைத்து மேஜையின் தனிமையான தலைப்புப் பகுதியில்

காலியாகக் கிடக்கும் பதினைந்து நாற்காலிகளையும் பார்த்துக்கொண்டே உணவை அருந்துவாள். அந்தச் சூழ்நிலையும் அவுரேலியானோவும் பெர்னாண்டாவும் தங்கள் தனிமையைப் பகிர்ந்து கொள்ளவில்லை; இருவரும் அவரவர் அறைகளில் ரோஜாச் செடிகள் மேலும் பனி போலவும் உத்தரங்களில் போர்த்தியது போலவும் சுவர்களில் திண்டுகள் போலவும் ஆக்கிரமித்திருக்கும் நூலாம்படைகளை அப்புறப் படுத்திக்கொண்டு வாழ்ந்தார்கள். அந்தச் சமயத்தில்தான் வீட்டுக்குள் குட்டிச் சாத்தான்கள் நிரம்பியிருப்பதாகப் பெர்னாண்டாவுக்குத் தோன்ற ஆரம்பித்தது. பொருட்கள், குறிப்பாக அன்றாட உபயோகப் பொருட்கள் தமது இச்சைப்படி இடத்தை மாற்றிக்கொள்வதாகத் தோன்றியது. பெர்னாண்டா கட்டில் மேலே வைத்ததாக நிச்சயமாக நினைத்துக் கிடைக்காமல் எல்லாவற்றையும் தலைகீழாகப் புரட்டிப்போட்டு தேடிய கத்தரிக்கோலை நான்கு நாட்களாக அவள் புகுந்தே இருக்காத சமையலறை அலமாரியில் கண்டுபிடித்தாள். வெள்ளிப் பொருள் பெட்டி திடீரென்று காலியாக இருந்தது. அதிலிருந்தவற்றில் ஆறு முள் கரண்டிகளைப் பலிபீடத்தின் மேலும் மூன்றைக் கழிப்பறையிலும் கண்டெடுத்தாள். பொருட்களின் 'இடம் சுற்றல்' எழுத உட்கார்ந்த போதுதான் அவளை மிகவும் எரிச்சலூட்டின. தனது வலதுகைப் பக்கம் வைத்த மைக்கூடு இடது பக்கம் இருந்தது. காணாமற்போன உறிஞ்சுத் தாளை இரண்டு நாட்களுக்குப் பின்பு தலையணைக்கடியில் கண்டுபிடித்தாள். ஹோரசே அர்க்காதியோவுக்கு எழுதிய பக்கங்கள் அமரந்தா உர்சுலாவுக்கு எழுதிய பக்கங்களுடன் கலந்திருந்தன. எழுதிய கடிதங்களைத் தவறான உறைகளுக்குள் போட்டுவிட்டோமா என்று அவளுக்குப் பெருத்த அவமான உணர்வு ஏற்படும். உண்மையில் அதுவும் நடந்தது. ஒரு சந்தர்ப்பத்தில் அவளுடைய ஊற்றுப்பேனா தொலைந்துபோனது. இரண்டு வாரங்களுக்குப் பிறகு அதைத் தன்னுடைய பையில் பார்த்த தபால்காரர் திரும்பக் கொண்டுவந்து கொடுத்தார். உரிமையாளரை வீடு வீடாகத் தேடியலைந்திருந்தார். ரப்பர் வளையங்கள் மறைந்துபோனது போல இதுவும் அறியாத மருத்துவர்களின் வேலையாக இருக்கும் என்று முதலில் நினைத்தாள். தன்னை நிம்மதியாக விடுமாறு மன்றாடி அவர்களுக்குக் கடிதம் எழுதக்கூடத் தொடங்கினாள். ஏதோ குறுக்கீட்டால் அதைப் பாதியில் விட்டுவிட்டும் மறுபடியும் அறைக்குத் திரும்பி வந்தபோது எழுத ஆரம்பித்திருந்த கடிதத்தைக் காணாதது மட்டுமல்ல எழுதுவதற்கான காரணத்தையுமே மறந்திருந்தாள். கொஞ்ச காலம் அவுரேலியானோ காரணமாக இருப்பானோ என்று நம்பினாள். இடம் மாற்றும்போது பிடிப்பதற்காக அவன் நடக்கும் வழிகளில் பொருட்களைப் போட்டு வைத்தாள். விரைவிலேயே சமையலறைக்கோ குளியலறைக்கோ போனதைத் தவிர மெல்குயாதெஸின் அறையை விட்டு அவுரேலியானோ நகரவில்லை என்பதையும் சித்துவேலை செய்யக் கூடியவனல்ல என்பதையும் உறுதிப்படுத்திக்கொண்டாள். ஆகக் கடைசியில் அது குட்டிச் சாத்தான்களின் குறும்புகள்தான் என்று நம்பினாள் எல்லாப பொருட்களையும் அதனதன் இடத்தில் வைக்கத் தீர்மானித்தாள். கத்தரிக்கோலை நீளமான கயிற்றில் கட்டி கட்டில் கைப்பிடியில்

தொங்கவிட்டாள். பேனாவையும் மையுறிஞ்சும் தாளையும் மேஜையின் இடது காலுடன் கட்டிவைத்தாள். மைக்குப்பியை வழக்கமாக உட்கார்ந்து எழுதும் இடத்துக்கு வலது பக்கமாக பசைபோட்டு மேஜைமேல் ஒட்டிவைத்தாள். பிரச்சனைகள் ஒரே இரவில் தீர்ந்துவிடவில்லை. ஏனெனில் அவள் கட்டிவைத்த சில மணி நேரங்களுக்குள்ளேயே கத்தரிக்கோல் எதையும் வெட்ட முடியாத அளவுக்குக் குட்டையாகி யிருந்தது. கட்டி வைத்திருந்த பேனாவும் அப்படியே ஆகியிருந்தது. சற்று நேரத்துக்குப் பிறகு கொஞ்சம் எழுதிய பின்னர் மைக்கூட்டை எடுக்கக் கைவராமல் போனது. பிரஸ்ஸெல்ஸிலிருந்த அமரந்தா உர்சுலாவோ ரோமிலிருந்த ஹொசே அவுரேலியானோ இந்த அற்ப துரதிர்ஷ்டத்தைப் பற்றித் தெரிந்துகொள்ளவில்லை. தான் மகிழ்ச்சியாக இருப்பதாகவே அவர்களிடம் தெரிவித்தாள். உண்மையில் எல்லா சமரசங்களிலிருந்தும் விடுபட்டதாக உணர்ந்ததால் அவள் மகிழ்ச்சி யாகத்தான் இருந்தாள். வாழ்க்கை மீண்டும் ஒருமுறை அவளைத் தனது பெற்றோர்களின் உலகத்துக்கு, அன்றாடச் சிக்கல்களால் அலைக்கழிக்கப்படாத உலகத்துக்கு இழுத்துச் செல்வதாக எண்ணினாள். முடிவற்ற கடிதத்தொடர்புகள் அவளுடைய காலப் பிரக்ஞையை இழக்கச் செய்திருந்தன. அதுவும் குறிப்பாக சாந்தா சோபியா தெ லா பியாதாத் வெளியேறிய பின்பு. பிள்ளைகள் திரும்பி வரும் தேதிகளை மையமாக வைத்தே நாட்களையும் மாதங்களையும் ஆண்டுகளையும் வரிசைப்படுத்திக் கொள்வதை வழக்கமாக்கியிருந்தாள். ஆனால் அவர்கள் நேரத்துக்கு நேரம் திட்டங்களை மாற்றிக்கொண்டிருந்தபோது நாட்கள் குழம்பின; பருவங்கள் தவறின; ஒருநாள் அடுத்த நாளை நகராத நாளாகவே உணரச் செய்தது. அந்தத் தாமதத்தில் பொறுமை இழப்பதற் குப் பதில் பெர்னாண்டா ஆழ்ந்த மகிழ்ச்சியை உணர்ந்தாள். தன்னுடைய கடைசிப் பிரதிக்ஞைகளை அறிவித்துப் பல ஆண்டுகள் கழிந்துபோயின என்பதும் அவளை வருத்தவில்லை.

ஹொசே அர்க்காதியோ, நிலைமைகளை ராஜதந்திரமாகக் கையாளுவதற்காக, இறையியல் மேல்பட்டப் படிப்பை முடிக்கக் காத்திருப்பதாகச் சொல்லிக் கொண்டே இருந்தான். புனித பீட்டரின் சிம்மாசனத்துக்கு இட்டுச் செல்லும் ஆன்மீகச் சுழற்படிகள் கொண்ட வழி எவ்வளவு செங்குத்தானது, தடைகள் நிறைந்தது என்று அவளுக்குப் புரிந்திருந்தது. இன்னொரு பக்கம், மற்றவர்களுக்கு முக்கியமில்லாததாகத் தென்பட்ட செய்தி அவளுடைய உற்சாகத்தைத் தூண்டியது. அவள் மகன் போப்பாண்டவரைப் பார்த்துவிட்டான். அமரந்தா உர்சுலா, அவளுடைய படிப்புக் காலம் எதிர்பார்த்ததைவிட நீட்சியடையலாம்; ஏனெனில் அவள் பெற்றிருந்த சிறப்பான மதிப்பெண்கள் காரணமாக ஏராளமான வாய்ப்புகள் கிடைத்திருப்பதாகவும் இது அவள் அப்பா தன்னுடைய கணக்கில் எடுத்துக்கொள்ளாமல் விட்டிருந்தது என்றும் கடிதத்தில் எழுதியிருந்ததும் பெர்னாண்டாவுக்கு அதே மகிழ்ச்சியைக் கொடுத்தது.

சாந்தா சோபியா தெ லா பியாதாத், இலக்கணப் புத்தகத்தை வாங்கிக் கொடுத்து மூன்று ஆண்டுகள் கழிந்தன. அவுரேலியானோ

அதன் முதல் பக்கத்தை மொழிபெயர்த்து முடித்திருந்தான். அது வீண்வேலையாக இருக்கவில்லை. ஆனால் அது நீளத்தை முன்கூட்டிச் சொல்ல முடியாத பாதையொன்றில் வைத்த முதல் அடி மட்டுமே. ஏனெனில் ஸ்பானிய மொழியிலிருந்த உள்ளடக்கம் குறியீடுகளாக இருந்தது. அதைப் புரிந்துகொள்ள உதவும் திறப்புகளை உருவாக்கும் வழிமுறைகளில் அவன் பின் தங்கியிருந்தான். பட்டயங்களின் ஆழத்தைப் புரிந்துகொள்ள அவனுக்குத் தேவைப்படும் புத்தகங்கள் காடலோனிய ஞானியின் கடையிலிருப்பதை மெல்குயாதெஸ் அவனிடம் சொல்லியிருந்தான். தன்னை வெளியே செல்ல அனுமதிக்குமாறு பெர்னாண்டாவிடம் கேட்கத் தீர்மானித்தான். கட்டுப்படுத்த முடியாமல் சிதைந்து செங்கற்களும் காரையும் விழுந்து குவிந்துகொண்டிருந்த அறையில் அமர்ந்து தன்னுடைய வேண்டுகோளை எப்படிச் சிறப்பாக அவளிடம் தெரிவிப்பது என்று யோசித்து வைத்திருந்தான். ஆனால் கணப்படுப்பிலிருந்து உணவை எடுத்துக் கொண்டிருந்ததைப் பார்த்தபோது, அவளுடன் பேச அவனுக்குக் கிடைத்த ஒரே வாய்ப்பும் தவறிப்போனது. சிரமப்பட்டு உருவாக்கிய வேண்டுகோள் தொண்டைக்குள் சிக்கிக் கொள்ள அவன் பேச்சையே இழந்தான். அவளை அவன் கவனமாகப் பார்த்ததும் அந்த ஒருமுறை மட்டுமே. அவளுடைய காலடிச் சத்தம் படுக்கையறைக்குள் கேட்டது. பிள்ளைகளிடமிருந்து கடிதம் வருவதை எதிர்பார்த்தும் தான் எழுதிய கடிதங்களைத் தபால்காரரிடம் சேர்ப்பதற்காகவும் அவள் வரும்போது அவளுடைய காலடிச் சத்தத்தைக் கேட்பான். பின் இரவில் காகிதத்தில் பேனா உரசி எழும் கரடுமுரடான ஓசையையும் சுவிட்ச் அணைக்கப்படும் ஒலியையும் இருட்டில் பிரார்த்தனைகள் முணுமுணுக்கப்படுவதையும் கேட்பான். எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சந்தர்ப்பம் மறுநாள் வரும் என்று நம்பிக்கொண்டு ஒவ்வொரு நாளும் தூங்கப் போனான். அனுமதி கிடைத்துவிடும் என்ற யோசனையில் ஒரு நாள் காலை அதற்குள் தோளைத் தாண்டி வளர்ந்திருந்த முடியை வெட்டினான். தொங்கும் தாடியைச் சவரம் செய்தான். கொஞ்சம் இறுக்கமான காலுடையையும் யாரிடமிருந்து வாங்கியது என்று அவனுக்கே தெரியாத செயற்கைக் கழுத்துப்பட்டி வைத்த சட்டையையும் அணிந்துகொண்டு காலையுணவுக்காக பெர்னாண்டா வருவதை எதிர்பார்த்துச் சமையலறையில் காத்திருந்தான்.

தலையை நிமிர்த்தி விறைப்பான நடையுடன் வரும் அன்றாடப் பெண் வரவில்லை; பதிலுக்கு மஞ்சள் நிற இறகுத் தொப்பியுடனும் முலாம் பூசிய கிரீடத்துடனும் ரகசியமாக அழுது ஆறுதலடைந்த தோற்றத்துடனும் இயற்கைக்கு அதீதமான அழகுடனும் வயதான பெண்ணொருத்தி வந்தாள். அவுரேலியானோ செகுந்தோவின் பெட்டியிலிருந்து பூச்சிகள் அரித்த நிலையில் இருந்த கலை விழாவின் அழகியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட காலத்திய உடையையும் கிரீடத்தையும் பெர்னாண்டா பலமுறை அணிந்து அழகு பார்த்திருந்தாள். கண்ணாடி முன்னால் தன்னுடைய ராஜ கம்பீரமான அசைவுகளைப் பார்த்துக்கொண்டுப் பரவசப்பட்டு நின்ற அவளை யாராவது பார்த்தால் பைத்தியம் என்றே முடிவு கட்டியிருப்பார்கள். ஆனால் அவள் பைத்தியம் அல்ல; தன்னுடைய ராஜ கம்பீரத் தோற்றத்தை

ஞாபகத்தின் கருவியாக அவள் மாற்றிக்கொண்டிருந்தாள். முதல் முறையாக அந்த உடையை அணிந்தபோது அவளுடைய இதயம் அடைத்துக்கொண்டது; கண்களில் நீர் நிறைந்தது; ஏனெனில் அந்தக் கணத்தில், தன்னை அரசியாக்க அழைத்துச் செல்ல வந்த அதிகாரி போட்டிருந்த ஷூவின் பாலிஷ் மணத்தை மீண்டும் நுகர்ந்தாள். தான் இழந்துபோன கனவுகளின் நினைவேக்கம் அவள் ஆன்மாவை ஒளிரச் செய்தது. மிகவும் வயதானவளாகவும் களைத்துப் போனவளாக வும் தனது வாழ்க்கையின் மிகச் சிறந்த தருணங்களில் மோசமானவை என்று உதாசீனப்படுத்தியவற்றுக்கு ஏங்குபவளாகவும் தன்னை உணர்ந்தாள். தாழ்வாரத்தில் வளர்ந்திருக்கும் கற்பூரவல்லியின் மணத்தையோ மாலை நேரங்களில் ரோஜாக்களின் வாசனையையோ கீழ் நிலையிலிருந்து அந்தஸ்து அடைந்த விலங்கின் இயல்பையோகூடத் தான் எவ்வளவு இழந்திருக்கிறோம் என்று அப்போதுதான் கண் டடைந்தாள். அன்றாட உண்மையின் அடிகளைத் தாங்கிக்கொண்ட சாம்பல் திணிக்கப்பட்ட அவள் இதயம் நினைவேக்கத்தின் முதல் அலையில் கரையத் தொடங்கியது. துக்கப்படுவது தவறு என்று காலம் அவளுக்குக் கட்டளையிட்டிருந்தது. தனிமையில் மட்டுமே அவள் மனிதத்துவத்துடன் இருந்தாள். இருப்பினும் காலை சமைய லறைக்குள் புகுந்ததும் அவளுக்கான கோப்பைக் காப்பியை நீட்டிக் கொண்டு வெளிறிய நோஞ்சான் விடலைப் பையன் மனப்பிறழ்வின் ஒளி மிளிரும் கண்களுடன் நிற்பதைப் பார்த்ததும் ஏளனத்தின் நகங்கள் அவளைக் கிழித்தன. அவனுக்கு வெளியே போக அனுமதி மறுத்ததுடன் வீட்டுச் சாவிக் கொத்தையும் பயன்படுத்தப்படாத ரப்பர் வளையங்கள் வைத்திருந்த சட்டைப் பைக்குள்ளேயே போட்டுக்கொண்டாள். அது அவசியமில்லாத எச்சரிக்கை. ஏனெனில் அவுரேலியானோ விரும்பியிருந்தால் யாரும் பார்க்காமலே வீட்டைவிட்டு வெளியே போகவும் திரும்பிவரவும் முடியும். ஆனால் நீண்ட காலத் தனிமைச் சிறையும் உலகத்தைப் பற்றிய நிச்சயமின்மையும் கீழ்ப்படியும் வழக்கமும் அவன் மனத்துக்குள்ளிருந்த கலக வித்துக்களை உலர்ந்துபோகச் செய்திருந்தது. எனவே தன்னுடைய சிறைக்குத் திரும்பினான், பின் இரவில் தன் படுக்கையறையில் பெர்னாண்டா விசும்புவதைக் கேட்கும்வரை பட்டயங்களைப் படித்தான்; திரும்பப் படித்துக்கொண் டிருந்தான். ஒரு நாள் காலையில் வழக்கம்போல அணைந்து சாம்பலாகிக் கிடந்த அடுப்பைப் பற்றவைக்கப் போனபோது முந்தைய நாள் அவளுக்கு எடுத்து வைத்த உணவு அப்படியே இருப்பதைப் பார்த்தான். அவளுடைய படுக்கையறைக்குள் எட்டிப் பார்த்தான். சிறகுத் தொப்பியணிந்து எப்போதையும்விட அழகு மிகுந்தவளாகப் படுக்கையில் படுத்திருப்பதை யும் அவளுடைய சருமம் தந்தப் பேழையாக மாறியிருப்பதையும் பார்த்தான். நான்கு மாதங்களுக்குப் பிறகு ஹோசே அர்க்காதியோ வந்தபோது அவள் கட்டுக்குலையாமல் இருப்பதைப் பார்த்தான்.

அவனைத் தவிர அம்மாவின் சாயலிலேயே இருக்கும் இன்னொரு ஆளை யோசித்துப் பார்ப்பது சாத்தியமில்லை. அடர்த்தியான நிறத்தில் டஃபேட்டா சூட்டும் வட்டமான கழுத்துப்பட்டை வைத்த சட்டையும் டைக்குப் பதிலாக மெல்லிய பட்டு நாடாவால் கட்டிய முடிச்சும்

அணிந்திருந்தான். களைப்பான தோற்றத்திலிருந்தான். சோம்பலும் திகைப்பும் கலந்த பார்வை. மெலிந்த உதடுகள். கறுப்பு முடி பளபளப்பாகவும் மென்மையாகவும் இருந்தது. நேர் வகிடு எடுத்து வாரிவிட்டிருந்தான். புனிதர்களின் திருவுருவங்களுக்கு ஒட்டவைத்த முடிபோல இருந்தது. ஆழமாக மழிக்கப்பட்ட தாடியின் நிழல் மனசாட்சியின் கேள்விபோல மெழுகு முகத்தில் படர்ந்திருந்தது. கைகள் வெளுத்துப் பச்சை நரம்புகள் தெரியவும் விரல்கள் ஒட்டுண்ணிகள் போலவும் இருந்தன. இடது கைச் சுட்டுவிரலில் சூரிய காந்திப் பூ வடிவமுள்ள தங்க மோதிரம் இருந்தது. அவுரேலியானோ தெருக் கதவைத் திறந்தபோது அவன் யாரென்று சொல்லாமலே தொலை தூரத்திலிருந்து வருகிறான் என்பதைப் புரிந்துகொண்டான். அவனுடைய காலடிகளுடன் முன்பு கண்முன்னால் தெரியும் நிழலுருவங்களிலிருந்து அவனை அடையாளம் கண்டுகொள்வதற்காக உர்சுலா தெளித்த பன்னீர் வாசனையும் வீட்டுக்குள் நிரம்பியது. பல ஆண்டுகள் இல்லாமலிருந்த அந்த வாசனை திரும்ப வந்தது ஒருவகையில் நிர்ணயிக்க முடியாததுதான். ஹோசே அர்க்காதியோ இன்னும் குழந்தைமையின் கடைசிப் பருவத்திலிருப்பவன் போலவே இருந்தான். துக்கம் நிரம்பியவனாகவும் தனிமையானவனாகவும் இருந்தான். நேராக அம்மாவின் அறைக்குள் போனான். கடந்த நான்கு மாதங்களாக மெல்குயாதெஸ் சூத்திரப்படி பாதரசத்தைக் கொதிக்க வைத்து ஆவியாக்கி முது முது முப்பாட்டனின் நீர்க்குழாய் வழியே செலுத்தி அவுரேலியானோ பாதுகாத்த உடலை நெருங்கினான். ஹோசே அர்க்காதியோ அவனிடம் எதுவும் கேட்கவில்லை. பிணத்தின் நெற்றியில் முத்தமிட்டான். அவளுடைய பாவாடையின் பைகளுக்குள்ளிருந்து மூன்று ஆண்டுகளாக உபயோகிக்காமல் வைத்திருந்த கருத்தடை வளையங்களும் அவளுடைய மேஜையின் சாவியும் இருந்த சிறு பெட்டியை வெளியே எடுத்தான். எல்லாவற்றையும் அவனுடைய மந்தமான தோற்றத்துக்கு நேர் எதிராக விரைவாகவும் நிச்சயமான அசைவுகளுடனும் செய்துகொண்டிருந்தான். மேஜை அறையிலிருந்து குடும்ப இலச்சினைப் பதித்த சிறு டமாஸ்கஸ் பேழையை எடுத்தான். சந்தன மணமூட்டப்பட்ட அதற்குள்ளிருந்து நீண்ட கடிதத்தை எடுத்தான். பெர்னாண்டா அவனிடமிருந்து மறைத்துவைத்த பல உண்மைகளைத் தனது இதயத்திலிருந்து அவனிடம் இறக்கி வைத்திருந்தாள். நின்றுகொண்டே ஆர்வத்துடன் ஆனால் பதற்றமில்லாமல் அதைப் படிக்க ஆரம்பித்தான். மூன்றாவது பக்கம் வந்ததும் வாசிப்பதை நிறுத்தி அவுரேலியானோவை மீண்டும் பார்த்தான்.

“அப்படியென்றால், நீதானா அந்த ஒரு வேசி மகன்?’ சவரக் கத்தியின் கூர்மையுள்ள குரலில் கேட்டான்.

“நான் அவுரேலியானோ புயேந்தியா”

“சரி, உன் அறைக்குப் போ” ஹோசே அர்க்காதியோ சொன்னான்.

அவுரேலியானோ அறைக்குப் போனான். திரும்ப வரவில்லை. ஓசை கேட்டும் ஏகாந்தமான இறுதிச் சடங்குகள் நடக்கும் ஓசை கேட்டும்

என்னவென்று தெரிந்துகொள்வதற்காகக்கூட வெளியே வரவில்லை. சிலசமயம் சமையலறையில் நின்று ஹோராசே அர்க்காதியோ பதற்றமான சுவாசத்தால் மூச்சிறைத்துக்கொண்டு வீட்டுக்குள் நடமாடுவதையும் நள்ளிரவுக்குப் பின்னும் சிதிலமான படுக்கையறைகளுக்குள் அவனுடைய காலடிகள் ஒலிப்பதையும் கேட்டான். பல மாதங்களுக்கு அவனுடைய குரலைக் கேட்கவில்லை. ஹோராசே அர்க்காதியோ அவனுடன் பேசாதது மட்டுமல்ல. அவுரேலியானோவுக்கும் அப்படி உரையாடல் நடக்க வேண்டுமென்ற விருப்பமில்லை. அந்தப் பட்டயங்களை வாசிப்பதைத் தவிர வேறு எதைப் பற்றிச் சிந்திக்கவும் நேரமில்லை. பெர்னாண்டாவின் மறைவுக்குப் பிறகு மிச்சமிருந்த இரண்டு சிறிய தங்க மீன்களில் ஒன்றை எடுத்துக்கொண்டு காடலோனியனின் புத்தகக் கடைக்குப் போனான். வழியில் பார்த்த எதுவுமே அவனைக் கவரவில்லை. ஒருவேளை ஒப்பிட்டுப் பார்ப்பதற்குத் தேவையான ஞாபகங்கள் அவனுக்கு இல்லாமலிருந்ததும் காரணமாக இருக்கலாம். அந்த நகரத்தைப் பற்றித் தெரிந்துகொள்ள முயன்றபோது அவன் கற்பனை செய்திருந்தது போலவே கைவிடப்பட்டத் தெருக்களும் ஆளில்லா வீடுகளும் இருந்தன. பெர்னாண்டா கொடுக்க மறுத்த அனுமதியை அவனாகவே எடுத்துக்கொண்டான். அதுவும் ஒரே ஒருமுறை, அவசியமான நேரம் மட்டும். எனவே, முன் காலங்களில் கனவுக்குப் பலன் சொல்பவர்கள் நிரம்பியிருந்த குறுகிய தெருவிலிருந்து பதினோரு கட்டடங்கள் தள்ளி இருக்கும் வீட்டிலிருந்து எங்கேயும் தயங்கி நிற்காமல், மூச்சு வாங்க நடந்து குழப்பமானதும் மங்கிய வெளிச்சமுள்ளதுமான நகரக்கூட இடமில்லாத கடைக்குப் போனான். புத்தகக் கடை என்பதைவிட அது பழையப் புத்தகங்களின் கிடங்காக இருந்தது. அலமாரிகளில் கரையான் அரித்த புத்தகங்கள் ஒழுங்கில்லாமல் கிடந்தன. மூலைகளில் சிலந்தி வலைகள் தொங்கின. நடப்பதற்காக விடப்பட்ட வழியிலும் புத்தகங்கள் கிடந்தன. புத்தகங்களும் தாள்களும் குவிந்து கிடந்த நீண்ட மேஜையில் அதன் உரிமையாளன் ஒரு பள்ளிக்கூடக் குறிப்பேட்டிலிருந்து கிழித்தெடுத்தப் பக்கங்களில் ஏதோ அந்நிய மொழியில் இளஞ்சிவப்பு எழுத்துக்களால் சோர்வற்ற உரைநடையில் எழுதிக் கொண்டிருந்தான். நீளக் கொண்டைக் கிளியின் சிறகுபோல முன் நெற்றியில் விழுந்திருந்த வெள்ளி முடியுள்ள தலை; உயிர்ப்புள்ளவையும் இடுங்கியவையுமான நீலக் கண்கள்; அங்கிருக்கும் எல்லாப் புத்தகங்களையும் வாசித்திருக்கும் கனவானாகத் தெரிந்தான். குட்டையான கால்சராய் அணிந்திருந்தான். வியர்வையில் ஊறியிருந்தான். யார் வந்திருக்கிறார்கள் என்று பார்ப்பதற்காகக்கூட எழுதுவதை நிறுத்தவில்லை. அந்த ஒழுங்கற்ற குவியலிலிருந்து தான் தேடிவந்த ஐந்து புத்தகங்களையும் மீட்டெடுப்பது அவுரேலியானோவுக்குச் சிரமமாக இருக்கவில்லை. ஏனெனில் அவை மெல்குயாதெஸ் குறிப்பிட்ட இடத்திலேயே இருந்தன. அவற்றை எடுத்துவந்து ஒரு வார்த்தைகூடப் பேசாமல், அவற்றுடன் சிறிய தங்க மீனையும் சேர்த்து காடலோனிய ஞானியிடம் கொடுத்தான். அதைப் பரிசோதித்துப் பார்த்த பின்னவனின் இமைகள் சிப்பிகள்போல ஒடுங்கின. "உனக்குப் பைத்தியம் பிடித்திருக்க வேண்டும்" என்று தோள்களைக் குலுக்கிக்கொண்டே தனது மொழியில் சொல்லிவிட்டு அந்த ஐந்து புத்தகங்களையும் தங்க மீனையும் அவனிடமே திருப்பிக் கொடுத்தான்.

“அவற்றை நீயே வைத்துக்கொள்ளலாம். இந்தப் புத்தகங்களைக் கடைசியாகப் படித்தது நிச்சயம் குருடன் ஐசாக்காகத்தான் இருக்க வேண்டும். ஆகவே என்ன செய்யப்போகிறாய் என்பதை நன்றாக யோசித்துக்கொள்” என்று ஸ்பானிய மொழியில் சொன்னான்.

ஹோரசே அர்க்காதியோ, மேமேயின் அறையைப் புதுப்பித்தான். வெல்வெட் திரைச்சீலைகளைச் சுத்தப்படுத்தினான். இரட்டைக் கட்டிலின் மேல் விதானத்தைப் பழுதுபார்த்து மெல்லிய துணியால் இழுத்துக் கட்டினான். பயன்படுத்தாமல் விட்ட குளியலறையை அதிலிருந்த சிமென்டு குளியல் தொட்டிக்கு சிமென்டுப் பூச்சுக் கொடுத்து மீண்டும் உபயோகிக்கக் கூடியதாக்கினான். ஆடம்பரமான உடைகளுக்கோ வாசனைத் திரவியங்களுக்கோ மலிவான ஆபரணங் களுக்கோ காசு செலவாகிவிடாமல் சட்டைப் பாக்கெட்டை இறுக்கிப் பிடித்தான். வீட்டில் மிஞ்சியவற்றில் அவனைக் கவலையடையச் செய்தவை குடும்பப் பலி பீடத்திலிருந்த புனிதர்களின் திருவுருவங்கள் மட்டுமே. அவற்றையும் ஒரு பிற்பகலில் முற்றத்தில் சொக்கப்பனை போட்டுக் கொளுத்தினான். பதினோரு மணி தாண்டும்வரை தூங்கினான். கசங்கிய அங்கியுடன் டிராகன் படம் பதித்த மஞ்சள் நிற வார் உள்ள செருப்பு அணிந்து குளியலறைக்குப் போய் அழகி ரெமேதியோஸை நினைவுக்குக் கொண்டுவந்து மிகுந்த கவனத்துடனும் நீண்ட நேரமாகவும் சடங்கில் மூழ்குவான். குளிப்பதற்கு முன்பு தொட்டியில் அவன் கொண்டு வந்த நறுமணப் பொடிகளை நீரில் கலப்பான். சுரைக் குடுக்கையில் தண்ணீரை மொண்டு குளிக்காமல் தொட்டிக்குள் வாசனை நீரில் இறங்கி இரண்டு மணி நேரத்துக்கு மேல் அதன் குளிர்ச்சியிலும் அமரந்தாவின் நினைவிலும் திளைத்து மல்லாந்து கிடப்பான். திரும்பி வந்த சில நாட்களுக்குப் பிறகு தன்னுடைய டஃபேட்டா சூட்டை ஒதுக்கி வைத்திருந்தான். அந்த நகரத்தின் வெக்கைக்கு அது பொருத்தமானதல்ல என்பது மட்டுமல்ல அவனிடம் இருந்தது அது ஒன்றே ஒன்றுதான் என்பதும் காரணம். அதைக் கொடுத்துவிட்டுப் பதிலுக்கு, நடனப் பயிற்சிகளின்போது பியத்ரோ கிரெஸ்பி அணிந்திருந்தது போன்ற இறுக்கமான கால் சட்டையையும் அசல் இழையில் நெய்த பட்டுத்துணிச் சட்டையை யும் – அதன் இதயப் பகுதியில் தனது பெயரின் முதல் எழுத்துக்களை எம்பிராய்டரி செய்து – வாங்கினான். வாரத்துக்கு இரண்டு முறை தன்னுடைய எல்லா உடைகளையும் சலவைத் தொட்டியில் போட்டுத் துவைத்தான். அணிவதற்கு வேறு உடை இல்லாததால் அங்கியைப் போட்டுக்கொண்டு உடைகள் உலர்வதற்காகக் காத்திருப்பான். அவன் வீட்டில் உணவருந்தவில்லை. வெம்மையான பகலுறக்க வேளை தணியும்போது வெளியே போவான். நள்ளிரவில் திரும்பி வருவான். பிறகு பூனையைப்போல மூச்சுவிட்டுக்கொண்டும் அமரந்தாவைப் பற்றி நினைத்துக்கொண்டும் தனது பதற்றமான நடையைத் தொடருவான். இரவு விளக்கின் வெளிச்சத்தில் அவளும் புனிதர்களின் அச்சுறுத்தும் பார்வையுமே அந்த வீட்டில் அவனுக்கு மிஞ்சியிருந்த இரண்டு நினைவுகள். மனப்பிறழ்வை ஏற்படுத்தும் ரோம் நகர ஆகஸ்டு மாதங்களில் தூக்கத்துக்கு நடுவே எவ்வளவோ முறை

'அவன் கண்களைத் திறந்து சலவைக்கல் விளிம்புள்ள குளியல் தொட்டிக்குள்ளிருந்து லேஸ் வைத்த பாவாடையுடனும் காயத் துணி மூடிய கையுடனும் எழுந்திருப்பதைப் பார்த்திருக்கிறான். அந்தப் பிம்பத்தை யுத்தத்தின் ரத்தச் சதுப்பில் மூழ்கடித்த அவுரேலியானோ ஹோராசேயைப் போலில்லாமல், தாய் பெர்னாண்டாவுக்குத் தனது துறவு வாழ்க்கையைப் பற்றி முடிவில்லாத கட்டுக்கதைகளைச் சொல்லி அவளை மகிழ்வித்துக் கொண்டிருந்தபோதும்கூட, ஹோசே அர்க்காதியொ அந்தப் பிம்பத்தைக் காமத் தாம்பாளத்தில் உயிர்ப்புடன் வைத்திருக்கவே முயன்றான். தங்களுடைய கடிதங்கள் வெறும் கற்பனைகளின் பரிமாற்றம் என்று அவனுக்கோ பெர்னாண்டாவுக்கோ ஒருபோதும் நினைத்துப் பார்க்கத் தோன்றவே இல்லை. ரோமுக்குப் போய்ச் சேர்ந்ததுமே ஹோசே அர்க்காதியோ இறையியல் கல்லூரியி லிருந்து வெளியேறினான். அம்மாவின் பித்துநிலைக் கடிதங்களில் சொல்லப்படும் மகத்தான பரம்பரையின் வாரிசாகக் கருதுவதைக் குலைக்கக் கூடாது என்பதற்காக இறையியல் சரித்திரத்தையும் திருச்சபைச் சட்டங்களையும் பற்றிய பொய்யான உலகை உருவாக்கி அந்த அனுபவங்களை அவளுக்கு எழுதினான். டிராஸ்டெவெர் நகரத்தில் ஒரு மேல்மாடியில் அறையில் இரண்டு நண்பர்களுடன் நடத்திய வாழ்க்கையின் துயரத்தையும் அசிங்கத்தையும் மறக்க அந்தக் கடிதங்கள் அவனுக்கு உதவின. மரணத்தின் உடனடி வருகை எழுத வைத்த பெர்னாண்டாவின் கடைசிக் கடிதம் கிடைத்ததும் தனது போலிப் பகட்டின் மிச்சங்களை ஒரு பெட்டியில் போட்டுக்கொண்டு புறப்பட்டான். கசாப்புக்குக் கொண்டு செல்லப்படும் கால்நடைகளைப் போல குடியேற்றக்காரர்கள் அடைக்கப்பட்ட கப்பலின் சரக்கு அறையில் ஆறிப்போன மக்ரோனியையும் புழுத்துப்போன பாலாடைக் கட்டியை யும் தின்று கடல் கடந்தான். நெருங்கி வரும் மரணத்தின் தீக்குறி எழுதுவித்த பெர்னாண்டாவின் இறுதிக் கடிதத்தை, அது அவளுடைய துரதிர்ஷ்டங்களின் விரிவான மீள்பதிவு தவிர வேறல்ல – வாசித்து முடித்தான். உடைந்து நொறுங்கிய அறைக் கலன்களும் தாழ்வாரத்தில் அடர்ந்து படர்ந்திருந்த களைகளும் அவன் கண்முன் தோன்றி ஒருபோதும் தப்பவியலாத பொறிக்குள் அகப்பட்டுக் கொண்டதை இனங்காட்டின. ரோம் வசந்தத்தின் காலமற்ற ஆழமும் வைர வெளிச்சமும் தன்னைவிட்டு என்றென்றைக்குமாகப் போய் விட்டதை உணர்ந்தான். ஆஸ்துமா ஏற்படுத்திய உறக்கமின்மையில் தனது துரதிர்ஷ்டத்தின் ஆழத்தை மீண்டும் மீண்டும் அளந்தான். நிழல்கள் அடர்ந்த அந்த வீட்டுக்குள் நடக்கும்போது உர்சுலாவின் அநாவசிய நிர்ப்பந்தம் உலகத்தைப் பற்றித் தனக்குள் உருவாக்கிய பயத்தை அளந்தான். அந்த நிழல்களுக்குள் அவன் தவறிவிடக் கூடாது என்றும் சூரியன் மறைந்த பிறகு வீட்டுக்குள் நடமாடும் இறந்தவர்களிடமிருந்து பாதுகாப்பாக இருக்க முடியும் என்று உறுதியாக நம்பிய ஒரே இடமான படுக்கையறை மூலையிலேயே அவனை இருக்கவைத்தாள். "நீ ஏதாவது தப்புக் காரியம் செய்தால் புனிதர்கள் என்னிடம் சொல்லி விடுவார்கள்" என்பாள். பீதி நிரம்பிய அவனுடைய குழந்தைப் பருவ இரவுகள் அந்த மூலையிலேயே ஒடுங்கின. தூங்கப் போகும் வரைக்கும்

அந்த மூலையிலேயே ஒரு முக்காலி மேல் கோள்மூட்டிப் புனிதர்களின் நீரோடிய கண்காணிப்புப் பார்வையில் உட்கார்ந்து பயத்தால் வியர்த்து வழிந்துகொண்டிருப்பான். அந்தச் சித்திரவதையே அநாவசியம். ஏனெனில் அந்தப் பருவத்தில் அவனைச் சுற்றியிருந்த ஒவ்வொன்றும் பீதியூட்டக் கூடியவையாகவே இருந்தன. அவன் வாழ்க்கையில் பார்த்த எல்லா வற்றுக்குமே பயந்தான். தெருப் பெண்கள் அவனுடைய ரத்தத்தைக் குடித்துவிடுவார்கள்; வீட்டுப் பெண்கள் பன்றி வாலுடன் குழந்தை களைப் பெற்றெடுப்பார்கள்; சண்டைச் சேவல்கள் ஒருவனுக்கு மரணத்தைக் கொண்டுவந்து கொடுத்துவிட்டு மற்றவர்களை வாழ்க்கை முழுவதும் புலம்ப வைக்கும்; சுடும் ஆயுதங்கள் தொட்டதும் இருபதாண்டுப் போரைக் கொண்டு வரும்; நிச்சயமில்லாத சாகசங்கள் ஏமாற்றங்களுக்கும் பைத்தியத்துக்கும் இட்டுச் செல்லும். சுருக்கமாக ஒவ்வொன்றும், கடவுள் தமது அளப்பரிய நன்மையால் படைத்த ஒவ்வொன்றும் சாத்தானால் வக்கிரமாக்கப் பட்டது. அச்சுறுத்தும் கனவுகளிலிருந்து விழித்தெழும்போது ஜன்னலின் வெளிச்சமும் குளியலறையில் கிடைக்கும் அமரந்தாவின் அணைப்பும் கால்களுக் கிடையில் அவள் பட்டுக்குஞ்சத்தால் பவுடர் போட்டு விடும்போது உணரும் கிளர்ச்சியும்தான் பயத்திலிருந்து அவனை விடுவித்தன. தோட்டத்தில் கதிர்வீச்சாகப் பரவும் ஒளியில் உர்சுலாகூட வித்தியாச மானவளாக இருந்தாள். ஏனெனில் அப்போது அவள் பயமுறுத்தும் விஷயங்களைப் பற்றிப் பேசமாட்டாள். போப்பாண்டவரின் பிரகாச மான புன்னகை அவனுக்கும் இருக்க வேண்டும் என்பதற்காகக் கரித்தூளால் அவன் பற்களைத் துலக்கிவிடுவாள். உலகம் முழுவதிலு மிருந்து வரும் புனிதப் பயணிகள் ஆசீர்வாதம் செய்யும்போது போப்பரசரின் அழகான கைகளைப் பார்த்துத்தான் ஆச்சரியமடைவார் கள் என்பதால் அவனுடைய கை நகங்களை வெட்டி மெருகேற்றி விடுவாள். போப்பரசரின் சிகையலங்காரம் போலவே அவனுக்குத் தலைவாரி விடுவாள். போப்பாண்டவரின் வாசனை இருக்க வேண்டும் என்பதற்காக அவனுடைய உடம்புமேலும் சட்டைமேலும் பன்னீரைத் தெளிப்பாள். கோடைக்காலத் தங்குமிடமான காஸில் க்ராண்டோல்ஃபோ வின் முற்றத்தில் நின்று போப்பரசர் உப்பரிகையிலிருந்து புனிதப் பயணிகளின் கூட்டத்துக்காக ஒரே பிரசங்கத்தை ஏழு மொழிகளில் நிகழ்த்திக் கொண்டிருந்ததை அவனால் பார்க்க முடிந்தது. உண்மையில் அவனது கவனத்தை அவரது கைகளின் சுண்ணாம்பில் முக்கியெடுத்தது போன்ற வெண்மையும் அவருடைய கோடைக்கால உடுப்பின் பளபளப்பும் பன்னீரின் சுகந்தமும்தான் கவர்ந்தன.

வீடு திரும்பி ஓராண்டுக்குப் பிறகு சாப்பாட்டுச் செலவுக்காக வெள்ளி மெழுகுவர்த்தித் தாங்கிகளையும் முன்னோர்களின் தங்கக் கழிவுப் பானையையும் – அந்தச் சமயத்தில் அதன் விளிம்பில் மட்டுமே சிறிது தங்க முலாம் மிஞ்சியிருந்தது என்பதுதான் உண்மை – விற்றான். நகரத்திலிருந்த குழந்தைகளை அழைத்துவந்து வீட்டில் விளையாட விடுவதுதான் மட்டுமே அவனுக்கு ஆறுதலாக இருந்தது. பகலுறக்க வேளையில் அவர்களுக்கிடையில் வந்து அவர்களைத் தோட்டத்தில் கயிறு விளையாடவும் முற்றத்தில் உட்கார்ந்து பாட்டுப் பாடவும்

வரவேற்பறை மேஜை நாற்காலிகள் மேல் வித்தைக் காட்டவும் அனுமதிப்பான். குழுக்களாகப் பிரித்து அவர்களுக்கு நன்னடத்தைப் பாடங்களைச் சொல்லிக் கொடுப்பான். அந்தச் சமயத்தில் அவனுடைய இறுக்கமான கால் சராய் பொருந்தாமற் போனதால் அரபுக் கடையிலிருந்து வாங்கிய சாதாரண சட்டையை அணிந்தான். எனினும் தனது அமைதியான துறவித் தோற்றத்தை விட்டுவிடவில்லை. கடந்த காலத்தில் மேமேயின் பள்ளித் தோழிகள் செய்தது போலவே சிறுவர்கள் வீட்டை ஆக்கிரமித்தார்கள். இரவாகும்வரை அவர்கள் அரட்டை அடிப்பதையும் பாடுவதையும் தாளமிட்டு நடனமாடுவதையும் கேட்கவும் பார்க்கவும் முடியும். ஆக, வீடு கட்டுப்பாடில்லாத விடுதியை ஒத்திருந்தது. மெல்குயாதெஸின் அறைக்குள் தன்னைத் தொந்தரவு செய்யாதவரை அந்த ஆக்கிரமிப்பைப் பற்றி அவுரேலியானோ கவலைப்படவில்லை. ஒருநாள் காலை இரண்டு குழந்தைகள் கதவைத் தள்ளித் திறந்தபோது பணி மேஜைமீது பட்டயங்களை ஆராய்ந்து கொண்டிருந்த அழுக்கான, சடை விழுந்த முடியுடன் ஒருவனைப் பார்த்து மருண்டார்கள். அதன் பிறகு அவர்களுக்கு உள்ளே நுழையத் தைரியமில்லை. ஆனால் அந்த அறையையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். விரிசல்கள் வழியாக எட்டிப் பார்ப்பார்கள். குசுகுசுப்பார்கள். உயிருள்ள பிராணிகளை வாசல் பலகணி வழியாக உள்ளே தூக்கி எறிந்தார்கள். ஒரு சந்தர்ப்பத்தில் கதவையும் ஜன்னல்களையும் ஆணிவைத்து அறைந்து மூடினார்கள். அவர்களைக் கதவைத் திறக்க வைக்கச் செய்ய அவுரேலியானோவுக்கு அரை நாள் வேண்டி வந்தது. தங்கள் குறும்புகளுக்காகத் தண்டிக்கப்படவில்லை என்று வியந்த சிறுவர்கள் ஒரு நாள் காலை, அவுரேலியானோ சமையலறையில் இருக்கும்போது அறைக்குள் நுழைந்து பட்டயங்களை நாசமாக்கத் தயாரானார்கள். ஆனால் அவர்கள் மஞ்சளேறிய அந்தத் தாள்கள் மேல் கையை வைத்ததுமே ஒரு தேவதைச் சக்தி அவர்களைத் தரையிலிருந்து தூக்கி அவுரேலியானோ திரும்பி வரும்வரை அந்தரத்திலேயே தொங்க வைத்தது. அவன் வந்து பட்டயங்களை அவர்களிடமிருந்து வாங்கிவைத்தான். அதற்குப் பிறகு அவர்கள் அவனைத் தொந்தரவு செய்யவில்லை. அதில் விடலைப் பருவத்தின் வாசலில் நின்றிருந்தபோதும் அரைக் கால் சராய்களையே அணிந்திருந்த நான்கு சிறுவர்கள் ஹோசே அர்க்காதியோவின் அந்தரங்கத் தோற்றத்தைக் கவனித்துக்கொண்டார்கள். மற்றவர்கள் வருவதற்கு முன்பாக வந்தார்கள். அவனுக்குச் சவரம் செய்துவிடுவதில் காலை நேரத்தைக் கழித்தார்கள். சூடான துவாலையால் ஒத்தடம் கொடுத்தார்கள். அவனுடைய கை, கால் நகங்களை வெட்டி மெருகேற்றினார்கள். பன்னீரால் அவனை மணக்கச் செய்தார்கள். பல சந்தர்ப்பங்களில் குளியல் தொட்டிக்குள்ளேயே இறங்கி அமரந்தாவைப் பற்றி நினைத்துக்கொண்டே மல்லாந்து மிதந்திருக்கும் அவனுக்குத் தலை முதல் கால் நகம்வரை சோப்புத் தேய்த்துவிட்டார்கள். அவனைத் துவட்டி உடம்புக்குப் பவுடர் போட்டு ஒப்பனைச் செய்தார்கள். அவர்களில் மென்பழுப்பு நிறமுள்ள சுருட்டை முடியும் முயலைப் போன்ற இளஞ்சிவப்புக் கண்களுமுள்ள சிறுவன் அந்த வீட்டிலேயே படுத்துறங்குவது வழக்கம். ஹோசே அர்க்காதியோவுடன் அவனுக்கு இருந்த பிணைப்பு வலுவானது.

ஆஸ்துமாவால் உறக்கமில்லாமல் தவிக்கும்போதும் வீட்டுக்குள்ளேயே எதுவும் பேசாமல் நடந்து கொண்டிருக்கும்போதும் சிறுவன் இருட்டில் அவனுக்குத் துணையாக இருந்தான். ஒரு இரவு, உர்சுலா படுத்து உறங்கிய அறையில் நொறுங்கிக் கொண்டிருந்த சிமெண்ட் தரைக்குக் கீழிருந்து ஒரு மஞ்சள் வெளிச்சம் வருவதைப் பார்த்தார்கள். ஒரு தலைமறைவுச் சூரியன் அறையின் தரையையே கண்ணாடிப் பாளமாக மாற்றியிருந்தது. அவர்கள் விளக்கைப் போடவில்லை. உர்சுலாவின் கட்டில் கிடந்த இடத்திலிருந்த உடைந்த சிமென்டுப் பலகைகளை மேலே தூக்குவதே போதுமானதாக இருந்தது. அவுரேலியானோ செகுந்தோ தன்னுடைய பித்து முற்றிய அகழ்வாராய்ச்சியில் தோண்டிய அந்த இடத்தில் வெளிச்சம் மிகவும் அடர்த்தியாக இருந்து ரகசியப் புதையலைக் காட்டியது. செப்புக் கம்பியால் இறுக்கி மூடப்பட்ட மூன்று கித்தான் பைகள் இருந்தன; அவற்றுக்குள் இருந்த ஏழாயிரத்து இருநூற்றுப் பதினான்கு தங்க நாணயங்கள் அந்த இருட்டில் நெருப்புக் கனல்கள்போல ஒளிர்ந்தன.

நெருப்புக் கொழுந்துவிட்டு எரிவதுபோல இருந்தது அந்தப் புதையல் கண்டுபிடிப்பு. திடீர் அதிர்ஷ்டத்துடன் துயரத்தில் முதிர்ந்த தனது வாழ்க்கையின் கனவான ரோம் நகரத்துக்குத் திரும்பிப் போவதற்குப் பதிலாக ஹோசே அர்க்காதியோ அந்த வீட்டைக் கௌரவமான சொர்க்கமாக மாற்றினான். திரைச் சீலைகளையும் கட்டில் விதானத்தையும் மாற்றி புதிய வெல்வெட் திரைகள் போட்டான். குளியலறைத் தரையில் கற்களைப் பாவினான்; சுவர்களில் ஓடுகளை ஒட்டினான். சமையலறையிலிருந்த அலமாரியில் பழங்களையும் பன்றி இறைச்சியையும் ஊறுகாய்களையும் நிரப்பினான். ரயில் நிலையத்திலிருந்து தன்னுடைய பெயர் பொறித்த பெட்டி அடுக்குகளில் வந்த ஒயின் குப்பிகளையும் மற்ற மதுபானங்களையும் பாதுகாத்து வைப்பதற்காக மறுபடியும் பொருள் வைப்பறையைத் திறந்துவிட்டான். ஒரு இரவு அவனும் நான்கு சிறுவர்களும் விடியற்காலைவரை நீண்ட விருந்தை நடத்தினார்கள். காலை ஆறு மணிக்குக் குளியலறையிலிருந்து வெளியே வந்த அவர்கள் குளியல் தொட்டியிலிருந்த தண்ணீரை வடித்துவிட்டு அதை ஷாம்பெய்ன் ஊற்றி நிரப்பினார்கள். கூட்டமாக அதற்குள் குதித்து வாசனைக் குமிழிகள் மிதக்கும் ஆகாயத்தில் பறக்கும் பறவைகள்போல நீந்தினார்கள். கொண்டாட்டத்தின் உச்சமாக ஹோசே அர்க்காதியோ அமரந்தாவை நினைத்துக்கொண்டு கண்கள் திறந்தபடி மல்லாந்து கிடந்து மிதந்தான். அவன் அப்படிக் கிடந்தபோது, களைத்துப்போன சிறுவர்கள் ராணுவப் படைப் பிரிவுபோல அணிவகுத்துப் படுக்கையறைக்குப் போனார்கள். திரைச் சீலைகளைக் கிழித்துத் தங்களைத் துவட்டிக்கொண்டார்கள். அந்தக் களேபரத்தில் பளிங்குக் கண்ணாடியை நான்கு சில்லாக உடைத்தார்கள். கட்டில் விதானத்தை நாசமாக்கினார்கள். பின்பு அதன் மேலேயே அம்மணமாகப் படுத்துக் கிடந்தார்கள். குளியலறையிலிருந்து ஹோசே அர்க்காதியோ திரும்பி வந்தபோது தரைத் தட்டிய கப்பலின் படுக்கையறையில் குவிக்கப்பட்ட நிர்வாணச் சடலங்கள் தூங்குவதைப் பார்த்தான். அவனுக்குக் கோபமெழுந்தது. ஆனால் அது அந்த நாசங்களால்

அல்ல; கட்டுப்பாடில்லாத கொண்டாட்டம் தந்த அர்த்தமின்மையில் ஏற்பட்ட அருவருப்பினாலும் பரிதாபத்தாலும் ஆத்திரம் மூண்டது. தன்னுடைய பெட்டியின் அடியில் கம்பளிச் சட்டையுடன் சுய ஒறுத்தலுக்காகவும் சுய தண்டனைக்காகவும் வைத்திருந்த புரிச் சவுக்கை எடுத்தான். பைத்தியக்காரனைப் போல ஊளையிட்டுக்கொண்டு கடத்தல்காரர்களிடம்கூட யாரும் காட்டாத இரக்கமின்மையுடன் அதை வீசிச் சிறுவர்களை வீட்டைவிட்டு விரட்டினான். அதைச் செய்த பின் அவனைத் தாக்கிய ஆஸ்துமா பல நாட்களாக நீண்டு அவனுக்கு மரணப்படுக்கையிலிருப்பவனின் தோற்றத்தைக் கொடுத்தது. தாக்குதல் அதிகமாக இருந்த மூன்றாம் நாள் இரவு அவன் அவுரேலியானோவின் அறைக்குப் போய் பக்கத்திலுள்ள மருந்துக் கடையிலிருந்து உறிஞ்சுவதற்கான சில மருந்துப் பொடிகளை வாங்கி வரும்படிக் கேட்டான். அப்படியாக, அவுரேலியானோ இரண்டாம் முறையாக வெளியே சென்றான். இரண்டு கட்டடங்களுக்கு அப்பாலிருந்த சிறிய மருந்துக் கடையை அடைந்தான். அதன் ஜன்னல்களில் புழுதியேறியிருந்தது. உள்ளே லத்தீன் மொழியில் பெயர்ச் சீட்டுகள் ஒட்டப்பட்ட பீங்கான் குப்பிகள் இருந்தன. ஹோராசே அர்க்காதியோ துண்டுக் காகிதத்தில் பெயர் எழுதிக் கொடுத்திருந்த மருந்தை நைல்நதிப் பகுதியிலிருக்கும் எச்சரிக்கையான பாம்பின் அழகு கொண்ட பெண் எடுத்துக் கொடுத்தாள். தெருக்களில் மஞ்சள் நிற விளக்குகள் மங்கலாக எரிந்து கொண்டிருந்த அந்தப் புறக்கணிக்கப்பட்ட நகரத்தை முதல் முறை பார்த்தபோது அவுரேலியானோவுக்கு ஆர்வம் ஏற்படாதது போலவே இரண்டாம் முறையாகப் பார்த்தபோதும் இருந்தது. அவன் ஓடிப் போயிருக்கலாம் என்று நினைக்கத் தொடங்கியபோது, அவன் உள்ளே வந்தான். சிறையிருப்பும் நடமாட்டமின்மையும் பலவீனமாக்கியிருந்ததால் மரத்துப்போன கால்களை இழுத்துக்கொண்டு மூச்சிறைக்க வந்திருந்தான். உலகத்துடனிருந்த அவனுடைய வெறுப்பு உறுதியாக இருந்தபோதும் சில நாட்களுக்குப் பின்னர் ஹோராசே அர்க்காதியோ அம்மாவுக்குக் கொடுத்த வாக்குறுதியை மீறி அவனுக்கு எங்கே விருப்பமோ அங்கே போக அனுமதித்தான்.

"வெளியே போய்ச் செய்ய எனக்கு எதுவும் இல்லை" அவுரேலியானோ பதில் சொன்னான்.

அறைக்குள்ளேயே அடைந்து கிடந்து பட்டயங்களில் மூழ்கினான். மெல்ல மெல்ல அவற்றின் பொருள் பிடிபட்டாலும் அவனால் விளக்கம் கண்டடையும் அளவுக்குப் புரியவுமில்லை. ஹோராசே அர்க்காதியோ பன்றி இறைச்சித் துண்டுகளை அறைக்குக் கொண்டு வந்து கொடுப்பான். வாயில் போட்ட பிறகும் இனிப்பூறிக் கொண்டிருக்கும் சர்க்கரை கலந்த பூ மிட்டாய்கள் கொண்டு வருவான். இரண்டு முறை ஒரு கோப்பை ஒயினும் கொண்டு வந்தான். அவனுக்குப் பட்டயங்களில் ஆர்வமில்லை. அது ஒரு சின்னக் கூட்டத்தின் பொழுது போக்கு என்று நினைத்தான். ஆனால் தன்னுடைய ஆதரவற்ற உறவினனுக்கு இருந்த அபூர்வமான ஞானமும் உலகத்தைப் பற்றி இருந்த பரந்த அறிவும் அவனை ஈர்த்தன. பட்டய வாசிப்புக்கு

நடுவிலும் அவனால் எழுத்து வடிவ ஆங்கிலத்தைப் புரிந்துகொள்ள முடியும் என்பதையும் கலைக் களஞ்சியத்தின் ஆறு தொகுதிகளையும் ஒரு நாவலின் பக்கங்களைப்போல முதல் பக்கத்திலிருந்து கடைசிப் பக்கம் வரை வாசிக்க முடியும் என்பதையும் கண்டுபிடித்தான். பல காலம் அங்கேயே வாழ்ந்தவனைப்போல ரோம் நகரத்தைப் பற்றி அவுரேலியானோவால் பேச முடிவது அவனை வியக்க வைத்தது. பொருட்களின் விலை போன்று கலைக் களஞ்சியத்தில் இல்லாதவை பற்றியும் அவனுக்குத் தெரியும் என்பதையும் உணர்ந்தான். இந்தத் தகவல்களையெல்லாம் அவன் எங்கிருந்து தெரிந்துகொண்டான் என்று கேட்டபோது அவுரேலியானோ சொன்ன பதில் "எல்லாம் அறியப் பட்டவைதான். அவுரேலியானோ தன் பங்குக்கு வீட்டுக்குள் நடை போடும்போது தெரிந்த ஹோசே அர்க்காதியோ அல்ல நெருங்கிப் பார்க்கும்போது தெரியும் மாறுபட்ட நபர் என்று வியப்படைந்தான். அவனால் சிரிக்கவும் அந்த வீட்டின் இறந்த காலத்தைப் பற்றிய நினைவேக்கத்தில் மூழ்கவும் மெல்குயாதெஸின் அறை இருக்கும் பரிதாப நிலை பற்றிக் கவலைப்படவும் முடியுமென்பதைக் கண்டு பிடித்தான். ஒரே ரத்தத்தைச் சேர்ந்த இரண்டு தனிமையான நபர்கள் நெருங்குவது நட்பிலிருந்து மிகவும் வேறுபட்ட ஏதோ காரணத்தால். ஆனால் அதே காரணம் அவர்களைத் தனிமையின் ஆழத்தில் ஒரே சமயம் சேர்க்கவும் பிரிக்கவும் செய்தது. ஹோசே அர்க்காதியோ தன்னை மூச்சுத் திணறச் செய்யும் வீட்டுப் பிரச்சனைகளிலிருந்து விடுவித்துக்கொள்ள அவுரேலியானோமீது அக்கறை கொண்டான். அதன் பின்னர் அவுரேலியானோ முற்றத்தில் உட்கார்ந்து படித்தான். அமரந்தா உர்சுலாவிடமிருந்து வரும் கடிதங்களுக்காக – அவை இன்னும் வழக்கமான கால அளவிலேயே வந்து கொண்டிருந்தன – அவனும் காத்திருந்தான். வீடு திரும்பிய நாட்களில் ஹோசே அர்க்காதியோவால் நுழையத் தடை விதிக்கப்பட்ட குளியலறையை அவனும் உபயோகித்தான்.

ஒரு நாள் வெப்பமான அதிகாலையில் கதவில் யாரோ அவசரமாகத் தட்டுவதைக் கேட்டு இரண்டு பேரும் அதிர்ச்சியுடன் எழுந்தார்கள். பெரிய பச்சை நிறக் கண்களுடன் கறுத்த நிறமுள்ள கிழவன் ஒருவன் நின்றிருந்தான். அந்தக் கண்கள் அந்த முகத்துக்குப் பிசாசுத்தனமான ஒளிர்வைக் கொடுத்தது. நெற்றியில் சாம்பற்சிலுவை அடையாளம் இருந்தது. அவனுடைய உடைகள் கிழிந்து தொங்கின. ஷூக்கள் பிளந்திருந்தன. தோளில் ஒரு பழைய பை. அவனுடைய தோற்றத்துக்கு முற்றிலும் மாறுபட்ட கௌரவம் அவனிடம் இருந்தது. தாழ்வாரத்தின் நிழலில் நின்றிருந்தபோதும் வாழ்வதற்கான விருப்பமல்ல; அவனுடைய குணாம்சத்தின் இயல்பாக மாறியிருந்த பயமே அந்தக் கௌரவத் தோற்றத்துக்குக் காரணம் என்று ஊகிக்க முடிந்தது. அது நீண்ட காலமாக நாடற்றவனாக தேடிக்கொண்டு தலைமறைவு வாழ்க்கை நடத்தி வந்த அவுரேலியானோ அமதோர். கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் பதினேழு மகன்களில் உயிர் தப்பிய ஒரே ஒருவன். தனது அடையாளத்தை வெளிப்படுத்திவிட்டுப் புறக்கணிக்கப்பட்டவனாக அலைந்துகொண்டிருந்த இரவுகளில் வாழ்க்கையில் தன்னைப் பாது காத்துக்கொள்ள மிஞ்சியிருக்கும் ஒரே புகலிடம் அதுதான் என்பது

நினைவுக்கு வந்ததாகவும் அந்த வீட்டில் தனக்கு அடைக்கலம் தர வேண்டுமென்றும் கெஞ்சினான். ஆனால் ஹோராசே அர்க்காதியோவுக்கும் அவுரேலியானோவுக்கும் அவனை ஞாபகமே இல்லை. ஒரு நாடோடி என்று நினைத்துத் தெருவில் பிடித்துத் தள்ளினார்கள். வாசலிலிருந்து, ஹோராசே அர்க்காதியோவுக்கு விவரம் தெரிவதற்கு முன்பு தொடங்கிய நாடகத்தின் இறுதிக் காட்சியைப் பார்த்தார்கள். அவுரேலியானோ அமதோரைப் பல ஆண்டுகளாகத் தேடிக்கொண்டிருந்த, உலகத்தின் பாதி முழுவதும் அவனுக்காக ரத்த வேட்டையாடிக் கொண்டிருந்த இரண்டு போலீஸ்காரர்கள், எதிர்ப் பக்க நடைபாதையை ஒட்டியிருந்த வாதுமை மரங்களுக்கு இடையிலிருந்து வந்து தங்களுடைய மோசர்ஸ் கைத்துப்பாக்கியால் சுட்டார்கள். அவை சரியாகச் சாம்பற் சிலுவையை ஊடுருவின.

சிறுவர்களை வீட்டைவிட்டு விரட்டிய பிறகு கிறிஸ்துமஸுக்கு முன்னர் நேப்பிள்ஸுக்குச் செல்லும் கப்பலைப் பற்றிய செய்திக்காக ஹோராசே அர்க்காதியோ காத்துக்கொண்டிருந்தான். அதை அவுரேலியானோவிடம் சொன்னான். பெர்னாண்டாவின் மரணத்துக்குப் பிறகு உணவுக் கூடைகள் வருவது நின்றிருந்தது. எனவே அவனுக்குப் பிழைப்புக்காக ஒரு வியாபாரத்தை ஏற்பாடு செய்யவும் திட்டமிட்டிருந்தான். கடைசியில் அந்தக் கனவு நிறைவேறவில்லை. ஒரு செப்டம்பர் மாதக் காலை நேரத்தில் அவுரேலியானோவுடன் சமையலறையிலிருந்து காப்பி அருந்திவிட்டு ஹோராசே அர்க்காதியோ வழக்கமான குளியலை முடித்துக் கொண்டிருந்தபோது கூரை ஓடுகளின் இடுக்குகள் வழியாக நான்கு சிறுவர்களும் இறங்கினார்கள். ஹோராசே அர்க்காதியோவுக்குத் தன்னைக் காப்பாற்றிக்கொள்ள நேரம் கொடுக்காமல் முழு உடைகளுடன் குளியல் தொட்டிக்குள்ளே குதித்து அவனுடைய முடியைப் பற்றி இழுத்துத் தலையை நீருக்கடியில் மரணத்தின் குமிழிகள் கொப்பளித்து மேல்மட்டத்துக்கு வரும்வரை அமிழ்த்தினார்கள். அவனுடைய மௌனமான வெளுத்த டால்பின் உடம்பு வாசனை நீரில் மூழ்கிக் கிடந்தது. பிறகு அவர்கள், இறந்துபோனவனைத் தவிர தங்களுக்கு மட்டுமே தெரிந்த மறைவிடத்திலிருந்து மூன்று தங்க மூட்டைகளையும் எடுத்துக்கொண்டு வெளியேறினார்கள். ராணுவ நடவடிக்கையைப் போல வேகமும் திட்டமிட்டதும் கொடூரமுமானதாக இருந்தது அந்தச் செயல். தனது அறைக்குள் அடைந்து கிடந்த அவுரேலியானோ எதையும் உணரவில்லை. பிற்பகலில் ஹோராசே அர்க்காதியோவைச் சமையலறையில் காணாமல் வீடெல்லாம் தேடிய அவுரேலியானோ, குளியலறைத் தொட்டியின் வாசனை நீர் அடியில் அப்போதும் அமராந்தாவைப் பற்றி நினைத்துக்கொண்டு வீங்கிப் பெருத்து மிதப்பதைப் பார்த்தான். தான் அவனை நேசிக்கத் தொடங்கியிருந்ததை அப்போதுதான் அவன் புரிந்துகொண்டான்.

டிசம்பர் மாதத்தின் முதல் தேவதைகளுடன் கடலோடியின் உற்சாகத்தோடு அமரந்தா உர்சுலா வந்தாள். கணவனின் கழுத்தில் ஒரு பட்டுக் கயிற்றைச் சுற்றி இழுத்து வந்தாள். முன் 'அறிவிப்பு இல்லாமல் வந்திருந்தாள். தந்த நிற உடையணிந்திருந்தாள். முழங்கால் வரைக்கும் நீளும்படியான முத்து மாலை ஒன்றை ஒற்றையாக அணிந்திருந்தாள். விரல்களில் மரகத, புஷ்பராக கல் மோதிரங்கள். நேரான கூந்தலைக் கொண்டையாக முடிந்து பறவைச் சிறகு புரூச் வைத்திருந்தாள். ஆறு மாதங்களுக்கு முன்பு அவள் திருமணம் செய்துகொண்டவன் ஒல்லியாக இருந்தான். ஃப்ளெமிங் இனத்தைச் சேர்ந்த வயதானவன். பார்வைக்கு மாலுமியைப் போல இருந்தான். அவளுடைய வருகையின்மை நீண்ட காலமானதாக இருந்தது என்றும் அது மேலும் நாசங்களைச் செய்திருக்கக்கூடும் என்ற எச்சரிக்கையுடனும் கூடத்தை நோக்கிக் கதவை மெல்லத் தள்ளினாள்.

“கடவுளே, இந்த வீட்டில் பெண்கள் யாருமில்லை என்பது அப்பட்டமாகத் தெரிகிறது” என்று கூவினாள். அதில் அதிர்ச்சியை விட மகிழ்ச்சியே இருந்தது.

பயணச் சுமைகளை வராந்தாவில் மட்டுமாக இறக்கிவைக்க முடியவில்லை. அவள் பள்ளியில் சேரப் போகும்போது பெர்னாண்டா கொடுத்தனுப்பிய பெட்டியைத் தவிர்த்து இரண்டு செவ்வகப் பெட்டிகள், நான்கு பெரிய சூட்கேஸுகள், அவளுடைய குடைகளை வைப்பதற்கான பை, தொப்பி வைக்கும் பெட்டிகள் எட்டு, ஐம்பது கானரிப் பறவைகள் கொண்ட ஒரு பிரம்மாண்டமான கூண்டு, அவளுடைய கணவனின் மிதிவண்டி. அதை மட்டும் பிரித்துச் சிறப்புச் சலுகையின்பேரில் ஒரு செல்லோ வயலினைப் போலக் கொண்டு வந்திருந்தார்கள். நீண்ட பயணத்துக்குப் பிறகும் அவள் ஒரு நாள்கூட ஓய்வெடுக்கவில்லை. கணவன் மற்ற வாகன உதிரி உறுப்புகளுடன் கொண்டு வந்திருந்த பழைய டெனிம் துணியை எடுத்துக்கொண்டு வீட்டை ஒழுங்குபடுத்தத் தயாரானாள். முற்றத்தை ஆக்கிரமித்திருந்த செவ்வெறும்புகளை விரட்டினாள். ரோஜாச் செடிகளை வெளிச்சம் படும்படி வைத்தாள். களைகளைப் பிடுங்கி எறிந்தாள். பெரணிச் செடிகளையும் பிகோனியாச் செடிகளையும் தொட்டிகளில் நட்டு மீண்டும் கைப்பிடிச் சுவரில் வைத்தாள். தச்சர்கள், கொல்லர்கள், கொத்தர்கள் என்று ஒரு குழுவை உருவாக்கினாள். அவர்கள் தரை வெடிப்புகளைப் பூசினார்கள். கதவுகளையும்

ஜன்னல்களையும் மீண்டும் கீல்களில் சரியாகப் பொருத்தினார்கள். மேஜை நாற்காலிகளைப் பழுது பார்த்தார்கள். வீட்டின் உள்ளும் புறமும் வெள்ளையடித்தார்கள். அப்படியாக, வந்துசேர்ந்த மூன்று மாதத்துக்குப் பிறகு, பியானோ காலத்தில் அந்த வீட்டில் நிலவிய இளமையும் கொண்டாட்டமுமான சூழலை மறுபடியும் ஒருமுறை பார்க்க முடிந்தது. எந்தச் சூழ்நிலையிலும் எல்லா நேரமும் உற்சாகமான மனநிலையிலேயே இருக்கும் நபராக அந்த வீட்டைச் சேர்ந்த யாரும் ஒருபோதும் இருந்ததில்லை; ஆடவும் பாடவும் இறந்த காலத்தின் உருப்படிகளையும் வழக்கங்களையும் குப்பையில் எறியவும் தயாரான ஒருவர் இருந்ததில்லை. மூலைகளில் குவித்து வைக்கப்பட்டிருந்த மரணச் சடங்கின் நினைவுச் சின்னங்களையும் உபயோகமில்லாத குப்பைகளையும் மூடநம்பிக்கைச் சாதனங்களையும் துடைப்பத்தால் பெருக்கித் தள்ளினாள். அவள் விட்டுவைத்தது வரவேற்பறையிலிருந்த ரெமேதியோஸின் படத்தை மட்டுமே. "என்ன ஆடம்பரம், பதினான்கு வயசுப் பாட்டி" என்று சிரித்து மாண்டாள். வீடு முழுக்க ஆவிகள் நடமாடுவதாகவும் அவை புதைத்து வைத்திருக்கும் புதையல்களைத் தோண்டி எடுப்பதே அவற்றை விரட்டுவதற்கான ஒரே பரிகாரம் என்றும் கொத்தர்களில் ஒருவன் சொன்னதைக் கேட்டு உரக்கச் சிரித்தாள். ஆண்களுக்கு மூடநம்பிக்கை நல்லது என்று தான் நினைக்கவில்லை என்றும் பதில் சொன்னாள். மிகவும் இயல்பானவளாகவும் சுதந்திரமானவளாகவும் நவீன உணர்வுள்ளவளாகவும் இருந்தாள். கைகளை விரித்துக்கொண்டு "என், என்" என்று அவள் வந்ததைப் பார்த்ததும் அவுரேலியானோவுக்குத் தன் உடம்பை எங்கே மறைத்துக் கொள்வது என்று தெரியவில்லை. "என் செல்ல நரபட்சிணி எவ்வளவு வளர்ந்துவிட்டான்" என்றாள். எதிர்வினைக்கு வாய்ப்புக் கிடைப்பதற்கு முன்னால் அவள் தன்னுடன் கொண்டு வந்திருந்த கையடக்கமான போனோகிராப்பில் ஒரு இசைத் தட்டைப் போட்டு நவீன நடன அசைவுகளை அவனுக்குக் கற்றுக்கொடுக்க முயற்சித்துக் கொண்டிருந்தாள். கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் பழைய உடைகளிலிருந்து எடுத்து அணிந்துகொண்டிருந்த அழுக்குக் கால்சட்டையை மாற்றச் செய்தாள். இளமை ததும்பும் இரண்டு சட்டைகளையும் இரு நிறமுள்ள ஷூக்களையும் கொடுத்தாள். பெரும்பான்மையான நேரமும் மெல்குயாதெஸின் அறைக்குள்ளேயே அடைந்து கிடந்தவனைத் தெருவுக்குத் தள்ளிவிட்டாள். அவள் உர்சுலாவைப்போல உற்சாகமானவளாகவும் குட்டையாகவும் வெல்ல முடியாதவளாகவும் ஏறத்தாழ அழகி ரெமேதியோஸைப் போல வனப்பானவளாகவும் வசீகரிப்பவளாகவும் இருந்தாள். புதிய ஃபாஷன்களை முன்கூட்டியே ஊகிக்கும் திறமை அவளிடமிருந்தது. மிக நவீனமான பாஷன் படங்களைத் தபாலில் தருவித்துப் பார்த்தபோது, தானாக வடிவமைத்து அமரந்தாவின் மிதி தையல் இயந்திரத்தில் தைத்த மாதிரிகள் தவறானவையல்ல என்று புரிந்துகொண்டாள். எல்லா பாஷன் பத்திரிகைகளுக்கும் கலை ஏடுகளுக்கும் ஐரோப்பாவிலிருந்து வெளியாகும் இசை விமர்சன இதழ்களுக்கும் சந்தா செலுத்தியிருந்தாள். தான் கற்பனை செய்தது போலத்தான் உலகம் போகிறது என்பதை உணர அவற்றை ஒரு நோட்டம் பார்ப்பதே

அவளுக்குப் போதுமானதாக இருந்தது. அந்த உணர்வுள்ள ஒரு பெண் புழுதியும் வெம்மையும் வதைக்கும் செத்த நகரத்துக்குத் திரும்பி வந்தாள்; தவிர தேவைக்கு மிஞ்சியப் பணம் வைத்திருக்கும் காதல் மிகுந்த கணவன் அவளை உலகத்தில் எங்கேயும் கொண்டு சென்று வாழவைக்க முடியும் என்றிருக்கும்போது எதற்காக இங்கே வந்தாள் என்பதை யாராலும் அறிய முடியவில்லை. காலம் போகப் போக மகோந்தாவிலேயே இருப்பது என்ற அவளுடைய நோக்கம் வெளிப் படையானது. ஏனெனில் அவள் திரும்பிப் போவதற்கான எந்த ஏற்பாடு களிலும், அவை மிகக் கடினமானவையல்ல, இறங்கவில்லை. வசதியான வாழ்க்கை வாழ்ந்து முதுமைக் காலத்தை மகோந்தாவிலேயே கழிக்கலாம் என்ற குறிக்கோளுக்காகவும் எதையும் செய்யவில்லை. அதுபோன்ற இலட்சியங்கள் கணப்பொழுதில் தீர்மானிக்கப்பட்டவை என்பதற்குக் கானரிப் பறவைகளின் கூண்டே சாட்சி. கானரிப் பறவைகள் அழிந்து வருவதைப் பற்றி அம்மா பெர்னாண்டா ஒருமுறை கடிதத்தில் எழுதி யிருந்ததை நினைவில் வைத்திருந்தாள். பார்ச்சுனேட் தீவுகளில் நிற்கும் கப்பலுக்காகக் கடற்பயணத்தைப் பல மாதங்கள் தாமதப்படுத்தினாள். கடைசியில் அங்கே இருபத்தைந்து பறவை ஜோடிகளைத் தேர்ந்தெடுத்தாள். அதன் மூலம் மகோந்தாவின் ஆகாயங்களில் மீண்டும் கானரிப் பறவைகளைப் பார்க்கலாம். அவளுடைய கணக்கில்லாத தோல்வித் திட்டங்களில் மிகவும் வருத்தப்பட வைத்தது அதுவாகவே இருந்தது. பறவைகள் குஞ்சு பொரித்ததும் அவற்றை ஜோடியாகப் பறக்கவிட் டாள். அவை எங்கே இருக்கிறோம் என்று உணர்ந்துகொள்ளும் முன்பே நகரத்தைவிட்டே பறந்து போயின. அவைகளிடையே அன்பை ஏற்படுத்துவதற்காக, வீட்டை முதல்முறையாகப் புதுப்பித்த காலத்தில் உர்சுலா உருவாக்கி வைத்திருந்த பறவைக் கூண்டுகளைப் பயன்படுத் தியது வீணாயிற்று. எஸ்பார்தோ* புற்களால் செய்த கூடுகளை வாதுமை மரங்களிலும் கூரை முகட்டிலும் அமைத்து அவை பொரிந்ததும் பாடும் பாடல்களின் மூலம் மற்ற பறவைகள் பிடிபடும் என்று யோசித்ததும் பயனில்லாமல் போனது. அவை முதல் முறையாகப் பறக்கத் தொடங்கி பார்ச்சூன் தீவுகள் இருக்கும் திசை புலப்படும்வரை ஆகாயத்தில் வட்டமிட்டுப் பறந்துபோயின.

திரும்பி வந்து ஒரு வருடம் ஆன பின்பும் நண்பர்களைத் தேடிக் கொள்ளவோ விருந்தோம்பல் நடத்தவோ முடியாமற்போனாலும் துரதிர்ஷ்டத்தால் தனிமைப்பட்டு நிற்கும் சமூகத்தை மீட்டுவிட முடியும் என்று அமரந்தா உர்சுலா உறுதியாக நம்பினாள். தாங்கள் ரயிலில் வந்திறங்கிய விதிவசமான நண்பகலிலேயே தன் மனைவியின் தீர்மானம் கானல் போன்ற நினைவேக்கத்தால் தூண்டப்பட்டது என்பதை அவள் கணவன் காஸ்ட்டன் உணர்ந்திருந்தான். எனினும் அவளை ஆத்திரப் படுத்திவிடக் கூடாது என்பதில் கவனம் எடுத்துக்கொண்டான். உண்மை நிலவரங்களால் அவள் தோற்கடிக்கப்படுவாள் என்ற நிச்சயம் இருந்த தால் அவன் தன்னுடைய சைக்கிளைப் பொருத்துவதைக்கூடச் செய்ய வில்லை. ஆனால் கொத்தர்கள் துடைத்து வீசியிருந்த சிலந்தி வலை

* காகிதம் செய்ய உதவும் புல்

களிலிருந்து பெரிய முட்டைகளைத் தேடி நடந்தான். நகங்களால் முட்டைகளைப் பிளந்து உருப்பெருக்கிக் கண்ணாடியை வைத்துச் சின்னச் சிலந்திகள் உருவாவதைப் பார்த்துக்கொண்டிருந்தான். பின்னர் அமரந்தா தன்னுடைய பழுதுபார்க்கும் வேலையைத் தொடர்ந்து கொண்டிருப்பதையும் அவளுடைய கைகள் ஓய்ந்திருக்காது என்பதையும் யோசித்துத் தனது அழகிய சைக்கிளைப் பொருத்தினான். அதன் முன்சக்கரம் பின்சக்கரத்தைவிடப் பெரியது. அந்தப் பிரதேசத்தில் தென்படும் எல்லாப் பூச்சிகளையும் பிடித்துப் பாடம் செய்து ஜாம் குப்பிகளில் அடைத்து, லீஜ் பல்கலைக்கழகத்தின் இயற்கை வரலாற்றுத் துறையின் முன்னாள் பேராசிரியருக்கு அனுப்பி வைத்தான். அவனுடைய தொழில் விமானப் போக்குவரத்தாக இருந்தபோதும் அந்தப் பல்கலைக் கழகத்தில்தான் பூச்சியியலில் பட்ட மேற்படிப்பு ஆய்வைச் செய்திருந்தான். சைக்கிள் ஓட்டும்போது உடற்பயிற்சி வீரனின் இறுக்கமான உடையும் அடர்த்தியான காலுறையும் ஷெர்லாக் ஹோம்ஸ் தொப்பியும் நடக்கச் செல்லும்போது புள்ளியில்லாத இயற்கையான லினன் சட்டையும் வெள்ளைக் காலுறைகளும் பட்டுமுடிச்சு டையும் அணிந்தான். கையில் எப்போதும் ஒரு வில்லையோ கைத்தடியையோ வைத்திருப்பான். அவனுடைய வெளுத்த கண்களின் சூட்சுமமான பார்வை கடலோடியின் சாயலையும் சின்ன மீசை அணிலின் ரோமத்தையும் நினைவுபடுத்தியது. மனைவியைவிடப் பதினைந்து வயது அதிகமானவன் என்ற போதும் அவளை மகிழ்ச்சியாக வைத்துக் கொள்ள வேண்டும் என்ற எச்சரிக்கை உணர்வும் நல்ல காதலனின் இயல்புகளும் அவர்களுக் கிடையிலிருந்த வித்தியாசத்தைப் போக்கியது. உண்மையில் அவனுடைய நாற்பதுகளில் கழுத்தைச் சுற்றித் தோல் வாரைச் சுற்றிக்கொண்டு சர்க்கஸ் சைக்கிளில் வட்டமடித்துக் கொண் டிருந்ததைப் பார்த்தவர்கள் அவன் தன் மனைவியுடன் அடக்க முடியாத காதலுடன் இருக்கிறான் என்பதையோ, இருவரும் துணையான நாளிலிருந்தது போலவே இப்போதும் தங்கள் விருப்பம் எங்கே கொண்டு செல்கிறதோ அந்த இடங்களுக்கெல்லாம் காலத்தையும் மேலும் மேலும் புதிய சூழ்நிலைகளையும் தேடிச் செல்கிறார்கள் என்பதையோ நினைத்துப் பார்த்திருக்கமாட்டார்கள். காஸ்ட்டன் ஆவேசக் காதலன் மட்டுமல்ல; அளப்பரிய அறிவும் கற்பனையும் கொண்டவன். ஊதாப்பூக்கள் நிறைந்த வயல்வெளியில் தனது இனிய துணையுடன் காதலில் ஈடுபடுவதற்காகச் சாவை நெருங்கும் வகையில் விமானத்திலிருந்து அவசரமாகத் தரையிறங்கியவன் உயிரினங்களின் வரலாற்றில் ஒருவேளை, அவன் மட்டுமாகவே இருப்பான்.

திருமணத்துக்கு இரண்டு ஆண்டுகள் முன்பு அவர்கள் சந்தித்தார்கள். அமரந்தா உர்சுலா படித்துக்கொண்டிருந்த பள்ளிக்கூடத்தின் மேலாக ஒன்றன் மேல் ஒன்றாக இரு ஜோடி இறக்கைகள் பொருத்தப்பட்ட தன்னுடைய விளையாட்டு விமானத்தில் குட்டிக்கரணமடித்துக் காட்டினான். அப்போது படைகளின் திட்டமிட்ட தாக்குதலைப் போலச் செய்யத் துணிச்சலாக முயன்றான். கொடிமரத்தில் விமானம் மோதி விடாமலிருக்க முயன்றபோது அந்தப் பழைய விமானத்தின் கித்தானும் அலுமினியச் சட்டங்களும் வால்பகுதியில் ஏற்பட்ட

மின் தாக்குதலில் தீப்பற்றிக்கொண்டன. அன்று முதல் கட்டை வைத்த கால்களைப் பொருட்படுத்தாமல் வார இறுதி நாட்களில், கன்னியாஸ்த்ரீ களின் விடுதியிலிருந்து அமரந்தா உர்சுலாவை நகர விடுதிகளுக்கு அழைத்துச் சென்றான். பெர்னாண்டா எதிர்பார்த்தது போல அங்கே சட்டங்கள் கடுமையாக இல்லை. அவளையும் அழைத்துக்கொண்டு விமானத்தில் ஆயிரத்து ஐந்நூறு அடி உயரத்தில் பறந்துகொண்டிருந்த ஞாயிற்றுக்கிழமை அவர்கள் ஒருவரையொருவர் காதலிக்க ஆரம்பித் தார்கள். அந்த நெருக்கத்தில் பூமியின் உயிர்களாக உணர்ந்தார்கள். அந்த உணர்வு ஒவ்வொரு நிமிடமும் வளர்ந்தது. உலகத்திலேயே மிகப் பிரகாசமானதும் அமைதியானதுமான நகரம் மகோந்தா என்று அவனிடம் சொன்னாள். பிரம்மாண்டமான வீட்டைப் பற்றியும் வாசனை மிகுந்த கற்பூரவல்லிச் செடிகளைப் பற்றியும் சொன்னாள். முதுமை அடையும் வரைக்கும் அங்கேயே விசுவாசமான கணவனுடன் வாழ ஆசைப்பட்டாள். பிறக்கும் வலிமையான இரண்டு மகன்களுக்கும் அவுரேலியானோ, ஹோசே அர்க்காதியோ என்று பெயரிடாமல் ரோட்ரிகோ, கோன்சாலோ என்று பெயரிட வேண்டுமென்றும் மகளுக்கு ரெமேதியோஸ் என்று பெயரிடாமல் வெர்ஜீனியா என்று பெயரிட வேண்டுமென்றும் சொன்னாள். அடக்க முடியாத நினைவேக்கத்தால் உருவகிக்கப்பட்ட நகரத்தைத் தனக்குள் எழுப்பினாள். மகோந்தாவில் வசிக்க அழைத்துச் செல்லாவிட்டால் அவள் திருமணத்துக்குச் சம்மதிக்க மாட்டாள் என்பதைக் காஸ்ட்டன் புரிந்துகொண்டான். அதற்கு இசைந்தான். பின்னர் கழுத்தில் கயிற்றைக் கட்டவும் சம்மதித்தான். ஏனெனில் அதைத் தற்காலிகக் கற்பனை என்றும் காலம் அதை வென்றுவிடுமென்றும் நினைத்தான். ஆனால் மகோந்தாவில் இரண்டு ஆண்டுகளைக் கழித்தப் பின்னும் அமரந்தா உர்சுலா முதல்நாளைப் போலவே மகிழ்ச்சியாக இருந்தாள். அபாய அறிகுறிகளைப் பார்க்க ஆரம்பித்தான். அதற்கிடையில் அந்தப் பிரதேசத்திலிருக்கும் வெட்டிப் பார்க்க முடிந்த எல்லாப் பூச்சிகளையும் வெட்டி ஆராய்ந்தான். சொந்த நாட்டவனைப்போல ஸ்பானிய மொழியில் பேசினான். தபாலில் வந்த பத்திரிகைகளில் குறுக்கெழுத்துப் புதிர்கள் எல்லாவற்றை யும் விடுவித்தான். தட்பநிலை உகந்ததாக இல்லை என்பதைத் திரும்பிச் செல்வதற்கான முகாந்திரமாகச் சொல்லும் வாய்ப்பும் அவனுக்கில்லை. ஏனெனில் பகலுறக்க வேளையின் அயர்ச்சியை எதிர்த்து நிற்கும் காலனிய ஈரலையும் காடிப்புழுக்களைச் சாகடிக்கும் தண்ணீரையும் இயற்கை அவனுக்குக் கொடுத்திருந்தது. உள்ளூர்ச் சமையல் அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது. ஒரு சமயம் எண்பத்திரண்டு உடும்பு முட்டை களை ஒரே இருப்பில் தின்று முடித்தான். இன்னொரு பக்கம் அமரந்தா உர்சுலா ரயில் மூலம் பனிக்கட்டியில் வைத்த மீனையும் சிப்பி மீன் பெட்டிகளையும் குவளையில் அடைத்த மாமிசத்தையும் பதப்படுத்திய பழங்களையும் தருவித்தாள். அந்த உணவை மட்டுமே அருந்தினாள். இன்னும் ஐரோப்பிய பாணி உடைகளையே அணிந்தாள். எங்கும் போவதற்கில்லை; யாரையும் சந்திப்பதற்கில்லை என்ற உண்மையை மீறி தபாலில் புதிய வடிவமைப்புகளை வரவழைத்தாள். இதற்குள் அவள் குட்டைப்பாவாடை அணிவதையும் சாய்வுத் தொப்பி வைத்துக்

கொள்வதையும் ஏழு வட நகை அணிவதையும் பாராட்டும் மனநிலையில் கணவன் இல்லை. எப்போதும் தன்னை வேலையில் ஈடுபடுத்திக் கொண்டிருப்பவளாகக் காட்டிக்கொள்வதில் அவளுடைய ரகசியம் இருப்பதாகத் தோன்றியது. தானாக உருவாக்கிக்கொண்ட குடும்பப் பிரச்சனைகளைத் தானாகவே தீர்த்துக்கொண்டிருந்தாள். ஒன்றும் செய்வதற்கில்லை என்றாலும் செய்த வேலைகளையே அடுத்த நாளுக்குத் திட்டமிட்டுக்கொண்டாள். ஒன்றை அது இல்லாமல் ஆக்குவதற்காகவே செய்வதை பெர்னாண்டாவிடமிருந்து அவள் வாரிசாகப் பெற்றதாக ஒருவர் நினைக்க முடியும். அவளுடைய கொண்டாட்டத் திறமை இன்னும் உயிர்ப்புடனேயே இருந்தது. புதிய இசைத்தட்டுகள் கிடைத்ததும் காஸ்ட்டனைக் கூடத்துக்கு அழைத்து உட்காரவைத்துத் தனது பள்ளித் தோழிகள் வரைந்து அனுப்பும் நடன அசைவுகளை ஆடிக் காட்டுவாள். அது பொதுவாக இருவரும் வியன்னா ஆடும் நாற்காலியிலோ வெறும் தரையிலோ புணர்ச்சிகொள்வதில் முடியும். முழு மகிழ்ச்சியாக இருக்க அவளுக்கு ஒரே ஒரு விஷயம் தேவையாக இருந்தது. குழந்தைப்பேறு. ஆனால் திருமணமாகி ஐந்து ஆண்டுகள் வரை பிள்ளைப் பெற்றுக்கொள்வதில்லை என்று கணவனுடன் செய்துகொண்ட உடன்படிக்கையை அவள் மதித்தாள்.

தன்னுடைய வேலையில்லாத நேரத்தை நிறைவு செய்துகொள்ள காஸ்ட்டன் காலை நேரங்களை அவுரேலியானோவுடன் மெல்குயாதெஸின் அறையில் கழிப்பதை வழக்கமாக்கிக்கொண்டான். தன்னுடைய நாட்டின் அறியப்படாத இடங்களை அவுரேலியானோவிடம் நினைவுகூர்வதில் மகிழ்ச்சி அடைந்தான். அந்த இடங்களிலெல்லாம் தான் அதிக காலம் கழித்திருப்பது போல அவுரேலியானோ தெரிந்துகொண்டான். கலைக் களஞ்சியத்தில் இல்லாத ஒன்றைப் பற்றிய அறிவைப் பெறுபவன் என்ன செய்தான் என்று காஸ்ட்டன் அவனிடம் கேட்டபோது அவனுக்கும் ஹோசே அர்க்காதியோவுக்குக் கிடைத்த அதே பதில் கிடைத்தது. "எல்லாம் அறியப்பட்டவைதான்". சம்ஸ்கிருதத்துடன் அவன் ஆங்கிலத்தையும் பிரெஞ்சையும் கொஞ்சம் கொஞ்சம் லத்தீன், கிரீக் மொழிகளையும் கற்றிருந்தான். தினமும் பிற்பகல் வேளையில் அவன் வெளியே போனான். எனவே அவனுடைய செலவுக்காக அமரந்தா உர்சுலா ஒரு வாராந்திரத் தொகையை ஒதுக்கிவைத்தாள். அவனுடைய அறை காடலோனியனின் புத்தகக் கடையின் கிளை போலத் தோன்றியது. இரவு வெகு நேரம் வரை வேட்கையுடன் வாசித்தான். அவன் வாசிக்கும் முறையைக் குறிப்பிட்டு காஸ்ட்டன் சொன்னது உண்மை. அவன் புத்தகங்களை வாசிப்பதற்காக வாங்கவில்லை. தன்னுடைய அறிவின் உண்மையைச் சரிபார்த்துக்கொள்ளவே வாங்கினான். அவற்றில் எதுவுமே பட்டயங்களைவிட அதிகமாக அவனை ஈர்க்கவில்லை. காலை நேரத்தில் பெரும்பகுதியை அதற்காகவே ஒதுக்கிவைத்தான். காஸ்ட்டனும் மனைவியும் அவனைத் தம் குடும்பத்தில் ஒருவனாகச் சேர்த்துக்கொண்டிருக்கலாம். ஆனால் அவுரேலியானோ ஒரு புதிரான சந்நியாசி. காலம் அந்தப் புதிரை இன்னும் அடர்ந்து தாக்கிக் கொண்டிருந்தது. அதுபோன்ற புரிந்துகொள்ள முடியாத நிலையில் அவனுடன் நெருக்கம் ஏற்படுத்திக்கொள்ளச் செய்த முயற்சிகள்

தோல்வியடைந்தன. தனது நேரத்தைச் செலவழிக்க வேறு பொழுது போக்கைத் தேடினான். அந்த சமயத்தில்தான் ஒரு விமானத் தபால் சேவை நிறுவுவது என்ற ஆலோசனை வந்தது.

அது புதிய திட்டமல்ல. உண்மையில் அமரந்தா உர்சுலாவைச் சந்தித்தபோது அந்தத் திட்டத்தைக் கணிசமாக முன்நகர்த்தியிருந்தான். மகோந்தாவில் அல்ல; அவனுடைய குடும்பத்தினர் பனை எண்ணெய் வியாபாரத்தில் முதலீடு செய்திருந்த பெல்ஜியன் காங்கோவில். திருமணமும் மனைவியை மகிழ்விக்க மகோந்தாவில் சில மாதங்களைக் கழிப்பது என்ற தீர்மானமும் அதை ஒத்திவைக்கச் செய்தன. ஆனால், பொது முன்னேற்றத்துக்காக ஒரு ஆணையத்தை அமரந்தா உர்சுலா ஒருங்கிணைப்பதில் தீர்மானமாக இருந்தாள். அதைப் பார்த்துவிட்டுத் திரும்பிச் செல்லும் சாத்தியத்தைப் பற்றிக் கோடிட்டுக் காட்டியபோது அவனைப் பார்த்துச் சிரிக்கவும் செய்தாள். விஷயங்கள் சரியாக நீண்டகாலம் பிடிக்கும் என்று புரிந்துகொண்டான். திட்டம் ஆப்பிரிக்கப் பகுதியில் அமையவிருந்தது போலவே கரீபியப் பிரதேசத்திலும் அமையலாம் என்று யோசித்து பிரஸ்ஸெல்ஸிலிருக்கும் வெளிநாட்டுப் பங்குதாரர்களுடன் மறு ஒப்பந்தம் செய்தான். அவனுடைய நடவடிக்கைகள் முன்னேறிக்கொண்டிருக்கையில் பழைய மாந்திரீகப் பிரதேசத்தில் ஒரு விமான தளத்தைத் தயார் செய்தான். அந்தச் சமயம் அந்த இடம் நொறுங்கியக் கற்களின் சமவெளி போலத் தென்பட்டது. காற்றின் திசையையும் கடற்கரைப் பிரதேசத்தின் புவியியலையும் வான்வழிப் பயணத்துக்கான சிறந்த மார்க்கங்களையும் ஆராய்ந்தான். அவனுடைய கடும் உழைப்பைப் பற்றித் தெரியாமல் இதுவும் திரு. ஹெர்பர்ட்டின் திட்டம்போல வழிகளை அமைப்பதல்ல வாழை மரங்களை நடுவதுதான் என்ற அபாயகரமான சந்தேகம் நகரத்தை நிறைத்துக்கொண்டிருந்தது. திட்டத்தினால் உற்சாகமடைந்து, எப்படியானாலும் இவையெல்லாம் மகோந்தாவில் தன்னுடைய சொந்த நிறுவனத்தை நியாயப்படுத்தும் என்பதால் அவன் பிரதேசத் தலைநகருக்குப் பலமுறை சென்று அதிகாரிகளைச் சந்தித்தான். உரிமங்களைப் பெற்றான். பிரத்தியேக உரிமைகளுக்காக ஒப்பந்தங் களைத் தயாரித்தான். இதற்கிடையில் பிரஸ்ஸெல்ஸிலிருக்கும் பங்குதாரர் களுடனும் கடிதத் தொடர்பிலிருந்தான். பெர்னாண்டா கண்ணுக்குத் தெரியாத டாக்டர்களுடன் நடத்திய பரிமாற்றத்தை அது நினைவூட் டியது. கடைசியாக, தேர்ந்த மெக்கானிக் ஒருவரின் மேற்பார்வையில் ஒரு விமானத்தைக் கப்பலில் ஏற்றி அனுப்பச் சம்மதிக்கச் செய்தான். அருகிலுள்ள துறைமுகத்தில் விமானத்தை ஒருங்கிணைத்து மகோந்தா வுக்குப் பறந்து வர ஏற்பாடு செய்தான். இந்தச் சிந்தனைகளும் காலநிலைக் கணக்குகளும் முழுமையடைந்த முதலாவது ஆண்டுக்குப் பிறகு தனது கடிதத் தொடர்பாளர்கள் பலமுறை அளித்த வாக்குறுதி களில் நம்பிக்கை வைத்தப் பின்பு தெருக்களில் வானத்தைப் பார்த்துக் கொண்டு நடப்பதை வழக்கமாக்கினான். இளங்காற்றின் ஓசையில் ஏற்படும் மாற்றங்களைக் கவனித்து விமானம் வந்துவிடும் என்று நம்பினான்.

அவள் கவனித்திருக்கவில்லை என்றபோதும் அமரந்தா உர்சுலா வின் மறுவருகை அவுரேலியானோவின் வாழ்க்கையை அடியோடு மாற்றியிருந்தது. ஹோராசே அர்க்காதியோவின் மறைவுக்குப் பிறகு காடலோனியன் ஞானியின் புத்தகக் கடைக்கு நிரந்தர வாடிக்கை யாளனாக மாறியிருந்தான். அத்துடன் அவன் அப்போது அனுபவித்த சுதந்திரமும் அவன் வசமிருந்த நேரமும் நகரத்தைப் பற்றிய ஒருவிதமான ஆர்வத்தைக் கிளறிவிட்டான். அதை எந்த ஆச்சரியமும் இல்லாமல் தெரிந்துகொண்டான். புழுதி படர்ந்ததும் தனிமையானதுமான தெருக்கள் வழியாகச் சிதிலமான வீடுகளின் உட்புறங்களை, ஜன்னல் களின் உலோகத் திரைகள் துருவேறி நொறுங்கியிருப்பதை, சாகும் பறவைகளை, ஞாபகங்களின் சுமையால் தலை குனிந்து நிற்கும் நகரவாசி களை விஞ்ஞானப்பூர்வமான ஆர்வத்துடன் ஆராய்ந்துகொண்டு நடந்தான். வாழைப்பழக் குழும நகரத்தின் அழிக்கப்பட்ட பெருமையைத் தனது கற்பனையில் மீண்டும் நிர்மாணிக்க முயன்றான். வறண்ட நீச்சல் குளத்தின் விளிம்புவரை ஆண்களின் காலணிகளும் பெண்களின் காலணிகளும் நிரம்பியிருப்பதைப் பார்த்தான். ரை புற்கள் நாசப் படுத்திய வீட்டுக்குள்ளே இரும்புச் சங்கிலியில் கட்டப்பட்ட ஜெர்மன் ஷெப்பர்ட் நாயின் எலும்புக்கூட்டைப் பார்த்தான். அவன் எடுக்கும் வரை ஒரு தொலைபேசி அடித்துக்கொண்டிருந்தது. அடித்துக்கொண் டிருந்தது. அடித்துக்கொண்டிருந்தது. எடுத்ததும் கொடிய வேதனை யுடன் தொலைவிலிருந்து ஒரு பெண் ஆங்கிலத்தில் கேட்டாள். ஆமாம், வேலைநிறுத்தம் முடிந்துவிட்டது என்று பதிலளித்தான். இறந்துபோன மூன்றாயிரம் மக்கள் கடலில் வீசப்பட்டார்கள். வாழைப் பழக் குழுமம் வெளியேறிவிட்டது. பல ஆண்டுகளுக்குப் பிறகு மகோந்தா அமைதியாக இருக்கிறது. அந்த அலைச்சல்கள் அவனை நீண்டு கிடக்கும் சிவப்பு விளக்குப் பிரதேசத்துக்குக் கொண்டு சென்றன. பழைய காலங்களில் கொண்டாட்டங்களை ஜொலிக்கச் செய்ய பணக்கட்டுகளை எரித்த அந்த இடம் அப்போது குழப்பங்களின் தெருவாக இருந்தது. மற்றத் தெருக்களைவிட வருத்தத்துக்குரியதாக ஆகியிருந்தது. அங்கே ஒருசில சிவப்பு விளக்குகள் மட்டும் எரிந்து கொண்டிருந்தன. ஆள் நடமாட்டமில்லாத நடன அரங்குகளை மலர் வளையங்களின் மிச்சங்கள் அலங்கரித்தன, யாருடைய விதவைகள் என்று சொல்லமுடியாத அழகான தடித்த விதவைகள், பிரெஞ்சுக்கார மூதாதைப் பெண்களும் பாபிலோனிய இனத் தலைவிகளும் தங்க ளுடைய போனோகிராப்களுக்கு அருகில் காத்துக்கொண்டிருந்தார்கள். மேற்கிந்திய நீக்ரோக்களில் மிகவும் வயதானவனைத் தவிர தனது குடும்பத்தை, கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவைக்கூட நினைவு கூர்பவர்களாக யாரும் அங்கே இல்லை. அந்தக் கிழவனின் பஞ்சு போன்ற முடி அவனுக்குப் புகைப்பட நெகட்டிவின் தோற்றத்தைக் கொடுத்தது. தன் வீட்டு வாசலில் உட்கார்ந்து சோகமான அஸ்தமன கீதங்களைப் பாடிக்கொண்டிருந்தான். அவுரேலியானோ, சில வாரங் களுக்கு முன்பு கற்றுக்கொண்டிருந்த உடைந்த பாப்பியாமெந்தோ மொழியில் அவனுடன் பேசினான். தன் பேத்தி வயிற்றுப்பெண் தயார்செய்த கோழித்தலை சூப்பை அவுரேலியானோவுடன் பகிர்ந்து கொண்டான்.

அவள் கறுப்பாகவும் திடமான தோள்களுடன் பருத்தும் இருந்தாள். பெட்டைக் குதிரை போன்ற இடுப்பு. தர்ப்பூசணிக் காம்பு போன்ற முலைக்காம்புகள். வட்டமாகவும் உருண்டுமிருந்த தலையில் கம்பிச் சுருள் போன்ற முடி மத்திய கால வீரர்களின் தலைக்கவசம் போல இருந்தது. அவள் பெயர் நிக்ரோமந்தா. அந்த நாட்களில் அவுரேலியானோ வீட்டிலிருந்த வெள்ளிப் பாத்திரங்களையும் மெழுகுவர்த்தித் தாங்கி களையும் அலங்காரப் பொருட்களையும் விற்றுக் கிடைத்த பணத்தில்தான் வாழ்ந்திருந்தான். கையில் சுத்தமாகக் காசில்லாதபோது பெரும்பாலும் அப்படித்தான், சந்தையின் பின்பக்கம் கோழித் தலைகளைத் தூக்கி எறிய வருபவர்களிடம் அவற்றைத் தன்னிடம் கொடுக்கச் சொல்வான். சூப் தயாரிப்பதற்காக அவற்றை நிக்ரோமந்தாவிடம் கொடுப்பான். அவள் அவற்றைப் பக்குவப்படுத்தி சூப் தயாரிப்பாள். முதுமுது பாட்டன் இறந்த பிறகு அவுரேலியானோ அந்த வீட்டுப் பக்கமாகப் போவதை நிறுத்திவிட்டான். ஆனால் இரவு நேர ஆந்தைகளை வசீகரிக்க அவள் எழுப்பும் சீழ்க்கை ஒலியைக் கேட்கும்போதெல்லாம் சதுக்கத்தில் இருண்ட வாதுமை மரங்களின் இடையில் நின்றிருக்கும் அவளைத் தேடிப் போவான். பலமுறை அவளோடு பாப்பியமெந்தோ மொழியில் கோழித்தலை சூப் தயாரிப்பதைப் பற்றியும் துயர்களின் சிறு கருணைகளைப் பற்றியும் பேசிக்கொண்டிருப்பான்.

சில சமயங்களில் அவன் வேட்கையை உணர்ந்தாலும் ஒரே நினைவேக்கத்தைப் பகிர்ந்துகொண்டவர்களின் இயற்கையான பிணைப்பாகவே அவள் தென்பட்டபோதும் நிக்ரோமந்தாவுடன் உடலுறவு வைத்துக்கொள்ளவில்லை. ஆக, அமரந்தா உர்சுலா மகோந்தாவுக்குத் திரும்பி வந்தபோது அவன் கன்னிப் பையனாகவே இருந்தான். சகோதரப் பாசத்துடன் அவள் அணைத்துக்கொண்டது அவனுடைய மூச்சை நிறுத்தியது. ஒவ்வொரு முறை அவளைப் பார்க்கும்போதும், அதிலும் மோசம், புதிய உடைகளை அணிந்து அவனுக்குக் காட்டும் போதும் எலும்புகளுக்குள் ஏதோ நுரைப்பதை உணர்ந்தான். களஞ்சியத்தில் சீட்டுகளைக் காண்பிக்கும் பாசாங்கில் பிலர் தெர்னேரா அணைத்துக் கொண்டதும் முதுமுது முப்பாட்டனுக்கு ஏற்பட்ட அதே உணர்ச்சி. அந்தச் சித்திரவதையை அடக்கிக்கொள்வதற்காகப் பட்டயங்களில் மேலும் ஆழ்ந்தான். தனது இரவு நேரங்களை வாதைகளின் பெருக் கெடுப்பால் விஷமூட்டுபவளான அந்த அத்தையின் வெகுளித்தனமான புகழ்ச்சிகளைத் தவிர்த்தான். ஆனால் அவளை எவ்வளவு தவிர்த்தானோ அதே அளவு பதற்றத்துக்கும் ஆளானான். அந்தத் தவிப்புடனேயே அவளுடைய உணர்ச்சியற்ற சிரிப்புக்காகவும் மகிழ்ச்சியான வேளைகளில் அவள் எழுப்பும் பூனைக் குரல் ஊளைக்காகவும் வீட்டின் அதிகப் புகழக்கமில்லாத இடத்தில் உறவு கொள்ளும்போது அவள் பாடும் நன்றியறிவிப்புப் பாடல்களுக்காகவும் காத்துக்கொண்டுமிருந்தான்.

ஒரு இரவு அவனுடைய படுக்கையிலிருந்து முப்பது அடி தூரத்தில், வெள்ளிப் பணி மேஜை மேல் இடைவெளியில்லாமல் ஒட்டிக்கிடந்த தம்பதிகள் குப்பிகளைத் தள்ளி உடைத்து அமிலத் தேக்கத்துக்குள் புணர்ந்துகொண்டிருந்தார்கள். அவுரேலியானோவால் ஒரு நொடிப்

பொழுதுகூடத் தூங்க முடியவில்லை. மறுநாள் ஆத்திரத்தில் விசும்பிக் கொண்டு காய்ச்சலில் கிடந்தான். வாதுமை மர நிழல்களுக்கு இடையில் நிக்ரோமந்தா வரக் காத்திருந்த முதலாவது இரவு முடிவற்றதாகத் தோன்றியது. அமரந்தா உர்சுலாவிடமிருந்து வாங்கிய ஒரு பெவேலா ஐம்பது செண்ட் காசு நிச்சயமின்மையின் ஊசிகளாக அவனுடைய உள்ளங்கையைத் துளைத்துக்கொண்டிருந்தது. அந்தக் காசைத் தேவைக்காக வாங்கவில்லை. அவளையும் தனது சாகசத்தில் பங்குபெறச் செய்ய, அவளைத் தரம் தாழ்த்த அவளை விபச்சாரியாக்கவே அந்தக் காசு தேவைப்பட்டது. மட்டமான மெழுகுவர்த்திகள் ஏற்றிய தனது அறைக்கு நிக்ரோமந்தா அவனை அழைத்துச் சென்றாள். மோசமான காதலர்களின் கறைகள் படிந்திருந்த மெத்தைப் போட்ட தனது மடக்குக் கட்டிலுக்கு, மூர்க்கமான நாயைப் போன்ற இறுகிப்போன, ஆன்மா இல்லாத தனது உடலுக்கு அழைத்துச் சென்றாள். பயந்த குழந்தையை விரட்டுவதுபோல் அவனை ஒதுக்கித் தள்ள ஆயத்தமாகியிருந்தது அந்த உடல்.

நிலநடுக்கத்துக்குப் பழகிக்கொள்ளும் இயக்கத்தை ஓர் ஆணின் பெரும்பலம் கோருவதை அந்த உடல் தனக்குள் சட்டென்று உணர்ந்தது.

அவர்கள் காதலர்களானார்கள். அவுரேலியானோ தனது காலைப் பொழுதுகளைப் பட்டயங்களை வாசிப்பதில் செலவழித்தான். பகலுறக்க வேளையில் நிக்ரோமந்தாவின் படுக்கையறைக்குப் போவான். அங்கே அவள், முதலில் மண்புழுக்களைப் போல, பின்னர் நத்தைகளைப் போல இறுதியில் நண்டுகளைப் போல எப்படி அதைச் செய்வது என்று கற்றுக்கொடுக்கக் காத்திருப்பாள். அவன் அங்கே போய்ச் சேரும்வரை ஊர்சுற்றிக் காதலர்களுக்காகக் காத்திருப்பாள். சில வாரங்கள் கடப்பதற்குள் அவுரேலியானோ, அவள் தன்னுடைய இடுப்பில் சிறிய 'பெல்ட்' ஒன்றை அணிந்திருப்பதைக் கண்டுபிடித்தான். செல்லோ வயலின் தந்திகளால் செய்யப்பட்டது போன்ற அது எஃகுக் கம்பிபோலக் கெட்டியானதாகவும் நுனிகளில்லாமலும் அவளுடனேயே பிறந்து வளர்ந்தது போலவும் இருந்தது. மனப் பிறழ்வை ஏற்படுத்தும் வெம்மையிலும், துருப்பிடித்த துத்தநாகக் கூரை வழியாக ஒளிரும் நட்சத்திரங்களுக்குக் கீழும் பெரும்பாலும், ஏன் எப்போதுமே முயங்கிக் கிடந்தார்கள். முயக்கங்களுக்கு இடையில் அம்மணமாகவே படுக்கையில் அமர்ந்து உணவருந்தினார்கள். முதல் முறையாக நிக்ரோமந்தாவுக்கு அவளே சொன்னது போல, தலை முதல் கால் வரை திடமான எலும்பு நொறுக்கி வாய்த்திருந்தான். அமரந்தா உர்சுலா மீதான தனது அடக்கப்பட்ட ஆசையை நிக்ரோமந்தாவிடம் அவன் வெளியிட்டபோது அவள் உயிரே போய்விடுவது போலச் சிரித்தாள். இந்த அவளுக்கும் கற்பனைப் பிரமைகள் தோன்றத் தொடங்கின. இந்த மாற்றுவழி இல்லை என்றால் தான் அதிலிருந்து தேறியிருக்க முடியாது என்று நினைத்தாள். ஆனால் அந்த மாற்று வழியே ஒட்டுமொத்தமாகப் புரட்டி அவளுக்குள் காதலின் எல்லைகளை விரிவாக்கியது. அதன் பிறகும் நிக்ரோமந்தா எப்போதும்போல அதே இதமான இயல்புடன் அவனை வரவேற்றாள். ஆனால் தனது சேவைக்கான கட்டணத்தைக்

கறாராக வசூலித்தாள். அவுரேலியானோவிடம் காசில்லாதபோது அவனுடைய கணக்கில் பற்று வைத்துக்கொண்டாள். அதை எண்களாக அல்லாமல் தனது கட்டை விரலால் கதவில் கீறிக் குறியிட்டு வைத்தாள். சூரியன் மறையும் நேரத்தில் சதுப்பின் இருட்டுப் பகுதிகளில் திரிந்து கொண்டிருக்கும்போது, அவுரேலியானோ, வழக்கமாக அந்த நேரத்தில் உணவருந்திக்கொண்டிருக்கும் அமரந்தா உர்சுலாவுக்கும் காஸ்ட்டனுக்கும் ரகசியமாக முகமன் கூறியபடி ஒரு அந்நியனைப் போல முற்றத்தின் வழியே போய்க்கொண்டிருப்பான். மீண்டும் அறைக்குள் சென்று கதவைச் சாத்திக்கொண்ட பிறகும் அவர்களுடைய சிரிப்பாலும் கிசுகிசுப்புகளாலும் முன்விளையாட்டுகளாலும் பின்னர் அந்த வீட்டின் இரவுகளைப் பெரும் தொல்லைக்குள்ளாக்கும் மகிழ்ச்சிப் பேரொலியாலும் பதற்றமடைந்து படிக்கவோ எழுதவோ சிந்திக்கவோ முடியாமல் உட்கார்ந்திருப்பான். விமானம் வருவதற்காக காஸ்ட்டன் காத்திருக்க ஆரம்பித்த இரண்டு ஆண்டுகளில் அவுரேலியானோவின் வாழ்க்கை அப்படித்தான் இருந்தது. காடலோனிய ஞானியின் புத்தகக் கடைக்குப் போய்க்கொண்டிருந்த அந்தப் பிற்பகலிலும் அப்படித்தான் இருந்தது. அங்கே நான்கு பையன்கள் உரத்தக் குரலில் மத்திய காலங்களில் கரப்பான் பூச்சிகளைக் கொல்லப் பின்பற்றிய வழிமுறைகள் பற்றி அனல் பறக்க விவாதித்துக்கொண்டிருந்தார்கள். இறையியலாளரும் வரலாற்றாசிரியருமான புனித பீட் மட்டுமே வாசித்த புத்தகங்கள் மீதான அவுரேலியானோவின் புத்தகப் பிரியத்தைப் பற்றித் தெரிந்து வைத்திருந்த அந்த முதிய புத்தக விற்பனையாளன் ஒரு தகப்பனின் வன்மத்துடன் அவனையும் விவாதத்தில் கலந்துகொள்ள வற்புறுத்தினான். மூச்சுவிடும் நேரம்கூட எடுத்துக்கொள்ளாமல் அவன் விளக்கினான். பூமியிலேயே மிகப் பழைமையான சிறகுள்ள பூச்சியினம் கரப்பான் மட்டுமே. அவை ஏற்கனவே புதிய ஏற்பாட்டில் செருப்புகளுக்குப் பலியானவை. அழித்தொழிப்பின் எந்த முறையிலிருந்தும் போராக்ஸ் உப்பு கலந்த தக்காளித் துண்டுகள் முதல் மாவும் சர்க்கரையும் சேர்ந்து கலவைவரை எந்தக் காலத்தையும் நிச்சயமாக எதிர்த்து நிற்பவை: அவற்றின் ஆயிரத்து அறுநூற்று மூன்று வகைகளும், உலகம் தோன்றிய காலம் முதல் மனிதர்கள் உட்பட எந்த உயிரினத்துக்கும் எதிராக இனப்பெருக்கத்தைப் போலவே மனித குலத்துக்கு வழங்கப்பட்ட உணர்வால் கட்டவிழ்த்துவிட்ட மிகப் புராதனமான, கொடிய, இரக்கமற்ற அலைக்கழிப்புக்கு எதிரானவை மனித மூர்க்கத் தன்மையிலிருந்து தப்புவதில் கரப்பான்கள் வெற்றிபெறக் காரணம் அவை ஒளிபுகா இடங்களில் அடைக்கலம் புகுந்ததுதான். இருட்டைப் பற்றி மனிதனுக்கு பிறப்பிலேயே இருக்கும் பயம் காரணமாகவே அவற்றை எவரும் வெல்லமுடிவதில்லை. ஆனால் நண்பகல் வெளிச்சம் அவற்றைப் பாதிப்புக்குள்ளாக்கும். எனவே மத்திய காலத்திலும் இப்போதும் கரப்பான்களைக் கொல்ல ஒரே வெற்றிகரமான வழி கண்ணைக் கூசவைக்கும் சூரிய வெளிச்சம் மட்டுமே.

அந்தக் கலைக்களஞ்சியத் தற்செயல் நிகழ்வு ஒரு மகத்தான நட்பின் தொடக்கமாக இருந்தது. விவாத விரும்பிகளான அந்த நான்கு

பேருடனும் அந்த மாலையிலேயே அவுரேலியானோ நெருக்கமானான். அல்வாரோ, ஜெர்மான், அல்போன்ஸோ, காப்ரியேல் ஆகிய அந்த நால்வர்தான் வாழ்க்கையில் அவனுக்கு முதலும் கடைசியுமாக இருந்த நண்பர்கள். அவனைப் போல எழுதப்பட்ட உண்மைகளில் அகப்பட்ட ஒருவனுக்குப் புத்தகக் கடையில் தொடங்கி விடியற்காலை விபச்சார விடுதியில் முடிந்த தீவிர அட்டைகள் ஒரு வெளிப்பாடாக இருந்தன. ஒருநாள் இரவுக் கோலாகலத்தின்போது அல்வாரோ சொன்னதுபோல் மனிதர்களை மகிழ்விக்கக் கண்டுபிடிக்கப்பட்டவற்றில் சிறந்த விளையாட்டுச் சாதனம் இலக்கியம்தான் என்று சிந்திக்க அதுவரை அவனுக்குத் தோன்றவில்லை. அதுபோன்ற சமரச இயல்புகள் கட்டலோனியன் ஞானியை முன்மாதிரியாக வைத்து உருவானவை என்று அவுரேலியானோ புரிந்துகொள்ள மேலும் சிறிது காலம் செல்ல வேண்டியிருந்தது. காடலோனியனைப் பொறுத்தவரை கொண்டைக் கடலையைச் சமைக்கப் புதிய முறையைக் கண்டுபிடிக்க உதவாத ஞானம் எதற்கும் பயனில்லாதது.

கரப்பான் பூச்சிகளைப் பற்றி அவுரேலியானோ சொற்பொழி வாற்றிய பிற்பகலில் தொடங்கிய விவாதம் மகோந்தாவின் புறப்பகுதியி லிருந்த விபச்சார விடுதிப் பெண்களைப் பசியுடன் படுக்கைக்குப் போகவைப்பதில் முடிவடைந்தது. அதன் உரிமையாளரான புன்னகைக் கும் 'மம்மா சான்டா' கதவைத் திறந்து மூடும் மனக்கோளாறில் அவதிப்பட்டாள், அவளுடைய நிரந்தரப் புன்னகை வாடிக்கையாளர் களை நம்பிவிடும் குணத்திலிருந்து வந்ததாகத் தோன்றியது. கற்பனையைத் தவிர வேறு எங்கும் இருக்க முடியாத அந்த விடுதிக்கு அவள் எல்லாரை யும் அனுமதித்தாள், ஏனெனில் அங்கிருந்த அலங்காரப் பொருட்கள் உண்மையானவை அல்ல: அங்கிருந்த நாற்காலிகள் யாராவது அதன் மேல் உட்கார்ந்தால் தூரப் போய் விழும். உட்பாகங்கள் இல்லாமல் வெறும் கூடாக இருந்த போனோகிராப் இசைக் கருவியில் ஒரு கோழி குடியிருந்தது. தோட்டத்தில் காகிதப் பூக்கள் பூத்திருந்தன. காலண்டர்கள் வாழைப்பழக் குழுமத்தின் வருகைக்குப் பல வருடங்கள் முந்திய தேதிகளைக் காட்டின. ஒருபோதும் பிரசுரிக்கப்படாத பத்திரிகைகளிலிருந்து வெட்டியெடுக்கப்பட்ட படங்கள் சட்டமிட்டு மாட்டப்பட்டிருந்தன. வாடிக்கையாளர்கள் வந்ததும் உரிமையாளர் அழைத்து நிற்கச் செய்யும் சுற்றுவட்டத்திலிருந்து வந்த பயந்த சுபாவ முள்ள இளம் விபச்சாரிகளும் வெறும் கற்பனைக் கண்டுபிடிப்புகளாக இருந்தனர். அவர்கள் எந்த முகமனும் சொல்லாமல் பூப்போட்ட கந்தலான உடைகளில் வந்து நின்றார்கள். இப்போதைய வயதில் ஐந்து ஆண்டுகள் குறைவாக இருந்தபோது அணிந்திருந்த உடைகள் அவை. அந்த உடைகளை எத்தனை குழந்தைத்தனத்துடன் அணிந்தார் களோ அதே குழந்தைத்தனத்துடன் கழற்றினார்கள். காமத் தாக்குதலுக் குள்ளாகும்போது கடவுளே, கூரை எப்படி நொறுங்கி விழுகிறது என்று அதிர்ச்சியடைவார்கள். கிடைக்க வேண்டிய ஒரு பெஸோ ஐம்பது சென்ட்கள் கிடைத்ததும், உரிமையாளர் விற்பனை செய்யும் 'சீஸ் ரோல்' வாங்கித் தின்பார்கள். அப்போது உரிமையாளரின் புன்னகை முன்பைவிட அதிகமாக இருக்கும். ஏனெனில் அந்த உணவும் உண்மை

யானதல்ல என்பது அவளுக்கு மட்டுமே தெரியும். அவுரேலியானோவின் உலகம் இரவில் மெல்குயாதெஸின் பட்டயங்களுடன் தொடங்கி நிக்ரோமந்தாவின் படுக்கையில் முடிந்தது. அந்தக் கற்பனை விபச்சார விடுதியில் தனது கோழைத்தனத்துக்கு மடத்தனமான பரிகாரத்தைத் தேடினான். ஆரம்பத்தில் அவனால் எந்த அறைக்குள்ளும் போக முடியவில்லை. அறைகளுக்குள் கலவி உச்ச நொடிகளில் இருக்கும் போது உரிமையாளர் உள்ளே நுழைந்து வாடிக்கையாளர்களின் அந்தரங்க அழகுகளைப் பற்றி விமர்சனம் செய்வாள். அந்த உலகின் அவலங்களுக்குப் பழக்கப்பட்ட பின்பு, மற்ற நாட்களைவிடச் சம நிலையற்ற ஓர் இரவில் அந்தச் சிறிய வரவேற்பறையில் உடைகளைக் கழற்றினான். தன்னுடைய கற்பனை செய்துபார்க்க முடியாத ஆண்மை மேல் ஒரு பீர் குப்பியை நிறுத்தி வைத்துக்கொண்டு அந்த வீட்டுக்குள் ஓடினான். உரிமையாளர் தனது நிரந்தரப் புன்னகையுடன் யாரையும் மறுக்காமல், யாரையும் நம்பாமல் கொண்டாடிக் கொண்டிருந்த அந்தக் கேளிக்கைகளை, அப்படி ஒரு வீடே உண்மையில் இல்லை என்று காட்டுவதற்காக எரிக்க முயன்றபோது, அலமான்ஸோ கிளியின் கழுத்தைத் திருகி பானையில் கொதிக்க ஆரம்பித்திருந்த கோழிச் சாற்றில் எறிந்தபோது அவன்தான் அதைப் படிவமாக்கினான்.

பொதுவான அன்பும் பொதுவான ஒற்றுமையுமே நான்கு நண்பர் களையும் தன்னுடன் பிணைத்திருக்கிறது என்று அவுரேலியானோ எண்ணினான். நான்குபேரும் ஒரே நபர்தான் என்ற அளவுக்குக்கூட உணர்ந்தான் எனினும் மற்றவர்களைவிட காப்ரியேலுடன் நெருக்கமாக இருந்தான். ஒருநாள் இரவு கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவைப் பற்றிச் சாதாரணமாகக் குறிப்பிட்டபோது காப்ரியேல் மட்டுமே அது யாரையோ பற்றிய ஏளனம் என்று எடுத்துக்கொள்ளாமல் இருந்தான். சாதாரணமாக உரையாடல்களில் பங்கெடுத்துக்கொள்ளாத உரிமையாளர் பெருமாட்டி கோப ஆவேசத்துடன் வாதம் செய்தாள். எப்போதோ கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தாள். மிதவாதிகளைக் கொன்று தீர்ப்பதற்காக அரசாங்கம் கண்டுபிடித்த போலிக் காரணம் அது என்றாள். கர்னல் அவுரேலியானோ புயேந்தியோவின் உண்மையான இருப்பைப் பற்றி காப்ரியேலுக்குச் சந்தேகம் இல்லை. ஞாபகத்தின் திடமில்லாத இந்தத் தந்திரம் தொழிலாளர்கள் படுகொலை பற்றிப் பேச்சுவரும்போது இன்னும் சிக்கலானது. ஒவ்வொரு முறையும் அந்தத் தகவலை அவுரேலியானோ சொல்லும்போதும், உரிமையாளர் மட்டுமல்ல, அவளைவிடவும் வயதானவர்களும், அதை மறுத்தார்கள். தொழிலாளர்கள் ரயில் நிலையத்தில் சுற்றி வளைத்துக் கொல்லப்பட்டதையும் இருநூறு பெட்டிகளில் பிணங்கள் ஏற்றப்பட்டதையும் கட்டுக்கதை என்று அடியோடு நிராகரித்தார்கள். எல்லாம் நீதிமன்ற ஆவணங்களிலும் ஆரம்பப் பள்ளிப் பாடநூல்களிலும் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன: வாழைப்பழக் குழுமம் ஒருபோதும் இருந்ததே இல்லை. எனவே யாரும் நம்பாத ஒன்றின் மீது உண்மைகளுக்கு உடந்தையாக இருக்கும் அடிப்படையில் அவுரேலியானோவும் காப்ரியேலும் பிணைக்கப்பட்டார்கள். அந்தப்

பிணைப்பு தங்கள் வாழ்க்கையை முடிந்துபோன ஓர் உலகத்தின் போக்குக்குக் கொண்டு சென்றிருப்பதையும் வெறும் நினைவு ஏக்கம் மட்டுமே மிஞ்சி இருப்பதையும் பார்த்தார்கள். காலம் அவனை முற்றுகையிட்டபோது காப்ரியேல் எங்கேயிருந்தாலும் அங்கேயே கிடந்து தூங்கினான். பலமுறை அவுரேலியானோ அவனை வெள்ளிப்பணி மேஜைமீது கொண்டுவந்து கிடத்தினான். ஆனால் விடியற்காலை வரை படுக்கையறைகளுக்குள் ஓயாமல் நடமாடிக் கொண்டிருந்த இறந்தவர்களின் சந்தடியால் இடையூறு செய்யப்பட்டு விழித்திருந்தே இரவைக் கழித்தான். பின்னர் அவுரேலியானோ அவனை நிக்ரோமந்தாவிடம் அனுப்பினான். வேறு வாடிக்கையாளர்கள் இல்லாமல் ஓய்வாக இருக்கும்போது அவனைத் தன்னுடைய அறைக்கு அழைத்துப் போனாள். கதவுக்குப் பின்னால் அடையாளம் வைத்திருந்த அவுரேலியானோவின் பற்றுக்கணக்கில் காலியாக இருந்த இடைவெளிகளில் நேர்க்கீற்றுகளால் மேலும் சில குறிகளைச் சேர்த்தாள்.

அவர்களுடைய கட்டுப்பாடற்ற வாழ்க்கையை மீறி மொத்தக் குழுவும் காடலோனிய ஞானியின் வற்புறுத்தலின்பேரில் நிரந்தரமானதாக எதையாவது செய்ய முயன்றது. செவ்வியல் இலக்கியத்துறை முன்னாள் பேராசிரியராக இருந்த அனுபவத்தையும் அரிய புத்தகங்களின் கடை இருக்கும் வாய்ப்பையும் வைத்து, ஆரம்பப் பள்ளிக்குப் போவதைத் தாண்டி வேறு எந்த ஆர்வமும் இல்லாதவர்களின் நகரத்தில், ஒரு முழு இரவையும் செலவழித்து முப்பத்தேழாவது நாடகக் காட்சியை அவர்களைத் தேடச் செய்தார். அந்தத் தோழமையைக் கண்டடைந்த வசீகரத்தாலும் பெர்னாண்டாவின் அற்ப புத்தியால் தனக்கு விலக்கி வைக்கப்பட்டிருந்த உலகத்தின் கவர்ச்சியாலும் பட்டயங்களை ஆராய்வதை அவுரேலியானோ கைவிட்டான். அப்போது அவை கவிதையின் மறைமுக வரிகளுக்கிடையில் குறியிடப்பட்டிருந்த தீர்க்க தரிசனங்களை வெளிப்படுத்தத் தொடங்கியிருந்தன. ஆனால், விபச்சார விடுதிக்குப் போவதை நிறுத்திக் கொள்ளாமலிருக்கும்போதும் எதையும் செய்வதற்குப் போதுமான நேரம் இருப்பது தெரிந்தது. அது மெல்குயாதெஸின் அறைக்கு மறுபடியும் திரும்பச் செல்ல அவனை உந்தியது. கடைசி ரகசியங்களைக் கண்டுபிடிக்கும்வரை தனது முயற்சிகளைக் கைவிடுவதில்லை என்று தீர்மானித்தான். அந்தச் சமயத்தில் காஸ்ட்டன் விமானம் வருவதற்காகக் காத்துக்கொண்டும் அமரந்தா உர்சுலா தனிமையை உணர்ந்து கொண்டும் இருந்தார்கள். ஒருநாள் காலை அவள் அறைக்குள் வந்தாள்.

"நரபட்சிணியே, திரும்பவும் உன் குகைக்கு வந்துவிட்டாயா?" என்று அவனிடம் கேட்டாள்.

அவளே வடிவமைத்த ஆடையில், கிளர்ச்சியூட்டுபவளாக இருந்தாள். மீன் முட்களால் அவளே கோத்த மாலைகளில் ஒன்றை அணிந்திருந்தாள். கணவன் மேல் நம்பிக்கை அதிகரித்திருந்ததால் அவன் கழுத்தில் கயிறு கட்டுவதை நிறுத்தியிருந்தாள். திரும்பி வந்ததற்குப் பின்பு முதல்முறையாக ஆசுவாசமாக இருந்தாள். அவள் வந்திருப்பதைத் தெரிந்துகொள்ள நிமிர்ந்து பார்க்க வேண்டிய அவசியம் அவுரேலியானோ

வுக்கு இருக்கவில்லை. முழங்கைகளை மேஜைமீது ஊன்றினாள். அவளுடைய எலும்புகளின் ஆழமான ஓசையை அவுரேலியானோ கேட்காமல் இருக்க முடியவில்லை. பட்டயத்தின் கெட்டித் தாள்களை ஆர்வமாகப் பார்த்தாள். அந்த இடையூறைச் சமாளிப்பதற்காகத் தான் இழந்துகொண்டிருக்கும் குரலை, தன்னைவிட்டுப் போய்க்கொண்டிருக்கும் வாழ்க்கையை, துளைகள் விழுந்த கட்டியாக மாறிக்கொண்டிருக்கும் நினைவைத் திரும்ப மீட்டுக்கொண்டு அவளுடன் பேசினான். எழுதப்பட்ட தாளின் மேல் இருப்பதைப் பகல் வெளிச்சத்தில் பார்க்க முடிவதுபோல காலத்தினூடே தெரியும் எதிர்காலத்தைப் பார்க்கும் சாத்தியத்தைப் பற்றிய சம்ஸ்கிருத விதி நிர்ணயத்தைப் பற்றி அவளிடம் சொல்லிக்கொண்டிருந்தான். நாஸ்ட்ராடாமஸின் 'நூற்றாண்டுக'ளைப் பற்றியும், புனித மிலானுஸ் முன் அறிவித்த கான்டப்ரியா அழிவைப் பற்றியும் சொன்னான். சட்டென்று, பிறப்பு முதல் அவனுக்குள் உறங்கிக்கொண்டிருக்கும் ஒரு வேட்கையால் உந்தப்பட்டான். அந்த இறுதித் தீர்மானம் தனது சந்தேகங்களுக்கு முற்றுப்புள்ளி வைக்கும் என்ற யோசனையில் அவுரேலியானோ தன் கையை அவளுடைய கைகள் மேல் வைத்தான். கேள்விகளுக்குப் பதில் சொல்லிக்கொண்டிருக்கும்போதே அவனுடைய சுட்டுவிரலைக் குழந்தைப் பருவத்தில் செய்வது போலவே பாசத்துடனும் அப்பாவித்தனத்துடனும் வருடினாள். பனியால் உறைந்த விரல்களுடன் அப்படியே இருந்தார்கள். அந்த நொடி நேரக் கனவிலிருந்து அவள் விழிக்கும் வரையும் எதையும் எந்த வகையிலும் ஒருவருக்கொருவர் பகிர்ந்துகொள்ளாமல் இருந்தார்கள். சட்டென்று நெற்றியில் அடித்துக்கொண்டு "எறும்புகள்" என்று அதிர்ச்சியடைந்தாள். பிறகு கையெழுத்துப் பிரதிகளை மறந்து, நடன அசைவுடன் கதவருகே போய் நின்று, பிரஸ்ஸெல்ஸுக்கு வழியனுப்ப வந்த அப்பாவுக்கு விடைகொடுத்தது போலவே முத்தத்தை விரல்களால் கொய்து, அவுரேலியானோவை நோக்கி வீசினாள்.

"அப்புறமாக அதைப் பற்றிச் சொல். இன்றைக்கு எறும்புப் புற்றுகளில் சுண்ணாம்பு போட வேண்டிய நாள் என்பதை மறந்தேவிட்டேன்" என்றாள்.

வீட்டுக்குள் ஏதாவது இடத்தில் ஏதாவது செய்ய இருக்கும்போது அபூர்வமாக அறைக்குள் வருவாள். கணவன் வானத்தை ஆராய்வதைத் தொடர்ந்து கொண்டு இருக்கும்போது சில நிமிடங்கள் அறையில் தங்குவாள். அந்த மாற்றத்தால் உற்சாகமடைந்த அவுரேலியானோ, அமரந்தா உர்சுலா திரும்பி வந்ததற்குப் பிந்தைய முதல் மாதங்களைப் போல அவர்களோடு சேர்ந்து உணவருந்தினான். காஸ்டனுக்கு மகிழ்ச்சியாக இருந்தது. சாப்பாட்டுக்குப் பின்பு ஒரு மணி நேரத்துக்கும் அதிகமான நேரம் பேசிக்கொண்டிருப்பார்கள். அப்போது பங்குதாரர்கள் தன்னை ஏமாற்றிவிட்டதாகப் புகார் சொன்னான். விமானத்தைக் கப்பலில் ஏற்றி அனுப்பிவிட்டதாகத் தகவல் தெரிவித்திருந்தும் அது வந்து சேரவில்லை. அவனுடைய கப்பல் முகவர்கள் அது ஒருபோதும் வந்து சேராது; கரீபியாவுக்கு வந்து சேர்ந்த கப்பல்களின் பட்டியலில் அது இல்லவே இல்லை என்று உறுதியாகத் தெரிவித்தார்கள். ஆனால்

கப்பலில் சரக்கு ஏற்றப்பட்டது நிச்சயம் என்றும் காஸ்ட்டன் தனது கடிதங்களில் பொய் சொல்கிறான் என்றும் ஆத்திரமடைந்தார்கள். ஒருவருக்கொருவர் சந்தேகப்பட்டுக்கொள்ளும் நிலையை அந்தக் கடிதத் தொடர்புகள் எட்டின. காஸ்ட்டன் மறுபடியும் கடிதம் எழுதப் போவதில்லை என்றும் பிரஸ்ஸெல்ஸுக்கு ஒருமுறை நேரில் சென்று சிக்கலைத் தீர்த்து விமானத்துடன் திரும்புவதென்றும் ஆலோசனை செய்துகொண்டிருந்தான். அந்தத் திட்டம் காற்றில் கரைந்தது. கணவனையே இழந்துபோனாலும் தான் மகோந்தாவை விட்டு நகரப் போவதில்லை என்ற அமரந்தா உர்சுலாவின் பதிலடி திட்டத்தை முடக்கியது. ஆரம்ப நாட்களில் அவுரேலியானோ, சைக்கிளில் திரியும் முட்டாள் என்றுதான் காஸ்ட்டனைப் பற்றி நினைத்திருந்தான். அது இப்போது பரிதாபத்தை ஏற்படுத்தியது. பின்னர் விபச்சார விடுதிகளில் ஆண்களைப் பற்றி ஆழமான விவரங்களைப் பற்றித் தெரிந்துகொண்ட போது, அடங்காத ஆசையிலிருந்துதான் காஸ்ட்டனின் அற்பத்தனம் பிறந்திருக்கும் என்று நினைத்தான். ஆனால் அவனை நெருக்கமாகத் தெரிந்துகொண்டபோது, அவனுடைய உண்மையான இயல்பு இப்போது காட்டும் பணிவுக்கு நேர்மாறானது என்பதைப் புரிந்துகொண்டான். விமானத்துக்காகக் காத்திருப்பதுகூட சந்தேகத்தின் பேரில் அவன் மேற்கொண்டிருக்கும் நடவடிக்கை என்று தோன்றியது. பார்வைக்குத் தெரிவதுபோல காஸ்ட்டன் முட்டாள் அல்ல; மாறானவன் என்று யோசித்தான். தீர்க்கமானவன், திறமையானவன், நிரந்தர ஒத்துப் போக்கால் மனைவியை வென்றிருப்பவன், அவளுடைய சொந்த வலையிலேயே அவளைச் சிக்கவைத்து, அந்தப் பிரமைகள் முடியும் வரை காத்திருக்க வைத்துவிட்டு அவளுடைய பெட்டிப் படுக்கைகளை எடுத்துக்கொண்டு ஐரோப்பாவுக்குத் திரும்பச் செய்வதே அவன் திட்டம் என்று நினைத்தான். அவுரேலியானோவின் பழைய பரிதாபம் வன்மமான வெறுப்பாக மாறியது. காஸ்ட்டனின் திட்டம் அவனுக்கு வக்கிரமானதாகத் தோன்றியது. அதே சமயம் சாத்தியமாகக்கூடியதாகவும் அதை எடுத்துச் சொல்லி அமரந்தா உர்சுலாவை எச்சரித்தான். அவனுடைய சந்தேகத்தைப் பார்த்துக் கேலி செய்தாள். எனினும், தனக்குள் உருவாக்கி வைத்திருந்த காதலின் பளு, நிச்சயமின்மை, பொறாமை எதையும் கவனத்தில் கொள்ளாமலிருந்தாள். சகோதர பாசத்தைவிட வேறு ஏதோ ஓர் உணர்வை அவுரேலியானோவிடம் தூண்டிவிட்டுக் கொண்டிருப்பது அவளுக்குப் புலனாகவில்லை. பீச் பழங்கள் அடைத்த குவளையைத் திறக்க முயன்றுகொண்டிருந்தபோது விரலில் குத்திக்கொண்டாள். அவன் ஓடிவந்து ரத்தத்தை ஆனந்தமாக வும் ஈடுபாட்டுடனும் உறிஞ்சியபோது அவள் முதுகெலும்பில் பனிக்குளிரை உணர்ந்தாள்.

"அவுரேலியானோ, மிகவும் சந்தேகப்படுகிற நீ வெளவாலாகப் பிறந்திருக்கலாம்" என்று வேதனையுடன் சிரித்தாள்.

அவுரேலியானோ எல்லாவற்றையும் மறந்தான். காயம் பட்ட அவளுடைய உள்ளங்கையில் சில அநாதை முத்தங்கள் பதித்தான். தன்னுடைய மனதின் மிகவும் மறைக்கப்பட்ட வழிகளைத் திறந்து

காட்டினான். தன்னுடைய அடங்காத பசியையும் தன்னைத் தியாகத் துறவியாகப் பொதிந்து வைத்திருக்கும் கொடிய ஒட்டுண்ணி மிருகத்தையும் வெளியே இழுத்துப் போட்டான். அவள் உலர்வதற்காகக் குளியலறையில் போட்டு வரும் உள்ளாடைமீது வெறிகொண்டு தனிமையில் அழுவதற்காகவே நள்ளிரவில் விழித்தெழுந்ததைச் சொன்னான். பூனையைப் போலக் கத்தவும் காஸ்ட்டன் காஸ்ட்டன் காஸ்ட்டன் என்று முனகவும் நிக்ரோமந்தாவிடம் கேட்டுக்கொள்ள வைத்த பதற்றத்தைப் பற்றியும் அவளுடைய வாசனைத் திரவியத்தை களவாடிக் கொண்டுபோய் விபச்சார விடுதிப் பெண்ணின் கழுத்தில் தடவியதையும் சொன்னான். அந்த வேட்கையின் வெளிப்பாடு அவளை அச்சுறுத்தியது. அமரந்தா உர்சுலா ஒரு சிப்பியைப் போல விரல்களை மடக்கிக் காயம்பட்ட கை, வலியோ பரிதாபத்தின் அடையாளமோ இல்லாத மரகத, புஷ்பராக முடிச்சாக, கல்லாக, உணர்ச்சியற்ற எலும்புகளாக மாறும்வரை இறுக்கி வைத்திருந்தாள்.

காறி உமிழ்வதுபோல "முட்டாள், பெல்ஜியத்துக்குப் போகும் முதல் கப்பலில் நான் போகப் போகிறேன்" என்றாள்.

அந்த நாட்களில் ஒரு பிற்பகலில் காடலோனிய ஞானியின் புத்தகக் கடைக்கு வந்த அல்வாரோ மூச்சடைக்கும் உரத்தக் குரலில் தன்னுடைய புதிய கண்டுபிடிப்பை அறிவித்தான். விலங்கு விபச்சார விடுதி. பெயர் 'தங்கக் குழந்தை'. பிரம்மாண்டமான திறந்தவெளி வரவேற்பறையாக இருக்கும். இருநூறுக்கும் குறையாத வாத்துகள் தங்கள் விருப்பப்படிக் கத்தி நேரத்தை அறிவிக்கும். வெவ்வேறு நிறமுள்ள கொக்குகள். பன்றிகளைப் போலக் கொழுத்த முதலைகள். பன்னிரண்டு ஒலியெழுப்பிகளுள்ள பாம்புகள், செயற்கைக் கடலில் தாவுகிற தங்க நிறம் பூசப்பட்ட ஆமை. இவையெல்லாம் கம்பி வேலிக்குள். ஒரு பெரிய வெள்ளைப் பொலிநாய் மென்மையானது, தின்ன எதுவும் கேட்காமல் இனவிருத்திச் சேவையளிக்கும். அந்தப் பின்புலத்துக்கு இப்போதுதான் உருவாக்கப்பட்டது போன்ற களங்கமில்லாத செறிவு இருந்தது. கலப்பினப் பெண்கள் ரத்தச் சிவப்பான பூவிதழ்கள் மேல் நம்பிக்கையில்லாமல் காத்துக் கிடந்தார்கள். காலாவதியான போனோகிராப் ஒன்று மனிதன் மறந்துவிட்டுப்போன பூமியின் சொர்க்கத்துக்கான காதலின் வழிகளைக் காட்டிக்கொண்டிருந்தது. முதலாவது இரவில் மாயைகளின் பச்சை மாளிகையைப் பார்ப்பதற்காக நால்வர் குழு போனது. வசீகரமும் மிதமான பேச்சும் கொண்ட ஒரு பெண் பிரம்பால் முடைந்த ஆடும் நாற்காலியில் உட்கார்ந்து காலம் திரும்பவும் புறப்பட்ட இடத்துக்கே வந்துவிட்டது என்று யோசித்துக் கொண்டிருந்தபோது வந்துகொண்டிருந்த ஐந்து பேரில் திடமாகவும் தார்த்தாரியக் கன்ன எலும்புகளுடனும் இருந்த உலகம் தொடங்கிய நாள் முதல் எப்போதும் தனியாக இருக்க முத்திரையிடப்பட்ட ஒருவனைப் பார்த்தாள்.

"கடவுளே, கடவுளே" என்று பெருமூச்சுவிட்டாள். "அவுரேலியானோ" என்றாள்.

கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவை மீண்டும் பார்த்தாள். முதல் முறை பார்த்தபோது விளக்கின் ஒளியில் நின்றிருந்தான். போர்கள் தொடங்குவதற்கு வெகு காலத்துக்கு முன்பே, புகழ் நாசமாக்குவதற்கும் ஏமாற்றத்தால் தலைமறைவு வாழ்க்கைக்குப் போகும் முன்பே ஒரு விடியற் காலையில் தனது படுக்கையறைக்குள் புகுந்து தனது வாழ்க்கையின் முதல் உத்தரவைப் பிறப்பித்தான்; காதலைக் கொடுக்கச் சொன்ன உத்தரவு. அது பெலர் தெர்னேரா. பல ஆண்டு களுக்கு முன்பே நூற்றி நாற்பத்தைந்து வயதைத் தாண்டியிருந்தாள்.

வயதைக் கணக்கிடுவது என்ற மோசமான பழக்கத்தை விட்டுத் தொலைத்திருந்தாள். ஞாபகங்களில் தேங்கிப்போயிருந்த காலத்தின் விளிம்பில் வாழ்ந்துகொண்டிருந்தாள்.

சுச்சிதமாகத் தெரியுமாறு உருவாக்கப்பட்ட ஒரு எதிர்காலத்தில் வாழ்ந்துகொண்டிருந்தாள். தந்திரமான பொறிகளாலோ அவளுடையச் சீட்டுகளின் நம்பிக்கைகளாலோ இடையூறு செய்யப்படாத எதிர்காலத் தில் வாழ்ந்து கொண்டிருந்தாள்.

அவுரேலியானோ, அந்த இரவு முதல் கருணையும் மென்மையும் உள்ளவளான எல்லாவற்றையும் புரிந்துகொள்பவளான தனக்குத் தெரிந்தேயிராத அந்த முது முப்பாட்டியின் கருணையிலும் கனிவிலும் அடைக்கலம் தேடினான். தனது பிரம்பு ஆடும் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு இறந்த காலத்தை நினைவுகூர்வாள். குடும்பத்தின் மகத்துவத்தை யும் துரதிர்ஷ்டங்களையும் இப்போது அழிக்கப்பட்டுவிட்ட மகோந்தா நகரத்தின் பெருமையையும் மீண்டும் உருவாக்குவாள். அப்போது அல்வாரோ சத்தம் போட்டுச் சிரித்து முதலைகளை அச்சுறுத்தினான். அல்போன்ஸா முந்தைய வாரம் தவறாக நடந்துகொண்ட நான்கு வாடிக்கையாளர்களின் கண்களைக் கொத்திய கண்கொத்திப் பறவைகள் பற்றிய கதையைச் சொல்லிக்கொண்டிருந்தான். காப்ரியேல், சிந்தனை வசப்பட்டவளான கலப்பினப் பெண்ணின் அறையில் இருந்தான். அவள் தனது சேவைக்கான கட்டணத்தைக் காசாக வாங்கிக் கொள்ளாமல் சிறையில் இருக்கும் தனது கடத்தல்கார நண்பனுக்குக் கடிதம் எழுதிக் கொடுக்கச் செய்வதன் மூலம் ஈடு கட்டினாள். ஓரினோகோ நகரின் அந்தப் பக்கமுள்ள சிறையில் அந்த நண்பன் அடைக்கப்பட்டிருந்தான். ஏனெனில் எல்லைப் பாதுகாவலர்கள் அவனைப் பிடித்தபோது மலமும் வைரங்களும் கலந்திருந்த கழிவுப் பானை மேல் உட்கார்ந்திருந்தான். தாய்மையுள்ள உரிமையாளருடனான உண்மையான விபச்சார விடுதி, அப்படியான உலகத்தைத்தான் அவுரேலியானோ தன்னுடைய நீண்ட சிறையிருப்புக் காலத்தில் கனவு கண்டிருந்தான். அவனுடைய பிரமைகளை அமரந்தா உர்சுலா நொறுக்கிய அந்தப் பிற்பகலில் அடைக்கலம் புக, இப்படியான ஒரு தோழமையைத்தான் அவன் யோசித்திருந்தான். வார்த்தைகளில் தனது பாரத்தை இறக்கிவைக்க அவன் தயாராக இருந்தான். அதன் மூலம் யாராவது நெஞ்சை இறுக்கிக்கொண்டிருக்கும் தடைகளைத் தகர்ப் பார்கள் என்று நினைத்தான். ஆனால் பிலர் தெர்னேராவின் மடியில் தலைவைத்துக் கொண்டு அழுதபோது வெதுவெதுப்பான திரவம்

மட்டுமே வெளிவந்தது. அவள் அவனை அழுது முடிக்கவிட்டாள். தனது விரல்களின் முனையால் அவன் தலையை வருடிக்கொண்டே, அவன் சொல்லாமலேயே காதலால்தான் அழுகிறான் என்பதை அடையாளங் கண்டுகொண்டாள். மனித வரலாற்றில் மிகப் பழைமை யான விசும்பல் காதலுக்கானதுதான் என்பது அவளுக்குத் தெரிந்திருந்தது.

"குழந்தாய், போதும்" என்று அவனை ஆறுதல்படுத்தினாள். "இப்போது சொல், அது யார்?"

அவுரேலியானோ சொன்னபோது பிலர் தெர்னேரா, பெருஞ் சிரிப்பில் தொடங்கிப் புறாக்களின் குலாவலுடன் முடிவதுபோல் ஆழ்ந்து சிரித்தாள். ஒரு புயேந்தியாவின் மனத்துக்குள்ளிருப்பது என்னவென்பது அவளுக்குத் தெரியாததல்ல. ஏனெனில் நூறாண்டுச் சீட்டுகளும் அனுபவமும், அந்தக் குடும்பத்தின் வரலாறு தவிர்க்க முடியாத மறு பகர்ப்புகளைக் கொண்டது ஒரு இயந்திரம் போன்றது என்று எண்ணினாள். சுழலும் சக்கரம் நிச்சயத்துக்குள் செல்லும்போது அதன் அச்சும் கூடவே முன்னேறுவதில்லை.

"கவலைப்படாதே. அவள் இப்போது எங்கிருந்தாலும் உனக்காகக் காத்துக்கொண்டிருப்பாள்" என்று புன்னகைத்தாள்.

அமரந்தா உர்சுலா குளியலறையை விட்டு வெளியே வந்தபோது மணி நான்கரை ஆகியிருந்தது. தன்னுடைய அறை வழியாகப் போவதை அவுரேலியானோ பார்த்தான். மெல்லிய மடிப்புகள் கொண்ட அங்கியை அணிந்து துவாலையைத் தலைப்பாகையாகக் கட்டியிருந்தாள். போதை யில் தள்ளாடியபடி இருட்டிலிருந்து ஏறத்தாழ கெந்துநடையில் அவளைப் பின்தொடர்ந்து தம்பதியறைக்குள் நுழைந்தான். அங்கியை அவிழ்த்தவள் அதே வேகத்தில் பயந்து மூடிக்கொண்டாள். அடுத்த அறையை சைகையால் சுட்டிக் காட்டினான். அங்கே கதவு பாதி திறந்திருந்தது. காஸ்ட்டன் கடிதமெழுத ஆரம்பித்திருந்தான் என்பது அவுரேலியானோ வுக்குத் தெரிந்திருந்தது.

சத்தமெழாத குரலில் "வெளியே போ" என்றாள்.

அவுரேலியானோ புன்னகைத்தான். பிகோனியாப் பூத்தொட்டியைத் தூக்குவதுபோல இரண்டு கைகளாலும் அவளுடைய இடுப்பைப் பிடித்துத் தூக்கிப் படுக்கையில் மல்லாத்திப் போட்டான். முரட்டுத் தனமாகப் பற்றியிழுத்து எதிர்ப்பதற்கு அவளுக்கு நேரம் கிடைப்பதற் குள், குளியல் அங்கியை இழுத்தெறிந்தான். புதிதாகக் கழுவிவிடப்பட்ட நிர்வாணத்தின் ஆழத்தின் மேல் படர்ந்தான். அந்த நிர்வாணத்தின் சரும நிறம், வளைவுகள், மர்ம மச்சங்கள் எல்லாவற்றையும் பக்கத்து அறைகளின் மறைவிலிருந்தபடி கற்பனை செய்திருந்தான். அமரந்தா உர்சுலா ஒரு புத்திசாலிப் பெண்ணின் தந்திரத்துடன் உண்மையாகவே தன்னைப் பாதுகாத்துக்கொள்ளப் பார்த்தாள். தன்னுடைய உடம்பின் நழுவலை, குழைவை, ஏய்க்கும் மணத்தைக் காட்டி நழுவவே முயன்றாள். தேள் முழங்காலால் அவனுடைய விரைப்பைகளைத் தாக்கினாள். இருவரும் கொடுக்கப் போன்ற நகத்தால் அவன் முகத்தில் கீறினாள். இருவரும்

மூச்சுவிடாமலிருந்தது சோகையான ஏப்ரல் மாத வெளிச்சத்தில் நின்று ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டிருந்த நபரின் மூச்சை அடைக்கச் செய்தது. அது ஒரு மூர்க்கமான, மரிப்பதற்கான யுத்தம். ஆனால் அதில் வன்முறை இல்லாமலிருந்ததாகத் தோன்றியது. ஏனெனில் அது இலக்கற்ற தாக்குதல்களையும் ஆவிபோன்ற நழுவல்களையும் கொண்டிருந்தது. மெதுவாக, எச்சரிக்கையாக, கௌரவமாக, நடந்த யுத்தம். அது நடந்து கொண்டிருந்தபோது பெட்டூனியப்பூக்களுக்கு மலர்வதற்கு நேரம் இருந்தது. அடுத்த அறையிலிருந்த காஸ்ட்டனுக்குத் தனது விமான ஓட்டிக் கனவை மறப்பதற்கு நேரமிருந்தது. எதிரிகளான இரண்டு காதலர்கள் நீர்க்காட்சியரங்கின் ஆழத்தில் சமரசத்துக்குத் தயாராவது போலிருந்தது. அந்த மூர்க்கமும் கொண்டாட்டமுமான போராட்டத்தில் தனது மௌனம் காரணமில்லாதது; தாங்கள் தவிர்க்க விரும்பும் யுத்தத்தின் ஓசையைவிட இந்த மௌனம் பக்கத்திலிலேயே இருக்கும் கணவனுக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தக் கூடியதுமென்பதை அமரந்தா உர்சுலா புரிந்துகொண்டாள். உதடுகளை இறுக்கமாக மூடிச் சிரிக்கத் தொடங்கினாள். சண்டையை விட்டுக் கொடுக்காமல் கபட தந்திரங்களால் தன்னைப் பாதுகாத்துக்கொண்டாள். மெல்ல மெல்ல உடலால் நழுவாமல் பார்த்துக்கொண்டபோது இருவரும் எதிராளிகளாக இருக்கும் அதே சமயம் பங்காளிகளாகவும் இருப்பதையும் போர் உருக்குலைந்து துள்ளாட்டமாகவும் தாக்குதல்கள் தழுவல்களாகவும் மாறியதையும் பிரக்ஞைபூர்வமாக உணர்ந்தார்கள். திடீரென்று, குறும்பின் இன்னொரு பகுதியாக அமரந்தா தனது தற்காப்பைக் கைவிட்டாள். அதைத் திரும்ப மீட்க முயன்றபோது தானாகவே அதைச் செய்ததை உணர்ந்து அச்சமடைந்தாள். ஆனால் அதற்குள் தாமதமாகியிருந்தது. ஒரு பெரும் குழப்பம் அவளுடைய புவியீர்ப்பு மையத்தை அசையவிடாமல் செய்தது. அதே இடத்தில் அவளை ஊன்றியது. அவளுடைய தற்காப்பு உறுதியெல்லாம் மரணத்தின் மறுபுறம் ஆரஞ்சு சீழ்க்கைகளையும் கண்ணுக்குத் தெரியாத கோளங்களையும் கண்டுபிடிக்கும் அடக்க முடியாத பதற்றத்தால் தகர்க்கப் பட்டது. கையால் துவாலையை எடுத்துப் பற்களுக்கிடையில் திணித்துக் கொண்டாள். அதனால் இதுபோன்ற தருணத்தில் தான் எழுப்பும் பூனைக் கூச்சல்கள் வெளியே வராமலிருக்கும் என்று நினைத்தாள். ஏற்கனவே அந்தப் பூனைக் குரல்கள் அவளை உள்ளுக்குள் பிறாண்டிக் கொண்டிருந்தன.

திருவிழாக்கால இரவொன்றில் சொர்க்கத்தில் தனக்கான வாசல் திறப்பதை எதிர்பார்த்துக்கொண்டே பிரம்பால் முடைந்த தனது ஆடும் நாற்காலியில் அமர்ந்த நிலையிலேயே பிலர் தெர்னேரா இறந்தாள். அவளுடைய கடைசி விருப்பத்தின்படி சவப்பெட்டியில் வைத்துப் புதைக்கவில்லை. நடனக்கூடத்தின் மையத்தில் தோண்டிய பெரிய குழிக்குள் எட்டு பேர் ஆடும் நாற்காலியைக் கயிறு கட்டி இறக்கினார்கள். கறுப்பு உடையணிந்த பழுப்பு நிறப் பெண்கள் அழுதழுது வெளிறியிருந்தார்கள். தங்களுடைய காதணிகளையும் புரூச்களையும் மோதிரங்களையும் குழிக்குள் எறிந்து புதிரான சடங்கை நடத்தினார்கள். பெயரோ தேதியோ பதிக்காதப் பலகைக் கல்லைப் போட்டுக் குழியை மூடினார்கள். அதன்மீது அமேசான் கமேலியப் பூக்களைக் குவித்தார்கள். வீட்டு விலங்குகளுக்கு விஷம் கொடுத்துவிட்டுக் கதவுகளையும் ஜன்னல்களையும் செங்கல்லும் சாந்தும் வைத்து அடைத்தார்கள். பின்னர் புனிதர்களின் படங்களும் பத்திரிகைப் படங்களும் முன்னாள் அபிமான நாயகர்களின் – அவர்கள் வைரங்களைக் கக்குபவர்களாகவும் நரபட்சணிகளைத் தின்பவர்களாகவும் ஆழ்க் கடல் சீட்டாட்ட மன்னர்களாகவும் இருக்கலாம் – படங்களும் ஒட்டிய மரப் பெட்டிகளுடன் நடந்து உலகத்துக்குள்ளே சிதறி மறைந்தார்கள்.

அதுதான் முடிவாக இருந்தது. பிலர் தெர்னேராவின் கல்லறையில் துதி கீதங்களுக்கும் விபச்சாரிகள் அணிந்த நகைகளுக்கும் இடையே இறந்த காலத்தின் சிதிலங்கள் அழுகிக் கொண்டிருந்தன. எஞ்சியிருந்தவற்றில் ஒருவரான காடலோனிய ஞானி தன் புத்தகக் கடையை ஏலத்தில் விற்றுவிட்டு, ஒருபோதும் முடிவடையாத வசந்த காலத்தின் நினைவை வெல்ல முடியாமல் மத்திய தரைக் கடற்பகுதியிலிருக்கும் தான் பிறந்து வளர்ந்த கிராமத்துக்கே திரும்பினான். அவனுடைய முடிவை யாரும் முன்கூட்டி எதிர்பார்க்கவில்லை. நடைபெற்ற பல போர்களில் ஏதோ ஒன்றிலிருந்து தப்பி வாழைப்பழக் குழுமம் செல்வாக்குடன் இருந்த காலத்தில் மகோந்தாவுக்கு வந்து சேர்ந்திருந்தான். ஆரம்பக் காலத்தில் அச்சிடப்பட்டப் புத்தகங்களையும் வெவ்வேறு மொழிகளில் வெளியான முதல் பதிப்புகளையும் சேகரித்து அந்தப் புத்தகக் கடையை உருவாக்கியதைத் தவிர நடைமுறைகள் பற்றிய அக்கறை எதுவும் அவனுக்கு இல்லை. எதிரில் இருந்த வீட்டுக்குக் கனவுகளின் பலனை அறிய வந்து காத்திருந்த வாடிக்கையாளர்கள் தற்செயலாகக் கடைக்குள் வந்து பழைய புத்தகங்களை

எச்சரிக்கையுடன் புரட்டினார்கள். அவன் தன்னுடைய வாழ்க்கையின் பாதியைக் கடையின் பின்பக்கத்தில் உட்கார்ந்து பள்ளிக்கூடக் குறிப்பேடுகளிலிருந்து கிழித்தெடுத்த தாள்களில் இளஞ்சிவப்பு மையால் தெளிவான கையெழுத்தில் எழுதிக்கொண்டிருப்பதிலேயே செல வழித்தான். அவன் என்ன எழுதுகிறான் என்பது யாருக்கும் உறுதியாகத் தெரியவில்லை. அவுரேலியானோ முதலில் அவனைச் சந்தித்தபோது அவனிடம் அந்த வெவ்வேறு பக்கங்கள் நிரம்பிய இரண்டு பெட்டிகள் இருந்தன. அவை மெல்குயாதெஸின் பட்டயங்களை நினைவுபடுத்தின. அப்போது முதல் புறப்படுவதற்குள் மூன்றாவது பெட்டியையும் நிரப்பியிருந்தான். மகோந்தாவில் வசித்த காலத்தில் அவன் வேறு எந்த வேலையும் செய்யவில்லை என்பதை நம்புவதற்கு அவை காரணமாக இருந்தன. அவன் உறவு பேணியது அந்த நான்கு நண்பர் களுடன் மட்டுமே. பம்பரத்துக்கும் பட்டத்துக்கும் பதிலாக அவன் புத்தகங்களைக் கொடுத்தான். அவர்கள் ஆரம்பப் பள்ளியில் படித்துக் கொண்டிருக்கும்போதே செனேகாவையும் ஓவிட்டையும் வாசிக்க வைத்தான். செவ்வியல் இலக்கிய ஆசிரியர்களைக் குடும்ப நெருக்கத் துடன், ஏதோ கொஞ்ச காலம் அவனுடன் அறைத் தோழர்களாக இருந்தார்கள் என்பதுபோல, கையாண்டான். ஒருவரைப் பற்றித் தெரிந்திருக்கத் தேவையில்லாத விஷயங்களையும் தெரிந்துவைத் திருந்தான். புனித அகஸ்டீன் அங்கிக்குள்ளே கம்பளிச் சட்டையும் அணிந்திருந்தார். அதைப் பதினான்கு ஆண்டுகளாகக் கழற்றாமல் இருந்தார். வியானோவாவைச் சேர்ந்த மாந்திரீகன் ஆர்னால்டோ தேள்கடியால் மலடானான் போன்ற உண்மைகளைத் தெரிந்துவைத் திருந்தான். எழுதப்பட்ட வார்த்தை மேல் அவனுக்கிருந்த ஆசை நெருக்கமானதும் புறணி பேசும் உந்துதலும் கலந்தது. இந்த இருமையி லிருந்து அவனுடைய சொந்தக் கையெழுத்துப் பிரதிகளும் தப்பவில்லை. அவனுடைய எழுத்துகளை மொழிபெயர்ப்பதற்காகவே காடலோனிய மொழியை அல்பான்ஸோ கற்றுக்கொண்டான். செய்தித்தாள் நறுக்கு களும் வியாபாரக் கையேடுகளும் நிறைந்த காகிதச் சுருளை அல்பான்ஸோ சட்டைப் பையில் வைத்திருந்தான். விபச்சாரச் சிறுமிகள் பசியால் துவண்டு தூங்கப்போய்விட்ட அந்த வீட்டுக்குச் சென்ற ஒரு இரவு அதைத் தொலைத்துவிட்டான். ஞானியான அந்தத் தாத்தா அதைக் கண்டுபிடித்துவிட்டார். கலவரம் செய்து கத்தப் போகிறார் என்று அவர்கள் பயந்திருந்தபோது உரக்கச் சிரித்துக்கொண்டு சொன்னார். அதுதான் இலக்கியத்தின் இயற்கையான விதி. அதற்கு மாறாக அவன் தன்னுடைய சொந்த கிராமத்துக்குத் திரும்பிச் செல்லும்போது மூன்று பெட்டிகளையும் கொண்டுபோக வேண்டாம் என்று எடுத்துச் சொல்லத் தகுதியான எந்த மனித பலமும் அங்கே இருக்கவில்லை. அவற்றைச் சரக்குப் பெட்டியில் அனுப்ப ரயில்வே ஆய்வாளர் முயன்றபோது கார்த்தேஜிய மொழியில் சாபங்களை அவிழ்த்துவிட்டான். கடைசியில் அவற்றைப் பயணிகள் பெட்டியில் தன்னுடனேயே வைத்துக்கொண் டார். "மனிதர்கள் முதல் வகுப்பில் பயணம் செய்யும்போது இலக்கியம் சரக்குப் பெட்டியில் போகும் இந்த உலகம் நாசமாகப் போகட்டும்" என்றான். அவன் கடைசியாகச் சொல்லக் கேட்டது அதுதான்.

பயணத்துக்குத் தயாராவதற்காக அவன் செலவழித்த கடைசி வாரம் இருண்டதாக இருந்தது. ஏனெனில் நேரம் நெருங்க நெருங்க அவனுடைய நகைச்சுவை உணர்வு தடைபட்டுக்கொண்டிருந்தது. பொருட்களை இடம்மாற்றி வைத்தான். அவன் ஒரு இடத்தில் வைத்த பொருள் இன்னொரு இடத்தில் தென்பட்டது. பெர்னாண்டாவை அலைக்கழித்த அதே குட்டிச் சாத்தான்களின் ஆக்கிரமிப்பாகவே இருந்தது இதுவும்.

"நாசமாய்ப் போங்கள், லண்டன் திருச்சபையின் இருபத்தியேழாம் கட்டளையில் வெளிக்கிருந்து வைப்பேன்" என்று சபித்தான். ஜெர்மானும் அவுரேலியானோவும் அவனைக் கவனித்துக் கொண்டார்கள். குழந்தைக்கு உதவுவதுபோல உதவினார்கள். அவனுடைய பயணச் சீட்டையும் குடியேற்ற ஆவணத்தையும் அவனுடைய சட்டைப் பையில் பின்னூசி யில் குத்திவைத்தார்கள். மகோந்தாவை விட்டுப் புறப்பட்டது முதல் பார்சிலோ போய் இறங்கும்வரை என்ன செய்ய வேண்டும் என்று ஒரு பட்டியல் தயாரிக்கச் செய்தார்கள். அப்படியிருந்தும் தன்னுடைய சம்பாத்தியத்தில் பாதியைப் போட்டு வைத்திருந்த இரண்டு கால்சராய் களை யோசனையில்லாமல் வீசியெறிந்தான். பயணத்துக்கு முதல் நாள் இரவு முதன்முதலாக வந்தபோது கொண்டு வந்த அதே பெட்டியில் துணிகளை அடுக்கி மூடிய பிறகு கடலோனிய ஞானி தனது சிப்பிக் கண்களை இடுக்கி, தலைமறைவாக வாழ்ந்த காலத்திலும் தன்னோடு இருந்த புத்தகங்களின் அடுக்கை சற்றே மரியாதை குன்றிய போற்றுதலுடன் நண்பர்களுக்குச் சுட்டிக்காட்டிச் சொன்னார்:

"அங்கேயிருக்கும் எல்லாச் சனியன்களையும் உங்களிடம் கொடுக் கிறேன்"

மூன்று மாதங்களுக்குப் பிறகு பெரிய உறையில் இருபத்தொன்பது கடிதங்களும் கடற்பயணத்தின் ஓய்வு வேளையில் சேகரித்த ஐம்பதுக்கும் மேற்பட்ட படங்களும் அவர்களுக்குக் கிடைத்தன. அவற்றில் தேதி குறிப்பிடப்படவில்லை என்றபோதும் கடிதங்கள் எழுதப்பட்ட வரிசை யில் அது வெளிப்படையாகத் தெரிந்தது. ஆரம்பக் கடிதங்களில் தனது வழக்கமான நகைச்சுவையுடன் கடல் தாண்டுவதன் துன்பங்களைப் பற்றிப் பேசியிருந்தான்; மூன்று பெட்டிகளையும் கேபினுக்குள் வைத்துக் கொள்ள அனுமதிக்காதபோது அந்தச் சரக்கு அதிகாரியைக் கப்பலி லிருந்து கடலுக்குள் வீசத் தோன்றியதாகவும், மூட நம்பிக்கையால் அல்லாமல் பதின்மூன்று என்பது முடிவில்லாத எண் என்று எண்ணி யதனாலேயே பயந்த பெண்ணைப் பற்றியும் முதல் நாள் இரவுணவின் போது குடிநீரில் லேரிதாவிலுள்ள ஊற்றுகளுக்கு அருகில் வளரும் பீட் கிழங்கின் வாடை இருக்கிறது என்று பந்தயம் கட்டி வென்றதைப் பற்றியும் சொன்னான். நாட்கள் போகப்போகக் கப்பல்தள வாழ்க்கை மீதான ஆர்வம் குறைந்து குறைந்து வந்தது. கப்பல் முன்னோக்கிச் செல்லச் செல்ல அற்பமான நிகழ்வுகள்கூட நினைவேக்கத்தை அதிகரிக்கச் செய்து அவனைத் துக்கமானவனாக ஆக்கியது. நினைவேக்கத்தின் தடங்கள் அந்தப் படங்களிலும் வெளிப்படையாகத் தெரிந்தன. முதலாவது படங்களில், மருத்துவமனைக் கோட்டைப் போல இருந்த தன்னுடைய ஸ்போர்ட்ஸ் ஜாக்கெட் அணிந்து, வெளுத்தப்

பிடறியுடனும் அக்டோபர் மாதக் கரீபியப் பின்னணிப் படமொன்றில் வெள்ளைத் தொப்பியுடனும் மகிழ்ச்சியானவனாகத் தெரிந்தான். கடைசிப் படங்களில் அடர்ந்த வண்ணக் கோட்டுகளும் வெள்ளை நிற ஸ்கார்பும் அணிந்திருந்தான். முகம் வெளுத்திருந்தது. இலையுதிர் காலக் கடலில் தூக்கத்தில் நடப்பவனைப்போல மந்தமாக நகர்ந்த கப்பலின் தளத்தில் மனது ஒடுங்கியவனாகக் காணப்பட்டான். ஜெர்மானும் அவுரேலியானோவும் அவன் கடிதங்களுக்குப் பதில் எழுதினார்கள். வீட்டை அடைந்த ஆரம்ப மாதங்களில் அவன் ஏராளமான கடிதங்களை எழுதினான். அந்தத் தருணங்களில் அவன் மகோந்தாவில் இருந்தபோது உணர்ந்ததைவிட அவனுடன் மிக நெருக்கமாக உணர்ந்தார்கள். அவன் விட்டுப்போன சலிப்பிலிருந்து ஏறத்தாழ மீண்டார்கள். இங்கும் எல்லாம் அதேபோல இருக்கின்றன. அவன் பிறந்த வீட்டில் இளஞ்சிவப்பு நிற நத்தைகள் இன்னும் இருக்கின்றன. உலர்ந்த கடல் பறவைகளுக்கு அதே சுவை இருக்கிறது. மாலை நேரங்களில் கிராமத்திலிருக்கும் அருவிகளில் அதே வாசனை வந்துவிடுகிறது. பள்ளிக் குறிப்பேடுகளிலிருந்து கிழித்தெடுத்த அதே தாள்களில் இளஞ்சிவப்பு மை கையெழுத்தில் எழுதிய கடிதங்களில் ஒவ்வொருவருக்கும் தனிப் பத்திகளை ஒதுக்கியிருந்தான். ஆசுவாசப் படுத்தலும் உற்சாகத்தைத் தூண்டிவிடும் தன்மையும் கொண்டிருந்த கடிதங்கள் மெதுவாகப் போலி நம்பிக்கைகளைக் கைவிடச் சொல்லும் சுவிசேஷக் கடிதங்களாக மாறியிருந்ததை அவன் கவனித்திருக்க முடியுமென்று தோன்றவில்லை. குளிர்கால இரவு ஒன்றில் அடுப்பில் சூப் கொதித்துக்கொண்டிருந்தபோது புத்தகக் கடையின் பின்பாகத்தில் நிலவிய கதகதப்பையும் தூசு படிந்த வாதுமை மரங்களின் மீது சூரியன் ரீங்கரிப்பதையும் சோம்பலான பகலுறக்க வேளைகளில் கேட்கும் ரயிலின் சீழ்க்கை ஒலியையும் மகோந்தாவில் இழந்திருந்ததைப் போலவே பொதுக் கணப்படுப்பு அருகில் கிடைக்கும் குளிர்கால சூப்பையும் காப்பி விற்பனையாளனின் கூவல்களையும் வசந்த காலத்தில் கூட்டமாகப் பறக்கும் வானம்பாடிகளையும் இழந்திருப்பதை உணர்ந்தான். எதிரெதிராக வைக்கப்பட்ட இரண்டு கண்ணாடிகளைப் போல அந்த இரண்டு நினைவேக்கங்களும் அவனைச் சோர்வடையச் செய்தன. அவன் தன்னுடைய அபாரமான எதார்த்தமற்ற உணர்வை இழந்தான். எல்லாரும் மகோந்தாவை விட்டுச் செல்ல வேண்டும் என்றும் உலகத்தைப் பற்றியும் மனித மனத்தைப் பற்றியும் தான் கற்பித்த அனைத்தையும் மறந்துவிட வேண்டுமென்றும் ஹோரஸிர்* மீது வெளிக்கிருக்க வேண்டுமென்றும் அவர்களிடம் சொல்லிக்கொண் டிருந்தான். அவர்கள் என்னவாக இருந்தாலும் சரி, இறந்த காலம் என்பது ஒரு பொய் என்பதை எப்போதும் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்; நினைவுகள் திரும்பி வரமாட்டா; கடந்துபோன ஒரு வசந்த காலத்தையும் மீண்டும் கண்டடைய முடியாது. எவ்வளவு தீவிரமான காதலாக இருந்தாலும் கடைசியாகப் பார்க்கும்போது அது நொடி நேர உண்மை மட்டுமே என்று அவர்களுக்கு எழுதினான்.

---

* ரோமானியக் கவிஞர்

மகோந்தாவை விட்டு வெளியேறும்படிச் சொல்லப்பட்ட அறிவுரையை முதலில் பின்பற்றியவன் அல்வாரோதான். அவன் வீட்டு வராந்தாவிலிருந்து தெருவில் செல்பவர்களையெல்லாம் கலவரப் படுத்திக் கொண்டிருந்த பழக்கப்படுத்திய சிறுத்தை உட்பட எல்லா வற்றையும் விற்றுப் பயணத்தை ஒருபோதும் நிறுத்தாத ரயிலில் தொடர்ந்து பயணம் செய்வதற்கான சீட்டை வாங்கினான். வழியி லிருந்த ரயில் நிலையங்களிலிருந்து அவன் அனுப்பிய படங்களில் தனது பெட்டியின் ஜன்னல் வழியாகத் தான் பார்த்த தற்கணக் காட்சிகளை உரத்த குரலில் விவரிப்பது போன்ற நீண்ட, கவிதையையும் எழுதியிருந்தான். அது அவனே கிழித்துத் துண்டாக்கி மறதிக்குள் வீசியெறிந்ததைப் போல படித்ததும் மறந்துபோகும் ஒன்றாக இருந்தது. லூசியானாவின் பருத்தி வயல்களில் சிமெரா*க்களைப்போல இருக்கும் நீக்ரோக்களை, கெண்டகியின் நீலப் புல்வெளியில் மேயும் சிறகுள்ள குதிரைகளை அரிசோனாவின் நரகமயமான சூரிய அஸ்தமனத்தின் பின்னணியில் கிரேக்கக் காதலர்களை மிச்சிகன் ஏரிக் கரையில் சிவப்புக் கம்பளி ஆடை அணிந்து நீர்வண்ணங்களால் ஓவியம் தீட்டிக் கொண்டிருக்கும்போது அந்த ரயில் திரும்ப அவளைக் கடந்து செல்லாது என்பதை அறியாமல் அவனைப் பார்த்து பிரஷ்களை ஆட்டி, வழி யனுப்பிய பெண்ணைப் பற்றியெல்லாம் எழுதியிருந்தான். அல்பான்சோ வும் ஜெர்மானும் திங்கட்கிழமை மகோந்தாவுக்குத் திரும்பிவரும் யோசனையுடன் சனிக்கிழமை புறப்பட்டுப் போனார்கள். அதன் பிறகு அவர்களைப் பற்றி எதுவும் கேள்விப்படவில்லை. காடலோனிய ஞானி திரும்பிச் சென்ற ஒரு வருடத்துக்குப் பிறகு மகோந்தாவில் மிஞ்சியிருந்தவன் காப்ரியேல் மட்டுமே. நிக்ரோமந்தாவின் தயவில் வாழ்ந்துகொண்டிருந்தான். பாரீசுக்கு ஒரு பயணச் சீட்டைப் பரிசாக அறிவித்திருந்த பத்திரிகையின் குறுக்கெழுத்துப் போட்டிக்கு விடை எழுதி அனுப்பிக் காத்திருந்தான். அதை அவனுக்குத் தருவித்துக் கொடுத்ததும் விடைகளை எழுதிப் பூர்த்தி செய்ய உதவியதும் அவுரேலியானோதான். சில சமயங்களில் தன் வீட்டில் வைத்தும் பெரும்பாலான நேரங்களில் மகோந்தாவில் எஞ்சியிருக்கும் ஓரே ஒரு மருந்துக் கடையில் உட்கார்ந்து பீங்கான் குப்பிகளுக்கிடையில் மூலிகை வாசனைப் பின்னணியிலும் விடைகளைக் கண்டுபிடித்தான். காப்ரியேலின் தோழி மெர்சிடஸ் அந்தக் கடையில்தான் வசித்தாள். இறந்த காலத்தின் அழித்தொழிப்பில் கடைசியாக மிஞ்சியது அந்தக் கடை மட்டுமே. அழித்தொழிப்பு முற்றிலுமாக முடிந்துவிடாமல் அழித்தொழிப்பின் பாதையில் இருந்தது. நகரம் தனக்குள்ளே இருந்து தன்னைத்தானே விழுங்கிக்கொண்டிருந்தது. ஒருபோதும் தனது முடிவை முடித்துக்கொள்ளாததாக முடிவின் ஒவ்வொரு கணத்திலும் முடிந்துகொண்டிருந்தது. காப்ரியேல் போட்டியில் வெற்றிபெற்று இரண்டு மாற்றுடைகளுடனும் ஒரு ஜோடி ஷூக்களுடனும் ராபேல் படைப்புகளின் மொத்தத் தொகுதியுடனும் புறப்பட்டபோது நகரம் அதன் செயலின்மையின் உச்சத்தை எட்டியிருந்தது. அவன் ரயிலை

* சிங்கத் தலையும் ஆட்டின் உடலும் கொண்ட நெருப்பு மூச்சுவிடும் அரக்கி.

நிறுத்தச் சொல்லி கைகாட்டித்தான் ரயிலில் ஏற வேண்டியிருந்தது. அந்தச் சமயத்தில் துருக்கியர் தெரு புறக்கணிக்கப்பட்ட மூலையாக மாறியிருந்தது. பல வருடங்களுக்கு முன்பே இருப்பிலிருந்த கடைசி முழத் துணியையும் விற்றுத் தீர்த்திருந்தபோதும் காலங்காலமாக வந்த வழக்கத்தின்படி அராபியர்கள் கடை வாசல்களில் மரணத்தால் இழுத்துச் செல்லப்படுவதற்காக உட்கார்ந்திருந்தார்கள். அலமாரிகளின் நிழல்களில் அடிமையாக்கப்பட்ட குள்ளர்கள் மட்டுமிருந்தார்கள். பாட்ரிஷியா பிரவுன் இரவுகளில் தன்னுடைய பேரக் குழந்தைகளை எழுப்பிக்கொண்டிருந்த குழுமத்தின் வாழைப்பழ நகரம் காட்டுப் புற்கள் அடர்ந்த சமவெளியாக மாறியிருந்தது. அருட்தந்தை ஏஞ்சலுக்குப் பிறகு வந்த பழைய பாதிரியார், யாரும் அவர் பெயரைத் தெரிந்து கொள்ள மெனக்கெடவில்லை, அருகிலிருந்த தேவாலயத்தின் உரிமை யாருக்கு என்று பல்லிகளும் எலிகளும் சண்டை போட்டுக்கொண் டிருந்தபோது, சந்தேகத்தால் ஏற்பட்ட உறக்கமின்மை நோயாலும் மூட்டுவலியாலும் அவதிப்பட்டவாறு, கடவுளின் கருணையை எதிர் பார்த்து கித்தான் தொட்டிலில் படுத்துக் கிடந்தார். பறவைகளாலும்கூட மறக்கப்பட்டுவிட்ட மகோந்தாவில் மூச்சுவிட முடியாத அளவுக்குப் புழுதியும் வெம்மையும் அதிகரித்தன. செவ்வெறும்புகளின் இரைச்சலால் தூங்கக்கூட முடியாத அந்த வீட்டில் தனிமையாலும் காதலாலும் பாதுகாக்கப்பட்ட, பூமியிலேயே மிகவும் மகிழ்ச்சியான இரண்டு பேராக அவுரேலியானோவும் அமரந்தா உர்சுலாவும் இருந்தார்கள்.

காஸ்டன் பிரஸ்ஸெல்ஸுக்குப் போனான். விமானத்துக்காகக் காத்திருந்து அலுத்துப்போன பிறகு தன்னுடைய அவசியப் பொருட்களையும் கடிதப் பரிமாற்றங்கள் அடங்கிய கோப்பையும் ஒரு பெட்டியில் எடுத்துக்கொண்டு விமானத்தில் திரும்பி வரலாம் என்ற யோசனையுடன் மகோந்தாவை விட்டுப் புறப்பட்டான். ஏனெனில் அவனுக்கு வழங்கப்பட்டிருந்த சலுகைகள், அவனுடையதை விட அதிக நம்பிக்கை அளிக்கும் திட்டத்தைப் பிரதேச அதிகாரி களுக்குச் சமர்ப்பித்திருந்த ஜெர்மானிய விமான ஓட்டிகளின் குழு ஒன்றுக்கு மாற்றிக்கொடுக்கப்பட்டுவிடலாம் என்று அவன் சந்தேகித்தான். முதல் புணர்ச்சிக்குப் பிறகு அவுரேலியானோவும் அமரந்தாவும் கணவனின் அரிதான கண்காணிப்பு இல்லாத தருணங் களைத் தங்களுக்குச் சாதகமாக்கிக்கொண்டார்கள். தற்செயலாகச் சந்தித்துக்கொள்ளும்போது வாயில் துணியை அடைத்துக் கொண்டு நடத்தும் களியாட்டங்கள் அவனுடைய எதிர்பாராத திரும்புதல்களால் தடைபட்டன. ஆனால் வீட்டில் அவர்கள் மட்டும் தனித்திருக்கும்போது கடைசியாகப் புணர்ந்து கொள்ளும் காதல்களின் உன்மத்தத்தில் கரைந்தார்கள். அது வெறித் தனமான ஆசையாக இருந்தது. அவர்கள் ஒட்டிக்கொண்டே இருந்தது, அவர்களுக்கு நிரந்தரமான பரவசநிலையைக் கொடுத்தபோது கல்லறைக்குள் கிடந்த பெர்னாண்டாவின் எலும்புக்கூட்டைப் பயத்தால் நடுநடுங்கச் செய்தது. மத்தியானம் இரண்டு மணிக்கு உணவு மேஜை மீது விடியற்காலை இரண்டு மணிக்குப் பொருள் வைப்பறையிலும் அமரந்தா உர்சுலாவின் உச்சக் கட்டத் துய்ப்பின் முனகல்களும் வேதனைப் பாட்டுகளும் வெடித்து

ஒலித்தன. அவள் சிரித்துக்கொண்டே “நாம் வீணாக்கிவிட்ட காலத்தைப் பற்றித்தான் வருத்தமாக இருக்கிறது” என்றாள். ஆசையின் பெருங் குழப்பத்தில் செவ்வெறும்புகள் தோட்டத்தை நிர்மூலமாக்கிக் கொண்டிருப்பதை, வீட்டின் உத்தரங்களில் தமது வரலாற்றுக்கு முந்தைய பசியைத் தீர்த்துக்கொண்டிருப்பதையும் முற்றத்தில் மீண்டும் முட்டைகள் குவிந்ததையும் அவள் வெறுமனே பார்த்துக்கொண்டிருந்தாள். படுக்கை யறைக்குள் அவற்றைப் பார்த்தபோது மட்டுமே அவற்றுடன் போராட முனைந்தாள். அவுரேலியானோ பட்டயங்களைக் கைவிட்டான். மறுபடியும் வீட்டை விட்டு வெளியே போகாமலிருந்தான். காடலோனிய ஞானியின் கடிதங்களுக்கு அக்கறையில்லாமல் பதில் எழுதினான். அவர்கள் எதார்த்த உணர்வை இழந்தார்கள். கால உணர்வை இழந்தார்கள். அன்றாட வழக்கங்களின் ஒத்திசைவை இழந்தார்கள். உடைகளைக் கழற்றுவதில் நேரம் விரயமாகிவிடக் கூடாது என்று கதவுகளையும் ஜன்னல்களையும் அடைத்தார்கள். அழகி ரெமேதியோஸைப் போல வீட்டுக்குள்ளேயும் முற்றத்துச் சகதியிலும் நிர்வாணமாகவே அலைந் தார்கள். ஒரு மாலை நேரம் தண்ணீர்த் தொட்டிக்குள் கிடந்து கலவியில் ஈடுபட்டபோது மூழ்கிப் போனார்கள். மிகக் குறுகிய காலத்துக்குள் எறும்புகள் ஏற்படுத்தியதைவிட அதிக நாசத்தை ஏற்படுத்தினார்கள். கூடத்திலிருந்த அறைக் கலன்களை நாசப்படுத்தினார்கள். அவர்களுடைய வெறியில் கர்னல் அவுரேலியானோ புயேந்தியாவின் தற்காலிகக் காதல்களுக்குத் தாக்குப்பிடித்த உறக்க மஞ்சத்தை நார்நாராகக் கிழித்தார்கள். மெத்தைகளைக் காலிசெய்து உள்ளிருந்த பஞ்சைத் தரையில் விசிறினார்கள். பஞ்சுக் சூறாவளியால் மூச்சுத் திணறினார்கள். தனது எதிராளியைப் போலவே அவுரேலியானோவும் மூர்க்கமான காதலனாக இருந்த போதும் தனது உன்மத்தமான மேதைமையாலும் இசைமயமான வேகத்தாலும் தனது முது முப்பாட்டி விலங்கு வடிவ மிட்டாய்களை உருவாக்கக் கடைபிடித்த அதே அக்கறையிலான வெல்ல முடியாத வலுவாலும் அமரந்தா உர்சுலாதான் பேரழிவின் சொர்க்கத்தை ஆட்சி செய்தாள். தனது கண்டுபிடிப்புகளில் குதூகலப்பட்டு அவள் மகிழ்ச்சி யுடன் பாடிக்கொண்டும் சிரித்துச் சிரித்து உயிரைவிட்டுக் கொண்டு மிருந்தபோது அவுரேலியானோ மேலும் மேலும் உள்ளுக்குள் ஒடுங்கி னான். மௌனமானான். ஏனெனில் அவனுடைய வேட்கை அவனை மையமாகக் கொண்டே எரிந்தது. இருந்தபோதும் இருவரும் நுணுக்கங் களின் எல்லைகளை அடைந்தார்கள். பரவசத்துடன் ஓய்ந்தார்கள். அந்த ஓய்வையும் பரவசமாக்கிக் கொண்டார்கள். தங்கள் உடல்களை வழிபடக் கற்றுக்கொண்டார்கள்; காதலின் ஓய்வு வேளைகளில் தாங்கள் விரும்புவதைவிட இன்னும் செழுமையான புதிய சாத்தியங்களைத் தேடினார்கள். அவன் அமரந்தா உர்சுலாவின் விறைத்த முலைகளில் முட்டையின் வெள்ளைக் கருவைப் புரட்டும்போதும் அவளுடைய எலாஸ்டிக் தொடைகளை மிருதுவாக்கும்போதும் பீச் பழம் போன்ற நாபியில் கோக்கோ விழுதைப் புரட்டும் போதும் அவள் அவுரேலியானோ வின் விறைத்திருக்கும் ஜீவனை ஒரு பொம்மையாக்கித் தன்னுடைய உதட்டுச் சாயத்தால் அதற்குக் கோமாளியின் கண்களை வரைந்தும் வான்கோழித் தாடையில் புருவம் தீட்டும் பென்சிலால் மீசை வரைந்தும்

சின்ன ஆர்கன்சா கழுத்து முடிச்சுப் போட்டும் சரிகைத் தொப்பி வைத்தும் விளையாடுவாள். ஒரு இரவு அவர்கள் தலை முதல் கால் நகம்வரை பீச் பழ ஜாமைத் தடவிக்கொண்டு ஒருவரையொருவர் நாய்களைப்போல நக்கிக்கொண்டு முற்றத்துத் தரையில் வெறித்தனமாக முயங்கிக்கொண்டிருந்தபோது அவர்களை உயிரோடு தின்ன அணிவகுத்து வந்த உயிர்த்தின்னி எறும்புகளால் உசுப்பப்பட்டார்கள்.

தங்களுடைய உன்மத்தத்தின் இடைவேளைகளில் அமரந்தா உர்சுலா காஸ்ட்டனின் கடிதங்களுக்குப் பதில் எழுதுவாள். அவன் வெகு தொலைவிலேயே இருப்பதாகவும் திரும்பிவர முடியாத அளவுக்கு வேலை நெருக்கடியில் இருப்பதாகவும் உணர்ந்தாள். அவன் எழுதிய முதல் கடிதங்கள் ஒன்றில் பங்குதாரர்கள் உண்மையில் விமானத்தை அனுப்பிவிட்டார்கள் என்றும் பிரஸ்ஸெல்ஸிலிருக்கும் கப்பல் முகவர் தவறுதலாக தங்கனீகாவுக்கு அனுப்பிவிட்டதாகவும் அது அங்கே சிதறுண்டு வாழும் மகோண்டோப் பழங்குடியினருக்குப் பட்டுவாடா செய்யப்பட்டதாகவும் எழுதியிருந்தான். இந்தக் குழப்பம் ஏராளமான சிக்கல்களை ஏற்படுத்தியது. விமானத்தைத் திரும்பப் பெற இரண்டு வருடங்களாவது ஆகும். எனவே, அவனுடைய அசந்தர்ப்பமான வருகைக்கான சாத்தியத்தை அமரந்தா உர்சுலா ஒதுக்கித் தள்ளினாள். காடலோனிய ஞானியிடமிருந்து வரும் கடிதங்களும் பேசா மடந்தையான மெர்சிடஸ் மூலமாக காப்ரியேல் தெரிவிக்கும் தகவல்களும் தவிர அவுரேலியானோவுக்கு உலகத்துடன் எந்தத் தொடர்பும் இல்லாமலிருந்தது. முதலில் அவை உண்மையான தொடர்புகளாக இருந்தன. பாரிசிலேயே வசிக்கும் எண்ணத்துடன் மறுபயணத்துக்கான சீட்டுடன் காப்ரியேல் திரும்பி வந்தான். ரியூ டோஃபின் ஹோட்டலிலிருந்து அங்குள்ள பணிப்பெண்கள் தூக்கி எறியும் பழைய செய்தித் தாள்களையும் குப்பிகளையும் சேகரித்து விற்பது அவன் தொழில். அவுரேலியானோ அவனை ஆமைக் கழுத்து வைத்த கம்பளிச் சட்டையுடன் வசந்த காலக் காதலர்கள் நிறைந்திருக்கும் மாண்ட்பர்னேஸ் தெருவோரக் கஃபேக்களைக் கடந்து செல்பவனாகக் கற்பனை செய்து பார்த்தான். பகலில் தூங்கி இரவில் விழித்து உட்கார்ந்து எழுதிக்கொண்டிருந்த ரோகாமதோர் இறந்துபோகவிருந்த அறையையும் காட்சிப்படுத்திக் கொண்டான். அவனைப் பற்றிய தகவல் நிச்சயமற்றவையாக இருந்தன. காடலோனிய ஞானியின் கடிதங்கள் துக்கம் நிரம்பியவையாக இருந்தன. அவுரேலியானோ அவர்களைப் பற்றி யோசித்துக்கொண்டிருந்தது போலவே அமரந்தா உர்சுலாவும் தன் கணவனைப் பற்றி யோசித்துக்கொண்டிருந்தாள். காதலே அன்றாட உண்மையும் நிரந்தர உண்மையுமாக இருந்த வெற்று உலகத்தில் இருவரும் மிதந்துகொண்டிருந்தார்கள்.

திடீரென்று, மகிழ்ச்சி உணர்விலிருந்த அந்த உலகத்தில் நெரிசல் ஏற்பட்டது போல காஸ்ட்டன் திரும்பி வரும் தகவல் வந்தது. அவுரேலியானோவும் அமரந்தா உர்சுலாவும் கண் விழித்தார்கள். தங்கள் ஆன்மாவுக்குள் ஆழமாகப் பார்த்தார்கள். தாங்கள் ஒருவருக்கு ஒருவர் மிக நெருக்கமாக இருப்பதையும் மரணம் மட்டுமே தங்களைப்

பிரிக்க வேண்டும் என்று விரும்புவதையும் புரிந்துகொண்டார்கள். அவள் உண்மைகளுக்கு முரண்பட்டதாகக் கணவனுக்குப் பதில் கடிதம் எழுதினாள். அதில் அவனை நேசிப்பதாகவும் அவனை மீண்டும் பார்க்க ஆவலுடன் இருப்பதாகவும் எழுதினாள். ஆனால் அதே சமயம் தன்னால் அவுரேலியானோ இல்லாமல் வாழ்வது விதியின் அசாத்தியமானத் திட்டம் என்றும் ஒப்புக்கொண்டிருந்தாள். எதிர்பார்த்ததற்கு மாறாக காஸ்ட்டன் அவர்களுக்கு அமைதியான கடிதம் ஒன்றை அனுப்பினான். ஏறத்தாழ ஒரு தகப்பனின் பதில் போல இரண்டு முழுப் பக்கங்களில் எழுதப்பட்ட கடிதத்தில் ஆசையின் நொடிப்பொழுது ஈர்ப்புக்கு எதிரான எச்சரிக்கையையும் கடைசிப் பத்தியில் குறைவான காலந்தான் என்றாலும் தான் மகிழ்ச்சியாக இருந்ததுபோல அவர்களும் மகிழ்ச்சியாக இருப்பார்கள் என்று வாழ்த்துக் களையும் தெரிவித்திருந்தான். அவனுடைய அதுபோன்ற ஊகிக்க முடியாத நடவடிக்கையும் தன் கணவனுக்கு, அவன் எதிர்பார்த்த மாதிரியே விதியின் கைகளில் தன்னைத் தள்ளிவிடுவதற்கான நியாயத்தைத் தானே கொடுத்ததும் அமரந்தா உர்சுலாவை எரிச்ச லடையச் செய்தன. அந்த ஆத்திரம் ஆறு மாதங்களுக்குப் பிறகு லியோபோல்ட் வில்லேயிலிருந்து காஸ்ட்டன் மீண்டும் எழுதிய கடிதம் மூலம் அதிகமானது. அவன் கடைசியாக விமானத்தை மீட்டுவிட்ட தாகவும் மகோந்தாவில் விட்டு வந்த ஒரே ஒரு உணர்வுசார்ந்த பொருளான தனது சைக்கிளை அனுப்பும்படியும் எழுதியிருந்தாள். அமரந்தா உர்சுலா துப்பிய எச்சிலை அவுரேலியானோ அமைதியாகத் தாங்கிக்கொண்டான். நல்ல காலத்திலும் கெட்ட காலத்திலும் தான் அவளுக்கு ஒரு நல்ல கணவனாக இருக்க முடியும் என்று காட்ட விரும்பினான். காஸ்ட்டனின் கடைசிப் பணமும் தீர்ந்துபோனதும் அன்றாடத் தேவைகளுக்கான வழிகள் அடைபட்டன. அந்தச் சிக்கல் இருவருக்கும் இடையில் தனிமையின் பிணைப்பை ஏற்படுத்தியது. அது வேட்கையைப்போல அவ்வளவு பகட்டானதோ வேகமானதோ அல்ல. ஆனால் அது அவர்களை எவ்வளவு முடியுமோ அவ்வளவு மகிழ்ச்சியாக ஆர்ப்பாட்டமும் காமம் ததும்பியதுமான காதலில் ஈடுபட வைத்தது. பிலர் தெர்னேரா இறந்தபோது அவர்கள் ஒரு குழந்தையின் வரவை எதிர்பார்த்திருந்தார்கள்.

பேறுகாலக் களைப்பில் அமரந்தா உர்சுலா மீன் முட்களால் செய்த நகைகளை வைத்து ஒரு வியாபாரத்தைத் தொடங்கினாள். ஒரு டஜன் மாலைகளை வாங்கிப்போன மெர்சிடஸைத் தவிர அவளால் வேறு வாடிக்கையாளரைக் கண்டுபிடிக்க முடியவில்லை. தனக்கு மொழிகளிலிருக்கும் புலமை, தனது கலைக் களஞ்சிய அறிவு, தொலை காலத்துச் சம்பவங்களைப் பற்றிய தகவல்கள், தொலைவிடங்களுக்குப் போகாமலேயே அந்த இடங்களின் விவரங்களைத் தெரிந்துவைத்திருக் கும் நினைவுகள், இவை எவற்றுக்கும், மகோந்தாவாசிகள் எல்லாரிடமு மிருக்கும் மொத்தத் தொகையைச் சேர்த்து வைத்தாலும் விலையாக முடியாத தன் மனைவியின் நகைப் பெட்டியின் மதிப்புக்கும் எந்தப் பயனும் இல்லை என்பதை அவுரேலியானோ முதல் முதலாக உணர்ந்தான். அவர்கள் ஆச்சரியகரமாக வாழ்ந்தார்கள். அமரந்தா

உர்சுலா தன் நகைச்சுவை உணர்வையும் காமக் குறும்புகளின் மேதமையையும் இழந்துவிடவில்லை. பகலுணவுக்குப் பிறகு விழிப்பும் சிந்தனையும் கலந்த மத்தியானத் தூக்கநிலையில் முற்றத்தில் உட்கார்ந் திருப்பதை வழக்கமாக்கியிருந்தாள். அவுரேலியானோவும் கூடவே உட்கார்ந்திருப்பான். சில சமயங்களில் இரவு விடும்வரைக்கும் மௌனமாக எதிரெதிராக உட்கார்ந்து நேருக்கு நேராகப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

உன்மத்த தினங்களில் காதலித்தது போலவே ஒருவரை ஒருவர் காதலித்துக் கொண்டிருந்தார்கள். எதிர்காலத்தைப் பற்றிய நிச்சய மின்மை அவர்கள் மனங்களை இறந்த காலத்தை நோக்கித் திருப்பியது. பிரளயத்துக்குப் பிந்தைய இழந்த சொர்க்கத்தில் தாங்கள் இருப்பதைப் பார்த்தார்கள். வாசலில் தேங்கிய நீரைச் சிதறடித்தார்கள். உர்சுலாவின் மேல் கழுத்தில் தொங்கவிடுவதற்காகப் பல்லிகளைக் கொன்றார்கள். அவளை உயிரோடு புதைக்கப்போவதாகப் போக்குக் காட்டினார்கள். நினைவு தோன்றிய நாள் முதல் தாங்கள் மகிழ்ச்சியாகவே இருந் திருப்பதை அந்த நினைவுகள் வெளிப்படுத்தின. இறந்த காலத்துக்குள் இன்னும் பின்னோக்கிப் போனபோது அமரந்தா உர்சுலா அந்தப் பிற்பகலை நினைவுகூர்ந்தாள். வெள்ளிப் பட்டறைக்குள்ளே போன போது, குட்டி அவுரேலியானோ யாருடைய குழந்தையுமல்ல என்று அம்மா சொன்னாள். கூடையில் மிதந்து வந்தபோது கண்டெடுக்கப் பட்டவன் என்றாள். அது நம்பகமானதாக இல்லை என்றபோதும் அதை இடம் பெயர்க்கக்கூடிய உண்மையான எந்தத் தகவலும் அவர்களிடம் இல்லை. சகல சாத்தியங்களையும் ஆராய்ந்து பார்த்து அவர்களால் உறுதிப்படுத்திக்கொள்ள முடிந்ததெல்லாம் பெர்னாண்டா, அவுரேலியானோவின் தாய் அல்ல என்பதுதான். அவன் பெத்ரா கோட்டேஸின் மகனாக இருக்க வேண்டும் என்று அமரந்தா உர்சுலா விரும்பினாள். ஒழுக்கக்கேட்டைப் பற்றிய கதைகளுடன் தொடர்பு படுத்தித்தான் அவள் நினைக்கப்பட்டாள் என்பது அவள் மனதில் சின்ன நடுக்கத்தின் சாயலை ஏற்படுத்தியது.

தான் தன்னுடைய மனைவியின் சகோதரன் என்ற நிச்சயம் அவுரேலியானோவை அலைக்கழித்தது. திருச்சபை இல்லத்துக்கு ஓடிப்போய் பூஞ்சணம் மூடிய பூச்சியரித்த ஆவணங்களில் தனது பிறப்பைப் பற்றிய குறிப்பு எதுவும் கிடைக்குமா என்று ஆராய்ந்தான். சாக்லெட் வித்தைகள் மூலம் கடவுளின் இருப்பை நிறுவுவதற்காக அருட்தந்தை நிக்கானார் ரேய்னா முயற்சி செய்துகொண்டிருந்த காலத்தில் ஞானஸ்நானம் செய்துவைக்கப்பட்ட அமரந்தா புயேந்தியா வின் ஞானஸ்நானச் சான்றிதழ்தான் அங்கே இருந்தவற்றில் மிகவும் பழமையானதாக இருந்தது. பதினேழு அவுரேலியானோக்களில் தானும் ஒருவனாக இருக்கலாமோ என்றும் யோசிக்கத் தொடங் கினான். பிள்ளைப் பருவத்தின் சுழற்படியில் நின்று நிச்சயமின்மை யால் நடுங்கிக்கொண்டிருந்தவனை மூட்டுவலிப் பாதிரியார் உறக்க மஞ்சத்திலிருந்தபடியே கவனித்துக்கொண்டிருந்தார். கருணையுடன் அவனிடம் பெயரைக் கேட்டார்.

“அவுரேலியானோ புயேந்தியா” என்றான்.

“அப்படியானால் தேடிக் களைப்படைய வேண்டாம்.” பாதிரியார் ஆச்சரியத்துடனும் முடிவான தீர்மானத்துடனும் சொன்னார். “பல ஆண்டுகளுக்கு முன்பு இங்கே அந்தப் பெயரில் ஒரு தெரு இருந்தது. அந்தக் காலத்தில் மக்களிடம் தங்கள் குழந்தைகளுக்குத் தெருவின் பெயரைச் சூட்டும் வழக்கமிருந்தது.”

அவுரேலியானோ ஆத்திரத்தால் நடுங்கினான்.

“ஆக, நீங்கள் அதை நம்பவில்லை?”

“நம்புவதா, எதை?”

“கர்னல் அவுரேலியானோ புயேந்தியா முப்பத்திரண்டு உள்நாட்டுப் போர்களை நடத்தினார். எல்லாவற்றிலும் தோல்வியடைந்தார்.” என்று பதிலளித்தான் அவுரேலியானோ. “ராணுவம் சுற்றி வளைத்து மூன்றாயிரம் தொழிலாளர்களை இயந்திரத் துப்பாக்கிகளால் சுட்டுக் கொன்று இருநூறு பெட்டிகள் கொண்ட ரயிலில் ஏற்றிக்கொண்டுபோய் கடலில் வீசியெறிந்தது.”

பாதிரியார் பரிதாபப் பார்வையால் அளந்தார்.

“மகனே!” என்று பெருமூச்சுவிட்டார். “இந்த விநாடியில் நீயும் நானும் உயிருடன் இருக்கிறோம் என்பது உறுதியாக இருந்தாலே எனக்குப் போதும்.”

எனவே அவுரேலியானோவும் அமரந்தா உர்சுலாவும் கூடைக் கதையை ஏற்றுக்கொண்டார்கள். அவர்களுக்கு நம்பிக்கை வந்ததால் அல்ல; அவர்களுடையப் பதற்றத்தைத் தணித்ததால். பேறு காலம் நெருங்க நெருங்க அவர்கள் இருவரும் ஒருவரானார்கள். ஒரு தடவை ஊதினாலே விழுந்துவிடும் என்ற நிலைமைக்கு நாசமடைந்திருந்த வீட்டின் தனிமையில் அவர்கள் ஒன்றிணைந்திருந்தார்கள். ஒரே ஒரு இடத்தில் மட்டுமே புழங்கினார்கள். பெர்னாண்டாவின் படுக்கை யறையிலிருந்து பார்த்தால் உட்கார்ந்து ஈடுபடும் காதலின் வசீகரம் தெரியும் இடத்தில் இருவருமாக உட்கார்ந்தார்கள். குழந்தைக்குத் தொப்பியும் காலுறைகளும் தைப்பதற்காக உட்கார்ந்திருப்பாள். காடலோனிய ஞானியின் அரிதாக வரும் கடிதங்களுக்குப் பதில் எழுதுவதற்காக அவுரேலியானோ உட்கார்ந்திருப்பான். வீட்டின் மீதிப் பாகங்கள் அழிவின் ஆக்கிரமிப்புக்கு விடப்பட்டது. வெள்ளிப் பட்டறை, மெல்குயாதெஸின் அறை, சாந்தா சோபியா தெ லா பியாதாத்தின் மௌனமான மூலை எல்லாம் காடாகியிருந்தன. யாருக்கும் உள்ளே நுழைய துணிவு வரவில்லை. இயற்கையின் பெரும் பசியால் சூழப்பட்டு இருந்த இடத்தில் அவுரேலியானோவும் அமரந்தா உர்சுலாவும் ஒரிகானோ செடிகளையும் பிகோனியாச் செடிகளையும் நட்டு வளர்த்துத் தங்கள் உலகைப் பாதுகாத்துக்கொண்டார்கள். சுண்ணாம்புக் கோடுகளால் குறியிட்டு வைத்தார்கள். மனிதனுக்கும் எறும்புக்கும் இடையில் நடக்கும் யுகக் கணக்கான போரில் கடைசிப்

பதுங்கு குழிகளை அமைத்துக்கொண்டார்கள். அவளுடைய நீண்ட கூந்தல் பராமரிக்கப்படாமல் இருந்தது. முகத்தில் சீழ்க்கொப்புளங்கள் வெடிக்க ஆரம்பித்திருந்தன. கால்கள் வீங்கியிருந்தன. காமத்தைக் கிளறும் அவளுடைய சிறுத்த உடல் உருமாறியிருந்தது. இளமை துடிக்கும் பெண்ணாக அதிர்ஷ்டமில்லாத கானரிப் பறவைகளின் கூண்டுடனும் அவளால் சிறைபிடிக்கப்பட்ட கணவனுடனும் அந்த வீட்டுக்கு வந்த அமரந்தா உர்சுலா உருமாறியிருந்தாள். எனினும் அவளுடைய ஆன்மாவின் உல்லாசம் மாறவே இல்லை.

"நாசமாகப் போயிற்று" என்று சிரித்துக்கொண்டே சொன்னாள்.

"நாம் உண்மையாகவே நரபட்சிணிகளைப் போல வாழ்ந்து சாகப் போகிறோம் என்று யாராவது நினைத்திருப்பார்களா?"

அவர்களை உலகத்துடன் பிணைத்திருந்த கடைசிச் சரடு கர்ப்ப காலத்தின் ஆறாவது மாதம் அறுந்துபோனது. அவர்களுக்கு வந்த கடிதம் காடலோனிய ஞானியிடமிருந்து வந்ததல்ல. பார்சிலோனாவிலிருந்து அனுப்பப்பட்டிருந்தது. உறையின் மேல் நீல மையால் ஏதோ அதிகாரியின் கையால் முகவரி எழுதப்பட்டிருந்தது. அதற்கு மோசமான செய்தியின் வெகுளித்தனமான நெருக்கமில்லாத தோற்றம் இருந்தது. அமரந்தா உர்சுலா அதைத் திறக்க முயன்றபோது அவுரேலியானோ அதைப் பறித்தான்.

"இது வேண்டாம். இதைத் திறக்க வேண்டாம்." என்று அவளிடம் சொன்னான். "அது என்ன சொல்கிறது என்று தெரிந்துகொள்ள விரும்பவில்லை."

அவன் ஊகித்தது போலவே காடலோனிய ஞானி மீண்டும் எழுதவில்லை. யாரும் படிக்காத அந்த அந்நியனின் கடிதம் பெர்னாண்டா தனது திருமண மோதிரத்தைக் காணாமல் தேடி அங்கேயே கண்டெடுத்த அலமாரியின் தட்டில் அந்துப் பூச்சிகளின் கருணைக்கு விடப்பட்டது. உறைக்குள்ளே இருந்த கெட்ட செய்தியின் நெருப்பால் பொசுங்கிக் கொண்டிருந்தபோது, அந்தத் தனிமையான காதலர்கள், அந்த நாட்களின் கடைசிக் கட்டங்களுக்கு எதிராகப் பயணம் செய்துகொண்டிருந்தார்கள். அந்த அவமானகரமும் தீவினை நிரம்பியதுமான காலம் அவர்களை மாயையின் பாலைவனத்துக்குள்ளும் மறதிக்குள்ளும் தள்ள வீணாக முயற்சித்துக்கொண்டிருந்தது. அந்தத் துன்புறுத்தலை உணர்ந்த அவுரேலியானோவும் அமரந்தா உர்சுலாவும் வெப்பமான மாதங்களைக் கைகளைக் கோர்த்துக்கொண்டு கழித்தார்கள். திருமணமற்ற உறவின் உன்மத்தத்தில் தொடங்கிய காதல் குழந்தைகான அன்பின் விசுவாசத்தில் முடிந்தது. இரவில் ஒருவரை ஒருவர் அணைத்துக்கொண்டு படுத்திருந்தார்கள். எறும்புகளின் தரை அகழ்வோ அந்துப் பூச்சிகளின் இரைச்சலோ பக்கத்து அறைகளில் வளர்ந்துகொண்டிருக்கும் களைச்செடிகளின் ஓயாத, துல்லியமான சீழ்க்கையொலியோ அவர்களை அச்சுறுத்தவில்லை. இறந்தவர்களின் நடமாட்டத்தால் பலமுறை விழித்தார்கள். வம்சத்தைப் பேணுவதற்காகப் படைப்பின் விதிகளுக்கு எதிராக உர்சுலா சண்டையிடுவதையும் மகத்தானக்

கண்டுபிடிப்புகளின் தொன்மையான உண்மைகளை ஹோசே அர்க்காதியோ புயேந்தியா தேடிக்கொண்டிருப்பதையும் பெர்னாண்டா பிரார்த்தித்துக்கொண்டிருப்பதையும் கர்னல் அவுரேலியானோ புயேந்தியா போரின் ஏமாற்றத்துக்காகச் சிறு தங்கமீன்களை வைத்துத் தன்னைத்தானே முட்டாளாக்கிக் கொண்டிருப்பதையும் அவுரேலியானோ செகுந்தோ தனது வசீகரிப்பின் கொந்தளிப்பில் தனிமையில் இறந்து கொண்டிருப்பதையும் பார்த்தார்கள். தீவிரமான மோகங்கள் மரணத்துக்கு எதிராக நிற்க முடியும் என்பதைக் கற்றுக்கொண்டார்கள். நீண்ட காலங்களுக்குப் பிறகு , மனிதனிடமிருந்து பூச்சிகள் அபகரித்த அந்தத் துயரத்தின் சொர்க்கத்தை எதிர்கால விலங்குகள் பூச்சிகளிட மிருந்து அபகரித்தாலும் தாங்கள் ஒருவரை ஒருவர் நேசித்துக்கொண் டிருக்க முடியும் என்று உறுதியாக இருந்தார்கள்.

ஞாயிற்றுக்கிழமை மாலை ஆறு மணிக்கு அமரந்தா உர்சுலா வுக்குப் பேற்று நோவு கண்டது. பசியால் துவண்டு தூங்கப்போன விபச்சார விடுதிச் சிறுமிகளின் சிரிக்கும் உரிமையாளர், உணவு மேஜை மேல் அவளைக் கிடத்தினாள். ஒரு காலை அகட்டிவைக்கச் செய்தாள். கொடூர வேகத்துடன் அவளுடைய அழுகுரல் அடங்கும்வரை சிகிச்சை களைச் செய்தாள். தோள்பட்டைகளைப் பிடித்து இழுத்து ஒரு வலுவான ஆண் குழந்தையை வெளியே எடுத்தாள். கண்ணீரினூடாக அமரந்தா உர்சுலாவால் பார்க்க முடிந்தது. அவன் மகத்தான புயேந்தியாக்களில் ஒருவன். ஹோசே அர்க்காதியோக்களைப் போல வலுவும் உறுதியும் நிரம்பியவனாகவும் அவுரேலியானோக்களைப் போலப் பெரியவையும் இயற்கைக்கு அதீதமுமான கண்களும் கொண்டவனாகவும் வெளிவந்த அவன் வம்சத்தை மீண்டும் தொடக்கத்திலிருந்து ஆரம்பிக்க முன்பே தீர்மானிக்கப்பட்டவன். வம்சத்தின் நுட்பமான தீய குணங்களை சுத்தப்படுத்தப் போகிறான். ஒரு நூற்றாண்டில் காதலால் உருவான ஒரே ஒருவன்.

“இவன் அசல் நரபட்சணிதான். ரோட்ரிகோ என்று பெயர் வைப்போம்” என்றாள் அவள்.

“இல்லை” என்று கணவன் மறுத்தான். “நாம் அவனுக்கு அவுரேலியானோ என்று பெயர் வைப்போம். அவன் முப்பத்திரண்டு போர்களை வெல்வான்.”

தாதி தொப்புள்கொடியை அறுத்துவிட்டு, குழந்தையின் முதுகில் படர்ந்திருந்த நீலப் பசையைத் துணியால் துடைக்கத் தொடங்கினாள். அவுரேலியானோ கையில் விளக்கை ஏந்தி நின்றான். அவனைக் குப்புறப் போட்டபோதுதான் மற்றவர்களுக்கு இருப்பதைவிட அதிக மான ஒன்று இருப்பதைப் பார்த்தார்கள். பரிசோதித்துப் பார்ப்பதற் காகக் குனிந்தார்கள். அது பன்றி வாலாக இருந்தது.

அவர்களுக்கு அதிர்ச்சி ஏற்படவில்லை. அவுரேலியானோவும் அமரந்தா உர்சுலாவும் குடும்பத்தின் முன்னுதாரணங்களை அறிந் திருக்கவோ உர்சுலாவின் அபாய எச்சரிக்கையைப் பற்றி நினைத் திருக்கவோ இல்லை. குழந்தைக்கு இரண்டாவது பல் முளைத்ததும்

வாலை அகற்றிவிடலாம் என்று மருத்துவத் தாதி அவர்களைச் சமாதானப்படுத்தினாள். அமரந்தா உர்சுலாவுக்குக் கடுமையான ரத்தப்போக்கு ஏற்பட்டதால் அதைப் பற்றி மீண்டும் யோசிக்க அவர்களுக்கு நேரமில்லை. சிலந்தி வலைகளை வைத்தும் சாம்பல் உருண்டைகளைத் திணித்தும் ரத்தப் போக்கை நிறுத்த முயன்றார்கள். ஆனால் அது ஊற்றைக் கையால் தடுப்பது போலிருந்தது. ஆரம்பக் கட்டத்தில் அவள் நகைச்சுவை உணர்வுடனேயே இருந்தாள். பயந்து போயிருந்த அவுரேலியானோவின் கையைப் பிடித்துக் கவலைப்பட வேண்டாம் என்று மன்றாடினாள். அவளைப் போன்றவர்கள் தங்கள் விருப்பத்துக்கு மாறாக மரணமடையமாட்டார்கள் என்றாள். மருத்துவத் தாதி நடத்தும் கொடூர சிகிச்சைகளைப் பார்த்து வெடித்துச் சிரித்தாள். ஆனால், நம்பிக்கை அவுரேலியானோவைக் கைவிட்டது. அவளுக்கு மேலே ஒளிர்ந்துகொண்டிருந்த விளக்கு மங்கியதைப்போல அவளுடைய தோற்றமும் மங்கியது. அவள் மயக்கத்தில் ஆழ்ந்தாள். திங்கட்கிழமை விடியற்காலை ரத்தத்தை நிறுத்தும் பிரார்த்தனையைச் சொல்லும் பெண்ணை அழைத்து வந்தார்கள். அந்தப் பிரார்த்தனைகள் படுக்கையைச் சுற்றி நிற்கும் ஆணுக்கும் விலங்குக்கும் நிச்சயம் பலிக்கும். ஆனால் அமரந்தா உர்சுலாவின் உதிரம் அன்பிலிருந்து வெளிவராத எந்தத் தந்திரத்துக்கும் கட்டுப்படவில்லை. பயனற்ற இருபத்து நான்கு மணி நேரத்துக்குப் பிறகு மருந்துகள் எதுவும் தேவைப்படாமலே ரத்தப்போக்கு நின்றது. அவள் இறந்துவிட்டாள் என்று தெரிந்தது. அவளுடைய முகத்தின் பக்கவாட்டுத் தோற்றம் தெளிவடைந்தது. முகத்திலிருந்தக் கொப்புளங்கள் ஒளிவட்டத்தில் மறைந்தன, அவள் மீண்டும் புன்னகைத்தாள். அவுரேலியானோ, தான் தனது நண்பர்களை எவ்வளவு நேசிக்கிறான் என்பதையும் எவ்வளவு அதிகமாக இழந்திருக்கிறான் என்பதையும் அதுவரை புரிந்துகொள்ளவில்லை. அந்தக் கணத்தில் அவர்களுடன் இருக்க முடிந்தால் எவ்வளவு இதம். அம்மா அதற்காகவே தயார்செய்த கூடையில் அந்தக் குழந்தையை வைத்தான். சடலத்தின் முகத்தைப் போர்வையால் மூடினான். நகரத்தினூடே நோக்கமில்லாமல், இறந்த காலத்துக்குச் செல்லும் வாயிலைத் தேடி அலைந்துகொண்டிருந்தான். பல நாட்களுக்கு முன்பு மட்டுமே வந்த மருந்துக் கடையின் கதவைத் தட்டினான். அது ஒரு தச்சுக்கூடமாக மாறியிருப்பதைப் பார்த்தான். கையில் விளக்குடன் வந்து கதவைத் திறந்த கிழவி அவனுடைய உன்மத்த நிலையைப் பார்த்துப் பரிதாபப்பட்டாள். அங்கே ஒரு மருந்துக்கடை ஒருபோதும் இருந்ததில்லை என்று சாதித்தாள். மெல்லிய கழுத்தும் துயில் படர்ந்த கண்களும் கொண்ட மெர்சிடெஸ் என்ற பெண்ணை அவளுக்கு ஒருபோதும் தெரிந்திருந்ததில்லை. காடலோனிய ஞானியின் முன்னாள் புத்தகக் கடைக் கதவில் முகத்தைப் பதித்து அழுதான். ஒரு காலத்தில் கலவியின் சிறு பொழுதுக்காக அழ மறுத்த மரணத்துக்காகவே தனது நிதானமான விசும்பல்களால் தண்டனை கொடுத்துக்கொள்கிறான் என்பது பிரக்ஞையில் இருந்தது. பிலர் தெர்னேராவை அழைத்தபடி 'தங்கக் குழந்தை'யின் சிமெண்ட் சுவரில் முட்டிக் கையால் ஓங்கிக் குத்தினான். பிரகாசமான ஆரஞ்சு நிறப் பறக்கும் தட்டுகளை

உதாசீனம் செய்தான். பல விடுமுறை நாள் இரவுகளில் வல்லூறுகளின் முற்றத்தில் உட்கார்ந்து குழந்தைத்தனமாக யோசித்துக்கொண்டிருந்தான். புரண்டுபோன நகரத்தின் சிவப்பு விளக்குப் பகுதியில் திறந்திருந்த வரவேற்புக்கூடத்தில் நாயகன் பிரான்சிஸ்கோவின் ரகசியங்களுக்கு வாரிசான பாதிரியாரின் மருமகன் ராபேல் எஸ்கலோனாவின் பாட்டுக்களை ஒரு அக்கார்டியன் குழு வாசித்துக்கொண்டிருந்தது. மது பரிமாறுபவன் குலைந்துபோயிருந்தான். அவனுடைய அம்மாவை அடிக்கக் கையை உயர்த்தியதால் கை சிதைந்துபோயிருந்தது. அவன் ஒரு குப்பிக் கரும்புச் சாராயம் வாங்கித் தருமாறு அவுரேலியானோவைக் கேட்டான். அவன் வாங்கிக் கொடுத்தான். மதுப் பரிமாறுபவன் தன்னுடைய கைக்கு நேர்ந்த துரதிர்ஷ்டத்தைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தான். அவுரேலியானோ அவனிடம் தனது இதயத்துக்கு நேர்ந்த துரதிர்ஷ்டத்தைப் பற்றிச் சொன்னான். தன்னுடைய சகோதரிக்கு எதிராக அதை உயர்த்தியதையும் குலைந்துபோனதையும் சொன்னான். அது இரண்டு பேரும் சேர்ந்து அழுவதில் முடிந்தது. ஒரு கணம் வேதனை விலகியதாக அவுரேலியானோவுக்குத் தோன்றியது. ஆனால் மகோந்தாவின் கடைசி விடியற்காலையில் மறுபடியும் அவன் தனியானான். சதுக்கத்தின் மையத்தில் போய் நின்று கைகளை விரித்து மொத்த உலகத்தையும் எழுப்பத் தயாரானதுபோல முடிந்த அளவு உச்சத்தில் கத்தினான்.

"நண்பர்கள் என்பது வேசிமகன்களின் கூட்டம்."

வாந்தியிலிருந்தும் கண்ணீரிலிருந்தும் அவனை நிக்ரோமந்தா காப்பாற்றினாள். அவளுடைய அறைக்கு அழைத்துப் போனாள். சுத்தப்படுத்தினாள். ஒரு குவளைச் சாற்றைக் குடிக்கவைத்தாள். அவனுக்கு ஆறுதல் தரும் என்று நினைத்து ஒரு கரித்துண்டை எடுத்து அவன் தனக்குக் கொடுக்க வேண்டிய எல்லாக் காதல் கட்டணங்களையும் அடித்தாள். அவனைத் தனியாகவிடக் கூடாது என்று அவளாகவே தன்னுடைய தனிமையின் கதையைச் சொன்னாள். மந்தமானதும் சுருக்கமானதுமான தூக்கத்திலிருந்து எழுந்த அவுரேலியானோ தலைவலியை மீண்டும் உணர்ந்தான். கண்களைத் திறந்தான். குழந்தையைப் பற்றி நினைத்தான்.

அவனால் கூடையைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அமரந்தா உர்சுலா மரணத்திலிருந்து உயிர்த்தெழுந்து குழந்தையைக் கவனித்துக் கொண்டிருப்பதாக நினைத்து முதலில் மகிழ்ச்சி அடைந்தான். ஆனால் அவளுடைய சடலம் போர்வைக்கு அடியில் ஒரு கற்குவியலாகக் கிடந்தது. தான் திரும்பி வந்தபோது படுக்கையறையின் கதவு திறந்திருப் பதைப் பார்த்தான். அவுரேலியானோ, கற்பூரவல்லியின் காலை நேர மூச்சால் பூரிதமாகியிருந்த கூடத்தைக் கடந்து சென்றான். உணவறைக்குப் போனான். அங்கே பிரசவத்தின் எச்சங்கள் இன்னும் கிடந்தன. பெரிய பானை, ரத்தக்கறை படிந்த துணிகள், சாம்பல் ஜாடிகள், ஈட்டிகளுக்கும் மீன் தொட்டிக்கும் நடுவே மேஜை மேல் இடுப்புத் துணியின் மீது குழந்தையின் முறுக்கப்பட்ட தொப்புள் கொடி. திரும்பவும் இரவில் குழந்தையை எடுக்க மருத்துவத் தாதி வந்தது அவனுக்கு யோசிப்பதற்

கான இடைவேளையைக் கொடுத்தது. அவன் அந்த ஆடும் நாற்காலி யில் உட்கார்ந்தான், அதே நாற்காலியில்தான் அந்த வீட்டின் ஆரம்ப நாட்களில் தையல் பாடங்கள் நடத்த ரெபேக்காவும் கர்னல் ஜெரினெல்தோ மார்க்கேஸுடன் சைனீஸ் செக்கர்ஸ் ஆடும்போது அமரந்தாவும் குழந்தைக்குக் குட்டி உடைகள் தைப்பதற்காக அமரந்தா உர்சுலாவும் உட்கார்ந்திருந்தார்கள். இவ்வளவு அதிகமான இறந்த காலத்தின் பளு தன்னுடைய ஆன்மாவை நசுக்குவதைத் தாங்க முடியவில்லை என்பதைத் தெளிந்த மனநிலையின் கீற்றில் உணர்ந்தான். சொந்த நினைவேக்கங்களுடன் மற்றவர்களின் நினைவேக்கங்களின் ஈட்டிகளாலும் குத்தப்பட்ட அவன் காய்ந்துபோன ரோஜாச் செடி களின் மேல் படர்ந்திருந்த சிலந்தி வலைகளையும் பொறுமையுடன் வளர்ந்திருந்த ரை புற்களையும் பிப்ரவரி மாத விடியலின் காற்றின் பொறுமையையும் பாராட்டினான். பின்னர் குழந்தையைப் பார்த்தான். உலர்ந்து வீங்கிய சதை மூட்டையாக இருந்தது. உலகத்திலிருக்கும் அத்தனை எறும்புகளும் அதைத் தோட்டத்தில் கற்பாதைக்கு அடியி லிருக்கும் தங்களுடைய துவாரங்களை நோக்கி இழுத்துக்கொண்டிருந்தன. அவுரேலியானோவால் நகர முடியவில்லை. பயத்தால் மரத்துப்போன தால் அல்ல; மாறாக அந்த அதிசய நொடியில் மெல்குயாதெஸின் கடைசிச் சூத்திரங்கள் அவனுக்கு வெளிப்படுத்தப்பட்டன. பட்டயங் களின் முகப்பெழுத்துக்கள் மனிதனின் காலத்தின் வரிசையிலும் வெளியின் வரிசையிலும் துல்லியமாகக் குறிப்பிடப்பட்டிருந்தது: *வம்சத்தில் முதல்வன் மரத்தில் கட்டப்படுகிறான். கடைசியானவன் எறும்புகளால் உண்ணப்படுகிறான்.*

அவுரேலியானோ தனது வாழ்க்கையின் எந்தக் கட்டத்திலும் அவ்வளவு தெளிவானவனாக இருந்ததில்லை. இறந்துபோனவர் களையும் இறந்துபோனவர்களின் வலிகளையும் மறந்து கதவுகளையும் ஜன்னல்களையும் ஆணியறைந்து அடைத்தான். உலகம் சார்ந்த தூண்டுதல் ஏதாவது தொந்தரவு செய்துவிடக் கூடாது என்பதற்காக மீண்டும் பெர்னாண்டாவின் சிலுவை பதித்த பலகைகளையும் அடித்தான். அதற்குள் தன்னுடைய விதி மெல்குயாதெஸின் பட்டயங் களில் எழுதி வைக்கப்பட்டிருக்கிறது என்பதைத் தெரிந்துகொண் டிருந்தான். வரலாற்றுக்கு முற்பட்ட தாவரங்களுக்கும் நீராவிக் குளங்களுக்கும் அந்த அறையில் மனிதத் தடயங்களை முற்றிலும் அழித்த ஒளிரும் பூச்சிகளுக்கும் நடுவில் அவை கட்டுக்குலையாத நிலையில் இருப்பதைப் பார்த்தான். பட்டயங்களை வெளிச்சத்துக்குக் கொண்டுவர பொறுமையில்லாமல் அங்கேயே நின்று சற்று சிரமப்பட்டு வாசித்தான். அவை ஸ்பானிய மொழியில் எழுதப்பட்டது போலவே இருந்தன. பட்டப்பகலில் வாசிப்பதைப் போலவே அதை வாசிக்க முடிந்தது. உரத்த குரலில் வாசிக்க ஆரம்பித்தான். அது மெல்குயாதெஸால் ஒரு நூறு வருடங்களுக்கு முன்பே மிகச் சிறிய விவரங்களைக்கூட விட்டுவிடாமல் எழுதப்பட்ட அவனுடைய குடும்ப வரலாறு. அதைத் தனது தாய்மொழியாக இருந்த சம்ஸ்கிருதத்தில் எழுதியிருந்தான். இரட்டை வரிகளை அகஸ்டஸ் சக்ரவர்த்தியின் சங்கேத மொழியிலும் ஒற்றைப்படை வரிகளை லாசிடேமோனியன் ராணுவக் குறியீட்டிலும்

எழுதி இருந்தான். அவுரேலியானோ பார்க்கத் தொடங்கிய கடைசிப் பகுதி அவனைக் குழப்பியது. மனிதனின் பொதுவான காலவரிசைப்படி மெல்குயாதெஸ் அதை எழுதியிருக்கவில்லை. ஒரு நூற்றாண்டின் அன்றாடக் கதைகளை எல்லாமும் ஒரே தருணத்தில் நடந்ததுபோல அமைத்திருந்தான். அந்தக் கண்டுபிடிப்பால் ஆர்வம் கிளர்ந்த அவுரேலியானோ எந்த வரியையும் விட்டுவிடாமல் உரக்கப் படித்தான். அந்த வரிகளை மெல்குயாதெஸே வாசித்து அர்க்காதியோவைக் கேட்கச் செய்திருந்தான். உண்மையில் அது அர்க்காதியோவின் கொலையைப் பற்றிய முன்அறிவித்தலாக இருந்தது. உயிரோடும் உடலோடும் சொர்க்கத்துக்கு உயர்ந்து செல்லும் உலகிலேயே மிக அழகான பெண்ணின் பிறப்பு பற்றிய அறிவிப்பு இருப்பதைப் பார்த்தான். மரணத்துக்குப் பிறகும் இரட்டையராகவே இருந்த சகோதரர்களின் பிறப்பைப் பற்றி இருப்பதைப் பார்த்தான். சகோதரர்கள் பட்டய வாசிப்பைக் கைவிட்டது இயலாமையாலோ ஊக்கமின்மையாலோ மட்டும் அல்ல. அவர்களது முதிர்ச்சியற்ற நடவடிக்கைகளால்தான். அந்தக் கட்டத்தில் தன்னுடைய பிறப்பு ரகசியத்தைப் பற்றித் தெரிந்துகொள்ளும் பொறுமையின்மையால் பக்கங்களைப் புரட்டி முன்னே சென்றான். காற்று வீச ஆரம்பித்தது. முதலில் வெதுவெதுப்பாகவும் பின்னர் நிலைகொண்டும் இறந்த காலத்தின் குரல்கள் நிரம்பியதாகவும் புராதன ஜெரேனியப் பூக்களின் முணுமுணுப்புகள் அடர்ந்ததாகவும் ஏமாற்றங்களின் பெருமூச்சுகள் கவிந்ததாகவும் வீசியது. அவன் அதைக் கவனிக்கவில்லை. ஏனெனில் அந்த நொடியில் தனது பிறவியின் முதல் சமிக்ஞைகளைக் கண்டுபிடித்துக்கொண்டிருந்தான். காம வெறியரான தாத்தா அவருக்கு ஒருபோதும் மகிழ்ச்சியைத் தராத அழகியைத் தேடி பிரமைகளின் சமவெளியில் ஏன் அலைந்துகொண்டிருந்தார் என்பதைக் கண்டுபிடித்தான். அவுரேலியானோ அவரை அடையாளம் கண்டுகொண்டான். அவரது வீழ்ச்சியின் மறைக்கப்பட்ட வழிகளில் முன்னேறினான். எதிர்ப்புக் காட்டிக் கொண்டே தன்னை ஒப்புவிக்கத் தயாராக இருந்த பெண்ணிடம் ஒரு மாலைப்பொழுதில் மஞ்சள் பட்டாம்பூச்சிகளுக்கும் தேள்களுக்கும் நடுவில் மெக்கானிக் ஒருவன் தனது காமத்தைத் தணித்துக் கொண்டதைக் கண்டுபிடித்தான். அவன் வாசிப்பில் மூழ்கியிருந்ததால் இரண்டாவது அலையாக எழுந்த காற்றையோ அதன் சூறாவளிப் பலத்தையோ உணரவில்லை. அது கதவுகளையும் ஜன்னல்களையும் கீல்களிலிருந்து பெயர்த்தன. கிழக்குப் பக்கமிருந்த கூரையை இழுத்து வீசியது. அஸ்திவாரத்தை அடியோடுப் பெயர்த்தது.

அப்போதுதான் அமரந்தா உர்சுலா தன் சகோதரியல்ல சிற்றன்னை என்பதைக் கண்டுபிடித்தான். சர். பிரான்சிஸ் ட்ராகே ரியோஹாச்சாவைத் தாக்கினார். அதனால் மட்டுமே ரத்தத்தின் சிக்கலான சுழல்வழி மூலம் அவர்கள் ஒருவரை ஒருவர் தேடிக் கண்டுபிடித்தார்கள். ஒரு புராண மிருகத்துக்குப் பிறப்பளித்தார்கள். அது வம்சத்தை முடிவுக்குக் கொண்டு வந்தது. பதினோரு பக்கங்களைப் புரட்டியபோதே பைபிளில் சொல்லப்பட்ட ஊழிக் காற்றின் சீற்றத்தில் அகப்பட்ட மகோந்தா புழுதியும் கூளங்களும் வட்டமடிக்கும் சுழற்காற்றுப் பிரதேசமாக

மாறியிருந்தது. தனக்கு நன்றாகத் தெரிந்த உண்மைகளை வாசிப்பதில் நேரத்தை இழக்க விரும்பாமல் பட்டயத்தின் பக்கங்களைப் புரட்டி, வாழ்ந்துகொண்டிருக்கும் தருணத்தைப் பற்றி என்ன எழுதியிருக்கிறது என்று வாசிக்கப் பட்டயத்தின் கடைசி ஏட்டை வாசித்தான். பேசும் கண்ணாடியின் முன்னால் நிற்பது போலிருந்தது அது. தன்னுடைய மரணத்தின் தேதியும் சூழ்நிலையும் என்னவாக முன் அறிந்து சொல்லப் பட்டிருக்கின்றன என்று வாசித்துத் தெரிந்துகொள்ள வரிகளைத் தாண்டினான். கடைசி வரியை அடைவதற்கு முன்பே அவனுக்குப் புரிந்துவிட்டிருந்தது. தன்னால் ஒருபோதும் அந்த அறையைவிட்டு வெளியேற முடியாது. ஏனெனில் அந்தக் கண்ணாடி நகரம் (அல்லது கானல்களின் நகரம்) காற்றால் நிர்மூலமாக்கப்படும் என்றும் அவுரேலியானோ பாபிலோனியா பட்டயங்களை வாசித்து முடித்த குறுகிய நொடியில் மனிதர்களின் நினைவிலிருந்து மறைந்துவிடும் என்றும் அதைப் பற்றி எழுதிவைக்கப்பட்ட எதுவும் மிகப் பழங் காலத்திலோ அதற்கும் பின்னர் வேறு எப்போதுமோ மீண்டும் நிகழாது என்றும் எழுதி வைக்கப்பட்டிருந்தது. ஏனெனில் தனிமையின் நூறு ஆண்டுகளுக்காக என்று விதிக்கப்பட்ட வம்சங்களுக்குப் பூமியில் இரண்டாவது வாய்ப்பு கிடையாது.

மின்னூலாக்கம்
முரளிதரன்

# bienvenidos a gabo*

"என்ன சொல்கிறீர்கள், மார்க்கேஸின் நாவல் இதுவரை தமிழில் வரவில்லையா? ஆச்சரியம். சரியாகச் சொன்னால் இந்திய மொழிகள் வேறு எதிலும் வருவதற்கு முன்பு தமிழில் அல்லவா வந்திருக்க வேண்டும்" என்றார் நண்பர் கிருஷ்ணன் உண்ணி. தில்லிப் பல்கலைக்கழகத்தில் ஆங்கிலத்துறை இணைப் பேராசிரியர். ஸ்பானிய மொழியில் விற்பன்னர். காப்ரியேல் கார்சியா மார்க்கேஸின் 'முன் அறிவிக்கப்பட்ட மரணத்தின் பதிவு' *(Chronicle of a Death Foretold)* நாவலை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துத் தேர்ந்த விமர்சகர்களின் கட்டுரைகளுடன் ஆய்வுப் பதிப்பாக வெளியிட்டிருப்பவர். இந்தத் தமிழாக்கத்தில் எனக்கு ஏற்பட்ட சந்தேகங்களுக்கு முதன்மை நிவாரணியாக இருந்தவர்.

கிருஷ்ணன் உண்ணியின் வியப்புக்குக் காரணம் மார்க்கேஸின் 'தனிமையின் நூறு ஆண்டுகள்' நாவலின் பல காட்சிகளைத் தமிழகத்தில் கண்டது; அல்லது தமிழகக் காட்சிகளை நாவலில் பார்த்தது. விழாக்கள், சந்தைக் காட்சிகள், கோழிச் சண்டை, தொல்கதைகள், சடங்குகள் போன்று இந்த நாவலில் இடம்பெறும் அம்சங்கள் தமிழக வாழ்க்கையுடன் – ஒரு சில இந்திய வாழ்க்கை களுடன் பொருந்துபவை. நாவலில் உருவாக்கப்பட்டிருக்கும் மாந்திரீகப் பின்னணி தமிழக வாழ்க்கைக்கு அந்நியமானதல்ல. இவ்வளவு நெருக்கத்தை லத்தீன் அமெரிக்க இலக்கியங்களிலோ கீழைத்தேய இலக்கியங்களிலோ தவிர ஐரோப்பிய இலக்கியத்தில் ஒரு தமிழ் வாசகன் உணர முடியுமா என்பது சந்தேகத்துக் குரியது. பெரும்பாலான இந்திய மொழிகளில் மார்க்கேஸ் மொழிபெயர்க்கப்பட்டிருப்பது மட்டுமல்ல அவரது படைப்புகள் செல்வாக்குச் செலுத்தியிருப்பதும் இந்த நெருக்கத்தால்தான் என்று தோன்றுகிறது. எந்த மொழியில் பெயர்க்கப்பட்டாலும் மார்க்கேஸ் படைப்புகள் அந்த மொழியின் படைப்பாகக் கருதப் படுவதும் அதனால்தான். தமிழும் அதற்கு விலக்கல்ல.

---

* நல்வரவு, காபோ! (ஸ்பானிய மொழியில்)

தமிழ் இலக்கியச் சூழலில் அதிகம் வாசிக்கப்பட்ட படைப்புகள் மார்க்வேஸுடையவை எனலாம். எண்பது – தொண்ணூறு காலப் பகுதியில் அவரது செல்வாக்குப் பரவலாக இருந்திருக்கிறது என்பதற்குத் தமிழில் வெளிவந்த பல படைப்புகளை உதாரணம் சொல்ல முடியும். மார்க்வேஸின் கதைகளும் ஓரிரு குறுநாவல்களும் மொழிபெயர்க்கப் பட்டுள்ளன. கல்குதிரையும் புது எழுத்தும் மார்க்வேஸ் சிறப்பிதழ் களையே வெளியிட்டிருக்கின்றன.

ஏறத்தாழ மூன்று பதிற்றாண்டுகளாக, காப்ரியேல் கார்சியா மார்க்வேஸும் அவரது எழுத்துக்களும் நவீனத் தமிழ் இலக்கியச் சூழலில் விவாதப் பொருளாகவும் முன்உதாரணமாகவும் இருந்துவந்த போதும் அவரது படைப்பின் அதிகாரப்பூர்வமான தமிழாக்கம் இப்போதுதான் வெளிவரும் வாய்ப்புக் கைகூடி வந்திருக்கிறது. 1982ஆம் ஆண்டுக்கான நோபெல் இலக்கிய விருது மார்க்வேஸுக்குக் கிடைக்கக் காரணமாக அமைந்த 'தனிமையின் நூறு ஆண்டுகள்' *(One Hundred Years of Solitude)* நாவல் தமிழுக்கு வருவது ஓர் இலக்கிய நிகழ்வாகவே தோன்றுகிறது.

மார்க்வேஸ் தொடர்பாகத் தமிழ் இலக்கியச் சூழலில் பின்பற்றப் பட்டு வந்திருக்கும் சில நடைமுறைகளையும் பயன்பாடுகளையும் இந்த நூலில் கடைப்பிடிக்கவில்லை. முதன்மையாகத் தலைப்பு மாற்றம் பெற்றிருக்கிறது. 'தனிமையின் நூற்றாண்டு', 'ஒரு நூற்றாண்டுத் தனிமை' என்று பொதுவாகச் சொல்லப்பட்டு வந்ததை மொழி பெயர்ப்பாளன் என்ற சலுகையில் 'தனிமையின் நூறு ஆண்டுகள்' என்று மாற்றிப் பயன்படுத்தியிருக்கிறேன். ஒரு நூற்றாண்டின் தனிமையை அல்ல; தனிமைகளின் நூறு ஆண்டுகளையே நாவல் சொல்கிறது. புயேந்தியா வம்சத்தின் முதல் நபரான ஹோசே அர்க்காதியோ புயேந்தியா முதல், கடைசி நபரான அவுரேலியானோ வரை எல்லாக் கதைமாந்தரும் தனிமை நிரம்பியவர்கள். ஒவ்வொரு வரின் தனிமையும் மற்ற ஒன்றிலிருந்து மாறுபட்டது. அந்தத் தனிமைகள்தாம் நூறு ஆண்டுகளின் வழியே கதையாக விரிகின்றன. ஸ்பானிய மூலத்தை ஒட்டிய தலைப்பாக நண்பர் கிருஷ்ணன் உண்ணி ஒப்புதல் தெரிவித்த தலைப்பையே பயன்படுத்தியிருக்கிறேன். பாத்திரங் களின் பெயர்களும் இடப்பெயர்களும்கூட ஸ்பானிய மொழி வழக்கை யொட்டியே பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. சில பெயர்களும் சொற் களும் இன்றைய வழக்கில் அல்லாமல் படைப்பில் கூறப்படும் காலத்தை ஒட்டியதாகவே கையாளப்பட்டிருக்கின்றன. லிபரல், கன்சர்வேட்டிவ் போன்ற பத்தொன்பதாம் நூற்றாண்டுச் சொற்கள் பழைய மரபுப்படி மிதவாதி, பழைமைவாதி என்றே எடுத்தாளப்பட் டிருக்கின்றன.

ஒவ்வொரு மொழிபெயர்ப்பும் அதற்கான தனி நடையைக் கோருகிறது. சில வரிக்கு வரியான மொழிபெயர்ப்பை. சில மூல ஆசிரியனை முதன்மைப்படுத்தும் மொழிபெயர்ப்பை. சில தளர்வான மொழிபெயர்ப்பை. மிகவும் சிக்கலான நடையைக் கோரிய நாவல் இது. நீளமான தொடர்களும் பின்னலான பத்திகளும் காலத்தை முன்பின்னாக மாற்றி நகரும் சொல்முறையும் தமிழுக்கு எளிதில்

இணங்குபவையாக இல்லை. எனவே தமிழ் வாசகனைக் கண்பிதுங்கி நிற்கச் செய்யாத ஓரளவு எளிமையான மொழிநடையில் இந்தப் படைப்பை மறுஆக்கம் செய்ய முயன்றிருக்கிறேன். வரிகளுக்கோ வாக்கிய அமைப்புகளுக்கோ முதன்மை கற்பிக்காமல் படைப்பின் கருத்துகளுக்கும் உணர்வுகளுக்கும் அழுத்தமளிக்கும் முறையைக் கையாண்டிருக்கிறேன். எந்த மொழிபெயர்ப்பும் முழுமையானது அல்லவே! எனினும் மார்க்கேஸை மார்க்கேஸாக நிலைநிறுத்தும் வகையிலேயே மொழியாக்கம் அமைந்திருக்கிறது என்பதே என் நம்பிக்கை.

இந்த நம்பிக்கையை உருவாக்கிக்கொள்ளப் பலர் உதவியிருக்கிறார்கள். மலையாள எழுத்தாளர் சக்கரியா, மொழிபெயர்ப்பாளர்கள் ஆர். சிவகுமார், ஜி. குப்புசாமி, தாஷா கார்சியா கிப்ஸன் ஆகியோர் இந்த மொழிபெயர்ப்புப் பணியில் எழுந்த சந்தேகங்களை தமது ஆலோசனைகள் மூலம் தீர்த்துவைத்தார்கள். மொழிபெயர்ப்பாளருக்கு இணையாக இந்த நூலின் செம்மையாக்கத்தில் ஈடுபட்டவர்கள் பலர். கைப்பிரதியை வாசித்துத் திருத்தங்கள் செய்த மண்குதிரை, கூத்தலிங்கம், லட்சுமணன், மொழிநடையில் திருத்தங்கள் செய்து உதவிய பெருமாள்முருகன் ஆகிய நண்பர்கள், நூலாக்கத்தின் ஆரம்ப நிலை முதல் என்னுடன் ஒத்துழைத்த எஸ்.வி. ஷாலினி, கணினியில் வடிவமைத்த கலா, முகப்போவியங்களை உருவாக்கிய சந்தோஷ், அனந்தபத்மநாபன், அவற்றை அச்சுக்குத் தயார் செய்த ராஜேந்திரன் ஆகியோரின் அக்கறையும் உழைப்பும் ஒருபோதும் மறப்பதற்கியலாதவை. நண்பர் கண்ணனின் ஆர்வமும் தமிழ்ப் புத்தக வெளியீட்டில் காட்டும் கவனமும் ஈடுபாடும் தனித்துவமானவை. காப்ரியேல் கார்சியா மார்க்கேஸைத் தமிழுக்குக் கொண்டுவந்த பிடிவாதத்துக்கு என் வந்தனங்கள்.

இந்த நூலின் மொழிபெயர்ப்பாளனாக என் பணியில் சின்ன ஆதங்கம் எனக்கே இருக்கிறது. அதற்குக் காரணம் காபோ (காப்ரியேல் கார்சியா மார்க்கேஸ்). 'தனிமையின் நூறு ஆண்டுகள்' நாவலின் ஆங்கில மொழிபெயர்ப்பாளரான கிரகோரி ரபஸாவின் மொழியாக்கத்தை மார்க்கேஸ் தனது மூல நாவலைவிட மேலான படைப்பு என்று சிலாகித்துச் சொன்னார். பீட்டர் எச். ஸ்டோனுக்கு அளித்த நேர்காணலில் தன்னை வியப்பிலாழ்த்தும் மொழிபெயர்ப்பாளர் ரபஸாதான் என்று குறிப்பிட்டார். 'அவர்தான் அடிக்குறிப்புகள் இல்லாமல் மொழிபெயர்ப்பைச் செய்பவர்' என்று விளக்கியிருந்தார். இந்த மொழிபெயர்ப்பில் அது சாத்தியமாகவில்லையே என்பது ஆதங்கம். காபோவிடம் 'லெமன்டபிள் நோசே எல் எஸ்பனால்'* என்று மன்னிப்புக் கோர விரும்புகிறேன்.

திருவனந்தபுரம், **சுகுமாரன்**
*30 ஜூன் 2013*

---

* மன்னிக்கவும், நான் ஸ்பானியன் அல்ல.

Gabriel García Márquez

Cien años de soledad



ஹோசே அர்காதியோ புயேந்தியா ஒரு புதிய உலகை நிர்மாணிக்கிறார். சதுப்பு நிலப் பகுதியில் உருவாகும் மகோந்தா கிராமம் நூற்றாண்டுகளினூடே வளர்ந்து நகரமாக மாறுகிறது. புயேந்தியாவின் வம்சத்தைச் சேர்ந்த ஏழு தலைமுறைகள் அந்த நகரத்தின் வளர்ச்சிக்கும் இருப்புக்கும் அழிவுக்கும் மையமாகவும் விரிவாகவும் அமைகின்றன. உறக்கமின்மைக் கொள்ளை நோயும் உள்நாட்டுப் போர்களும் பழிவாங்கல்களும் அந்த நகரத்தின் வரலாற்றை உருவாக்குகின்றன. உலகின் மிகப்பெரிய வைரம் என்று ஹோசே அர்காதியோ புயேந்தியாவால் வர்ணிக்கப்படும் பனிக்கட்டியைப்போல மகோந்தா நகரமும் காலத்தின் வெம்மையில் கரைந்து மறைகிறது. ஒரு நகரத்தின் நூறு ஆண்டுத் தனிமையையும் ஒரு மக்கள் கூட்டத்தின் தனிமையான நூறு ஆண்டுகளையும் சொல்லுகிறது இந்த நாவல்.

ஏறத்தாழ அரை நூற்றாண்டுக்கு முன்பு எழுதப்பட்ட நாவல். இன்றும் புதிய வாசகர்களை ஈர்த்துக்கொண்டிருக்கும் காலத்தை மீறிய படைப்பு. எந்த மொழியில் பெயர்க்கப்பட்டாலும் அந்த மொழியைத் தாண்டி நிலைத்திருக்கும் மானுடக் கதையாடல்.

ரூ. 450

காலச்சுவடு பதிப்பகம்

ISBN 978-93-81969-70-0

ஸ்பானிய நாவல்